உ

கவிச்சக்கரவர்த்தி

# கம்பர்

இயற்றிய

# இராமாயணம்

## யுத்த காண்டம்

(நான்காம் பாகம்)




அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

1970

# உள்ளுறை

பதிப்புரை

நூல்:

கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு

—: O :—

தலைவர் :

**பேராசிரியர், வித்துவான், திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை, அவர்கள் M.A., B.L.**

உறுப்பினர்கள் :

பேராசிரியர், திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள்

திருவாளர், பி. ஸ்ரீ. ஆச்சாரியார் அவர்கள்

,, நீ. கந்தசாமிப் பிள்ளை அவர்கள்

,, மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள்

,, பு. ரா. புருஷோத்தம நாயுடு அவர்கள்

# பதிப்புரை

கவிச் சக்கரவர்த்தி கம்பர் இயற்றிய இராமாவதாரமாகிய பெருங் காப்பியத்தினைப் பழைய ஏட்டுச் சுவடிகளோடும் அச்சுப் புத்தகங்களோடும் ஒப்புநோக்கிக் கிடைத்த பாட பேதங்களைத் தொகுத்துப் பிற்சேர்க்கையாகத் தந்து உரை விளக்கத்துடன் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வெளியிட்டு வருவதனைத் தமிழுலகம் நன்குணரும்.

கம்ப ராமாயணத்தில் ஆறுவது காண்டமாகிய யுத்த காண்டம் ஆறு பகுதிகளாகப் பகுக்கப்பெற்று அதன் நான்காம் பகுதி இப்பொழுது வெளியிடப் பெறுகிறது. இதன்கண் படைத் தலைவர் வதைப்படலம் முதல் மாயாசீதைப் படலம் முடிய ஏழு படலங்கள் உள்ளன. இவற்றுள் படைத்தலைவர் வதைப்படலம், மகரக்கண்ணன் வதைப்படலம் ஆகியவற்றுக்கு வித்துவான் திரு. உ. பழனி, M.O.L. அவர்களும், பிரமாத்திரப் படலத்திற்கு வித்துவான் திரு. க வெள்ளைவாரணன் அவர்களும், சீதை களங்காண் படலம், மருத்துமலைப் படலம், களியாட்டுப் படலம், மாயா சீதைப்படலம் என்பவற்றுக்கு வித்துவான் திரு செ. வேங்கடராமச் செட்டியார் அவர்களும் உரையெழுதியுள்ளார்கள்.

தமிழாராய்ச்சித்துறைத் தலைவர் மேற்பார்வையில் சிரோமணி, வித்துவான் திரு. P. S. இராமாநுஜாச்சாரியார், புலவர்திரு. K இராமச்சந்திரன் முதலிய தமிழாராய்ச்சித் துறை ஆசிரியர்கள் பழைய ஏட்டுச சுவடிகளையும் அச்சுப் புத்தகங்களையும் ஒப்புநோக்கித் தொகுத்த பாட வேறுபாடுகள் இந்நூலின் பிற்சேர்க்கையாகத் தரப் பெற்றுள்ளன.

இப் பதிப்புக்கு வேண்டிய சுவடிகளைக் கொடுத்துதவிய மதுரைத் தமிழ்ச் சங்கம், தஞ்சைச் சரசுவதி மகால் நூல் நிலையம், சென்னை அரசாங்கக் கையெழுத்து நூல் நிலையம், திருப்பதி வேங்கடேசுவரர் கீழ்த்திசைக் கல்லூரி நூல் நிலையம் ஆகியவற்றின் பொறுப்பாளர்கட்கும், ஈரோடு தமிழாசிரியர் திரு. வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர், தெங்கம்புதூர்

சாத்தான் குட்டிப்பிள்ளை முதலிய அன்பர்களுக்கும் பல்கலைக் கழகத்தின் நன்றியுரியதாகும். இப் பணி இனிது நிறைவேற உதவிய கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களாகிய பேராசிரியர் திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், திரு. பி. ஸ்ரீ. ஆச்சாரியார், திரு. நீ. கந்தசாமிப் பிள்ளை, திரு. மே. வீ.வேணுகோபாலப்பிள்ளை, திரு பு. ரா. புருஷோத்தம நாயுடு ஆகிய பெருமக்களுக்கும், இக் குழுவின் தலைவர் பேராசிரியர் வித்துவான் திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை, M.A.B.L., அவர்களுக்கும், இக் குழுவின் செயலாளராகவிருந்து உதவிபுரிந்த அறிஞர் திரு. தி. கி. இராமாநுஜையங்கார் அவர்களுக்கும் தமிழாராய்ச்சித் துறையின் ஆசிரியர்களாகவிருந்து அவ்வப்பொழுது இப்பணிக்கு உதவிய அன்பர்களுக்கும், இந் நூலின் திருத்தப்படிகளை ஒப்புநோக்கித் திருத்தியுதவிய நண்பர்களுக்கும் பல்கலைக்கழகச் சார்பில் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இத்தகைய தமிழ்ப் பணிகள் இனிது நிகழ்தற்கு வேண்டிய பொருளுதவியினைப் புரிந்துவரும் இந்தியப் பல்கலைக் கழக மானியக் குழுவினர்க்குப் பல்கலைக் கழகத்தின் நன்றியும் பாராட்டும் என்றும் உரியனவாகும்.

செந்தமிழ் வளர்க்கும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் சார்பில் இத்தகைய சிறப்புடைய தமிழ் நூல்கள் வெளிவருதற்கு இந்தியப் பேரரசும் தமிழ் நாட்டரசும் வேண்டும் பொருளுதவி புரிந்து ஆதரித்துவரும் என நம்புகின்றோம்.

இந் நூலினை விரைவில் வனப்புற அச்சிட்டு உதவிய சென்னை அநுராதா அச்சகத்தாரது பணி பாராட்டற்குரியதாகும்.

அண்ணாமலை நகர்
12-6-'70

**க. வெள்ளைவாரணன்**
துணைப் பேராசிரியர்
தமிழாராய்ச்சிப் பகுதி,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

# 19. படைத் தலைவர் வதைப் படலம்

புகைக் கண்ணன், மாபெரும் பக்கன், மாலி, வேள்விப் பகைவன், சூரியன் பகைவன், வச்சிரத் தெயிற்றன், பிசாசன் ஆகிய படைத் தலைவர்களின் வதையைக் கூறும் படலம் என்பது பொருள்.

வானரங்கள் மூர்ச்சை தெளிந்தெழுந்து ஆரவாரஞ் செய்ததைக் கேட்டு மாபெரும் பக்கனும் புகைக் கண்ணனும் தம்மைப் போர்க்கு அனுப்புமாறு இராவணனை வேண்டினர். அப்பொழுது தூதர்கள், அவ்விருவரும் போர்க் களத்தில் இந்திரசித்தைக் கைவிட்டு ஓடிவந்ததைப் பற்றிக் கூறினர். அதனைக் கேட்ட இராவணன் பெருஞ்சினமுற்றுக் கிங்கரர்களுக்கு அவர்களுடைய மூக்கை அரியுமாறு கட்டளையிட்டான். அதனைக் கண்ட மாலி போரில் தோற்று ஓடிவந்த காரணத்திற்காக அவர்களுடைய மூக்கையரிதல் நீதியற்றது என்பதைப் பலகாரணங்களால் விளக்கித் தடுத்தான். பின்னர் மாபெரும் பக்கனும் புகைக் கண்ணனும் தம்முடைய ஆற்றலைக் கூறித் தம்மைப் போர்க்கனுப்புமாறு வேண்டிக்கொண்டனர். இராவணன் பத்து வெள்ளம் சேனையை அவர்களுக்குத் துணையாக அனுப்பினான். வேள்விப் பகைவன், சூரியன் பகைவன், மாலி, பிசாசன், வச்சிரத்தெயிற்றன் ஆகியோர் துணையாகச் சென்றனர். படைத் தலைவர்கள் சேனைகளுடன் போர்க்களங் குறுகினர்.

வீடணன் இராமனுக்கு அப் படைத்தலைவர்களின்பெயர்களையும் அவர்கள் ஆற்றலையும் எடுத்துக் கூறினான். பின்னர் வானர சேனைகளுக்கும் அரக்கர் சேனைகளுக்கும் பெரும் போர் நிகழ்ந்தது. புகைக் கண்ணன் அனுமனுடனும், மாபெரும் பக்கன் அங்கதனுடனும், மாலி நீலனுடனும், வேள்விப் பகைவன் இலக்கு

வனுடனும், சூரியன் பகைவன் சுக்கிரீவனுடனும், வச்சிரத் தெயிற்றன் இடபனுடனும், பிசாசன் பனசனுடனும் எதிர்த்துத் தேவரும் நடுங்குமாறு போர்செய்வாராயினர். எதிர்த்து வந்த பத்து வெள்ளஞ் சேனைகளில் இராமனால் ஆறு வெள்ளஞ் சேனையும் இலக்குவனால் நான்கு வெள்ளஞ் சேனையும் அழிந்தொழிந்தன. இவ்வாறு போர் நிகழ்கையில் இரவு கழியச் சூரியன் தோன்றினான்.

அனுமனோடு போர்செய்த புகைக் கண்ணன் அனுமன்மேல் இருபத்தைந்து அம்புகளை எய்தான். அம்புபட்டுக் குருதி ஒழுக நின்ற அனுமன் வெகுண்டு புகைக் கண்ணனுடைய தேரை அழித்தான். தேரழிந்ததும் வில்லோடு விண்ணில் எழுந்தான். அவனுடைய வில்லை இலக்குவன் தன் கணையால் ஒடித்தான். அனுமன் அப்பொழுது புகைக் கண்ணனை மண்ணிடைத் தள்ளிக் கடல் தாவிய தன் காலால் உதைத்து அவன் உயிரைப் போக்கி அவனுடைய தலையைத் திருகிக் கடலில் எறிந்தான்.

அங்கதனொடு போர்செய்த மாபெரும் பக்கன் ஐம்பத்தோரம்புகளை அவன்மேல் எய்தான். அதனால் வெகுண்ட அங்கதன் மாபெரும் பக்கனைத் தேரோடும் எடுத்துப் பூமியில் எறிந்தான். அப்பொழுது மாபெரும் பக்கன் தப்பாது கொல்லவல்ல சூலம் ஒன்றை அங்கதன்மீது விடுத்தான். அதனுடைய கொடுமையை அறிந்த இராமன் தன் அம்பினால் அதனைப் போக்கினான். அப்பொழுது அங்கதன் இமைப்பளவில் மாபெரும் பக்கனை இரு பிளவாகப் பிளந்து கொன்றான்.

மாலியும் நீலனும் போர்செய்தபொழுது நீலன் எறிந்த மலையால் மாலியின் வில் இற்றது. பின்னர் அவன் வாளோடு தேரில் வந்து நீலனை நெருக்கினான். குமுதன் இடையே தோன்றி மாலியின் தேரை அழித்தான். நீலன் எறிந்த மரத்தைத் தன் வாளால் போக்கிய மாலியின் தோள்களை இலக்குவன் தன் அம்பினால் துணித்தான். வாளொடு தோள் விழவும் சலியாது நின்று போர்செய்த மாலியுடன் இலக்குவன் போர்செய்தல் தக்கது அன்று என்று விலகிச் சென்றான். வீரர்கள் யாவரும் இலக்குவனுடைய மறனிழுக்கா மானத்தினை இராமனிடம் புகழ்ந்து கூறினர்.

வேள்விப் பகைவனை இலக்குவன் கொன்றான். சூரியன் பகைவனைச் சுக்கிரீவன் மாய்த்தான்.

வச்சிரத் தெயிற்றனொடு பொருத இடபன் அவன் தேர் அழியுமாறு ஒரு மலையை எறிந்தான். தேர் அழிந்ததும் நிலத்திற் குதித்து இடபன் மாயும்படி தண்டாயுதத்தால் அடித்தான். அப்பொழுது

அவன்முன் அனுமன் தோன்றினன். வச்சிரத்தெயிற்றன் அனுமனது மார்பில் தண்டாயுதத்தால் தாக்கினன். அனுமன் அவனை இடக்கையால் பற்றி வலக்கையினால் குத்தி அவன் உயிர் நீங்குமாறு செய்தான்.

பனசனோடு பொருத பிசாசன், பனசன் குருதிக் கடலில் கிடந்து புரளுமாறு தோமரத்தை விடுத்தான். பிசாசன் குதிரையின்மீது சுழன்று திரிந்தபோது அவன் எவ்விடத்துள்ளானென்று யாரும் அறியாராயினர். அவன் சுழன்று செய்த போரால் வானரக் கூட்டங்கள் அழிந்தன. தேவர்களும் அவன் போரைக் கண்டு அஞ்சினர். இலக்குவன் காற்றின் படையால் பிசாசனுடைய தலையைத் துணித்தான். இராவணனுடைய தூதர்கள் படைத் தலைவர்கள் மாண்டமையைத் தெரிவிக்கும் பொருட்டு இராவணனிடத்து ஓடினர் என்பது இப் படலத்தின் பொருட் சுருக்கமாகும்.

தோற்று ஓடிவந்ததற்காக மாபெரும் பக்கன், புகைக் கண்ணன் ஆகிய இருவருடைய மூக்கினையும் அறுத்தல் கூடாது என்பதற்கு மாலி கூறும் காரணங்கள் அவனுடைய நடுநிலையினையும் அஞ்சாமல் உறுதிகூறும் பண்பினையும் எடுத்துக் காட்டுகின்றன. நால்வகைப் படைகளும் சென்ற காட்சியும், வானரரும் அரக்கரும் கைகலந்து பொருதமையும், சூரியன் தோற்றமும், படுகளக் காட்சியும் பலபடியாக வருணிக்கப்பட்டுள்ளன. தம் கணவரைக் காணுமாறு போர்க்களம் சென்ற அரக்கியர்களின் பல்வேறு நிலைகள் உள்ளத்தைப் பிணிக்கும் வகையில் வீரம், அவலம் ஆகிய சுவைகள் தோன்றக் கூறப்பட்டுள்ளன.

---

# 19. படைத் தலைவர் வதைப் படலம்

## வானரர்கள் செய்த ஆரவாரங் கேட்ட படைத்தலைவர் போர் செய்ய இராவணனிடம் விடை கேட்டல்

8433 ஆர்த்தெழு மோசை கேட்ட
வரக்கரு முரச மார்ப்பப்
போர்த்தொழில் வேட்கை பூண்டு
பொங்கினர் புகுந்து மொய்த்தார்
தார்த்தட மார்பன் றன்னைத்
தாவிடை யென்னச் சார்ந்தார்
பார்த்தனன் முனிந்து மன்ன
னினையன பகர்வ தானான்.

ஆர்த்து எழும் ஓசை கேட்ட
அரக்கரும் முரசம் ஆர்ப்ப,
போர்த்தொழில் வேட்கை பூண்டு,
பொங்கினர், புகுந்து மொய்த்தார்,
தார்த்தட மார்பன் தன்னை,
'தா, விடை' என்னச் சார்ந்தார்;
பார்த்தனன், முனிந்து மன்னன்
இனையன பகர்வது ஆனான்.

பொ :- (நாகபாசத்தினின்றும் விடுபட்டவர்களது) ஆரவாரித்து எழுந்த ஓசையைக் கேட்ட அரக்கர் படைத் தலைவர்களும் கிளர்ந்தவர்களாகிப் போர்செய்ய விருப்பம்கொண்டு முரசம் ஒலிக்கத்

திரண்டு வந்து, மாலையணிந்த அகன்ற மார்பினையுடைய இராவணனைப் பார்த்துப் '(போர்க்குச் செல்ல) விடை கொடு' என அடைந்தார்கள்; (அதனைப்) பார்த்து, இராவணன் கோபித்துப் போர்க்குப் போகச் சொல்லத் தொடங்கினான்.

கு:- 'ஆர்த்தெழும் ஓசை' என்றது முன்னைய படலத்து 'அழகிதென்று அண்ணல் கூற' (நாகபாசப் படலம்-273) என்று தொடங்கும் செய்யுளைச் சுட்டியது. அரக்கரும் என்ற உம்மை உயர்வு சிறப்பும்மை; பொங்கி, பூண்டு ஆர்ப்ப மொய்த்து, புகுந்து சார்ந்தார் என முடிக்க. 'புகுந்து சார்ந்தார்' என்பது வந்து கொண்டிருந்தார்கள் என்பதைக் குறித்து நின்றது. 'தா விடை' என்பதை விடை தா என மாற்றுக. 'இனையன' என்றது போருக்குப் போகச் சொல்ல வேண்டிய சொற்களைக் குறித்தது. 'பகர்வதானான்' என்பதில் 'ஆனான்' என்பது ஆணையிட ஒருப்பட்ட நிலையைக் குறித்தது; எனவே, கட்டளையிடவில்லை என்பது பெறப்பட்டது.

இச் செய்யுளை யடுத்து 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின் வரும் இரண்டு செய்யுள்கள் மிகையாகக் காணப்படுகின்றன.

8433(a) அளப்பரும் வெள்ளச் சேனை
நமர்திறத் தழிந்த தல்லால்
களப்படக் கிடந்ததில்லை
கவிப்படை ஒன்ற தேனும்
இளைப்புறும் சமரம் மூண்ட
இற்றைநாள் வரையு மென்னே
விளைப்பரு மிகல்நீர் செய்து
வென்றது விறலின் மிக்கீர்.

(b) இகல் படைத் தலைவராய
எண்பது வெள்ளத் தெண்ணில்
தொகைப்பட நின்றோர் யாரும்
சுடர்ப்படை கரத்தின் ஏந்தி
மிகைப்படும் தானை வெள்ளமீ
ரைந்தோ டேகிவெம்போர்ப்
பகைப்பெருங் கவியின் சேனை
படுத்திவண் வருதி ரென்றான்.

## மாபெரும் பக்கனும் புகைக் கண்ணனும் தம்மைப் போர் செய்ய அனுப்புமாறு வேண்டுதல்

8434 மாபெரும் பக்க ைேடு
வான்புகைக் கண்ணன் வந்திங்
கேவுதி யெம்மை யென்பார்
தம்முக மினிதி ேேக்கிப்
போவது புரிதி ரென்னப்
புகறலும் பொருத தூதர்
தேவமற் றிவர்கள் செய்கை
கேளெனத் தெரியச் சொன்ஞர்.

மாபெரும் பக்கேேடு
வான்புகைக் கண்ணன் வந்து, 'இங்கு
ஏவுமி எம்மை' என்பார்
தம்முகம் இனிதின் நோக்கி,
'போவது புரிதிர்' என்னப்
புகறலும், பொருத தூதர்
தேவ, மற்று இவர்கள் செய்கை
கேள்!'எனத் தெரியச் சொன்ஞர்.

பொ :- (அது காலை), மாபெரும் பக்கனேடு சிறந்த புகைக்கண்ணன் (அருகில்) வந்து, 'இப் போருக்கு எம்மை அனுப்புக' என்று சொல்லுகிறவர்களுடைய முகத்தை இனிதாகப் பார்த்து, '(நீங்கள்) போதலைச் செய்யுங்கள்' என்று ஆணையிட்டதும், (அதனைப்) பொறுக்காத தூதர்கள், 'அரசனே, இவர்களுடைய செய்கையைக் கேட்பாயாக' என விளங்கக் (கீழ் வருமாறு) கூறிஞர்கள்.

கு :- மகா பார்சுவன், தூமிராட்சன் என்னும் வட மொழிச் சொற்களை மாபெரும் பக்கன், புகைக் கண்ணன் என முறையே மொழி பெயர்த்தார். மேலும், இவ்வாறே மொழிபெயர்த்துக் கூறுவர். சுவர்ணரதன் என்றதை அருங்கலத் தேரின் பேரான் எனவும் வியாக்கிரரதன் என்பதைப் புலித் தேர்ப் பெயரோன் எனவும் மற்றும் இவ்வாறே மொழிபெயர்த்துக் கூறுதலைச் சூளாமணியுட் காணலாம். 'ஓடு' என்பது உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. 'ஏவா மக்கள் மூவா மருந்து' (கொன்றைவேந்தன்-8) என்பவாதலின், இவ் விருவரும் போர்க்குச் செல்லத் தாமே ஒருப்பட்டமையின்

'முகம் இனிதின் நோக்கி' என்றார். போரில் பயந்து ஓடிவந்தவர்களாதலின் இவர்கள் போரில் வெற்றியுறமாட்டார்கள் என்பதை அரசன் உணருமாறு கூறினர் என்பார், 'தெரியச் சொன்னார்' என்றார்.

## தூதர்கள் மாபெரும் பக்கன், புகைக் கண்ணன் ஆகிய இருவரது செய்கையைச் சொல்லுதல்

8435 ஆனையும் பரியுந் தேரு மரக்கரு மமைந்த வாழித்
தானைகள் வீய நின்ற தலைமகன் தனிமை யோரார்
மானவன் வாளி வாளி யென்கின்ற மழலை வாயார்
போனவர் மீளவந்து புகுந்தனர் போலு மென்றார்.

'ஆனையும் பரியும் தேரும் அரக்கரும் அமைந்த ஆழித்
தானைகள் வீய, நின்ற தலைமகன் தனிமை ஓரார்,
"மானவன் வாளி வாளி!" என்கின்ற மழலை வாயார்
போனவர் மீள வந்து புகுந்தனர் போலும்!' என்றார்.

பொ :- 'யானையும் குதிரையும் தேரும் அரக்கரும் என (நால் வகையாகப்) பொருந்திய கடல்போல் பரந்த சேனைகள் யாவும் மடியத் தான்மட்டும் நின்ற இந்திரசித்தனது தனிமையை மனத்தில் கொள்ளாதவராகி(ப் பயந்து), "இலக்குவனுடைய அம்பு அம்பு" என்கின்ற மழலைச் சொல்லைச் சொல்லும் வாயினையுடையவராய் ஓடிப் போனவர்கள் திரும்ப வந்திருக்கின்றார்கள்' என்று கூறினர் (தூதர்).

கு :- உம்மைகள் எண்ணுப் பொருளன. தலைவனுக்குத் துன்பம் வந்தபோது துணையாகச் சென்ற இவர்கள் விட்டுவந்தார்கள் ஆதலின் 'ஓரார்' என்று சொன்னார். மானவன்-பெருமை யுடையவன் ; மனிதனுமாம் என இகழ்ச்சிப் பொருள் படுமாறு தூதர்கள் கூறியது ஈண்டு நினைத்தற்குரியது. இவர்கள் அச்சத்தினால் வாய் குளறிக் கூறினார்களாதலின் 'மழலை வாயார்' என்றார். மழலை என்பது பேச்சு முற்றாத பருவம். இலக்குவனது அம்பினாலுண்டான நோவைக் கூறவேண்டியவர்கள் 'அம்பு அம்பு' என்று கூறியது மழலையாயிற்று. போலும் என்பது அசை.

## இராவணன் படைத்தலைவர் மீது கோபங் கொள்ளுதல்

8436 அற்றவர் கூறலு மாரழ லிற்றாய்
முற்றிய கோப முருங்க முனிந்தான்
இற்றிது வோவிவர் சேவக மென்னாப்
பற்றுமி னென்றனன் வெம்மை பயின்றான்.

அற்று அவர் கூறலும், ஆர் அழலிற்றாய்
முற்றிய கோபம் முருங்க முனிந்தான்,—
'இற்றிதுவோ இவர் சேவகம்?' என்னா,
'பற்றுமின்!' என்றனன் வெம்மை பயின்றான்.

பொ :- தூதர்கள் அப்படிச் சொல்லுதலும், கொடுமையிற் பழகினவனாகிய இராவணன், நிறைந்த நெருப்பினது தன்மையுடைய தாய் முதிர்ச்சியடைந்த கோபத்தால் (தன்னிலை) அழியக் கோபித்து, 'இவருடைய வீரம் இவ்வளவுதானோ' என்று சொல்லி '(அவ் வீரர் களைப்) பிடியுங்கள்' என்று கூறினான்.

கு :- 'அற்று' என்பது சுட்டுச் சொல். அழலிற்று-நெருப்பினது தன்மையை உடையது. கோபத்தால் என 'ஆல்' வருவிக்க 'எல்லாம் வெகுண்டார் முன் தோன்றாக் கெடும்' (நான்மணிக் கடிகை-8) என்பவாகலின் 'முருங்க' என்றார். சேவகம்-வீரம். 'இற்றிதுவோ என்பது ஒருசொல் நீர்மைத்து.

8437 என்றலு மெய்தினர் கிங்கர ரென்பார்
பின்றலி னோரை வலிந்து பிடித்தார்
நின்றன ராயிடை நீல நிறத்தான்.
கொன்றிடு வீரலிர் கொண்மி னிதென்றான்.

என்றலும், எய்தினர், கிங்கரர் என்பார்,
பின்றலி னோரை வலிந்து பிடித்தார்,
நின்றனர்; ஆயிடை, நீல நிறத்தான்,
'கொன்றிடு வீர்அலீர்; கொண்மின் இது'என்றான்.

பொ :- என்று இராவணன் கூறியவுடனே, வேலையாட்கள் என்பவர்கள் வந்து போர்க்களத்தினின்றும் ஓடிவந்தவர்களை

வலிந்து பிடித்துக் கொண்டு நின்றார்கள்; அப்பொழுது கருநிறத்தை யுடைய இராவணன் (வேலையாட்களைப் பார்த்து, 'இவர்களைக்) கொல்லாதீர்கள்; யான் சொல்லப்போவதை மனத்தில் கொள்ளுங்கள்' என்றான்.

கு :- பின்றல் - பின்னிடுதல். பிடித்தார் நின்றனர் - பிடித்து நின்றார். புறமுதுகிட்டோருக்குத் தண்டனையாகக் கொன்று விடுவார்களோ என்று கருதி 'கொன்றிடுவிர் அலிர்' என்றான். இது என்னும் சுட்டுச் சொல், அவன் மேற்கூறும் தண்டனையைக் குறித்து நின்றது.

8438 ஏற்ற மினிச்செயல் வேறிலை யீர்வீர்
நாற்ற நுகர்ந்துயர் நாசியை நாமக்
கோற்றரு திண்பணை கொட்டினிர் கொண்டூர்
சாற்றுமி னஞ்சின ரென்றுரை தந்தே.

'ஏற்றம் இனிச்செயல் வேறுஇலை; ஈர்வீர்,
நாற்றம் நுகர்ந்துஉயர் நாசியை; நாமக்
கோல்தரு திண்பணை கொட்டினர் கொண்டுஊர்
சாற்றுமின், "அஞ்சினர்" என்று உரைதந்தே'.

பொ :- 'வாசனையை முகர்ந்து ஓங்கித் தோன்றுகின்ற (இவர்களுடைய) மூக்கினை அறுத்து, அச்சத்தைத் தருகின்ற கோலால் அடிக்கப்படுகிற வலிய முரசைக் கொட்டிக்கொண்டு ('போரில்) பயந்து ஓடி வந்தவர்கள்' என்று சொல்லி, ஊரிலுள்ளார்க்குத் தெரிவியுங்கள்; (இதைவிட) மிகுதியாக இனிச் செய்யவேண்டியது வேறு ஒன்றுமில்லை' (என்று கூறினான்).

கு :- ஏற்றம்-உயர்வு; ஈண்டு மிகுதியைக் குறித்தது. படைத் தலைவர் அரசனால் ஊட்டமுறப் பெறுவர் என்பதைக் குறிப்பான், உணவுச் சுவையை நாவிற்கு முன்னர் மூக்கு நுகர்வதாதலின் வெளியே தோன்றும் மூக்கை அறுக்கச் சொன்னான்; எனவே, உண்டு கொழுத்தவர்கள் என்பது பெறப்பட்டது. 'உரை தந்து' என்றதால் 'சாற்றுமின்' என்ற சொல் அறிவிக்கப்படும் பொருளில் வந்தது. இவ்வாறு கூறியதன் கருத்து பலராலும் இழித்துரைக்கப் படுவர் என்பது.

## மாலி அச் செயலைத் தடுத்துரைத்தல்

8439 அக்கண னேயயில் வாளினர் நேரா
மிக்குயர் நாசியை யீர விரைந்தார்
புக்கன ரப்பொழு திற்புகழ் தக்கோய்
தக்கில தென்றனன் மாலி தடுத்தான்.

அக்கணனே, அயில் வாளினர் நேரா;
மிக்குஉயர் நாசியை ஈர விரைந்தார்
புக்கனர்; அப்பொழு தில்புகழ் தக்கோய்!
தக்கிலது' என்றனன், மாலி, தடுத்தான்.

பொ :- அப்பொழுதே, (கிங்கரர்) உடன்பட்டுக் கூரிய வாளினை உடையராய், (அப் படைத்தலைவர்களது) மேலே உயர்ந்த மூக்கினை அறுக்க விரைந்து புகுந்தனர்; அப்பொழுது மாலி என்பவன் (அவர்களைத்) தடுத்து, (அரசனை நோக்கிப்) 'புகழப்படும் தகுதியை உயைவனே, (இச்செயல்) தகுதியுடையதன்று' என்று சொன்னான்.

கு :- அயில்-கூர்மை. 'நேரா' என்பது செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். நேர்தல் - உடன்படுதல். விரைந்தார், தடுத்தான் என்பன முற்றெச்சம்.

8440 அஞ்சம மஞ்சி யழிந்துள ராணர்
வெஞ்சமம் வேறலும் வென்றிய தின்றுய்த்
துஞ்சலு மென்றிவை தொல்லைய வன்றே
தஞ்சென வாருள ராண்மை தகைந்தார்.

'அம்சமம் அஞ்சி அழிந்துளர் ஆனர்,
வெஞ்சமம் வேறலும், வென்றியது இன்றுய்த்
துஞ்சலும், என்றுஇவை தொல்லைய அன்றே?
தஞ்சுஎன ஆர்உளர், ஆண்மை தகைந்தார்?

பொ :- அரிய போரில் பயந்து தோற்றோடினவர் (பின்னர்க்) கொடிய போரிலே வெல்லுதலும், (முன்பு வென்றவர் மற்றொரு போது) வெற்றியின்றி இறத்தலும் என்று சொல்லப்பட்ட இவைகள் பழமையான முறைமையினை உடையன அல்லவா? வீரத்தை (தன்னிடத்திலே) அடைக்கலமாகத் தடுத்து வைத்துக்கொண்டவர்கள் யார் இருக்கின்றார்கள்? (ஒருவருமில்லை என்றபடி).

கு :- அரும் சமம் என்பது 'அம்சமம்' என இடைக்குறைந்து நின்றது. 'அழிந்துளராஞர்' என்பதற்கேற்ப முன்பு வென்றவர் என்பது வருவிக்கப்பட்டது. 'தொல்லைய' என்று முறைமையைக் கூறி வேற்றுப் பொருள் வைப்பாக, 'ஆண்மை தகைந்தார் ஆருளர்' என்ருன். 'கிடந்த போர் வலியார் மாட்டே' (கும்பகர்ணன் வதைப் படலம்-2) என்னும் பகுதி இதனுடன் ஒப்பு நோக்கற்பாலது. இவ்வாறே 'அற்ருர் நவை யென்றலுக்கு ஆகுநர் ஆர்கொல் என்ருன்' (கிட்கிந். வாலி வதைப்படலம் - 35) என்று பிருண்டும் இவ்வாசிரியர் கூறுவர். தஞ்சம் என்பது தஞ்சு எனக் கடைக் குறைந்து நின்றது. தகைத்தல்-தடுத்து நிறுத்துதல்.

8441 அந்தர மொன்று மறிந்திலே யன்றே
வந்தன நம்வயி னெத்தனை மன்ன
தந்திரம் வானவர் தானவ ரென்னும்
இந்திர னஞ்சின னெண்ணுதி யன்றே,

'அந்தரம் ஒன்றும் அறிந்திலே அன்றே;
வந்தன நம்வயின் எத்தனை, மன்ன!
தந்திரம் வானவர் தானவர் என்னும்,
இந்திரன் அஞ்சினன்; எண்ணுதி அன்றே;

பொ :- 'அரசனே, தேவர்கள், அசுரர்கள் என்று சொல்லப் படுகின்ற சேனைகள் நம்மிடத்திலே (முன்பு) எத்தனை எதிர்த்து வந்தன? அவர்களது முடிவை (நீ) சிறிதும் அறியவில்லை; (தேவர் களுக்கெல்லாம் தலைவஞகிய) இந்திரனே பயந்து ஓடிஞன்; (இவற்றை) எண்ணிப்பார்.

கு :- அந்தரம்-இறுதி. அன்று, ஏ என்பன அசைநிலையாய் நின்றன. 'தந்திரம்' என்பதற்கேற்ப 'வந்தன' என அஃறிணை முடிபு கொடுக்கப்பட்டது. வானவர் தானவர் என்னும் தந்திரம் நம் வயின் அன்று எத்தனை வந்தன எனக் கொண்டு கூட்டப் பட்டது. மூவகை உலகத்திற்கும் தலைவஞகிய இந்திரனே அஞ்சி ஞன் என வீரத்தின் நிலையை எடுத்துக் காட்டிஞன்.

8442 வருண னடுங்கினன் வந்து வணங்கிக்
கருணை பெறுந்துணை யும்முயிர் கால்வான்
இருணிற வஞ்சக ரெங்குள ரெந்தாய்
பருணிதர் தண்டமி தன்று பகர்ந்தால்.

‘வருணன் நடுங்கினன், வந்து வணங்கிக்
கருணைபெறும் துணையும் உயிர் கால்வான்;
இருள்நிற வஞ்சகர் எங்குஉளர்? எந்தாய்?
பருணிதர் தண்டம்இது அன்று, பகர்ந்தால்.

பொ :- ‘(இராமனிடத்து) வந்து வணங்கி (அவனது) அருளைப் பெறுமளவும் வருணன் பெருமூச்சு விடுபவனாகி நடுங்கி நின்றான்; கருநிறத்தையுடைய வஞ்சகராகிய அவுணர்கள் எங்கிருக்கின்றார்கள்? (அழிந்துபோய்விட்டார்கள் என்றபடி), தலைவனே, இத் தண்டனை, சொல்லுமிடத்து, அறிவுடையோர் கொடுக்கும் தண்டனையன்று.

கு :- வருணன் இராமனிடம் நடுங்கி நின்றது, ‘வந்தனன் என்பமன்னோ’ (வருணனை வழிவேண்டு படலம்-66) என்னும் செய்யுளால் உணரப்படும். ‘இருள் நிற வஞ்சகர்’ என்பதால் தானவரைக் குறிப்பிட்டான். இராமன் கணையினால் தானவர்கள் அழிந்தமை, ‘கோடி நூறாய தீய அவுணரைக் குலங்களோடும் ஓடி நூறென்று விட்டான் ஓரிமையொடுங்கா முன்னம் பாடி நூறாக நூறி மீண்டதப் பகழித் தெய்வம்’ (வருணனை வழி வேண்டு படலம்-79) என்பதால் உணரப்படும். மிக்க வலிமையுடைய வருணன், அவுணர் ஆகியோர்களே அந்த இராமனிடம் தோல்வி யடைந்திருக்க, இவர்கள் தோற்றுவந்தது குறித்து மூக்கை அரிதல் தகாது என்பான், ‘பருணிதர் தண்டம் இதன்று பகர்ந்தால்’ என்றான்.

8443 பத்தொரு நாலு பகுத்த பரப்பின்
அத்தனை வெள்ள மரக்க ரவிந்தார்
ஒத்தொரு மூவர் பிழைத்தன ருய்ந்தார்
வித்தக யாரினி வீரம் விளைப்பார்.

‘பத்துஒரு நாலு பகுத்த பரப்பின்
அத்தனை வெள்ளம் அரக்கர் அவிந்தார்;
ஒத்துஒரு மூவர் பிழைத்தனர் உய்ந்தார்;
வித்தக, யார்இனி வீரம் விளைப்பார்?

பொ :- ‘சதுரப் பாடுடையவனே, நாற்பது வெள்ளமாகப் பகுத்த விரிவையுடைய (உன்னாலனுப்பப்பட்ட) அத்தனை அரக்கர் களும் இறந்து போனார்கள்; (அவர்களில்) ஒரு மூன்று பேர் சேர்ந்து

(போர்க்களத்திலிருந்து) தப்பிவந்து பிழைத்தார்கள்; (அங்ஙனமாக,) இனி (எதிர்த்து நின்று) வெற்றி கொள்பவர் யார் (இருக்கின்றார்கள்)?

கு:- பத்து ஒருநாலு-நாற்பது. நாற்பது வெள்ளம் சேனை போர்க்குச் சென்றது, 'வான்மீகனென்னும், நன்னூன் மறையான் அது நாற்பது வெள்ளமென்னச் சொன்னான்' (நாகபாசப்படலம்-24) என முற்கூறப்பட்டமையால் அறியப்படும். 'பரப்பு' என்றது சேனையின் மிகுதியைக் குறித்தது. 'ஒரு மூவர்' என்றது மாபெரும் பக்கன்; புகைக்கண்ணன், இந்திரசித்து ஆகிய மூவரையும். ஓடிவாராவிட்டால் இவர்களும் அங்கே இறந்திருப்பார்கள் என்பான், 'பிழைத்தனர் உய்ந்தார்' என்றான். பிழைத்தல்-தப்பிவருதல். 'யார் இனி வீரம் விளைப்பார்? என வினவலியைக் குறிப்பிட்டான்.

8444 பாசமு மிற்றது பாதியின் மேலும்
நாசமு முற்றது நம்பி நடந்தாய்
பூசன் முகத்தொரு கான்முளை போதா
நீசரை யீருதி யோநெடு நாசி.

'பாசமும் இற்றது; பாதியின் மேலும்
நாசமும் உற்றது; நம்பி! நடந்தாய்;
பூசல் முகத்துஒரு கான்முளை போதா
நீசரை ஈருதியோ, நெடு நாசி?

பொ:- '(இந்திரசித்தினால் ஏவப்பட்ட) நாகபாசமும் வலியற்றுப் போய்விட்டது; (நீ அனுப்பிய சேனைகள்) பாதிக்கு மேலும் அழிந்துவிட்டன; நம்பி! (நீயும் ஒருமுறை போர்க்குப்) போய்த் திரும்பி வந்திட்டாய்; போர் முகத்திலே ஒப்பற்ற உன் புதல்வனாகிய இந்திரசித்துடன் போகாத தாழ்ந்தவர்களாகிய இவர்களது நீண்ட மூக்கை அறுக்கின்றாயோ?'

கு:- இந்திரசித்து விடுத்த நாகபாசமே செயலற்றபோது இந்த இரண்டு படைத்தலைவர்களால் என்ன செய்யமுடியும்? ஒன்றும் செய்யமுடியாதே என்பதை வெளிப்படுத்த, 'பாசமும் இற்றது' என்றான். இராவணன் முதல் நாட் போரில் தோற்று வந்தானாதலின் அதனை 'நடந்தாய்' என்பதனால் நினைவுபடுத்தினான். கான்முளை-புதல்வன். கான்முளையொடு என ஒடு விரிக்க. 'கான்முளை போத' எனப் பாடங்கொண்டு உன் மகனாகிய இந்திரசித்தே ஓடிவர எனப் பொருள் கொள்ளினும் பொருந்தும்.

8445 வாழி யிலக்குவ னென்னின் மறுக்குற்
றுழி யரக்கர்தம் வாயி லடைப்பார்
ஏழு கடற்றுணை யோவினி நாசி
ஊழி யறுத்திடி னும்முல வாதால்.

"வாழி இலக்குவன்" என்னின் மறுக்குற்று
ஆழி அரக்கர்தம் வாயில் அடைப்பார்;
ஏழு கடல்துணை யோ? இனி, நாசி
ஊழி அறுத்திடி னும்,உல வாதால்.

பொ:- 'இலக்குவன்' என்று சொன்ன அளவிலே மனக் கலக்க முற்று கடல்போல் மிக்குள்ள அரக்கர்களெல்லாம் தம் வீட்டுக் கதவை மூடிக்கொள்வார்கள்; (ஆகையால், அவர்கள் எல்லோருடைய மூக்கையும் அறுக்கவேண்டும். ஆகவே) இனி அறுக்கப்படும் மூக்கு ஏழு கடல் எல்லையில் அடங்கும் அளவுளதோ? ஊழிக்காலம் வரையிலும் அறுந்தாலும் (அறுந்தற்றொழில்) ஒழியாது (முற்றுப் பெறாது என்றபடி).

கு:- வாழி, அசை. 'ஆழி அரக்கர்தம் வாயிலடைப்பார்' என்னும் பகுதியோடு, சுக்கிரீவன் காலந் தாழ்த்தமைகண்டு கிட்கிந்தைக்கு இலக்குவன் வந்தகாலை, 'குரக்கினம், நீள் எழுத் தொடருந் நெடு வாயிலைத் தாளுறுத்தி' (கிட்கிந்தைப் படலம்-33) என்னும் பகுதி நினைவு கூறற்பாலது. தோற்றோடியவர்களுடைய மூக்கையெல்லாம் அறுத்துப்போட்டால் ஏழுகடலிலும் அவை அடங்காதென்றும் ஊழிக்காலம் வரையிலும் மூக்கை அறுத்துக்கொண்டிருந்தாலும் அறுத்து முடியாதென்றும் கூறினமையால், தோற்றோடியவர்களின் பெருக்கத்தை மாலி புலப்படுத்தினான்.

8446 தூது நடந்த வனைத்தொழு தந்நாள்
ஓதுநெ டுஞ்செரு வஞ்சி யுடைந்தார்
தீதிலர் நின்றவர் சேனையி னுள்ளார்
பாதியின் மேலுளர் நாசி படைத்தார்

'தூது நடந்தவனைத் தொழுது, அந்நாள்
ஓது நெடுஞ்செரு அஞ்சி உடைந்தார்,
தீதிலர் நின்றவர், சேனையின் உள்ளார்
பாதியின் மேலுளர் நாசி படைத்தார்

பொ:- 'சொல்லப்படும் பெரிய போரில் அந்நாள் அஞ்சித் தூதாக வந்த அனுமனைத் தொழுது, தோற்றுவந்து (உன்னால்) தண்டனை உறாமல் நின்றவர், மூக்கு உடையவர்களாகிய உன் சேனையில் உள்ளவர்களில் பாதிக்கு மேலும் இருக்கின்றார்கள்.

கு:- தூதுவந்த ஒருவனுக்கே உன் சேனை ஆற்றாது ஓடிவந்திட அவர்களை விட்டிட்டுத் தலைவர் போரில் தோற்றோடிவந்த இவர்களை மட்டும் தண்டித்தல் தகுதியன்று என்பான், தண்டனை பெறாமல் இருக்கிறார்கள் என்றான். தூது நடந்தவன், அனுமன். 'அந்நாள்' என்றது அனுமன் போர்செய்த நாளைக் குறித்தது. 'ஓது' என்பதற்குத் தூதுவந்த ஒருவனே ஊரைச் சுட்டுவிட்டான் என்று எல்லோரும் இகழ்ந்து சொல்லும்படியான எனப் பொருள் கூறுதலும் அமையும். தீதிலர், படைத்தார் என்பன முற்றெச்சங்கள் நின்றவர் உளர் என முடிக்க.

8447 விட்டிலை சீதையை யாமெனின் வீரர்
ஒட்டிய போரினி லாருள ரோடார்
வெட்டுதி நாசியை வெந்தொழில் வல்லோர்
பட்டில ரென்றிலை யென்று பகர்ந்தான்.

'விட்டிலை சீதையை ஆம்எனின், வீரர்
ஒட்டிய போரினில் ஆர்உளர் ஓடார்?
"வெட்டுதி நாசியை, வெந்தொழில வல்லோர்
பட்டிலர்" என்றிலை' என்று பகர்ந்தான்.

பொ:- "நீ சீதையை விடவில்லையானால், நெருங்கிச் செய்யும் போரினில் வீரர், தோற்று ஓடாதார் யாருளர்?" "வெவ்விய போர்த் தொழிலில் வல்ல வீரர் (ஒவ்வொரு நாளும் சிலர் திரும்பி வந்ததன்றி) இறந்தாரில்லை; (ஆதலின், அவர்களுடைய) மூக்குகளை அறுப்பீர்" என்று சொல்லவில்லையே' என்று சொன்னான், (மாலி).

கு:- 'விட்டிலை ஆம் எனின்' என்பதில் 'ஆம்' என்பது அசை. சீதையை விட்டிடாத அறத்தின் திறம்பிய நின் செயலால் வெற்றி விளையாது என்பான், 'வீரர் ஒட்டிய போரினில் யாருளர் ஓடார்?' என்றான். 'மாண்ட அறநெறி முதற்றே அரசின் கொற்றம்' (புறநா- 55) என்பது ஈண்டு நினைக்கத்தக்கதாகும்.' வெந்தொழில்வல்லோர்' என்றது இராவணனுடையபோர்வீரர்களை. படுதல்-இறத்தல். 'அந்தரம் ஒன்றும்' எனத் தொடங்கும் செய்யுள் முதல் இச் செய்யுள் வரை இராவணனிடத்துத் தோற்றோரையும், இராம இலக்குவ

ரிடத்துத் தோற்ருேரையும், அனுமனிடத்துத் தோற்ருேரையும் எடுத்துக்காட்டி இவர்களையெல்லாம் மூக்கரியாது விட்டபோது மாபெரும் பக்கன், புகைக் கண்ணன் ஆகிய இருவரையும் அவ்வாறே விட்டுவிடவேண்டும் என மாலி காரணங்காட்டித் தடுத்தது கூறப்பட்டுள்ளது. மாலி சொல்லிய அறிவுரைப் பகுதியில், 'வினை வலியும் தன் வலியும் மாற்ருன் வலியும், துணைவலியும் தூக்கிச் செயல், (471) என்னும் திருக்குறட் கருத்து அமைந்திருத்தல் நுணுகி அறியற்பாலது.

### மாபெரும் பக்கனும் புகைக்கண்ணனும் கூறுதல்

8448 ஆறின பின்ன ரழிந்தன ரன்னுர்
தேறின ரன்னது சிந்தை யுணர்ந்தார்
சீறிய நெஞ்சினர் செங்கண ரொன்ருே
கூறினர் தந் நிலை செய்கை குறித்தார்.

ஆறின பின்னர், அழிந்தனர் அன்னுர்,
தேறினர், அன்னது சிந்தை உணர்ந்தார்,
சீறிய நெஞ்சினர், செங்கணர் ஒன்ருே
கூறினர், தம்நிலை செய்கை குறித்தார்:

பொ:- (மாலியின் சொற்களைக் கேட்டு, இராவணன்) கோபம் நீங்கிய பிறகு, போரில் தோற்று ஓடிவந்த மாபெரும் பக்கனும் புகைக் கண்ணனும் அதனை மனத்தில் தெரிந்துகொண்டு தெளிந்தவராகிக் கோபங்கொண்ட மனத்தையுடையவராய்ச் சிவந்த கண்களையுடையராய்த் தம் நிலையையும் செய்கைகளையும் குறித்து ஒன்று கூறலாயினர்.

கு:- 'ஆறின பின்னர்' என்றதால் அதற்கேற்ப இராவணன் கோபம் என வருவிக்கப்பட்டது. 'அன்னுர்' என்பது சுட்டுச் சொல். ஓடிவந்த இருவரையும் குறிப்பதற்காக, 'அழிந்தனர் அன்னுர்' என்று கூறினுர். தேறுதல்-தெளிதல். 'அன்னது' என்னும் சுட்டுச் சொல் இராவணன் கோபம் ஆறிய நிலையைக் குறித்தது. முன்னர்ப் 'போர்த்தொழில் வேட்கை பூண்டு பொங்கினர் புகுந்து மொய்த்தார்' (1) என்றதனுல் 'சீறிய நெஞ்சினர்' எனவும், 'செங்கணர்' எனவும் கூறினுர். 'ஒன்ருே' என்பதில் ஓகாரம் அசை நிலையையும் செய்கையையும் என உம்மை விரித்துக் குறித்தார் என்பதை எச்சமாக்கி ஒன்று கூறினர் என முடிக்க.

இச் செய்யுளையடுத்து 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வரும் இரண்டு மிகைப் பாடல்கள் காணப்படுகின்றன:

8448. a. மன்னவர் மன்னவ மற்றிது கேண்மோ
துன்னு மரக்கரின் வீரர் தொகைப்பட்
டுன்னிய நாற்பது வெள்ளமு முற்றுங்
கந்நர னம்பினி லாவிய ழிந்தார்.

b. மத்தம தக்கரி யோடும ணித்தேர்
தத்துறு வாசி தணப்பில காலாள்
அத்தனை வெள்ள மளப்பில வெல்லாம்
வித்தக மானிடன் வாளியின் வீந்த

8449. உன்மக னொல்கி யொதுங்கின னொன்றோ
மின்னகு வானிடை ஏக விரைந்தான்
அன்னதின் மாயை யியற்றி அகன்றான்
இந்நக ரெய்தின னுய்ந்தன னெந்தாய்.

'உன்மகன் ஒல்கி ஒதுங்கினன் ஒன்றோ?
மின்நகு வானிடை ஏக விரைந்தான்,
அன்னதின் மாயை இயற்றி அகன்றான்,
இந்நகர் எய்தினன் உய்ந்தனன்—எந்தாய்!

பொ:- 'எமது தலைவனே, உன்னுடைய மகனாகிய இந்திரசித்து (போரில்) தளர்ந்து இடமகன்றான்; அதுமட்டுமா? மின்னல் விளங்குகின்ற ஆகாயத்திலே செல்ல விரைந்து சென்றவனாய், அந்தப் போரில் மாயையைச் செய்து ஓடிவந்து, இந்நகரை யடைந்து பிழைத்தான்.

கு:- சிறந்த வீரனாகிய உன் மகனே போரில் தளர்ந்து ஓடிவந்திருக்க, எங்கள்மீது சினங்கொள்வது தகுதியன்று என்பார், 'ஒதுங்கினன்' எனவும், 'மாயை இயற்றி அகன்றான்' எனவும் 'இந்நகர் எய்தி உய்ந்தனன்' எனவும் கூறினர். 'ஒன்றோ' என்பது எண்ணிடைச் சொல். 'மின்நகு' என்பது வானுக்கு அடைமொழியாய் இரவை உணர்த்திற்று. 'மாயை இயற்றி' என்றதால் அறப்போர் அன்மை குறித்தார். போர்க் களத்திலிருந்தால் இறந்துபட்டிருப்பான் என்பார், 'இந் நகரெய்தி உய்ந்தனன்' என்றார். இச்செய்யுள், மேற்செய்யுளில் கூறிய 'நிலை'யை விளக்கியவாறு.

8450. இப்பக லொன்றினி ஞாளையி னல்லால்
முப்பக றீர்கில மாவி முடிப்போம்
வெப்பக லாவெரி வெந்தழல் வெந்த
செப்பகல் வெண்ணெயி னோன்மை தெரிந்தோய்.

'இப்பகல் ஒன்றினின், நாளையின், அல்லால்
முப்பகல், தீர்கிலம்; ஆவி முடிப்போம்,
வெப்பு அகலா எரிவெந்தழல் வெந்த
செப்புஅகல் வெண்ணெயின்–நோன்மை தெரிந்தோய்!

பொ:- 'எங்களது வலிமையை உணர்ந்தோனே, இன்று ஒரு நாளிலோ (அல்லது) நாளையோ அல்லது மூன்றும் நாளிலோ, வெம்மை நீங்காது எரிகின்ற கொடிய நெருப்பிலே சூடேறிய செம் பால் செய்யப்பட்ட அகலிலே உள்ள வெண்ணெயைப்போல (உருகச் செய்து) பகைவர்களது உயிரைப் போக்குவோம்; (இதில்) தவற மாட்டோம்.

கு:- 'நாளையின் அல்லால்' என்றதால் இப்பகல் ஒன்றினின் அல்லால் எனவும் ஒரு சொல் வருவிக்கப்பட்டது. இனியும் ஓடிவர மாட்டோம் என்பார், 'தீர்கிலம்' என்று கூறினர். அகலில் எரியும் தீ வெண்ணெயை விழுங்குவதுபோலப் பகைவரை அழித்துவிடுவோம் என்றார். வெண்ணெயின் என்பதில் 'இன்' உவம உருபு. 'நோன்மை தெரிந்தோய்' என்றதால் தங்களுடைய வன்மையை வெளிப்படுத்தினர்.

8551. விட்டனை யெம்மை விடுத்தினி வெம்போர்
பட்டன ரொன்று படுத்தன ரொன்றே
கெட்டன ரென்பது கேளலை என்னா
ஒட்டின ராவி முடிக்க வுவந்தார்.

'விட்டனை எம்மை விடுத்து, இனி, வெம்போர்
பட்டனர் ஒன்று, படுத்தனர் ஒன்றே,
கெட்டனர் என்பது கேளலை' என்னா,
ஒட்டினர், ஆவி முடிக்க உவந்தார்.

பொ:- 'தம்முடைய உயிரைப்போக்கிக்கொள்ள மகிழ்ந்தவராகி, 'எம்மை(ப்போருக்கு) அனுப்பினவனாய் விடுத்தபின்பு, கொடிய

போரில் இறந்தனர் என்பதொன்று; (அல்லது பகைவரை) அழித்தனர் என்பதொன்று; (இவ்விரண்டில் ஒன்றன்றி, போரில்) தோற்று ஓடினர் என்பதை இனிக் கேட்கமாட்டாய்' என்று சபதம் செய்தனர்.

கு:- எம்மை விட்டனையாய் விடுத்து என இயைக்க. 'இனி' என்பதைக் கேளலை என்பதனோடு கூட்டுக. வெம் போரில் என ஏழன் உருபு விரிக்க. ஆவி முடிக்க உவந்தனராதலின், 'கெட்டனர் என்பது கேளலை' என்றார். இவ்விரண்டு செய்யுட்களும் 'ஆறின பின்னர்' (16) எனத் தொடங்கும் செய்யுளிற் கூறிய செய்கையைக் குறித்தன.

## இராவணன் அப் படைத்தலைவர் இருவருடன் சேனைகளை அனுப்புதல்

8452. அன்னவர் தம்மொடு மையிரு வெள்ளம்
மின்னு படைக்கை யரக்கரை விட்டான்
சொன்ன தொகைக்கமை யானைசு டர்த்தேர்
துன்னு வயப்பரி யோடுதொ குத்தான்.

அன்னவர் தம்மொடும் ஐ-இரு வெள்ளம்
மின்னு படைக்கை அரக்கரை விட்டான்;
சொன்ன தொகைக்கு அமையானை, சுடர்த்தேர்,
துன்னு வயப்பரி யோடு தொகுத்தான்.

பொ:- (படைத்தலைவர்கள் கூறியதைக் கேட்ட இராவணன்), அவ்விருவர்களோடு கூட விளங்குகின்ற படைக் கலங்களைக் கையிலே உடைய பத்து வெள்ளம் அரக்கர்களைப் போக ஏவினான்; (மேலும்) சொன்ன தொகைக்குப் பொருந்தும்படியாக யானைகளையும் விளங்குகின்ற தேர்களையும், வலிமை பொருந்திய குதிரைகளையும் சேர்த்து அனுப்பினான்.

கு:- வெள்ளம் என்பது பேரெண். அரக்கரை யானை, தேர், பரியோடு தொகுத்துவிட்டான் என ஒரு முடிபாக்கலும் ஒன்று.

இச் செய்யுளை யடுத்து 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் பிரதியில் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது.

8452.a. இப்படை யோடு மெழுந்திர வின்வாய்
வெப்புறு வன் கவி வீரர்க ளோதை
எப்புற முஞ்செவி டுற்றதை யெண்ணித்
துப்புறு சிந்தையர் வீரர் தொடர்ந்தார்

### படைத்தலைவர் போருக்குப் புறப்படுதல்

8453. நெய்யழல் வேள்வி நெடும்பகை நேர்விண்
தைவரு சூரிய சத்துரு வென்பான்
பெய்கழன் மாலி பிசாச னெனும் பேர்
வெய்யவன் வச்சிரம் வென்ற வெயிற்றன்.

நெய்அழல் வேள்வி நெடும்பகை, நேர்விண்
தைவரு சூரிய சத்துரு என்பான்,
பெய்கழல் மாலி, பிசாசன் எனும்பேர்
வெய்யவன், வச்சிரம் வென்ற எயிற்றன்.

பொ :- வேள்விப் பகைஞன், சூரிய சத்துரு என்பவன், கட்டப் பட்ட கழலையுடைய மாலி, பிசாசன் என்ற பெயரையுடைய கொடியவன், (பகைவரை) வென்ற வச்சிரத்தெயிற்றன் ('என்றவரோடும்' எனவரும் மேற்செய்யுளில் இயைக்க.)

கு :- வேள்விப் பகைஞன் என்பதற்கு 'நெய்யழல் வேள்வி நெடும்பகை' என அடைகொடுத்துக் கூறினர் ; நெய்பெய்யப்பட்ட நெடிய நெருப்பு எரியும் வேள்வி என்பது பொருள். சூரியனுக்கு அடையாக 'நேர் விண் தைவரு' எனக் கூறினர் ; ஆகாயத்தில் நேராக ஊர்ந்து செல்கின்ற சூரியன் என்க. வச்சிரத்தெயிற்றன் என்பது பெயராதலின் 'வென்ற' என்பது அடைமொழி யாக்கப் பட்டது.

8454. என்றவ ரோடு மெழுந்துல கேழும்
வென்றவ னேவலின் முன்னம் விரைந்தார்
யென்றன மால்கரி தேர்பரி செல்லக்
குன்றின மென்ன நடந்தனர் கோட்பால்.

என்றவரோடும் எழுந்து, உலகு ஏழும்
வென்றவன் ஏவலின், முன்னம் விரைந்தார் ;
சென்றன, மால்கரி தேர்பரி செல்லக்
குன்றினம் என்ன நடந்தனர் கோட்பால்

பொ :- ஏழுலகத்தையும் வென்ற இராவணனுடைய ஏவலின் படி (மாபெரும் பக்கனும், புகைக்கண்ணனும்) முற்செய்யுளில் கூறப்படவரோடும் புறப்பட்டு, (போருக்குப்) புறப்பட்டனவாகிய பெரிய யானைகளும் தேர்களும் குதிரைகளும் தம்முடன் செல்ல, முற்பட்டு விரைந்தவராய், (போரில் வெல்லும்) கொள்கையோடு மலைக் கூட்டங்களைப் போலப் போனார்கள்.

கு :- 'உலகு ஏழும்' என்பது ஏழுலகும் என மாற்றப்பட்டது. உலகு ஏழும் வென்றவன் - இராவணன். 'முன்னம்' என்பது சேனைகளுக்கெல்லாம் முன்பு சென்றதைக் குறித்தது. 'சென்றன' என்பதற்கு இராவணனுடைய ஏவலின்படி வந்தனவாகிய எனப் பொருள்கொள்க. செல்ல - தங்களுடன் வர. கரி தேர்பரி என்பன எண்ணும்மை தொக்கன. வலிமையும் சலியாமையும் உடைமை பற்றிக்குன்றினத்தை அவ்வீரர்களுக்கு உவமையாகக் கூறினார். கோட்பு - கொள்கை. கொள்கையாவது, 'இப்பகல் ஒன்றினின்' (18) 'விட்டனைஎம்மை' (19) என்னும் செய்யுட்களிற் கூறியன. இவ்விரண்டு செய்யுட்களும் குளகம்.

இச் செய்யுளையடுத்து 52-ஆம் எண்ணுள்ள அச்சுப் பிரதியில் பின் வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது.

8454.a. தேர்நிரை சென்றது திண்கரி வெள்ளக்
கார்நிரை சென்றது கால்வய வாசித்
தார்நிரை சென்றது தாழ்வறு காலாள்
பேர்நிரை சென்றது பேசுவர் யாரே.

சேனைகள் சென்ற காட்சி

8455. விண்ணை விழுங்கிய தூளிய விண்ணோர்
கண்ணை விழுங்குத லிற்கரை காணார்
எண்ணை விழுங்கிய சேனையை யாரும்
பண்ணை விழுங்க வுணர்ந்திலர் பண்பால்.

விண்ணை விழுங்கிய தூளிஅ விண்ணோர்
கண்ணை விழுங்குதலின் கரை காணார்
எண்ணை விழுங்கிய சேனையை யாரும்
பண்ணை விழுங்க உணர்ந்திலர் பண்பால்.

பொ :- (சேனைகள் செல்லுதலால் உண்டாகிய) ஆகாயத்தை மறைத்த தூசு, அங்குக் கூடியிருந்த தேவர்களுடைய கண்களை மறைத்தலினால், (அவர்கள், அச்சேனையின்) எல்லையினைக் காணாத வராயினர் ; எண்ணினைக் கடந்து நின்ற தன்மையால், யாரும் அச் சேனையின் கூட்டத்தைத் தம் உள்ளத்துட்கொள்ள அறிந்திலர்.

கு :- 'விழுங்கிய' என்பது விண்ணை என்றவிடத்து மூடிய எனவும், "கண்ணை" என்றவிடத்து மறைத்த எனவும், "எண்ணை" என்றவிடத்துக் கடந்த எனவும், 'பண்ணை' என்ற விடத்து உள்ளத்துட்கொள்ள எனவும் பொருள்பட்டு நின்றது. 'அ விண்ணோர்' என்பதில் அ, சுட்டுச்சொல் ; அது போரினைக் காணவந்த தேவர்களைச் சுட்டியது. எண்ணை விழுங்கிய என்பது சேனையின் பெருக்கத்தைக் குறித்தது. எண்ணை விழுங்கிய பண்பால், யாரும் சேனையை பண்ணை விழுங்க உணர்ந்திலர் என இயைக்க. பண்ணை - கூட்டம்.

8456 கால்கிளர் தேரொடு கால்வரை யோடு
மேல்கிளர் பல்கொடி வெண்டிரை வீச
மால்கட லானது மாமழை வானம்
பால்கிளர் மீனிடை யாடிய பண்பால்.

கால்கிளர் தேரொடு கால்வரை யோடு
மேல்கிளர் பல்கொடி, வெண்திரை வீச,
மால்கடல் ஆனது, மாமழை வானம்,
பால்கிளர் மீனிடை ஆடிய பண்பால்.

பொ :- காற்றைப்போல் ஓடும் தேரோடும் காலையுடைய மலை போன்ற யானையோடும் உயர்ந்து விளங்குகின்ற பல கொடிக ளானவை, வெள்ளிய அலைகளைப் போல வீச, வெண்மை விளங்கு கின்ற விண்மீன்கள் இடையிடையே காணப்படுந்தன்மையால், கருத்த மேகங்களையுடைய வானம் பெரிய கடலாயிற்று.

கு :- தேரோடும் யானைகளோடும் சேர்ந்து உயர்ந்து விளங்கு கின்ற கொடி என்க. கொடிகள் அசைதலுக்கு வெண்திரை வீசு வது உவமையாகக் கூறப்பட்டுள்ளது. கொடிகள் அலைகள் போல் காணப்படுதலாலும் மீன்கள் விளங்கித் தோன்றுதலாலும் மாமழை வானம் மால் கடலானது என்க.

8457. பேரி கலித்தன பேருல கைச்சூழ்
ஏரி கலித்தன வாமென யானை
காரி கலிக்கட லோடு கலித்த
மாரி கலித்தென வாசி கலித்த.

பேரி கலித்தன, பேர்உலகைச் சூழ்
ஏரி கலித்தன ஆம் என; யானை
கார் இகலிக் கடலோடு கலித்த;
மாரி கலித்தென வாசி கலித்த.

பொ :- உலகத்தைச் சூழ்ந்த பெரிய கடல் ஒலித்தாற்போலப் பேரி என்னும் வாத்தியங்கள் ஒலித்தன; யானையானது மேகத் தோடு மாறுபட்டுக் கடல் ஓசைபோலப் பிளிறின; குதிரைகள் மேகம் ஒலித்தாற் போலக் கனைத்தன.

கு :- பேரி - முரசு போன்ற ஒரு வகை வாத்தியம். 'உலகைச் சூழ் ஏரி' என்றதால் கடல் என்பது பெறப்பட்டது. 'கடல் போல் முழங்கும் குரல் கடுவாய்ப்பறை' (பெரிய திருமொழி, 2 : 9 : 9.) யானை நிறத்தால் காரொடு இகலியது. யானை ஒலியைவிடப் பேரி ஒலி மிகுந்தது என்பதைத் தெரிவிப்பான், யானை ஒலியைக் கடல் ஒலி எனவும், பேரி ஒலியைப் பேருலகைச் சூழ் ஏரி ஒலி எனவும் கூறினர். 'பேர் உலகைச் சூழ் ஏரி' என்றது பெரும் புறக் கடலை. வாசி - குதிரை.

8458. சென்றன சென்ற சுவட்டொடு செல்லா
நின்று பிணங்கிய கல்வியின் நில்லா
ஒன்றினை யொன்று தொடர்ந்தன வோடைக்
குன்று நடந்தன போற்கொலை யானை.

சென்றன, சென்ற சுவட்டொடு செல்லா
நின்று பிணங்கிய, கல்வியின் நில்லா

ஒன்றினை ஒன்று தொடர்ந்தன, ஓடைக்
குன்று நடந்தன போல்—கொலை யானை

பொ :- கொலை செய்கின்ற யானைகள் (சில) முகபடாமணிந்த மலை நடந்தாற்போல ஒன்றினை ஒன்று தொடர்ந்தனவாகிச் சென்றன ; (அவை) சென்ற அடிச்சுவட்டோடு (சில, மதத்தால்) செல்லாதனவாய் பாகர்களின் சொல்லுக்கு அடங்காதனவாய் நின்று மாறுபட்டன.

கு :- சென்றன என்பது வினைமுற்று. 'சென்ற' என்பதற்கு முன் அவை என்று ஒரு சொல் வருவிக்க. சுவட்டொடு - சுவட்டில். செல்லா - செல்லாதனவாய் ; எதிர் மறை எச்சம். பிணங்கிய என்பது முற்று. கல்வி என்பது பாகரின் சொல். 'நில்லா' என்பது 'து' வ் விகுதி குறைந்த வினையெச்சம். தொடர்ந்தனவாய்ச் சென்றன என முற்றுக்குக. ஓடைக்குன்று, இல்பொருளுவமை ; நீரோடை ஒழுகும் மலையைப் போலத் தலையிலிருந்து மத நீரொழுகும் யானை எனலுமாம். கொலை யானை தொடர்ந்தன சென்றன சில எனவும், பிணங்கிய சில எனவும் யானைகள் செல்வதை இரண்டாகப் பிரித்து முடிக்க.

8459. மாக நெடுங்கரம் வானின் வழங்கா
மேக நெடும்புனல் வாரின மேன்மேற்
போக விலங்கின வுண்டன போலாங்
காக நெடுங்களி யானை களிப்பால்.

மாக நெடுங்கரம் வானின் வழங்கா,
மேக நெடும்புனல் வாரின, மேன்மேல்
போக விலங்கின, உண்டன போலாம்—
காக நெடுங்களி யானை களிப்பால்.

பொ :- காகங்கள் சூழப்பெற்ற மிக்க மதத்தையுடைய யானைகள், மதத்தால் மேலும் மேலும் போதலைத் தவிர்ந்தனவாய், நீண்ட துதிக்கைகளை உயர்ந்த ஆகாயத்திலே செலுத்தி, மேகத்தினது மிக்க நீரை முகந்தனவாய்க் குடித்தன.

கு :- மாகவான் எனக் கூட்டி இரு பெயரொட்டாக்குக. வழங்குதல் என்பது செலுத்துதல் என்னும் பொருளில் வந்தது. 'மேன்மேல் போக' என்பதனை மேலும் மேலும் போதலை என விரிக்க. போல், ஆம் என்பன அசைகள். காக நெடும் களியானை என்பது

இயற்கையடை. யானைகள் களிப்பால் விலங்கினவாய், கரம் வழங்கா, புனல்வாரின உண்டன என முடிக்க. இச் செய்யுள், மேற் செய்யுளில் கூறிய யானைகள் பிணங்கிய என்பதை விளக்கிய வாறு.

8460. எரிந்தெழு பல்படை யின்னொளி வீரர்
அருங்கல மின்னொளி தேர்பரி யானை
பொருந்திய பண்ணொளி தாரொளி பொங்க
இரிந்தது பேரிரு ளெண்டிசை தோறும்.

எரிந்துஎழு பல்படை யின்ஒளி, வீரர்
அருங்கல மின்ஒளி, தேர்பரி யானை
பொருந்திய பண்பளி, தார்ஒளி, பொங்க,
இரிந்தது பேர்இருள் எண்திசை தோறும்,

பொ :- ஒளிவீசி விளங்குகின்ற பலபடைக்கலங்களின் ஒளியும், வீரர்களது ஆபரணங்களின் விளக்கத்தையுடைய ஒளியும், தேரில் பொருந்திய (ஒளியும்), யானைகளின் மேல் இட்ட தவிசின் ஒளியும், குதிரைக் கிண்கிணிகளின் ஒளியும் சேர்ந்து விளங்குதலால் எட்டுத் திக்குகளிலும் உள்ள மிக்க இருள் ஓடிப்போயிற்று.

கு :- 'எரிந்தெழு பல்படை' என்பதற்கு எப்போதும் ஒளியோடு விளங்குகின்ற பல் படை என இயற்கையடையாக்குக. மின்-விளக்கம் ; மின்னலைப் போல விட்டு விட்டு ஒளிவிடும்படியான எனவும் பொருள் கூறலாம். வீரர் என்று பிரித்ததனுல் தேர், பரி, யானை பொருந்திய பண்ணொளி, தார் ஒளி என்பதனைத் தேர் பொருந்திய ஒளி என ஒரு சொல் வருவித்து, யானை பண்ணொளி எனவும், பரி தார் ஒளி எனவும் பிரித்துப் பொருள் கொள்ளப்பட்டது.

## இராமன் வீடணனை வினவுதல்

8461. எய்திய சேனையை யீச னெதிர்ந்தான்
வெய்தி வண் வந்தவன் மாயையின் வெற்றி
செய்தவ னேகொ றெரித்தியி தென்ருன்
ஐயமில் வீடண னன்ன துரைத்தான்.

எய்திய சேனையை ஈசன் எதிர்ந்தான்,
'வெய்துஇவண் வந்தவன், மாயையின் வெற்றி
செய்தவ னேகொல்; தெரித்திஇது' என்றான்;
ஐயம்இல் வீடணன் அன்னது உணர்ந்தான்.

பொ:-வந்த சேனையை இராமன் பார்த்து, 'கோபத்தோடு இவ்விடத்திலே வந்துள்ளவன் மாயையினாலே வெற்றியை உண்டாக்கிக் கொண்டவனாகிய இந்திரசித்துதானோ? இதனைத் தெரிவிப்பாய்' என்றான்; (அதைக் கேட்ட) சந்தேகமில்லாத வீடணன், அவன் கேட்டதற்குரிய விடையைப் பின்வருமாறு கூறினன்:

கு:- 'எதிர்ந்தான்' என்பது முற்றெச்சம். செய்தவனேகொல் என்பதில் 'கொல்' ஐயப் பொருளது. வீடணன் அரக்கர் தலைவனாதலின் படைவீரர்களது திறத்தை ஐயமின்றி உணர்ந்தவன் என்றார்.

இச் செய்யுளையடுத்து 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின் வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது:

8461.a. ஐயகேள் சிவன்கை வாள்கொண்
டளப்பரும் புவனங் காக்கும்
வெய்யவன் வெள்ளச் சேனைத்
தலைவரின் விழுமம் பெற்றோர்
கையுறும் சேனை யோடும்
கடுகினர் கணக்கி லாதோர்
மொய்படைத் தலைவ ரென்றாங்
கவர்பெயர் மொழிய லுற்றான்.

### வீடணன் இராமனுக்கு வீரர்களைப் பற்றிக் கூறுதல்

8462. முழைக்குலச் சீயம் வெம்போர்
வேட்டது முனிந்த தென்னப்
புழைப்பிறை யெயிற்றுப் பேழ்வா
யிடிக்குலம் பொடிப்ப வார்த்துத்

தழைப்பொறி வாளிப் புட்டில்
கட்டிவிற் றூங்கிச் சார்வான்
மழைக்குரற் றேரின் மேலான்
மாபெரும் பக்கன் மன்னோ.

'முழைக்குலச் சீயம் வெம்போர்
வேட்டது முனிந்தது என்ன,
புழைப்பிறை எயிற்றுப் பேழ்வாய்,
இடிக்குலம் பொடிப்ப, ஆர்த்து,
தழைப்பொறி வாளிப் புட்டில்
கட்டி,வில் தாங்கி, சார்வான்
மழைக்குரல் தேரின் மேலான்
மாபெரும் பக்கன் மன்னோ.

பொ :- பிறையைப் போன்ற பல்லையுடைய பிளந்த துவாரத்தையுடைய வாயால் இடிக் கூட்டம் பொடியாய் விழும்படியாகப் பேரொலி செய்துகொண்டு, நெருப்புப் பொறியை மிகுதியாகக் கக்குகின்ற அம்புகள் அடங்கிய அம்பறுத் தூணியை (முதுகில்) கட்டிக்கொண்டு, (கையில்) வில்லைப் பிடித்துக் கொண்டு மேகம் போல் ஒலிக்கின்ற தேரின் மேலாஞய்க் குகையிலுள்ள உயர்வுடைய சிங்கம் கொடிய போரை விரும்பியதாய்க் கோபித்து (ப்புறப்பட்டது) போல வருபவன் மாபெரும் பக்கன் என்பவன்.

கு :- விலங்கினுள் சிறப்புடையதாதலின் 'குலச்சீயம்' எனப் பட்டது. 'வேட்டது' 'முனிந்தது' என்பனவற்றை எச்சமாக்குக. வேட்டு அது முனிந்தது என்ன எனவும் பிரித்துரைக்கலாம். வாயால் ஆர்த்து என்க. பொறிதழைவாளி என இயைக்க. 'மழைக்குரல் தேர் என்பதனை மழைத்தேர் எனவும் குரல்தேர் பிரித்து, மேகம் போல் விரைந்து செல்லும் தேர் எனவும், கட்டிய மணிகளின் ஒலியையுடைய தேர் எனவும் பொருள் கூறுதலுமாம். ஆர்த்து, கட்டி, தாங்கி மேலாஞய் முனிந்த தென்னச் சார்வான் மாபெரும் பக்கன் எனக் கூட்டி முடிக்க.

8463. சிகைநிறக் கனல்பொழி தெறுதட் செக்கரான்
பகைநிறத் தவருயிர் பருகும் பண்பினன்
நகைநிறப் பெருங்கடை வாயை நக்குவான்
புகைநிறக் கண்ணவன் பொலம்பொற் றேரினன்.

‘சிகைநிறக் கனல்பொழி தெறுகண் செக்கரான்,
பகைநிறத்தவர் உயிர் பருகும் பண்பினன்,
நகைநிறப் பெருங்கடை வாயை நக்குவான்,
புகைநிறக் கண்ணவன், பொலம் பொன்தேரினன்.

பொ :- ‘கொழுந்துவிட் டெரிகிற சிவந்த நெருப்பைக் கக்குகிற கோபத்தோடு கூடிய சிவந்த கண்களையுடையவனும், பகைவர்களுடைய உயிரைப் போக்கும் தன்மையை உடையவனும், கோபச் சிரிப்பு விளங்கப் பெரிய கடைவாயை நக்குபவனுமாகிப் பொன்னால் செய்த அழகிய தேரின் மேல் வருபவன் புகைநிறக் கண்ணன் என்பவன்.

கு :- சிகை - உச்சி. கண் செக்கரான் என்பதைச் செக்கர்க் கண்ணினன் என இயைக்க. பகைநிறத்தவர் - பகைக் குணத்தையுடையவர். பகைவர். நகை, ஈண்டுக் கோபச் சிரிப்பு. நகை நிறம் என்பதில் நிறம் என்பது தோன்றுதலைக் குறித்தது. கண்ணன் என்பது கண்ணவன் என விரித்தல் விகாரப்பட வந்தது. செக்கர்க் கண்ணனும் பண்பினனும் நக்குவானும் தேரினனுமாய் வருபவன் புகைநிறக் கண்ணன் என முடிக்க.

**8464. பிச்சரிற் றிகைத்தன பெற்றிப் பேச்சினன்**
**முச்சிரத் தயிலினன் மூரித் தேரினன்**
**இச்சிர மும்மதே யெனவந் தெய்துவான்**
**வச்சிரத் தெயிற்றவன் மலையின் மேனியான்.**

‘பிச்சரின் திகைத்தன பெற்றிப் பேச்சினன்,
முச்சிரத்து அயிலினன், மூரித் தேரினன்,
“இச்சிரம் உம்மதே?” என வந்து எய்துவான்,
வச்சிரத்து எயிற்றவன், மலையின் மேனியான்.

பொ:- ‘பித்தரைப் போலத் திகைத்த தன்மையுடைய பேச்சையுடையவனும், மூன்று தலையையுடைய சூலத்தை உடையவனும், வலிய தேரையுடையவனும், “இந்தத் தலை உம்முடையதா?” எனச் சொல்லிக் கொண்டு வருபவனும், மலை போன்ற உடம்பையுடையவனும் ஆனவன். வச்சிரத்தெயிற்றன் என்னும் பெயரையுடைவன்.

கு:- பெற்றி-தன்மை. பகைவர் தலையைச் சுட்டி ‘இச் சிரம் உம்மதே’ என விரச் சொல் கூறிக்கொண்டு வருதலின், ‘பிச்சரின்

திகைத்தன பெற்றிப் பேச்சினன்' என்றார். 'இச் சிரம் உம்மதே?' என்னும் வினாப் பொருளால் பகைவரது எளிமையைக் குறிப்பிட்டான். எயிற்றன் என்பது 'எயிற்றவன்' என விரிந்தது.

8465. காலையு மனத்தையும் பிறகு காண்பதோர்
வாலுளைப் புரவியன் மடித்த வாயினன்
வேலையி னார்ப்பினன் விண்ணை மீக்கொளும்
சூலமொன் றுடையவன் பிசாசன் தோன்றுவான்.

'காலையும் மனத்தையும் பிறகு காண்பதுஓர்
வால்உளைப் புரவியன், மடித்த வாயினன்,
வேலையின் ஆர்ப்பினன், விண்ணை மீக்கொளும்
சூலம்ஒன்று உடையவன், பிசாசன், தோன்றுவான்.

பொ:- காற்று வேகத்தையும் மனத்தின் வேகத்தையும் பின்னிடச் செய்வதாகிய ஒப்பற்ற வெள்ளிய பிடரி மயிரையுடைய குதிரையை உடையவனும், உதட்டைக் கடித்த வாயினையுடையவனும், கடல் போன்ற ஆரவாரத்தையுடையவனும் தேவரையும் வெற்றி கொள்ளும்படியான சூலம் ஒன்று உடையவனுமாகித் தோன்றுகின்றவன் பிசாசன் என்பவன்.

கு:- காற்றையும் மனத்தையும் விட வேகமாகச் செல்லும் குதிரை என்க. பிறகுகாண்டல்-பின்னிடச்செய்தல். வேலையின் என்பதில் 'இன்' உவமப் பொருட்டு. விண், இட ஆகுபெயர். மீக்கொள்ளுதல்—வெற்றி கொள்ளுதல்.

8466. சூரியன் பகைஞனச் சுடற்பொற் றேரினன்
நீரினு முழக்கின னெருப்பின் வெம்மையான்
ஆரிய வேள்வியின் பகைஞ னமரோ
சோரியுங் கனலியுஞ் சொரியுங் கண்ணினன்.

'சூரியன் பகைஞன், அச்சுடர் பொன் தேரினன்,
நீரினும் முழக்கினன், நெருப்பின் வெம்மையான்;
ஆரிய! வேள்வியின் பகைஞன் ஆம் அரோ,
சோரியும் கனலியும் சொரியும் கண்ணினன்.

பொ:- 'தலைவனே, கடலினும் மிக்க முழக்கத்தையுடையவனும், நெருப்பைப் போலக் கோபத்தையுடையவனுமாய் அந்த விளங்கு

கின்ற அழகிய தேரின் மேல் வருபவன் சூரியன் பகைவன் என்பவன்; இரத்தத்தையும் நெருப்பையும் வெளிப்படுத்துகின்ற கண்களையுடைய அவன் வேள்விப் பகைஞன் என்பவன்.

கு:- 'நீர்' என்பது இலக்கணையால் கடலை உணர்த்திற்று. வெம்மை—கோபம். சோரி—இரத்தம்.

8467. சாலிவண் கதிர்நிகர் புரவித் தானையான்
மூலவெங் கொடுமையிற் றவத்தின் முற்றினான்
சூலியம் வெருக்கொளத் தேரிற் றோன்றுவான்
மாலியென் றடிமுறை வணங்கிக் கூறினான்.

'சாலிவண் கதிர்நிகர் புரவித் தானையான்,
மூலவெங் கொடுமையின் தவத்தின் முற்றினான்,
சூலியும் வெருக்கொளத் தேரில் தோன்றுவான்,
மாலி' என்று, அடிமுறை வணங்கிக் கூறினான்.

பொ:- 'வளப்பம் பொருந்திய நெற்கதிர் போன்ற (முகத்தை யுடைய) குதிரைப் படையை உடையவனும், பழைமையாகவுள்ள வெவ்விய கொடுமையோடு தவத்தில் நிரம்பியவனும் ஆகிச் சிவனும் அஞ்சும்படி தேரின்மேல் வருபவன் மாலி என்பவன்' என்று (இராமனுடைய, அடியில் முறையாக வணங்கிக் கூறி முடித்தான் (விடணன்).

கு:- குதிரைத் தலை நெற்கதிரைப் போன்றது என்பதைப் 'புரவிமுகம் செய்து செந்நெல் ஓங்கி விளைகழனி' (பெரியாழ்வார் திருமொழி 4:1:10) எனவும், 'மருங்கு வளர் கதிர்ச் செந்நெல் வயப்புரவி முகம் காட்ட, (திருநாவுக்கரசர் புராணம்-6) எனவும் வருவனவற்றால் உணரலாம். மூலம்-பழைமையாக உள்ளது. சூலி-சூலப் படையை உடையவன். வெரு-அச்சம். மாலி என்பவன் என முடித்து இராமன் திருவடிகளில் வணங்கினான் விடணன் என்க.

இச் செய்யுளையடுத்து 52ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின் வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகின்றது.

8467. a. இன்னவ ராதிய ரளப்பி லோரிவர்
உன்னருந் தொகைதெரிந் துரைக்க னூழிநாள்
பின்னருஞ் செல்லுமென் றொழியப் பேசினான்
அன்னபோ ராக்கருங் களத்தை யண்மினார்.

## வானரரும் அரக்கரும் பொருதல்

8468. ஆர்த்தெதிர் நடந்ததவ் வரியின் ஆர்கலி
தீர்த்தனை வாழ்த்தியுற் றிரண்டு சேனையும்
போர்த்தொழில் புரிந்தன புலவர் போக்கிலார்
வேர்த்துயிர் பதைத்தனர் நடுங்கி விம்மியே.

ஆர்த்து எதிர் நடந்தது, அவ் அரியின் ஆர்கலி
தீர்த்தனை வாழ்த்தி; உற்று இரண்டு சேனையும்
போர்த்தொழில் புரிந்தன; புலவர் போக்கு இலார்,
வேர்த்து உயிர் பதைத்தனர், நடுங்கு விம்மியே.

பொ:- அந்தக் குரங்குச் சேனைக்கடல், இராமனை வாழ்த்திக் கொண்டு ஆரவாரித்து (அரக்கர் சேனைகளின்) எதிரே சென்றது; இரண்டு சேனையும் ஒன்றோடொன்று பொருந்திப் போர்த்தொழிலைச் செய்தன; (அதைக் கண்டு) தேவர்கள் (வானத்தை விட்டுச்) செல்ல மாட்டாதவராய், நடுங்கித் தேம்பி அழுது (உடலம்) வேர்த்து உயிர் பதைத்தனர்.

கு:- 'ஆர்கலி' என்பதற்கேற்ப 'நடந்தது' என ஒருமை முடிவு கொடுத்தார். சேனைப் பரப்பிற்குக் கடல் உவமை. தீர்த்தன்-பரி சுத்தமுடையவன்; தன்னை அடைந்தாரைப் பரிசுத்தமாக்கவல்லவன் எனவும் பொருள்படும். படைகள் தலைவனை வாழ்த்திக்கொணடு போருக்குச் செல்லுதல் இயல்பு. புலவர்-தேவர். நடுங்குதல், விம்மு தல், வேர்த்தல் ஆகியவை அச்சத்தால் தோன்றிய மெய்ப்பாடு.

8469. கல்லெறிந் தனகடை யுருமிற் காரென
வில்லெறிந் தனகணை விசும்பின் மேகத்துச்
செல்லெறிந் தனவெனச் சிதறி வீழ்ந்தன
பல்லெறிந் தனதலை மலையின் பண்பென.

கல் எறிந்தன, கடை உருமின் கார் என
வில், எறிந்தன கணை; விசும்பின் மேகத்துச்
செல் எறிந்தன எனச் சிதறி வீழ்ந்தன,
பல் எறிந்தன தலை, மலையின் பண்பு என.

பொ: ஊழிக்காலத்து இடியைக் கொண்ட மேகம் கல்லை எறிந் தன: போல (அரக்கர்களுடைய) விற்கள் அம்புகளை எறிந்தன;

ஆகாயத்திலுள்ள மேகத்தினின்றும் இடி வீழ்ந்தனவாக, மலை சிதறி வீழ்வது போல (குரங்கின்) தலைகள், பற்கள் உதிரப்பெற்றனவாய்ச் சிதறிவிழ்ந்தன.

கு:- கடை-ஊழிக்காலம். கடை உருமின்கார் கல் எறிந்தன என வில் கணை எறிந்தன என்றியைக்க. செல்-இடி. 'செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை' (திருமுருகாற்றுப்படை-5) இடி வீழ்தலால் மலை சிதறி விழுவது போல அரக்கரெறிந்த கணையால் குரங்குகளின் தலைகள் வீழ்ந்தன; அவ்வாறு தலைகள் விழும்போது பற்கள் உதிரப்பெற்ற நிலையில் அவை வீழ்ந்தன என்க.

8470. கடம்படு கரிபடக் கலின மாப்பட
இடம்படு சில்லியி னீர்த்த தேர்பட
உடம்படு மரக்கரை யனந்த னுச்சியில்
படம்படு மெனப்படுங் கவியின் கற்பல.

கடம்படு கரிபட, கலின மாப்பட,
இடம்படு சில்லியின் ஈர்ந்த தேர்பட,
உடம்புஅடும் அரக்கரை, அனந்தன் உச்சியில்
படம்படும் எனப்படும் கவியின் கல்பல.

பொ:- ஆதிசேடன் தலையிலுள்ள படமும் அழிந்தொழியும் என்று சொல்லும் படும் (வேகத்தோடு), குரங்குகளால் (எறியப்பட்ட) பல கற்கள், மதம் பொருந்திய யானைகள் அழியவும், கல்லணையை உடைய குதிரைகள் அழியவும், சக்கரங்களால் இழுக்கப்பட்ட பெரிய தேர்கள் அழியவும் செய்து, அரக்கர்களுடைய உடம்பையும் அழிக்கும்.

கு:- கடம்-மதம். படுதல்-தோன்றுதல். கலினம்-குதிரையின் மேல் இடும் சேணம். இடம் படு தேர் என இயைக்க. அரக்கரை என்பதிலுள்ள உருபைப் பிரித்து உடம்பு என்பதனொடு இயைத்து உம்மை விரித்துப் பொருளுரைக்கப்பட்டது. உடம்பையும் என்பதிலுள்ள உம்மை இறந்தது தழிஇய எச்சவும்மை. படமும் படும் எனச் சிறப்பும்மை விரிக்க. கற்கள் விழுகின்ற வேகத்தினால் பூமியைப் பிளந்து கொண்டு அதனைத் தாங்கிக் கொண்டிருக்கிற ஆதிசேடன் தலையிலும் படும் என்பது கருத்து. எனப்படும் கற்கள் என இயைக்க. பலகல்-பல மலைகள்.

8471. கொலையொ டுங் காநெடும் புயத்தின் குன்றொடும்
நிலை நெடுங் காலொடு நிமிர்ந்த வாலொடும்

மலையொடு மரத்தொடுங் கவியின் வன்னெடுந்
தலையொடும் போம்விசைத் தெறிந்த சக்கரம்.

கொலைஒடுங்கா நெடும் புயத்தின் குன்றொடும்,
நிலைநெடுங் காலொடும், நிமிர்ந்த வாலொடும்,
மலையொடும் மரத்தொடும் கவியின் வல்நெடுங்
தலையொடும் போம்—விசைத்து எறிந்த சக்கரம்.

பொ:- (அரக்கர்கள்) வேகத்தோடு எறிந்த சக்கரம், குரங்குகளுடைய கொலைத்தன்மை கெடாத பெரிய மலையொத்த தோள்களோடும் நிற்கிற பெரிய கால்களோடும் தூக்கிக் கொண்டிருக்கிற வால்களோடும் (அவைகள் எறிதற் பொருட்டுக் கையில் எடுத்த) மலைகளோடும் மரங்களோடும் (அவைகளினுடைய) வலிய பெரிய தலைகளோடும் அழித்துக் கொண்டு செல்லும்.

கு:-‘ கொலை ஒடுங்கா’ என்பது புயத்திற்கு அடைமொழி குன்று போன்ற புயம் என்க. நிலை-நிற்றல். மலைகளும் மரங்களும் குரங்குகளால் எறிவதற்காக எடுக்கப்பட்டன. போம் என்பதுஇடைக்குறை.

8472. ஆண்டகைக் கவிக்குலத் தலைவ ராக்கையைக்
கீண்டன புவியினைக் கிழித்த மாக்கரி
தாண்டுவ குலப்பரி மனத்திற் றாவுவ
தூண்டினர் கைவிசைத் தெறிந்த தோமரம்.

ஆண்தகைக் கவிக்குலத் தலைவர் ஆக்கையைக்
கீண்டன புவியினைக் கிழித்த—மாக்கரி
தாண்டுவ, குலப்பரி, மனத்தின் தாவுவ,
தூண்டினர் கைவிசைத்து எறிந்த தோமரம்.

பொ:- யானைகளைத் தாண்டிச் செல்வனவும் மனத்தைப் போலத் தாவிச் செல்வனவும் ஆகிய சிறந்த குதிரைகளைச் செலுத்திய வீரர்கள் கையால் வேகமாகச் செலுத்தி எறிந்த தோமரம் என்னும் படைக்கலம், ஆண் தன்மையுடைய குரங்குக் குலத் தலைவர்களது உடலைக் கிழித்துக் கொண்டு பூமியைப் பிளந்தன.

கு:- ஆக்கையைப் பிளந்த தோமரம் வேகமடங்காது பூமியையும் பிளந்தது என்றபடி. மாக்கரி தாண்டுவ மனத்தின் தாவுவ (ஆகிய) குலப்பரி தூண்டினர் என இயைக்க. தோமரம்-தண்டாயுதம்.

8473. சில்லியந் தேர்க்கொடி சிதையச் சாரதி
பல்லொடு நெடுந்தலே மடியப் பாதகர்
வில்லொடு கழுத்திறப் பகட்டை வீட்டுமால்
கல்லெனக் கவிக்குலம் வீசுங் கல்லரோ.

சில்லி அம் தேர்க்கொடி சிதைய, சாரதி
பல்லொடு நெடுந்தலே மடிய, பாதகர்
வில்லொடு கழுத்து இற, பகட்டை வீட்டுமால்—
கல்லெனக் கவிக்குலம் வீசும் கல் அரோ.

பொ :- குரங்குக் கூட்டங்கள் கல்லென்னும் ஓசையுண்டாக வீசும் மலேகள், சக்கரத்தையுடைய அழகிய தேரில் கட்டிய கொடி அறுபடவும், தேரோட்டுபவனது பல்லொடு பெரியதலே அறுபடவும் கொடியவர்களாகிய அரக்கர்கள் (கையில் பிடித்த) வில்லோடு கழுத்து அறுபடவும் செய்து, யானேகளே அழிக்கும்.

கு :- சில்லி - சக்கரம். பகட்டை வீட்டும் என்பதற்கு (அரக்கர்களுடைய) பெருமையை அழிக்கும் எனலுமாம். பெருமை என்பது ஈண்டு வீரத்தைக் குறித்து நின்றது. ‘கல்லென’ என்பது ஒலிக் குறிப்பு. ‘ஆல்’, ‘அரோ’ இரண்டும் அசைகள்.

8474. கரகமுந் தியமலே முழையிற் கட்செவி
உரகமுந் தினவென வொளிக்கு மொள்ளிலே
அரகமுந் தினநெடுங் கவிக ளாக்கையில்
துரகமுந் தினரெடுத் தெறியுஞ் சூலமே.

கரகம் உந்திய மலே முழையில், கட் செவி
உரகம் முந்தின என ஒளிக்கும், ஒள்இலே
அரகம் முந்தி நெடுங் கவிகள் ஆக்கையில்
துரகம் உந்தினர் எடுத்து எறியும் குலமே.

பொ :- குதிரையை ஏறிச் செலுத்தியவரான அரக்கர்கள் தூக்கி எறிந்த விளக்கத்தையுடைய இலேத்தன்மையமைந்த சூலமானது, போர்க்களத்திலே முற்பட்ட பெரிய குரங்குகளின் உடம்பில், கரகத்தைப் போன்று வெளிப்பட்டுத் தோன்றும் சிகரத்தையுடைய மலேகளினது குகைகளில், கண்ணே செவியாகவுடைய பாம்புகள் விரைந்து புகுந்தன என்னும்படி போய் மறையும்.

கு :-நீர்க் குடத்தைப் போன்ற உச்சியையுடைய மலை என்பார், ‘கரக முந்திய மலை என்றார். உந்துதல்-வெளியே தோன்றிக் காணப்படுதல். சூலம் ஆக்கையில் ஒளிப்பதற்குக் கட்செவி முழை யில் நுழைதல் உவமை. ‘ஒள்ளிலை’என்பதைச் சூலம் என்பதனோடு கூட்டுக. அரங்கம் என்பது அரகம் என இடைக் குறைந்து போர்க் களத்தைக் குறித்தது.

8475. வால்பிடித் தடிக்குமவ் வா னரத்தை மால்கரி
கால்பிடித் தடிக்குமக் கரியி னைக்கவி
தோல்பிடித் தரக்கரை யெறியுஞ் சூர்முசு
வேல்பிடித் தெறிவரம் முசுவை வெங்கணார்.

வால் பிடித்து அடிக்கும் வானரத்தை, மால்கரி;
கால்பிடித்து அடிக்கும், அக் கரியினைக் கவி;
தோல் பிடித்து அரக்கரை எறியும், சூர் முசு;
வேல் பிடித்து எறிவர், அம் முசுவை வெங்கணார்.

பொ :- மதமயக்கம் பொருந்திய யானைகள் குரங்குகளை வாலைப் பிடித்துத் தூக்கி (ப்பூமியில்) அடிக்கும் ; அந்த யானைகளைக் குரங்கு கள் காலைப் பிடித்துத் தூக்கி (ப்பூமியில்) அடிக்கும் ; அச்சத்தைச் செய்யும் குரங்குக் கூட்டங்கள் (களத்தில் கிடக்கின்ற) கிடுகுப் படையை எடுத்து அரக்கர் மேல் எறியும்; தறுகண்மையுடைய வீரர் அந்தக் குரங்குகளின்மேல் வேலை எடுத்து எறிவர்.

கு :- மால் - மதமயக்கம். மால்கரி - பெரிய யானை எனலுமாம். வாலைப் பிடித்து அடிக்கும் என்றதால் பூமி என்பது வருவிக்கப் பட்டது. ‘தோல்’ என்பது கிடுகுப்படை. குரங்குகளுக்குப் படை யின்மையால் கிடுகு என்பது போர்க்களத்தில் அரக்கர்களால் போடப் பட்டதைக் குறித்து நின்றது. சூர் - அச்சம். முசு - குரங்கில் ஒரு வகை. வெங்கண் - தறுகண்மை.

8476. முற்படு கவிக்குல முடுக வீசிய
கற்படக் களம்படு மரக்கர் கார்க்கடல்
பற்படு தலைபடப் படுவ பாதகர்
விற்படு கணைபடக் குரங்கின் வேலையே.

முற்படு கவிக்குலம் முடுக வீசிய
கல்பட, களம்படும், அரக்கர் கார்க்கடல்;

பல்படு தலைபடப் படுவ, பாதகர்
வில்படு கணைபட, குரங்கின் வேலையே.

பொ :- (போரில்) முற்படுகின்ற குரங்குக் கூட்டங்கள் வேகத்தோடு வீசிய மலைகள் படுதலால், அரக்கரின் கரிய கடல் போன்ற சேனை போர்க்களத்திலே அழியும் ; பாதகராகிய அரக்கர்களுடைய வில்லிலிருந்து தோன்றுகின்ற அம்பு படுதலால், கடல் போன்ற குரங்குக் கூட்டங்கள் பல் தோன்றுகின்ற தலை அறுபட அழிவனவாகும்.

கு :- முற்படுதல் - விரைதல். அரக்கராகிய கார்க்கடல் என உருவகித்துப் ‘படும்’ என அஃறிணை முடிபு கொடுத்தார். கடல், குரங்குக் கூட்டங்களின் பரப்பிற்கு உவமை.

8477. எயிற்றொடு நெடுந்தலை யிட்ட கல்லொடும்
வயிற்றிடை புகப்பல பகலும் வைகிய
பயிற்றிய ராயினுந் தெரிக்கும் பண்பிலார்
அயிர்ப்பர்தங் கணவரை யணுகி யந்நலார்.

எயிற்றொடு நெடுந்தலை, இட்ட கல்லொடும்
வயிற்றிடை புக, பல பகலும் வைகிய
பயிற்றியர் ஆயினும், தெரிக்கும் பண்பு இலார்,
அயிர்ப்பர், தம் கணவரை அணுகி அந்நலார்.

பொ :- அங்குள்ள வீரமடந்தையர் (போர்க்களத்திற்கு) வந்து, பற்களோடு பெரிய தலை, (குரங்குகளால்) போடப்பட்ட கல்லோடும் வயிற்றிலே புகுதலால், பல நாளும் (அவர்களோடு) உறைந்த பழக்கத்தையுடையராயினும் தம் கணவரைத் தெரிந்துகொள்ளும் தகுதியில்லாதவராகி ஐயப்படுவார்கள்.

கு :- குரங்குகள் போட்ட மலை, தலையை அழுத்திக் கொண்டு வயிற்றினுள்ளே சென்றது. தலை இல்லாமையினாலே உடலை அடையாளங் கண்டுகொள்ள மனைவியர்க்கு இயலாதாயிற்று. பயிற்றியர் - பயிற்சியையுடையவர். ‘தெரியும்’ என்னும் தன்வினை தெரிக்கும் எனப் பிறவினையாக நின்றது.

8478. கிச்சுறு கிரிபடக் கிளர்பொற் றேர்நிரை
அச்சிறச் செல்கில வாடல் வாம்பரி

எச்சுறு துயரிடை யெய்த வீத்துணு
முச்சிறு வாழ்க்கையின் மூண்டு ளோரென.

கிச்சு உறு கிரி பட, கிளர் பொன் தேர் நிரை
அச்சு இற, செல்கில, ஆடல் வாம் பரி—
எச்சு உறு துயரிடை எய்த, ஈத்து உணு
முச்சு இறு வாழ்க்கையின் மூண்டுளோர் என.

பொ :- இளைத்தலை உண்டாக்குகின்ற (வறுமைத்) துயர் இடையில் உண்டாதலால், பிறருக்குக் கொடுத்து உண்ணுது மூச்சு அற்றுப்போகும் துன்ப வாழ்க்கையிலே அகப்பட்டோரைப் போல, (குரங்குகளால் எறியப்பட்ட) நெருப்புப் பொருந்திய மலைகள் படுதலால், விளங்குகின்ற அழகிய தேர்க் கூட்டங்கள் அச்சு ஒடிய, வலிமையுடைய தாவுகின்ற குதிரைகள் (அவைகளை) இழுத்துச் செல்லாதன ஆயின.

கு :- கிச்சு - நெருப்பு. 'கிச்சிடை யிடுமெனக் கிளக்கின்ருர் சிலர்' (சுந்தரகாண் பிணிவீட்டுப்படலம்-3). அடல் என்பது 'ஆடல்' என நீண்டது. எய்த்து என்பது 'எச்சு' எனப் போலியாய் நின்றது. இடை - வாழ்க்கையிடையில். ஈந்து உண்ணு என்பது 'ஈத்து உணு' என நின்றது. மூச்சு என்பது 'முச்சு' எனக் குறுகியது. (முச்சற்ருன் கொல் அம் முழு முதலோன் என முனிந்தான்' மந்திரப் படலம்-112) என வருவதும் காண்க. 'மூச்சற்ற வாழ்க்கை' என்பது வாழ்க்கைநடத்த இயலா அத்துணை வறுமையைக் குறித்து நின்றது.

8479. மீயவர் யாவரும் வீய வெங்கரி
சேயிருங் குருதியிற் றிரிவ சேர்வில
நாயக ராளொடு மவிய நவ்விதம்
பாயொடு வேலையிற் றிரியும் பண்பின.

மீயவர் யாவரும் வீய, வெம் கரி
சேயிருங் குருதியில் திரிவ— சேர்வு இல,
நாயகர் ஆளொடும் அவிய, நவ்விதம்
பாயொடு வேலையில் திரியும் பண்பின.

பொ :-தம்மேல் ஏறியுள்ள வீரர்கள் யாவரும் இறக்கக் கொடிய யானைகள் சிவந்த பெரிய இரத்த வெள்ளத்தில் திரிவன, தலைவர்கள்

ஆட்களோடு இறக்கக் கப்பல்கள் கரைசேரமாட்டாதனவாய்த் தம்முடைய பாய்மரத்தோடு கடலில் திரியும் தன்மையை உடையனவாயின.

கு :- மியவர் - மேலுள்ள யானை வீரர். செலுத்தும் வீரர்களின்மையால் யானைகள் அந்த இரத்த வெள்ளத்தை விட்டுக் கரையேற முடியாதன ஆயின. நாயகர்-கப்பலைச் செலுத்தும் மாலுமிகள். நவ்வி - கப்பல். நவ்வி சேர்விலவாய்த் திரியும் என்க. கரி குருதியில் திரிவ, நவ்வி வேலையில் திரியும் பண்பின என முடிக்க.

8480. படையொடு மேலவர் மடியப் பல்பரி
இடையிடை தரவிழுந் திழிந்த பண்பன
கடனெடுங் குருதிய கனலி காலுறு
வடவையை நிகர்த்தன வுதிர வாயன.
படையொடு மேலவர் மடிய, பல்பரி,
இடை இடை தர விழுந்து இழிந்த பண்பன,
கடல் நெடுங் குருதிய,——கனலி காலுறு
வடவையை நிகர்த்தன—உதிரவாயன

பொ :- தன்மேல் ஏறியுள்ள வீரர் படைக்கலத்துடனே மடிதலால், பல குதிரைகள், கடலைப் போன்ற மிக்க இரத்தத்தினது இடையிடையே தோன்ற (இரத்த வெள்ளத்திலே) விழுந்து, உடல் அழுந்திய தன்மையை உடையனவாகி, இரத்தத்தைக் கக்கும் வாயோடு தோன்றுவன, நெருப்பைக் கக்குகின்ற வடவைத் தீயை ஒத்தன.

கு :- 'படை' என்பது குதிரை வீரர் கையில் ஏந்திய படைக்கலம். பரி குருதி இடை, இடைதர என இயைத்து வருந்த எனப் பொருளுரைத்தலுமாம். பண்பன (ஆகி) என ஒரு சொல் வருவிக்க. காலுதல் - வெளிப்படுத்துதல். வடவைத்தீ குதிரை முகம் போன்றது ; இது கடல் நீர் மிகுந்து உலகத்தை அழிக்காவண்ணம் சமன்செய்ய இறைவனால் படைக்கப்பட்டுள்ளது. இரத்த வெள்ளத்தில் உதிரவாயோடு தோன்றுகின்ற குதிரை முகத்திற்கு வடவை உவமம்.

8480. a. எயிற்றெடு நெடுந்தலை யிட்ட கல்லொடும்
வயிற்றிடைப் புகப்பல பகலும் வைகிய
பயிற்றிய ராயினுந் தெரிக்கும் பண்பிலார்
அயிர்ப்பர்தங் கணவரை யணுகி யந்நலார்.

8481. தூமக் கண்ணனு மநுமனு
மெதிரெதிர் தொடர்ந்தார்
தாமத் தங்கதன் மாபெநும்
பக்கனைத் தடுத்தான்
சேமத் திண்சிலை மாலியு
நீலனுஞ் செறுத்தார்
வாமப் போர்வயப் பிசாசனும்
பனசனு மலைந்தார்.

தூமக் கண்ணனும் அனுமனும்
எதிர்எதிர் தொடர்ந்தார்;
தாமத்து அங்கதன் மாபெரும்
பக்கனைத் தடுத்தான்;
சேமத் திண்சிலை மாலியும்
நீலனும் செறுத்தார்;
வாமப்போர் வயப் பிசாசனும்
பனசனும் மலைந்தார்.

பொ :- புகைக்கண்ணனும் அனுமனும் ஒருவர்க்கொருவா எதிர்த்துப் போர் செய்தார்கள்; போர் மாலையணிந்த அங்கதன் மாபெரும் பக்கனைத் தடுத்துப் போர் செய்தான்; காவலாகிய வலிய வில்லையுடைய மாலியும் நீலனும் போரிட்டனர்; தாண்டிச் செல்லும் அப்போரிலே வெற்றியையுடைய பிசாசனும் பசனசனும் போரிட்டனர்.

கு :- தூமக் கண்ணன் - (கோபத்தினுல்) புகையைக் கக்கும் கண்ணையுடையவன். த்‌ாமம் - போர் செய்வோர் அணியும் மாலை; ஈண்டு இயற்கையடை. சேமம் - காவல். செறுத்தல் - கோபித்துப் பொருதல். வாவும் என்பது ‘வாம்’ என இடைக் குறைந்து நின்றது.

8482. சூரியன் பெரும் பகைஞனுஞ்
சூரியன் மகனும்
நேரெ திர்ந்தனர் நெருப்புடை
வேள்வியின் பகையும்
ஆரி யன்றனித் தம்பியு
மெதிரெதி ரடந்தார்

வீர வச்சிரத் தெயிற்றனு
மிடபனு மிடைந்தார்.

சூரியன் பெரும் பகைஞனும் சூரியன் மகனும்
நேரெதிர்ந்தனர் ; நெருப்புடை வேள்வியின் பகையும்
ஆரியன் தனித் தம்பியும் எதிர்எதிர் அடர்ந்தார் ;
வீர வச்சிரத்து எயிற்றனும் இடபனும் மிடைந்தார்.

பொ :- பெரிய சூரியன் பகைவன் என்பவனும் சூரியனுடைய மகனாகிய சுக்கிரீவனும் ஒருவர்க்கொருவர் நேராக நின்று எதிர்த்தனர் ; வேள்வியின் பகைஞனும் இராமனுடைய ஒப்பற்ற தம்பியும் ஒருவர்க்கொருவர் எதிர்த்துப் போரிட்டனர்; வீரம் பொருந்திய வச்சிரத் தெயிற்றனும் இடபனும் நெருங்கிப் போரிட்டனர்.

கு :- சூரியன் மகனாகிய சுக்கிரீவன், தன் தந்தைக்குப் பகைவனை எதிர்த்தான் என ஓர் அழகுபட நின்றது. வேள்விக்கு நெருப்புடைமை இயல்பாதலின் 'நெருப்புடை' என்பது இயற்கையடை. வேள்வியின்பகைவனும் என்பது 'அன் விகுதி குறைந்து நின்றது. 'ஆரியன்' என்பது ஈண்டு இராமனைக் குறித்தது. இராவணனே, 'இளையவன் தனக்குமாற்றா தென்பெருஞ் சேனை' (கும்பகருணன் வதைப்படலம்-16) எனப்புகழ்ந்துரைத்தானுதலின், 'தனித்தம்பி' என்றார். அடர்தல் - போரிடுதல். மிடைதல் - நெருங்கிப் பொருதல்.

8483. வெங்கண் வெள்ளெயிற் றரக்கரிற்
கவிக்குல வீரச்
சிங்க மன்னபோர்த் தலைவரிற்
றலைவராய்த் தெரிந்தார்
அங்க மர்க்களத் தொருவரோ
டொருவர் சென்றடந்தார்
பொங்கு வெஞ்செருத் தேவரு
நடுக்குறப் பெருதார்.

வெங்கண் வெள்ளெயிற்று அரக்கரில்,
கவிக்குல வீரச்
சிங்கம் அன்னபோர்த் தலைவரில்,
தலைவராய்த் தெரிந்தார்,

அங்கு அமர்க்களத்து ஒருவரோடு
ஒருவர்சென்று அடர்ந்தார் ;
பொங்கு வெஞ்செருத் தேவரும்
நடுக்குறப் பொருதார்;

பொ :- தறுகண்மையையுடைய வெண்மையான பற்களைக் கொண்ட அரக்கர்களிலும், குரங்குக் கூட்டத்தில் வீரத்தையுடைய சிங்கத்தை யொத்த போர்த் தலைவர்களிலும் தலைவராகத் தெரிந்தெடுக்கப்பட்ட வீரர்கள், போர்க்களத்தில் ஒருவரோடொருவர் (எதிராகச்) சென்று நெருங்கிக் கிளர்ந்தெழும் கொடிய போரைக் கண்டு தேவரும் அஞ்சும்படியாகப் போரிட்டார்கள்.

கு :- படைத்தலைவர்களை மேலிரண்டு செய்யுட்களில் பிரித்துக் கூறி ஏனையோர்களை இச் செய்யுளில் தொகுத்துக் கூறினர். அடர்தல் - நெருங்குதல். அடர்ந்தார், முற்றெச்சம். பொங்குதல் - கிளர்ந் தெழுதல். செருவைக்கண்டு என ஒரு சொல் வருவிக்க. நடுக்கம்உற என்பது 'நடுக்குற' எனநின்றது.

## அரக்கர் சேனையின் அழிவு

8484. இன்ன காலையி னீரைந்து
வெள்ளம்வந் தேற்ற
மின்னு வெள்ளெயிற் றரக்கர் தஞ்
சேனையில் வீரன்
அன்ன வெஞ்சமத் தாறுவெள்
ளத்தையு மவித்தான்
சொன்ன நாலையு மிலக்குவன்
பகழியாற் றொலைத்தான்.

இன்ன காலையின், ஈர் ஐந்து
வெள்ளம், வந்துஏற்ற
மின்னும் வெள் எயிற்று அரக்கர்தம்
சேனையில், வீரன்
அன்னவெஞ் சமத்து ஆறு
வெள்ளத்தையும் அவித்தான் ;
சொன்ன நாலையும் இலக்குவன்
பகழியால் தொலைத்தான்.

பொ :-இவ்வாறு போர் நிகழும்போது, அந்தக் கொடிய போரில் பத்து வெள்ளம் என்னும் எண்ணையுடையராய் வந்து போர் செய்த விளங்குகின்ற வெள்ளிய பற்களையுடைய அரக்கர் சேனையில் இராமன் ஆறு வெள்ளம் சேனையை அழித்தான்; மீதியாகச் சொல்லப்பட்ட நான்கு வெள்ளம் சேனையையும் இலக்குவன் அம்பினுல் அழித்தான்.

கு :- 'இன்னகாலை' என்பது போர் நிகழ்ந்து கொண்டிருந்த பொழுதைக் குறித்தது. 'ஈரைந்துவெள்ளம்' என்பதுமேல், அன்னவர் தம்மொடும் (20) எனத் தொடங்கும் செய்யுளை நினைவூட்டியது. போரின் கொடுமை நோக்கிப் போருக்கு உவமை கூருமல் அதற்கு அதுவே உவமை என்பது தோன்ற 'அன்னவெஞ்சமம்' எனச் சுட்டினுர்.

### இரத்த வெள்ளம் கடலொடு சேர்ந்த தோற்றம்

8485. உப்பு டைக்கடன் மடுத்தன வுதிரநீ ரோதம்
அப்பொ டொத்தன கடுத்தில வார்கலி முழுதும்
செப்பு ருக்கெனத் தெரிந்தது மீன்குலஞ் செருக்கித்
துப்பொ டொத்தன முத்தினங் குன்றியிற் றேன்ற.

உப்புடைக் கடல் மடுத்தன உதிரநீர் ஓதம்
அப்பொடு ஒத்தன கடுத்தில, ஆர்கலி முழுதும்
செப்பு உருக்கு எனத் தெரிந்தது; மீன்குலம் செருக்கித்
துப்பொடு ஒத்தன, முத்துஇனம் குன்றியின்தோன்ற.

பொ :- உப்புடைய கடலிலே போய்ச் சேர்ந்தனவாகிய இரத்த நீர்ப் பெருக்குகள் (அந்த) நீரோடு கலந்தனவாய் நிறத்தால் ஒவ்வாதன ஆக, கடல்நீர் முழுவதும் செம்பை உருக்கி விட்டாற்போலக் காணப்பட்டது; (அக் கடலிலுள்ள) முத்துக் கூட்டங்கள் குன்றி மணியைப் போலத் தோன்ற, மீன் கூட்டங்கள் தருக்குற்றுப் பவழத்தோடு ஒத்துத் தோன்றின.

கு :- மடுத்தன ஓதம் என இயைக்க. உதிரநீரோதம் கடல் நீரோடு கலந்தன ஆயினும் நிறத்தால் ஒவ்வாதன ஆயின என்பார், 'அப்போடு ஒத்தன கடுத்தில' என்ருர். 'ஆர்கலி 'என்பது நிறைந்த ஒலியுடையது எனக் கடலுக்குக் காரணக் குறி. துப்பு - பவழம். குன்றி - குன்றிமணி.

8486. தத்து நீர்க்கடன் முழுவதுங் குருதியாய்த் தயங்கச்
சித்தி ரக்குலப் பன்னிற மணிகளுஞ் சேந்த
ஒத்து வேறுருத் தெரியல வுயர்மதத் தோங்கல்
மத்த கத்துகு தரளமும் வளைசொரி முத்தும்.

தத்து நீர்க் கடல் முழுவதும் குருதியாய்த் தயங்க,
சித்திரக் குலப் பன்நிற மணிகளும் சேந்த;
ஒத்து வேறு உருத் தெரியல, உயர் மதத்து ஓங்கல்
மத்தகத்து உகுதரளமும், வளை சொரி முத்தும்.

பொ :- தாவுகின்ற நீர் சூழ்ந்த கடல் முழுவதும் இரத்தமாய் விளங்குதலினுல், அழகிய சிறந்த பல நிறத்தையுடைய மணிகளெல் லாம் செந்நிறம்டைந்தன ; உயர்ந்திருக்கின்ற மதத்தையுடைய மலை போன்ற யானை தலையிலிருந்து சொரிய விடுகின்ற முத்துக் களும் சங்குகள் சொரிகின்ற முத்துக்களும் (அந்த இரத்தத்தோடு) சேர்தலால், (செந்நிறமடைந்து) வேருகிய (தம்முடைய) வெண்மை நிறம் தெரியாதன ஆயின.

கு :- தத்துதல் - தாவுதல். தயங்குதல் - விளங்குதல். சித்திரம், ஈண்டு அழகைக் குறித்தது. மணிகள் பல நிறம் உடையன வாதலின் ‘பல்நிற மணிகள்’ என்ருர். ‘சேந்த’ என்பது ‘அன்’ சாரியை குறைந்து நின்றது. ‘வேறுஉரு’ என்பது இரத்தத்தினது சிவப்பு நிறத்திற்கு வேருகிய உரு. ‘தெரியல’ என்பதில் ‘அல்’ எதிர்மறை இடைநிலை. ஓங்கல், உவம ஆகுபெயர். மத்தகத்தில் என்பது சாரியை நிற்க உருபு தொக்கது. உகுதல் - சொரிதல். உகுதரளம், வினைத்தொகை.

## சூரியன் தோன்றுதல்

8487. அதிரும் வெஞ்செரு வன்னதொன்
றமைகின்ற வளவில்
கதிர வன்கொழுஞ் சேயொளிக்
கற்றையங் கரத்தால்
எதிரும் வல்லிருட் கரியிறுத்
தெழுமுறை முழுகி
உதிர வெள்ளத்து ளெழுந்தவ
ஞமென வுதித்தான்.

அதிரும் வெஞ்செரு அன்னதுஒன்று
அமைகின்ற அளவில்,
கதிரவன், கொழுஞ் சேயொளிக்
கற்றைஅம் கரத்தால்,
எதிரும் வல்இருட் கரிஇறுத்து
எழுமுறை, முழுகி,
உதிர வெள்ளத்துள் எழுந்தவன்
ஆம்என உதித்தான்.

பொ :- அஞ்சும்படியான கொடிய போர் அப்படிப்பட்ட தொன்று நடந்து கொண்டிருக்கிறபொழுதில், சூரியன் (தனது) மிக்க சிவப்பு நிறத்தையுடைய ஒளித் தொகுதியாகிய அழகிய கைக ளால், எதிர்ந்த வலிய இருளாகிய யானையை அழித்துத் தோன்றும் காலத்து, இரத்த வெள்ளத்துள் முழுகி எழுந்தவனைப் போலத் தோன்றினான்.

கு :- ‘அதிரும் வெஞ்செரு’ என்பதனோடு ‘அதிரப் பொருவது தும்பை’ என்பது ஒப்பு நோக்கற்பாலது. ‘அன்னவெஞ்சமம்’ (52) என்பதனையே ஈண்டு ‘அதிரும் வெஞ்செரு அன்னதொன்று’ என்றார். இறுத்தல் - அழித்தல். எழும் முறை - எழுகின்ற காலம், ‘முழுகி’ என்பதனை வெள்ளத்துள்’ என்பதன் பின் இயைக்க.

## வெயில் பரத்தல்

8488. அரக்க ரென்றபே ரிருளினை
யிராமனு மிரவி
துரக்க வெஞ்சுடர்க் கதிரவன்
புறத்திரு டொலைக்கப்
புரக்கும் வெய்யவ ரிருவரை
யுடையன போல
நிரக்கு நல்லொளி பரந்தன
வுலகெலா நிமிர.

அரக்கர் என்ற பேர் இருளினை
இராமன் ஆம்இரவி
துரக்க, வெஞ்சுடர்க் கதிரவன்
புறத்துஇருள் தொலைக்க,

புரக்கும் வெய்யவர் இருவரை
உடையன போல,
நிரக்கும் நல்ஒளி பரந்தன,
உலகுஎலாம் நிமிர.

பொ:- அரக்கராகிய பெரிய இருளினை இராமனாகிய சூரியன் ஓடச் செய்யவும், சுடுகின்ற கிரணத்தையுடைய சூரியன் வெளி இருளினை ஓடச் செய்யவும், பாதுகாக்கின்ற சூரியர் இருவரை உடையன போல நிரம்பிய நல்ல ஒளி உலகமெங்கும் வெளிப்பட்டுப் பரந்தன.

கு:- அரக்கர் இவ்வுலகத்துள் இருப்பதால் அக இருளாகக் குறிப்பிட்டார். 'இராமனும் இரவி துரக்க' என்பதில் துரக்க என்பது அழித்தல். உலகத்தை மூடியிருப்பதால் 'புறத்திருள்' எனப்பட்டது. இராமன் கருநிறமாகவும். இருளைப் போக்குந் தொழிலால் சூரியனோடு உவமித்தார்; இது தொழிலுவமம். இச் செய்யுளைக் கொண்டு இதுவரை நிகழ்ந்த போர் இரவுப் போர் என்பது பெறப்பட்டது.

**போர்க்களக் காட்சி**

8489. நிலைகொள் பேரிரு ணீங்கலு நிலத்திடை நின்ற
மலையும் வேலையும் வரம்பில வயின்றொறும் பரந்து
தொலைவி றன்மைய தோன்றுவ போன்றன சோரி
அலைகொள் வேலையு மரும்பிணக் குன்றமு மணவி.

நிலைகொள் பேர் இருள் நீங்கலும், நிலத்திடை நின்ற
மலையும் வேலையும் வரம்பு இல வயின்தொறும் பரந்து,
தொலைவு இல் தன்மைய தோன்றுவ போன்றன—சோரி
அலைகொள் வேலையும் அரும் பிணக் குன்றமும் அணவி

பொ:- நிலைத்தலைக் கொண்ட பெரிய இருள் அகலுதலும், அலைகளைக் கொண்ட இரத்தமாகிய கடலும் (கடத்தற்கு) அரிய பிணமலைகளும் பொருந்தி, நிலத்திடை நின்ற மலையும் (அதனைச் சூழ்ந்த) கடலும் அளவில்லாதனவாய் இடந்தொறும் பரவி அழியாதனவாய்த் தோன்றுவனவற்றைப் போன்றிருந்தன.

கு.- கடலில் மலை தோன்றுவது போல இரத்தப் பெருக்கில் பிணமலைகள் தோன்றின என்பது கருத்து. சூரிய ஒளி நீங்கியவுடன்

இருள் பரத்தல் இயல்பாதலின், 'நிலைகொள் பேரிருள்' எனப்பட்டது. பலவிடங்களிலும் காணப்படுதலால், 'வயின் தொறும்' எனக் கூறப் பட்டது. 'அலைகொள் சோரி வேலையும் என இயைக்க. அணவுதல்-பொருந்துதல்; சேர்தல்.

8490. நிலந்த வாதசெந் நீரிடை நிணக்கொழுஞ் சேற்றில்
புலர்ந்த காலையிற் பொறிவரி யம்பெனுந் தும்பி
கலந்த தாமரைப் பெருவனங் கதிரவன் கரத்தால்
மலர்ந்த தாமெனப் பொலிந்தன வுலந்தவர் வதனம்.

நிலம் தவாத செந்நீரிடை, நிணக் கொழுஞ் சேற்றில்
புலர்ந்த காலையில், பொறி வரி அம்பு எனும் தும்பி
கலந்த தாமரைப் பெருவனம், கதிரவன் கரத்தால்
மலர்ந்தது ஆம் எனப் பொலிந்தன, உலந்தவர் வதனம்.

பொ:- விடிந்த பொழுது, நிலம் இடையறவு படாதபடி பரந்திருக்கின்ற இரத்த வெள்ளத்திலே நிணமாகிய கொழுவிய சேற்றில் புள்ளியையும் வரியையும் உடைய அம்புகளாகிய வண்டு பொருந்திய இறந்துகிடக்கின்ற வீரர்களுடைய முகங்கள், தும்பி கலந்த தாமரையாகிய பெரிய காடு சூரியனுடைய கிரணங்களால் மலர்ந்ததுபோல விளங்கின.

கு:- தவுதல்-கெடுதல். தவாத-கெடாத; ஈண்டு இடம் ஒழியாமைப் பொருட்டில் நின்றது. முகத்தைத் தாமரையோடு உருவகித்த தற்கேற்ப இரத்தத்தை நீராகவும் நிணத்தைச் சேறாகவும் உருவகித்தார். மொட்டு, வண்டு ஊத மலர்வதாதலின் 'தும்பி கலந்த' என்பது 'தாமரைப் பெருவனம்' என்பதனோடு மீண்டும் கூட்டப்பட்டது. பொறி, வரி ஆகிய இரண்டினையும் அம்பிற்கு நெருப்புப் பொறியும் கோடுமாகவும், தும்பிக்குப் புள்ளியும் கீற்றுமாகவும் கொள்க. 'புலர்ந்த காலை' என்றமையின் சிவப்பு நிறச் சூரிய ஒளி அரக்கர் முகத்தில்பட்டுத் தாமரை மலர்போல் தோன்றுவதாயிற்று.

இச் செய்யுளை யடுத்து 52ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகின்றது.

8490.உ.கொடுமரத்திடை யிராகவன் கோத்த வெம் பகழி
அடலரக்கரென் றுரைத்திடுங் கானக மடங்கக்
கடிகை யுற்றதில் களைந்தது கண்டுவிண் ணவர்கள்
விடிய லுற்றது நம்பெருந் துயரென வியந்தார்.

8491. தேரும் யானையும் புரவியும் விரவின தேவர்
ஊரு மானமு மேகமு முடுக்கட முலகும்
பேரு மானவெங் காலத்துக் கால்பொரப் பிணங்கிப்
பாரின் வீழ்ந்தன போன்றன கிடந்தன பரந்த.

தேரும் யானையும் புரவியும் விரவின,—தேவர்
ஊரும் மானமும் மேகமும் உடுக்கள் தம் உலகும்
பேரும் ஆன வெம் காலத்துக் கால்பொர, பிணங்கிப்
பாரின் வீழ்ந்தன போன்றன—கிடந்தன பரந்த.

பொ:- (போர்க்களத்திலே), தேர்களும் யானைகளும் குதிரைகளும் கலந்து பரந்தனவாய்க் கிடந்தன, தேவர்கள் ஏறிச் செல்கின்ற விமானமும் மேகமும் விண்மீன் மண்டலமும் (உலகங்கள்) நிலை பெயரும் அத்தகைய ஊழிக்காலத்திலே ஊழிக்காற்றுத் தாக்க மாறு பட்டுப் பூமியில் வீழ்ந்தனவற்றைப் போன்றன.

கு:- தேர் யானை புரவிகளுக்கு மானம் மேகம் உடுக்கள் தம் உலகு ஆகியவை நிரனிறை உவமை. மானம், முதற் குறை. பேரும் ஆன-நிலை பெயரும் அத்தகைய பெயரும் என்பதன் திரிபு ‘பேரும்’ என்பது. யாவையும் அழித்தலால் ஊழிக்காலம், ‘வெம் காலம்’ எனப்பட்டது. பொருதல்-தாக்குதல். பிணங்குதல்-ஒன்றோடொன்று கலந்து கிடத்தல்.

## போர்க்களம் எய்திய அரக்கியரின் தன்மையும் செயலும்

8492. எல்லி சுற்றிய மதிநிகர் முகத்திய ரெரிவீழ்
அல்லி சுற்றிய கோதையர் களம்புகுந் தடைந்தார்
புல்லி முற்றிய வுயிரினர் பொருந்தினர் கிடந்தார்
வல்லி சுற்றிய மாமர நிகர்த்தனர் வயவர்.

எல்லி சுற்றிய மதிநிகர்
முகத்தியர், எரிவீழ்
அல்லி சுற்றிய கோதையர்,
களம்புகுந்து அடைந்தார்,

புல்லிமுற்றிய உயிரினர்
பொருந்தினர் கிடந்தார்,
வல்லி சுற்றிய மாமரம்
நிகர்த்தனர் வயவர்.

பொ:- இரவில் சுற்றி வருகின்ற மதியை ஒத்த முகத்தையுடையவரும், நெருப்பும் தோற்கும்படியான பூமாலை சுற்றிய கூந்தலையுடையவருமாகிய அரக்கியர், போர்க்களத்தில் புகுந்து (தத்தம் கணவரை) அடைந்து (அவரைத்) தழுவி உயிர் நீத்தனராய்ச் சேர்ந்து கிடந்தார்; (அம் மகளிரால் தழுவப்பட்டுக் கிடக்கும்) வீரர்கள் கொடியினுல் சுற்றப்பட்ட மாமரத்தை ஒத்தனர்.

கு:- 'எல்லி சுற்றிய' என்பது மதிக்கு இயற்கை அடை. எரி விழ் கோதை என இயைக்க. 'விழ்' என்பது உறழ்ச்சிப் பொருளில் வந்த உவம உருபு. அல்லி-அகவிதழ். முற்றிய-முடிந்த. கற்புடைய மகளிராதலின் கணவரைத்தழுவி உயிர் நீத்தனர் என்க.

8493. வணங்கு நுண்ணிடை வனமுலைச்
செக்கர் வார்கூந்தல்
அணங்கு வெள்ளெயிற் றரக்கியர்
களத்துவந் தடைந்தார்
குணங்கொ ளுந்துணைக் கணவர்தம்
பசுந்தலை கொடாது
பிணங்கு பேய்களின் வாய்களைப்
பிளந்தனர் பிடித்தார்.

வணங்கு நுண்இடை, வனமுலை,
செக்கர்வார் கூந்தல்,
அணங்குவெள் எயிற்று, அரக்கியர்
களத்துவந்து அடைந்தார்
குணம்கொளும் துணைக் கணவர்தம்
பசுந்தலை கொடாது
பிணங்கு பேய்களின் வாய்களைப்
பிளந்தனர் பிடித்தார்.

பொ:- வளையும் நுண்ணிய இடையினையும் அழகிய தனங்களையும் சிவந்த நீண்ட கூந்தலையும் வருத்தும்படியான வெள்ளிய பல்லை

யுமுடைய அரக்கியர் போர்க்களத்திலே வந்து சேர்ந்து, (போர் செய்யும் வீரக்) குணத்தைக் கொண்ட (தமக்குத்) துணையாகிய கணவரின் பசிய தலையைக் கொடுக்காமல் மாறுபடுகின்ற பேய்களின் வாய்களைப் பிடித்தனராய்ப் பிளந்தனர்.

கு:- அணங்குதல்-வருத்துதல். களம்-போர்க்களம். அடைந்தார், பிடித்தார் என்பன முற்றெச்சங்கள். குணம் என்பது ஈண்டு வீரக் குணத்தை உணர்த்தியது. அப்பொழுது துணிக்கப்பட்டுக் குருதி புலராமலிருந்த தலையாதலின் 'பசுந்தலை' என்றார். பிணங்குதல்-(கொடாது) மாறுபடுதல். தலையினைக் கொடாது பிணங்கும் பேய்களின் வாய்களைப் பிடித்து அரக்கியர் பிளந்தனர் என்க.

8494. சுடரும் வெள்வளைத் தோளிதன்
கொழுநனைத் தொடர்வாள்
உடரு மங்கமுங் கண்டுகொண்
டொருவழி யுய்ப்பாள்
குடரு மீரலுங் கண்ணுமோர்
குறுநரி கொள்ளத்
தொடர வாற்றல ணெடிதுயிர்த்
தாருயிர் துறந்தாள்.

சுடரும் வெள்வளைத் தோளி, தன்
கொழுநனைத் தொடர்வாள்,
உடரும் அங்கமும் கண்டு, கொண்டு
ஒருவழி உய்ப்பாள்,
குடரும் ஈரலும் கண்ணும், ஓர்
குறுநரி கொள்ள,
தொடர ஆற்றலள், நெடிது உயிர்த்து,
ஆர் உயிர் துறந்தாள்.

பொ:- விளங்குகின்ற வெண்ணிறத்தையுடைய வளையினைக் கொண்ட தோளையுடையவள் (ஒருத்தி) தன் கணவனைத் (தேடித்) தொடர்கின்றவள், (தன் கணவனுடைய) உடலையும் (அறுபட்ட) உறுப்புக்களையும் கண்டு (அவற்றை) ஓரிடத்திலே கொண்டுபோய்ச் சேர்ப்பவள், குடலையும் ஈரலையும் கண்களையும் ஒரு சிறு நரி கொண்டிட (அதனைத்) தொடர்ந்து செல்லும் வலியில்லாதவளாகிப் பெருமூச்சு விட்டுத் தன் அரிய உயிரைத் துறந்தாள்.

கு:- ஈண்டுத் 'தோள்' என்பது முன்கையினை உணர்த்தியது. தொடர்வாள் கண்டு கொண்டு உய்ப்பாள் என இயைக்க. உடர், குடர் என்பன போலி. அங்கத்தை வேறு பிரித்ததால் அறுபட்ட என்னும் சொல் வருவிக்கப்பட்டது. ஒருவழி உய்த்தலாவது, உறுப்புக்களை உடலொடு சேர்த்து வைத்தல்.

**8495. பெரிய வாட்டடங் கண்ணியர்**
**கணவர்தம் பெருந்தோள்**
**நரிக ளீர்த்தன வணங்கவு**
**மிணங்கவு நல்கா**
**இரியல் போவன தொடர்ந்தய**
**லினப்படை கிடந்த**
**அரிய நொந்தில ரலத்தகச்**
**சீறடி யயர்ந்தார்.**

பெரிய வாள்தடங் கண்ணியர்,
கணவர்தம் பெருந்தோள்
நரிகள் ஈர்த்தன, வணங்கவும்
இணங்கவும் நல்கா
இரியல் போவன தொடர்ந்து,
அயல்இனப் படைகிடந்த
அரிய நொந்திலர் அலத்தகச்
சீறடி, அயர்ந்தார்.

பொ:- பெரியதாகிய வாள்போன்ற பரந்த கண்களையுடைய மகளிர், தம்முடைய கணவரின் பெரிய தோள்களை இழுத்துக் கொண்டு சென்ற நரிகள், (தாம்) வணங்கிக் கேட்கவும் இணக்கமான மொழிகளைச் சொல்லி இரக்கவும் கொடுக்காமல் விரைந்து செல்வன வற்றைத் தொடர்ந்து சென்று, பக்கத்திலே கிடந்தனவாகிய கூட்டமாகிய படைக்கலங்கள் செம்பஞ்சுக் குழம்பு ஊட்டப்பெற்ற தம் சிறிய அடிகளை அரியவும், (அதற்கு) வருந்தாதவராய் (அந் நரிகளைப் பிடித்துத் தோள்களைப்பற்ற முடியவில்லையே என்று) வருத்த முற்றனர்.

கு:- பரந்த கண்கள் மகளிருக்கு அழகு செய்வதாகலின், 'தடங் கண்ணியர்' என்றார். 'கஞ்சத்தினளவிற்றேனும் கடலினும் பெரிய கண்கள்' (ஆரணிய- மாரீசன் வதைப்படலம்-70) என்னும் பகுதி ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. நல்கா-நல்காது. இரியல் போதல்-

விரைந்து செல்லுதல். அயல் கிடந்த இனப்படை அலத்தகச் சீறடி அரிய நொந்திலர் என இயைக்க. அலத்தகம்-செம்பஞ்சுக் குழம்பு. படைகள் சீறடி அரியவும் நொந்திலராய், அந் நரிகளைப் பிடித்துத் தோள்களைக் கைப்பற்ற முடியவில்லையே என்று வருந்துவாராயினர் என்க.

8496. நலங்கொ ணெஞ்சினர் தந்துணைக்
கண வரை நாடி
விலங்க லன்னவான் பெரும்பிணக்
குப்பையின் மேலார்
அலங்க லோதிய ருருந்துணை
பிரிந்துநின் றயரும்
பொலங்கொண் மாமயில் வரையின்மேற்
றிரிவன போன்ருர்.

நலம்கொள் நெஞ்சினர், தம்துணைக்
கணவரை நாடி,
விலங்கல் அன்னவான் பெரும்பிணக்
குப்பையின் மேலார்
அலங்கல் ஓதியர்,—அருந்துணை
பிரிந்துநின்று அயரும்,
பொலம்கொள் மாமயில் வரையின்
மேல்திரிவன போன்ருர்.

பொ:- அன்பு கொண்ட மனத்தினை உடையவராகித் தம் துணைவராகிய கணவரைத் தேடிக்கொண்டு, மலைபோன்ற மிகப் பெரிய பிணக்கூட்டத்தின்மேல் செல்கின்றவராகிய மாலையணிந்த கூந்தலையுடைய பெண்கள், (தமது) அரிய துணையாகிய ஆண் மயில்களைப் பிரிந்து வருந்துகின்ற அழகு கொண்ட பெரிய பெண் மயில்கள் மலையின்மேல் திரிவனவற்றை ஒத்திருந்தார்கள்.

கு:, 'நலம்' என்பது ஈண்டு அன்பு. பிணக்குப்பைக்கு விலங்கல் உவமை. 'விலங்கல் அன்ன' என்பது உவமேயத்தைச் சிறப்பித்து நின்றது. மேலாராகிய ஓதியர் என்க. பிணக்குவியலின்மேல் தம் கணவரை நாடித் திரியும் பெண்கள், மலையின்மேல் ஆண் மயில் களைத் தேடித்திரியும் பெண் மயில்களைப் போன்ருர் என்க.

8497. சிலவர் தம்பெருங் கணவர்தஞ்
செருத்தொழிற் சினத்தால்
பலரும் வாய்மடித் துயிர்துறந்
தார்களைப் பார்த்தார்
அலேவில் வெள்ளெயிற் ருலிதழ்
மறைத்துள தயலாள்
கலவி யின்குறி காண்டுமென்
ருமெனக் கனன்ருர்,

சிலவர்—தம்பெருங் கணவர்தம்
செருத்தொழில் சினத்தால்,
பலரும்,வாய் மடித்து உயிர்துறந்
தார்களைப் பார்த்தார்,
'அலேவுஇல் வெள்எயிற்ருல் இதழ்
மறைத்துளது, அயலாள்
கலவியின் குறிகாண்டும் என்று
ஆம்'எனக் கனன்ருர்.

பொ:- சில பெண்கள், தமது பெருமைபெற்ற கணவர் பலரும் தம்முடைய போர்த் தொழிலிலே கொண்ட கோபத்திஞல் வாயை மடித்து (அங் நிலேயிலேயே) உயிர் துறந்தவர்களேப் பார்த்து, 'அசைவில்லாத வெள்ளிய பற்களால் இதழை மறைத்துள்ளது, வேருெருத்தியினுடைய கூட்டத்தினுடைய குறியை நாம் பார்த்துவிடுவோம் என்ற கருத்திஞற் போலும்' எனக் கருதி (அவர் மீது) கோபித்தார்கள்.

கு:- 'சிலவர்' என்றதற் கேற்பப் 'பலர்' என்ருர். கணவர் பலரும் எனக் கூட்டுக. இடம் நோக்கி 'அங்நிலேயிலேயே' என்பது வருவித் துரைக்கப்பட்டது. 'பார்த்தார்' என்பது முற்றெச்சம். இறந்தமையால் பல் அசைவிலதாயிற்று. கோபித்ததஞல் மறைத்த வாயிதழை அயலாள் கலவியின் குறி தெரியாமைப்பட்டு மறைத்தது என்றது தற்குறிப்பேற்ற அணி. வீரச் சுவையோடு இன்பச் சுவையையும் புணர்த்துக் கூறிஞர்.

"வாய் மடித்துக் கிடந்த தலேமகனே நோக்கி
மணியதரத் தேதேனும் வடுவுண்டாயோ
நீமடித்துக் கிடந்த தெனப் புலவி கூர்ந்து
நின்ருவி சோர்வாளேக் காண்மின் காண்மின்"

(கலிங்கத்துப் பரணி-482) என்னும் தாழிசைக்கு விளக்கமாக இச் செய்யுள் அமைந்திருத்தல் காண்க. இச் செய்யுள் ஊடுகின்ற மகளிர் திறம் கூறியது.

8498. நவைசெய் வன்றலை யிழந்ததந்
நண்பரை நணுகி
அவச மெய்திய மடந்தைய
ருருத்தெரிந் தறியார்
துவச மன்னதங் கூருகிர்ப்
பெருங்குறி தோண்மேல்
கவச நீக்கினர் கண்டுகண்
டாருயிர் கழித்தார்.

நவைசெய், வன்தலை இழந்ததம்
நண்பரை நணுகி
அவசம் எய்திய மடந்தையர்
உருத்தெரிந்து அறியார்,
துவசம் அன்னதம் கூர்உகிர்ப்
பெருங்குறி, தோள்மேல்
கவசம் நீக்கினர், கண்டுகண்டு,
ஆர்உயிர் கழித்தார்.

பொ:- வலிய தலையை இழந்த, (பகைவரைக்) கொல்லுதலைச் செய்யும் தம்முடைய கணவரை அணுகி, (தம் கணவரின்) அடையாளத்தைத் தெரிந்துகொள்ள இயலாதவராய்த் துயரம் அடைந்த (சில) மகளிர், (அவருடைய) சட்டையை நீக்கித் தோளின்மீது கொடியை ஒத்த தமது கூரிய நகத்தினது பெரிய குறியைப் பார்த்துப் பார்த்து (ப் பெருந்துயரத்தால்) தம் அரிய உயிரை விட்டார்கள்.

கு:- நவை-கொல்லுதல். 'சூர்நவைமுருகன் சுற்றத்தன்ன' (புறம்-23). நவைசெய் நண்பர், வன்தலை இழந்ததம் நண்பர் எனத் தனித்தனி இயைக்க. நண்பர்-கணவர். 'சண்பகத் தணிகோதை நின்றாள் தனி, நண்பனை நினையா நறுமேனியே' (சீவகசிந். 1324) என்பதனுள் 'நண்பன்' என்பது கணவன் என்னும் பொருள் குறித்து நிற்றல் காண்க. அவசம்-தன் நிலை இழத்தல். உரு-வடிவு; ஈண்டு அடையாளத்தை உணர்த்தியது. துவசம் அன்ன குறி என இயைக்க. 'குறி' என்றது கலவியின் நிகழ்ச்சி. கவசம்-இருப்புச்

சட்டை; பகைவர்களுடைய அம்பு முதலியன தாக்காவண்ணம் உடலில் அணிவது.

8499. மாரி யாக்கிய கண்ணியர்
கணவர்தம் வயிரப்
போரி யாக்கைக ணாடியப்
பொருகளம் புகுந்தார்
பேரி யாக்கையின் பிணப்பெருங்
குன்றிடைப் பிறந்த
சோரி யாற்றிடை யழுந்தின
ரின்னுயிர் துறந்தார்.

மாரி ஆக்கிய கண்ணியர்,
கணவர்தம் வயிரப்
போர் யாக்கைகள் நாடி, அப்
பொருகளம் புகுந்தார்,
பேர் யாக்கையின் பிணப்பெருங்
குன்றிடைப் பிறந்த
சோரி ஆற்றிடை அழுந்தினர்,
இன்உயிர் துறந்தார்.

பொ:- அழுது கொண்டிருக்கிற கண்களையுடைய சில பெண்கள் அந்தப் போர்க்களத்தில் புகுந்தவராய்த் தமது கணவருடைய வலிய போர் செய்கின்ற உடம்புகளைத் தேடி, பெரிய உடம்புகளாகிய உயர்ந்த பிணமலையிலே பிறந்த இரத்தமாகிய வெள்ளத்திலே அழுந்தித் தமது இனிய உயிரை விட்டார்கள்.

கு:- நிறைந்த கண்ணீர் சொரிகின்ற மகளிரை மழை போன்ற கண்ணையுடையவரென்றார். 'ஆக்கிய' என்பது ஈண்டு உவமவாசகம். வயிரம்-வலிமை. போர் + யாக்கை: போரியாக்கை. 'தன்னொழி மெய்ம்முன் யவ்வரின் இகரம் துன்னும் என்று துணி நரும் உளரே' (நன்னூல்-205), என்பதால் நிலைமொழியில் இகரம் வந்தது. புகுந்தார் என்பது முற்றெச்சம். 'யாக்கையின்' என்பதில் 'இன்' சாரியை. யாக்கையின் பெருக்கத்தைப் பிணமலையாக உருவகித்தார். பிணத்தை மலை என்றதற்கேற்ப இரத்தத்தை ஆறாக உருவகித்தார்.

இச் செய்யுளையடுத்து 52-ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகின்றது.

8499.a. வெற்றி வெம்படைத் தலைவரென்
றுரைத்திடும் வெள்ளத்
துற்ற போர்வலி யரக்கர்கள்
ஒருதனி முதல்வன்
கொற்ற வெஞ்சர மறுத்திட
அளப்பிலர் குறைந்தார்
மற்றும் நின்றவர் ஒருதிசை
தனித்தனி மலைந்தார்.

அனுமனுடன் பொருது புகைக்கண்ணன் மடிதல்

8500. வகைநின் றுயர்தா ணெடுமா ருதியும்
* புகையின் பொருகண் ணவனும் பொருவார்
மிகைசென் றிலர்பின் றிலர்வென் றிலரால்
சிகைசென் றுநிரம் பியதீ யுமிழ்வார்.

வகை நின்று உயர்தாள் நெடு மாருதியும்
புகையின் பொரு கண்ணவனும், பொருவார்;
மிகை சென்றிலர், பின்றிலர்; வென்றிலரால்;
சிகை சென்று நிரம்பிய தீ உமிழ்வார்.

பொ :- தகுதியாக நின்று உயர்ந்த கால்களையுடைய பெரிய அனுமனும் போர் செய்கின்ற புகைக்கண்ணனும் கொழுந்து விட்டெரிகின்ற நெருப்பைக் கக்குபவராய்ப் போர் செய்கின்றவர்கள், ஒருவரின் ஒருவர் மேற்படாதவராகிப் பின்னிடையவுமில்லை; வெற்றியடையவுமில்லை;

கு :- கடல் தாண்டி வந்த சிறப்பினாலும் கால் கொடு உதைத்துப் புகைக்கண்ணனை மடியச் செய்தமையாலும் மாருதிக்கு 'வகை நின்றுயர்தாள்' என அடைமொழி கொடுத்தார். 'பொரு' என்பதைப் பிரித்து இயற்கையடையாக்கிப் 'புகைக்கண்ணன்' என்க. 'புகையின்' என்பதில் 'இன்' சாரியை. 'கண்ணவன்' என்பதில் அகரம் விரித்தல், 'மிகை சென்றிலர்' என்பது சமமாகப் போரிட்டார்கள் என்றபடி. 'பின்றிலர்' என்பதால் தோற்றிலர் என்பது பெறப்படும். கோபத்தீ மிகுதியாக வெளிப்படுதலின் கொழுந்து விட்டெரியும் தீ என்றார். உமிழ்வாராகிப் பொருவார் என இயைக்க.

8501. ஐயஞ் சழல்வா ளியழற் கொடியோன்
மெய்யஞ் சனைகான் முளைமே னியின்மேல்
வையஞ் சிலையா றுவழங் கினனால்
மொய்யஞ் சனமே கமுனிந் தனையான்.

ஐ–அஞ்சு அழல்வாளி, அழற்கொடியோன்,
மெய் அஞ்சனை கான்முளை மேனியின்மேல்,
வை அம் சிலை ஆறு வழங்கினனால்,
மொய் அஞ்சன மேகம் முனிந்தனையான்.

பொ :- நெருங்கிய கருப்பு நிறத்தையுடைய மேகம் கோபித்ததனை ஒத்தவனாகிய நெருப்புப் போன்ற கொடுமையினையுடைய புகைக் கண்ணன், உண்மையுள்ள அஞ்சனை சிறுவனாகிய அனுமன் உடம்பின்மீது இருபத்தைந்து கொடிய அம்புகளைத் தான் வைத்திருக்கின்ற அழகிய வில்லின் வழியாக எய்தான்.

கு :- ஐயைந்து — இருபத்தைந்து. அழல்வாளி — நெருப்பைக் கக்கும் அம்பு. கான்முளை — புதல்வன். வை — வைத்திருக்கிற ; கூர்மையெனப் பொருள் கொண்டு வாளியொடு கூட்டலுமாம். ஆறு — வழி. வழங்குதல், ஈண்டு எய்தல். முனிந்தனையானாகிய அழற் கொடியோன் என்றியைத்து ஒரே பெயராக்குக. முனிந்தது அனையான் என்பது குறைந்து 'முனிந்தனையான்' என நின்றது.

8502. பாழிப் புயமம் புருவப் படலும்
வீழிக் கனிபோற் புனல்வீ சவெகுண்
டாழிப் பெருந்தே ரையழித் தனனால்
ஊழிப் பெயர்கார் நிகரொண் டிறலான்.

பாழிப் புய ம்அம்பு உருவப் படலும்,
வீழிக் கனிபோல் புனல்வீச, வெகுண்டு,
ஆழிப் பெருந் தேரை அழித்தனனால்—
ஊழிப் பெயர் கார்நிகர் ஒண்திறலான்.

பொ :- ஊழிக்காலத்திலே இயங்குகின்ற மேகத்தையொத்த மிக்க வலிமையுடைய அனுமன், (தனது) வலிய தோள்களில் (அந்த) அம்புகள் துளைத்துச் சென்றதும், வீழிக் கனிபோல் இரத்தம் வெளிப்பட, கோபித்து (அவனுடைய) சக்கரத்தையுடைய பெரிய தேரை அழித்தான்.

கு :- பாழி—வலிமை. உருவப்படல்—ஊடுருவிப் போகும்படியாகத் தைத்தல். புனல் என்றது ஈண்டு இரத்தத்தை. மேற்செய்யுளில் புகைக்கண்ணனை 'மேகம்' என்று கூறி, ஈண்டு அனுமனை 'ஊழிப்பெயர் கார்' என்றதனால் அவனினும் இவன் வலியன் என்பது பெறப்பட்டது.

8503. சில்லிப் பொருதேர் சிதையச் சிலையோ
டெல்லிற் பொலிவிண் ணின்விசைத் தெழுவான்
வில்லிற் றதிலக் குவன்வெங் கணையால்
புல்லித் தரையிட் டனனேர் பொருவான்.

சில்லிப் பொருதேர் சிதைய, சிலையோடு
எல்லின் பொலிவிண்ணின் விசைத்து எழுவான்,
வில், இற்றது, இலக்குவன் வெங்கணையால்;
புல்லித்தரை இட்டனன், நேர் பொருவான்.

பொ :- சக்கரத்தையுடைய போர் செய்தற்குரிய தேர் அழிதலும், கைவில்லோடு சூரியனால் விளங்குகின்ற ஆகாயத்திலே வேகத்தோடு எழுகின்றவனாகிய புகைக்கண்ணனுடைய வில், இலக்குவனுடைய கொடிய அம்பினால் ஒடிந்தது ; (அவனொடு) நேர் நின்று போர் செய்பவனாகிய அனுமன் (அவனைத்) தழுவித் தரையில் தள்ளினான்.

கு :- சில்லி - சக்கரம் 'சில்லி.' என்பதைத் தேரொடு இயைக்க. எல் - சூரியன். விசைத்தெழுதல் - விரைதல். வில்கணையால் இற்றது எனக் கூட்டுக. புல்லுதல் - தழுவுதல். நேர் பொருவான் - அனுமன் வில் இற்ற அளவிலே அனுமன் புகைக்கண்ணனைத் தழுவிப் பிடித்துத் தரையில் தள்ளினன் என்க.

8504. மலையிற் பெரியா னுடன்மண் ணிடையிட்
டுலையக் கடரு வியகால் கொடுதைத்
தலையிற் பருகிப் பகுவா யனல்கால்
தலைகைக் கொடெறிந் துதணிந் தனனால்.

மலையின் பெரியான் உடல் மண்ணிடை இட்டு,
உலையக் கடல்தாவிய கால்கொடு உதைத்து,
அலையின், பருகிப் பகுவாய் அனல்கால்
தலை கைக்கொடு எறிந்து, தணிந்தனனால்.

பொ :- மலைபோன்ற பெரியானாகிய தூமக் கண்ணனுடைய உடலைப் பூமியில் போட்டு, (அவன்) அழியும்படியாகக் கடலைத்

தாவிய தன்னுடைய காலைக் கொண்டு உதைத்து, (அவன் உயிரைக்) குடித்து, பிளந்த வாயிலிருந்து நெருப்பைக் கக்கும்படியான தலையைக் கையில் கொண்டு கடலில் எறிந்து, (அனுமன், தன் கோபம்) ஆறினான்.

கு :- 'மலையின்' என்பதில் 'இன்' உவமஉருபு. உலைதல் - அழிதல். 'பருகி' என்றதற்கேற்ப உயிர் என்னும் சொல் வருவித்து உயிரைப் போக்கி எனப் பொருள் கொள்க. உயிரைப் போக்குதலை உயிரைக் குடித்தல் என்பது மரபு. மேல் கும்பகருணன் வதைப் படலத்தில், 'எற்றுயிர் குடிப்ப லென்னா எற்றினானிடது கையால்'(185) எனவும்,'அடித்துயிர் குடிப்பனென்னா அனல் விழித்தார்த்து மண்டி'(189) எனவும் வந்துள்ளமை காண்க. தலையை என இரண்டாவது விரிக்க. 'கைக் கொடு' என்றதனால் தலையைத் திருகினமை பெறப்படும். அலையின் எறிந்து எனக் கூட்டுக.

### அங்கதனொடு மாபக்கன் பொருது அழிதல்

8505. மாபக் கனுமங் கதனும் மலைவார்
தீபத் தினெரிந் தெழுசெங் கணினார்
கோபத் தினர்கொல் லநினைந் தடர்வார்
தூபத் தினுயிர்ப் பர்தொடர்ந் தனரால்.

மாபக்கனும் அங்கதனும் மலைவார்,
தீபத்தின் எரிந்து எழு செங்கணினார்,
கோபத்தினர், கொல்ல நினைந்து அடர்வார்,
தூபத்தின் உயிர்ப்பர், தொடர்ந்தனரால்.

பொ :- (ஒருவரோடொருவர்) போர் செய்பவரான மாபக்கனும் அங்கதனும், விளக்கைப்போல் எரிந்து தோன்றுகின்ற சிவந்த கண்ணையுடையவராய்ச் சினங்கொண்டு, ஒருவரை ஒருவர் கொல்ல நினைந்து நெருங்கியவராய்ப் புகைபோல் பெருமூச்செறிந்து தொடர்ந்து போரிட்டார்கள்.

கு :- கண்ணினார், கோபத்தினர், அடர்வார், உயிர்ப்பர் என்னும் முற்றுக்களை எச்சமாக்கித் தொடர்ந்தனர் என்னும் முற்றொடு முடிக்க. தீபம் போன்ற கண். தூபம் போன்ற உயிர்ப்பு. தூபம்- புகை. தீபம், தூபம் எனச் சொல் நயம் தோன்ற நின்றது. 'தொடர்ந்தனர்' என்பது ஒருவரை ஒருவர் தொடர்ந்து பொருதனர்' என்றபடி.

8506. ஐம்பத் தொருவெங் கணையங் கதன்மா
மொய்ம்பிற் புகவுய்த் தனன்மொய் தொழிலான்
வெம்பிக் களியோ டுவிளிந் தெழுதிண்
கம்பக் கரியுண் டைகடா யெனவே.

ஐம்பத்தொரு வெங்கணை அங்க தன்மா
மொய்ம்பில் புக உய்த்தனன், மொய் தொழிலான்—
வெம்பி, களியோடு விளிந்துஎழு திண்
கம்பக்கரி உண்டை கடாய் எனவே.

பொ :- போர் செய்யும் தொழிலையுடைய மாபக்கன், (மனம்) வெதும்பி மதத்தோடு சினங்கொண்டு எழும் வலிய, கட்டுத்தறியில் பிணிக்கத்தக்க யானையின்மீது மண் உருண்டையை எறிந்தாற் போல், அங்கதனது பெரிய தோள்களில் தைக்குமாறு ஐம்பத்தொரு கொடிய அம்புகளைச் செலுத்தினான்.

கு :- மொய்ம்பு-தோள் 'பூந்தாது மொய்ம்பினவாக' (கலித். 88). களி-மதம். விளிதல்-சினங் கொள்ளல். 'விளிந்தாரே போலப் பிற ராகி' (பழமொழி-182). வெம்பிக் களியோடு விளிந்தெழுதிண் கரி எனவும் கம்பக் கரி எனவும் தனித்தனி இயைக்க. கம்பக்கரி என்பது இயற்கையடை. அங்கதன்மீது அம்பெறிந்து அவனைக் கோபத்தில் மிகுமாறு செய்தான் என்பார் யானையின் மீது உண்டை எறிதலை உவமையாகக் கூறினார். யானை, தன்மீது எறிந்த கல்லைக் கவுளில் அடக்கிக்கொண்டு காலம் வாய்க்கும்போது எறிந்தவனைத் தாக்கும் என்பது, 'களிறுகவுளடுத்த எறிகற்போல' (புறம்-30) என்பதாலும், 'காய்ந்தெறி கடுங் கற்றன்னைக் கவுட் கொண்ட களிறுபோல' (சீவகசிந்-2910) என்பதாலும் உணரப்படும்.

8507. ஊரோ டுமடுத் தொளியோ னையுறுங்
காரோ டுநிறக் கதநா கமனுன்
தேரோ டுமெடுத் துயர்திண் கையினாற்
பாரோ டுமடுத் தெறிபண் பிடையே.

ஊரோடு மடுத்து ஒளியோனை உறும்
காரோடு நிறக் கதநாகம் அனான்,
தேரோடும் எடுத்து உயர்திண் கையினால்,
பாரோடும் அடுத்து! எறி பண்பிடையே.

பொ :- ஊர்கோளோடு சேர்த்துச் சூரியனைப் பற்றும் மேகத் தோடு செந்நிறத்தையுடைய கோபத்தைக் கொண்ட பாம்பையும்

ஒத்தவனாகிய அங்கதன், (தன்னுடைய) உயர்ந்த வலிமையுடைய கையினால், (மாபக்கனைத்) தேரோடு தூக்கிப் பூமியிலே சேரும்படியாக எறியும் சமயத்தில்,

கு :- ஊர்-ஊர்கோள். ஊர்கோள் தேருக்கும், ஒளியோன் மாபக்கனுக்கும், மேகமும் நாகமும் அனுமனுக்கும் உவமை. சூரியனை விழுங்கும் நாகம் கேது. அது செந்நிறப் பாம்பாகும். 'அதிகமாங் கேதுச் செம்மை சிகி கதிர்ப்பகையு மாமே' (சூடாமணி நிகண்டு. தேவப் பெயர்த் தொகுதி-63). இதனால் இராகு கேதுக்களிடை வேற்றுமை தெரிவிக்கப்பட்டது. மடுத்தல்-சேர்த்தல். இது குளகமாய்க் கீழ்ச் செய்யுளோடு முடியும். பண்பு என்பது தன்மை; ஈண்டு எறியும்போது எனக் காலத்தை உணர்த்தியது.

8508. வில்லைச் செலவீ சிவிழுந் தழியும்
எல்லிற் பொலிதே ரிடைநின் றிழியாச்
சொல்லிற் பிழையா ததொர்சூ லமவன்
மல்லிற் பொலிமார் பின்வழங் கினனால்.

வில்லைச் செலவீசி, விழுந்து அழியும்
எல்லின்பொலி தேரிடை நின்று இழியா,
சொல்லின் பிழையாததொர் சூலம், அவன்
மல்லின் பொலி மார்பின் வழங்கினனால்.

பொ :- (மாபக்கன்) வில்லை அப்பாற் செல்ல வீசி எறிந்துவிட்டு, கீழே விழுந்து அழியுந்தன்மையுடைய, சூரியனைப்போல் விளங்குகிற தேரினின்றும் குதித்து, (பெரியோர்களுடைய) சாபச் சொல்லைப்போலத் தப்பாத ஒரு சூலத்தை அங்கதனுடைய மற்போரினால் விளங்குகின்ற மார்பிலே எறிந்தான்.

கு :- அழியும் தேர் என்க. எல்-சூரியன். தேரோடு தூக்கி எறியப்பட்டானாதலின், தேர் விழுவதற்கு முன் கீழ் இழிந்தான் என்க. சொல்லின் பிழையா-பெரியோர்கள் சாபச் சொல்லைப் போலத் தப்பாத. 'வைதவைவின் மராமரம் ஏழ்துளை எய்த எய்தவற்கு' (5) எனப் பாயிரத்துள்ளும், 'சொல்லொக்கும் கூடிய வேகச் சுடுசரம்' (72) எனத் தாடகை வதைப் படலத்தும் வந்துள்ளமை காண்க. 'நிறைமொழிமாந்தர் பெருமை' (28) என்னுங் குறளில் 'நிறைமொழி' என்பதற்கு அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப்பயன்களைப் பயந்தே விடும்மொழி எனவரும் பரிமேலழகர் உரையானும் இஃது உணரப்படும்.

8509. சூலம் மெனினன் றிதுதொல் லைவரும்
காலம் மெனவுன் னுகருத் தினனாய்
ஞாலம் முடையா னதுநா மறவோர்
ஆலம் முடை யம் பினறுத் தனனால்.

'சூலம்எனின் அன்றுஇது; தொல்லை வரும்
காலம்' என உன்னு கருத்தினனாய்,
ஞாலம் உடையான், அதுநாம் அற, ஓர்
ஆலம் உடை ஆம்பின் அறுத்தனனால்.

பொ :- 'இது சூலம் என்போமெனின் அன்று; பழைமையாய் வருகின்ற (முடிவை விளக்கும்) காலபாசம் என்று நினைத்த எண்ணத்தையுடையவனாகி, உலகத்தையுடையவனாகிய இராமன், அச் சூலத்தினது பெயரும் நீங்கும்படியாக நஞ்சைக் கக்கும் ஓரம்பினால் (அதனை) ஒடித்துவிட்டான்.

கு :- காலம் சூல உருவைக் கொண்டு வந்தது என்னுங் கருத்தை உடையவனானன் இராமன். காலம்—காலபாசம்; இயமனுடைய கயிறு வடிவாகிய படை. நாமம் என்பது இடைக் குறைந்து 'நாம்' என நின்றது. 'அது நாம் அற' என்பதற்கு அதனாலுண்டாகும் அச்சம் நீங்க எனவும் பொருள் கொள்ளலாம். நாம்—அச்சம். 'பேம் நாம் உரும் என வரூஉம் கிளவி, ஆமுறை மூன்றும் அச்சப்பொருள' (தொல்-சொல்-உரியியல் 67). புகைக் கண்ணனுடைய வில்லை இலக்குவன் முறித்தானெனவும், மாபக்கன் விட்ட சூலத்தை இராமன் ஒடித்தான் எனவும் வரும் பகுதிகளால் இவ்விருவரும் போரைத் தலைமை தாங்கி நடத்தினர்கள் என்பது பெறப்படும்.

8510. உளந்தா னினையா தமுனுற் றுகவாக்
கிளர்ந்தா னையிரண் டுகிழித் துணையாய்ப்
பிளந்தா னுலகே ழினொடே ழுபெயர்ந்
தளந்தான் வலிநன் றெனவங் கதனே.

உளம்தான் நினையாதன்முன் உற்று, உகவாக்
கிளர்ந்தானை இரண்டு கிழித் துணையாய்ப்
பிளந்தான்—உலகு ஏழினொடு ஏழு பெயர்ந்து
அளந்தான், 'வலி நன்று' என—அங்கதனே.

பொ :- பதினான்கு உலகங்களையும் (தன் நிலையினின்றும்) பெயர்ந்து அளந்தவனாகிய இராமன், தன் வலியை நன்று என்று

புகழும்படியாக, அங்கதன் மனத்தால் நினைப்பதற்கு முன்னர் அடைந்து, உவந்து மன எழுச்சிகொண்ட மாபக்கனை இரண்டு பிளப்பாகும்படி கிழித்தான்.

கு:- 'உளம்தான் நினையாத முன்' என்றது நினைப்பின் முன் சென்று என்று வேகத்தைக் குறித்தபடி. சூலத்தை விட்டு 'அங்கதன் அழிந்துவிட்டான்' என்று மகிழ்ச்சி கொண்டானுதலின், செருக்குற்ற அவனை, 'உகவாக் கிளர்ந்தானை' என்ருர். திருவிக்கிரம அவதாரம் எடுத்த இறைவனே இராமனுக வந்தான் என்ற உட்கோளுடன், 'உலகு ஏழினொடு ஏழு பெயர்ந்து' என்ருர். 'வலி நன்று' என்றது அங்கதன் வலியை இராமன் பாராட்ட என்றபடி.

## மாலியும் நீலனும் பொருதல்

8511. மாமா லியுநீ லனும்வா னவர்தம்
கோமா னொடுதா னவர்கோ னிகலே
ஆமா றுமலைந் தனரென் றிமையோர்
பூமா ரிபொழிந் துபுகழ்ந் தனரால்.

மாமாலியும் நீலனும், வானவர்தம்
கோமானொடு தானவர்கோன் இகலே
ஆமாறு, மலைந்தனர் என்று இமையோர்
பூமாரி பொழிந்து புகழ்ந்தனரால்.

பொ:- பெரிய மாலியும் நீலனும் தேவர்களின் தலைவனுகிய இந்திரனோடு அசுரர் தலைவன் செய்த போரே உவமையாகுமாறு போர் செய்கின்ருர்கள் என்று தேவர்களெல்லாம் பூமழை பொழிந்து பாராட்டினுர்கள்.

கு:- 'வானவர்தம் கோமான்' என்பதில் 'தம்' சாரியை தானவர் கோன்—அசுரர்தலைவன். நீலனுக்கு வானவர் தலைவனும் மாலிக்குத் தானவர் கோனும் உவமை. அவர்கள் செய்த போரின் திறத்தைப் பார்த்துத் தேவர்கள் புகழ்ந்து பூக்களைச் சொரிந்தனர். பூமாரி—பூக்களாலாகிய மழை; உருவகம். இச்செய்யுளில் வானவர் கோன் என்றது திருமாலையும் தானவர்கோன் என்றது இரணியனை யும் குறித்தனவாகக் கொள்ளுதலும் உண்டு.

8512. கல்லொன் றுகடா வியகா லையவன்
வில்லொன் றிருகூ றுவிளைத் திடலும்
செல்லொன் றியவா ளொடுதே ரினனுய்
நில்லென் றிடைசென் றுநெருக் கினனுல்.

கல் ஒன்று கடாவிய காலை, அவன்
வில் ஒன்று இரு கூறு விளைத்திடலும்,
செல் ஒன்றிய வாளொடு தேரினனாய்
'நில்!' என்று இடைசென்று நெருக்கினனால்.

பொ :- (நீலன்) மலையை எடுத்துச் செலுத்தியபோது, (அது) மாலியினுடைய வில்லை இரண்டு துண்டாகச் செய்த அளவில் (அதனை எறிந்து விட்டு), இடியை ஒத்த வாளினை எடுத்துக்கொண்டு தேரின்மேல் சென்று 'நிற்பாய்' என்று நீலனிடத்தே தேரை அடைவித்தான்.

கு :- கல்—மலை. வில் ஒன்று என்பதில் 'ஒன்று' என்பது வில்லொடு சேர்ந்து ஒரு சொல்லாக நின்றது. செல்—இடி. வாளுக்கு இடி ஒளி பற்றி உவமமாக வந்தது. தேரினனாய்ச்சென்று என இயைக்க. இடை—நீலனிடத்தே. நெருக்குதல், பிறவினை.

## இடையே வந்து குமுதன் எறிந்த குன்றால் மாலியின் தேர் பொடியாதல்

8513. அற்றத் தொழிலெய் தலுமக் கணனே
மற்றப் புறநின் றவன்வந் தணுகாக்
கொற்றக் குமுதன் னொருகுன் றுகொளா
எற்றப் பொருதேர் பொடியெய் தியதால்.

அற்று அத்தொழில் எய்தலும், அக்கணனே,
மற்றப் புறம் நின்றவன், வந்து அணுகா,
கொற்றக் குமுதன், ஒரு குன்று கொளா
எற்ற, பொருதேர் பொடி எய்தியதால்.

பொ :- அத்தன்மைத்தாகத் தேர் நெருங்கி வந்ததும், அந்த நேரத்திலே மற்றொரு பக்கத்திலே நின்றவனாகிய வெற்றியையுடைய குமுதன் வந்து சேர்ந்து, ஒரு மலையைக்கொண்டு மோத, போர் செய்தற்கு உதவியான (மாலியின்) தேர் நொறுங்கிப் போயிற்று.

கு :- 'அற்று' என்பது குறிப்பு வினைமுற்று. 'அத்தொழில்' என்பது தேர் நீலனை நெருங்கி வருதலைச் சுட்டியது. மற்றைப்புறம் என்பது மற்றப்புறம் எனச் சாரியை குறைந்து நின்றது. நின்றவனாகிய குமுதன் அணுகிக் குன்றுகொண்டு எற்ற என்க.

இச் செய்யுளை யடுத்து 52ஆம் எண்ணுள்ள அச்சுப்புத்தகத்தில் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகின்றது.

8513.a. தேர்போ யழிவுற் றதெனத் தெளியா
போர்மா லிபொருந் துதரைப் படமுன்
ஓர்மா மரம்நீ லனுரத் தொடுகொண்
டேர்மார் பிடைபோ கவெறிந் தனனால்

## மாலியின் தோளை இலக்குவன் துணித்தல்

8514. தாளார் மரனீ லனெறிந் தனதன்
வாளான் மடிவித் துவலித் தடர்வான்
தோளா சறவா ளிதுரந் தனனால்
மீளா வினைநூ றும்விடைக் கிளையான்.

தாள்ஆர் மரம் நீலன் எறிந்தனதன்
வாளால் மடிவித்து, வலித்து அடர்வான்
தோள் ஆசு அற, வாளி துரந்தனனால்—
மீளா வினை நூறும் விடைக்கு இளையான்.

பொ :- நீலன் எறிந்தனவாகிய அடி பருத்த மரங்களைத் தன் வாளாலே வெட்டி வலிமையோடு (நீலனை) நெருங்குகின்ற மாலியின் தோளின் மூட்டு அறும்படி, போக்குதற்கரிய தீவினைகளைப் போக்கு பவனாகிய இடபம் போன்ற இராமனுக்குத் தம்பியாகிய இலக்குவன் அம்பு செலுத்தினான்.

கு :- 'மடிவித்து' என்பது பிறவினையில் வந்த தன்வினை. அடர்தல்—நெருங்குதல். ஆசு—பற்றுக்கோடு; ஈண்டு தோளின் மூட்டினை உணர்த்தியது. நூறுதல்—அழித்தல். 'விடை' என்பது உவம ஆகுபெயராய் இராமனை உணர்த்திற்று.

## கையற்ற மாலியுடன் பொருதல் தகாது என இலக்குவன் அப்பாற் செல்லுதல்

8515. மின்போன் மிளிர்வா ளொடுதோள் விழவும்
தன்போர் தவிரா தவனைச் சலியா
என்போ லியர்போ ரெனினன் றிதுவோர்
புன்போ ரெனநின் றயல்போ யினனால்.

மின்போல் மிளிர் வாளொடு தோள்விழவும்
தன்போர் தவிரா தவனை, சலியா,
'என்போலியர் போர்எனின், அன்று; இதுஓர்
புன்போர்' எனநின்று அயல் போயினனால்.

பொ :- மின்னலைப் போல் விளங்குகின்ற வாளோடு கூடித் தோள் அறுபட்டு விழவும் தன் போர் முயற்சியில் தளராதவனாகிய மாலியை (ப் பார்த்து, இலக்குவன்) 'என்னைப் போன்ற வீரர்கள் செய்யும் போரோ என்றால் அன்று; இவனொடு செய்யும் போர் ஓர் இழிந்த போராகும்' என்று வெறுத்து நின்று அப்பாற் சென்று விட்டான்.

கு :- 'விழவும் போர் தவிராதவன்' என்றதொடர் மாலியின் வீரத்தை வெளிப்படுத்தியது. சலியா என்பதனை நின்று என்பதனொடு கூட்டுக. நின்று—போர் செய்யாது. மாலி கையிழந்து நின்றானாதலின், கை இழந்த அவனோடு பொருதல் தன் வீரத்திற்கு இழுக்காகும் என்று இலக்குவன் அவனொடு போர் செய்யானாயினன். 'யானை, ஒரு கையுடைய தெறிவலோயானும், இரு கை சுமந்து வாழ்வேன்' (தொல். புறத். 60 நச்சர் உரை) என்னும் பகுதி ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

### வானரவீரர் இராமனிடம் இலக்குவனைப் புகழ்ந்து கூறுதல்

**8516. நீர்வீ ரையனு னெதிர்நேர் வரலும்**
**பேர்வீ ரனைவா சிபிடித் தவனை**
**யார்வீ ரதையின் னசெய்தார் களெனுப்**
**போர்வீ ரருவந் துபுகழ்ந் தனரால்.**

நீர்வீரை அனுன் எதிர்நேர் வரலும்,
பேர் வீரனை, வாசி பிடித்தவனை,
'யார்வீரதை இன்ன செய்தார்கள்?' எனு,
போர் வீரர் உவந்து புகழ்ந்தனரால்.

பொ :- (இலக்குவன்) கடல் நீரை ஒத்த நிறத்தையுடைய இராமனுக்கு எதிரே நேராக வருதலும், பெரிய வீரத் தன்மையுடையவனும் பெருமை சிறுமையை உறுதியாகக் கொண்டவனுமாகிய இலக்குவனை 'இது போன்ற வீரத்தைச் செய்தவர்கள் வேறு யாருமில்லை' என்று அங்குள்ள போர் வீரர்கள் மகிழ்ந்து போற்றினார்கள்.

கு :- விரை—கடல். பேர்—பெருமை. வாசி—வேறுபாடு; இது உயர்வு, இது தாழ்வு என்று அறிதல். மேல், 'என் போலியர் போர்' (83) உயர்வு எனவும் கையற்ற இவனொடு பொருதல் தாழ்வு எனவும் கருதி மீண்டானாதலின், 'வாசி பிடித்தவன்' என்றார். வீரதை—வீரம். யார்எனா என்று கூட்டி ஒருவரும் இல்லை என்று பொருள் கொள்க. மேலும் கீழும் போரைக் குறித்து இடையில் வீரர்கள் புகழ்ந்ததாக நின்ற இச் செய்யுள் இடைப்பிறவரல்.

**வேள்விப் பகைஞன் இலக்குவனொடு பொருது மடிதல்**

8517. வேள்விப் பகையோடு வெகுண் டடரும்
தோள்வித் தகனங் கொர்சுடர்க் கணையால்
வாழ்வித் தனையென் றவன்மார் பகலம்
போழ்வித் தனனா ருயிர்போ யினனால்.

வேள்விப் பகையோடு வெகுண்டு அடரும்
தோள்வித்தகன், அங்கு ஓர்சுடர்க் கணையால்,
'வாழ்வுஇத்தனை' என்று, அவன்மார்பு அகலம்
போழ்வித்தனன்; ஆர் உயிர் போயினனால்.

பொ :- வேள்விப் பகைவனோடு கோபித்துப் போர் செய்கின்ற தோள்வலியையுடைய இலக்குவன், நெருப்பைக் கக்குகின்ற ஓர் அம்பால் '(உன்னுடைய) வாழ்வு இவ்வளவு தான்' என்று (கூறி), அவனது பரந்த மார்பைப் பிளந்தான்; (அதனால்) அவன் மடிந்தான்.

கு :- அடர்தல்—போர் செய்தல், 'வாழ்வு இத்தனை' என்றது இந்த அம்பால் நீ மடிவாய் என்றபடி. மார்பு அகலம் என்பதை முன் பின்னாகக் கூட்டிப் பரந்த மார்பு எனப்பட்டது. போழ்தல் பிளத்தல்.

இச் செய்யுளையடுத்து 52 ஆம் எண்ணுள்ள அச்சுப்புத்தகத்தில் பின்வருமாறு இரண்டு மிகைப்பாடல்கள் காணப்படுகின்றன.

8517a. அப்போ தழல்வேள் வியடல் பகைஞன்
வெப்பே றியவெங் கனல்போ லவெகுண்
டிப்போர் தருகென் றவிலக் குவன்மேல்
துப்பார் கணைமா ரிசொரிந் தனனால்.

8518b. சொரிவெங் கணைமா ரிதொலைத் திரதம்
பரியுந் தியபா குபடுத் தவன்வெம்
பொருதிண் டிறல்போ கவிலக் குவனங்
கெரிவெங் கணைமா ரியிறைத் தனனால்.

8517. மல்லற் றடமார் பன்வடிக் கணையால்
எல்லுற் றுயர்வே ள்வி யிரும் பகைஞன்
வில்லற் றதுதே ரொடுமே னிமிரும்
கல்லற் றகழுத் தொடுகால் களொடும்.

மல்லல் தடமார்பன் வடிக் கணையால்
எல்லுற்று உயர்வேள்வி இரும்பகைவன்
வில் அற்றது தேரொடு; மேல் நிமிரும்
கல் அற்ற; கழுத்தொடு கால்களொடும்.

பொ :- வளப்பம் பொருந்திய பரந்த மார்பையுடைய இலக்குவனது கூரிய அம்பால் வேள்விப் பகைவனது வில் தேருடனே அழிந்தது; மேல் நிமிர்ந்து காணப்படும் தோள்கள் கழுத்துடனும் கால்களுடனும் அறுபட்டன.

கு :- 'எல்லுற்று உயர் வேள்வி.' — (நெருப்பால்) விளக்கம் பொருந்தி எழுகின்ற வேள்வி' 'எல்லுற்று உயர்' என்பது வேள்விக்கு அடைமொழி. வேள்விப்பகைவன் வில்லுடனே தேர் அழியத் தோள்களும் கழுத்தும் கால்களும் அறுபட்டு வீழ்ந்தனன் என்க. இவ்விரண்டு செய்யுட்களையும் குளகமாகக் கொண்டு உறுப்புக்கள் அழிய ஆர் உயிர் போயினன் என முடிக்க.

## சூரியன் பகைவனைச் சுக்கிரீவன் கொல்லுதல்

8519. தன்றா தையைமுன் புதடுத் தொருநாள்
வென்றா னைவிலங் கலின்மே னியனைப்
பின்றா தவலத் துயர்பெற் றியனைக்
கொன்றான் கவியின் குலமா ளுடையான்.

தன்தாதையை முன்பு தடுத்து, ஒருநாள்,
வென்றானை, விலங்கலின் மேனியனை,
பின்றாத வலத்து உயர் பெற்றியனை,
கொன்றான்—கவியின் குலம் ஆளுடையான்.

பொ :- தன் தந்தையாகிய சூரியனை முன்னர் ஒரு நாள் தடுத்து நிறுத்தி வென்றவனும், மலைபோன்ற உடம்பை யுடையவனும், பின்னிடாத வெற்றியால் உயர்ந்த தன்மையுடையவனும் ஆகிய சூரியன் பகைவனைக் குரங்குக் கூட்டத்தை ஆளுகின்ற சுக்கிரீவன் கொன்றான்.

கு :- முன்பு என்றது இராவணனது திக்கு விசய காலத்தைக் குறித்து நின்றது. தகப்பனை வென்றவனை மகன் கொன்றான் என ஒரு சிறப்புத் தோன்ற நின்றது. பின்றுதல்-பின்னிடுதல்.

## இடபனும் வச்சிரத்து எயிற்றனும் பொருதல்

8520. இடபன் றனிவெஞ் சமமுற் றெதிரும்
விடவெங் கணெயிற் றவன்விண் ணதிரக்
கடவுங் கதழ்தேர் கடவா ளினெடும்
படவங் கொருகுன் றுபடர்த் தினனால்.

இடபன்,—தனி வெஞ்சமம் உற்று எதிரும்
விட வெங்கண் எயிற்றவன், விண் அதிரக்
கடவும் கதழ்தேர், கடவு ஆளினெடும்
பட,—அங்கு ஒரு குன்று படர்த்தினனால்.

பொ :- இடபன் என்பவன், கொடிய போரிலே தனியாக நின்று தன்னொடு போர் செய்கின்ற, நஞ்சைக் கக்கும் கொடிய கண்ணை யுடைய வச்சிரத் தெயிற்றனது, தேவருலகம் அதிரும்படியாகச் செலுத்துகின்ற விரைகின்ற தேர் (அதனைச்) செலுத்துகின்ற ஆளுடனே அழியும்படியாக அங்கு ஒரு மலையை எறிந்தான்.

கு :- எதிர்தல்- நேர் நின்று பொருதல். வெங்கண் என்பது எயிற்றினுடைய வலிமையின் மேலாய் வச்சிரத்தெயிற்றன் என் பதை விளக்கியது. விண் அதிரக் கடவும் தேர் எனவும் தனித் தனி இயைக்க. கடவும் தேர்-ஏறி வருகின்ற தேர். கதழ்-விரைவு. கடவு ஆள்-ஓட்டுகிற ஆள்.

8521. திண்டே ரழியச் சிலைவிட் டொருதன்
தண்டோ டுமிழிந் துதலத் தினனாய்
உண்டோ வுயிரென் னவுருத் துருமோ
டெண்டோ ளனுமுட் கிடவெற் றினனால்.

திண்தேர் அழிய, சிலைவிட்டு, ஒருதன்
தண்டோடும் இழிந்து, தலத்தினன் ஆய்,
'உண்டோ உயிர்?' என்ன உருத்து, உருமோடு
எண் தோளனும் உட்கிட, எற்றினனால்.

பொ :- (வச்சிரத்தெயிற்றன், தன்னுடைய) வலிய தேர் அழி தலும், (கையிலுள்ள) வில்லை எறிந்து விட்டு, ஒப்பற்ற தன்னுடைய தண்டாயுதத்துடனே (தேரினின்றும்) குதித்துப் பூமியில் நிற்பவ னாகி, 'நீ இறந்து பட்டாய்' என்று கோபித்து இடியும் எட்டுத் தோள்களையுடைய உருத்திரனும் அஞ்சும்படியாக (அத் தண்டாயு தத்தால் இடபனை) அடித்தான்.

கு :- வச்சிரத்தெயிற்றன், தேர் அழிந்ததனால் விற் போரை விடுத்து மற்போரில் இறங்கினான். 'உயிர் உண்டோ' என்றது இந்த அடியால் நீ இறந்து போவாய் என்பதைக் குறித்தது. மேல் 'வாழ்வு இத்தனை' (85) என்பது போலக் கொள்க. உட்கு-அச்சம்.

## இடபன் அடியுண்டு அயர,
## அனுமன் வச்சிரத்தெயிற்றனோடு பொருதல்

8522. அடியுண் டவனா விகுலைந் தயரா
இடியுண் டமலைக் குவடிற் றனபோல்
முடியும் மெனுமெல் லையின்முந் தினனால்
நெடியன் குறியன் னெனுநீர் மையினான்.

'அடியுண்டவன் ஆவி குலைந்து அயரா,
இடியுண்ட மலைக்குவடு இற்றது போல்
முடியும்' எனும் எல்லையில் முந்தினனால்—
'நெடியன், குறியன்' எனும் நீர்மையினான்.

பொ :- '(வச்சிரத்தெயிற்றனால்) அடிக்கப்பட்டவனாகிய இடபன் உயிர் சோர்ந்து தளர்ச்சியுற்று, இடி தாக்கப்பட்ட மலைச்சிகரம் விழுந்தது போல் (விழுந்து, இனி) இறந்து போவான்' என்னும் நிலைமையில் இருக்கும்போது (தான் வேண்டியபடி) நெடியவனாகவும் குறியவனாகவும் இருக்கும் தன்மையுள்ள அனுமன் முற்பட்டு வந்தான்.

கு:- அடியுண்டவன் - அடிக்கப்பட்டவன்; இடபன். ஆவி குலைதல்-உயிர் ஒடுங்குதல். அயர்தல்-சோர்தல். இடியுண்ட-இடியினால் தாக்கப்பட்ட. இறுதல்-விழுதல். எல்லை-காலம். சிறிய உடம்போடு கூடியிருந்தும் பெரிய உடம்பை எடுக்கும்படியான தன்மையை உடையவன் அனுமனாதலின் அவன், 'நெடியன் குறியன்' எனப் பட்டான். அனுமன் கடல் தாவிய போதும் சீதையைத் தூதாகச் சென்று கண்டபோதும் நெடிய உருவெடுத்தமை பெறப்படும்.

8523. கிடைத்தா னிகல்மா ருதியைக் கிளர்வான்
அடைத்தா னெனமீ துயராக் கையிணைப்
படைத்தா னைநெடும் புகழ்பைங் கழலான்
புடைத்தா னவன்மார் புபொடிச் சிதற.

கிடைத்தான் இகல் மாருதியை, கிளர்வான்
அடைத்தான் எனமீது உயர் ஆக்,கையிணைப்
படைத்தானை, நெடும் புகழ்ப் பைங்கழலான்,
புடைத்தான், அவன் மார்பு பொடிச் சிதற.

பொ :- பெரிய புகழினையும் பசிய பொன்னாற் செய்யப்பட்ட வீரக் கழலினையும் உடைய வச்சிரத்தெயிற்றன், தனக்கு எதிரில் வந்தவனும், விளங்குகின்ற வானத்தை அடைந்தவன் என்று சொல்லும்படியாக மேலே உயர்ந்த உடம்பைப் பெற்றவனுமாகிய வலிமையுடைய அனுமனை அவன் மார்பு பொடியாகச் சிதறும்படியாக அடித்தான்.

கு :- 'கிடைத்தான்' என்றது போரில் எதிரியாக வந்தான் என்றபடி. அடைந்தான் எனபது 'அடைத்தான்' என வலித்தல் விகாரமாக நின்றது. 'அடைத்தான்' எனக் கொண்டு வானத்தை அடைத்தவன் எனப் பொருள் கொள்ளுதலுமாம். ஆக்கையினைப் படைத்தான்-உடம்பைப் பெற்றவன். படைத்தானாகிய இகல் மாருதி என்க. சிதறப் புடைத்தான் என இயைக்க.

## அனுமனால் வச்சிரத்தெயிற்றன் மடிதல்

8524. எற்றிப் பெயர்வா னையிடக் கையினால்
பற்றிக் கிளர்தண் டுபறித் தெறியா
வெற்றிக் கிளர்கைக் கொடுமெய் வலிபோய்
முற்றத் தனிகுத் தமுடிந் தனனால்.

எற்றிப் பெயர்வானை இடக் கையினால்
பற்றி, கிளர்தண்டு பறித்து எறியா,
வெற்றிக் கிளர் கைக்கொடு, மெய்,வலிபோய்
முற்ற, தனி குத்த, முடிந்தனனால்.

பொ :- அப்படி அடித்துப் போகிற வச்சிரத்தெயிற்றனை (அனுமன் தனது) இடக்கையினால் பிடித்து, (அவனுடைய) விளங்குகின்ற தண்டைப் பிடுங்கி எறிந்து, வெற்றியோடு விளங்குகின்ற தன்னுடைய கையால் (அவனுடைய) உடல், வலி ஒய்ந்து முடியும்படியாக ஒப்பறக் குத்த, (அந்த வச்சிரத்தெயிற்றன்) இறந்தான்.

கு :- 'இடக்கையினால் பற்றி' என்றதனால் வலக் கையால் குத்தினமை பெறப்பட்டது. வலக் கை என்னும் பொருள் தோன்ற, 'வெற்றிக் கிளர் கை எனக் குறித்தார். வெற்றி—வலம். எறியா-எறிந்து மெய் முற்ற என இயைக்க. 'முற்ற' என்பது ஈண்டு முடிய என்னும் பொருளது. மெய் முற்றக் குத்தியது உயிரையே முடித்தது என்னும் பொருள் நயம் தோன்ற 'முடிந்தனன்' என்றார்.

'தனி குத்து' என்றது இவனுடைய குத்துதலின் ஒப்பின்மையை விளக்கி நின்றது.

இச் செய்யுளை யடுத்து 52-ஆம் எண்ணுள்ள அச்சுப் பிரதியில் பின்வருமாறு இரண்டு மிகைப் பாடல்கள் காணப்படுகின்றன.

8524. முடிவுற் றனன்மா ருதிமோ துதலால்
(a) கொடுவச் சிரஎயிற் றனெனுங் கொடியோன்
விடமொத் தபிசா சன்விறற் பனச
ஞெடுமுற் றிருவோ ருமுடன் றனரால்.

பொரநின் றபணைப் புயவன் பனசன்
(b) நிருதன் களமீ துநெருக் கியதில்
பரிவெள் ளமளப் பிலபட் டழியத்
தரு அங் கைகொடே யெதிர் தாக் கினனுல்.

பிசாசன் பனசனெடு பொருதல்

8525. காத்தோர் மரம்வீ சுறுகைக் கதழ்வன்
போத்தோர் புலிபோற் பனசன் புரளக்
கோத்தோ டநெடுங் குருதிப் புனறிண்
மாத்தோ மரமார் பின்வழங் கினனுல்.

காத்து ஓர்மரம் வீசுறு கைக் கதழ்வன்
போத்து ஓர் புலிபோல் பனசன்புரள,
கோத்துஓட நெடுங் குருதிப் புனல்,திண்
மாத் தோமரம் மார்பின் வழங்கினனுல்.

பொ :- தன்னைக் காத்துக்கொண்டு ஒரு மரத்தை வீசுகின்ற கையையுடைய, விரைவையுடைய வலிய ஓர் ஆண்புலிபோல், பனசன், இரத்த வெள்ளமாகிய நீர் பெருகி ஓட (அதில்) புரளும்படி யாக, (அவன்) மார்பில் (பிசாசன் என்பவன்) வலிய பெரிய தண்டா யுதத்தைச் செலுத்தினுன்.

கு :- 'காத்து' என்றது பிசாசன் செய்கின்ற போரைத் தடுத்து என்றபடி. பனசன், புலி போற் புரள எனக் கூட்டுக. போத்து ஆண்பாற் பெயர். 'நெடுங்குருதி' என்பது இரத்தப் பெருக்கைக்

குறித்தது. புனல் ஓடுதலால் அதன்கண் கிடந்து புரள என்க. இதனுல் தோமரம் பட்டுப் பனசன் இரத்தம் சொரிய விழுந்தான் என்பது பெறப்பட்டது. மேல் 'பிசாசனும் பனசனும் மலைந்தார்' (49) எனத் தோற்றுவாய் கூறப்பட்டதால் ஈண்டுப் போர் செய்தவன் பிசாசன் என்பது பெறப்பட்டது.

இச் செய்யுளை யடுத்து 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வருமாறு ஒரு மிகைப் பாடல் காணப்படுகின்றது.

(a) பனசன் னயர்வுற் ெருருபா லடைய
தனிவெம் பரிதா வுநிசா சரன்வெங்
கன லென் னவெகுண் டுகவிப் படையின்
இனமெங் குமிரிந் திடவெய் தினனுல்.

8525. கார்மே லினனே கடன்மே லினனே
பார்மே லினனே பகன்மே லினனே
யார்மே லினனே வினவென் றறியாம்
போர்மே லினன்வா சியெனும் பொறியான்

கார் மேலினனே? கடல் மேலினனே?
பார் மேலினனே? பகல் மேலினனே?
யார் மேலினனே? இன என்று அறியாம்;
போர் மேலினன், வாசிஎனும் பொறியான்.

பொ :- எந்திரம் போற் சுழலும் குதிரையின் மேலுள்ளவனுகிய பிசாசன், மேக மண்டலத்தின் மேலுள்ளவனே? கடல் மேலிருக்கின்ருனே? பூமியின் மேல்தான் இருக்கின்ருனே? ஆகாயத்தின் மேல் இருக்கின்ருனே? போரை மேற்கொண்ட இவன் யார்மேல் போர் செய்யப் போகின்ருனே? (அவன் இருக்கும் இடங்கள்) இன்னவை என்று அறிய முடியவில்லை.

கு :- நிலையில்லாது சுழல்வதனுல் கார், கடல், பார், பகல் என இடம் ஐயுறுதற் கேதுவாயிற்று. பகல்-சூரியன்; ஈண்டு அவன் உலவும் ஆகாயத்தை உணர்த்திற்று. பொருளை இருட்டினின்றும் பகுத்து (பிரித்து)க் காட்டுதலின் சூரியனுக்குப் பகல் என்பது காரணக் குறியாயிற்று. பொறி-எந்திரம். 'வாசி எனும் பொறியான்' என உருவகமாக்கினுரேனும் பொறி போன்ற வாசி என உவமப்

பொருட்டாகக் கொள்க. 'போர் மேலினன்' என்பது போரை மேற்கொண்டவன் எனக் குறிப்பு வினையாலணையும் பெயராய் நின்றது. இச் செய்யுள் கவிக் கூற்று.

8527. நூறு யிரகோ டிகொலன் றுகொலென்
றாறு யிரவா னவரும் மறிவிற்
றேறு வகைநின் றுதிரிந் துளதால்
பாறு டுகளந் தொருபாய் பரியே.

'நூறுயிர கோடிகொல்? அன்றுகொல்?, என்று
ஆறுயிர வானரும், அறிவின்
தேறுவகை நின்று, திரிந்துளதால்—
பாறுடு களத்து ஒருபாய் பரியே.

பொ :- பருந்து உலவுகின்ற போர்க்களத்தில் பாய்ந்து செல்லுகின்ற (அந்த) ஒரு குதிரை, (ஒன்றுதானோ? அல்லது) நூறுயிர கோடியோ? (அல்லது) அதற்கு மேற்பட்டதோ? என்று (பார்த்து நின்ற) ஆறுயிரத் தேவர்களும் (தமது) அறிவில் தெளியாதபடி, சுழன்று கொண்டிருந்தது.

கு :- 'அன்றுகொல்' என்பது அதற்கு மேற்பட்ட எண்ணிக்கையை உணர்த்தியது. கொல், ஈரிடத்தும் ஐயப்பொருளை உணர்த்தி நின்றது. 'ஆறுயிர வானவர்' என்பது போரைப் பார்த்து நின்ற தேவர்களது பெருக்கத்தைக் குறித்தது. தேறுதல்-தெளிதல். வகை நின்று, ஒரு சொல். பாறு—பருந்து. 'பாய் பரி' என்பது இயற்கையடை. பரி திரிந்துளது என முடிக்க.

இச் செய்யுளை யடுத்து 2, 18, 60, 61, 63 ஆம் எண்ணுள்ள ஏடுகளில் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது.

8527. விசைகண் டுயர்வா னவர்விண் ணிரியக்
(a) குசைதங் கியகோ ளெனவா சியுடன்
றிசையெங் கணுநின் றுதிரிந் துளதாற்
பசைதங் குகளத் தொருபாய் பரியே.

இச் செய்யுள், 41 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் 'கார் மேலினனே கடன் மேலினனே' (94).என்னும் பாடலின் பின் மிகைப் பாடலாகக் காணப்படுகின்றது; 70, 71, 74 ஆம் ஏடுகளிலும்52 ஆம்

எண்ணுள்ள அச்சுப் புத்தகத்திலும், 'கண்ணிற் கடுகும் மனனிற் கடுகும்' (96) எனும் பாடலின் பின் மிகைப்பாடலாகக் காணப்படுகின்றது.

8528. கண்ணிற் கடுகும் மனனிற் கடுகும்
விண்ணிற் படர்கா லின்மிகக் கடுகும்
உண்ணிற் குமெனிற் புறனிற் குமுலாய்
மண்ணிற் றிரியா தவயப் பரியே.

கண்ணின் கடுகும்; மனனின் கடுகும்;
விண்ணில் படர்காலின் மிகக் கடுகும்;
உள் நிற்கும் எனின், புறன் நிற்கும்; உலாய்
மண்ணில் திரியாத வயப் பரியே.

பொ :- பூமியில் கால் பாவித் திரியாத வெற்றியையுடைய அக்குதிரை, கண்ணின் பார்வையைக் காட்டிலும் விரைந்து செல்லும்; மனத்தை விட விரைந்து செல்லும்; மேலெழுந்து வீசுகின்ற காற்றை விட மிகவும் விரைந்து செல்லும்; சேனைக்குள் இருக்கும் என்று பார்க்கப் புகின் (அப்பொழுதே) வெளியே நிற்கும்.

கு:- காற்று வீசும் இயல்பினதாகலின், 'விண்ணிற் படர்கால்' எனப்பட்டது. 'உள்நிற்கும் எனின்புறம் நிற்கும்' என்றது உள்ளே நிற்கின்றது என்று பார்க்குமிடத்து, அப் பார்வையினும் கடுகிப் புறத்தே தோன்றும் என்றபடி; சேனையின் உள்ளிடத்திலும் புறத்திடத்திலும் பார்க்கமுடியாத நிலையை உணர்த்தியது. மண்ணில் உலாய்த் திரியாத எனக் கூட்டப்பட்டது. உலாய்—உலவி.

8528. மாப்புண் டரவா சியின்வட் டணைமேல்
ஆப்புண் டவனுெத் தவனு ரயிலால்
பூப்புண் டரவா விபுறத் தகலக்
கோப்புண் டனவா னரவெங் குழுவே.

மாப் புண்டர வாசியின் வட்டணைமேல்
ஆப் புண்டவன் ஒத்தவன் ஆர் அயிலால்,
பூப் புண்தர, ஆவி புறத்து அகல,
கோப்புண்டன, வானர வெங்குழுவே.

பொ:- பெரிய கழுகினை யொத்த குதிரையின் சுழற்சியின் மேல் கட்டுப்பட்டவனை ஒத்து விளங்குகின்ற பிசாசனது அரிய வேலால், வலிமையுடைய குரங்குக் கூட்டங்கள், (உடம்பிலே) பூப் போன்று சிவந்த புண்படுதலால், உயிர் வெளியே போகுமாறு கோக்கப் பட்டன.

கு:- புண்டரம்-கழுகு. வாசி-குதிரை. வட்டம் அணை என்பது தொகுத்தல். யாப்பு என்பது 'ஆப்பு' எனயகரம் குறைந்து நின்றது. யானை, ஆனை என வருதல் போல. தரவும் அகலவும் என உம்மை விரித்து வேலின்கண் கோக்கப்பட்டன எனவும் பொருள் கூறலாம். கோப்புண்டன-ஒன்றோடொன்று சேர்க்கப்பட்டன.

8530. நூறும் மிருநூறு நொடிப் பளவின்
ஏறுந் நுதிவே லினிறைப் பொழுதில்
சீறுங் கவிசே னைசிதைக் குமெனு
ஆறுந் திறலும் பருமஞ் சினரால்.

'நூறும் இருநூறும் நொடிப்பு அளவின்,
ஏறும் நுதிவேலின், இறைப் பொழுதில்,
சீறும் கவிசேனை சிதைக்கும்' எனு
ஆறும் திறல் உம்பரும் அஞ்சினரால்.

பொ:- 'நூறும் இருநூறுமாகச் சொல்லப்படும் அளவினையுடைய தாய், (உடலிற்) பாயும்படியான கூர்மையையுடைய வேலினாலே, சிறிது நேரத்தில், சினங் கொள்கின்ற குரங்குக் கூட்டங்களை யெல் லாம் (பனசன்) அழித்துவிடுவான்' என்று வலி ஓய்ந்த தேவர்களெல் லோரும் பயந்தார்கள்.

கு:- ஒரு குத்தால் நூறும் இருநூறும் மடியும் எனக் குறிப்பிட்ட வாறு. நொடித்தல்-சொல்லுதல். ஏறுதல் என்னும் சொல்லிற்கேற்ப 'உடல்' என்பது வருவிக்கப்பட்டது. 'சிதைக்கும்' என்பது செய்யு மென் முற்று. திறல் ஆறிய என்பது 'ஆறுந்திறல்' என நின்றது.

### இலக்குவன் காற்றின் படையால் பிசாசனைக் கொல்லுதல்

8531. தோற்றும் முருவொன் றெனவே துணியாக்
கூற்றின் கொலையா லுழல்கொள் கையனை
ஏற்றுஞ் சிலையாண் மையிலக் குவன்வெங்
காற்றின் படைகொண் டுகடந் தனனால்.

தோற்றும் உருஒன்று எனவே துணியா,
கூற்றின் கொலையால் உழல் கொள்கையனை,
ஏற்றும் சிலை ஆண்மை இலக்குவன், வெங்
காற்றின் படை கொண்டு கடந்தனனால்.

பொ:- காணப்படும் உருவங்களுள் (இது) ஒன்றே (அவனுடையது) என்று துணிய முடியாதபடி, கொலைத் தொழிலால் இயமனை ஒத்துச் சுழலும் தன்மையையுடைய பிசாசனை, நாணேற்றிய வில்லைக் கொண்ட ஆண்மையையுடைய இலக்குவன், கொடிய வாயுப் படையைக் கொண்டு வென்றான்.

கு:- 'எனவே' என்பதிலுள்ள ஏகாரத்தைப் பிரித்து 'ஒன்று' என்பதனோடு கூட்டப்பட்டது. சுழன்று வருதலால், பலவிடங்களிலும் தோன்றுகின்றான் என்பதை, 'உரு ஒன்று எனவே துணியா' என்பதால் விளக்கினார். கொலையால் கூற்றினை ஒத்து உழல்பவன். 'ஏற்றும்' என்ற சொல்லால் 'நாண்' என்பது வருவிக்கப்பட்டது. 'காற்றின் படை' என்பதில் 'இன்' சாரியை. படைகொண்டு-படையால். கடத்தல்-வெல்லுதல்; இது இலக்குவன் பிசாசனைக் கொன்றதைக் குறித்து நின்றது.

8532. குலையப் பொருசூ லனெடுங் கொலையும்
உலைவுற் றிலவுய்த் தலுமோய் விலனொண்
டலையற் றுகவுந் தரையுற் றிலனால்
இலையப் பரிமேல் கொளிருக் கையினன்.

குலையப் பொருசூலன், நெடுங் கொலையும்
உலைவுற்றில, உய்த்தலும் ஒய்விலன்; ஒண்
தலை அற்று உகவும், தரை உற்றிலனால்;
இலயப் பரிமேல் கொள் இருக்கையினன்.

பொ:- தாளத்திற் கேற்ப அடியிட்டு நடக்கின்ற குதிரையின் மேல் இருக்கையைக் கொண்டவனான, (உயிர்கள்) மடியப் போர் செய்கின்ற சூலத்தை உடையவனாகிய பிசாசன், (தன்) ஒள்ளிய தலை (இலக்குவன்விட்ட காற்றின் படையால்) அறுபட்டு விழவும், தரையில் வீழாதிருந்தனன்; (அவன், சூலம்) எறிதலும் ஒய்ந்தானில்லை; (அதனால், அவன் செய்கின்ற) பெரிய கொலையும் ஒழியவில்லை.

கு:- குலைதல் - உயிர் குலைதல். உலைதல் - கெடுதல். உய்த்தல் செலுத்துதல். லயம் என்பது 'இலயம்' எனத் தமிழ் முடிபு பெற்

றது. இலயம்-தாளத்தின் கால அளவு. 'இலயம்' என்பது எதுகை பற்றி 'இலயம்' எனப் போலியாக வந்தது.

இச் செய்யுளை யடுத்து 52 ஆம்எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின் வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகின்றது.

8532. மற்றும் படைவீ ரர்கள்வந் தவெலாம்
(a) உற்றங் கெதிரே றியுடன் றமர்வாய்
விற்றங் குமிலக் குவன்வெங் கணையால்
முற்றும் முடிவெய் திமுடிந் தனரால்.

### சீதைக்கு நன்னிமித்தம் தோன்றுதலும் இயமதூதரும் இராவணன் தூதரும் தம் நகர் சேர்தலும்

8533. இன்றூ தியமுண் டெனவின் னகைபால்
சென்றூ தினதும் பிகடென் றிசையான்
வன்றூ தருமெய் தினர்வஞ் சனையான்
றன்றூ தருமெய் தினர்தன் னகர்வாய்.

'இன்று ஊதியம் உண்டு'என இன்னகைபால்
சென்று ஊதின தும்பிகள்; தென்திசையான்
வன் தூதரும் எகினர் ; வஞ்சனையான்—
தன் தூதரும் ஏகினர், தம்நகர்வாய்.

பொ:- இனிய பற்களையுடையவளான சீதையினிடத்து இன்று (விளைவதொரு) நற்பேறு உண்டு என்று (நன்னிமித்தமாக) வண்டுகள் சென்று ஊதின; தென்திசையைப் பாதுகாப்பவனாகிய இயமனின் வலிய தூதரும் (போரில் இறந்த உயிர்களைக் கொண்டு) தம் நகருக்குச் சென்றனர்; வஞ்சனையுடைய இராவணன் தூதரும் தம் நகருக்குச் சென்றனர்.

கு:- 'இன்னகை' என்பது பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய்ச் சீதையை உணர்த்திற்று. 'தம் நகர்வாய்' என்பது 'வன் தூதரும்' என்பதன் பின்னும் கூட்டப்பட்டது.

## இராவணனிடத்துத் தூதர் நிகழ்ந்த செய்தியை அறிவித்தல்

8534. ஏகித் தனிமன் னனிருந் துழிபுக்
கோகைப் பொருளின் றெனவுள் ளழியா
வேகத் தடல்வீ ரர்விளிந் தவெலாம்
சோகத் தொடிறைஞ் சினர்சொல் லினரால்.

ஏகி தனிமன்னன் இருந்துழி புக்கு,
'ஓகைப்பொருள் இன்று' என,உள் அழியா,
வேகத்து அடல்வீரர் விளிந்த எலாம்
சோகத்தொடு, இறைஞ்சினர், சொல்லினரால்.

பொ:- (தூதர்கள், தம் நகருக்குச்) சென்று தனியே மன்னவனுகிய இராவணன் இருந்த இடத்திற்குச்சென்று, (அவனை) வணங்கி, மகிழ்ச்சிக்குரிய செய்தி சொல்வதற்கில்லையே என்று மனம் வருந்தி, வேகத்தோடு வலிமையைக் காட்டுகின்ற போர் வீரர்கள் இறந்த செய்தியையெல்லாம் வருத்ததுடனே கூறினுர்கள்.

கு:- ஓகை-மகிழ்ச்சி. உள்-மனம். அடல்-வலிமை. விளிதல்-இறத்தல். இறைஞ்சினர் என்பது முற்றெச்சம்.

# 20. மகரக் கண்ணன் வதைப்படலம்

20 ஆவது மகரக் கண்ணன் வதைப் படலம் மகரக் கண்ணனை இராமன் வதைத்ததைப் பற்றிக் கூறும் படலமென்பது பொருள். மகரக் கண்ணன் கரனுடைய புதல்வன் என்பது இப் படலத்திலுள்ள 16 ஆம் செய்யுளால் பெறப்படும்.

படைத்தலைவர் இறந்தமையைத் தூதுவர் வாயிலாக அறிந்த இராவணன் பெருமுச்சு விட்டு வருந்துவான் ஆயினன். அப்போது கரன் மகனாகிய மகரக் கண்ணன், தன்னை ஏவின் தன் தந்தையைக் கொன்றவனாகிய இராமனைக் கொன்று பழி தீர்ப்பேன் எனக் கூறினன். இராவணன் அது கேட்டு மகிழ்ந்து இராமன் மேல் போருக்குச் செல்ல விடையளித்தான். மகரக் கண்ணன் தன்னுடைய ஐந்து வெள்ளம் சேனையுடன் இராவணன் அனுப்பிய ஐந்துவெள்ளம் சேனைகளும் பின்தொடரச் சோணிதக் கண்ணனும் சிங்கனும் தன் தேர்ச் சக்கரக் காவலாளராக உடன்வரப் போர்க்களத்திற்குச் சென்றான்.

அரக்கர்களுக்கும் வானரர்களுக்கும் கடுமையான போர் நிகழ்ந்தது. மகரக் கண்ணன் இராமன் இருக்குமிடத்தை நோக்கித் தன் தேரை ஓட்டிக்கொண்டு சென்றான். இராமனை நோக்கித் தன் தந்தையைக் கொன்றவனாகிய அவனைக் கொன்று பழி தீர்த்துக்கொள்வேன் என வஞ்சினம் கூறிப் போர் செய்தான்.

அந்தப் போரில் மகரக் கண்ணன் தவத்தின் சித்தியினாலும் மாயையினாலும் இடி, காற்று, நெருப்பு ஆகியவற்றை உண்டாக்கித் தன் உண்மை உருவம் தோன்றாவண்ணம் தன்போல் பல உருவங்களைத் தோற்றுவித்துப் போர் செய்து மறைந்து கொண்டிருந்தான். இராமன் அவனுடைய மாயப் போரை வியந்தானாயினும் அவன் திறத்தில் செய்வது இன்னதென்றறியாது மனம் வருந்தியிருந்தான். பின்னர் அவ்வாறு தோன்றிய பல உருவங்களுள்ளும் தனது அம்பு

பட்டமையால் இரத்தம் ஒழுகுகின்ற உருவத்தையே மகரக் கண்ண னது உண்மை உருவமென்று ஆராய்ந்துணர்ந்து, தன் அம்பைச் செலுத்தி அவனைக் கொன்றனன். அதன் பின்னர்க் குருதிக் கண்ணனை நளனும், சிங்கனைப் பனசனும் போரிட்டுக் கொன்றனர் என்பது, இப் படலத்திற் கூறப்படும் செய்தியாகும்.

# 20. மகரக் கண்ணன் வதைப்படலம்

## இராவணன் தூதர் சொல்லைக் கேட்டு வருந்துதல்

8535. சொன்னா ரவர்சொற் செவியிற் றொடர்வோன்
இன்னா தமனத் தினிலங் கையர்கோன்
வெந்நா கவுயிர்ப் பினன்விம் மினனால்
அன்னா னிலைகண் டயனின் றறைவான்.

சொன்னார் அவர்; சொல் செவியில் தொடர்வோன்
இன்னாத மனத்தின் இலங்கையர் கோன்,
வெந்நாக உயிர்ப்பினன், விம்மினனால்;
அன்னான் நிலைகண்டு, அயல்நின்று அறைவான் :

பொ:- தூதர்கள் (படைத்தலைவர் வதையுண்டமையைக்) கூறினார்கள்; அச் சொல் செவியினிடந்துக் கேட்டவனாகிய துன்புற்ற மனத்தினையுடைய இலங்கையரக்கர்களுக்குத் தலைவனாகிய இராவணன் கொடிய பாம்பு போன்ற பெருமூச்சை உடையவனாய்ப் பொருமினான்; அப்படிப்பட்ட அவனுடைய நிலையைக் கண்டு (மகரக் கண்ணன்) அவன் பக்கத்தில் நின்று கீழ்வருமாறு சொல்லுவான் ஆனான்;

கு:-அச் சொல் எனச் சுட்டு வருவிக்கப்பட்டது. சென்ற சென்ற வீரர்களெல்லாம் மீளாது மடிந்தமையைக் கேட்டவனாதலின் இன்னாத மனத்தினையுடையவனென்றார். வெந்நாக உயிர்ப்பினன்-பாம்பு போலச் சீறுபவன். 'பாம்பிவர் தறுகட் சம்புமாலி' (சுந்தரகாண். சம்பு மாலி வதைப் படலம்-1) என்றார் முன்னும். இச் செய்யுளுக்கு 5-ஆம் செய்யுளில் வரும் மகரக் கண்ணன் என்பதை எழுவாயாக்குக. (1)

### மகரக் கண்ணன் போர்க்குச் செல்ல விடையளிக்குமாறு இராவணனை வேண்டுதல்

8536. முந்தே யெனதா தையைமொய் யமர்வாய்
அந்தோ வுயிருண் டவனு ருயிர்மேல்
உந்தா யெனையா துமுணர்ந் திலையோ
எந்தா யொருநீ யிடர்கூ ருதியோ.

'முந்தே, எனதாதையை மெய் அமர்வாய்
அந்தோ! உயிர் உண்டவன் ஆர்உயிர்மேல்
உந்தாய்; எனை யாதும் உணர்ந்திலையோ?
எந்தாய்! ஒரு நீ இடர் கூருதியோ?

பொ:- எந்தையே, என்னுடைய தந்தையை முன்னமே நெருங்கிய போரில் ஐயோ! கொன்றவனாகிய இராமன்மேல் என்னை ஏவவில்லை; என்னுடைய விரத்தை நீ சிறிதும் அறியாயோ? (அங்ஙனம் அறிந்து ஏவாமையின்) ஒப்பற்ற நீ துயர் மிக்கிருக்கக் கடவையோ?

கு:- 'தாதை' என்றது கரனை. உயிருண்டது ஆரணிய காண்டம் கரன் வதைப் படலத்தால் உணரப்படும். 'அந்தோ' என்றது மகரக் கண்ணனது மனநிலையைக் குறித்த இரக்கச் சொல். 'உந்தாய்' முன்னிலை ஒருமை இறந்தகால வினைமுற்று. 'யாதும்' என்பது சிறிதும் என்னும் பொருட்டு. உணர்ந்து முன்னமே என்னை ஏவியிருப்பின் நீ இப்பொழுது இடருற மாட்டாய் என்பான், 'இடர் கூருதியோ' என்றான். 'இளைதாக முண்மரம் கொல்க களையுநர், கைகொல்லும் காழ்த்த விடத்து' (879) என்னும் குறள் ஈண்டு நினைவு கூரற்பாலது. 'ஒரு நீ' என்பது இதுவரை அவன் இடர் அறியாதவன் என்பதைக் குறித்தது. (2)

8537. யானே செலவெண் ணுவனெய் தவவன்
தானேர் வதுதீ தெனவே தணிவேன்
வானே நிலனே முதன்மற் றுமெலாம்
கோனே யெனவெல் வதொர்கொள் கையதோ.

'யானே செல எண்ணுவன் எய்த அவன்,
தான் நேர்வது தீது எனவே தணிவேன்;
வானே, நிலனே, முதல் மற்று மெலாம்,
கோனே எனை வெல்வதொர் கொள்கையதோ?

பொ:- தலைவனே, இராமன் (எனக்கு எதிரியாகப்) பொருந்த (உன் ஏவலின்றி) யானே போருக்குச் செல்ல எண்ணியிருப்பேன்; (எனினும் தலைவனிருக்கத்) தானாகவே பொருந்திச் செல்வது தீது என்றே போகாமலிருந்தேன்; வானும் நிலமும் முதலாக எல்லா இடங்களிலுமுள்ள எல்லாப் பொருள்களும் என்னை வெல்லும்படியான தன்மையுடையதோ?

கு:- 'அவன்' என்றது இராமனைச் சுட்டியது. 'யானே' என்பதிலுள்ள ஏகாரம் அவன் ஏவலினின்றும் பிரித்தது. தணிதல்-அடங்குதல். வானும் மண்ணும் முதலிய மற்றும் எல்லாவற்றையும் தான் வெல்வேன் என்பான், 'வெல்வதோர் கொள்கையதோ?' என அவற்றின்மேல் ஏற்றிக் கூறினான். 'கொள்கையதோ' என்ற அஃறிணை முடிபினால் உயர்திணைப் பொருள்களும் அடக்கப்பட்டன. (3)

71-ஆம் எண்ணுள்ள ஏட்டுச் சுவடியிலும் 41-ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்திலும் பின்வருமாறு ஒரு மிகைப் பாடல் காணப்படுகின்றது.

**8537. a இந்திரி யத்தை யிகழ்ந்தவ னந்தோ**
**மந்தர வெற்றி வழங்க வழங்கும்**
**இந்திர மற்ற தெனக்கடி திற்கொல்**
**வந்ததென் விற்றொழி லைக்கொலை மான**

**8538. அருந்துயர்க் கடலு ளாளெள்**
**னம்மனை யழுத கண்ணன்**
**பெருந்திருக் கழித்த லாற்றாள்**
**கணவனைக் கொன்று பேர்ந்தோன்**
**கருந்தலைக் கலத்தி னல்லாற்**
**கடனது கழியே னென்றாள்**
**பருந்தினுக் கினிய வேலா**
**யின்னருள் பணித்தி யென்றான்.**

'அருந்துயர்க் கடலுளாள் என்
அம்மனை, அழுத கண்ணள்,
பெருந்திருக் கழித்தல் ஆற்றாள்,
"கணவனைக் கொன்று பேர்ந்தோன்
கருந்தலைக் கலத்தின் அல்லால்,
கடனது கழியேன்" என்றாள்;

பருந்தினுக்கு இனிய வேலாய்!
இன்னருள் பணித்தி' என்ருன்.

பொ:- 'பருந்துகளுக்கு (உணவு அளித்தலினுலே) இனிமையைச் செய்கின்ற வேலையுடையவனே, என்னுடைய தாயானவள் அழுத கண்ணளாய் அரிய துயர்க்கடலுள் உள்ளாள்; மங்கலநாணைக் கழித்தற்குப் பொறுக்காதவளாகி, "(எனது) கணவனைக் கொன்று விட்டுப் போனவனது கரிய தலை ஓடாகிய பாத்திரத்தாலல்லது (அவனுக்குச் செய்யவேண்டிய) கடனைச் செய்யமாட்டேன் என்று கூறிவிட்டாள்;" (அவள் கருத்து நிறைவேற) நின் இனிய அருளால் ஏவுவாயாக' என்று வேண்டிக் கொண்டான்.

கு:- துயரைக் கடல்போல மிகுதியாக உடையவள் என்பான் 'அருந்துயர்க் கடலுளாள்' என்ருன். 'மக்களிழந்த இடும்பையினும் மனையாளிழந்த இடும்பையினும், மிக்க இடும்பை ஓவாத விதவை இடும்பை என விளம்பத் தக்கது' (உத்தர காண். திக்கு விசயப் படலம்-138) எனவும், 'கணவனை இழந்தோர்க்குக் காட்டுவதில் என்று' (சிலப். வழக்குரை காதை-80) எனவும் வருதலான் கணவனை இழந்த துயர், 'அருந்துயர்' எனப்பட்டது. அம்மனை-தாய். எல்லா அணிகளுக்கும் இன்றியமையாததாதலின், மங்கல நாணைப் 'பெருந்திரு' என்ருள். இறந்த கணவனைக் குறித்து மனைவி வழிபடுதலாகிய கடமையினை ஆற்றுதலுண்டென்பது, 'பிடியடி யன்ன சிறுவழி மெழுகித், தன்னமர் காதலி புன்மேல் வைத்த, இன் சிறுபிண்டம் யாங்குண்டனன் கொல்' (234) என்னும் புறநானூற்றுச் செய்யுளடிகளால் உணரலாம். தலை-மண்டை ஓடு. 'பருந்தினுக்கு இனியவேலாய்' என்றது இராவணனது வீரத்தை வெளிப்படுத்தியவாறு. (4)

### மகரக் கண்ணன் இராவணனிடம் விடைபெற்றுப் போருக்குச் செல்லுதல்

8539. அவ்வுரை மகரக் கண்ண
னறைதலு மரக் கனைய
செவ்விது சேறி சென்றுன்
பழம்பகை தீர்த்தி யென்ருன்
வெவ்வழி யவனும் பெற்ற
விடையினன் றேர்மேற் கொண்டான்
வவ்விய வில்லன் போனுன்
வரம்பெற்று வளர்ந்த தோளான்.

அவ்வுரை மகரக் கண்ணன்
அறைதலும், அரக்கன், 'ஐய !
செவ்விது; சேறி! சென்று, உன்
பழம் பகை தீர்த்தி!' என்ருன்

வெவ்வழி யவனும், பெற்ற
விடையினன் தேர்மேற் கொண்டான்.
வவ்விய வில்லன் போனுன்,
வரம் பெற்று வளர்ந்த தோளான்.

பொ:- மகரக் கண்ணன் அந்தச் சொல்லைச் சொன்னவுடனே, (அதனைக் கேட்ட) இராவணன், (அவனை நோக்கி) 'ஐயனே, (நீ சொன்ன சொல்) முறைமையுடையது; (நீ) செல்வாய்; போய் உன் பழம் பகையைத் தீர்த்துக் கொள்வாய்' என்று சொன்னுன்; (தேவர்களால்) வரம்பெற்றுப் பெருத்த தோள்வலியையுடையவனும் தீ நெறியில் செல்லுபவனும் ஆகிய மகரக் கண்ணன், விடைபெற்றுக் கையிற் பிடித்த வில்லையுடையவனுய்த் தேர்மேல் ஏறிக்கொண்டு போனுன்.

கு:- செவ்விது-செம்மையுடையது; ஈண்டு முறைமையை உணர்த்தியது. சேறி, தீர்த்தி என்பன முன்னிலை ஏவலொருமை வினைமுற்று. 'பெற்ற விடையினன்' என்பது விடை பெற்றனன் என்று ஆகி முற்றெச்சமாய் நின்றது. 'மேற்கொண்டான்' என்பது முற்றெச்சம். திரும்பி வாரான் என்னும் கருத்தால் புறப்பட்டான் என்னுது 'போனுன்' என்ருர். (5)

8540. தன்னுடைச் சேனை கோடி
யைந்துடன் தழுவத் தானை
மன்னுடைச் சேனை வெள்ள
மோரைந்து மழையிற் பொங்கிப்
பின்னுடைத் தாகப் பேரி
கடல்படப் பெயர்ந்த தூளி
பொன்னுடைச் சிமையத் துச்சிக்
குச்சியும் புதையப் போனுன்.

தன்னுடைச் சேனை கோடி
ஐந்துஉடன் தழுவ, தானை
மன்னுடைச் சேனை வெள்ளம்
ஓர் ஐந்து மழையின் பொங்கிப்

பின்னுடைத் தாக, பேரி
கடல்பட பெயர்ந்த தூளி
பொன்னுடைச் சிமையத்து உச்சிக்கு
உச்சியும் புதைய, போனன்.

பொ:- தன்னதாகிய சேனை வரிசை ஐந்துவெள்ளம் உடன் தழுவி வரவும், சேனையினையுடைய அரசனுடைய ஐந்துவெள்ளம் சேனைகளும் மேகத்தைப்போல ஆரவாரித்துக்கொண்டு தன் பின்னேவரவும், பேரிகை கடல்போல ஒலிக்கவும், (சேனைகள் செல்லுதலால்) உண்டாகிய புழுதியால் மேரு மலையின் உச்சியிலுள்ள சிகரமும் மறையும்படியாகச் சென்றான்.

கு:- தன்னுடைய ஐந்து வெள்ளம் சேனை உடன் தழுவி வரவும், இராவணனுடைய ஐந்து வெள்ளம் சேனை பின் வரவும் சென்றான் என்க. 'தானைமன்' என்றது சேனையையுடைய அரசன் என அரசனுக்கு இயற்கை அடைமொழி. தூசிப் படையில் சென்றான் என்பது புலப்படச் 'சேனை பின்னுடைத்தாக' என்றார். பட-ஒலிக்க. பேரி ஒலியால் கடல் ஒலி அடங்க எனவுமாம். தூளியால் என உருபு விரிக்க. தலையிலுள்ள சிகரத்தை 'உச்சிக்கு உச்சி' என்றார். (6)

### சோணிதக் கண்ணன் முதலியோர் இராவணன் ஏவலால் மகரக் கண்ணனுடன் செல்லுதல்

8541. சோணிதக் கண்ண னேடு
சிங்கனுந் துரகத் திண்டேர்த்
தாண்முதற் காவல் பூண்டு
செல்கெனத் தக்க தென்ன
வாண்முதற் றனை யோடு
மனைவருந் தொடரப் போனன்
நாண்முதற் றிங்க டன்னைத்
தழுவிய வனைய நண்பான்.

'சோணிதக் கண்ண னேடு
சிங்கனும், துரகத் திண்தேர்த்
தாள்முதல் காவல் பூண்டு
செல்க'என, 'தக்கது' என்ன
ஆள்முதல் தானை யோடும்
அனைவரும் தொடரப் போனன்,

நாள்முதல் திங்கள் தன்னைத்
தழுவிய அனைய நண்பான்.

பொ:- 'சோணிதக் கண்ணனோடு சிங்கனும் குதிரை பூட்டப் பெற்ற திண்ணிய தேர்ச்சக்கரத்தினிடத்துக் காவல்பூண்டு செல்வார் களாக' என்று (இராவணன்) கூற, '(அது)தகுதி' என்று, காலாட் படை முதலிய சேனைகளோடு (வீரர்) யாவரும் தொடர்ந்து வர, விண் மீன்களும் கோள்களும் ஆகியவை சந்திரனைச் சேர்ந்தாற் போன்ற சேர்க்கையை உடையவனாகிச் சென்றான்.

கு:- 'தேர்த்தாள் முதல் காவல் பூண்டு' என்றது அவன் தேரை விட்டு விலகாமல் என்றபடி. தாள்- சக்கரம். 'முதல்' ஏழாம் வேற்றுமை உருபு. 'செல்களன' என்பது தொகுத்தல். என்னு-என்று. நாள்-விண்மீன்கள். 'முதல்' என்றதனால் கோள்களும் அடங்கின. சோணிதக் கண்ணனும் சிங்கனும் நால்வகைப் படைகளும் தன்னைச் சூழ மகரக் கண்ணன் சென்றனனாதலின் அத் தோற்றம், திங்களை விண்மீன்களும் கோள்களும் சூழ்ந்து செல்வதுபோல் இருந்தது. (7)

### அரக்கர் சேனை செல்லுந் திறம்

8542. பல்பெரும் பதாகைப் பத்தி
மீமிசைத் தொடுத்த பந்தர்
எல்லவன் சுடரொண் கற்றை
முற்றவின் னிழலை யீயத்
தொல்சின யானை யங்கை
விலாழிநீர்த் துவலை தூற்றச்
செல்பெருங் கவியின் சேனை
யமர்த்தொழிற் சிரமந் தீர்ந்த.

பல்பெரும் பதாகைப் பத்தி
மீமிசைத் தொடுத்த பந்தர்,
எல்லவன் சுடர்ஒண் கற்றை
முற்ற, இன்நிழலை ஈய,
தொல்சின யானை அம்கை
விலாழிநீர்த் துவலை தூற்ற,
செல்பெருங் கவியின் சேனை
அமர்த்தொழில் சிரமம் தீர்ந்த

பொ:- (அரக்கர் சேனைகள் பிடித்த) பல பெரிய கொடிகளின் வரிசைகளால் மேலே தொடுக்கப்பட்ட பந்தலானது, சூரியனது ஒளி பொருந்திய தொகுதியாகிய கிரணங்களின் வெப்பம் முடிவுறும்படி இனிய நிழலைத் தரவும், பழையதாகிய கோபத்தையுடைய யானையினது அழகிய துதிக்கை வழியால் உண்டாகிய உமிழ்நீர்த் துவலை (எங்கும்) சூழவும், எதிர்த்துச் செல்லுகின்ற கூட்டமாகிய குரங்கின் சேனைகள் போர்த் தொழிலில் உண்டாகிய வருத்தம் நீங்கப்பெற்றன.

கு:- அரக்கர் சேனைகள் தாங்கிய கொடிகளின் வரிசை சூரிய ஒளியை மறைத்து நிழலைக் கொடுக்கவும், யானைகளின் துதிக்கை உமிழ்நீர் சிறு தூவலாக மேலேபட்டுக் குளிர்ச்சி கொடுக்கவும், குரங்கின் சேனைகள் போர்த் தொழிலில் உண்டாகிய வருத்தம் நீங்கப் பெற்றன என்பது கருத்து. எல்லவன்-சூரியன். 'சுடர்' ஈண்டு ஆகு பெயராய் வெப்பத்தை உணர்த்திற்று. ஈயவும் துற்றவும் என உம்மை விரிக்க. 'தொல்சின யானை' என்றது யானை இயற்கையாகவே கோபமுடைய தென்றபடி. யானை துதிக்கையை அசைத்துக் கொண்டே செல்லும் இயல்புடையதாதலின் அதன்வழி வருகின்ற நீர் துவலையாக வீசுவதாயிற்று. இதனுல் குரங்குச் சேனைகள் போர்த் தொழில் வருத்தம் தீர்ந்தன என்பது பெறப்பட்டது. (8)

8543. முழங்கின யானை வாசி
யொலித்தன முரசின் பண்ணை
தழங்கின வயவ ரார்த்தா
ரென்பதோர் முறைமை தள்ள
வழங்கின பதலை யோதை
யண்டத்தின் வரம்பின் காறும்
புழுங்கின வுயிர்கள் யாண்டுங்
கால்புகப் புரையின் ருக.

'முழங்கின யானை; வாசி
ஒலித்தன; முரசின் பண்ணை
தழங்கின; வயவர் ஆர்த்தார்'
என்பதோர் முறைமை தள்ள,
வழங்கின, பதலை ஓதை,
அண்டத்தின் வரம்பின் காறும்;
புழுங்கின உயிர்கள், யாண்டும்
கால்புகப் புரை இன்ருக.

பொ:- 'யானைகள் முழங்கின ; குதிரைகள் ஒலித்தன ; முரசின் கூட்டங்கள் ஒலித்தன ; வீரர்கள் ஆர்த்தார்கள்' என்று சொல்லப்படுவதாகிய ஒலிமுறைமை நீங்க, பதலை என்னும் தோற்கருவியால் எழுந்த ஓசை அண்டத்தின் எல்லை வரையிலும் வழங்கின ; (அது கேட்ட) உயிர்கள், எவ்விடத்தும் காற்றுப்புக இடமில்லாதபடி ஆக, (அதனால்) புழுங்கின.

கு:- பண்ணை-கூட்டம். யானை, குதிரை, முரசு, காலாள் ஆகியவற்றின் ஓசையை விடப் பதலை ஓசை மிக்கிருந்தமையின், யானை முதலியவற்றின் ஓசை வேறுபாடு தோன்றாமையின், 'முறைமை தள்ள' என்றார். அண்டத்தின் வரம்பின் காறும் பதலை ஓதை வழங்கின, அதனால் உயிர்கள் புழுங்கின என்க. ஒலியின் பெருக்கத்தால் காற்றின் அசைவும் தடைப்பட்டு நிற்க, அதனால் உயிர்கள் புழுங்கின என்றபடி. (9)

### அரக்கர்க்கும் வானரர்க்கும் போர் நிகழ்தல்

8544. வெய்தினி னுற்ற தானை
முறைவிடா நூழில் வெம்போர்
செய்தன செருக்கிச் சென்று
நெருக்கினர் தலைவர் சேர்த்த
கையொடு கைக ளுற்றுக்
கலந்தன கல்லும் வில்லும்
எய்தன வெறிந்த யானை
யீர்த்தன கோத்த சோரி.

வெய்தினின் உற்ற தானை
முறைவிடா நூழில் வெம்போர்
செய்தன; செருக்கிச் சென்று
நெருக்கினர் தலைவர்; சேர்த்த
கையொடு கைகள் உற்றுக்
கலந்தன; கல்லும் வில்லும்
எய்தன எறிந்த; யானை
ஈர்த்தன கோத்த சோரி.

பொ :—விரைவாகச் சென்று பொருந்திய சேனைகள் போர் முறையை விடாது கொன்று குவித்தலாகிய கொடிய போரைச் செய்தன ; (இருதிறத்துத்) தலைவரும் செருக்கோடு சென்று ஒருவரோ

டொருவர் தாக்கினர் ; அணிவகுக்கப்பட்ட பக்கப் படையோடு பக்கப் படைகள் பொருந்திப் போரிட்டன ; (இருதிற வீரர்களுடைய கைகளில் பொருந்திய) கற்களும் வில்லும் எறியப்பட்டனவும் எய்யப்பட்டனவும் ஆயின ; (அவ்விடத்துப்) பெருகிய இரத்தம் யானைகளை இழுத்துச் சென்றன.

கு:- விடாது என்பது ஈறு குறைந்து நின்றது. நூழில்-கொன்று குவித்தல். தலைவர் செருக்கிச் சென்று நெருக்கினர் என்றியைக்க. வானரர் கையில் கல்லும் அரக்கர் கையில் வில்லும் படையாதலின் 'கல்லும் வில்லும்' என்றார். 'கல்லும் வில்லும் எய்தன எறிந்த' என்பதை எதிர் நிரனிறையாக்குக. (10)

8545. வானர வீரர் விட்ட
மலைகளை யரக்கர் வவ்வி
மீனொடு மேகஞ் சிந்த
விசைத்தனர் மீட்டும் வீசக்
கானக மிடியுண் டென்னக்
கவிக்குலம் மடியுங் கவ்விப்
போனக நுகரும் பேய்கள்
வாய்ப்புறம் புடைப்போ டார்ப்ப.

வானர வீரர் விட்ட
மலைகளை அரக்கர் வவ்வி,
மீனொடு மேகம் சிந்த
விசைத்தனர் மீட்டும் வீச,
கானகம் இடியுண் டென்னக்
கவிக்குலம் மடியும் கவ்வி,
போனகம் நுகரும் பேய்கள்
வாய்ப்புறம் புடைப்போடு ஆர்ப்ப.

பொ:- வானர வீரர்கள் விட்ட மலைகளை அரக்கர்கள் பிடித்து, நாண் மீனும் மேகமும் கெடும்படியாக மீளவும் விரைந்தவராய் எறிய, (அவைகள் பட்டு), இடி விழுந்த காட்டைப்போல வானரக் கூட்டங்கள் இறக்கும். (அவற்றைக்) கவ்வி உணவாக உண்ணுகின்ற பேய்கள் வாய்ப்புறம் புடைத்திருத்தலை உடையனவாய் ஆரவாரிப்பன.

கு:-மீட்டும் விசைத்தனர் வீச என இயைக்க. 'விசைத்தனர்' என்பது முற்றெச்சம். வீசியதால் மீனும் மேகமும் சிதறியனவாயின.

உண்டு கொண்டிருக்கும்போதே ஆர்த்தனவாதலின் வாய்ப்புறம் புடைப்பொடு தோன்றுவதாயிற்று. (11)

8546. மைந்நிற வரக்கர் வன்கை
வயிரவாள் வலியின் வாங்கி
மெய்ந்நிறத் தெறிந்து கொல்வர்
வானர வீரர் வீரர்
கைந்நிறைத் தெடுத்த கல்லு
மரனுந்தங் கரத்தின் வாங்கி
மொய்ந்நிறத் தெறிவ ரெற்றி
முருக்குவ ரரக்கர் முன்பர்.

மைந்நிற அரக்கர் வன்கை
வயிரவாள் வலியின் வாங்கி,
மெய்ந்நிறத்து எறிந்து கொல்வர்,
வானர வீரர்; வீரர்
கைந்நிறைத்து எடுத்த கல்லும்
மரனும்தம் கரத்தின் வாங்கி,
மொய்ந்நிறத்து எறிவர், எற்றி
முருக்குவர்; அரக்கர் முன்பர்.

பொ:- கரு நிறத்தையுடைய அரக்கர்களது வலிய கையிலே பிடித்த உறுதியான வாளினை வானர வீரர் தமது வலிமையினாலே பிடுங்கி, (அவ்வரக்கர்களுடைய) உடலின் மார்பிலே எறிந்து கொல்லுவார்கள் ; அரக்கரில் வலிமையுடையவர்கள், வானர வீரர்கள் கைகளில் நிறைய எடுத்த மலையையும் மரத்தையும் தம் கைகளினாலே பிடுங்கி, (அவ்வானர வீரர்களுடைய) வலிய மார்பிலே எறிவாராய் அடித்துக் கொல்லுவர்.

கு:- மெய்-உடம்பு. நிறம்-மார்பு. பின்னர் 'அரக்கர் முன்பர் முருக்குவர்' என்றதால் 'வீரர்' என்றது வானர வீரரை. மொய்-வலிமை. 'முருக்குவர்' என்னும் முடிபிற்கேற்ப, 'எறிவர்' என்பதை எச்சமாக்கிப் பொருள் கொள்ளப்பட்டது. முன்பையுடைய அரக்கர் 'முன்பர்' எனப்பட்டார். முன்பு-வலிமை. (12)

## மகரக் கண்ணன் இராமன் மேற்சேறல்

8547. வண்டுலா மலங்கன் மார்பன்
மகரக்கண் மழையே றென்னத்

திண்டிற லரக்கன் கொற்றப்
பொற்றடஞ் சில்லித் தேரைத்
தண்டலை மருத வைப்பிற்
கங்கைநீர் தழுவு நாட்டுக்
கொண்டன்மே லோட்டிச் சென்ருன்
குரக்கினப் படையைக் கொன்ருன்.

வண்டுஉலாம் அலங்கல் மார்பன்
மகரக்கண் மழைஏறு என்ன,
திண் திறல் அரக்கன் கொற்றப்
பொன்தடஞ் சில்லித் தேரை,
தண்டலை மருத வைப்பின்
கங்கைநீர் தழுவும் நாட்டுக்
கொண்டல்மேல் ஓட்டிச் சென்ருன்;
குரங்குஇனப் படையைக் கொன்ருன்.

பொ:- வண்டுகள் உலாவும்படியான மாலையையணிந்த மார்பையுடையனும், மங்கிய சிவப்பு நிறக் கண்ணையும் இடியேற்றை ஒத்த மிக்க வலிமையையும் உடையவனுமாகிய மகரக் கண்ணன், குரங்குக் கூட்டமாகிய சேனையைக் கொன்றவனாய்(த் தனது) வெற்றி பொருந்திய அழகிய பெரிய சக்கரத்தையுடைய தேரை, சோலை சூழ்ந்த மருத நிலத்தைக்கொண்ட, கங்கை நீரால் சூழப்பெற்ற கோசல நாட்டையுடைய, மேகம்போல் நிறத்தையுடைய இராமன் மேல் (போருக்காக) ஓட்டிச் சென்ருன்.

கு:- உலாவும் என்பது 'உலாம்' என இடைக்குறைந்து நின்றது. மழைஏறு-இடியேறு. சில்லி-சக்கரம். தண்டலை-சோலை; இது மருத நிலத்திற்கு அடைமொழியாக வந்தது. தண்டலை மருத வைப்பின் நாடு எனவும் கங்கை நீர் தழுவும் நாடு எனவும் தனித் தனி இயைக்க. 'கொன்ருன்' என்பதை முற்றெச்சமாக்கிப் போகும் போதே சேனைகளை அழித்துக்கொண்டு சென்ருன் என்க. (13)

### மகரக் கண்ணன் இராமனை நோக்கிக் கூறுதல்

8548. இந்திரன் பகைஞ னேகொ
லென்பதோ ரச்ச மெய்தித்
தந்திர மிரிந்து சிந்தப்
படைப்பெருந் தலைவர் தாக்கி

எந்திர மெறிந்த வென்ன
வேவுண்டு புரண்டா ரெய்திச்
சுந்தரத் தோளி னானை
நோக்கிநின் றினைய சொன்னான்.

'இந்திரன் பகைஞனே கொள்?'
என்பது ஓர்அச்சம் எய்தித்
தந்திரம் இரிந்து சிந்த,
படைப்பெருந் தலைவர், தாக்கி
எந்திரம் எறிந்த என்ன,
ஏவுண்டு புரண்டார்; எய்தி,
சுந்தரத் தோளினானை நோக்கி
நின்று, இனைய சொன்னான்.

பொ:- (அவ்வாறு மகரக் கண்ணன் வரும்போது அவனைக் கண்டு) வானர சேனைகள் (முன்னர் வந்த) இந்திரனுக்குப் பகைவனாகிய இந்திரசித்தோ என்பதாகிய ஒரு பயத்தை அடைந்து கெட்டு ஓடவும், வானர சேனைப் பெருந்தலைவர்கள் அவனொடு பொருது, எந்திரம் எறிந்தாற்போல (அவனால் விடப்பட்ட) அம்பினால் தாக்குண்டு புரண்டாராகவும், அழகிய தோளையுடைய இராமனை யடைந்து, அவனைப் பார்த்து நின்று கீழ் வருமாறு கூறினான் :

கு:- முதல் நாள் இந்திரசித்தினால் துன்பம் அடைந்தவர்களாதலின் வானரர்கள் அஞ்சி ஓடினார்கள். வில்லிலிருந்து புறப்படுகின்ற அம்பினது வேகம் எந்திரத்தினின்று புறப்படுவது போன்றது. 'புரண்டார்' என்பதற்குப் புரளும்படியாகச் செய்துகொண்டு இவன் சென்றான் எனப் பொருள் விரிக்க. தோளினானை எய்தி எனக் கூட்டுக. 'இனைய' என்னும் குறிப்பு வினையாலணையும் பெயர், கீழ் அவன் சொல்லும் சொற்களைக் குறித்தது. (14)

8549. என்னுடைத் தாதை தன்னை
யின்னுயி ருண்டா யென்று
முன்னுடைத் தாய தீய
முழுப்பகை மூவர்க் கின்றி
நின்னுடைத் தாய தன்றே
யின்றது நிமிர்வெ னென்றான்
பொன்னுடைத் தாதை வண்டு
குடைந்துணும் பொலம்பொற் றாரான்.

"என்னுடைத் தாதை தன்னை
இன்உயிர் உண்டாய்" என்று
முன்உடைத் தாய தீய
முழுப்பகை மூவர்க்கு இன்றி,
நின்னுடைத்து ஆயது அன்றே;
இன்றுஅது நிமிர்வென்' என்றான்—
பொன்னுடைத் தாதை வண்டு
குடைந்துஉண்ணும் பொலம்பொன் தாரான்.

பொ:- 'பொன் போன்ற நிறத்தையுடைய மகரந்தத்தை வண்டுகள் கிண்டி உண்ணும்படியான மிக்க அழகிய மாலையையுடைய மகரக் கண்ணன், "என்னுடைய தந்தையினது இனிய உயிரை நீ போக்கினாய்" என்று (எனக்கு) முன்னமே உண்டாகிய கொடிய பெரும் பகையானது (தேவர்களுக்குத் தலைவராகிய) மூவர் மாட்டில்லாமல் உன்னிடத்தே நிகழ்ந்தது; (எனினும்) இன்று அந்தப் பகையை நீக்கித் தலையெடுப்பேன்' என்று சொன்னான்.

கு:- கரனால் ஏற்பட்ட பகையை அப்பொழுதே யான் தீர்த்திருந்தேனானால் இவ்வளவு தூரம் போர் நிகழ்ந்திராது என்பதை வெளிப்படுத்தும் பொருட்டுத் 'தீய முழுப்பகை' என்றான். தான் மனிதனோடு பொருதல் இழிவு என்பதைத் தெரிவிக்கும் பொருட்டு அவர்களிடத்து நிகழாமல் உன்னிடத்து நிகழ்ந்தது என்றான். 'பாழி நெடுந்தோள் வீரா நின் பெருமைக்கேற்பப் பகையிலங்கை, ஏழு கடற்கு மப்புறத்த தாகாதிருந்த திழிவன்றோ' (சுந்தர. உருக்காட்டுப் படலம்-III) எனச் சீதை கூறியது ஒருபுடை ஒப்பு நோக்கற்பாலது. தகுதியில்லாத இடத்துப் போராதலின் இகழ்ச்சிக் குறிப்புத் தோன்ற 'எனினும்' என ஒரு சொல் வருவிக்கப்பட்டது. (15)

இராமன், மகரக்கண்ணன் கூறியது தக்கது எனல்

5550. தீயவன் பகர்ந்த மாற்றஞ்
சேவகன் றெரியக் கேட்டான்
நீய்கரன் புதல்வன் கொல்லோ
நெடும்பகை நிமிர வந்தாய்

ஆயது கடனே யன்றே
வாண்பிறந் தமைந்தார்க் கைய
ஏயது சென்ன யென்ரு
னிசையினுக் கிசைந்த தோளான்.

தீயவன் பகர்ந்த மாற்றம்
சேவகன் தெரியக் கேட்டான்
'நீய்கரன் புதல்வன் கொல்லோ?
நெடும்பகை நிமிர வந்தாய்;
ஆயது கடனே அன்றே
ஆண்பிறந்து அமைந்தார்க்கு? ஐய!
ஏயது சொன்ஞய்' என்ருன்,—
இசையினுக்கு இசைந்த தோளான்.

பொ:- புகழுக்குப் பொருந்திய தோள்வலியுள்ளவனும் வீரனுமாகிய இராமன், கொடியவஞகிய மகரக் கண்ணன் சொன்ன சொற்களை விளங்கக் கேட்டு, 'நீ கரனுடைய மகஞ? (நின்னுடைய) பழைய பகையைத் தீர்த்துக்கொள்ள வந்திருக்கிருய்; ஆண் தன்மையோடு பிறந்தவர்களுக்கெல்லாம் அது கடமையன்றே? ஐயனே! நீ பொருத்தமுடையதையே சொன்ஞய்' என்று கூறினன்.

கு:- இராமன் தெய்வத் தன்மை உடையவஞதலின் எல்லாப் புகழையும் ஏற்கும்படியான தோள் என்பதை விளக்க, 'இசையினுக்கு இசைந்த தோள்' என்ருர். 'ஏற்கும் பெரும்புகழ் வானவர் ஈசன்' (திருவாய்மொழி 3:9:11) என்புழிப்போல. தோளாஞகிய சேவகன் என எழுவாயாக்குக. படைத்தலைவ என்பதைச் 'சேவகன்' என்னும் பெயரால் குறிப்பிட்டார். மகரக் கண்ணன் சொற்களைக் கொண்டே அவன் கரன் மகனென்பது இராமனுக்குத் தெரிய வந்ததென்பது, 'நீ கரன் புதல்வன் கொல்லோ' என்னும் சொல்லாற்றலால் விளங்குகிறது. ஆண்மைத் தன்மையோடு பிறந்தவர் என்பார், 'ஆண் பிறந்து அமைந்தார்' என்ருர். 'ஆயது' என்பது பகை தீர்த்தலைச் சுட்டியது. இதஞல் இராமனுக்குச் செற்றமின்மை புலப்படுத்தப்பட்டது. (16)

## மகரக்கண்ணனுக்கும் இராமனுக்கும் போர் நிகழ்தல்

8551. உருமிடித் தென்ன வின்ஞ
ஞெலிபடுத் துன்ஞே டெந்தை
செருமுடித் தென்க ணின்ற
சினமுடித் தமைவெ னென்ஞக்
கருமுடித் தமைந்த மேகங்
கான்முடித் தெழுந்த காலம்
பெருமுடிக் கிரியிற் பெய்யுந்
தாரைபோற் பகழி பெய்தான்,

உரும்இடித் தென்னவில் நாண்ஒலி
படுத்து, 'உன்ஞேடு எந்தை
செருமுடித்து, என்கண் நின்றசினம்
முடித்து அமைவென்' என்ஞ,
கருமுடித்து அமைந்த மேகம்,கால்
முடித்து எழுந்த காலம்,
பெருமுடிக் கிரியில் பெய்யும்
தாரைபோல், பகழி பெய்தான்.

பொ:- இடி இடித்தாற்போல வில்லினது நாண் ஒலியைத் தோற்றுவித்து, (இராமனைப் பார்த்து), 'உன்ஞேடு என் தந்தை காரணமாக ஏற்பட்ட போரை முடித்து, எனது கோபத்தையும் தீர்த்துக் கொள்வேன்' என்று சொல்லி, சூல் முதிரப்பெற்ற மேகம் காற்ஞேடுகூடி (உலகத்தை) அழித்தற் பொருட்டு எழுந்த ஊழிக்காலத்திலே, பெரிய உச்சியையுடைய மலையிலே பெய்கின்ற மழையைப் போல அம்பை எய்தான்.

கு:- 'முடித்தமைவென்' என்பது ஒரு சொல்; தணிவேன் என்றபடி. என்ஞ-என்று சொல்லி. என்ஞஎய்தான் எனமுடிக்க. கால்-காற்று. முடித்து-உலகத்தை முடித்தற்பொருட்டு. மேகம் எழுந்த காலம் பெய்யும் தாரை என இயைக்க. இவ் வுவமையால் அவன் எய்த அம்புகளது மிகுதி பெறப்பட்டது. (17)

8552. அம்புயக் கண்ணன் கண்டத்
தாயிரம் பகழி நாட்டித்
தம்பிதன் கவச மீதே
யிரட்டிச்சா யகங்க டாக்கி

வெம்பிக லநுமன் மீதே
வெங்கணை மாரி வித்தி
உரம்பர்த முலக முற்றுஞ்
சரங்களாய் மூடி யுய்த்தான்.

அம்புயக் கண்ணன் கண்டத்து
ஆயிரம் பகழி நாட்டி,
தம்பிதன் கவச மீதே
இரட்டிச் சாயகங்கள் தாக்கி
வெம்பு இகல் அனுமன் மீதே
வெங்கணை மாரி வித்தி
உம்பர் தம் உலகம் முற்றும்
சரங்களாய் மூடி உய்த்தான்.

பொ:- (அந்த மகரக் கண்ணன்), தாமரை போன்ற கண்களை யுடைய இராமனது கழுத்தில் ஆயிரம் அம்புகளைப் பதித்தும், (அவனது) தம்பியாகிய இலக்குவனது கவசத்தின்மீது இரண்டாயிரம் அம்புகள் கொண்டு தாக்கியும், கோபிக்கின்ற வலிமையுடைய அனுமன் மேல் கொடிய அம்புகளை மழைபோல் விதைத்தும், தேவர் உலகம் எல்லாம் அம்புமயமாகி மூடுமாறு (எண்ணிறந்த அம்புகளைப்) பொழிந்தான்.

கு:- கவசம்-மார்பில் அணிவது. முன்பு 'ஆயிரம்' என்றதனால் 'இரட்டி' என்பது இரண்டாயிரத்தைக் குறித்தது. இகல்-வலிமை. கணைகளை மாரிபோல் விதைத்தான் எனக் கணைகளது மிகுதி கூறப்பட்டது. 'மூடி' என்னும் செய்தென் எச்சம் மூடுமாறு எனச் செய வென் எச்சமாகத் திரிக்கப்பட்டது. (18)

8553. சொரிந்தன பகழி யெல்லாஞ்
சுடர்க்கடுங் கணைக ளூவி
அரிந்தன கைற்றி மற்ற
வாண்டகை யலங்க லாகத்
தெரிந்தொரு பகழி பாய
வெய்தன னிராம னேவ
நெரிந்தெழு புருவத் தான்றன்
னிறத்துற்று நின்ற தன்றே.

சொரிந்தன பகழி எல்லாம்
 சுடர்க்கடுங் கணைகள் தூவி,
அரிந்தனன் அகற்றி, மற்று அ(வ்)
 ஆண்தகை அலங்கல் ஆகத்து,
எரிந்துஒரு பகழி பாய
 எய்தனன், இராமன்; ஏவ,
நெரிந்துஎழு புருவத் தான் தன்
 நிறத்துஉற்று நின்றது அன்றே.

பொ:- இராமன், (மகரக் கண்ணனால்) எய்யப்பட்ட எல்லா அம்புகளையும் சுடுகின்ற கொடிய அம்புகளைத் தூவி, ஒடித்துத் தள்ளி, அதன் பின்பு ஆண்மைக் குணமுள்ள அந்த மகரக் கண்ணனுடைய மாலையணிந்த மார்பிலே ஓர் அம்பினைச் சுட்டுக்கொண்டு பாயும்படியாகச் செலுத்தினான். (அப்படி அவன்) செலுத்த, (அவ்வம்பானது, கோபத்தால்) வளைந்து எழுந்த புருவத்தையுடைய மகரக் கண்ணனது மார்பிலே அழுந்தி நின்றது.

கு:- 'பகழி எல்லாம்' என்பதனை எல்லாப் பகழி என மாற்றி உருபும் உம்மையும் விரிக்கப்பட்டன. 'அரிந்தனன்' என்பது முற்றெச்சம். அலங்கல்-போர்மாலை, 'எரிந்து' என்பதனைப் 'பாய' என்பதனோடு கூட்டுக. நிறம்-மார்பு. (19)

8554. ஏவுண்டு துளக்க மெய்தா
 விரத்தகப் பரிதி யீன்ற
பூவுண்ட கண்ணன் வாயிற்
 புகையுண்ட துமிழ்வான் போல்வான்
தேவுண்ட கீர்த்தி யண்ண
 றிருவுண்ட கவசஞ் சேரத்
தூவுண்ட வயிர வாளி
 யாயிரந் தூவி யார்த்தான்.

ஏவுண்டு துளக்கம் எய்தா,
 இரத்தகப் பரிதி ஈன்ற
பூவுண்ட கண்ணன், வாயின்
 புகைஉண்டது உமிழ்வான் போல்வான்

தேவுண்ட கீர்த்தி அண்ணல்
திருஉண்ட கவசம் சேர,
தூவுண்ட வயிர வாளி
ஆயிரம் தூவி ஆர்த்தான்.

பொ :- (இராமனால் எய்யப்பட்ட) அம்பு தைத்து நடுங்கி, செந்நிறத்தையுடைய சூரியனால் அலர்த்தப்பட்ட செந்தாமரைப் பூப்போன்ற கண்களையுடைய மகரக் கண்ணன், வாயில் முன்னமே உண்ட புகையைக் கக்குபவன் போன்றவனாகி, (நெருப்பை உமிழ்ந்து கொண்டு), தெய்வத்தன்மை பொருந்திய புகழையுடைய இராமனது அழகிய கவசத்தில் தைக்கும்படியாக (ப் பகைவரது) தசையில் தோய்ந்த திண்ணிய ஆயிரம் அம்புகளைப் பொழிந்து ஆரவாரித் தான்.

கு :- துளக்கம்—நடுக்கம். இரத்தகம்—செந்நிறம். பருதியைக் கண்டுமலரும் தாமரைப் பூவைப் 'பருதி ஈன்ற பூ' என்றது உபசார வழக்கு. 'பூ உண்ட' என்பதில் 'உண்ட' என்பது உவம உருபு. 'புகை உண்டது' என்பதில் 'உண்டது' என்பது முன்னமே உண்டதைக் குறித்தது; ஈண்டுக் கோபத் தீயை உணர்த்தியது. தூ—மாமிசம். (20)

8555. அன்னது கண்ட வானோ
ரதிசய முற்றா ராழி
மன்னனு முறுவ லெய்தி
வாயம்போ ராறு வாங்கிப்
பொன்னெடுந் தடந்தேர் பூண்ட
புரவியின் குரங்கள் போக்கி
வின்னடு வறுத்துப் பாகன்
றலையையு நிலத்து வீழ்த்தான்.

அன்னது கண்ட வானோர்
அதிசயம் உற்றார்; ஆழி
மன்னனும், முறுவல் எய்தி,
வாய்அம்பு ஓர்ஆறு வாங்கி.
பொன்நெடுந் தடந்தேர் பூண்ட
புரவியின் குரங்கள் போக்கி,
வில்நடு அறுத்து, பாகன்
தலையையும் நிலத்து வீழ்த்தான்.

பொ:- மகரக் கண்ணன் அம்பு எய்ததைக் கண்ட தேவர்கள் வியப்புற்ருர்கள்; ஆணைச் சக்கரத்தையுடைய இராமனும் புன் முறுவல் பூத்துக் கூர்மையான ஆறு அம்புகளை எடுத்து, (அவை களால்) அழகிய நெடிய பெரிய தேரில் கட்டப்பட்ட குதிரைகளின் குளம்புகளைத் துண்டித்து, (அவன் கையில் பிடித்த) வில்லை நடுவே ஒடித்து, தேர்ப்பாகனது தலையையும் பூமியில் விழும்படி செய் தான்.

கு:- மகரக் கண்ணன் மார்பில் தைத்த வாளியால் நடுங்கியும் வீரங் கெடாது அம்பு சொரிதலின் வானேர்கள் வியந்தார்கள். 'அன்னது' என்னும் சுட்டுச் சொல், அவன் வாளி தூவி ஆர்த்த தைக் குறித்தது. மார்பில்பட்ட அம்பினுல் நடுங்கியும் அவன் கோபத்தோடு அம்பு துரந்ததற்கு இராமன் புன்முறுவலெய்தினுன்; இது பிறன்கண் தோன்றிய எள்ளல்பற்றி வந்த நகை. வாய்—கூர்மை. 'வாயம்பு மருமத் தெய்தல்' (கிட்கிந்தா. வாலி வதைப் படலம்-83) என முன்னரும் கூறினர். குரம்-குளம்பு. தலையையும் என்பதிலுள்ள உம்மை, போக்கி அறுத்து என்னும் வினைகளைத் தழுவி இறந்தது தழீஇயதாய் நின்றது. வாய்—தப்பாத என்ன லுமாம். (21)

## மகரக் கண்ணன் வானில் சென்று இடி, காற்று, நெருப்பு ஆகியவற்றை உண்டாகுதல்

8556. மார்பிடை நின்ற வாளி
வாயிடை வெயிலின் வாரும்
சோரியன் விசும்பி னூடோ
ரிமைப்பிடைத் தோன்ரு நின்ருன்
காருரு மேறுங் காற்றுங்
கனலியுங் கடைநாள் வையம்
பேர்வுறு கால மென்னப்
பெருக்கினன் றவத்திற் பெற்ருன்.

மார்பிடை நின்ற வாளி
வாயிடை வெயிலின் வாரும்
சோரியன், விசும்பி னூடுஓர்
இமைப்பிடைத் தோன்ரு நின்ருன்,

கார் உரும் ஏறும், காற்றும்,
கனலியும், கடைநாள் வையம்
பேர்வுறு காலம் என்ன,
பெருக்கினன், தவத்தின் பெற்றுன்.

பொ:- மார்பினிடத்து (இராமனுல் எய்யப்பட்டுத்) தைத்து நின்ற அம்பின் வாயிடத்தினின்றும் வெயிலைப் போலச் செந்நிற முடையதாக) ஒழுகும் இரத்தத்தையுடையவனுகிய மகரக் கண்ணன் ஓர் இமைப்பொழுதிற்குள் ஆகாயத்தினிடத்துத் தோன்றி நின்று, தவத்திஞல் சித்தி பெற்றவனுதலின், மேகத்தில் பொருந்திய பேரிடியும் காற்றும் நெருப்பும் என்ற இவற்றை, உலகம் நிலைபெயர்ந்து அழியும்படியான ஊழிக்காலம் என்று சொல்லுமாறு மிகுதியாக உண்டாக்கினுன்.

கு:- 'வெயிலின்' என்பதில் 'இன்' உவம உருபு. வார்தல்—ஒழுகுதல். சோரி ஒழுகும் மார்பை மார்பிடை ஒழுகும் சோரியன் எனக் கூறினுர். 'விசும்பினூடு' என்பதில் 'ஊடு' என்பது ஏழன் உருபு. 'விசும்பிடைத் தோன்ரு நின்ருன்' என்றதால் களத்தினின்றும் மறைந்தான் என்பது பெறப்பட்டது. 'தோன்ரு நின்ருன் என்பது முற்றெச்சம். பேர் உறு—பெயர்ச்சியடைகிற; என்றது அழிதலை உணர்த்தியது. வையம் பேர்வுறு கடைநாள் காலம் என்ன என இயைக்க. கடைநாள் காலம்—கடைநாளாகிய காலம்; ஊழிக்காலம். (22)

8557. உருமுறை யநந்த கோடி
யுதிர்ந்தன வூழி நாளின்
இருமுறை காற்றுச் சீறி
யெழுந்தது விழுந்த வெங்கும்
கருமுறை நிறைந்த மேகங்
கான்றன கல்லின் மாரி
பொருமுறை மயங்கிச் சுற்று
மிரியலிற் கவிகள் போன.

உரும்முறை அநந்த கோடி
உதிர்ந்தன; ஊழி நாளின்
இருமுறை காற்றுச் சீறி
எழுந்தது; விழுந்த எங்கும்

கருமுறை நிறைந்த மேகம்
கான்றன கல்லின் மாரி;
பொருமுறை மயங்கி, சுற்றும்
இரியலின் கவிகள் போன.

பொ:- (மகரக் கண்ணனது போரால்) இடிகள் வரிசையாக எண்ணில்லாத கோடி உதிர்ந்தன; ஊழிநாளைக் காட்டிலும் இரு மடங்கு காற்றுச் சீறி எழுந்தது. எவ்விடத்தும் (உள்ள பொருள்கள், நிலைதடுமாறி) விழுந்தன; கருமைத் தன்மை நிறைந்த மேகங்கள் கல் மழை பொழிந்தன; குரங்குகள் போர் செய்யும் தன்மையினின்றும் மயக்கமுற்றுச் சுற்றிலும் நிலை கெட்டு ஓடிப் போயின.

கு:- அநந்த கோடி உரும் உதிர்தலாவது இடி எங்கும் சிதறி விழுதல். இருமுறை—இருமடங்கு. எங்கும்—எல்லா இடங்களும்; ஈண்டு ஆகுபெயராய் எல்லா இடங்களிலும் உள்ள பொருள்களை உணர்த்தி நின்றது. மயங்கி—தலை தடுமாறி. இரியலின் போன எனக் கூட்டி 'இன்' சாரியையாகக் கொள்க. இரியல் போன—ஓடின. (23)

**கண்ணனுக்கு காற்று முதலியவற்றை உண்டாக்கும் வல்லமை எதனால் உண்டாயிற்று என்று இராமன் வீடணனைக் கேட்க, அவன் கூறுதல்**

8558. போயின திசை ளெங்கும்
புகையொடு நெருப்புப் போர்ப்பத்
தீயின மமையச் செல்லு
மாயமா மாரி சிந்த
ஆயிர கோடி மேலு
மவிந்தன கவிக ளையன்
மாயமோ வரமோ வென்றுன்
வீடணன் வணங்கிச் சொல்வான்,

போயின திசைகள் எங்கும்
புகையொடு நெருப்புப் போர்ப்ப,
தீ இனம் அமையச் செல்லும்
மாயமா மாரி சிந்த,

ஆயிர கோடி மேலும்
அவிந்தன கவிகள்; ஐயன்,
'மாயமோ? வரமோ?' என்ருன்;
வீடணன் வணங்கிச் சொல்வான்;

பொ :- குரங்குகள், (தாம்) ஓடின திக்குகளெல்லாம் புகையும் நெருப்பும் மூடிக்கொள்ளவும், மேகமும் நெருப்புத் தொகுதி பொருந்த பெருமழையை அழியும்படியாகப் பொழியவும், (அதனுல்) ஆயிரகோடிக்கும் மிகுதியாக மடிந்தன; (அதனைக் கண்ட) இராமன், (வீடணனை நோக்கி) 'இது மாயத்தினுல் நிகழ்ந்ததா? (அன்றி) வரத்தின் பயனுல் உண்டானதா?' என்று கேட்டான். (அதைக் கேட்ட) வீடணன் வணங்கிப் பின் வருமாறு சொல்லலானுன் :

கு :- 'தீயினம் அமையச் செல்லும் மாயமா மாரி சிந்த' என்றதால் நெருப்பு மழை பொழிந்தது குறிக்கப்பட்டது. 'தீ இனம்' என்பதில் 'இனம்' மிகுதியைக் குறித்தது. நெருப்பும் புகையும் கவிந்துகொண்டு குரங்குகளை அழித்ததேயன்றி, மேகமும் நெருப்பு மழை பொழிந்து அழித்ததென்பார், 'செல்லும்' என உம்மை கொடுத்துக் கூறினுர். செல்—மேகம் 'மாய' என்பதைச் 'சிந்த' என்பதனோடு இயைக்க. 'ஆயிர கோடி மேலும்' என்றதனுல் எண்ணிறந்த என்பது பெறப்பட்டது. (24)

8559. நோற்றுடைத் தவத்தி னேன்மை
நோக்கினர் கருணை நோக்கிக்
காற்றுடைச் செல்வன் ருனு
மழையுடைக் கடவு டானும்
மாற்றல ரீந்த தெய்வ
வரத்தினுல் வந்த தென்ருன்
நூற்றிதழ்க் கமலக் கண்ண
னகற்றுவெ ஞெடியி னென்ருன்.

'நோற்றுடைத் தவத்தின் நோன்மை
நோக்கினர், கருணை நோக்கி,
காற்றுடைச் செல்வன் தானும்,
மழையுடைக் கடவுள் தானும்,

மாற்றலர், ஈந்த தெய்வ
வரத்தினுல் வந்தது' என்ருன்;
நூற்று இதழ்க்கமலக் கண்ணன்,
'அகற்றுவென் நொடியின்' என்ருன்.

பொ :- 'வாயுதேவனும் வருணனும் (மகரக் கண்ணன்) செய்த தவத்தினது வலிமையைப் பார்த்துத் (தம்முடைய மாருத) அருளின் தன்மையைச் சிந்தித்துப் பார்த்து, (அவன் கேட்ட வரத்தை) மறுக்க முடியாதவராகிக் கொடுத்த தெய்வத்தன்மையுடைய வரத்திஞல் இது நிகழ்ந்துள்ளது' என்ருன், (வீடணன்); (அதைக் கேட்டு) நூறு இதழ்களையுடைய தாமரைப் பூப்போலும் கண்களையுடைய இராமன் 'ஒரு நொடிப் பொழுதில் (இவற்றைப்) போக்குவேன்' என்ருன்.

கு :- தவத்தின் நோன்மை என்பது உறுதியாக இருந்து தவம் செய்தல். 'நோக்கினர்' என்பது முற்றெச்சம். யாவராயினும் தம்மை நோக்கி வழிபட்டார்க்கு அருள் செய்தலாகிய தம்முடைய கருணையைச் சிந்தித்துப் பார்த்து என்பான், 'கருணை நோக்கி' என்ருன். மாற்றுதல்—மறுத்தல். 'வந்தது' என்பது சாதி ஒருமை. நொடி—கை நொடிக்கும் கால அளவு. (25)

## மகரக் கண்ணன் தவ வலிமையாற் செய்த போர் அழிதல்

8560. காலவன் படையுந் தெய்வக்
கடலவன் படையுங் காலக்
கோலவன் சிலையிற் கோத்துக்
கொடுங்கணை யோடுங் கூட்டி
மேலவன் றுரத்த லோடும்
விசும்பினின் றெரிந்து வெய்தின்
மாலிருங் கடலின் வீழ்ந்து
மறைந்தன மழையுங் காற்றும்.

காலவன் படையும், தெய்வக்
கடலவன் படையும், கால
கோலவன் சிலையில் கோத்து,
கொடுங் கணையோடும் கூட்டி,

மேலவன் துரத்தலோடும், விசும்பின்
நின்று எரிந்து, வெய்தின்
மால்இருங் கடலின் வீழ்ந்து
மறைந்தன மழையும் காற்றும்.

பொ:- மேன்மையை உடையவனாகிய இராமன், தெய்வத் தன்மையுடைய வாயுப் படையும் வருணப் படையும் வெளிப்படும்படி, (அவற்றைக்) கொடிய அம்புகளோடு சேர்த்து, அழகிய வலிய வில்லிலே கோத்துச் செலுத்தின அளவிலே, (மகரக் கண்ணனால் ஏவப்பட்ட) மழையும் காற்றும் விரைவாக வானத்திலிருந்து எரிந்து கொண்டு, மிகப் பெரிய கடலிலே வீழ்ந்து அழிந்து போயின.

கு:- இராமன் வாயுப் படையையும் வருணப் படையையும் அம்புகளோடு சேர்த்து, வில்லிற் கோத்து எய்தான் என்பது முதல் இரண்டடிகளாற் போந்த பொருள். காலவன்—காற்று. கடலவன்—வருணன். கால—வெளிப்பட. கணையோடும் கூட்டி, கோத்து, துரத்தலோடும் என இயைக்க. 'வெய்து' என்பது விரைவுக் குறிப்பு. மழையும் காற்றும் கூறியதால் இனம்பற்றி இடியும் மறைந்ததாகக் கொள்க. அவைகள் எரிந்து கொண்டிருந்தபடியே விழுந்து மறைந்தன என்பது கருத்து. மறைதல்—அழிதல். (26)

## மகரக் கண்ணனது மாயப் போர்

8561. அத்துணை யரக்க னோக்கி
யந்தர வான மெல்லாம்
ஒத்தன வுருவே யாக்கித்
தான்மறைந் தொளித்துச் சூலப்
பத்திகள் கோடி கோடி
பரப்பின னதனைப் பார்த்த
வித்தக னொருவன் செய்த
வினையமென் றினைய சொன்னான்.

அத்துணை, அரக்கன் நோக்கி,
அந்தர வானம் எல்லாம்
ஒத்தன உருவே ஆக்கி,
தான்மறைந்து ஒளித்து, சூலப்

பத்திகள் கோடி கோடி
பரப்பினன்; அதனைப் பார்த்த
வித்தகன், 'ஒருவன் செய்த
வினையம்'! என்றுஇனைய சொன்னான்;

பொ :- அவ்வளவில், மகரக் கண்ணன் பார்த்து, ஆகாயமெல்லாம் தன்னை ஒத்தனவாகிய உருவங்களை (மாயத்தால்) தோற்றுவித்துத் தன் உரு வெளிப்படாமல் மறைந்து பதுங்கிச் சூல வரிசைகளைக் கோடி கோடியாகப் பரப்பினான்; அதனைப் பார்த்த ஞானவடிவினனாகிய இராமன், 'ஒருவன் செய்த சூழ்ச்சி என்னே' என்று இப்படியாகச் சொன்னான் :

கு :- 'அத்துணை' என்றது மழையும் காற்றும் அழிந்த காலத்தை உணர்த்தியது. 'அந்தர வானம்' இருபெயரொட்டு. 'எல்லாம்' என்பது எங்கும் என்னும் இடப்பொருட்டு. வித்தகன்— சதுரப்பாடுடையவன். 'ஒருவன்' என்னும் படர்க்கைப் பெயர், ஈண்டு முன்னிலையாகப் போர் செய்யும் அவனைச் சுட்டியது. வினையம்—சூழ்ச்சி. (27)

## இராமன் மனம் வருந்துதல்

8562. மாயத்தால் வகுத்தான் யாண்டும்
வரம்பிலா வுருவந் தானெத்
தேயத்தா னென்ன வண்ணங்
கரந்தனன் றெறிரிந்தி லாதான்
காயத்தா லினைய னென்று
நினையலாங் கருத்த னல்லன்
தீயொத்தான் றிறத்தி னென்னை
செயலெனச் சிந்தை நொந்தான்.

'மாயத்தால் வகுத்தான் யாண்டும்
வரம்பிலா உருவம்; தான்எத்
தேயத்தான் என்ன வண்ணம்
கரந்தனன்; தெரிந்தி லாதான்,
காயத்தால் இனையன் என்று
நினையல்ஆம் கருத்தன் அல்லன்;

தீ ஒத்தான் திறத்தின் என்னை
செயல்?' எனச் சிந்தை நொந்தான்.

பொ :- '(மகரக் கண்ணன்) மாயத்தினுல் அளவில்லாத உருவத்தை எவ்விடத்தும் தோன்றும்படியாகச் செய்து, (தான்) எந்த இடத்தில் இருக்கின்ருன் என்று சொல்ல முடியாதபடி ஒளித்து விட்டான்; (அப்படி) ஒளிந்த விட்ட அவன், உடம்பினுல் இத்தன்மையை உடையவனென்று நினைக்கும் படியான நினைவுக்கு உட்பட்டவன் அல்லன்; தீயை ஒத்த கொடியவனுகிய அவனிடத்துச் செய்யக் கூடிய செயல் யாது?' என்று மனம் வருந்தினுன்.

கு :- 'வகுத்தான்' என்பது முற்றெச்சம். மாயத்தால் வரம்பிலா உருவம் யாண்டும் வகுத்தான் என இயைக்க. 'தேயம்' என்பது இடத்தை உணர்த்தியது. தெரிந்திலா தான்—இன்ன இடத்தில் இருக்கின்ருன் என்று தெரியாதபடி ஒளித்த அவன். அவன் உரு கண்ணுக்கு வெளிப்படாமையால் 'காயத்தால் இணையன்' என்று தெரிந்து கொள்ள முடியவில்லை என்ருன். கருத்து என்பது எண்ணம். (28)

இச் செய்யுளை யடுத்து 23, 26, 43 ஆம் எண்ணுள்ள ஏட்டுச் சுவடிகளில் பின்வருமாறு ஒரு மிகைப் பாடல் காணப்படுகின்றது.

8562.(a) இந்திரன் பகைஞன் போல
இவனுமோர் மாய வீரன்
றந்திரக் குரக்குச் சேனை
யுளதெலாந் தரையின் வீழ்த்தான்
எந்திர மாகிப் பார்த்த
விடமெலாந் தானே யானுன்
அந்தர மவனே டொப்பார்
ஆரென வமலன் சொன்னுன்.

மகரக் கண்ணன் மடிதல்

8563. அம்பின்வா யாறு சோரு
மரக்கன்ற னருளில் யாக்கை
உம்பரிற் பரப்பித் தான்வே
ஞெளித்தன னென்ன வோர்வான்

**செம்புனற் சுவடு நோக்கி**
**யிதுநெறி யென்று தேவர்**
**தம்பிரான் பகழி தூண்டத்**
**தலையற்றுத் தலத்த ஞனன்.**

அம்பின்வாய் ஆறு சோரும்
அரக்கன் தன்அருள் இல்யாக்கை
உம்பரில் பரப்பி, தான்வேறு
ஒளித்தனன், என்ன ஓர்வான்,
செம்புனல் சுவடு நோக்கி
''இது நெறி' என்றுதேவர்
தம்பிரான் பகழி தூண்ட,
தலைஅற்று தலத்தன் ஆனன்.

பொ :- (தன்னுடைய) அம்புபட்ட இடத்திலிருந்து (இரத்தம்) ஆறுபோல ஒழுகும்படியான கருணைக் குணமில்லாத மகரக் கண்ணன், தனது உடம்பை ஆகாயத்தில் பலவாகத் தோற்றச் செய்து, தான் (அவற்றில்) வேருக ஒளித்திருக்கின்ருன் என்று உணர்ந்து, தேவர்களுக்குத் தலைவனுகிய இராமன், இரத்தம் வழியும் படியான அடையாளத்தைப் பார்த்து, 'இதுவே (அவன்மீது அம்பு தைத்தற்கு) வழி' என்று தன் அம்பைச் செலுத்த (அதனுல், மகரக் கண்ணன்) தலை துணிக்கப்பட்டுப் பூமியில் விழுந்தான்.

கு :- 'அம்பின்வாய் ஆறு சோர்தல்' என்பதனுல் இரத்தம் என்பது பெறப்பட்டது. 'அருளில் அரக்கண்' என இயைக்க. 'ஓர்வான்' என்பது முற்றெச்சம். முன்னர்ச் சிந்தை நொந்தவன் இப்பொழுது ஓர்ந்தான் என்றபடி. சுவடு—அடையாளம். தேவர் தம்பிரான்—தேவர்களுக்குத் தலைவனன இராமன். சிந்தை நொந் தான் (28) ஓர்ந்து, சுவடு நோக்கி, தூண்ட, தலத்தனுனன் என மேற்பாட்டொடு இயைத்துப் பொருள் கொள்க. (29)

### அரக்கன் மாய, மாயையும் அகலுதல்

8564. அயில்படைத் துருமிற் செல்லு
மப் பொடு மரக்கன் யாக்கை
புயல்படக் குருதி வீசிப்
படியிடைப் புரள்த லோடும்

**வெயில்கெடுத் திருளை யோட்டுங்**
**காலத்தின் விளைவி னோடும்**
**துயில்கெடக் கனவு மாய்ந்தா**
**லொத்தது சூழ்ந்த மாயை**

அயில்படைத்து உருமின் செல்லும்
அம்பொடும், அரக்கன் யாக்கை,
புயல்படக் குருதி வீசி,
படியிடைப் புரள்த லோடும்
வெயில்கெடுத்து இருளை ஓட்டும்
காலத்தின் விளைவி னோடும்
துயில்கெடக் கனவு மாய்ந்தா
லொத்தது — சூழ்ந்த மாயை.

பொ :- கூர்மையுடைத்தாய் இடியைப்போலச் செல்கின்ற இராமனது அம்புடன் மகரக் கண்ணனது உடல், மேகம் மழை பொழிவதுபோல இரத்தத்தைப் பொழிய விட்டுப் பூமியில் விழுந்து புரண்ட அளவில், (அவனால்) விளைவிக்கப்பட்ட மாயை, சூரியன் இருளைக் கெடுத்து ஓட்டும்படியான விடியற்காலத்தின் தோற்றத் தோடும் உறக்கம் கெட, (அவ்வுறக்கத்திற் கண்ட) கனவு (முற்றி லும் பொய்யாய்) அழிந்து போனதை ஒத்தது.

கு :- அம்பு நெருப்பை உமிழ்ந்து கொண்டு செல்லுதலின் ‘உருமிற் செல்லும்’ என்றார். ‘புயல்பட’ என்பதில் ‘பட’ என்பது உவம வாசகம். இருளைக் கெடுத்து என மாறிக் கூட்டுக. ‘காலத் தின் விளைவு’ என்றது இருள் நீங்கி ஒளி பெறுதலை. மாயை நீங்கிய தற்குப் பொழுது புலர்ந்த அளவில் உறக்கம் நீங்க, அவ்வுறக்கத்திற் கண்ட கனா அழிந்ததை உவமையாகக் கூறினார். (30)

இச் செய்யுளை யடுத்து 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது.

அரக்கன் மாய, மாயையும் அகலுதல்

8564. (a) மற்றவன் இறத்த லோடும்
மறைகளும் தேடிக் காணாக்
கொற்றவன் சரத்தின் மாரி
கடையுக மழையின் கொள்ளப்

பற்றியங் கரக்கர் தானை
வெள்ளமத் தனையும் பாரில்
அற்றவை யழிந்து சிந்த
அறுத்தொரு கணத்தில் மாய்த்தான்.

**நளன் குருதிக் கண்ணனோடு பொருது அவனை மாய்த்தல்**

8565. குருதியின் கண்ணன் வண்ணக்
கொடிநெடுந் தேரன் கோடைப்
பருதியி னடுவட் டோன்றும்
பசுஞ்சுடர் மேகப் பண்பன்
எரிகணை சிந்திக் காலி
னெய்தினான் றன்னோ டேற்றான்
விரிகடற் றட்டான் கொல்லன்
வெஞ்சினத் தச்சன் வெய்யோன்.

குருதியின் கண்ணன், வண்ணக்
கொடிநெடுந் தேரன், கோடைப்
பருதியின் நடுவண் தோன்றும்
பசுஞ்சுடர் மேகப் பண்பன்,
எரிகணை சிந்தி, காலின்
எய்தினான் தன்னோடு ஏற்றான் —
விரிகடல் தட்டான், கொல்லன்,
வெஞ்சினத் தச்சன், வெய்யோன்.

பொ:- குருதிக் கண்ணன், அழகிய கொடி கட்டப்பட்ட பெரிய தேரையுடையவனாய், கோடையை உண்டு பண்ணுகின்ற சூரியனது (ஒளியின்) நடுவிலே தோன்றுகின்ற பசிய ஒளியையுடைய மேகத்தின் தன்மையையுடையவனாய், நெருப்பை உமிழ்கின்ற அம்புகளை எய்துகொண்டு, காற்றைப் போல விரைந்து வந்தவனாகிய அவனோடு பரந்த கடலில் அணை கட்டியவனும், கொல்லும் தொழிலையுடையவனும், வெவ்விய கோபத்தால் பயமுறச் செய்பவனும் கொடியவனுமாகிய நளன் எதிர்த்தான்.

கு:- தேருக்குச் சூரியனது ஒளியும் குருதிக் கண்ணன் நிறத்திற்கு மேகமும் உவமை. 'காலின்' என்பதில் 'இன்' உவம உருபு.

இச் செய்யுளில் தட்டான், கொல்லன், தச்சன் எனச் சொல்லளவில் சாதிப் பெயர் வந்தமை காண்க. (31)

8566. அன்றவ னும வின்ணு
ணலங்கற்ருே ளிலங்க வாங்கி
ஒன்றல பகழி மாரி
யூழித்தீ யென்ன வுய்த்தான்
நின்றவ னெடிய தாங்கோர்
தருவினு லகல நீக்கிச்
சென்றனன் கரியின் வாரிக்
கெதிர்படர் சீய மன்னுன்.

அன்று, அவன் நாம வில்நாண்
அலங்கல் தோள்இலங்க வாங்கி
ஒன்று அலபகழி மாரி,
ஊழித்தீ என்ன உய்த்தான்.
நின்றவன், நெடியது ஆங்கோர்
தருவினுல் அகல நீக்கி,
சென்றனன்— கரியின் வாரிக்கு
எதிர்படர் சீயம் அன்னுன்.

பொ :- அப்பொழுது, குருதிக் கண்ணன் அச்சத்தைச் செய்யும் படியான வில்லில் பூட்டிய நாணை மாலையணிந்த தோள் விளங்கும் படியாக இழுத்து, பல அம்பு மழையை ஊழிக் காலத்துத் தீயைப் போல (நெருப்பு உமிழும்படியாக)ச் செலுத்தினுன்; அங்கே நின்றவ ணுகிய நளன், நெடியதாகிய ஒரு மரத்தினுல் (அந்த அம்புகளை) அப்பாற் செல்லும்படி நீக்கி, யானைக் கூடத்திற்கு எதிராகச் செல்லு கின்ற சிங்கத்தை ஒத்தவனுகிச் சென்ருன்.

கு :- நாமம்—அச்சம். தோள் இலங்க வாங்குதல் என்பது தோள் வரை இழுத்தலைக் குறித்தது. ஒன்று அல—ஒன்று அல்லாதது; பல என்றபடி. பகழியை மாரியாக உருவகித்தார்; சொரிதலை உணர்த்தற்கு. நின்றவன், தருவினுல் அகல நீக்கி, சீயத்தை ஒத்த வனுகிச் சென்றனன் என்க. மரத்தைச் சுழற்றுதலினுல் அம்புகள் விலகின. வாரி—யானைக் கூடம். (32)

8567. கரத்தினிற் றிரியா நின்ற
மரத்தினைக் கண்ட மாகச்
சரத்தினிற் றுணித்து வீழ்த்த
தறுகணுன் றன்னை நோக்கி
உரத்தினைச் சுருக்கிப் பாரி
ஞெடுங்கினுன் றன்னை யொப்பான்
சிரத்தினிற் குதித்தான் றேவர்
திசைமுகங் கிழிய வார்த்தார்.

கரத்தினில் திரியா நின்ற
மரத்தினைக் கண்ட மாகச்
சரத்தினின் துணித்து வீழ்த்த
தறுகணுன் தன்னை நோக்கி,
உரத்தினைச் சுருக்கிப் பாரின்
ஒடுங்கினுன், தன்னை ஒப்பான்
சிரத்தினில் குதித்தான்; தேவர்
திசைமுகம் கிழிய ஆர்த்தார்.

பொ :- (தன்னுடைய) கையிலே சுழல்கின்ற மரத்தைத் துண்டமாக அம்பினுல் வெட்டி விழச் செய்த அஞ்சாமையுடைய குருதிக் கண்ணனைப் பார்த்துத் தன்னைத்தானே ஒப்பவனுன நளன், மார்பைச் சுருக்கிப் பூமியில் ஒடுங்கினுன் போலப் பதுங்கி அவனுடைய தலையில் குதித்தான்; (அதனைப் பார்த்துத்) தேவர்களெல்லாம் திசையிடங்களெல்லாம் பிளவுபடும்படியாக ஆரவாரித்தார்கள்.

கு :- நளன் கையில் சுழன்று கொண்டிருந்த மரத்தினைக் குருதிக் கண்ணன் அம்பினுல் துணித்து வீழ்த்தான். அத்தகைய குருதிக் கண்ணன் தலையில் நளன் பாய்ந்தான். அதுகண்டு தேவர் ஆர்த்தார் என்க. (33)

8568. எரியும்வெங் குன்றி னும்ப
ரிந்திர வில்லிட் டென்னப்
பெரியவன் றலைமே னின்ற
பேரெழி லாளன் சோரி

சொரிய வன்கண்ணின் மூக்கிற்
செவிகளின் மூளை தூங்க
நெரியவன் றலையைக் காலா
லுதைத்துமா நிலத்தி லிட்டான்.

எரியும்வெங் குன்றின் உம்பர்,
இந்திர வில் இட்டென்ன,
பெரியவன் தலைமேல் நின்ற
பேர் எழிலாளன், சோரி
சொரிய, வன்கண்ணின் மூக்கின்
செவிகளின் மூளை தூங்க,
நெரிய,வன் தலையைக் காலால்
உதைத்து, மாநிலத்தில் இட்டான்.

பொ:- நெருப்பு எரிகின்ற கொடிய மலையின்மேலே இந்திரவில் தோன்றினாற்போலப் பெருந்தோற்றமுள்ள குருதிக் கண்ணனது தலையின்மேல் நின்ற பெரிய அழகுடையனாகிய நளன், (குருதிக் கண்ணனது) வலிய கண்களிலும் மூக்குகளிலும் செவிகளிலும் இரத்தம் சொரியவும், மூளை வழியவும், வலிய தலையை நெரியும்படியாகக் காலால் உதைத்து (அவனைப்) பூமியில் தள்ளினான்.

கு:- குருதிக் கண்ணனது தலைமேல் நளன் இருந்த தோற்றம் மலைமேல் இந்திரவில் இட்டாற் போன்றது. தலையில் உதைத்தலும் கண்மூக்கு செவி ஆகிய துவாரங்களின் வழியாக இரத்தம் பெருகிற்று; தலை நெரிந்ததனால் மூளை ஒழுகிற்று; எனவே, குருதிக் கண்ணன் இறந்துபட்டமை பெறப்பட்டது. (34)

### சிங்கனைப் பனசன் கொல்லுதல்

8569. அங்கவ னுலத்த லோடு
மழற்கொழுந் தொழுகுங் கண்ணன்
சிங்கன்வெங் கணையன் வில்லன்
ஞரணி தேரின் மேலான்
எங்கடா போதி யென்னு
வெய்தின னெதிரி லாத
பங்கமின் மேரு வாற்றற்
பனசன்வந் திடையிற் பாய்ந்தான்.

அங்குஅவன் உலத்த லோடும்,
அழற்கொழுந்து ஒழுகும் கண்ணன்,
சிங்கன், வெங்கணையன், வில்லன்,
தார்அணி தேரின் மேலான்
'எங்குஅடா போதி?' என்று,
எய்தினன்; எதிர் இலாத
பங்கம்இல் மேரு ஆற்றல்,
பனசன்வந்து, இடையில் பாய்ந்தான்.

பொ:- குருதிக் கண்ணன் இறந்த அளவில், சிங்கன் என்பவன் நெருப்பு உமிழும் கண்களையுடையவனாய், கொடிய அம்பையுடைய வனும் வில்லையுடையவனும் சிறுமணிகள் கட்டிய தேரின்மேல் ஏறியவனுமாகி, (நளனைப் பார்த்து) 'எங்கடா போகிறாய்?' என்று சொல்லிக்கொண்டே வந்தான்; (அதைக் கண்டு), கெடுதலில்லாத மேருவைப் போன்ற ஆற்றலையுடைய ஒப்பில்லாத பனசன் என்பவன் நடுவிலே வந்து குதித்தான்.

கு:- அங்கு, அசை. உலத்தல் - இறத்தல். அழற்கொழுந்து' நெருப்பு. மேலான் எய்தினன் எனக் கூட்டுக, 'எங்கடா' போதி- என்றது அதட்டல் வார்த்தை. எதிரிலாத பனசன், ஆற்றல் பனசன் எனத் தனித்தனி இயைக்க. இடையில் வந்து பாய்ந்தான் என்க. 'இடையில்' என்பதற்கு அந்தச் சமயத்தில் எனப் பொருள் கொள்ளு தலும் ஒன்று. (35)

8570. பாய்ந்தவன் றோளின் மார்பின்
பல்லங்க ணல்ல பண்போ
டாய்ந்தன வசனி போல
வையிரண் டழுந்த வெய்தான்
காய்ந்தனன் கனலி நெய்யாற்
கனன்றது போலக் காந்தி
ஏய்ந்தெழு தேரி னோடு
மிமைப்பிடை யெடுத்துக் கொண்டான்.

பாய்ந்தவன் தோளில், மார்பில்,
பல்லங்கள் நல்ல பண்போடு
ஆய்ந்தன, அசனி போல,
ஐ - இரண்டு அழுந்த எய்தான்;

காய்ந்தனன், கனலி நெய்யால்
கனன்றது போலக் காந்தி;
ஏய்த்து எழு தேரினோடும்,
இமைப்பிடை எடுத்துக் கொண்டான்.

பொ :- அப்படிக் குதித்த பனசனது தோள்களிலும் மார்பிலும் நல்ல தகுதியோடு ஆராய்ந்தெடுத்தனவாகிய பத்து அம்புகளை இடியைப் போல அழுந்தும்படியாக (ச் சிங்கன்) எய்தான்; (அதைப் பார்த்துப் பனசன்) கோபித்து, நெருப்பு நெய்யால் சுடர்விட்டு எரிவது போலக் கொதித்து (ச் சிங்கனைப்) பொருந்தி ஊர்ந்து வருகின்ற தேரோடும் ஓரிமைப்பிற்குள் (கையினால்) தூக்கினான்.

கு :- தோள்களிலும் மார்பிலும் என உம்மை விரிக்க. பல்லம்- அம்பு. ஆய்தல் - ஆராய்தல்; தேர்ந்தெடுத்தல். இடிபோல எய்தான் என்றது இடிபோலக் கொடுமையைச் செய்யும்படியாக எய்தான் என்றபடி. 'காய்ந்தனன்' என்பது முற்றெச்சம். காந்தி— மனம் கொதித்தெழுந்து. (36)

**8571. தேரொடு மெடுத்த லோடு
நிலத்திடைக் குதித்த செங்கண்
மேருவிற் றோற்றத் தான்ற
னுச்சிமே லதனை வீசப்
பாரிடை விழுத லோடுந்
தானவ னும்பர் பாயச்
சோரியு முயிருஞ் சோரத்
துகைத்தனன் வயிரத் தோளான்.**

தேரொடும் எடுத்தலோடு,
நிலத்திடைக் குதித்த செங்கண்
மேருவின் தோற்றத்தான் தன்
உச்சிமேல் அதனை வீச,
பாரிடை விழுதலோடும்,
தானவன் உம்பர் பாய,
சோரியும் உயிரும் சோர,
துகைத்தனன் வயிரத் தோளான்.

பொ :- (பனசன் சிங்கனைத்) தேரொடு தூக்கினவுடனே, தேரினின்றும் பூமியிலே குதித்த சிவந்த கண்களையும் மேருமலை

போன்ற வடிவத்தினையுமுடைய சிங்கனது தலையின்மேல், வலிய தோளையுடைய பனசன் தேரை எறிய, (சிங்கன் அது பட்டுப்) பூமியில் விழுந்ததும், அரக்கனாகிய அந்தச் சிங்கனது உயிர் துறக்க உலகிற்கு விரைந்து செல்ல, இரத்தமும் உயிரும் சோரும்படியாகப் பனசன் (அவனது உடம்பினை) மிதித்து உழக்கினான்.

கு :- கண்களையும் தோற்றத்தையும் என உம்மை விரிக்க. 'மேருவின்' என்பதில் 'இன்' உவம உருபு. தானவன் - அரக்கன்; ஈண்டுச் சிங்கனைக் குறித்து நின்றது. போரில் இறந்த வீரர் வீர சுவர்க்கம் அடைவர் என்னும் முறை விளங்க 'உம்பர் பாய' என்றார். துகைத்தல் - பல கால் மிதித்தல். (37)

இச் செய்யுளை யடுத்து, 52 ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகின்றது.

8571. a. மடிந்தனன் சிங்க னென்னும்
மறந்தரு வயிரத் தோளான்
தொடர்ந்தன ரரக்கர் பின்னும்
தொடர்ந்தவர் தம்மை யெல்லாம்
கடந்தனர் கவியின் வீரர்
களத்திடைக் கணத்தில் மாய்த்தார்
நெடுந்திரைப் பரவை மீது
நிறைந்தது குருதி நீத்தம்.

### போர்ச் செய்தியை இராவணனுக்கு உரைக்கத் தூதர் செல்லுதல்

8572. தாரதல வேந்தன் மைந்தர்
சரத்தினுங் கவியின் றானை
மராமர மலையென் றின்ன
வழங்கவும் வளைந்த தானை
பராவரும் வெள்ளம் பத்தும்
பட்டன பட்டி லதார்
இராவணன் றூதர் போனார்
படைக்கல மெடுத்தி லாதார்.

தராதல வேந்தன் மைந்தர்
சரத்தினும், கவியின் தானை
மராமரம், மலை, என்று இன்ன
வழங்கவும், வளைந்த தானை,
பராவ அரும் வெள்ளம்
பத்தும் பட்டன பட்டிலாதார்
இராவணன் தூதர் போனார்
படைக்கலம் எடுத்தி லாதார்.

பொ:- பூமிக்கு அரசனாகிய தசரதன் மைந்தராகிய இராம இலக்குவர் அம்புகளை விடுதலினாலும் குரக்குச் சேனைகள் மராமரம், மலை என்று இவைகளை எறிதலினாலும், மகரக் கண்ணனைச் சூழ்ந்து வந்த சொல்லுதற்கரிய பத்து வெள்ளம் சேனைகளும் இறந்துபட்டன. படைக்கலம் எடுக்காதவராயும் (அதனால்) இறவாமல் நின்றவருமான இராவணன் தூதர்கள் (செய்தியை உரைக்க நகருக்குச்) சென்றார்கள்.

கு:- தரையாகிய தலம், தராதலம். பராவுதல் - சொல்லுதல். மகரக் கண்ணனுடைய சேனை ஐந்து வெள்ளம் எனவும், அரசனால் அனுப்பப்பட்ட சேனை ஐந்து வெள்ளம் எனவும் மேல் 'தன்னுடைச் சேனை' (6) என்னும் செய்யுளில் கூறியதனை ஈண்டு அநுவதித்தார். படைக்கலம் இல்லாதவரைக் கொல்லுதல் போர் முறையன்று என்பதனை விளக்கப் 'படைக்கலம் எடுத்திலாதார் போனார்' என்றார். இதனால் அறப்போர் நிகழ்ச்சி பெறப்பட்டது. (38)

# 21. பிரமாத்திரப் படலம்

## முன்னுரை

இந்திரசித்து, இலக்குவன்மேற் பிரமனது படைக்கலத்தைச் செலுத்திய நிகழ்ச்சியை விரித்துரைக்கும் படலமாதலின் இது, பிர மாத்திரப் படலம் என்னும் பெயர்த்தாயிற்று. இப் படலத்தில் அமைந்துள்ள செய்யுட்கள் 231.

## படலப் பொருட் சுருக்கம்

மகரக் கண்ணன் இறந்த செய்தியைத் தூதர்கள் இராவணனிடம் சென்று தெரிவித்தனர். இராவணன், 'என் மகன் இந்திரசித்தை அழைத்து வம்மின்' எனப் பணித்தான். தூதர்கள் வாயிலாகப் போர்க்கள நிகழ்ச்சியைக் கேட்டறிந்த இந்திரசித்து, தந்தையை விரைந்து அணுகித் தேறுதல்கூறி வணங்கினுன். வணங்கி நால் வகைச் சேனைகள் சூழப் போர்க்களம் நோக்கிச் சென்ருன். அரக்கரது சேனை வெள்ளம் செல்லுதலால் பூமியிலிருந்து மேலெழுந்த துகள்கள் வானுலகளவும் மேற்சென்று வானவர் மகளிரின் இமையாக் கண் களிற் படிந்து கடல்போலும் கண்ணீர்ப் பெருக்கினைத் தோற்று வித்தன. ஆயிர கோடித் தேர்களின் நடுவே செல்லும் இந்திரசித்து, கோள்களின் நடுவே செல்லும் கதிரவனையொத்துத் தோன்றினுன். அவன், தன்னுடைய சேனைகளை அன்றிற் பறவையின் உருவம் அமைய அணிவகுத்து நிறுத்தித் தன் வில்லின் நாணெலியெழுப்பி ஆரவாரித்தான். அவ் வொலியினைச் செவிமடுத்த வானர சேனைகள் வெருவி ஓடின. அரக்கர் சேனைகள் ஆரவாரித்து மேற்சென்று நெருங்கின. அந் நிலையில் அனுமன் தோளின்மேல் இராமபிரானும் அங்கதன் தோளின்மேல் இலக்குவனும் அமர்ந்து போருக்குப் புறப் பட்டனர். தேவர்கள் மலர்மழை பொழிந்து வாழ்த்தினர். அரக் கருடைய தெய்வப் படைகள் வானரர்களாற் பொறுத்தற்கரிய ஆற்றல் வாய்ந்தன என்பதனை எண்ணிய இராமன், நீலன் முதலிய வானரத் தலைவர்களைத் தனக்கும் தம்பிக்கும் பின் வரிசையில் நிற்கு மாறு பணித்தான்.

வில் வீரராகிய இராம இலக்குவர் இருவரும் அரக்கருடைய நால் வகைச் சேனைகளின் மேலும் அம்புமழை பொழிந்தனர். அவரது விற்றொழில் வன்மையினை இந்திரசித்து வியந்து நோக்கினான். தன்னுடன் வந்த சேனைகள் பலவாறு அழிவுற்ற அவல நிகழ்ச்சிகளைக் கண்ணுற்றான். இராம, இலக்குவர் எய்த அம்புகளால் அரக்கரிற் பெரும்பாலோர் மாண்டொழிந்தனர். அனுமன் தோள்கொட்டி ஆரவாரித்தான். எஞ்சியுள்ள அரக்கர்கள் அஞ்சி நடுங்கினர். இந்திரசித்து, அஞ்சிய அரக்கர்களைக் கடிந்துரைத்துத் தான் ஒருவனாகவே இராம இலக்குவர்மேற் போருக்கு எழுந்தான். உடன்வந்த தேர்ப் படைகள் நிலமும் திசைகளும் அதிரக் கிளர்ந்தெழுந்தன.

இலக்குவன், இராமனை வணங்கி நின்று வஞ்சனையில் வல்ல இந்திரசித்தின் தலையினைத் தானே அம்பினால் வீழ்த்துவதாக வஞ்சினங் கூறினான். அதுகண்டு அமரர் ஆராவரித்தனர். இராமன் இலக்குவனைப் பாராட்டினான். இலக்குவன் இராமனைத் தொழுது போர்க்கு எழுந்தான். அவனைச் சுமந்து செல்லும் அங்கதன் ஆரவாரித்தான். இராமனது சங்கம் முழங்கியது. அரக்க வீரர்கள் இலக்குவன்மேற் படைக்கலங்களை வீசினர். இலக்குவன் எய்த அம்புகளால் அரக்கர் படைக்கலங்கள் யாவும் துகளாயின. அரக்கர் சேனைகள் சிதைந்தழிவுற்றன. இலக்குவனுடன் சேர்ந்து இராமனும் அம்புகளைச் சொரிவதால், தன் சேனைகள் மடியத் தானும் தன் தேருமே யாகத் தனிமையுற்ற இந்திரசித்து, இராம இலக்குவரை நோக்கி, 'நீங்கள் இருவீரும் சேர்ந்து என்னுடன் பொருதிரோ? அன்றி ஒருவீர் ஒருவீராய் வந்து பொருதிரோ? அன்றி நும்முடைய சேனைகளுடன் வந்து பொருது மடிகின்றீர்களோ? இவற்றுள் நுமக்கு ஏற்றதொன்றைச் சொல்மின்' என வினவினான். அது கேட்ட இலக்குவன் 'யான் ஒருவனாகவே தனித்துப் பொருது உன்னைக் கொல்வதாக வஞ்சினஞ் செய்துள்ளேன்' என்றான். 'உன் தமையனுக்கு முன்னே உன்னைக் கொன்று நும்மிருவரது குருதி நீரால் என் தம்பிமாருக்கும் என் சிறிய தந்தைக்கும் இறுதிக்கடன் செய்வேன்' என்றான் இந்திரசித்து. அரக்கராகிய நும்மினத்தார்க்கெல்லாம் ஒருசேர இறுதிக்கடன் செய்தற்கு இங்கு உள்ளவன் வீடணனே. நீ உன் தந்தைக்குச் செய்தற்குரிய இறுதிக்கடனை உனக்கு உன் தந்தை செய்வான்' எனக் கூறினான் இலக்குவன்.

இந்திரசித்து வெகுண்டு அம்புமழையினை அளவின்றிப் பொழிந்தான். அமரர்கள் அஞ்சிக் கண்புதைத்து ஒடுங்கினர். இந்திரசித்து ஏவிய அம்புகளைத் தடுத்து விலக்கி அவனை எதிர்த்துச் சென்றான் இலக்குவன். பின்னின்ற இராமன் அறங்கருதி அம்புகளைச் சொரிந்திலன். இலக்குவன் கடும்போர் புரிந்தனன். தான்

ஏறிய தேர் அழியத் தனியனாய் நின்ற இந்திரசித்து, அங்கதன் முதலியோர்மேல் அளவற்ற அம்புகளைத் தூர்த்து வெற்றிச் சங்கினை ஊதினான். இலக்குவன், இந்திரசித்தின் கங்கணத்தையும் மார்பிற் கவசத்தையும் சிதைத்து வில்நாணொலிசெய்தான். இராமன் பணித்த வண்ணம் வானரவீரர்கள் அண்டங்குலைய ஆரவாரித்தனர். இந்திர சித்து விரைந்து விண்ணில் மறைந்தான். இலக்குவன் 'அவன் மேல் அயன்படை தொடுப்பேன்' என்றான். 'அப் படைக்கலம் அவ னொருவனோடு மட்டும் முடிவதன்று, உலக மூன்றையும் அழிக்கும்' என்று கூறி இராமன் தடுத்தான். உணர்வுடைத் தம்பியாகிய இலக்குவனும் அச் செயலைத் தவிர்ந்தான். மறைந்து நின்ற இந்திர சித்து அவர்களது கருத்துணர்ந்து தானே அவர்கள்மேல் தெய்வப் படையினை ஏவுவதாகத் துணிந்து அவ் விடத்தைவிட்டு விரைந்து நீங்கினான். அதனையுணராத தேவர்களும் வானரர்களும் ஆரவாரித் தனர்.

தோல்வியுற்ற இந்திரசித்து, ஒருவருமுணராதவாறு மறைந்து இலங்கையை அடைந்தனன். பிரமாத்திரத்தினைத் தானே முற் படத் தொடுப்பதாக எண்ணிச் சென்ற இந்திரசித்தின் எண்ணத்தை யுணராத இராம இலக்குவர் இருவரும் தமது போர்க்கோலத்தைக் களைந்தனர். அப்பொழுது கதிரவன் மறைய மாலைப்பொழுதாயிற்று. இராமன் வீடணனை நோக்கிச் சேனைகட்குரிய உணவினைத் தேடிக் கொணருமாறு பணித்தான். வீடணன் ஏவலருடன் விரைந்து சென் றான். இராமன் தெய்வப் படைக்கலங்கட்குப் பூசனை புரிய எண்ணி, இலக்குவனைச் சேனைகளைக் காக்குமாறு பணித்துப் போர்க்களத்தை விட்டு வேறிடஞ் சென்றான்.

இந்திரசித்து இராவணனைக்கண்டு போரில் நிகழ்ந்தவற்றை எடுத்துரைத்தான். இராவணன், 'இனிச் செய்தற்குரியது யாது?' என வினவினான். 'ஆற்றல் மிக்க போர் வீரராகிய இராம இலக்குவர் உணராதவாறு மறைந்து நின்று அவர்மேற் பிரமாத்திரத்தை முற் படச் செலுத்திக் கொல்லுதலே இனிச் செய்யத் தகுவது' என்றான் இந்திரசித்து. இராவணன், மகோதரனை நோக்கி, 'நீ படையுடன் முந்தச்சென்று மாயப்போர் புரிவாயாக' எனப் பணித்தான். அது கேட்டு மகிழ்ச்சியுற்ற மகோதரன் நூறுவெள்ளம் சேனை உடன் வரப் போர்க்களத்திற் புக்கான். அரக்கர்க்கும் வானரர்க்கு மிடையே பெரும் போர் நிகழ்ந்தது. இறந்த வானரர்கள் வானவ ராகி அரம்பையர் எதிர்கொள்ள வானுலகு புக்கனர். தூயோனா கிய இலக்குவன் எய்த அம்புகள்பட்டு இறந்த இரக்கமற்ற அரக் கர்களும் தேவர்களாய் அமருலகு புக்கனர். இலக்குவன் போர்க்கள மெங்குந் திரிந்து அம்புமழை சொரிந்து அரக்கர் சேனைகளை அழித்

தான். அப்பொழுது அனுமன் அங்கு இறந்த கும்பகருணனால் விடப்பட்டுக் கிடந்த தண்டாயுதத்தைக் கையிற்கொண்டு அரக்கர் சேனைகளைப் புடைத்தழித்தான்.

சுக்கிரீவன், நீலன் முதலியோர் ஒருவர் ஒருவரைக் காணமுடியாத தூரத்தினராய் அரக்கர் சேனைகளின் நடுவே இருந்தனர். அனுமன் அகம்பன் என்னும் அரக்கனொடு கடும்போர் புரிந்து வெறுங்கையனாக்கி அவனைத் தனது இடக்கையாற் குத்தி வீழ்த்தினான். அதுகண்டு அரக்கர்கள் அஞ்சியோடினர். இலக்குவன் எய்த அம்புகளால் அரக்கர் சேனைகள் அழிவுற்றன. இலக்குவன் நின்ற இடம் இதுவென அறியாது அனுமன் கலக்கமுற்றான். மகோதரனது மாயையால் அரக்கர் சேனையிடையே நின்ற அங்கதன் முதலியோர் ஒருவரையொருவர் காணமுடியாத நிலையில் சேய்மையிடத்தாராய்த் தனிமையுற்றனர். இலக்குவனிருக்குமிடத்திற்கு இரண்டு மூன்று காத தூரத்திற்கு அண்மையில்சென்றான் அனுமன்; இலக்குவன் செய்த போரின் பலவகை அடையாளங்களைக் கண்ணுற்றான்; அவனது வில்நாணொலியைக் கேட்டு அலைகடலின் இருமடங்கு ஆரவாரித்தான். அப் பேரொலியைச் செவிமடுத்த இலக்குவன், 'அனுமன் வந்தான். அவன் வாயிலாக மற்றையோர் செய்திகளை அறியலாம்' என மகிழ்ந்து திரும்பிப் பார்ப்பதற்கு முன் அனுமன் அவனைப் பணிந்து நின்றான். இலக்குவன் அனுமனைத் தழுவிக்கொண்டு, 'ஐயனே! வானரவீரர்கள் எங்கேயுள்ளார்கள்? சுக்கிரீவன் எவ் விடத்தேயுள்ளான்? அங்கதன் உன்னைவிட்டுப் பிரிந்ததெவ்வாறு? நிகழ்ந்ததொன்றும் அறிந்திலேன். சொல்வாயாக' என வினவினான். 'தலைவ! போர்மேற் சென்ற அவர்கள் பகைவர்களை எதிர்த்துத் தொடர்ந்து போயின செய்தியைத் தவிரப் பிறிதொன்றும் அறியப் பெற்றிலேன். பகைவரால் உண்டாக்கப்பட்ட இம் மயக்கத்தினைத் தெய்வப் படைகளால் அழித்தொழித்தாலன்றி நின் அடியராகிய வானரவீரர்கள் நின்னை வந்தடையும் ஆற்றலுடையரல்லர்' எனக் கூறினான் அனுமன். அவனது மனக்கருத்துணர்ந்த இலக்குவன், இராமனை நினைந்து வாழ்த்தி, அரக்கர் சேனைகளின் மேற் பாசுபதாத்திரத்தைச் செலுத்தினான். அரக்கர் சேனை எரிந்தொழிந்தது. திசையெங்கும் மூடியிருந்த இருள்நீங்கியது. தேவர்களும் மனமயக்கந் தீர்ந்து நல்லுணர்வு பெற்றனர். மகோதரன் தான் செய்தமாயை நீங்கினமையால் வானில் மறைந்தான். வானர வீரர்கள் எல்லோரும் இலக்குவனை அணுகி மகிழ்ந்து கூத்தாடினர். இலக்குவன் தன் சேனைவீரர் யாவர்க்குந் தீதிலாமையறிந்து உளம் மகிழ்ந்தான்.

இந் நிகழ்ச்சியை அரக்கர் தூதர் சென்று இராவணனுக்கும் இந்திரசித்திற்கும் எடுத்துரைத்தனர். பகைவர்மேற் பிரமாத்

திரத்தை ஏவுவதற்கு இதுதான் ஏற்றகாலம் என எண்ணிய இந்திர சித்து, ஆலமரம் ஒன்றையடைந்து முறைப்படி வேள்வி செய்தான். அவ் வேள்வி நிறைவேறிய நிலையில் அங்குளதாகிய அறிகுறியினால் தனக்கு வெற்றிகிடைத்தல் உறுதியெனவுணர்ந்து தேவர் முதலி யோர் அறியாதபடி பிரமாத்திரத்துடன் விசும்பிற் சென்று மறைந் திருந்தான். அவனது வரவினையுணர்ந்த மகோதரன் மாயையினால் இந்திரனுருவங் கொண்டு வெள்ளையானையில் அமர்ந்து தேவர் முனி வர் முதலியோர் தனக்குத் துணையாய் உடன்வர, வானர சேனையை அழிக்கத் தொடங்கினான். அதுகண்டு வானர வீரர் திகைப்புற்றனர். இலக்குவன் அனுமனைப் பார்த்து, 'முனிவர் வானவர் முதலியோர் நம்மை வெகுண்டு வருதற்குக் காரணம் யாது'? என வினவினான். அந் நிலையில் மறைந்து நின்ற இந்திரசித்து பிரமாத்திரத்தை இலக்குவன்மேல் ஏவினான். ஒளிமிக்க அம்புகள் இமைப்பொழுதுக் குள் இலக்குவன் மேனியில் தைத்து ஊன்றின. இலக்குவன் செய லற்றுத் தளர்த்து வீழ்ந்தான். 'இந்திரனாகி வந்தவனை அந்தரத்தில் ஏற்றுவேன்' என எழுந்த அனுமன், பிரமாத்திரத்தால் தாக்கப்பட்டு நினைவும் செய்கையும் மறந்துபோய்த் தரையிற் சாய்ந்தான். சுக்கிரீவன், அங்கதன், சாம்பன், நீலன், இடபன், பனசன், குமுதன், நளன், மயிந்தன் முதலிய வானரர்கள் அனைவரும் அப் படைக் கலத்தால் தாக்குண்டு உயிரொடுங்கிச் சாய்ந்தனர். வானரங்கள் யாவும் தரையில் தள்ளப்பட்டு முளையடித்துப் பிணித்தவற்றை யொத்து இறந்து கிடந்தன.

தமது உடம்பினைத் துறந்து வானுலகிற் சென்ற வானர வீரர் களைத் தேவர்கள் எதிர்கொண்டு அன்போடு உபசரித்து மீளவும் மண்ணுலகிற் செல்லுமாறு வற்புறுத்தி வேண்டிக் கொண்டனர்.

'வானரக் குழுவுடன் இலக்குவன் இறந்து போயினன்; இராமன் இங்கு வந்திலன்' என எண்ணிய இந்திரசித்து, வெற்றிச் சங்கினை ஊதி இராவணனை அடைந்து போரில் நிகழ்ந்தவற்றைக் கூறினான். அது கேட்ட இராவணன், 'இராமன் இறந்திலனோ' என ஏக்கற்று வினவினான். 'இராமன் போர்க்களத்தைவிட்டு நெடுந்தூரம் சென்றான். போர்க்களத்தில் இருந்திருப்பானாயின் இலக்குவனையும் அனுமன் சுக்கிரீவன் அங்கதன் முதலியோரையும் நான் பிரமாத் திரத்தால் கொன்றொழிக்கவும் தன் வீரத்திறமை யெல்லாவற்றை யும் மறந்து தான் சும்மா இருந்திருப்பானோ? என மறுமொழி கூறினான் இந்திரசித்து. பின் இந்திரசித்தும் மகோதரனும் தத்தம் இருப்பிடம் அடைந்தனர். இராமன் தெய்வப் படைக்கலங்கட்கு வழிபாடு செய்துகொண்டு வேறோரிடத்தில் இருந்தான்.

படைக்கல பூசையினை நிறைவேற்றிய இராமன், அக்கினிப் படையினால் இருளையகற்றிப் போர்க்களத்தை நோக்கி நடந்தான்.

போர்க்களத்திற் புக்கவன், அங்கே பிரமாத்திரத்தினுல் உயிரொடுங்கிக் கிடக்கும்சுக்கிரீவன் முதலிய வானரத் தலைவர்களைத் தனித்தனி கண்டு வருந்தினுன்; அவர்களது பேரன்பின் திறத்தையும் தன்னை அடைந்தோரைப் பாதுகாக்கத் தவறிய தனது எளிமை நிலையையும் எண்ணி அழுது புலம்பினுன்; பிரமாத்திரத்தால் தாக்கப்பட்டுக் கிடக்கும் தம்பி இலக்குவனைக் கண்டு ஆற்ருெணுத் துயருற்று உணர்வு ஒடுங்கினுன். அங்கு அவனைத் தேற்றுவார் ஒருவருமில்லை. துணையாய் வந்தோர் அனைவரும் இறந்துபட்டனர். ஞான நாயகனுகிய இராமனது பெருந்துயர்கண்டு தேவர் முதலிய யாவரும் வருந்தினர்.

சிறிது உணர்வு வரப்பெற்ற இராமன் கண்விழித்துப் பார்த்தான்; தம்பி இலக்குவன் இறந்துவிட்டான் என்பதற்கேற்ற குறிப்பினைக் கண்டு கொண்டான்; அவனது பிரிவாற்ருமையாற் பலவாறு அழுது அரற்றினுன். பொறிகளும் புலன்களும் ஆற்றல் குன்றிய நிலையில் 'நாமும் உடன் இறந்தொழிவோம்' என்று, தம்பி இலக்குவனை மார்புடன் தழுவிக்கொண்டு, ஒன்றும் பேச இயலாதவனுகித் தன்னை மறந்து உறங்கிக் கிடந்தான்.

அவனது துயரநிலையைக் கண்ட தேவர்கள், கண்களில் அறைந்து கொண்டனர்; உளந் துணுக்குற்று அழுதனர்; இராமனது இறைமைத் தன்மையையும் அவதாரத்தின் உண்மையையும் எடுத்துரைத்துத் தம்மைக் காத்தருளும்படி வேண்டிக்கொண்டனர். இறைவனுகிய இராமன், தான் முன்பு துணிந்து மேற்கொண்ட அவதாரச் செய்கை காரணமாக, அன்பு மிகுதியால் இலக்குவனைப் பிரிந்து ஆற்றியிருக்க இயலாதவனுகி உயிர் உள்ளே ஒடுங்கினுன். அதுகண்ட அரக்கராகிய தூதர்கள் இராவணனை அடைந்து, 'வானரர் எல்லோரும் இறக்கத் தம்பியிறந்த தன்மைகண்டு இரங்கித் தமையனும் இறந்தொழிந்தான். உன்பகையும் முடிந்தது' எனக் கூறினர் என்பது இப் படலத்தின் பொருட் சுருக்கமாகும்.

## வான்மீகத்துடன் வேறுபடுதல்

இந்திரசித்து பிரமாத்திரம் ஏவிய இந் நிகழ்ச்சி வான்மீகத்தில் யுத்த காண்டம் 73ஆம் சருக்கத்தில் விரித்துரைக்கப்பட்டது. அதிகாயன் முதலியோர் இறந்தமை கேள்வியுற்ற இராவணன் அளவிலாத் துயருற்ருன். அப்பொழுது இந்திரசித்து தந்தையை வணங்கி 'எந்தையே! இலக்குவனையும் இராமனையும் என்னுடைய அம்புகளால் இறந்துகிடப்பவராய்க் காண்பாயாக' எனக் கூறித் தேர்மிதேறிப் போர்க்களத்திற்குப் புறப்பட்டான். ஆற்றல் மிக்க அரக்க வீரர்கள் நால்வகைச் சேனைகளுடன் கூடியவர்களாய்

அவனைப் பின்தொடர்ந்து சென்றனர். இந்திரசித்து போர்க்களத்தை அடைந்து தன் தேருக்கு நாற்புறமும் அரக்கர்களை நிறுத்தினான். அங்கு வேத விதிப்படி வேள்வி செய்தான். வேள்வியில் வெற்றிக்குரிய அறிகுறிகள் காணப்பட்டன. அங்கியங் கடவுள் வலஞ்சுழித்தெழுந்து அவிப்பாகத்தை நேரில் வாங்கிக் கொண்டார். படைக்கலப் பயிற்சியில் வல்ல இந்திரசித்து பிரமாத்திரத்தை அழைத்தான் ; தன் வில் தேர் முதலிய எல்லாவற்றையும் அபிமந்திரித்துக் கொண்டான்; தேர், படை முதலியவற்றுடன் வானில் மறைந்தான். அரக்கர் சேனைகள் முற்பட்டுச் சென்று வானரர்களைத் தாக்கின. மறைந்து நின்ற இந்திரசித்து பல படைக் கலங்களைச் சொரிந்து வானரர்களைத் தாக்கினான். வானரர் ஒருங்கு கூடி அவனை எதிர்த்தார்கள். அவன் அரக்கர்களை ஊக்கித் தன் அம்பு ஒன்றுக்கு ஐந்தும் ஏழுமாக வானரர்களின் உடம்புகளைப் பிளந்தான். கலங்காத வானர வீரர்கள் மலைகளையும் மரங்களையும் பெயர்த்து வீசினார்கள். இந்திரசித்து அவற்றையெல்லாம் தகர்த்து வானர வீரர்கள்மேல் அம்புகளைச் சொரிந்து அவர்களைச் செயலற்றவர்களாக ஆக்கினான். அவன் கட்டிலனாகாது மறைந்து நின்று தண்டம், வேல், சதக்கினி முதலிய பலவகைப் படைக் கலங்களையும் வானர சேனைகளின்மேற் சொரிந்தான். வானரர்கள் புண்பட்டு அரற்றி வீழ்ந்தனர். வானரப்படைத் தலைவர்கள் மேற் படைக்கலங்களைச் சொரிந்த இந்திரசித்து, இலக்குவன் மேலும் இராமன்மேலும் எல்லையற்ற அம்புகளைச் செலுத்தினான்! அவற்றாற் கலக்கமுறாத இராமன், இலக்குவனை நோக்கி, 'இலக்குவ! இந்திரசித்து என்னும் இவ் வரக்கன் பிரமாத்திரத்தைக் கைக் கொண்டு நமது சேனையையும் நம்மையும் துன்புறுத்துகின்றான். பிரமதேவர்பால் வரம்பெற்றுப் பேராற்றல் படைத்த இவன், மாயையால் தனது உடம்பினை மறைத்துக்கொண்டு நம் மேற் படைகளைச் செலுத்துதலால் நம்மால் குறிக்கொண்டு எய்து கொல்லுதற்கு அரிய நிலையில் உள்ளான். இவன் பெற்றுள்ள படையோ பிரமதேவருடையது. இப்பொழுது நீ என்னுடன் கூட அம்புகளின் தாக்குதலை மனங்கலங்காது பொறுத்துக் கொள்வாயாக. இவன் அம்புகளால் திசைகளை மறைத்தலால் வானரசேனை தலைவர்களை யிழந்து பொலிவிழந்து அழியும் நிலையிலுளது. இவ் அரக்கன் நம் இருவரையும் உணர்விழந்து தளர்ந்து விழும்படிசெய்து வெற்றி பெறும் நிலையிலுள்ளான் என்பது திண்ணம்' எனக் கூறினான்.

அப்பொழுது இராம இலக்குவர் இருவரும் இந்திரசித்தின் அம்புகளாற் பிணிக்கப்பட்டனர். இந்திரசித்து அதனைக்கண்டு தன் செயல் நிறைவேறியதாக எண்ணி ஆரவாரித்து இலங்கையை அடைந்தான். வானரசேனை மூர்ச்சையுற்றது. சுக்கிரீவன், நீலன்,

அங்கதன், சாம்பவான் முதலியவர்களும் உணர்விழந்து ஒடுங்கினர். அதுகண்டு அறிவிற் சிறந்த வீடணன், வானர வீரர்களைக் கண்டு தேற்றி 'அச்சமுறுதீர்கள்; வருந்துதற்கேற்ற காலம் இதுவன்று. இராம இலக்குவர் இருவரும் பிரமதேவரது வரத்தினைப் பெருமைப் படுத்தும் முறையில் இந்திரசித்தின் படைக்கலத்தாற் பிணிப் புற்று உணர்விழந்துள்ளார்கள் என்பது உறுதி' என ஆறுதல் கூறினான். பிரமதேவர் அளித்த வரத்தால் பிரமாத்திரத்தால் துன்புறாது தன்னுணர்வினுயுள்ள வீடணன் தீங்கின்றித் தன்னியல்பில் இருக்கும் அனுமனைக்கண்டு, இராம இலக்குவர் இருவரும் பிரமாத்திரத்திற்கு மதிப்பளிக்கும் முறையில் அதற்கு அடங்கியிருத்தலை எடுத்துரைத்தான். பின்னர் வீடணனும் அனு மனும்பிழைத்திருக்கின்ற வானர வீரர்களைக்கண்டு தேறுதல் கூறும் முறையில் கொள்ளியை விளக்காகக் கொண்டு போர்க்களமெங்குஞ் சென்றனர். சுக்கிரீவன், அங்கதன், நீலன் முதலியோர் பிரமாத்திரத்தால் தாக்குண்டு வீழ்ந்து கிடத்தலைக்கண்டு பின் சாம்பவந்தரைத் தேடிக் கண்டனர். சாம்பவந்தர் அறிவுறுத்திய வண்ணம் அனுமன் விரைந்துசென்று சஞ்சீவிமலையைக் கொணர்ந் தமையால், அதன் மணத்தை முகந்து வானரர் அனைவரும் இராம இலக்குவரும் மயக்கம் நீங்கித் தெளிவு பெற்றெழுந்தனர் என வான்மீகத்திற் கூறப்பட்டுளது.

கம்பர், இக் கதை நிகழ்ச்சியைச் சிறிது மாற்றியமைத்துள்ளார். இந்திரசித்து பிரமாத்திரம் ஏவியது மகரக் கண்ணனை வதைப்பதற்கு முன் என்று முதல் நூலிற் கூறியிருக்கவும், மகரக் கண்ணன் இறந்த பின்னரே இந்திரசித்துப் போருக்குச்சென்று இலக்குவனை எதிர்க் கலாற்றாது தோல்வியுற்று மாயையால் வானில் மறைந்து இராவணனை அடைந்து, பகைவர் அறியாதவாறு அவர்கள்மேல் பிரமாத்திரத்தைச் செலுத்தி அழிக்க எண்ணியிருப்பதாகச் சொல்ல அதற்கு இசைந்த இராவணன், மகோதரனை மாயப் போர் செய்யு மாறு சொல்லி அனுப்பியதாகவும், அந் நிலையில், வீடணன் வானர சேனைகட்கு உணவு கொணர்தற் பொருட்டு இராமனால் அனுப்பப் பட்டுப் போர்க்களத்தைவிட்டு நீங்க, இராமனும் படைக்கலங் களுக்குரிய வழிபாட்டினை நிகழ்த்தற் பொருட்டுப் போர்க்களத்தை விட்டு வேறிடம் சென்றதாகவும், அந் நிலையில் இலக்குவனும் ஏனைய வானர வீரர்களுமே இந்திரசித்து ஏவிய பிரமாத்திரத்திற்கு இலக்கானதாகவும், படைக்கல பூசையினை முடித்துத் திரும்பிய இராமன் போர்க்களத்தையடைந்து அங்கே சுக்கிரீவன் முதலிய நண்பர்களும் தன் அன்புடைத் தம்பி இலக்குவனும் உணர் வொடுங்கிக் கிடக்கும் அவலநிலையைக் கண்ணுற்று ஆற்றாது அழுது அரற்றிச் செயலிழந்து உணர்வற்றுக் கிடக்க, அதுகண்டு

வருந்திய தேவர்கள், இராமனது அவதார நோக்கத்தையும் இறைவனாகிய அவனது எளிமைத் திறத்தினையும் தமது அவல நிலையையும் எடுத்துக்கூறி ஆற்றாது வருந்தியதாகவும் இக் கதை நிகழ்ச்சியைக் கம்பர் இக் காப்பியத்தில் திருத்தமுற அமைத்துள்ளார். முற்றுணர்வுடைய முதல்வனாகிய இராமபிரான் பிரமாத்திரத்தால் தாக்கப்பட்டு அப் படைக்கலத்திற்கு மதிப்பளிக்கும் முறையில் உணர்வொடுங்கினான் என்று கூறுவதைக் காட்டிலும், துன்ப மனிதர் கருமமே புரிய அவதரித்த அவ் விறைவன், தன்தோழர்களும் ஆருயிர்த் தம்பியும் பிரமாத்திரத்தால் தாக்கப்பட்டு இறந்து கிடக்கும் அவலக்காட்சியைக் காணப் பொறாது அழுதரற்றி அவலித்து ஆவியுள்ளே ஒடுங்கினான் எனக் கூறுதல் அம் முதல்வனது அவதாரத்தின் பயனாய் இவ்வுலகில் நிலைபெற வேண்டிய அன்பு மிகுதியை இனிது புலப்படுத்தும் என எண்ணியே இந் நூலாசிரியர் இக் கதை நிகழ்ச்சியை இங்ஙனம் மாற்றியமைத்தார் எனக் கருத வேண்டியுளது.

இப் படலத்தில், இந்திரசித்து, இராம இலக்குவர் ஆகியோரது வில்வன்மையும், அனுமன் அகம்பன் என்போரது போர்த்திறனும், மகோதரனது மாயப் போர்த்திறமும், அரக்கர் வானரர் ஆகிய இரு திறப்படை வீரர்களின் தறுகண்மையும் நன்கு விரித்துரைக்கப் பட்டன. இருதிறப்படை வீரர்களும் தம்முட் பொருதிறந்தமையால் உளவாகிய பிணமலைகளும் குருதியாறுகளும் படைக்கலத் தொகுதிகளும், குறையுடலாய கவந்தங்களும், பிணந்தின்றும் பேய்களும் பூதங்களும் கணவரையிழந்து அவலமுற்று வருந்தும் அரக்கர் மகளிரும் நிரம்பியதாகப் புனைந்துரைக்கப்படும் போர்க்கள வருணனை படிப்போருள்ளத்திற் பாரின் விளைவுகளைச் சொல்லோவியஞ் செய்து காட்டும் முறையில் அமைந்துள்ளன.

# 21. பிரமாத்திரப் படலம்

**மகரக் கண்ணன் முதலியோர் இறந்த செய்தியைத் தூதர் கூறக் கேட்ட இராவணன், இந்திரசித்தை அழைத்து வரும்படி கூறுதல்**

8573. கரன்மகன் பட்ட வாறுங்
குருதியின் கண்ணன் காலிற்
சிரனெரிந் துக்க வாறுஞ்
சிங்கன தீறுஞ் சேனைப்
பரமினி யுலகுக் காகா
தென்பதும் பகரக் கேட்டான்
வரன்முறை துறந்தான் வல்லைத்
திருதிரென் மகனை யென்றான்.

கரன்மகன் பட்ட வாறும்,
குருதியின் கண்ணன் காலின்
சிரன்நெரிந்து உக்க வாறும்,
சிங்கனது ஈறும், சேனைப்
பரம்இனி உலகுக்கு ஆகாது
என்பதும், பகரக் கேட்டான்;
வரன்முறை துறந்தான், 'வல்லைத்
தருதிர் என்மகனை' என்றான்.

பொ ;- நீதி நெறியினை நீங்கியவனாகிய இராவணன், கரனுடைய புதல்வனாகிய மகரக் கண்ணன் இறந்த செய்தியையும், இரத்தாட்சன் என்னும் அரக்கன் (நளன் என்னும் வானர வீரனது) காலினால் (துகைக்கப்பட்டுத்) தலைநெரிந்து இறந்த நிகழ்ச்சியையும், (பனசன் என்னும் வானரவீரனால் நேர்ந்த) சிங்கனது முடிவினையும், பகைவர் சேனையின் சுமை இனி உலகில் (தம்மவரால்) தாங்கவொண்ணாதது என்பதனையும் (தூதர்கள் அறிந்து) சொல்லக் கேட்டவனாகி, 'என் புதல்வனாகிய இந்திரசித்தை விரைந்து அழைத்து வருவீராக' என (அத் தூதரை நோக்கிக்) கூறினான்.

கு :- வரன்முறை துறந்தான் என்றது, அறநெறியாகிய நீதி முறையினை நீங்கிப் பிறன்மனையாளை விரும்பி அறமல்லன செய் தொழுகும் தூர்த்தனாகிய இராவணனை வரன்முறை துறந்தான், கரன்மகன் பட்டவாறும், குருதியின் கண்ணன் சிரன் நெரிந்து உக்கவாறும், சிங்கனது ஈறும் (தூதர்) பகரக் கேட்டான்; 'என் மகனை வல்லைத் தருதிர்' என்றான் என இயைத்துரைக்க. வல்லை— விரைவு. (1)

## இந்திரசித்து இராவணன்பால் விரைந்து வருதல்

8574. கூயின னுந்தை யென்றார்
குன்றெனக் குவிந்த தோளான்
போயின நிருதர் யாரும்
பொன்றினர் போலு மென்றான்
ஏயின் பின்னை மீள்வார்
நீயலா தியாவ ரென்னா
மேயது சொன்னார் கேட்டான்
றாதைபால் விரைவின் வந்தான்.

'கூயினன், நுந்தை' என்றார்;
குன்றுஎனக் குவிந்த தோளான்,
'போயின நிருதர் யாரும்
பொன்றினர் போலும்' என்றான்;
'ஏயின பின்னை,மீள்வார்
நீஅலாது யாவர் ?' என்னா,
மேயது சொன்னார்; கேட்டான்;
தாதைபால் விரைவின் வந்தான்.

பொ :- (இராவணன் பணித்தவண்ணம் இந்திரசித்தை அணுகிய, தூதர்கள்) 'நின் தந்தையாகிய இலங்கை வேந்தன் நின்னை வருமாறு அழைத்தனன்' எனக் கூறினார்கள். மலையினையொத்துத் திரண்டு யர்ந்த தோளினையுடையனாகிய இந்திரசித்து (போர்மேற் கொண்டு) சென்ற அரக்கர் யாவரும் இறந்து பட்டனரோ?' என வினவினான். (மாற்றுரையழிக்கவல்ல பகைவரோடு) பொருந்திப் பொருத பின்னரும் வெற்றியுடன் மீளவல்லார் நின்னையன்றிப் பிறர் யாருளர்' எனக் கூறி (ப் போர்க்களத்தில்) நிகழ்ந்ததனை (த் தூதர்கள்) எடுத்துரைத் தார்கள். (அதனைக்) கேட்டவனாகிய இந்திரசித்து தந்தையாகிய இராவணன்பால் விரைந்து அடைந்தான்.

கு :- கூயினன்நுந்தை என்ருர்' என்புழித் 'தூதர்' என்னும் எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. குன்றெனக் குவிந்த தோளான் என்றது இந்திரசித்தினை. 'போயின நிருதர் யாரும் பொன்றினர் போலும்' என்றது, இந்திரசித்து தூதர்களை நோக்கி வினவிய வினு, 'ஏயின பின்னை மீள்வார் நீயலாது யாவர்' என்பது, தூதர்கள் இந்திரசித்தினை நோக்கிக் கூறிய மறுமொழி. 'வினுவும் செப்பே வினுவெதிர் வரினே' (தொல்—சொல்—கிளவி—14) என்னும் விதிப்படி வினுவே விடையாக வந்தது. போருக்குச் சென்ற அரக்கர் தலைவர்கள் எல்லாரும் இறந்து போனுர்கள் எனக் கூறுதல் மங்கல மன்றென எண்ணிய தூதர்கள் 'போரிற் சென்றபின் பொருது வென்றியுடன் மீள வல்லார் நின்னையன்றி யாருளர்' என இந்திர சித்தினை உயர்த்துக் கூறும் முறையில் படைத்தலைவர் முதலியோர் போரில் இறந்து பட்ட நிகழ்ச்சியை உய்த்துணர வைத்த நயம் உணர்ந்து பாராட்டத் தக்கதாகும். மேயது—நிகழ்ந்தது. (2)

## இந்திரசித்து, தந்தையைத் தேற்றி வணங்கிச் சேனைகள் சூழப் போர்க்களம் நோக்கிச் செல்லுதல்

8575 வணங்கிநீ யைய நொய்தின்
மாண்டனர் மக்க ளென்ன
உணங்கலை யின்று காண்டி
யுலப்பறு குரங்கி னேங்கற்
பிணங்களின் குப்பை மற்றை
நரருயிர் பிரிந்த யாக்கை
கணங்குழைச் சீதை காணு
மமரருங் காண்ப ரென்ருன்.

வணங்கி, "நீ,ஐய! நொய்தின்
மாண்டனர் மக்கள்' என்ன
உணங்கலை; இன்று காண்டி;
உலப்புஅறு குரங்கின் ஓங்கல்
பிணங்களின் குப்பை, மற்றை
நரர்உயிர் பிரிந்த யாக்கை
கணங்குழைச் சீதை காணும்;
அமரரும் காண்பர்'' என்ருன்.

பொ :- (இந்திரசித்து, தன் தந்தை இராவணனை) வணங்கி, 'ஐயனே! நீ (வன்மை படைத்த) புதல்வர்கள் (பகைவரால்) எளிதில் இறந்தொழிந்தார்கள்' என்று வாடி வருந்துதல் தவிர்க. (நின் புதல்வனாகிய எனது போர் வன்மையை) இன்றே காண்பாய். ஒழிவில்லாத குரங்குகளின் மலைபோலும் பிணங்களின் குவியல்களையும் ஏனை மனிதராகிய இராம இலக்குவர்களின் உயிர் நீங்கிய உடம்புகளையும் திரண்ட குழையென்னும் காதணியினையுடைய சீதை காண்பாள்; தேவர்களும் காண்பார்கள்' என்று கூறினான்.

கு :- 'வணங்கி' என்னும் செய்தென் வாய்பாட்டு வினையெச்சம், என்றான் என்னும் வினை முதல்வினை கொண்டு முடிந்தது. உலப்பு அறு—ஒழிதல் இல்லாத; அளவற்ற. ஓங்கல் போலும் குப்பை என இயைத்துரைக்க. ஓங்கல்—மலை. குப்பை—குவியல். மற்றை நரர் என்றது, குரங்கினத்தினைத் தமக்குத் துணையாகக் கொண்டிருந்தும் அவ் வினத்தின் வேறுபட்ட வடிவும் செயலும் உடைய மனிதராகிய இராம இலக்குவர்களை. உயிர் பிரிந்த யாக்கை-பிணம்; மங்கல வழக்கு. கணம் குழை—திரண்ட குண்டலம். நின் சொல்வழி யொழுகாதவளாகிய சீதையும் நினக்கு நேரும் அழிவினை எதிர்நோக்கி மனத்துள்ளே களிக்குமியல்புடைய வஞ்சகராகிய தேவர்களும் நம் பகைவர்க்கு நேர்ந்த இவ் அவலக் காட்சியைக்கண்டு நெஞ்சம் பதைத்தல் உறுதி என்பான், 'கணங்குழைச் சீதை காணும்; அமரரும் காண்பர்' என்றான். (3)

8576. வலங்கொடு வணங்கி வான்செ
லாயிர மடங்கல் பூண்ட
பொலங்கொடி நெடுந்தே ரேறிப்
போர்ப்பணை முழங்கப் போனான்
அலங்கல்வா ளரக்கர் தானை
யறுபது வெள்ளம் யானைக்
குலங்களுந் தேருமாவுங் குழாங்
கொளக் குழீஇய வன்றே.

வலங்கொடு வணங்கி, வான்செல்
ஆயிரம் மடங்கல் பூண்ட
பொலங்கொடி நெடுந்தேர் ஏறி,
போர்ப்பணை முழங்கப் போனான்;

அலங்கல்வாள் அரக்கர் தானை
அறுபது வெள்ளம், யானைக்
குலங்களும்,தேரும், மாவும்,
குழாம்கொளக் குழீஇய அன்றே.

பொ:-(இவ்வாறு வீரவுரை பகர்ந்த இந்திரசித்து, தன் தந்தையை) வலம் வந்து வணங்கி, வான் வழியாகச் செல்ல வல்லதும் ஆயிரம் சிங்கங்கள் பூட்டப்பட்டதும், பொன் மயமான கொடியினையுடையதும் ஆகிய நீண்ட தேரின்மேல் அமர்ந்து போர் முரசம் முழங்கப், (போர்க்களத்தை நோக்கிச்) சென்றான். (அவனுடன்) வெற்றி மாலை யணிந்த வாட்படையையுடைய அரக்கர் சேனைகள் அறுபது வெள்ளமும் யானைக் கூட்டங்களும் தேர்களும் குதிரைகளும் கூட்டமாகத் திரண்டு சென்றன.

கு:- வலங்கொடு வணங்குதல் என்பது, வலமாகச் சுற்றி வந்து வீழ்ந்து பணிதல். மடங்கல்—சிங்கம். பொலம்—பொன். போர்ப் பணை—போர் முரசம். அலங்கல்—மாலை. குலம்—கூட்டம். (4)

**8577.** **கும்பிகை திமிலை செண்டை**
**குறடுமாப் பேரி கொட்டி**
**பம்பைதார் முரசஞ் சங்கம்**
**பாண்டில்போர்ப் பணவந் தூரி**
**கம்பலி யுறுமை தக்கை**
**கரடிகை துடிவேய் கண்டை**
**அம்பலி கணுவை யூமை**
**சகடையோ டார்த்த வன்றே.**

கும்பிகை, திமிலை, செண்டை,
குறடு, மாப்பேரி, கொட்டி,
பம்பை, தார் முரசம், சங்கம்,
பாண்டில், போர்ப்பணவம், தூரி,
கம்பலி, உறுமை, தக்கை,
கரடிகை, துடி, வேய், கண்டை,
அம்பலி, கணுவை, ஊமை,
சகடையோடு ஆர்த்த அன்றே.

பொ:- கும்பிகை, திமிலை, செண்டை, குறடு, பெரிய பேரிகை, கொடு கொட்டி, பம்பை, மாலையணியப்பெற்ற முரசம், சங்கம்,

கஞ்சதாளம், போருக்குரிய பணவம் தூரியம், கம்பலி, உறுமை, தக்கை, கரடிகை, உடுக்கை, மூங்கிலாலாகிய வங்கியம், கண்டை, அம்பலி, கணுவை, ஊமை, சகடை ஆகிய பலவகை இயங்கள் ஆரவாரித்தன.

கு :- கும்பிகை, திமிலை, செண்டை, குறடு, பம்பை, பணவம், உறுமை, தக்கை, கண்டை, அம்பலி, கணுவை, ஊமை, சகடை என்பன தோற்கருவி வகைகள். கொட்டி—கொடு கொட்டி என்னும் பறை. பாண்டில்—கஞ்சதாளம். 'இடிக்குரல் முரசம் இழுமென் பாண்டில்' (சிலப்பதிகாரம்) என்புழி இச் சொல் இப் பொருளில் வழங்கப் பெற்றுள்ளமை காணலாம். துடி—உடுக்கை. வேய்—மூங்கிலாலாகிய வங்கியம் என்னும் துளைகருவி; ஆகுபெயர். (5)

8578. யானைமேற் பறைகீழ்ப் பக்கத்
தெறிமணி யிரதத் தாழி
மானமாப் புரவிப் பொற்றார்
மாக்கொடிக் கண்டை மானச்
சேனையோர் கழலுந் தாருஞ்
சேண்டரப் புலம்ப மற்றை
வானகத் தோடு மாழி
யலையென வளர்ந்த வன்றே.

யானைமேல் பறை, கீழ்ப்பக்கத்து
எறிமணி, இரதத்து ஆழி,
மானமாப் புரவிப் பொன்-தார்,
மரக்கொடிக் கண்டை, மானச்
சேனையோர் கழலும் தாரும்
சேண்தரப் புலம்ப, மற்றை
வானகத்து ஓடும் ஆழிஅலை
என, வளர்ந்த அன்றே.

பொ :- யானைமேல் வைக்கப்பட்டுள்ள முரசு, கீழ் இருபக்கத்தும் உள்ள ஒலிக்கும் மணிகள், தேரின் சக்கரம், தன்னிலையிற்றாழாத பெருமையினையுடைய குதிரைகள் அணிந்த பொன்னால் இயன்ற கிண்கிணிமாலை, பெருமை வாய்ந்த கொடிகளிற் கட்டப்பட்டுள்ள மணிகள், குன்றாத மானமுடைய சேனை வீரர்கள் அணிந்துள்ள வீரக்கழலும் பொன்னரிமாலையும் ஆகிய இவற்றின் ஒலிகள்,

சேணளவும் சென்றெலிப்ப ஏனை வானிடமளவுஞ் சென்று படருர் கடலின் அலைகளை யொத்து விரிந்து உயர்ந்தன.

கு:- புரவிப் பொன் தார்-குதிரைகள் அணிந்த பொன்னால் இயன்ற கிண்கிணிமாலை. கொடிக்கண்டை—கொடிகளிற் கட்டப்பட்டுள்ள மணி. புலம்புதல்—ஒலித்தல். ஆழி—சக்கரம், கடல். கழல்—காலில் அணிவது. தார்மாலை. (6)

8579. சங்கொலி வயிரி னோசை
யாகுளி தழங்கு காளம்
பொங்கொலி வரிகண் பீலிப்
பே ரொலி மேயின் பொம்கல்
சிங்கத்தின் முழக்கம் வாசிச்
சிரிப்புத்தே ரிடிப்புத் திண்கைம்
மங்குலி னதிர்வு வான
மழையொடு மலைந்த வன்றே.

சங்குஒலி, வயிரின் ஓசை,
ஆகுளி, தழங்கு காளம்
பொங்குஒலி, வரிகண் பீலிப்
பேர்ஒலி, வேயின் பொம்மல்,
சிங்கத்தின் முழக்கம், வாசிச்
சிரிப்பு, தேர்இடிப்பு, திண்கைம்
மங்குலின் அதிர்வு,-வான
மழையொடு மலைந்த அன்றே.

பொ :- சங்கின் ஒலியும் ஊதுகொம்பின் ஓசையும், ஆகுளி ஒலிக்கின்ற காளம் என்னும் வாத்தியங்களின் மிக்குத்தோன்றும் ஒலியும் அழகிய வரியும் கண்ணும் அமைந்த மயிற்றோகையணிந்த பீலி என்னும் வாத்தியத்தின் பேரொலியும், வேய்ங்குழலின் நிறைந் தெழும் இசையும், தேரிற் பூட்டிய சிங்கங்களின் பெருமுழக்கமும் குதிரையின் கனைப்பும், தேர் செல்லுங்கால் தோன்றும் இடிபோன்ற ஒலியும், திண்ணிய துதிக்கையினையுடைய மேகம் போலும் யானைகளின் பிளிற்றொலியும் ஆகிய இவை வானத்திலுள்ள மேகங் களின் ஒலியொடு மாறுபட்டுத் தோன்றின.

கு :- வயிர்—ஊதுகொம்பு. ஆகுளி—சிறுபறை. தழங்குதல்—ஒலித்தல். காளம்—எக்காளம். பீலி—சிறு சின்னம் என்னும் துளைக்

கருவி. வாசி—குதிரை. வாசிச் சிரிப்பு என்றது குதிரையின் கனைப்பினை. திண்கைம் மங்குல்—திண்ணிய கையினையுடைய மேகம்; என்றது, கைம்மலை என்றாற் போன்று யானைக்குரியதொரு பெயராய் நின்றது. மலைதல் என்றது, ஈண்டு ஒன்றோடொன்று மாறுபட்டு ஒலித்தலை. (7)

8580. பண்டரு கிளவிச் செவ்விப்
பல்லியத் தொழுகு தீந்தேன்
கண்டினிற் குயின்ற வீணை
நரம்பொடு கமழுந் தேறல்
வண்டினிற் பொலியு நல்லியாழ்
வழியுறு நறவம் வானத்
தண்டர்தஞ் செவியி னுண்ணு
மமிழ்தென லாய வன்றே.

பண்தரு கிளவிச் செவ்விப்
பல்லியத்து ஒழுகு தீந்தேன்,
கண்டினில் குயின்ற வீணை
நரம்பொடு கமழும் தேறல்,
வண்டினில் பொலியும் நல்யாழ்
வழிஉறும் நறவம், வானத்து
அண்டர்தம் செவியின் உண்ணும்
அமிழ்து எனல்ஆய அன்றே.

பொ :- பண்ணைத் தோற்றுவிக்கும் சொற்களின் தன்மையினையுடைய பலவகை வாத்தியங்களினின்று முறைப்படத் தோன்றும் இனிய இசையாகிய தேனும், கற்கண்டு போன்ற இன்சுவையுடையதாய் அமைந்த வீணை நரம்பிலிருந்து தோன்றும் (உணர்வு) மணங் கமழும் இசையாகிய தேனும், வண்டின் இமிர்தலையொத்து விளங்கும் நல்ல யாழின் இடத்தனவாய்த் தோன்றிய நல்லிசையாகிய தேனும் வானுலகத்து வாழ்வாராகிய தேவர்கள் தம் செவி வாயாகப் பருகி மகிழ்தற்குரிய அமிழ்து என்று சொல்லும்படி (கேட்டார்க்கு) இன்பஞ் செய்வனவாயின.

கு :- தறுகண் வீரர்தம் போர்த்தொழிலில் தளர்ச்சியுறாதவாறு அன்னோர்க்கு உள்ளக் கிளர்ச்சியையுண்டாக்கும் நோக்கத்துடன் பலவகை வாத்தியங்களும் வீணையும் யாழும் சேனைவீரர் கேட்டு

மகிழ இசைவாணர்களால் வாசிக்கப்பெற்றன என்பதாம். இச் செய்யுள் 1, 2, 9, 18, 19, 21, 25, 31, 40, 60, 61, 66, என்னும் எண்ணுள்ள பழஞ்சுவடிகளில் இல்லாமையாலும் பகைவர் நடுக்க முறத் தோற்றுவித்த பல்வகைப் போர் முழக்கங்களினிடையே மென்மையுடைய இன்னிசை யெழுந்தன எனக் கூறும் இப் பாடல் முன்னொடு பின் தொடர்பின்றிக் காணப்படுதலாலும் இதனை இடைச் செருகல் எனக் கருதுதல் ஏற்புடையதாகும். இப் பாடல் 45, 52 என்னும் எண்ணுள்ள அச்சுப் புத்தங்களில் மிகைப் பாடலாகக் கொண்டு விலக்கப்பட்டுள்ளமையும் ஈண்டு நோக்கத்தக்க தாகும். (8)

8581. வில்லொலி வயவ ரார்க்கும்
விளியொலி தெழிப்பி னோங்கும்
ஒல்லொலி வீரர் பேசு
முரையொலி யுரப்பிற் றோன்றும்
செல்லொலி திரடோள் கொட்டுஞ்
சேணொலி நிலத்திற் செல்லும்
கல்லொலி துரப்ப மற்றைக்
கடலொலி கரந்த தன்றே.

வில்ஒலி, வயவர் ஆர்க்கும்
விளிஒலி, தெழிப்பின் ஓங்கும்
ஒல்லொலி, வீரர் பேசும்
உரைஒலி, உரப்பில் தோன்றும்
செல்ஒலி, திரள்தோள் கொட்டும்
சேண்ஒலி, நிலத்தில் செல்லும்
கல்ஒலி—துரப்ப, மற்றைக்
கடல்ஒலி கரந்தது அன்றே.

பொ: வில்நாணின் ஒலியும், வீரர் ஆரவாரிக்கும் அறைகூவல் ஒலியும் அதட்டுதலால் உயர்ந்து தோன்றும் ஒல்லென்னுமோசையும், வீரர்கள் தம்முள் உரையாடும் பேச்சின் ஆரவாரமும் (அவர்கள்) கனைத்தலால் உண்டாகிய இடிபோன்ற ஒலியும், திரண்ட தோள் களைக் கொட்டுதலால் நெடுந்தூரத்தே சென்றிசைக்கும் ஆர்ப்பொலி யும் (அவ் வீரர்கள்) நிலத்திற் (கடுகிச்) செல்லுதலால் உண்டாம் கல்லென்னும் ஓசையும் ஆகிய இவை ஒருங்கே கூடியொலித்து நின்று செலுத்துதலால் ஏனைய கடலின் ஒலியானது இப் பேரொலி கட்குள் (அடங்கி) மறைந்தது.

கு: வயவர்—வீரர். தெழித்தல்—அதட்டுதல். உரப்புதல்—கனைத்தல். செல்—இடி. துரப்ப—செலுத்த. கரத்தல்—மறைதல். (9)

8582. நாற்கட லனைய தானை
நடந்திடக் கிடந்த பாரின்
மேற்கட ந்தெழுந்த தூளி
விசும்பின்மேற் கொழுந்து வீச
மாற்கட ற் சேனை காணும்
வானவர் மகளிர் மானப்
பா ற்கட லனைய வாட் கண்
பனிக் கடல் படைத்த வன்றே.

நாற்கடல் அனைய தானை
நடந்திட, கிடந்த பாரின்—
மேல்கடந்து எழுந்த தூளி
விசும்பின்மேல் கொழுந்து வீச,
மால்கடல் சேனை காணும்
வானவர் மகளிர், மானப்
பாற்கடல் அனைய வாட்கண்,
பனிக்கடல் படைத்த அன்றே.

பொ:- நாற்(றிசைக்) கடல்களையொத்த (நால்வகைச்) சேனைகள் இவ்வாறு நடந்து செல்லுதலால் (அவற்றுககு இடஞகிக்) கிடந்த இப் பூமியிருலிந்து மேலே புறப்பட்டு எழுந்த துகள்கள், ஆகாயத்தின் மேற்பரப்பில் முற்பட்டு வீசினமையால், பெருங்கடல் போலும் இந்திரசித்தின் சேனைகளைக் காணவந்த தேவர் மகளிரின் பெருமை வாய்ந்த பாற்கடலையொத்த ஒளி பொருந்திய அகன்ற கண்கள், (தம்மிடத்திலிருத்து) குளிர்ந்த கடல்நீரைத் தோற்றுவிப்பனவாயின.

கு:- அரக்கரது சேனைவெள்ளம் செல்லுதலால் பூமியிலிருந்து மேலேகிளம்பிய தூசுகள் வானத்தின் மேலிடமளவும் பரவிச்சென்று சேனைகளைக் காணவந்த தேவமங்கையார்களின் இமையாக் கண்களிற் படிந்து கடல்போலும் புன்கணீர்ப்பெருக்கினைத் தோற்றுவித்தன என உயர்வுநவிற்சி என்னும் அணிநலம் அமையக் கூறியவாறு. மகிழ்ச்சிப் பெருக்கினைப் புலப்படுத்துவனவாய்ப் பாற்கடலையொத்துத் தோன்றிய வானவர் மகளிருடைய கண்கள் இந்திரசித்தின் சேனைப்பெருக்கைக் கண்டவுடன் அச்சத்தால்

புன்கணீர் சொரிவனவாயின என்பார். 'பாற்கடலனைய வாட்கண் பனிக்கடல் படைத்த' என்றார். வாள்—ஒளி. படைத்தல்—தோற்று வித்தல். (10)

8583. ஆயிர கோடித் திண்டே
ரமரர்கோ னகர மென்ன
மேயின சுற்றத் தானோர்
கொற்றப்பொற் றேரின் மேலான்
தூயமாச் சுடர்க ளெல்லாஞ்
சுற்றுற நடுவட் டோன்றும்
நாயகப் பரிதி போன்றான்
றேவரை நடுக்கங் கண்டான்.

ஆயிர கோடி திண்தேர்,
அமரர்கோன் நகரம் என்ன
மேயின சுற்ற, தான்ஓர்
கொற்றப் பொன்தேரின் மேலான்,
தூயமாச் சுடர்கள் எல்லாம்
சுற்றுற நடுவண் தோன்றும்
நாயகப் பரிதி போன்றான்—
தேவரை நடுக்கம் கண்டான்.

பொ:- தேவர்களை நடுக்கமுறச் செய்த திறலோனாகிய இந்திரசித்து தேவேந்திரனது (அமராவதி) நகரத்தைப் போன்று அழகும் பெருமையும் பொருந்திய திண்ணிய ஆயிரங்கோடித் தேர்கள் (தன்னைச்) சூழ்ந்துவரத் தான் ஒப்பற்றதொரு வெற்றிமிக்க பொன்மயமான தேரின்மேல் அமர்ந்தவனாகித் தூய்மையும் பெருமையும் வாய்ந்த ஒளிக்கற்றைகளையுடைய கோள்களும் பிறவும் தன்னைச்சுற்றி அமைய அவற்றின் நடுவே திகழும் தலைமை வாய்ந்த சூரியனையொத்துத் தோன்றினான்.

கு:- தேவரை நடுக்கம் கண்டான்—வானுலகின் மேற் படையெடுத்துச் சென்று இந்திரனை வென்று தேவர்களை நடுக்கமுறச் செய்த இந்திரசித்து. காணுதல்—செய்தல். தேவரை நடுக்கம் கண்டான், தேவர் கோன்நகரம் என்ன மேயின ஆயிரகோடித் திண்தேர் சுற்றத் தான் ஓர் கொற்றப் பொன்தேரின் மேலான் ஆகி,சுடர்களெல்லாம் சுற்றுற நடுவண் தோன்றும் நாயகப் பரிதி போன்றான் என இயைத்துரைக்க. பொற்றேரில் விளங்கும் இந்திரசித்துக்குச்

சூரியனும் அவனைச் சுற்றி நிற்கும் ஆயிரகோடித் தேர்களுக்கு ஏனைய கோள்களாகிய சுடர்களும் உவமை. நாயகம்—தலைமை. பரிதி—சூரியன். (11)

## இந்திரசித்து தன் சேனைகளை அன்றிலின் உருவமைய அணி வகுத்து நிறுத்திச் சங்க நாதஞ் செய்து தன் வில்லின் நாணொலி செய்து ஆரவாரித்தல்

8584. சென்றுவெங் களத்தை யெய்திச்
சிறையொடு துண்டஞ் செங்கண்
ஒன்றிய கழுத்து மேனி
காலுகிர் வாலொ டொப்பப்
பின்றலில் வெள்ளத் தானை
முறைபடப் பரப்பிப் பேழ்வாய்
அன்றிலி னுருவ தாய
வணிவகுத் தமைந்து நின்றான்.

சென்று வெங்களத்தை எய்தி,
சிறையொடு துண்டம், செங்கண்,
ஒன்றிய கழுத்து, மேனி, கால்,
உகிர், வாலொடு, ஒப்ப,
பின்றல்இல் வெள்ளத் தானை
முறைபடப் பரப்பி, பேழ்வாய்
அன்றிலின் உருவது ஆய
அணிவகுத்து, அமைந்து நின்றான்.

பொ:- (அங்ஙனம் தோன்றிய இந்திரசித்து) சென்று போர்க்களத்தை அடைந்து பின்னிடுதல் இல்லாத, வெள்ளக்கணக்கினவாகிய தன் சேனைகளை, சிறகு, மூக்கு, சிவந்தகண், பொருந்திய கழுத்து, உடம்பு, கால், நகம், வால் என்னும் இவ்வுறுப்புகளுக்குப் பொருந்தித் தோன்ற முறைமைப்படப் பரப்பி நிறுத்தி, பிளந்த வாயினையுடைய அன்றிற் பறவையின் உருவ அமைப்பினையுடையதாக அணிவகுத்துப் (பகைவரொடு பொருதற்குப்) பொருந்தி நின்றான்.

கு:- சென்று, களத்தை நண்ணி, வெள்ளத்தானையை சிறையொடு துண்டம்...வாலொடு முறைபடப் பரப்பி அன்றிலின் உருவதாய அணிவகுத்து அமைந்து நின்றான் என இயையும். சிறை—சிறகு. துண்டம்—மூக்கு. உகிர்—நகம். பின்றல்—பின்னிடுதல், தோல்வியுற்றுத் திரும்புதல். பேழ்வாய் — பிளந்தவாய். அன்றில்—கிரௌஞ்சம் என்னும் பறவை. (12

8585. புரந்தரன் செருவிற் றந்து
போயது புணரி யேழும்
உரந்தவிர்த் தூழி பேருங்
காலத்து ளொலிக்கு மோதை
கரந்தது வயிற்றுக் கால
வலம்புரி கையின் வாங்கிச்
சிரம்பொதிர்ந் தமர ரஞ்ச
வூதினன் றிசையுஞ் சிந்த.

புரந்தரன் செருவில் தந்து
போயது, புணரி ஏழும்
உரம் தவிர்த்து ஊழிபேரும்
காலத்துள் ஒலிக்கும் ஓதை
கரந்தது வயிற்று, கால
வலம்புரி கையின் வாங்கி,
சிரம்பொதிர்ந்து அமரர் அஞ்ச
ஊதினன், திசையும் சிந்த.

பொ:- (நின்ற இந்திரசித்து) இந்திரன் போரில் (தோல்வியுற்றுத் திறையாகத்) தந்து சென்றதும், கடல்கள் ஏழும் (உலகப் பொருள்களின்) திண்மயைச் சிதைத்துப் பெருகி மேலோங்கும் ஊழியிறுதி நாளின்கண் ஆரவாரிக்கும் பேரோசையைத் தன் வயிற்றினுள்ளே அடக்கி மறைத்துள்ளதும் காலனது தன்மையினை யுடையதும் ஆகிய வலம்புரிச் சங்கினைத் தன் கையில் எடுத்துத் தேவர்கள் தலை நடுக்குற்று அஞ்சவும் திசைகள் நிலைகெட்டுச் சிதையவும் ஊதினன்.

கு:- புரந்தரன் செருவில் தந்து போயது, புணரிஏழும் ஊழி பேரும் காலத்துள் ஒலிக்கும் ஓதை வயிற்றுக் கரந்தது ஆய கால வலம்புரி என்க. கால வலம்புரி-காலனது தன்மையையுடையவலம்புரிச் சங்கம். காலனது தன்மையாவது உயிரைக் கவர்தல். வலம்புரி கையின் வாங்கி, அமரர் சிரம் பொதிர்ந்து அஞ்ச, திசையும் சிந்த ஊதினன் என இயைக்க. புரந்தரன்—இந்திரன். செருவில் தருதல்—போரில் திறையாகக் கொடுத்தல். கரத்தல்—மறைத்தல். சிரம் பொதிர்தல்—தலை நடுக்குறுதல். (13)

8586. சங்கத்தின் முழக்கங் கேட்ட
கவிப்பெருந் தானை தள்ளிச்
சிங்கத்தி னுதம் வந்து
செவிபுக விலங்கு சிந்தி
எங்குற்ற வென்னு வண்ண
மிரிந்தபோ லிரிந்த வேழை
பங்கத்தன் மலைவி லன்ன
சிலையொலி பரப்பி யார்த்தான்.

சங்கத்தின் முழக்கம் கேட்ட
கவிப் பெருந்தானை, தள்ளி,
சிங்கத்தின் நாதம் வந்து
செவிபுக, விலங்கு சிந்தி
'எங்குஉற்ற' என்னு வண்ணம்
இரிந்தபோல் இரிந்த, ஏழை
பங்கத்தன் மலைவில் அன்ன
சிலைஒலி பரப்பி ஆர்த்தான்.

பொ :— வலம்புரிச் சங்கின் முழக்கத்தைக் கேட்ட வானரப் பெருஞ் சேனைகள், (ஒன்றையொன்று) தள்ளிக் கொண்டு, சிங்கத்தின் முழக்கம் வந்து தம் செவிகளிற்புக்க அளவில் (யானை முதலிய) விலங்குகள் (தாம் இருந்த இடங்களை விட்டு) 'எங்கே சென்றன என அறிந்து கொள்ள ஒண்ணுதவாறு சிதறி ஓடியனவற்றை யொத்துப் பல இடங்களிலும் ஓடிப் போயின. (அந் நிலையில் இந்திரசித்து) பெண்ணெருு பாகனுகிய சிவபெருமானது மேருமலையாகிய வில்லினையொத்த (தன்னுடைய) வில்லின் நாணெலியைப் பரவச்செய்து ஆரவாரித்தான்.

கு :— கவிப் பெருந்தானை—வானரப் பெருஞ்சேனை. சிங்கத்தின் நாதம் வந்து செவிபுக, விலங்கு, எங்குற்ற என்னுவண்ணம் சிந்தி இரிந்தபோல், சங்கத்தின் முழக்கம் கேட்ட கவிப் பெருந்தானை தள்ளி இரிந்த என இயையும். இரிதல்—நிலைகெட்டு ஓடுதல். ஏழை பங்கத்தன்—பெண்ணெருு பாகத்தனுகிய சிவபெருமான். மலைவில்—மேருமலையாகிய வில். இந்திரசித்து ஆர்த்தான் என்க. (14)

## இந்திரசித்தின் போர்முழக்கம் கேட்ட வானர சேனைகள் வெருவி ஓடுதல்

8587. கீண்டன செவிக ணெஞ்சங்
கிழிந்தன கிளர்ந்து செல்லா
மீண்டன கால்கள் கையின்
விழுந்தன மரனும் வெற்பும்
பூண்டன நடுக்கம் வாய்கள்
புலர்ந்தன மயிரும் பொங்க
மாண்டன மன்றோ வென்ற
வானர மெவையு மாதோ.

கீண்டன, செவிகள்; நெஞ்சம்
கிழிந்தன; கிளர்ந்து செல்லா
மீண்டன, கால்கள்; கையின்
விழுந்தன, மரனும் வெற்பும்;
பூண்டன, நடுக்கம்; வாய்கள்
புலர்ந்தன; மயிரும் பொங்க,
'மாண்டனம் அன்றோ?' என்ற—
வானரம் எவையும் மாதோ.

பொ :— (அவ் ஆரவாரத்தைக் கேட்ட) வானரங்கள் யாவும், செவிகள் கிழிவுற்றன; நெஞ்சம் பிளவுற்றன; (போரில்) ஊக்கங் கொண்டு மேற்செல்ல முடியாதனவாய்க் கால்கள் பின் வாங்கின; கையிற்கொண்ட) மரங்களும் மலைகளும் கைகளினின்றும் (நழுவி) விழப்பெற்றன; நடுக்கம் மேற்கொண்டன; வாய்கள் உலரப் பெற்றன; 'நாம் எல்லாம் விரைவில் இறந்தொழிமல்லவா?' என அரற்றி வருந்தின.

கு :— வானரம் எவையும், செவிகள் கீண்டன; நெஞ்சம் கிழிந்தன; கால்கள் மீண்டன; வாய்கள் புலர்ந்தன; 'மாண்டனம் அன்றோ?' என்ற என இயையும். கீளுதல்—கிழிதல். வாய்கள் புலர்தலாவது நாவில் நீரறுதல். 'மாண்டனம் அன்றோ' என்புழித் தேற்றம்பற்றி எதிர்காலம் இறந்தகாலமாயிற்று. என்ற—எனக் கூறின; பலவின்பால் வினைமுற்று. மாது ஓ என்பன அசை. (15)

8588. செங்கதிர்ச் செல்வன் சேயுஞ்
சமீரணன் சிறுவன் ருனும்
அங்கதப் பெயரி ஞனு
மண்ணலு மிளைய கோவும்
வெங்கதிர் மௌலிச் செங்கண்
வீடணன் முதல வீரர்
இங்கிவர் நின்ரு ரல்ல
திரிந்தது சேனை யெல்லாம்.

செங்கதிர்ச் செல்வன் சேயும்,
சமீரணன் சிறுவன் தானும்,
அங்கதப் பெயரி ஞனும்,
அண்ணலும், இளைய கோவும்,
வெங்கதிர் மௌலிச் செங்கண்
வீடணன் முதல வீரர்.
இங்குஇவர் நின்ருர் அல்லது,
இரிந்தது, சேனை எல்லாம்.

பொ :- (போர்க்களமாகிய) இவ் விடத்தில் (அகலாது) நின்றவர்கள், செந்நிற ஒளித்தொகுதியையுடைய செல்வனுகிய சூரியனுடைய. புதல்வன் சுக்கிரீவனும், வாயுவின் மகன் அனுமனும், அங்கதன் என்னும் பெயரையுடையவனும், தலைவனுகிய இராமனும், இளைய பெருமாளாகிய இலக்குவனும், வெவ்விய ஒளிக் கற்றையினையுடைய (மணிகள் இழைத்த) முடியினையும் சிவந்த கண்களையும் உடைய வீடணன் முதலாகவுள்ள ஏனைய படை வீரர்களும் ஆகிய இவர்களேயன்றி ஏனைய குரங்கின் கூட்டம் அனைத்தும் நிலைகெட்டு ஓடியது.

கு :- இங்கு நின்ருர், செங்கதிர்ச் செல்வன் சேயும் வீடணன் முதல வீரர் அல்லது குரங்கின் ஈட்டம் இரிந்தது என்க. செங்கதிர்ச் செல்வன்—சூரியன். சேய்-மகன்; என்றது சுக்கிரீவனை. சமீரணன்-வாயுதேவன். சிறுவன்-மகன்; என்றது அனுமனை அண்ணல்-தலைவன்; என்றது இராமனை. இளைய கோ-இளவரசன்; என்றது இளைய பெருமாளாகிய இலக்குவனை. அல்லது என்றது அன்றி என்னும் பொருள்பட வந்தது. ஈட்டம்-தொகுதி; கூட்டம். (16)

## அரக்கர் சேனை ஆரவாரித்துப் போர்க்களத்தில் மேற்சென்று நெருங்குதல்

8589. படைப்பெருந் தலைவர் நிற்கப்
பல்பெருந் தானை வேலை
உடைப்புறு புனலி னோட
வூழிநா ளுவரி யோதை
கிடைத்திட முழங்கி யார்த்துக்
கிளர்ந்தது நிருதர் சேனை
அடைத்தது திசைக ளெல்லா
மன்னவ ரகத்த ரானார்.

படைப் பெருந்தலைவர் நிற்க,
பல் பெருந்தானை வேலை
உடைப்புறு புனலின் ஓட,
ஊழிநாள் உவரி ஓதை
கிடைத்திட முழங்கி ஆர்த்துக்
கிளர்ந்தது; நிருதர் சேனை,
அடைத்தது, திசைகள் எல்லாம்;
அன்னவர் அகத்தர் ஆனார்.

பொ :- பெருமை வாய்ந்த படைத்தலைவர்கள் மட்டும் (இடம் பெயராது) நிலைத்து நிற்க, மிகப் பலவாகிய (குரக்குச்) சேனையாகிய கடல், கரைகளையுடைத்துச் செல்லும் பெரும்புனலையொத்து ஓடா நிற்க, (அதுகண்ட) அரக்கர் சேனையானது ஊழியிறுதிக் காலத்திலே தோன்றும் கடலோசையினையொத்த பேரொலியுண்டாக முழங்கி ஆரவாரித்து உள்ளக் கிளர்ச்சியுடையதாய்த் திசைகள் எல்லாவற்றையும் (வெற்றிடமில்லையாம்படி) அடைத்து நின்றது. (மேற்குறித்த) அப் படை வீரர்கள் அரக்கர் சேனைகளின் உள்ளிடத்தவராயினர்.

கு :- படைப் பெருந்தலைவர்-வானர சேனைகளின்பெரிய படைத்தலைவர். நிற்றல்-பின்னிடாது நிலைத்து நிற்றல். உவரி-கடல். கிடைத்திடுதல்-உண்டாதல். அன்னவர்-முற்குறித்த சுக்கிரீவன் முதலியோர். (17)

## அனுமன் தோளில் இராமனும் அங்கதன் தோளில் இலக்குவனும் ஏறியமர்ந்து போருக்குப் புறப்படுதல்

8590. மாருதி யலங்கன் மாலை
மணியணி வயிரத் தோண்மேல்
வீரனும் வாலி சேய்தன்
விறல்கெழு சிகரத் தோண்மேல்
ஆரியற் கிளைய கோவு
மேறின ரமரர் வாழ்த்தி
வேரியம் பூவின் மாரி
சொரிந்தன ரிடை விடாமை.

மாருதி அலங்கல் மாலை
மணிஅணி வயிரத் தோள்மேல்
வீரனும், வாலி சேய்தன்
விறல்கெழு சிகரத் தோள்மேல்
ஆரியற்கு இளைய கோவும்
ஏறினர்; அமரர் வாழ்த்தி
வேரிஅம் பூவின் மாரி
சொரிந்தனர், இடைவி டாமை

பொ :- அனுமனுடைய அசைந்தொளிரும் இயல்பினவாகிய மலர்மாலையும் மணிகளும் அணிந்த திண்ணிய தோளின்மேல் வீரனாகிய இராமனும், வாலியின் மைந்தன் அங்கதனுடைய வெற்றித்திறன் பொருந்திய மலைச்சிகரத்தையொத்த தோளின் மேல் (இராமன் என்னும்) பெரியோனுக்குத் தம்பியாகிய இலக்கு வனும் ஏறியமர்ந்தார்கள். (அதுகண்டு) தேவர்கள் (அவ் விரு வரையும்) வாழ்த்தித் தேன் நிறைந்த அழகிய மலர்மழையினை இடைவிடாது சொரிந்தார்கள்.

கு :- மாருதி-மருத்தின் மைந்தன்; வாயுவின் புதல்வனாகிய அனுமன். அலங்குதல்-அசைதல்; ஒளிவிடுதல். வயிரம்-திண்மை. வீரன், ஆரியன் என்ற பெயர்கள் இங்கு இராமனைச் சுட்டி நின்றன. விறல்-வெற்றித்திறன். வேரி-தேன். பூவின் மாரி-மலர் மழை. இடைவிடாமை சொரிந்தனர் என இயைக்க. (18)

8591. விடையின்மேற் கலுழன் றன்மேல்
வில்லினர் விளங்கு கின்ற
கடையின்மே லுயர்ந்த காட்சி
யிருவருங் கடுத்தார் கண்ணுற்
றடையின்மே ருவையுஞ் சாய்க்கு
மனுமனங் கதனென் றன்னூர்
தொடையின்மேன் மலர்ந்த தாரார்
தோளின்மேற் றோன்றும் வீரர்.

விடையின்மேல், கலுழன் தன்மேல்,
வில்லினர் விளங்கு கின்ற
கடை இல் மேல்உயர்ந்த காட்சி
இருவரும் கடுத்தார் - கண்ணுற்று
அடையின் மேருவையும் சாய்க்கும்
அனுமன் அங்கதன்என்று அன்னூர்
தொடையின்மேல் மலர்ந்த தாரார்,
தோளின்மேல் தோன்றும் வீரர்.

பொ :- (தடையாய்க்) கண்ணெதிர்ப்பட்டு மேற்செல்லின் மேருமலையையும் தள்ளிச் சாய்க்கவல்ல அனுமனும் அங்கதனும் எனச் சொல்லப்படும் அவர்களது தொடையின்மேற் பொருந்திய மாலையையுடையராய் அவர்தம் தோளின்மேல் அமர்ந்து தோன்றும் இராம இலக்குவராகிய வீரர் இருவரும், ஆனேற்றின்மேலும் கருடன்மேலும் (தத்தமக்குரிய) விற்படையினை யேந்தியவராய் விளங்கும் உணர்வெல்லையைக் கடந்து மேல் உயர்ந்த தோற்றப் பொலிவினையுடைய (சிவன் திருமால் என்னும்) இரு பெருந்தெய்வ தையும் ஒத்துத் தோன்றினார்கள்.

கு :- அனுமன் அங்கதன் என்று அன்னூர் தோளின்மேல் தோன்றும் வீரர், விடையின்மேல் கலுழன்தன் மேல் விளங்கு கின்ற இருவரும் கடுத்தார் என இயையும். விடை-இடபம். கலுழன்-கருடன். வில்லினர் விளங்குகின்ற இருவர், கடையின் மேல் உயர்ந்த காட்சி இருவர் எனத் தனித்தனி இயைத்துரைக்க. வில் என்பது, பினாகம், சார்ங்கம் என்னும் பெயருடைய வில் லிரண்டையும் குறித்தது. கடை-முடிந்த எல்லை; ஈண்டு உணர் வின் எல்லையைக் குறித்தது. இருவர் என்றது சிவபெருமான், திருமால் என்னும் இருபெருந் தெய்வங்களையும். இருவரையும் கடுத்தார் என வேற்றுமையுருபு விரித்துரைக்க. கடுத்தல்-ஒத்தல்.

அனுமன் தோள்மேல் அமர்ந்த இராமனுக்குக் கலுழன் தன்மேல் விளங்கும் திருமாலும், அங்கதன் தோள்மேல் அமர்ந்த இலக்கு வனுக்கு விடையின்மேல் அமர்ந்த சிவபெருமானும் உவமை; எதிர் நிரல் நிறையணி. (19)

## போருக்கு முற்பட்டெழுந்த நீலன் முதலிய படைத் தலைவர் களைப் பின்வரிசையில் நிற்குமாறு இராமன் பணித்தல்

8592. நீலன் முதலா யுள்ள
நெடும்படைத் தலைவர் நின்ருர்
தாலமு மலையு மேந்தித்
தாக்குவான் சமையுங் காலை
ஞாலமும் விசும்புங் காத்த
நானிலக் கிழவன் மைந்தன்
மேலமர் விளைவை யுன்னி
விலக்கினன் விளம்ப லுற்ருன்.

நீலன் முதலாய் உள்ள
நெடும்படைத் தலைவர் நின்ருர்,
தாலமும் மலையும் ஏந்தித்
தாக்குவான் சமையுங் காலை,
ஞாலமும் விசும்பும் காத்த
நானிலக் கிழவன் மைந்தன்,
மேல்அமர் விளைவை உன்னி,
விலக்கினன், விளம்ப லுற்ருன்.

பொ :- நீலனை முதலாகக் கொண்டு நெடிய பெருஞ்சேனைகட்குத் தலைவராக அங்கு நின்ற வானரவீரர்கள், பனைமரங்களையும் மலைகளையும் பறித்தெடுத்துக் கொண்டு (அரக்கர்களைத்) தாக்குதற்கு முற்பட்டுச் சென்றபொழுது, மண்ணுலகத்தையும் விண்ணுலகத் தையும் காத்த நானில மன்னவனுகிய தசரதன் மைந்தனுகிய இராமன், இனிமேல் நிகழவிருக்கும் போரின் விளைவையெண்ணி (அவ் வானர வீரர்களை)த் தடுத்து நிறுத்தியவனுய்ப் பின்வருமாறு கூறத் தொடங்கினுன்.

கு : நீலன் என்பவன் வானரசேனைத் தலைவர்கள் எல்லார்க்குந் தலைமன். ஐ—சாரியை. தாலம்—பனை. மண்ணுலகங் காவல் பூண்ட மன்னனுகிய தசரதன், இந்திரனது வானுல ஆட்சியை நிலை

நிறுத்தற் பொருட்டுச் சம்பரன் முதலிய அவுணர்களைப் பொருது வென்று தேவர்களைப் பாதுகாத்தமைபற்றி அவனை 'ஞாலமும் விசும்புங் காத்த நானிலக் கிழவன்' என்றது எனச் சிறப்பித்தார் ஆசிரியர். மைந்தன் என்றது இராமனை. இனி நிகழவிருக்கும் போரில் வரத்தின் வன்மைபடைத்த அரக்கர்கள் தெய்வப்படைக் கலங்களைப் பயன்படுத்துவர் என்பதனை எண்ணிய இராமன், அரக்க ரொடு பொருதற்கு ஊக்கமுடையராய் நின்ற வானரசேனைத் தலைவர்களை முன்வரிசையில் நில்லாதவாறு விலக்கினன் என்க. (20)

8593. கடவுளர் படைக ளும்மேல்
வெய்யவன் றுரந்த காலைத்
தடையுள வல்ல தாங்குந்
தன்மையி ரல்லிர் தாக்கிற்
கிடையுள தெம்பா னல்கிப்
பின்நிரை நிற்றி ரீண்டுப்
படையுள தனையு மின்றெம்
விற்றொழில் பார்த்தி ரென்றான்.

'கடவுளர் படைகள், நும்மேல்
வெய்யவன் துரந்த காலை,
தடைஉள அல்ல; தாங்கும்
தன்மையில் அல்லிர்; தாக்கிற்கு
இடைஉளது எம்பால் நல்கி,
பின்நிறை நிற்றிர்; ஈண்டுஇப்
படைஉள தனையும், இன்றுஎம்
வில்தொழில் பார்த்திர்' என்றான்.

பொ :- 'தெய்வப் படைக்கலங்களை நும்மேல் கொடியோனாகிய இந்திரசித்து செலுத்தியபொழுது (அவை, தம்மைத்) தடுத்தற்குரிய பிற ஆயுதங்கள் (நும்பால்) உள்ளன அல்ல; (நீங்களும் அவற்றை ஏற்றுத்) தாங்கிக் கொள்ளும் வல்லமையுடையீரல்லீர்; (முன்னின்று) தாக்குதற்கு இடமாயுள்ள முதலிடத்தினை எங்களுக் குக் கொடுத்துவிட்டு (எங்களுக்குப் பின்னே) பின்வரிசையிற் பொருந்தி நிற்பீராக. இங்கு இந்த அரக்கர் சேனை (உயிரோடு) உள்ள அளவும் இன்று எம்முடைய விற்றொழில் வன்மையினை (உடன் நின்று) காண்பீராக' என்று கூறினான்.

கு :- கடவுளர் படைகளாவன, தெய்வங்களை நோக்கிச் செய்த தவத்தின் பயனாக அத் தெய்வங்கள்பாற் பெற்ற ஆயுதங்கள். வெய்யவன் என்றது, கொடியோனாகிய இந்திரசித்தினை. துரத்தல்—

செலுத்துதல். தடை—மாருக நின்றுதடுக்கும் வன்மையுடைய பிற ஆயுதங்கள். உள அல்ல—நும்மிடத்து உள்ளன அல்ல. தாக்கிற்கு இடை—எதிரியை முன்னின்று தாக்குதற்கேற்ற முதலிடம். பின்னுற நிற்றல்—பின்வரிசையில் நிற்றல். உளதனையும்—உள்ள அளவும். (21)

**இராம இலக்குவரின் விற்ருெழில் வன்மையும், அது கண்டு இந்திரசித்து வியந்துரைத்தலும்.**

8594. அருண்முறை யவரு நின்ரு
ராண்டகை வீர நாழி
உருண்முறைத் தேரின் மாவி
ைேடைமால் வரையி னூழி
இருண்முறை நிருதர் தம்மே
லேவின ரிமைப்பி லோரும்
மருண்முறை யெய்திற் றென்பர்
சிலேவழங் கசனி மாரி.

அருள்முறை அவரும்நின்ருர்;
ஆண்டகை வீரர், ஆழி
உருள்முறை தேரின்,மாவின்,
ஓடை மால்வரையின், ஊழி
இருள்முறை நிருதர் தம்மேல்
ஏவினர்.—இமைப்பி லோரும்
'மருள் முறை எய்கிற்று' என்பர்—
சிலேவழங்கு அசனி மாரி.

பொ: (நீலன் முதலிய படைத்தலேவர்களாகிய) அவர்களும் (இராமன்) பணித்தருளிய முறைப்படியே (பின்வரிசையில்) நின்ருர்கள். போராண்மைத் திறம் வாய்ந்த இராம இலக்குவராகிய அவ் வீரர்கள், சக்கரத்துடன் (விரைந்து) உருளும் முறைமையினை யுடைய தேர்கள்மேலும் குதிரைகள்மேலும் முகபடாம் அணிந்த பெரிய மலேபோலும் யானைகள்மேலும் ஊழிக்காலத்து இருளின் தன்மையையுடைய அரக்க வீரர்கள்மேலும் அம்புகளை ஏவினுர்கள். (அவ் விருவருடைய) விற்கள் வெளிப்படும் இடியேற்றுடன்கூடிய அம்புமழையானது, கண் இமைத்தல் இல்லாத தேவர்களும் (இஃது என்ன ஊழிக்காலமோ என) மருளும் நிலேயினை அடைந்தது என்பர் அறிஞர்).

கு :- அவரும், அருள்முறை நின்ருர் ; ஆண்ட கைவீரர், தேரின் மாவின் ஓடைமால் வரையின் நிருதர் தம்மேல் ஏவினர் ; சிலை வழங்கு அசனிமாரி இமைப்பிலோரும் மருள்முறை எய்திற்று என்பர் என இயையும். அவர்—நீலன் முதலிய வானர சேனைத்தலைவர்கள். அருள்முறை—இராமன் பணித்தருளிய முறை. ஆண்ட கைவீரர்—இராம இலக்குவர். மா-குதிரை. ஓடை மால்வரை என்றது யானையை. ஓடை-முகபடாம். நிருதர்-அரக்கர். இமைப்பிலோர்-கண் இமைத்தல் இல்லாத தேவர்கள். இமைப்பிலோரும் மருளும் முறை என்க. உம்மை-உயர்வு சிறப்பு. அசனிமாரி-இடியுடன் கூடிய மழை. (22)

8595. இமைப்பதன் முன்னம் வந்த
விராக்கத வெள்ளந் தன்னைக்
குமைத்தொழில் புரிந்த வீரர்
தனுத்தொழில் குறித்தின் றெம்மால்
அமைப்பதென் பிறிதொன் றுண்டோ
மேருவென் றமைந்த வில்லால்
உமைக்கொரு பாக னெய்த
புரங்களி னொருங்கி வீழ்ந்த.

இமைப்பதன் முன்னம், வந்த
இராக்கத வெள்ளந் தன்னைக்
குமைத்தொழில் புரிந்த வீரர்
தனுத்தொழில் குறித்து, இன்றுஎம்மால்
அமைப்பதுஎன்? பிறிதுஒன்று
உண்டோ? மேருஎன்று அமைந்தவில்லால்
உமைக்குஒரு பாகன் எய்த
புரங்களின் ஒருங்கி வீழ்ந்த.

பொ :- (பொருதற்கு) எதிர்வந்த வெள்ளக் கணக்கினவாகிய அரக்கர் சேனைகளை இமைப்பொழுதுக்குள்ளாக அழிக்குந் தொழிலைப் புரிந்த வீரர்களாகிய இராம இலக்குவரது விற்ருெழில் வன்மையைக் குறித்து எம்மால் (உவமை) பொருந்தக் கூறுதற்கு யாதுளது? உமாதேவியாரை ஒரு பாகத்திற்கொண்ட அம்மையப்பராகிய சிவ பெருமான், மேருமலையென அமைந்த வில்லினுல் எய்து அழித்த முப்புரங்களைப் போன்று (அச் சேனைகள் யாவும்) அழிந்து வீழ்ந்தன (என்பதன்றிச் சொல்லத்தக்க உவமை) வேருென்றுளதோ?

கு :- வந்த இராக்கத வெள்ளந்தன்னை இமைப்பதன் முன்னம் குமைத்தொழில் புரிந்த வீரர் என இயையும். இமைப்பது-கண் இமைத்தலாகிய பொழுது. குமைத்தொழில்-அழிக்குந் தொழில். புரிதல்-செய்தல். தனுத்தொழில்-விற்றொழில் வன்மை. அமைத்தல்-உவமை பொருந்தக் கூறுதல், (இராக்கத வெள்ளம்) உமைக்கொரு பாகன், மேரு என்றமைந்த வில்லால் எய்த புரங்களின் ஒருங்கி வீழ்ந்த என்க. உமைக்கு ஒரு பாகன்-பார்வதி தேவியாரை ஒரு பாகத்திற்கொண்ட சிவபெருமான். புரங்களின் புரங்களைப் போன்று; இன்-உவமவுருபு. ஒருங்குதல்-அழிதல், வீழ்ந்த-வீழ்ந்தன. (23)

8596. தேரின்மேற் சிலையி னின்ற
விந்திர சித்தென் றோதும்
வீரருள் வீரன் கண்டான்
வீழ்ந்தனர் வீழ்ந்த வென்னும்
பாரின்மே னோக்கி னன்றேற்
பட்டன பட்டா ரென்னும்
போரின்மே னோக்கி லாத
விருவரும் பொருத பூசல்.

தேரின்மேல் சிலையின் நின்ற
இந்திர சித்துஎன்று ஓதும்
வீரருள் வீரன் கண்டான்—
வீழ்ந்தனர் வீழ்ந்த என்னும்
பாரின்மேல் நோக்கின் அன்றேல்,
பட்டன, பட்டார் என்னும்
போரின்மேல் நோக்கு இலாத,
இருவரும் பொருத பூசல்.

பொ :- (போர்க்களமாகிய) நிலப்பரப்பின் மேல்நோக்கி, வீழ்ந்து இறந்தவர்கள் (இவர்கள்), வீழ்ந்து இறந்தவை (இவை) என்னும் அளவிற் காண்பதன்றிப் போர் நிகழ்ச்சியை நோக்கி (இன்னவை) இறந்தன (இன்னார்) இறந்தார்கள் எனப் பிரித்தறியவொண்ணாத வாறு (இராம இலக்குவராகிய) இருவரும் நிகழ்த்திய போர்த்தொழிலைத் தேரின்மீது வில்லோடு நின்ற இந்திரசித்து எனப் புகழப்படும் வீரர்க்கெல்லாம் வீரனாகிய அவன் பொருந்த நோக்கினான்.

கு :- இராம இலக்குவர் இருவரும் செய்யும் விற்போரில் தன் சேனைகள் விரைந்து அழிந்து படுந்தன்மையைத் தேர்மீது வில்லொடு

நின்ற இந்திரசித்து என்னும் வீரர் வீரன் வியப்பும் செயலறவும் தோன்ற நோக்கினுன் என்பார், 'தேரின்மேற் சிலையின் நின்ற இந்திரசித்தென்றேதும் வீரருள் வீரன் கண்டான்' என்றார். சிலையின் நின்ற-வில்லொடு நின்ற. வீரருள் வீரன்-வீரர் எனத் தக்கார் எல்லாருள்ளும் முதலில் வைத்து எண்ணத்தக்க பெருவீரன். 'வீழ்ந்தனர் வீழ்ந்த', 'பட்டனபட்டார்' எனவரும் தொடர்கள், உயர்திணை அஃறிணை என்னும் திணை வேறுபாடு தெரிய வொண்ணுதவாறு போர்க்களத்தில் இறந்து வீழ்ந்த சேனைகளின் மிகுதியை யுணர்த்தி நின்றன. பாரின்மேல் நோக்கின் வீழ்ந்தனர் வீழ்ந்த என்னும் அன்றேல், போரின்மேல் 'பட்டன, பட்டார்' என்னும் நோக்கு இலாத பூசல் என இயைத்துப் பொருள் கொள்க. (24)

8897. யானைபட் டனவோ வென்று
னிரதமிற் றனவோ வென்றுன்
மானமா வந்த வெல்லா
மறிந்தொழிந் தனவோ வென்றுன்
ஏனைவா ளரக்கர் யாரு
மில்லையோ வெடுக்க வென்றுன்
வானுயர் பிணத்தின் குப்பை
மறைத்தலின் மயக்க முற்றுன்.

'யானை பட்டனவோ?' என்றுன்;
'இரதம் இற்றனவோ;' என்றுன்;
'மானமா வந்த எல்லாம்
மறிந்து ஒழிந்தனவோ?' என்றுன்;
'ஏனைவாள் அரக்கர் யாரும்
இல்லையோ, எடுக்க?' என்றுன்
வான்உயர் பிணத்தின் குப்பை
மறைத்தலின், மயக்கம் உற்றுன்.

பொ :- (இராம இலக்குவரது போர்த்தொழில் நிகழ்ச்சியை நோக்கிய இந்திரசித்து) ஆகாயம் அளவும் ஓங்கிய பிணத்தின் குவியல்கள் (போர்க்களத்தை) மறைத்தலால் திகைப்புற்றவனுகி, 'யானைகள் இறந்து பட்டனவோ?' என ஏங்கினுன்; 'தேர்கள் முறிந்தனவோ?' என வருந்தினுன்; 'வீரத்திற்குறையாத பெருமையுடையனவாய் வந்த குதிரைகள் யாவும் மாண்டொழிந்தனவோ?'

என இரங்கினான்; ('இறந்து வீழ்ந்த பிணங்களை) எடுத்து அப்பாற் படுத்த மற்றும் இறவாதுள்ள வாள் வீரராகிய அரக்கர் ஒருவரும் (இங்கு) இல்லையோ' என ஏக்கமுற்று வருந்தினான்.

கு :- (சிலையொடு தேரின்மேல் நின்ற இந்திரசித்து, இருவரும் பொருத பூசல் கண்டான்; வானுயர் பிணத்தின் குப்பை மறைத்த லின் மயக்கமுற்றானாகி, 'யானைபட்டவோ, இரதம் இற்றனவோ, மானமா உள்ள எல்லாம் மறிந்தொழிந்தனவோ, (இவற்றை) எடுக்க ஏனை வாளரக்கர் யாரும் இல்லையோ' என்று இவ்வாறு எண்ணி, தனிமையுற்று வருந்தினான் என்பதாம். (25)

8598. செய்கின்றா ரிருவர் வெம்போர்
சிதைகின்ற சேனை நோக்கின்
ஐயந்தா னில்லா வெள்ள
மறுபது மவிக வென்று
வைகின்றா ரல்ல ராகின்
வரிசிலை வலத்தான் மாள
வெய்கின்றா ரல்ல ரீதெவ்
விந்திர சால மென்றான்.

'செய்கின்றார், இருவர் வெம்போர்;
சிதைகின்ற சேனை நோக்கின்,
ஐயம்தான் இல்லா வெள்ளம்
அறுபதும்; 'அவிக' என்று
வைகின்றான் அல்லர்; ஆகின்,
வரிசிலை வலத்தால் மாள
எய்கின்றார் அல்லர்; ஈது
எவ்இந்திர சாலம்?' என்றான்.

பொ :- 'கொடிய போரைச் செய்கின்றவர்களோ இருவரே; (இவர் களாற்) சிதைந்தொழியும் சேனைகளை எண்ணிப் பார்த்தாலோ ஐயம் அற்றவகையில் அறுபது வெள்ளம் என்னும் தொகையினவாகும். ('இவை யாவும் ஒருசேர) அழிந்தொழிக' என்று சபித்துரைக்கின்ற வர்களும் அல்லர்; ஆனால், வரிந்து கட்டப்பெற்ற வில்லின் துணை கொண்டு தம் வன்மை விளங்க (பகைவர் சேனை) மாளும்படி வலிந்து எய்கின்றவர்களும் அல்லர். (இவ்வாறு அறுபது வெள்ளஞ் சேனை களையும் இருவரே தனி நின்று பொருதழித்த) இச் செயல் எத்தகைய இந்திரசால வித்தையோ' என்று வியந்து கூறினான் (இந்திரசித்து)

கு :- வெம்போர் செய்கின்றூர் இருவர்; சிதைகின்ற சேனை நோக்கின் அறுபது வெள்ளம்; 'அவிக' என்று வைகின்றூர் அல்லர்; ஆகின், வரிசிலை வலத்தால் மாள எய்கின்றூர் அல்லர்; ஈது எவ் இந்திரசாலம் என இயையும். அறுபது வெள்ளம் சேனைகளையும் நொடிப்பொழுதிற்குள் அழித்தற்கு இவ்விருவரும் நிறைமொழி மாந்தராகிய முனிவர் நிலையில் நின்று 'அவிக' என்று சபித்தலையும் மேற்கொள்ளவில்லை; சேனைகளை ஒருசேர மாளச்செய்யும் கருத்தினுல் தம்முடைய வலிய முயற்சியை மேற்கொண்டு அம்புகளை வருந்தி எய்யவும் இல்லை; கடிய முயற்சியின்றி அவ்விருவரும் தம் இயல்பிற் செய்த இப்போரிலே அறுபது வெள்ளஞ் சேனைகளும் ஒரு சேர மாண்டொழிந்த இச் செயல் எத்தகைய இந்திரசாலமோ என இந்திரசித்து இராம இலக்குவரது போர்த்திறனை வியந்து பாராட்டினுன் என்பதாம். வெகுண்டுரைத்த அளவிலேயே பகை வரை ஒருசேர மாளச்செய்யும் வன்மை சாபமொழிக்கு உண்டு. அறுபது வெள்ளஞ் சேனைகளையும் இவ்விருவரும் சாபமொழியின் துணைகொண்டு அழித்தாரல்லர் என்பார், ''அவிக' என்று வைகின்றூர் அல்லர்' என்றூர். வில்லம்பினும் சொல்லம்பு மிக்க வலிமையுடைய தென்பது.

'வில்லே ருழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை' (திருக்குறள்—872)

எனவரும் தெய்வப் புலவர் வாய் மொழியாலும்,

'சொல்லொக்கும் கடிய மேகச் சுடுசரம்' (கம்பர்)

என இந் நூலாசிரியர் அம்பின் கடுமைக்குச் சாபமொழியினை உவமை கூறுதலாலும் இனிது புலனும். (26)

## இருவரது போர்த்தொழில் விளைவுகளை இந்திரசித்து வியந்து நோக்குதல்

8599. அம்பின்மா மழையை நோக்கு
முதிரத்தி னூற்றை நோக்கும்
உம்பரி னளவுஞ் சென்ற
பிணக்குன்றி னுயர்வை நோக்கும்
கொம்பற வதிர்ந்த முத்தின்
குப்பையை நோக்குங் கொன்ற
தும்பியை நோக்கும் வீரர்
சுந்தரத் தோளை நோக்கும்.

அம்பின்மா மழையை நோக்கும்;
உதிரத்தின் ஆற்றை நோக்கும்;
உம்பரின் அளவும் சென்ற
பிணக்குன்றின் உயர்வை நோக்கும்;
கொம்புஅற உதிர்ந்த முத்தின்
குப்பையை நோக்கும்; கொன்ற
தும்பியை நோக்கும்; வீரர்
சுந்தரத் தோளை நோக்கும்.

பொ :- (வியப்புற்ற இந்திரசித்து) அம்பின் பெருமழையை உற்றுப் பார்ப்பான்; இரத்தப் பெருக்காகிய ஆற்றினைப் பார்ப்பான்; விண்ணின் உச்சியளவும் உயர்ந்து ஓங்கிய பிணங்களின் குவியலாகிய மலையின் உயர்ச்சியைப் பார்ப்பான்; (போரிற்) கொல்லப்பட்ட யானைகளைப் பார்ப்பான்; அவற்றின் தந்தங்கள் அறுபட்டமையால் சிதறிக் கிடக்கும் முத்தின் குவியலைப்பார்ப்பான்; (இந் நிகழ்ச்சிக்குக் காரணமாக விளங்கும்) வீரர்களாகிய இராம இலக்குவர்தம் அழகிய தோள்களை உற்றுப்பார்ப்பான்.

கு :- அம்பின் மழை, உதிரத்தின் ஆறு என்புழி இன் அல்வழிச் சாரியை. உம்பர்—ஆகாயம்; என்றது அதன் உச்சியை. கொம்பு—தந்தம். அற—ஆற்று வீழ்ந்தமையால்; செயவெனெச்சம் காரணப் பொருளில் வந்தது. கொன்ற—கொல்லப்பட்ட. தும்பி—யானை. வீரர் என்றது இராம இலக்குவர்களை. சுந்தரம்—அழகு. (27)

8600. மலைகளை நோக்கு மற்ற
வானுறக் குவிந்த வன்கட்
டலைகளை நோக்கும் வீரர்
சரங்களை நோக்குந் தாக்கி
உலைகொள்வெம் பொறியி னுக்க
படைக்கலத் தொழுக்கை நோக்கும்
சிலைகளை நோக்கு நாணேற்
றிடியினைச் செவியி னேக்கும்.

மலைகளை நோக்கும்; மற்றுஅவ்
வான்உறக் குவிந்த வன்கண்
தலைகளை நோக்கும்; வீரர்
சரங்களை நோக்கும்; தாக்கி

உலைகொள்வெம் பொறியின் உக்க
படைக்கலத்து ஒழுக்கை நோக்கும்;
சிலைகலை நோக்கும்; நாண்ஏற்று
இடியினைச் செவியின் நோக்கும்.

பொ :- மலைகளைப் பார்ப்பான் (அம்மலைகளைப் போன்று) விண்ணளவும் பொருந்தக் குவிந்துள்ள தறுகண்மை மிக்க கண்களோடு கூடிய (அரக்கர்களின்) தலைகளைப் பார்ப்பான்; (அத் தலைகளைத் துண்டித்த ஆற்றல் மிக்க) வீரர் (இருவருடைய) அம்புகளின் வன்மையைக் கருதிப் பார்ப்பான்; (அம்புகளால்) தாக்கப்பட்டு உலைக்களத்திலே சிதறிக் கிடக்கும் அனற்பொறிகளைப் போன்று சிதர்ந்து சிதறியுள்ள (தன் சேனை வீரர்களின்) ஆயுதங்களின் தொடர்ச்சியினை உற்றுப் பார்ப்பான்; (இத்தகைய அம்புகளைச் சொரிந்த இருவருடைய) விற்படைகளை எண்ணிப் பார்ப்பான்; அவ் விற்களில் நாணேற்றுதலால் உண்டாகிய இடி முழக்கத்தினைத் தன் செவிகளால் ஓர்ந்து நோக்குவான்.

கு :- இராம இலக்குவர்களின் அம்புகளால் தன் சேனை வீரர்களின் தலைகள் அறுபட்டு மலைகளைப் போன்று வானுற வுயர்ந்து கிடைத்தலையும், அவர்தம் வலிய படைக்கலங்கள் யாவும் இருவரும் எய்த அம்புகளால் தாக்கப்பட்டுக் கொல்லனுலைக் களத்தில் அனற் பொறிகளையொத்துச் சிதறிக் கிடத்தலையும் கண்ட இந்திரசித்து, அவ்விருவரது வில் நாணினின்றெழும் இடியோசை போலும் பெரு முழக்கத்தினையும் தன் செவிகாளற் கேட்டறிந்தான் என்பதாம். இச் செய்யுள்,சில சுவடிகளில் பின்வருமாறு பல பாடபேதங்களுடன் உருமாறித் திரிந்து காணப்படுகின்றது:- (28)

தலைகளை நோக்குந் தான்றன்
சரங்களை நோக்குந் தன்கைச்
சிலைகளை நோக்குஞ் செம்பொற்
றேர்களை நோக்குஞ் செய்த
கொலைகளை நோக்கும் கொன்ற
கொற்றவர் தம்மை நோக்கும்
அலைபெருங் குருதி யென்னு
மளக்கரை யமூன்று நோக்கும்.

8601. ஆயிரந் தேரை யாட
லானையை யலங்கன் மாவை
ஆயிரந் தலையை யாழிப்
படைகளை யறுத்து மப்பால்
போயின பகழி வேகத்
தன்மைமைப் புரிந்து நோக்கும்
பாய்வன பகழிக் கொன்றுங்
கணக்கிலாப் பரப்பைப் பார்க்கும்.

ஆயிரம் தேரை ஆடல்,
ஆனையை, அலங்கல் மாவை,
ஆயிரம் தலையை, ஆழிப்
படைகளை அறுத்தும், அப்பால்
போயின பகழி வேகத்
தன்மையைப் புரிந்து நோக்கும்
பாய்வன பகழிக்கு ஒன்றும்
கணக்குஇலா பரப்பைப் பார்க்கும்.

பொ : ஆயிரக்கணக்கான தேர்களையும் வெற்றியையுடைய யானைகளையும் மாலையணிந்த குதிரைகளையும் ஆயிரக்கணக்கான (வீரர்) தலைகளையும் சக்கரப் படைகளையும் அறுத்தும் அப்பாற் சென்ற அம்புகளின் விரைவுத் தன்மையினை விரும்பி நோக்குவான்; பாய்ந்து (ஊடுருவிச்) செல்வனவாகில் அம்புகளுக்குச் சிறிதும் கணக்கிட்டுரைத்தற்கில்லாத போர்க்களத்தின் பரப்பினை உற்றுப் பார்ப்பான்.

கு : ஆடல் - வெற்றி. அலங்கல் - மாலை. ஆழிப்படை - சக்கரப்படை. பகழி - அம்பு. புரிந்து நோக்குதல் - விரும்பிக் காணுதல். பகைவராயினும் தன்னையொத்த வீரர்களின் போர்த்திறமையினை விரும்பி நோக்கி வியத்தல் தலைசிறந்த வீரனது இயல்பாதலின் வீரருள் வீரனாகிய இந்திரசித்து தன் சேனைகளின் அழிவினைப் பொருட்படுத்தாது இராம இலக்குவரது விற்போர்த் திறமையினை வியந்து விரும்பி நோக்கினன் என்பதாகும். (29)

8602. அறுபது வெள்ள மாய
வரக்கர்த மாற்றற் கேற்ற
எறிவன வெய்வ பெய்வ
வெற்றுனுறு படைகள் யாவும்
பொறிவனம் வெந்த போலச்
சாம்பராய்ப் போய தல்லால்
செறிவன வில்லா வாற்றைச்
சிந்தையாற் றெரிய நோக்கும்.

அறுபது வெள்ளம் ஆய
அரக்கர்தம் ஆற்றற்கு ஏற்ற,
எறிவன, எய்வ, பெய்வ,
எற்றுறு படைகள் யாவும்,
பொறிவனம் வெந்த போலச்
சாம்பராய்ப் போயது அல்லால்,
செறிவன இல்லா ஆற்றைச்
சிந்தையால் தெரிய நோக்கும்.

பொ: அறுபது வெள்ளம் என்னும் அளவினராகிய அரக்கர்களின் ஆற்றலுக்குப் பொருந்தியனவாய், (நேர் நின்று) எறிவனவும், (சேய்மையில் நின்று வில்லில் தொடுத்து) எய்வனவும், மிகுதியாகப் பொழிவனவும், வீசு எடுத்து வனவும் ஆகிய ஆயுதங்கள் யாவும், தீப் பொறிகளாற் காடு வெந்து அழிந்தாற் போன்று சாம்பராய் அழிந்ததன்றி (அவற்றுள் எவையும் பகைவரை) நெருங்கித் தாக்குதலில்லாத் தன்மையினைத் தன் மனத்தால் விளங்க ஆராய்ந்து நோக்குவான்.

கு: எறிவன, சூலம் வேல் முதலியன. எய்வன-வில்லில் தொடுத்து எய்தற்குரிய அம்புகள். பெய்வன பகைவரைச் சூழ மழைபோற் பலவாகச் சொரிதற்குரிய படைக்கலங்கள். எற்றுறு படைகளாவன, வீசித். தாக்குதற்குரிய வாள் தோமரம் முதலாயின. பொறி - தீப் பொறி. பொறியால் என மூன்றுமுருபு விரித்துரைக்க. வனம்-காடு. செறிதல் - நெருங்கித் தாக்குதல். கண்ணால் நோக்குதலை நோக்கிய :நேக்கம் என்றும் மனத்தால் நோக்குதலை நோக்கல் நோக்கம் (நோக்கு அல் நோக்கம்) என்றும் கூறுவர். (30)

8603. வயிறலேத் தோடி வந்து
கொழுநர்மேன் மகளிர் மாழ்கிக்
குயிறலத் துக்க வென்னக்
குழைகின்ற குழைவை நோக்கும்
எயிறலைத் திடிக்கும் பேழ்வாய்த்
தலையிலா யாக்கை யீட்டம்
பயிறலைப் பறவை பாரிற்
படிகிலாப் பரப்பைப் பார்க்கும்.

வயிறு அலைத்து ஓடிவந்து
கொழுநர்மேல் மகளிர் மாழ்கி,
குயில்தலத்து உக்க என்னக்
குழைகின்ற குழைவை நோக்கும்;
எயிறு அலைத்து இடிக்கும் பேழ்வாய்த்
தலையிலா யாக்கை ஈட்டம்
பயிறலை, பறவை பாரிற்
படிகிலாப் பரப்பைப் பார்க்கும்.

பொ : அரக்கர் மகளிர் (தத்தம் கணவர் இறந்த செய்தி கேட்டு) வயிற்றில் அடித்துக்கொண்டு ஓடிவந்து (தங்கள் தங்கள்) கணவர்மேல் விழுந்து மனங்கலங்கிக் குயில்கள் நிலத்தில் விழ்ந்து அரற்றின என்னும்படி மனம் நைந்து இரங்குகின்ற இரங்குதலை நோக்குவான்; பற்களைக் கடித்து இடிபோற் பேரொலி செய்யும் பிளந்த வாயினையுடையவாய்த் தலையற்ற உடல்களின் தொகுதிகள் (போர்க்களம் எங்கும்) பொருந்தியாடுவதனையும் (அவற்றை நெருங்குதற்கு அஞ்சிப்) பறவைகள் பூமியிற் படிந்து நிணங் கவர்தற்கு இயலாத (போர்க்களப்) பரப்பினையும் (ஒருங்கு) நோக்குவான்.

கு : வயிறு அலைத்தல் - வயிற்றில் அடித்துக் கொள்ளுதல்; பெருந்துயரால் வருந்தும் மகளிரது இயல்பு. கொழுநர் - கணவர். மாழ்குதல்-மனங் கலங்கி வருந்துதல். தலத்து உக்க-நிலத்தில் விழ்ந்தன. குழைதல் - நைந்து இரங்குதல். தலையிலாயாக்கை - தலையற்ற முண்டம். பயிறலையும் பரப்பையும் பார்க்கும் என்க. (31)

8604. அங்கத ரநந்த கோடி
யுளரெனு மனும ரென்பார்க்
கிங்கினி யுலகம் யாவு
மிடமிலை போலு மென்னும்
எங்குமிம் மனித ரென்பா
ரிருவரே கொல்லென் றுன்னும்
சிங்கவே றனைய வீரர்
கடுமையைத் தெரிகி லாதான்.

'அங்கதர் அநந்த கோடிஉளர்'
எனும்; 'அனுமர் என்பார்க்கு
இங்குஇனி உலகம் யாவும்
இடமிலை போலும்' என்றும்;
எங்கும்இம் மனிதர் என்பார்
இருவரேகொல்?' என்று உன்னும்;
சிங்க ஏறு அனைய
வீரர் கடுமையைத் தெரிகிலாதான்.

பொ: (இலக்குவனைச் சுமந்து திரியும்) அங்கதராயினர் (ஒருவரன்றிப்) பல கோடியராவினராகவுள்ளார் என்பான். இங்கு (இராமனைச் சுமந்து திரியும்) அநுமர் என்பார்க்கு எல்லாவுலகங்களிலும் இடமில்லையாய் விடுமோ என்பான்; ஆண் சிங்கத்தினையொத்த வீரர்களாகிய இராம இலக்குவரது போரின் விரைவினை அறிந்து கொள்ள இயலாதவனாகிய இந்திரசித்து 'இம் மனிதர் இருவரே எல்லாவிடங்களிலும் நிரம்பி விட்டார்களோ' என இவ்வாறு எண்ணுவானாயினான்.

கு: அங்கதனும் அநுமனும், முறையே இலக்குவனையும் இராமனையும் தத்தம் தோளிற்சுமந்து போர்க்களமெங்கும் விரைந்து சாரிதிரிந்தனராக, அவர்தம் தோள்மீது அமர்ந்து போர் புரியும் இராம இலக்குவராகிய இவ்விருவரையே போர்க்களத்தில் எல்லா விடங்களிலும் கண்ட இந்திரசித்து, இவ்வாறு எங்குமாய்த் தோற்றும் இவ்விருவரது போர்த் தொழிலின் வேகத்தினை உள்ளவாறு உணர முடியாதவனாகி அங்கதர் பல கோடியுளர் என்றும் உலகமெங்கும் இடமில்லையென்னும்படி அநுமர் பலராய் வந்துள்ளார்கள் என்றும், போர்களமெங்கும் இராம இலக்குவர் என்னும் இம்

மனிதர் இருவரே உள்ளார்களோ என்றும் ஐயுற்றுத் திகைப்புறு வானாயினன் என்க. அங்கதர் - அங்கதனைப் போல்வார். அநுமர்- அநுமனைப் போல்வார். அநந்தகோடி - பலகோடி. கடுமை-போர்த் தொழிலின் விரைவு. (32)

8605. **ஆர்க்கின்ற வமரர் தம்மை**
**நோக்குமங் கவர்க ளள்ளித்**
**தூர்க்கின்ற பூவை நோக்குந்**
**துடிக்கின்ற விடத்தோ ளேக்கும்**
**பார்க்கின்ற திசைக ளெங்கும்**
**படும்பிணப் பரப்பை நோக்கும்**
**ஈர்க்கின்ற குருதி யாற்றில்**
**யானையின் பிணத்தை நோக்கும்.**

ஆர்க்கின்ற அமரர்தம்மை நோக்கும்;
அங்கு அவர்கள் அள்ளித்
தூர்க்கின்ற பூவை நோக்கும்;
துடிக்கின்ற இடத்தோள் நோக்கும்
பார்க்கின்ற திசைகள் எங்கும்
பிணப் பரப்பை நோக்கும்.
ஈர்க்கின்ற குருதி யாற்றில்
யானையின் பிணத்தை நோக்கும்.

பொ :- (அரக்கர் சேனைகளின் அழிவுகண்டு) ஆரவாரிக்கின்ற தேவர்களை நோக்குவான்; அத்தேவர்கள் (இராம இலக்குவர் மீது) அள்ளிச் சொரிந்து நிரப்பும் மலர்களை நோக்குவான்; (பின்னர் நேரவிருக்கும் பெருந்துன்பத்திற்கு அறிகுறியாகத்) துடிக்கின்ற தனது இடத்தோளை நோக்குவான்; தான் காண்கின்ற திசையிடங்கள் எங்கும் இறந்து வீழ்ந்த பிணங்களின் மிகுதியை நோக்குவான்; இழுத்துச் செல்லும் வேகமுடைய இரத்த வெள்ளமாகிய ஆற்றிலே (அகப்பட்ட) யானையின் பிணத்தை நோக்குவான்.

கு :- தூர்த்தல் - சொரிந்து நிரப்புதல். ஆடவர்க்கு இடத்தோள் துடித்தல் தீ நிமித்தமாகும். 'அம்பின் மாமழையை நோக்கும்' என்னும் 27-ஆம் செய்யுள் முதல் இச் செய்யுள் வரை அமைந்த நோக்கும், பார்க்கும் என்னும் வினைகளுக்கு எழுவாயாக இந்திர சித்து என்பதனை வருவித்துரைக்க. (33)

## அஞ்சி ஓடிய வானரசேனை
## அரக்கர் பலர் மாளக்கண்டும் மீளாமை

8606. ஆயிர கோடித் தேரு
மரக்கரு மொழிய வல்ல
மாயிருஞ் சேனை யெல்லாம்
மாய்ந்தவா கண்டும் வல்லை
போயின குரக்குத் தானை
புகுந்தில வன்றே போற்றேர்த்
தீயவன் நன்மே லுள்ள
பயத்தினுற் கலக்கந் தீரா.

ஆயிர கோடித் தேரும்
அரக்கரும் ஒழிய, அல்லா
மாஇருஞ் சேனை எல்லாம்
மாய்ந்தவா கண்டும், வல்லை
போயின குறுக்குத் தானை
புகுந்தில அன்றே, பொன்தேர்த்
தீயவன்தன்மேல் உள்ள
பயத்தினுல கலக்கம் தீரா.

பொ :- முன்னர் விரைந்து ஓடிய வானர சேனைகள், ஆயிர கோடி என்னும் தொகையினவாகிய தேர்களும் (அவற்றில் நின்று பொரும்) அரக்கர்களும் தவிர, அவையல்லாத மிகப்பெரிய சேனைகளெல்லாம் இறந்தொழிந்த செய்தியினை நேரிற் கண்டும் பொன்னுல் இயன்ற தேரினையுடைய கொடுந் தொழிலாளனுகிய இந்திரசித்தன்பால் தாம் கொண்ட பேரச்சத்தினுல் மனக்கலக்கம் நீங்காதனவாய் போர்க்களத்தில் மீண்டும் புகாதனவாயின.

கு :- வல்லை போயின குரக்குத் தானை, மாயிருஞ்சேனை யெல்லாம் மாய்ந்தவா கண்டும், தீயவன் தன்மேல் உள்ள பயத்தினுல் கலக்கம் தீராவாய்ப் புகுந்தில எனமுடிக்க. மாஇரும் சேனை - மிகப் பெரிய (அரக்கர்) சேனை. மாய்தவா - மாய்ந்தவாறு. வல்லை - விரைவு. தீயவன் என்றது, போர்த்தொழிலிற் கொடியவனுகிய இந்திரசித்தினை. அன்று, ஏ என்பன அசை. (34)

## இராம இலக்குவர் போர்த்தொழில் கண்டு அனுமன் தோள்கொட்டி ஆரவாரிக்க, அரக்கர்கள் அஞ்சி நடுங்குதல்

8607. தளப்பெருஞ் சேனை வெள்ள
மறுபதுந் தலத்த தாக
வளப்பருந் தேரி னுள்ள
தாயிர கோடி யாகத்
துளக்கமி லாற்றல் வீரர்
தோளும்போர்த் தொழிலு நோக்கி
அளப்டருந் தோளைக் கொட்டி
யஞ்சனை சிறுவ ஞர்த்தான்.

தளப்பெருஞ் சேனை வெள்ளம்
அறுபதும் தலத்தது ஆக,
அளப்ப அருந் தேரின்
உள்ளது ஆயிரகோடி ஆக,
துளக்கம்இல் ஆற்றல் வீரர்
தோளும் போர்த்தொழிலும் நோக்கி,
அளப்பஅருந் தோளைக் கொட்டி,
அஞ்சனை சிறுவன் ஆர்த்தான்.

பொ :- போர்க்களத்திற் பொருது நிற்கும் பெருமையுடைய அறுபது வெள்ளம் அரக்கர் சேனையும் (அழிவுற்று) நிலத்தின் கண்ணதாய் மடியவும், அளந்து அறிதற்கியலாத தேர்களின் மேலுள்ள (அரக்கர்) சேனை ஆயிரகோடி என்னும் அளவுடைய தாய் நிற்கவும், மனங்கலங்குதல் இல்லாத ஆற்றல்மிக்க வீரர் களாகிய இராமஇலக்குவர்களின் தோள்களையும் (அவர்கள் செய்யும்) விற்போர்த் தொழிலையும் கண்டு, அஞ்சனை என்பாளது மைந்தனு கிய அனுமன், அளத்தற்கரிய பெருவடி படைத்த தன் தோள் களைக் கொட்டிப்போர் ஆரவாரஞ் செய்தான்.

கு :- தளம்-படை, இச் சொல் போர்க்களம் என்றபொருளில் ஆளப்பெற்றது. துளக்கம் இல் ஆற்றல் வீரர் என்றது, இராம இலக்குவரை. துளக்கம்-மனக்கலக்கம், அஞ்சனை-அனுமன்தாய். சிறுவன்-மகன். (35)

8608. ஆரிடை யநும ளுர்த்த
வார்ப்பொலி யசனி கேளாத்
தேரிடை நின்று வீழ்ந்தார்
சிலர்சிலர் படைகள் சிந்திப்
பாரிடை யிழிந்து போகப்
பாரித்தார் பைம்பொ னிஞ்சி
ஊரிடை நின்று ளாரு
முயிரினே முதிரங் கான்றூர்.

ஆர்இடை அநுமன் ஆர்த்த
ஆர்ப்புஒலி அசனி கேளா,
தேரிடை நின்று வீழ்ந்தார்
சிலர்;சிலர் படைகள் சிந்தி,
பாரிடை இழிந்து போகப்
பாரித்தார்; பைம்பென் இஞ்சி
ஊரிடை நின்று ளாரும்,
உயிரினேடு உதிரம் கான்றூர்.

பொ :- நெருங்குதற்கு அரிய போர்க்களத்திலே நின்று அநுமன் ஆரவாரித்த போர் ஆரவாரமாகிய இடியொலியைக்கேட்டு (தேரில் உள்ளாராகிய அரகர்களிற்) சிலர் தேரில் நின்றபடியே வீழ்ந்து உயிர்துறந்தார்கள்; சிலர் தம் கையிலுள்ள படைக்கலங்களைக் கீழே சிதறவிட்டுத் தேரிலிருந்தும் கீழேஇறங்கித் (தப்பி) ஓடுதற்குப் பரபரப்புற்றூர்கள்; பசிய பொன்மயமான மதிலாற் சூழப்பட்ட (இலங்கை நகரமாகிய) ஊரினுள்ளேயுள்ள அரக்கர்களும் உயிருடனே இரத்தத்தைக் கக்கினுர்கள்.

கு :- ஆர்ப்பொலியாகிய அசனி எனவிரியும். அசனி-இடி. கேள்-கேட்டு; செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். அது வீழ்ந்தார், பாரித்தார், உதிரங்கான்றூர் என்னும் வினைமுற்றுக்களுடன் தனித்தனி சென்றியைந்தது. பாரித்தல்-பரபரப்படைதல். பரபரப்படைதல் பைம்பொன் இஞ்... ...ர் என்றது, இலங்கையினை. இஞ்சி-மதில். காலுதல்-உமிழ்தல்; வெளிப்படுத்தல். (36)

## அஞ்சிய அரக்கர்களைக் கடிந்துரைத்து இந்திரசித்து தான் ஒருவனாகவே இராம இலக்குவர்மேற் போருக்கு எதிர்தல்

8609. அஞ்சினிர் போமி னின்றோ
ரார்ப்பொலிக் கழியற் பாலிர்
வெஞ்சமம் விளைப்ப தென்னோ
நீருமி வீர ரோடு
துஞ்சினிர் போலு மன்றே
யென்றவர் சுளித்து நோக்கி
மஞ்சினுங் கரிய மெய்யா
னிருவர்மே லொருவன் வந்தான்.

'அஞ்சினிர், போமின்; இன்று,
ஓர்ஆர்ப்பு ஒலிக்கு அழியற்பாலிர்
வெஞ்சமம் விளைப்பது என்னோ?
நீரும் இவ் வீரரோடு
துஞ்சினிர் போலும் அன்றே?
என்றுஅவர் சுளித்து நோக்கி
மஞ்சினும் கரிய மெய்யான்—
இருவர்மேல் ஒருவன் வந்தான்.

பொ :- மேகத்தினும் கரிய மேனியையுடைவனாகிய இந்திரசித்து, (அச்சமுற்ற அரக்கர்களை நோக்கி,) 'அஞ்சியவர்களே! (இவ்விடத்தைவிட்டு) அகன்று போமின். இன்று ஓர் ஆரவார ஒலியைக் கேட்டு மனங்குலைந்து அழிபவராகிய நீங்கள், (பகைவரொடு) வெம்மையுடைய போர்த்தொழிலை நிகழ்த்துதல் எவ்வாறு முடியும்? (உயிருடன் உள்ள) நீங்களும் (உயிர் நீங்கிப் பிணமாய்க் கிடக்கும்) இவ் வீரர்களுடன் ஒப்ப இறந்தொழிந்தீர்கள் அல்லவா? என அவர்களை வெகுண்டு நோக்கி, (இராம இலக்குவர்) இருவர் மீதும் தான் ஒருவனாகவே பொருதற்கு வந்தான்.

கு :- மஞ்சினும் கரிய மெய்யான் என்றது, மழை மேகத்தைக்காட்டிலும் மிகுந்த கருநிறமுடைய மேனியனாகிய இந்திரசித்தனை, மஞ்சினும் கரியமெய்யான், 'அஞ்சினிர் போமின் ... ... துஞ்சினிர் போலுமன்றே' என்று அவர் சுளித்து நோக்கி, இருவர்மேல் ஒருவன் (ஆக) வத்தான் எனமுடிக்க. மஞ்சு-மழைமேகம். துஞ்சுதல்-இறத்தல், சுளித்தல்-வெகுளுதல். (37)

## இந்திரசித்துடன் வந்த தேர்ப்படைகள் கிளர்ந்து எழுதல்

8610. அக்கணத் தார்த்து மண்டி
யாயிர கோடித் தேரும்
புக்கன நேமிப் பாட்டிற்
கிழிந்தது புவன மென்னத்
திக்கிடை நின்ற யானை
சிரம்பொதி ரெறியச் சிந்தி
உக்கன விசும்பின் மீன்க
ளுதிர்ந்திடத் தேவருட்க.

அக்கணத்து ஆர்த்து மண்டி,
ஆயிர கோடித் தேரும்
புக்கன,—நேமிப் பாட்டில்
கிழிந்தது புவனம் என்ன—
திக்கிடை நின்ற யானை
சிரம்பொதிர் எறிய, சிந்தி
உக்கன விசும்பின் மீன்கள்
உதிர்ந்திட, தேவர் உட்க.

பொ :- அந்தக் கணத்திலேயே (அரக்க வீரர்களுடைய) ஆயிர கோடித் தேர்களும், எண்திசைகளிற் காவலாக நின்ற யானைகள் தலை நடுக்கமுற்று அதிரவும், வானத்திலேயுள்ள விண்மீன்கள் சிதறிப் பொடியாய் உதிரவும், தேவர்கள் நெஞ்சங்குலைந்து நடுங்கவும், சக்கரங்கள் ஆழப் பதிதலால் நிலவுலகம் பிளவுற்றது என்னும்படி ஆரவாரித்து நெருங்கிப் (போர்க்களத்திற்) புக்கன.

கு :- ஆயிர கோடித் தேரும், யானை சிரம் பொதிர் எறிய, விசும்பின் மீன்கள் சிந்தி உக்கன உதிர்ந்திட, தேவர் உட்க, 'நேமிப் பாட்டில் புவனம் கிழிந்தது' என்ன, ஆர்த்து, மண்டிப் புக்கன என இயைத்துரைக்க. நேமிப்பாடு—சக்கரம் ஆழப் பதிதல். பொதிர் எறிதல்—நடுக்க முறுதல். உட்குதல்—மனம் துணுக்குற்று அஞ்சுதல். (38)

## இலக்குவன், இந்திரசித்தின் தலையினை அம்பினால் வீழ்த்துவதாக இராமன் முன்னிலையில் வஞ்சினம் கூறுதல்

8611. மாற்றமொன் றிளையவன் வினைவிற் செங்கரத்
* தேற்றினை வணங்கிநின் றியம்பு வானிகல்
ஆற்றல னரவுகொண் டசைப்ப வாரமர்
தோற்றன னென்றெனை யுலகஞ் சொல்லுமால்.

மாற்றம் ஒன்று, இளையவன், வளைவில் செங்கரத்து
ஏற்றினை வணங்கி நின்று இயம்புவான்:- 'இகல்
ஆற்றலன், அரவு கொண்டு அசைப்ப, ஆர் அமர்
தோற்றனன்' என்று எனை உலகம் சொல்லுமால்

பொ:- இளையோனாகிய இலக்குவன், வளைந்த வில்லினைச் சிவந்த கையினையுடைய ஆண் சிங்கம் போல்வானாகிய இராமனை வணங்கி நின்று, பின்வருமாறு ஒருவார்த்தையைக் கூறுவானாயினான்:- 'போரில் எதிர் நிற்கும் ஆற்றலற்றவனாகிய இந்திரசித்து நாக பாசத்தைக் கொண்டு இறுகப்பிணித்தமையினால் அரிய போரிலே (இலக்குவன்) தோல்வியுற்றான்' என்று என்னைக் குறித்து உலகம் (பழி) கூறும்.

கு:- இளையவன், வளைவில் செங்கரத்து ஏற்றினை வணங்கி நின்று மாற்றம் ஒன்று இயம்புவான் என இயையும். இளையவன்—தம்பியாகிய இலக்குவன். வளைவிற் செங்கரத்து ஏறு என்றது, ஆண் சிங்கம் போல்வானாகிய இராமனை, ஏறு என்பது உபசார வழக்கு. இகல் ஆற்றலன் என்றது, போரில் நேர் நின்று எதிர்க்கலாற்றாத நிலையினனாகிய இந்திரசித்தினை. அரவு—நாகபாசம். அசைத்தல்—இறுகப்பிணித்தல். என்னை 'ஆரமர் தோற்றனன்' என்று உலகம் சொல்லும் என்க. இளையவன் கூறிய மாற்றம் இச் செய்யுளின் பின்னிரண்டடிகளிலும் இதனை அடுத்து வரும் நான்கு செய்யுட்களிலும் விரித்துரைக்கப் பெற்றுள்ளமை காண்க. (39)

8612. காக்கவுங் கிற்றிலன் காத னண்பரைப்
போக்கவுங் கிற்றில னொருவன் பொய்ப்பிணி
ஆக்கவுங் கிற்றிலன் வென்றி யாருயிர்
நீக்கவுங் கிற்றில னென்று நின்றதால்.

"காக்கவும் கிற்றிலன் காதல் நண்பரை;
போக்கவும் கிற்றிலன், ஒருவன் பொய்ப்பிணி;
ஆக்கவும் கிற்றிலன் வென்றி; ஆருயிர்
நீக்கவும் கிற்றிலன்" என்று நின்றதால்.

பொ :- (தன்பால்) 'அன்புடைய நண்பர்களைத் தீங்கின்றிக் காப்பாற்றவும் ஆற்றலற்றான்; (பகைவன்) ஒருவன் வஞ்சனையாற் செய்த (நாகபாசமாகிய) பிணிப்பினை(த் தன்னளவில் நீக்கி)ப் போக்குதற்கும் ஆற்றலிலன்; (பகைவனைத் தொடர்ந்து பொருது) தனக்கு வெற்றியை உண்டாக்கிக் கொள்ளுதற்கும் வலியற்றான்; (இந் நிலையில் தனது பெருமை நிலைபெற) அரிய உயிரைத் துறத்தற்கும் உறுதியில்லாதவனாயினான்' என்று பழி (எனக்கு உலகில்) நிலைபெற்று விட்டது.

கு :- காதல் நண்பரைக் காக்கவும் கிற்றிலன், ஒருவன் பொய்ப்பிணி போக்கவும் கிற்றிலன், வென்றி ஆக்கவும் கிற்றிலன், ஆருயிர் போக்கவும் கிற்றிலன் என்று (பழி) நின்றது என்க. ஆல்—அசை. ஒருவன் என்றது, இந்திரசித்தினை. அவன் வெளிப்பட நின்று போர் செய்யாது மாயத்தால் மறைந்து நின்று நாகபாசத்தை ஏவினமையின் அது 'பொய்ப்பிணி' எனப்பட்டது. பொய்ப்பிணி—பொய்ம்மையைத் துணையாகக்கொண்டு பிணித்த பிணிப்பு. தம்பால் அன்புடைய நண்பர்கட்கு எத்தகைய தீங்கும் வாராதபடி முன்னறிந்து பாதுகாத்தல் வீரர் கடன். என் நண்பர்க்கு வந்த தீங்கினை உடனே களைந்திருத்தல் வேண்டும். அத் தீங்கினின்றும் தன்னையாவது காப்பாற்றிக் கொண்டு பகைவனைத் தொடர்ந்து பொருது பிணித்து வெற்றி பெற்றிருத்தல் வேண்டும். இயலாதாயின் என் உயிரைத் துறந்தாயினும் வீரத்திற் குறையாத தன் மானத்தை நிலைபெறச் செய்திருத்தல் வேண்டும். அதனையும் செய்திலன்' என்ற பழிச் சொல், உலகில் எனக்கு நிலைத்து விட்டதே' என இலக்குவன் தன் னிலைமை குறித்து இரங்கிக் கூறினான் என்பதாம். (40)

**8613. இந்திரன் பகையெனு மிவனை யென்சரம்**
**அந்தரத் தருந்தலை யறுக்க லாதெனின்**
**வெந்தொழிற் செய்கையன் விருந்து மாய்நெடு**
**மைந்தரிற் கடையெனப் படுவன் வழிபாய்.**

'இந்திரன் பகைஎனும் இவனை, என்சரம்
அந்தரத்து அருந்தலை அறுக்கலாதுஎனின்,
வெந்தொழிற் செய்கையன் விருந்தும் ஆய்,நெடு
மைந்தரில் கடைஎனப் படுவன், வாழியாய்!

பொ :- (யாவரையும்) வாழ்விக்க வல்லவனே! இந்திரனுக்குப் பகைவன் எனப் பேசப்படும் இவ் இந்திரசித்தினை எனது அம்பு விசும்பின்கண்ணே அரிய தலையினையறுத்து (த்தள்ளிக்) கொல்லாது (வறிது) செல்லுமாயின், வெம்மை வாய்ந்த கொலைத் தொழிலைத் தன் இயல்பான செய்கையாகக்கொண்ட கூற்றுவனுக்குரிய விருந்தினனாக (யான்) ஆகி, (இவ்வுலகில் உயர்த்துக் கூறத் தகும்) பெருமை வாய்ந்த வீரர்களிற் கடையானவன் என இழித்துரைக்கப்படும் நிலையினனாவேன்.

கு :- இந்திரன் பகை எனும் இவன்—இந்திரனுக்குப் பகைவன் என உயர்த்துப் பேசப்படும் இவன்; இந்திரசித்து என அவன் பெற்றுள்ள பெயர்க் காரணத்தைச் சுட்டியவாறு. சரம்—அம்பு. அருந்தலை அந்தரத்து அறுத்தலாவது அரிய தலையினை அறுத்து ஆகாயத்து எறிதல். வெந்தொழிற் செய்கையன் என்றது, உடம்பினின்றும் உயிரைப் பிரித்து நீக்குதலாகிய கொடிய தொழிலைத் தனக்குரிய இயலபான செய்கையாகக் கொண்டுள்ள கூற்றுவனை. அவனுக்கு விருந்தாதலாவது, பகைவனால் எளிதிற் கொல்லப்பட்டு இயமனது உலகத்தை அடைதல். நெடு மைந்தர்—உயர்த் துரைக்கப்படும் பெருமையினையுடைய வீரர்கள். கடை—இழிந்தவன். 'வாழியாய்' என்ற விளி, இராமனை நோக்கியமைந்தது. (41)

8614\. நின்னுடை முன்னரிந் நெறியி னீர்மையான்
றன்னுடைச் சிரத்தையென் சரத்திற் றள்ளினால்
பொன்னுடை வனைகழற் பொலம்பொற் றோளினாய்
என்னுடை யடிமையு மிசையிற் றாமரோ.

'நின்னுடை முன்னர்,இந் நெறிஇல் நீர்மையான்
தன்னுடைச் சிரத்தை,என் சரத்தின் தள்ளினால்—
பொன்னுடை வனைகழல் பொலம்பொன் தோளினாய்!
என்னுடை அடிமையும் இசையிற்று ஆம்அரோ.

பொ :- பொன்னால் இயன்ற அணிகலமுறப்புனைந்த வீரக் கழலினையும் பொன்னணிகளையுடைய அழகிய தோள்களையும் உடைய அண்ணலே! நினது (கண்) முன்பாக இந்த அறமுறையற்ற தன்மையனாகிய இந்திரசித்தினது தலையினை எனது அம்பினால் அறுத்து வீழ்த்துவேனாயின், யான் நின்பாற்கொண்ட அடிமைத் திறமும் போற்றத்தகும் புகழுடையதாகும்.

கு :- நெறி இல் நீர்மையான்—போர் அறமாகிய நீதி முறை தவிர்ந்த கொடுந்தன்மையான்; என்றது. முன்னர் வஞ்சனையால் மறைந்து நாகபாசத்தை ஏவிக் கேடுசூழ்ந்த கொடியோனாகிய இந்தி

சித்தின் த்லையை அறுத்துத் தள்ளினுல்தான் யான் நினக்குச் செய்யும் அடிமைத் திருத்தொண்டின் பயனை உள்ளவாறு பெற்றவனுவேன் என, இலக்குவன் இராமனை நோக்கிக் கூறினுன் என்பதாம். இசையிற்று—புகழுடையது. அரோ—அசை. (42)

8615. நெடியன வுலகெலாங் கண்டு நிற்கவென்
அடுசர மிவன்றலை யறுக்க லாதெனின்
முடிவொன் றுணர்த்துவெ னுனக்கு நான்முயல்
அடிமையின் பயனிகந் தறுவ தாகென்ருன்.

'நெடியன உலகுஎலாம் கண்டு நிற்க,என்
அடுசரம், இவன் தலை அறுக்க லாதுஎனின்,
முடியஒன்று உணர்த்துவென்; உனக்கு நான்முயல்
அடிமையின் பயன்இகந்து அறுவதாக' என்ருன்.

பொ :- எனது கொல்லுந்தன்மை வாய்ந்த அம்பு, நீண்ட பரப்புடைய உலகமெல்லாங்கண்டு நிற்க இவ் இந்திரசித்தின் தலையினை அறுக்காதொழியுமானுல், முடிவாக ஒன்று தெரிவித்துக் கொள்வேன் : உனக்கு நான் செய்யும் அடிமைத்திறத்தின் பயன் (என்னை விட்டு) நீங்கி அற்ருெழிவதாகுக எனக் கூறினுன் (இலக்குவன்).

கு ;- என் அடு சரம், உலகெலாம் கண்டு நிற்க இவன் தலை அறுக்கலாதெனின், உனக்கு நான் முயல் 'அடிமையின்பயன்இகந்து அறுவதாக' என்ருன். முடிய உணர்த்தலாவது முடிந்த முடிபாகத் தனது துணிவினை எடுத்துரைத்தல். இகத்தல்-நீங்குதல். (43)

### அதுகண்டு அமரர் ஆர்த்தலும் இலக்குவனை இராமன் பாராட்டுதலும்

8616. வல்லவ னவ்வுரை வழங்கு மேல்வையுள்
அல்லனீங் கினமென வமர ரார்த்தனர்
எல்லையி லுலகங்கள் யாவு மார்த்தன
நல்லற மார்த்தது நமனு மார்த்தனன்.

வல்லவன் அவ்உரை வழங்கும் எல்வையுள்,
'அல்லல் நீங்கினம்'என அமரர் ஆர்த்தனர்;
எல்லை இல் உலகங்கள் யாவும் ஆர்த்தன;
நல்அறம் ஆர்த்தது; நமனும் ஆர்த்தனன்.

பொ :- (சொல்லியவண்ணம் செய்ய) வல்லவனுகிய இலக்குவன் அத்தகைய வஞ்சின மொழியைக் கூறிய அளவில், 'துன்பம் நீங்கினேம்' எனத் தேவர்கள் ஆரவாரித்தனர். எல்லையில்லாத உலகங்களிலுள்ள எல்லாவுயிர்களும் (உவகையால்) ஆரவாரித்தன. நன்மையையுடைய அறக்கடவுளும் ஆரவாரித்தது. கூற்றுவனும் ஆரவாரித்தான்.

கு :- இந்திரசித்தைக் கொன்று தீர்வேன் என இலக்குவன் வஞ்சினம் கூறிய அளவில், தம்மவர்க்கு இடையூறுபுரியும் இந்திரசித்து விரைவில் இறந்தொழிவான் என்னுந் தெளிவுடையராய்த் தேவர்கள் மகிழ்ந்து ஆரவாரஞ் செய்தார்கள். உலகில் வாழும் எல்லாவுயிர்களும் இரக்கமற்ற அரக்கர்களால் விளையும் துன்பங்கள் அகன்றன என்னும் பெருமகிழ்ச்சியால் ஆரவாரித்தன. கொடியோனுகிய இந்திரசித்தின் இறப்பினுல் உலகில் தீமைகள் குறையும் என்னும் கருத்தால் அறக்கடவுள் ஆரவாரித்தது. நெருங்குதற்கரிய பெருவன்மை படைத்த அரக்கர் உயிர்களை இலக்குவன் செய்யும் இப் போரில் எளிதிற் கவர்ந்து கொள்ளலாம் என்றெண்ணிக் கூற்றுவனும் மகிழ்ந்து ஆரவாரித்தனன் என்பதாம். (44)

8617. முறுவல்வாண் முகத்தினன் முளரிக் கண்ணனும்
அறிவநீ யடுவலென் றமைதி யாமெனின்
இறுதியுங் காவலு மியற்று மீசரும்
வெறுவியர் வேறினி விளைவதி யாதென்ருன்.

முறுவல்வாள் முகத்தினன், முளரிக் கண்ணனும்,
'அறிவ !நீ, "அடுவல்"என்று அமைதிஆம் எனின்,
இறுதியும் காவலும் இயற்றும் ஈசறும்
வெறுவியர்; வேறுஇனி விளைவது யாது ?'என்ருன்.

பொ :- செந்தாமரைக் கண்ணனுகிய இராமனும் (இலக்குவனது வஞ்சினத்தைக் கேட்டுப்) புன்முறுவல் பூத்த முகத்தினனுகி, 'அறிவுடைய தம்பியே! நீ (பகைவரைக்) கொல்வேன்' எனத் துணிந்து எழுந்தனையாயின், அழித்தற்ரெழிலையும் காத்தற்ரெழிலையும் செய்யும் இரு பெருங்கடவுளரும் தத்தமக்குரிய தொழில்களையிழந்து வெறுமையுறுவர். (நின் கருத்திற்கு) மாருக இனி இவ்வுலகில் நிகழத்தக்கது யாதுளது ?

கு :- முளரிக் கண்ணனும், முறுவல் வாண்முகத்தினனுய் 'அறிவ...............விளைவது யாது' என்ருன் என்க. முளரிக்

கண்ணன்-செந்தாமரை மலர்போலும் கண்களையுடையவன்; என்றது, திருமாலின் அமிசமாகிய இராமனை. முறுவல்-புன்சிரிப்பு, வாள்-ஒளி. 'அறிவுடைய தம்பியாகிய நீ கொல்லுதற்றொழிலை மேற் கொண்டெழுந்தாயாயின், அத் தொழிலைத் தனக்கே உரியதாகக் கொண்ட உருத்திரமூர்த்திக்கும் வேலையில்லை. காத்தற்றொழிலைத் தனக்குரியதாகக் கொண்ட திருமாலும் நினக்கு மாறாகத் தன்காவற் றொழிலை நிறைவேற்றுதற்கியலாது தன் தொழிலைக் கைவிடுதல் திண்ணம். ஆகவே அவ்விருவரும் தாம்தாம் கொண்டுள்ள தொழிலையிழந்து வெறுமையுற்றவராவர் என்பான், 'அறிவ! நீ 'அடுவல்' என்று அமைதியாம் எனின், இறுதியும் காவலும் இயற் றும் ஈசரும் வெறுவியர்' என்றான். இறுதி-அழித்தற்றொழில். காவல்-காத்தற்றொழில், முறையே அத் தொழில்களை நிகழ்த்தும் ஈசர் ஆவார் சிவனும் திருமாலும் ஆகிய இருபெருங்கடவுளர். (45)

## இராமனைத் தொழுது இலக்குவன் போர்க்குப் புறப்படுதல்

8618. சொல்லது கேட்டடி தொழுது சுற்றிய
பல்பெருந் தேரொடு மரக்கர் பண்ணையைக்
கொல்வலிங் கன்னது காண்டி கொல்லென
ஒல்லையி லெழுந்தன னுவகை யுள்ளத்தான்.

சொல்அது கேட்டு, அடிதொழுது, 'சுற்றிய
பல்பெருந் தேரொடும் அரக்கர் பண்ணையைக்
கொல்வல்; இங்கு அன்னது காண்டிகொல்!' என,
ஒல்லையில் எழுந்தனன்—உவகை உள்ளத்தான்.

பொ-ள்:- மகிழ்ச்சி நிரம்பிய உள்ளத்தினனாகிய இலக்குவன், (இராமபிரான் உளமுவந்து கூறிய) மொழியாகிய அதனைக் கேட்டு (அவனுடைய) திருவடிகளை வணங்கி (போர்க்களத்திற்) சூழ்ந்துள்ள பலவாகிய தேர்களோடும் இராக்கதர் தொகுதியை இப்பொழுதே கொன்றொழிப்பேன்; இங்கு அதனைக் காண்பாயாக' என்று கூறி விரைவிற் போருக்குப் புறப்பட்டான்.

கு.- உவகை உள்ளத்தான், சொல அது கேட்டு, அடி தொழுது, 'தேரொடும் அரக்கர் பண்ணையைக் கொல்வல், அன்னது காண்டி' என ஒல்லையில் எழுந்தனன் என்க. சொல் அது-சொல்லாகிய அது. பண்ணை-தொகுதி. காண்டி-காண்பாயாக, கொல், அசை நிலை. என-என்று கூறி. ஒல்லை-விரைவு. (46)

### அங்கதன் அரவாரித்தலும் இராமனது சங்கம் ஒலித்தலும்

8619. அங்கத ணர்த்தன னசனி யேறென
மங்குனின் றதிர்ந்தன வயவன் றேர்புனே
சிங்கமு நடுக்குறத் திருவி ஞயகன்
சங்கமொன் றெலித்தது கடலுந் தள்ளுற.

அங்கதன் அர்த்தனன்,அசனி ஏறுஎன;
மங்குல்நின்று அதிர்ந்தன ; வயவன் தேர்புனே
சிங்கமும் நடுக்குற, திருவின் நாயகன்
சங்கம்ஒன்று ஒலித்தது, கடலும் தள்ளுற,

பொ :- (இலக்குவனேச் சுமந்து செல்லும்) அங்கதன் இடியேற்றினையொத்துப் போர்முழக்கஞ்செய்தான். (அதனல் விண்ணிடத்தே) மேகங்கள் நின்று அதிர்ந்தன. வீரனுகிய இந்திரசித்தின் தேரிற் பூட்டியுள்ள சிங்கங்களும் நடுக்கமடையவும் கடலோசையும் பின்னிடவும் திருமகள் கேள்வனுகிய இராமனது சங்கம் ஒன்று முழங்கியது.

கு :- வானிலுள்ள மேகங்கள் அதிர அங்கதன் இடியேறென ஆரவாரித்தான். இந்திரசித்தின் தேரிற் பூட்டப்பட்ட ஆயிரம் சிங்கங்களும் நடுக்கமுறும்படி இராமனது வெற்றிச்சங்கம் ஒன்று ஒலித்தது என்க. மங்குல்-மேகம். வயவன்-வீரன்; என்றது இந்திரசித்தினே. வயவன் தேர்புனே சிங்கமும் நடுக்குற, கடலும் தள்ளுற, திருவின் நாயகன் சங்கம் ஒன்று ஒலித்தது என்க. தள்ளுதல்-பின்னே தள்ளப்பட்டுத் தாழ்தல். (47

### அரக்கர் இலக்குவன்மேல் படைக்கலங்களே வீசுதல்

8620. எழுமழுச் சக்கர மீட்டி தோமரம்
முழுமுரட் டண்டுவேன் முசுண்டி மூவிலே
கழுவயில் கப்பணங் கவண்கல் கன்னகம்
விழுமழைக் கிரட்டிவிட் டரக்கர் வீசினுர்.

எழு,மழு, சக்கரம், ஈட்டி, தோமரம்,
முழுமுரண் தண்டு;வேல், முசுண்டி, மூவிலே
கழு,அயில், கப்பணம், கவண்கல், கன்னகம்,
விழுமலைக்கு இரட்டிவிட்டு, அரக்கர் வீசினுர்..

பொ:-எழு,மழு,சக்கரம், ஈட்டி,தோமரம்,நிறைந்த வன்மையுள்ள தண்டம், வேல், முசுண்டி, முவிலைச்சூலம், கழு, கூரிய கப்பணம், கவண்கல், கன்னகம் ஆகிய இப் படைக்கலங்களை(விண்ணினின்று) சொரியும் மழையைக்காட்டிலும் இருமடங்காக அரக்கர்கள் வீசி எறிந்தார்கள்.

கு :- அரக்கர், எழு, மழு...கன்னகம் என்பவற்றை மழைக்கு இரட்டி விட்டு வீசினர் என்க. எழு-கணையமரம். தோமரம்-இருப்புலக்கை. முரண்-வன்மை. முசுண்டி-ஒருவகை ஆயுதம். அயில்-கூர்மை. கப்பணம் என்பது, நெருஞ்சி முள்ளின் வடிவாக இரும்பினாற் செய்து பகைவர் சேனைகளை மேல்வராமல் தடுத்தற்பொருட்டு வீசப்படுவது. மழைக்கு-மழையினும். இரட்டி-இருமடங்கு. (48)

## இலக்குவன் அரக்கர் சேனையை அழித்தல்

8621. மீனெலாம் விண்ணினின் றொருங்கு வீழ்ந்தென
வானெலா மண்ணெலா மறைய வந்தன
தானெலாந் துணிந்துபோய்த் தகர்ந்து சாய்ந்தன
வேனிலா னனையவன் பகழி வெம்மையால்.

மீன்எலாம், விண்ணின்நின்று ஒருங்கு வீழ்ந்தென
வான்எலாம் மண்எலாம் மறைய வந்தன,
தான்எலாம், துணிந்துபோய்த் தகர்ந்து சாய்ந்தன;
வேனிலான் அனையவன் பகழி வெம்மையால்.

பொ :- விண்மீன்களெல்லாம் விசும்பினின்றும் ஒருசேர விழ்ந்தன என்னும்படி வானிடமெங்கும் மண்ணிடமெங்கும் மறைய (அரக்கர்களால் வீசப்பட்டு) வந்தனவாகிய (ஒளிமிக்க) ஆயுதங்கள் எல்லாம், காமவேளையொத்த பேரழகனாகிய இலக்குவன் எய்த அம்புகளின் கடிய தாக்குதலால் துண்டிக்கப்பட்டுப் பொடியாகிச் சிதறி வீழ்ந்தன.

கு :- வானெலாம் மண்ணெலாம் மறைய வந்தன என்றது, அரக்கர் வீசிய படைக்கலங்களை வந்தன, வினையாலணையும் பெயர். வந்தனஎலாம்,வேனிலான்அனையவன் பகழிவெம்மையால் துணிந்து தகர்ந்து சாய்ந்தன என்க. தான், அசை. துணிதல்-துண்டிக்கப்படுதல், வேனிலான்-இளவேனிற் பருவத்திற்குச் சிறப்புரிமையுடைய மன்மதன். வேனிலான் அனையவன்-மன்மதனையொத்த பேரழகன்; என்றது, இலக்குவனை. பகழி-அம்பு. (49)

8622. ஆயிரந் தேரொரு தொடையி னச்சிறும்
பாய்பரிக் குலம்படும் பாகர் பொன்றுவர்
நாயகர் நெடுந்தலை துமியு நாமறத்
தீயெழும் புகையெழு முலகுந் தீயுமால்.

ஆயிரம்தேர், ஒருதொடையின் அச்சு இறும்;
பாய்பரிக் குலம்படும்; பாகர் பொன்றுவர்;
நாயகர் நெடுந்தலை துமியும் நாம்அற;
தீஎழும், புகைஎழும், உலகும் தியுமால்.

பொ :- (இலக்குவன்) ஒருமுறை தொடுத்த அம்பினால் (அரக்கர்களுடைய) ஆயிரந் தேர்களும் அச்சுமுறிந்து அழிவன; (தேர்களிற் பூட்டிய) பாய்ந்துசெல்லும் குதிரைத் தொகுதிகள் இறந்தொழிவன; தேர்ப்பாகர் இறந்து வீழ்வர்; படைத்தலைவர்களின் பெருமை வாய்ந்த தலைகள் பெயருங்கெடத் துண்டிக்கப்படுவன; (அம்பு பட்ட இடங்களிலே) தீ தோன்றி எரியும்; புகைப்படலம் மேல் எழும்; உலகமும் தீய்ந்து வெதும்பும்.

கு :- ஒரு தொடையின்-ஒருமுறை தொடுத்து எய்த அம்பினால்; இன் ஏதுப்பொருளில் வந்தது. ஒரு தொடையின், ஆயிரந் தேர் அச்சு இறும்; பரிக்குலம்படும்; பாகர் பொன்றுவர்; நாயகர் நெடுந்தலை நாம் அறத்துணியும்; தீஎழும்; புகை எழும்; உலகும் தீயும் என்க. நாம் அற-பெயரும் இல்லையாயொழிய. நாமம் என்பது நாம் எனக் குறைந்தது. (50)

8623. அடியறுந் தேர்முர ணாழி யச்சிறும்
வடிநெடுஞ் சிலையறுங் கவச மார்பறுங்
கொடியறுங் குடையறுங் கொற்ற வீரர்தம்
முடியறு முரசறு முகிலுஞ் சிந்துமால்.

அடிஅறும் தேர்;முரண் ஆழிஅச்சு இறும்;
வடிநெடுஞ் சிலைஅறும்; கவசமார்பு அறும்;
கொடிஅறும்; குடை அறும்; கொற்ற வீரர்தம்
முடிஅறும்; முரசுஅறும்; முகிலும் சிந்துமால்.

பொ :- (அன்றியும் அவ் ஒரு தொடுப்பினால்) தேர்களின் அடிப் பகுதி அற்றுச் சிதையும்; வலிய தேர்ச் சக்கரங்களும் அச்சும் அற்றுச் சிதைவன; கூரிய அம்புடன்கூடிய விற்கள் துணிக்கப்

பட்டு முறிவன ; (வீரர்களின்) கவசம் அணிந்த மார்பும் அறுபட்டு அழிவன ; கொடிகள் அறுபடுவன ; குடைகள் அறுபடுவன ; வெற்றிமிக்க வீரர்கள் (அணிந்த) முடிகள் சிதைந்து வீழ்வன ; முரசங்கள் அறுபடுவன ; (வானிலுள்ள) மேகங்களும் சிதறி வீழ் வனவாயின.

கு :- தேர்களின் அடி முதலியன அறுதற்கு ஏதுவாக மேற் செய்யுளில் வந்த 'ஒரு முறை தொடுப்பின்' என்ற தொடர் இங்கும் வருவித்துரைக்கப்பட்டது. ஆழி-தேர்ச்சக்கரம். (51)

8624. இன்னதோ ருறுப்பிவை யிணைய தேர்பரி
மன்னவ ரிவரிவர் படைஞர் மற்றுளார்
என்னவோர் தன்மையுந் தெரிந்த தில்லையால்
சின்னபின் னங்களாய் மயங்கிச் சிந்தலால்.

'இன்னது ஓர்உறுப்பு; இவைஇணைய தேர்பரி;
மன்னவர் இவர் ; இவர் படைஞர், மற்றுளார்'
என்னஓர் தன்மையும் தெரிந்தது இல்லையால்—
சின்னபின்னங் களாய் மயங்கிச் சிந்தலால்.

பொ :- (இவ்வாறு இலக்குவனது அம்பினால் அரக்கர் சேனைகள்) கண்ட துண்டங்களாகச் சிதைவுற்று ஒன்றோடொன்று மயங்கிச் சிதறிக் கிடத்தலால், 'காணப்படும் இது இன்ன உறுப்பு, இவை இத்தன்மையவாகிய தேர்களும் குதிரைகளும், இவர் அரசர்; இவர் கள் படை வீரர்களும் ஏனையோரும் என இவ்வாறு பகுத்துணர்தற் கேற்ற ஒரு தன்மையும் தெரிந்ததில்லை.

கு :- சின்னபின்னங்களாய் மயங்கிச் சிந்தலால், ஓர் தன்மையும் தெரிந்தது இல்லை என்க. சின்ன பின்னம் ஆதலாவது, கண்ட துண்டங்களாய்ச் சிதைந்து உருமாறியழிதல். (52)

8625. தந்தையர் தேரிடைத் தனயர் வன்றலை
வந்தன தாதையர் வயிர வான்சிரம்
சிந்தின காதலர்க் கியைந்த தேரிடை
அந்தரத் தம்பொடு மற்றெ ழுந்தன.

தந்தையர் தேரிடைத் தனயர் வன்தலை
வந்தன ; தாதையர் வயிர வான்சிரம்
சிந்தின காதலர்க்கு இயைந்த தேரிடை—
அந்தரத்து அம்பொடும் அற்று எழுந்தன.

பொ :- (அம்பினுல்) துணிக்கப்பட்டு அம்பொடும் விசும்பின் மேல் எழுந்தனவாகிய தலைகளில், புதல்வர்களின் வலிய தலைகள் (அவருடைய) தந்தையர் தேர்களில் வந்து வீழ்ந்தன. தந்தையர் களின் திண்மைவாய்ந்த தலைகள் (அவர்தம்) புதல்வர்கட்கு அமைந்த தேர்களிற் சிதறி வீழ்ந்தன.

கு :- அற்று, அம்பொடும் அந்தரத்து எழுந்தன-தனயர் வன் தலை, தந்தையர் தேரிடை வந்தன; தாதையர் வயிர வான்சிரம், காதலர்க்கு இயைந்த தேரிடைச் சிந்தின என இயையும். வயிரம்-திண்மை. காதலர்-புதல்வர். அந்தரம்-ஆகாயம். (53)

**8626. செம்பெருங் குருதியிற் றிகழ்ந்த செங்கண்மீன்**
**கொம்பொடும் பரவையிற் றிரியுங் கொட்பெனத்**
**தும்பையந் தொடையலார் தடக்கை தூணிவாங்**
**கம்பொடுந் துணிந்தன சிலையோ டற்றன.**

செம்பெருங் குருதியின் திகழ்ந்த; செங்கண்மீன்
கொம்போடும் பரவையில் திரியும் கொட்புஎன—
தும்பைஆம் தொடையலார் தடக்கை, தூணிவாங்கு
அம்பொடும் துணிந்தன சிலையொடு அற்றன.

பொ :- அழகிய தும்பை மாலையையணிந்த அரக்க வீரர்களுடைய பெரிய கைகள், அம்பறாத் தூணியினின்றும் பற்றி எடுக்கும் அம்பினேடும் துணிக்கப்பட்டனவாகி, (பற்றிய) வில்லுடன் அறுபட்டனவாகி, சிவந்த கண்களையுடைய மீன்கள் கொம்புடன் திரியும் சுழற்சியினைப் போன்று, செந்நிறம் வாய்ந்த குருதிப் பெரு வெள்ளத்திலே விளங்கித் தோன்றின.

கு :- இருதிறத்துப் படைவீரர்களும் ஒரு களத்திலே எதிர் எதிராக நின்று பொரும்போரில் தமது பொருதற்றெழிலுக்கு அடையாளமாகத் தும்பை மலர்மாலையை அணிந்துகொள்வர் என்பது தமிழர் போர்முறையமைப்பாகும். இதனை உளத்துட்கொண்டு இந்திரசித்தும் இலக்குவனும் எதிர்நின்று பொரும் இப் போரிற் கலந்துகொண்ட அரக்க வீரர்களைத் 'தும்பையந் தொடையலார்' எனக் குறித்தார் ஆசிரியர். 'அதிரப் பொருவது தும்பை' எனவரும் தொடர் இங்கு நினைத்தற்குரியதாகும். வில்லேந்திப் போர் செய்யும் அரக்க வீரர்களின் கைகள், அறுபட்ட வில்லையும் அம்பையும் பற்றிய நிலையில் துணிக்கப்பட்டனவாய்; இரத்த வெள்ளத்திற் கிடப்பவை, கடலில் கொம்பொடு திரியும் சிவந்த கண்களையுடைய

மீன்களை யொத்துக் காணப்பட்டன என்பதாம். அம்பொடுந் துணிந்தன சிலையொடு அற்றன தடக்கை, செங்கண் மீன் கொம் பொடும் பரவையில் திரியும் கொட்பு என, செம்பெருங் குருதியில் திகழ்ந்த என முடிக்க. வில்லையும் அம்பையும் பற்றியவண்ணம் அறுபட்டுக் குருதி வெள்ளத்திற்கிடக்கும் கைகட்குக் கொம்பு மீன் கள் உவமை. (54)

8627. தடிவன கொடுஞ்சரந் தள்ளத் தள்ளுற
மடிவன கொடிகளுங் குடையு மற்றவும்
முடிவுறு பெரும்பிணக் களத்தின் மொய்த்தன
படிவன வொத்தன பறவை பன்மைய.

தடிவன கொடுஞ்சரம் தள்ள, தள்ளுற
மடிவன கொடிகளும், குடையும், மற்றவும்,
முடிவுஅறு பெரும்பிணக் களத்தின் மொய்த்தன
படிவன ஒத்தன, பறவை பன்மைய.

பொ :- தடிந்து அழிப்பனவாகிய கொடுமையுடைய அம்புகள் தடிந்து தள்ளுதலால் தள்ளப்பட்டு வீழ்ந்து கிடப்பனவாகிய கொடி களும் குடைகளும் ஏனையவும் எல்லையற்ற பெரும்பிணங்களை யுடைய போர்க்களத்திலே நெருங்கியுள்ளவை (பிணங்களையுண்ணு தற்குப்) பறவைகள் பலவாகப் படிந்த தன்மையினை ஒத்தன.

கு :- கொடிகளும் குடைகளும் மற்றவும், பெரும்பிணக் களத் தின் மொய்த்தன, பறவை பன்மைய படிவன ஒத்தன என்க. முடிவு அறு-எல்லை அற்ற. (55)

8628. சிந்து ரங்களின் பருமமும்
பகழியுந் தேரும்
குந்து வன்னெடுஞ் சிலைமுதற்
படைகளுங் கொடியும்
இந்த ணங்களா யிறந்தவர்
விழிக்கன லிலங்க
வெந்த வெம்பிணம் விழுங்கின
கழுதுகள் விரும்பி.

சிந்து ரங்களின் பருமமும்,
பகழியும், தேரும்,
குந்துவல் நெடுஞ்சிலை முதல்
படைகளும், கொடியும்,
இந்த னங்களாய், இறந்தவர்
விழிக்கனல் இலங்க,
வெந்தவெம் பிணம் விழுங்கின,
கழுதுகள் விரும்பி.

பொ :- யானைகளின் மேலிடும் தவிசும் அம்பும் தேரும் வளைந்த வலிய நெடிய வில் முதலிய படைகளும் கொடியும் விறகுகளாய், (அமைய) இறந்த வீரர்களுடைய (சினமிக்க) கண்களாகிய தீ (கொழுந்துவிட்டு) விளங்க வெந்தன போன்ற வெம்மையுடைய பிணங்களைப் பேய்கள் விரும்பி விழுங்கின.

கு :- சிந்துரம்—யானை. பருமம்—யானைமேல் இடும் தவிசு. குந்துதல்—வளைதல். வெந்த வெம்பிணம் கழுதுகள் விரும்பி விழுங்கின என்க. கழுது—பேய். இஃது இயைபுருவகம் என்னும் அணியின் பாற்படும். (56)

8629. சில்லி யூடறச் சிதறின
சிலசில கோத்த
வல்லி யூடற மறிந்தன
புரவிகண் படியப்
புல்லி மண்ணிடைப் புரண்டன
சிலசில போராள்
வில்லி சாரதி யொடும்படத்
திரிந்தன வெறிய—

சில்லி ஊடுஅறச் சிதறின
சில;சில, சேர்த்த
வல்லி ஊடுஅற மறிந்தன
புரவிகள் மடியப்
புல்லி மண்ணிடைப் புரண்டன
சில;சில போர்ஆள்
வில்லி சாரதி யொடும்பட,
திரிந்தன வெறிய.

பொ :- தேர்கள் சில, சக்கரங்கள் இடையில் முறியச் சிதறின; சில, இறுகப் பிணித்த குசைக் கயிறுகள் இடையில் அறுபட்டொழியக் குதிரைகள் குப்புற வீழ்ந்து இறந்துபட, தரையிற் பொருந்தி உருண்டன; சில, போர்த்தொழிலை ஆள்பவனுகிய வில் வீரன் பாகனுெடும் இறந்துபட (யாரும் அமர்வாரின்றி) வெறுமையுடையனவாய்த் திரிந்தன.

கு :- சில்லி—(தேர்ச்) சக்கரம். ஊடு அறுதல்—இடையில் முறிந்து அறுபடுதல். வல்லி—கயிறு; ஈண்டுக் குதிரைகளைத் தேருடன் பிணித்துள்ள குசைக் கயிற்றை யுணர்த்தியது. மறிதல்—குப்புற வீழ்தல். வில்லி—வில் வீரன். சாரதி—தேர்ப்பாகன். இதுவும் அடுத்த செய்யுளும் போர்க்களத்திற் சிதைவுற்ற அரக்கர்களுடைய தேர்களின் அழிவினைவிரித்துரைப்பன. அடுத்த செய்யுளின் இறுதியிலுள்ள இரதம் என்னும் எழுவாய் இங்கும் வருவித்துரைக்கப்பட்டது. (57)

8630. அலங்கு பன்மணிக் கதிரன
குருதியி னழுந்தி
விலங்கு செஞ்சுடர் விடுவன
வெளியின்றி மிடைந்த
குலங்கொள் வெய்யவர் மறுகிடத்
தீயிடைக் குளித்த
இலங்கை மாநகர் மாளிகை
நிகர்த்தன விரதம்.

அலங்கு பல்மணிக் கதிரன,
குறுதியின் அழுந்தி
விலங்கு செஞ்சுடர் விடுவன
வெளியின்றி மிடைந்த,
குலம்கொள் வெய்யவர் மறுகிடத்
தீயிடைக குளித்த
இலங்கை மாநகர் மாளிகை
நிகர்த்தன—இரதம்.

பொ :- விட்டு விளங்கும் பலவகை மணிகளின் ஒளிக்கற்றைகளை யுடையனவும் இரத்த வெள்ளத்தில் அழுந்தினமையால் மேலே பரவிப் பாயும் செந்நிற வொளியை வீசுவனவும் ஆகி, இடைவெளியின்றி நெருங்கிய தேர்கள், கூட்டமாகப் பொருந்திய கொடியோ

ராகிய அரக்கர்கள் மனங்கலங்கி வருந்த (அநுமனாற் கொளுவப் பட்ட) தீயினுள்ளே அழுந்திய இலங்கைப் பெரு நகரத்தினுள்ளே புள்ள மாளிகைகளை ஒத்துத் தோன்றின.

கு:- அலங்குதல்—விட்டு விளங்குதல். விலங்குதல்—மேலே குறுக்கிட்டுப் பரவுதல், அலங்கு பல்மணிக் கதிரன, குருதியின் அழுந்திச் செஞ்சுடர் விடுவன, வெளியின்றி மிடைந்த—இரதம், தீயிடைக் குளித்த இலங்கை மாநகர் மாளிகை நிகர்த்தன என்க. போர்க்களத்திலே குருதி வெள்ளத்திலே அழுந்திய தேர்களுக்கு அநுமனாற் கொளுவப்பட்ட தீயினாற் சூழப்பட்ட இலங்கை நகர மாளிகைகளை உவமையாகக் கூறினர். (58)

## இலக்குவனுடன் சேர்ந்து இராமனும் அம்பு சொரிதலால் தன் சேனைகள் மடிய இந்திரசித்து தனித்து நிற்றல்

8631. ஆன காலையி லிராமனு
மயின்முகப் பகழி
சோனை மாரியிற் சொரிந்தன
னனுமனைத் தூண்டி
வான மானங்கண் மறிந்தெனத்
தேரெலா மடியத்
தானுந் தேருமே யாயின
னிராவணன் றனயன்

ஆன காலையில், இராமனும்,
அயில்அமுகப் பகழி
சோனைமாரியின் சொரிந்தனன்,
அனுமனைத் தூண்டி;
வான மானங்கள் மறிந்தெனத்
தேர்எலாம் மடிய,
தானும் தேருமே ஆயினன்,
இராவணன் தனயன்.

பொ:- அப்பொழுது இராமபிரானும் (தன்னைத் தாங்கியுள்ள) அநுமனை (இந்திரசித்தின் முன்னர்)ச் செல்லுமாறு செலுத்திக் கூரிய முனையுடன் கூடிய அம்புகளை விடாப் பெருமழைபோற்

சொரிந்தான். (அதனால்) அரக்கர்களுடைய தேர்களெல்லாம், வான் வழியே செல்லும் விமானங்கள், குப்புற விழ்ந்தாற்போன்று சிதைந்து விழ்ந்தமையால், இராவணன் மைந்தனாகிய இந்திரசித்து தானும் தன்னுடைய தேருமேயாக (எஞ்சி நிற்கத்) தனிமையுற்று வருந்தினான்.

கு :- இராமனும் என்புழி உம்மை, இலக்குவனேயன்றி இராமனும் எய்தனன் என இறந்தது தழுவிய எச்சவும்மை யாகும். இராமனும் அநுமனைத் தூண்டி அயில்முகப் பகழி சோணை மாரியின் சொரிந்தனன்; தேரெலாம் வான மானங்கள் மறிந்தென மடிய இராவணன் தனயன், தானும் தேருமே ஆயினன் என இயைத்து ரைக்க. அயில் முகப் பகழி—கூரிய முனையினுடைய அம்பு. அயில்—கூர்மை. சோணை மாரி—விடாது பெய்யும் பெருமழை. தூண்டுதல்—செல்லுமாறு செலுத்துதல். மானம்—விமானம். இராவணன் தனயன் என்றது, இந்திரசித்தினை. (59)

**இந்திரசித்து, இராம இலக்குவரை நோக்கி, 'இருவிரும் சேர்ந்து என்னுடன் பொருதிரோ ? அன்றி ஒருவர் ஒருவிராய் நின்று பொருதிரோ ? என வினவுதல்**

8632. பல்வி லங்கொடு புரவிகள்
 பூண்டதேர்ப் பரவை
வல்வி லங்கல்போ லரக்கர் தங்
 குழாத்தொடு மடிய
வில்வி லங்கிய வீரரை
 நோக்கினன் வெகுண்டான்
சொல்வி லங்கலன் சொல்லின
 னிராவணன் றோன்றல்

பல்வி லங்கொடு புரவிகள்
 பூண்ட தேர்ப்பரவை
வல் விலங்கல்போல் அரக்கர்தம்
 குழாத்தொடு மடிய,
வில்வி லங்கிய வீரரை
 நோக்கினன், வெகுண்டான்,
சொல், விலங்கலன், சொல்லினன்
 -இராவணன் தோன்றல்.

பொ :- பல விலங்குகளுடன் குதிரைகள் பூட்டப்பட்ட தேர்த் தொகுதிகள் வலிய மலைகளைப் போன்று அரக்கர் கூட்டத்துடன் மடிந்து கிடக்க(க் கண்ட) இராவணன் மைந்தனாகிய இந்திரசித்து, (அவற்றை) விற்றொழிலால் அழித்தொழித்த வீரர்களாகிய இராம இலக்குவர் இருவரையும் நோக்கி வெகுண்டவனாகி (ப் போரிற்) பின்னிடாதவனாய் (ப் பின்வரும்) மொழியினைக் கூறினான்.

கு :- விலங்கு—மிருகம். பரவை—கடல்; ஈண்டுத் தொகுதி என்னும் பொருளில் ஆளப் பெற்றது. விலங்கல்—மலை. வில் விலங்கிய வீரர் என்றது, விற் படையாற் பொருது அழித்த வில் வீரராகிய இராம இலக்குவர் இருவரையும், விலங்குதல்—மாறுபட்டு அழித்தல். இராவணன் தோன்றல், விலங்கலன் சொல் சொல்லினன் என்க. தோன்றல்—மகன். விலங்கலன், முற்றெச்சம். விலங்குதல்—(போரிற்) பின் வாங்குதல். (60)

8633. இருவி ரென்னொடு பொருதிரோ
வன்றெனி னேற்ற
ஒருவிர் வந்துயிர் தருதிரோ
வும்படை யோடும்
பொருது பொன்றுதல் புரிதிரோ
வுறுவது புகலும்
தருவ லின்றும்மக் கேற்றுள
தொன்றெனச் சலித்தான்.

'இருவிர் என்னொடு பொருதிரோ?
அன்றுஎனின், ஏற்ற
ஒருவிர் வந்துஉயிர் தருதிரோ?
உம் படையோடும்
பொருது பொன்றுதல் புரிதிரோ?
உறுவது புகலும்,
தருவல், இன்றுஉமக்கு ஏற்றுளது
'ஒன்று'எனச் சலித்தான்.

பொ :- (இராம இலக்குவர் ஆகிய) நீங்கள் இருவீரும் (ஒருசேர இயைந்து) என்னுடன் போர் செய்கின்றீர்களா? அன்றேல் (ஒருவிர் ஒருவிராய்த் தனித்து) வந்து உயிரைத் தருகின்றீர்களா? (அன்றேல்) நுமக்குரிய (வானர) சேனைகளோடும் கூடி (என்னுடன்) போர் செய்து இறந்தொழிதலைச் செய்கின்றீர்களா? (இவற்

றுள் நும் ஆற்றலுக்கும் விருப்பத்திற்கும்) பொருந்துவதொன்றைச் சொல்வீராக. நுமக்கு ஏற்புடையதொன்றை இன்று யான் தருகின் றேன் என வெகுண்டு கூறினன் (இந்திரசித்து).

கு : - நீவிர் இருவிரும் என்னுடன் தனித்தனியே பொருதாலும் இருவரும் ஒருங்கு கூடியும் சேனைகளோடு சேர்ந்தும் பொருதாலும் நீவிர் எல்லோரும் ஒருசேர இறந்தொழிதல் திண்ணம் என்பான், 'இருவிர் என்னொடு பொருதிரோ, ஒருவிர் வந்து உயிர்தருதிரோ, உம் படையோடும் பொருது பொன்றுதல் புரிதிரோ' என இராம இலக்குவரை நோக்கி இந்திரசித்து வினவினன். சலித்தல்-வெகுண்டு ரைத்தல். (61)

## 'யானே உன்னைக் கொல்வதாக வஞ்சினஞ் செய்துள்ளேன்' என இலக்குவன் மறுமொழி பகர்தல்

8634. வாளிற் றிண்சிலைத் தொழிலினின்
மல்லினின் மற்றை
ஆளுற் றெண்ணிய படைக்கல
மெவற்றினு மமரில்
கோளுற் றுன்னொடு குறித்தது
செய்துயிர் கொள்வான்
சூளுற் றெனிது சரதமென்
றிலக்குவன் சொன்னன்

'வாளின், திண்சிலைத் தொழிலின்,
மல்லினின், மற்றை
ஆளுற்று எண்ணிய படைக்கலம்
எவற்றினும் அமரில்
கோளுற்று உன்னொடு குறித்தது
செய்து, உயிர்கொள்வான்
சூளுற்றேன்; இதுசரதம்' என்று,
இலக்குவன் சொன்னன்.

பொ : - வாட்படையினாலும் திண்ணிய வில்லினாலும் மல் தொழிலினாலும் ஆளுதலுற்று எண்ணிய ஏனைய ஆயுதங்கள் எல் லாவற்றாலும் போரில் வலிமையை மேற்கொண்டு நின்னொடு

(எதிர்த்து நின்று) நீ குறித்த போர்த் தொழிலைச் செய்து உன் உயிரைக் கவர்ந்து கொள்வதற்குச் சூளுறவு செய்துவிட்டேன்; இது சத்தியம்' என்று இலக்குவன் (இந்திரசித்தனை நோக்கி) மறு மொழி கூறினான்.

கு: - 'நுமக்கு ஏற்றுள்ளது ஒன்று புகலும்' என இந்திரசித்து கூறிய மொழியினைக் கேட்ட இலக்குவன், அவனை நோக்கி, 'நீ குறித்த போர்வகை ஏதுவாயினும் ஒருவனாகவே அதனை மேற்கொண்டு தனிநின்று பொருது நினது உயிரைக் கவர் வதாச் சூளுறவு செய்துவிட்டேன். இது சத்தியம்' என மறுமொழி பகர்ந்தான் என்பதாம். சூளுறுதல் - சபதஞ் செய்தல். சரதம் - சத்தியம். (62)

## 'உன்னையான் கொல்வது உறுதி' என இந்திரசித்து இலக்குவனை நோக்கிக் கூறுதல்

8635. முன்பி றந்தவுன் றம்முனை
முறைதவிர்த் துனக்குப்
பின்பி றந்தவ னுக்குவென்
பில் பிறந் தோயை
பின்பி றந்தவ னுக்குவெ
னிதுமுடி யேனேல்
என்பி றந்தத னூற்பய
னிராவணற் கென்றான்.

'முன்பிறந்த உன்தம் முனை
முறைதவிர்த்து, உனக்குப்
பின்பு இறந்தவன் ஆக்குவென்;
பின்பிறந் தோயை
முன்பு இறந்தவன் ஆக்குவென்;
இதுமுடி யேனேல்
என், பிறந்தனால் பயன்
இராவணற்கு?' என்றான்.

பொ: - (உனக்கு) முன்னே பிறந்த உன் தமையனாகிய இராமனை (கால) முறைமை தவிர்த்து உனக்குப் பின்னே இறந்த வனாகச் செய்வேன். (அவனுக்குப்) பின் பிறந்த தம்பியாகிய உன்னை

(அவன் இறப்பதற்கு) முன்னரேயே இறந்தவனுகச் செய்வேன் இதனைச் செய்து நிறைவேற்ரு தொழிவேனுயின், இராவணன் என் னும் வேந்தனுக்கு (யான் மகனுக)ப் பிறந்ததனுல் உளதாய பயன் யாது? என (இலக்குவனே நோக்கி)க் கூறினுன் (இந்திரசித்து)

கு :- கால முறைப்படி முன்னே பிறந்த மூத்தவர்கள் முன்னர் இறத்தலும் பின்னே பிறந்த இளையவர்கள் பின்னர் இறத்தலும் உலகியற் பொதுவிதியாகவும் அம் முறையினே மாற்றி, நினக்கு முன்னே பிறந்த இராமன் நினக்குப் பின்னே இறக்கவும் அவனு டைய தம்பியாகிய நீ முன்னே இறந்தொழியவும் இங்ஙனம் நும் இருவரையும் போரிற் கொன்ருெழிப்பேன்; இதனைச் செய்யா தொழியின் யான் இராவணனுக்கு மைந்தனுகப் பிறந்த பயன் யாது? என இந்திரசித்து இலக்குவனே நோக்கிக் கூறினுன் என் பதாம். முன்பிறந்த உன் தம்முனே முறை தவிர்த்துப் பின் பிறந்தவனுக்குவென், பின் பிறந்தோயை முன் பிறந்தவனுக்கு வென் - என வரும் தொடர்களில் முன்னே பிறந்தவனைப் பின்னே பிறந்தவனுகவும் பின்னே பிறந்தவனே முன்னே பிறந்தவனுகவும் இவ்வாறு தமையன் தம்பி என்ற முறையினே மாற்றியமைப்பேன் எனச் சிலேடையால் மற்ருெரு பொருளும் தோன்றக் கூறிய நயம் உய்ந்துணரத்தகுவதாகும். (63)

8636. இலக்கு வன்னெனும் பெயருனக்
கியைவதே யென்ன
இலக்கு வன்கணைக் காக்குவெ
னிதுபுகுந் திடையே
விலக்கு வன்னென விடையவன்
விலக்கினும் வீரம்
'விலக்கு வன்னிது காணுமுன்
றமையனும் விழியால்

இலக்குவன் எனும்பெயர் உனக்கு
இயைவதே என்ன
இலக்குவன் கணைக்கு ஆக்குவென்;
"இதுபுகுந்து இடையே
விலக்குவன்'' என, விடைவன்
விலக்கினும், வீரம்
விலக்குவன்; இதுகாணும்,
உன்தமையனும் விழியால்.

பொ:-இலக்குவன் என்ற பெயர் உனக்குப் பொருத்தமுடையதே என்று (யாவரும்) கருதுமாறு (எனது) வலிய அம்புக்கு (நின்னை) இலக்கு ஆக்குவேன்; (யான் செய்யும்) இப் போரினை விலக்குவேன்' என்று சொல்லி எருதினை ஊர்தியாகவுடைய சிவபெருமானே இடையிற் புகுந்து (பொருது) விலக்கினாலும் (என்) வீரச் செயலால் (அவனைத்) தடுத்து நீக்குவேன்; (என் அம்பினால் நினக்கு உளதாகும் அழிவாகிய) இதனை உன் தமையன் இராமனும் கண்களாற் காண்பான்.

கு :- இதுமுதல் மூன்று செய்யுட்கள் ஒருதொடராய் அமைந்தன, லக்ஷ்மண: என்னும் வடமொழிப் பெயரைத் தமிழொலிக்கியைய இலக்குவன் எனத் திரித்து வழங்கிய இந்நூலாசிரியர், தாம் திரித்து வழங்கிய இதனையே இலக்குவனது இயற்பெயராக இந்திரசித்து ஏற்றுக்கொண்டு, அம்புக்கு இலக்கானவன் என்னும் காரணம் தோன்ற 'வன்கணைக்கு இலக்கு ஆக்குவேன்' என கூறியதாகக் கூறிய நயம் கூர்ந்துணரத்தக்கதாகும். இது 'விலக்குவன்' என விடையவன் இடையே புகுந்து விலக்கினும் வீரம் விலக்குவன் என இயைத்துரைக்க. விடையவன் - எருதினை ஊர்தியாகவுடைய சிவபெருமான். விலக்குதல் - தடுத்து நீக்குதல். நீ எனது அம்புக்கு இலக்காகி உயிர் துறக்கும் நிலையில் நிகழும் எனது போர் வன்மையாகிய இதனை நின் தமையனாகிய இராமன் செயலற்ற நிலையில் தன் கண்களாற் கண்டு இரங்கி வருந்துவதன்றி நின்னை இறவாது காத்துக்கொள்ளும் ஆற்றலுடையானல்லன் என்னும் குறிப்புத் தோன்ற 'இது உன் தமையனும் விழியாற் காணும்' என்றான். இச் செய்யுள் யமகம் என்னும் சொல்லணி தழுவி அமைந்துள்ளமை காண்க. (64)

8637. அறுப தாக்கிய வெள்ளத்தி
னரக்கரை யம்பால்
இறுவ தாக்கிய விரண்டுவில்
லீருங்கண் டிரங்க
மறுவ தாக்கிய வெழுபது
வெள்ளமு மாள
வெறுவி தாக்குவெ னுலகையிக்
கணத்தினோர் வில்லால்.

அறுபது ஆக்கிய வெள்ளத்தின்
அரக்கரை அம்பால்,
இறுவது ஆக்கிய இரண்டு
வில்லீரும் கண்டுஇரங்க,
மறுவது ஆக்கிய எழுபது
வெள்ளமும் மாள,
வெறுவிது ஆக்குவென், உலகை
இக்கணத்தின் ஓர்வில்லால்.

பொ : - அறுபது வெள்ளம் என்னும் தொகையினராய் அணி வகுத்து நிறுத்திய அரக்க வீரர்களையெல்லாம் இறந்தொழியும்படி செய்த (ஆற்றல்மிக்க) இரண்டு வில்லினையுடைய நீவிர் இருவரும் கண்டு இறங்கி வருந்துமாறும், (எமக்குப்) பழியினையுண்டாக்கிய எழுபது வெள்ளம் (வானர) சேனைகளும் மாண்டொழியவும் (என் கையிற்கொண்ட) ஒரு வில்லினைக்கொண்டு இவ்வுலகினை இவ்வொரு கணத்திலேயே (எவ்வுயிரும் இன்றி) வெறுமையுடையதாமாறு அழித்தொழிப்பேன்.

கு : - அறுபது வெள்ளத்தின் ஆக்கிய அரக்கரை என இயையும். ஆக்குதல் - அணி வகுத்து நிறுத்துதல். இறுவது - அழிவது, இரண்டு வில்லீரும் என்றது இராம இலக்குவர் இருவரையும். மறு - பழி. அது, பகுதிப் பொருள் விகுதி. இரங்க மாள என்னும் செயவெனெச்சங்கள். வெறுவிதாக்குவென் எனப் பிறவினைமுதல் வினை கொண்டு முடிந்தன. ஓர் வில்லால் இக்கணத்தின் உலகை வெறுவிது ஆக்குவென் என இயைத்துரைக்க. வெறுவிது ஆக்குதல் - உலகம் பாழடையுமாறு எல்லாவுயிர்களையும் கொன்று தீர்த்தல். (65)

'என் தம்பிமாருக்கும் என் சிறிய தந்தைக்கும், நும் இருவரது குருதி நீரால் இறுதிக்கடன் செய்வேன்' என இந்திரசித்து கூறுதல்

8638. கும்ப கன்னனென் றொருவனீ
ரம்பிடைக் குறைத்த
தம்பி யல்லன்யா னிராவணன்
மகனொரு தமியேன்

எம்பி மாருக்கு மென்சிறு
தாதைக்கு மிருவீர்
செம்பு ணீர்கொடு கடன்கழிப்
பேனெனத் தீர்ந்தான்.

'கும்பகன்னன் என்று ஒருவன்,
நீர்அம்பிடைக் குறைத்த
தம்பி அல்லன்யான்; இராவணன்
மகன்;ஒரு தமியேன்;
எம்பி மாருக்கும் என்சிறு
தாதைக்கும், இருவீர்
செம்புணீர் கொடு கடன்
கழிப்பேன்'எனத் தீர்ந்தான்.

பொ: - நீவிர் அம்பினாற் சிதைத்தழித்த கும்பகன்னன் என்று பெயர் பூண்ட (இராவணன்) தம்பி அல்லன் யான்; இராவணனுக்கு மகன் (யான்); ஒப்பற்ற தனி வீரனாகிய யான் (நும்மாற் கொல்லப் பட்ட) என்னுடைய சிறிய தந்தையாகிய கும்பகன்னனுக்கும் (இராம இலக்குவர் என்னும்) நும் இருவருடைய செந்நிறம் வாய்ந்த குருதி நீரைக் கொண்டு இறுதிக் கடனை நிகழ்த்தி முடிப்பேன் எனச் சொல்லி முடித்தான் (இந்திரசித்து).

கு: - 'தம்பி அல்லன் யான்' என்றது, தம்பியாகிய அவனை யொத்து நும்முடைய அம்புகளாற் குறைதற்குரிய எளிமையுடையோ னல்லன் என அறிவுறுத்தியவாறு. 'யான் இராவணன் மகன்' என்றது, தேவர்கள் முதலிய யாவரையும் வென்ற இராவணனையொத்த பேராற்றல் படைத்த மைந்தன் யான் என்றவாறு. எம்பிமார் என்றது, அச்சுகுமாரன், அதிகாயன் முதலியோரை. சிறுதாதை—சிற்றப்பன்; என்றது கும்பகன்னனை. செம்புணீர்—இரத்தம். கடன் என்றது, தம் குடியில் இறந்தார் பொருட்டுச் செய்யக்கடவ நீர்க் கடனை. (66)

'அரக்கராகிய நும்மினத்தார்க்கெல்லாம் ஒருசேர இறுதிக்கடன் செய்தற்கு உள்ளவன் வீடணனே' என இலக்குவன் மொழிதல்

8639. அரக்க ரென்பதோர் பெயர்படைத்
தீர்க்கெலா மடுத்த
புரக்கு நன்கடன் செயவுளன்
வீடணன் போந்தான்

**கரக்கு நுந்தைக்கு நீசெயக்**
**கடவன கடன்கள்**
**இரக்க முற்றுனக் கவன்செயு**
**மென் றன னிளையோன்.**

'அரக்கர் என்பது ஓர்பெயர்
படைத்தீர்க்கு எலாம்அடுத்த
புரக்கும் நன்கடன் செயஉளன்,
வீடணன் போந்தான்;
கரக்கும் நுந்தைக்கு நீசெயக்
கடவன கடன்கள்
இரக்கம் உற்று,உனக்கு அவன்செயும்'
என்றனன், இளையோன்.

பொ :- 'அரக்கர் என்று கூறப்படுவதோர் பெயருடையிராகிய நும் இனத்தார்க்கெல்லாம் பொருந்திய காத்தற்குரிய நல்ல (ஈமக்) கடன்களைச் செய்தற்கு (உன் சிற்றப்பனாகிய) வீடணன் எம்மை அடைந்துள்ளான். (இறந்து) மறையும் நும் தந்தையாகிய இராவண னுக்கு (மைந்தனாகிய) நீ செய்தற்குரிய (ஈமக்) கடன்களை (நின் தந்தையாகிய) அவனே புலம்புதலுற்று உனக்குச் செய்வான்' என (இந்திரசித்தை நோக்கி)க் கூறினான் இளையோனாகிய இலக்குவன்.

கு :- அடுத்த, புரக்கும் என்னும் பெயரெச்சங்கள் நன்கடன் என்னும் பெயரைக் கொண்டன. அடுத்த—ஏற்புடையதாகப் பொருந்திய. புரத்தல்—நகரத்தில் வீழ்ந்து எண்ணில்லாத காலம் அல்லலுழவாதவாறு ஈடேற்றிக் காத்தல். கரத்தல்—மறைதல்; இறத் தல். அவன் இரக்கமுற்று உனக்குச் செய்யும் என இயையும். 'எம்பிமாருக்கும் என் சிறு தாதைக்கும், இருவீர் செம்புணீர் கொடு கடன் கழிப்பேன்' என இந்திரசித்து கூறியதனைக் கேட்ட இலக்கு வன், 'அரக்கர் குலத்தீர் எல்லீரும் இறந்துபடுதல் உறுதியாதலை முன்னமேயுணர்ந்து நுங்களெல்லார்க்கும் இறுதிக் கடன் செய்வதற் கென்றே வீடணன் எம்மை அடைந்துள்ளான். எனவே, உன் தம்பி மாருக்கும் சிறிய தந்தை கும்பகன்னனுக்கும இறுதிக்கடன் செய்ய வேண்டுமே என்ற கவலை உனக்கு வேண்டுவதில்லை. இனி நின் தந்தைக்கு நீ செய்யக்கடவ இறுக்கடனைச் செய்யவொண்ணாதவாறு என்னால் அம்பினால் முன்னமே நீ இறந்துபட்ட நிலையில், நின் தந்தை யாகிய இராவணனே நினக்குரிய இறுதிக் கடனைப புலம்புதலுற்றுச் செய்ய இருக்கின்றான்' என இந்திரசித்தினை நோக்கிக் கூறினான் என்பதாம். (67)

## இந்திரசித்து வெகுண்டு கடும்போர் புரிதல்

8940. ஆன காலையி லயிலெயிற்
றரக்கனெஞ் சழன்ருன்
வானும் வையமுந் திசைகளும்
யாவையு மறையப்
பானல் வேலையைப் பருகுவ
சுடர்முகப் பகழி
சோனை மாரியி னிருமடி
மும்மடி சொரிந்தான்.

ஆன காலையில் அயில்எயிற்று
அரக்கன்நெஞ்சு அழன்ருன்;
வானும் வையமும் திசைகளும்
யாவையும் மறைய,
பால்நல் வேலையைப் பருகுவ
சுடர்முகப் பகழி,
சோனை மாரியின் இருமடி
மும்மடி சொரிந்தான்.

பொ:- (அவ்வாறு இலக்குவன் கூறிய) அப்பொழுது கூரிய பற்களையுடைய அரக்கனுகிய இந்திரசித்து, மனம் கொதிப்புறவனுகி, நல்ல பால்போலும் (வானர சேனைகளாகிய) கடலைப் பருகி வற்றச் செய்பவனுகிய தீயினை முனையிற்கொண்ட அம்புகளை வானிடமும் மண்ணிடமும் திசைகளும் மறையும்படி விடாத பெருமழையினும் இருமடங்கு மும்மடங்கு (மிகுதியாகப்) பொழிந்தான்.

கு:- அயில்—கூர்மை. அயில் எயிற்று அரக்கன் என்றது, இந்திரசித்தினை. பால்நல்வேலை என்றது வெண்ணிறத்தாலும் பெருக்கத்தாலும் பாற்கடலை யொத்துத் தோன்றும் வானர சேனைகளை. பருகுதல்—உயிரைக் கவர்ந்து குறைத்தல். சுடர்முகப்பகழி—தீச்சுடர்களை முனையிற் கொண்டுள்ள வெம்மைமிக்க அம்பு. அரக்கன், நெஞ்சு அழன்ருன், சுடர்முகப் பகழி, வானும் வையமும் திசைகளும் மறைய, சோனைமாரியின் இருமடி மும்மடி சொரிந்தான் என்க. (68)

8641. அங்கதன் றன்மே லாயிர
மவற்றினுக் கிரட்டி
வெங்கண் மாருதி மேனிமேல்
வேறுள வீரச்

சிங்க மன்னவ ராக்கைமே
லுலப்பில செலுத்தி
எங்கும் வெங்கணை யாக்கின
னிராவணன் சிறுவன்.

அங்கதன் தன்மேல் ஆயிரம்;
அவற்றினுக்கு இரட்டி,
வெங்கண் மாருதி மேனிமேல்;
வேறுஉள வீரச்
சிங்கம் அன்னவர் ஆக்கைமேல்
உலப்புஇல செலுத்தி,
எங்கும் வெங்கணை ஆக்கினன்—
இராவணன் சிறுவன்.

பொ :- இராவணன் மகனாகிய இந்திரசித்து அங்கதன் மேனி மேல் ஆயிரம் அம்புகளையும் (சினத்தால்) வெம்மை மிக்க கண்களை யுடைய வாயுவின் புதல்வன் அநுமனது மேனியின்மேல் அவற்றுக்கு இருமடங்கு (ஈராயிரம்) அம்புகளையும் அவர்களின் வேருக வுள்ள சிங்க ஏற்றினை யொத்தவர்களாகிய வீரர்களின் உடம்பின் மேல் எல்லையற்ற அம்புகளையும் ஏவி, எல்லா இடங்களிலும் கொடிய அம்புகளே செறிந்து காணப்படுமாறு செய்தனன்.

கு :- இராவணன் சிறுவன்—இராவணன் மகன்; என்றது, இந்திரசித்தினை. வீரசிங்கம் அன்னவர் என்றது, மறனிழுக்கா மானமும் வன்மையும் வாய்ந்த சிங்க ஏறுகள் உளவாயின், அவற்றை உவமை கூறத்தக்க நிலையில் மானத்திலும் வன்மையிலும் குன்றாது விளங்கும் ஆற்றல் மிக்க வீரர்களை. (69)

8642. இளைய மைந்தன்மே லிராமன்மே
லிராவணி யிகலி
விளையும் வன்றெழில் வானர
வீரர்மேன் மெய்யுற்
றுளைய வெஞ்சரஞ் சொரிந்தன
னாழிகை யொன்று
வளையு மண்டலப் பிறையென
நின்றது வரிவில்.

இளைய மைந்தன்மேல், இராமன்மேல்,
இராவணி இகலி,
விளையும் வன்தொழில் வானர
வீரர்மேல், மெய்உற்று
உளைய வெஞ்சரம் சொரிந்தனன் ;
நாழிகை ஒன்று,
வளையும் மண்டலப் பிறைஎன
நின்றது, வரிவில்.

பொ :- இராவணன்புதல்வனாகிய இந்திரசித்து, இளையோனாகிய இலக்குவன் மேலும் இராமன் மேலும் இகல் கொண்டு நிகழும் வலிய போர்த்தொழிலையுடைய வானர வீரர்கள் மேலும் அவர்தம் உடம்புகளில் தைத்து வருத்தும் வண்ணம் வெம்மையுடைய அம்புகளை (மழைபோல் மிகுதியாகச்) சொரிந்தான். வரிந்து நாண் கட்டப்பெற்ற (அவனது) வில்லானது வளைந்த வட்டவுருவினையடையும் நிலையிலுள்ள பிறையினையொத்து ஒரு நாழிகையளவு (அம்புகளைத் தொடர்ந்து எய்யும் தொழிலில் நிலைத்து) நின்றது.

கு :- வடமொழியில் தசரதன் மைந்தன் தாசரதி என வழங்கும் பெயர் வழக்கினை அடியொற்றி, இராவணன் மகன் இராவணி எனத் தமிழ் முறைப்படி ஒரு புதுப் பெயரினை இந் நூலாசிரியர் அமைத்து வழங்கியுள்ளமை அறிந்து மகிழத்தக்கதாகும். (70)

### அது கண்டு அமரர்கள் அஞ்சுதல்

8643. பச்சி மத்தினு முகத்தினு
மருங்கினும் பகழி
உச்சி முற்றிய வெய்யவன்
கதிரென வுமிழக்
கச்ச முற்றவன் கைக்கணைக்
கடுந்தொழில் காண
அச்ச முற்றனர் கண்புதைத்
தொடுங்கின ரமரர்.

பச்சி மத்தினும், முகத்தினும்,
மருங்கினும், பகழி,
உச்சி முற்றிய வெய்யவன்
கதிர்என உமிழ,
கச்ச முற்றவன் கைக்கணைக்
கடுந்தொழில் காண
அச்சம் உற்றனர், கண்புதைத்து
ஒடுங்கினர், அமரர்.

பொ:- ஆடையை இறுகவுடுத்துப் பொருவோனுகிய இந்திரசித்து, (நண்பகலில்) வானின் உச்சியின் கண்ணே முதிர்ந்து தோன்றிய வெம்மையையுடைய ஞாயிற்றின் கதிர்களை யொத்து (இராம இலக்குவர் முதலாயினேர்களின்) மேற்புறத்தும் முகத்திலும் இரு பக்கங்களினும் அம்புகளைச் செலுத்தி, (அவனது) கையின் கணுள்ள அம்புகளின் கொடுந் தொழிலைக் காணுதற்கு அஞ்சியவர்களாய்த் தேவர்கள் கண்களை(க் கைகளாற்) பொத்தி மூடிக்கொண்டு ஒடுங்கி நடுக்கமுற்றுர்கள்.

வி:- கச்சம் உற்றவன், உச்சி முற்றிய வெய்யவன் கதிர் என, பச்சிமத்தினும் முகத்தினும் மருங்கினும் பாழி உமிழ, கைக்கணைக் கடுமையைக் காண அமரர் அச்சமுற்றனர் கண்புதைத்து ஒடுங்கினர் என இயையும். கச்சம் உற்றவன், இந்திரசித்து, கச்சம் உறுதல்—ஆடையை இறுக உடுத்துக்கொள்ளுதல். கச்சம்—ஆடை. பச்சிமம்—மேற்றிசை. ஈண்டு மேற்புறம் என்ற பொருளில் ஆளப்பட்டது. முகம்—முன்பக்கம். மருங்கு—இருபக்கம். முற்றுதல்—முதிர்தல். வெய்யவன்—வெங்கதிரோனுகிய சூரியன். உமிழ்தல்—வெளிப்படுத்தல். (71)

**இந்திரசித்து ஏவிய அம்புகளைத் தடுத்து விலக்கி இலக்குவன் இந்திரசித்தின்மேல் விரைந்து செல்லுதல்**

8644. மெய்யிற் பட்டன படப்படா
தனவெலாம் விலக்கித்
தெய்வப் போர்க்கணைக் கத்துணைக்
கத்துணை செலுத்தி
ஐயற் காங்கிளங் கோளரி
யறிவிலா னறைந்த
பொய்யிற் போம்படி போக்கினன்
கடிதினிற் புக்கான்

மெய்யில் பட்டனபட, படாதன
எலாம் விலக்கி,
தெய்வப் போர்க்கணைக்கு அத்துணைக்கு
அத்துணை செலுத்தி,
ஐயற்குஆங்கு இளங்கோளரி, அறிவு
இலான் அறைந்த
பொய்யின் போம்படி போக்கினன்,
கடிதினி புக்கான்.

பொ :- தலைவனாகிய இராமனுக்கு இளைய வலிய சிங்கம் போல்வானாகிய இலக்குவன், விரைந்து பொருதற்கு முற்பட்டவனாகி, தன் உடம்பிற் பட்டனவாகிய அம்புகள் தைத்துத் தோன்ற (தூரத்தே வருவனவாய்ப்) படாத நிலையில் உள்ளவற்றைத் (தன் அம்பினால்) தடுத்து நீக்கிப் போரிற் (பகைவன் ஏவிய) தெய்வத் தன்மையுடைய அம்புகளுக்கு அந்தந்த அம்புகளின் எண்ணிக்கைக் குத் தக அவ்வவற்றைச் செலுத்தி, (பகைவன் ஏவிய அவையாவும்) அறிவில்லாதான் கூறிய பொய்ம்மொழிகளை யொத்து விரைவில் அழிந்தொழியுமாறு (அவற்றை) விலக்கிப் போக்கினான்.

கு :- மெய்—உடம்பு. படுதல்—தைத்து ஊன்றுதல். படாதன என்றது, மேலும் தன் உடம்பில் தைத்து ஊன்றுமாறு தன்னை நோக்கிவரும் அம்புகளை. ஐயன் என்றது, இராமனை. இளங் கோளரி—இளைய வலிய சிங்கம்; என்றது, இராமன் தம்பி யாகிய இலக்குவனை. அறிவுடையோன் அறிவின் வன்மையினாற் புனைந்து கூறிய பொய், அவனது சொல்வன்மையினாற் சில நாட்கள் நிலைத்து நிற்றலுங்கூடும்; அவ்வாறன்றி அறிவில்லாதவன் கூறிய பொய் அக்கணத்திலேயே அழிந்தொழிதல் போன்று இந்திரசித்து ஏவிய தெய்வப் படைக்கலங்கள் யாவும் எய்த அக் கணத்திலேயே உருவறச் சிதைந்தொழியுமாறு இலக்குவன் விலக்கினன் என்பார், 'அறிவிலான் அறைந்த பொய்யிற் போம்படி விலக்கினன்' என்றார். (72)

**இராமன் இந்திரசித்தின்மேல் அம்பு செலுத்தாது வறிதே நிற்க, இலக்குவன் இந்திரசித்து இருவரும் கடும்போர் புரிதல்**

8645. பிறகு நின்றனன் பெருந்தகை
யிளவலைப் பிரியான்
அறமி தன்றென வரக்கன்மேற்
சரந்துரந் தருளான்

இறவு கண்டில ரிருவரு
மொருவரை யொருவர்
விறகின் வெந்தன விசும்பிடைச்
செறிந்தன விசிகம்

பிறகு நின்றனன் பெருந்தகை,
இளவலைப் பிரியான்,
'அறம்இது அன்று'என அரக்கன்மேல்
சரம்துரந் தருளான் ;
இறவு கண்டிலர் இருவரும்,
ஒருவரை ஒருவர் ;
விறகின் வெந்தன, விசும்பிடைச்
செறிந்தன விசிகம்.

பொ :- தம்பியைப் பிரியாது (அவன்) பின்னே நின்றவனாகிய (இராமன் என்னும்) பெரியோன், (இலக்குவனும் இந்திரசித்தும் இருவராய்த் தனிநின்று பொரும் இப்போரில் யானும் இலக்குவன் உடன் நின்று இந்திரசித்தின்மேல் அம்பு செலுத்துதலாகிய) இது அறமாகாது என்னும் அருளுள்ளத்தால் அரக்கனாகிய இந்திர சித்தின் மேல் அம்புகளை எய்யாதவனாயினான். (இலக்குவன் இந்திர சித்து என்னும்) இருவரும் ஒருவரையொருவர் இறந்தொழிதலைக் கண்டாரல்லர். (அவ்விருவராலும் எய்யப்பட்டனவாய்) வானிடத்தே நெருங்கிய அம்புகள் (தீயிடைப்பட்ட) விறகினையொத்து வெந்து சாம்பராயின.

கு :- இளவலைப் பிரியான் பிறகு நின்றனன் பெருந்தகை; 'இது அறம் அன்று' என, அரக்கன்மேல் சரம் துரந் தருளான், இருவரும் ஒருவரை ஒருவர் இறவு கண்டிலர்; விசும்பிடைச் செறிந் தன விசிகம், விறகின் வெந்தன என இயையும். பிறகு—பின், இளவல்—தம்பி; என்றது இலக்குவனை. நற்குணங்கட்கெல்லாம் இடனாய் விளங்குதல்பற்றி இராமனைப் 'பெருந்தகை' என்றார். 'இது' என்றது, இருவரும் ஒருவர்க்கொருவராய்த் தனித்து நின்று பொரும் இப்போர் நிகழ்ச்சியில் தன் தம்பி இலக்குவனுக்குத் துணை யாய் நின்று அம்பு செலுத்துதலை. பகைவனிடத்தும் அருளுடைமை காரணமாக அம்பு எய்தலைத் தவிர்ந்தான் என்னும் அருட் குறிப்புத் தோன்றத் 'துரந்தருளான்' என்றார். துரத்தல்—செலுத்தல். இறவு—இறத்தல், சரம், விசிகம் என்பன அம்பினை குறித்த பெயர்கள். (73)

8646. மாடெ ரிந்தெழுந் திருவர் தங்
கணைகளும் வழங்கக்
காடெ ரிந்தன கனவரை
யெரிந்தன கனக
வீடெ ரிந்தன வேலைக
ளெரிந்தன மேகம்
ஊடெ ரிந்தன வூழியி
னெரிந்தன வுலகம்.

மாடு எரிந்து எழுந்து
இருவர் தம் கணைகளும் வழங்க,
காடு எரிந்தன; கனவரை
எரிந்தன; கனக
வீடு எரிந்தன; வேலைகள்
எரிந்தன; மேகம்
ஊடு எரிந்தன; ஊழியின்
எரிந்தன, உலகம்.

பொ :- (இலக்குவன், இந்திரசித்து என்ற) இருவருடைய அம்புகளும் பக்கங்களில் அனல் வீசியெழுந்து (யாண்டும்பரவிச்) செல்லுதலால், காடுகள் தீப்பற்றி எரிந்தன; பருமையுடைய மலைகள் எரிந்தன; பொன்மயமான (இலங்கை நகரத்து) வீடுகள் எரிந்தன; கடல்கள் வெதும்பின; மேகங்கள் (நீர் சுவறி) எரிந்தன; ஊழிக் காலத்தையொத்து உலகங்களும் எரிந்தன.

கு :- இருவர்தம் கணைகளும், மாடுஎரிந்து எழுந்து வழங்க, காடு, கனவரை, வீடு, வேலைகள், மேகம், உலகம் எரிந்தன என்க. ஊழியின்-ஊழிக்காலத்தையொத்து; இன், உவமவுருபு. வழங்க-வழங்குதலால்; செயவென் எச்சம் காரணப் பொருளில் வந்தது. வழங்குதல்-யாண்டும் தடையின்றிப் பரவிச்செல்லுதல், மாடு-பக்கம். எரிந்து எழுதல்-சுடர்விட்டு மேலெழுதல். இருவருடைய அம்புகளின் அனல் வெம்மையினை உயர்வு நவிற்சிபட இங்ஙனம் புனைந்துரைத்தார் ஆசிரியர். எரிந்தன என்னும் சொல் அப் பொருளிற் பலமுறை பயின்று வருதலால், இது சொற்பொருட் பின்வருநிலை என்னும் அணிதழுவியதாகும். (74)

8647, படங்கொள் பாம்பணை துறந்தவற்
கிளையவன் பகழி
விடங்கொள் வெள்ளத்தின் மேலன
வருவன விலக்கி
இடங்க ரேறென வெறுழ்வலி
யரக்கன்றே ரீர்க்கும்
மடங்க லையிரு நூற்றையுங்
கூற்றின்வாய் மடுத்தான்.

படம்கொள் பாம்புஅணை துறந்தவற்கு
இளையவன், பகழி,
விடம்கொள் வெள்ளத்தின் மேலன
வருவன விலக்கி
இடங்கர் ஏறுஎன, எறுழ்வலி
அரக்கன்தேர் ஈர்க்கும்
மடங்கல் ஐ-இரு நூற்றையும்
கூற்றின்வாய் மடுத்தான்.

பொ :- படத்தினைக்கொண்ட (ஆதிசேடன் என்னும்) பாம்புப் படுக்கையினை விட்டு நீங்கி (த் தசரதன் மைந்தனுக) அவதரித்த (திருமாலாகிய) இராமனுடைய தம்பி இலக்குவன், (பகைவனுல் எய்யப்பட்ட அம்புகள் நஞ்சின் தன்மையைக் கொண்டனவாய் வெள் ளத்தின் மேற்பட்டுத்(தன்மேல்) வருவனவற்றைத் (தன் அம்பு களால்) தடுத்து நீக்கி, மிக்க வலிமையுடைய அரக்கனுகிய இந்திர சித்தின் தேரினைக் (குருதி வெள்ளமாகிய நீர்ப்பரப்பிலே) ஆண்முதலை யினையொத்து இழுத்துச் செல்லும் சிங்கங்கள் ஆயிரத்தினையும் கூற்றுவன் வாயுட் புகுமாறு கொன்றெழித்தான்.

கு :- பாற்கடலிற் பாம்பணைமேற் பள்ளிகொள்ளும் பரமனு கிய திருமாலே இராமனுக அவதரித்துள்ளான் என்னும் மெய்ம் மையினை வற்புறுத்தும் நோக்குடன், இராமன் தம்பியாகிய இலக்கு வனை, 'படங்கொள் பாம்பணை துறந்தவற்கு இளையவன்' எனக் குறித்தார்ஆசிரியர். எறுழ்வலி அரக்கன்தேர் இடங்கர் ஏறுஎன ஈர்க்கும் மடங்கல் ஐஇருநூறு என்க. எறுழ்வலி அரக்கன் என்றது இந்திரசித்தினை. எறும்-வலிமை. எறுழ்வலியாகும்' என்பது தொல்காப்பியம். எறுழ்வலி-ஒருபொருளிருசொல். போர்க்களத்திற் குருதி வெள்ளத்துள் அழுந்தாது ஈர்த்துவரும் வன்மையுடைமை பற்றி இடங்கர் ஏறு எனஈர்க்கும் மடங்கல்' என்ருர். மடங்கல்-

சிங்கம். இடங்கர் ஏறு-முதலையுள் ஆண். ஐஇருநூறு-ஆயிரம். அரக்கன் தேர் ஈர்க்கும் மடங்கல் ஆயிரத்தையும் கூற்றின் வாய்ப பெய்தான் எனவே அத் தேரும் அழிக்கப்பட்டமை பெறப்படும். (75)

**இந்திரசித்து, தான்ஏறிய தேர் அழிந்த நிலையில் தனியனாய் நின்று அங்கதன் முதலியோர்மேல் அம்புஎய்து தன் வெற்றிச் சங்கினை ஊதுதல்**

8648. தேர ழிந்திடச் சேமத்தேர்
பிறிதிலன் செறிந்த
ஊர ழிந்திடத் தனிநின்ற
கதிரவ னொத்தான்
பார ழிந்தது குரங்கெனும்
பெயரெனப் பகைத்த
சூர ழிந்திடத் துரந்தன
சுடுசரஞ் சொரிந்தான்.

தேர் அழிந்திட, சேமத்தேர்பிறிது
இலன், செறிந்த
ஊர் அழிந்திடத் தனிநின்ற
கதிரவன் ஒத்தான்;
'பார் அழிந்தது குரங்குஎனும்பெயர்'
என, பகைத்த
சூர் அழிந்திடத் துரந்துஅ(ன்)ன
சுடுசரம் சொரிந்தான்.

பொ :- (தன்னுடைய) தேர் அழிந்துபடத் (தான் ஏறிச்செலுத் தற்குரிய) சேமத்தேராகப் பிறிதொன்றும் இல்லாதவனாகிய இந்திர சித்து, நெருங்கியமைந்த ஊர்கோள் அழிந்து மறையத் தனித்து நின்ற கதிரவனையொத்துத் தோன்றியவனாய், 'பூமியின்கண் குரங்கு என்னும் (இனமேயன்றிப்) பெயரும் அழிந்தொழிந்தது' எனக் கண்டோர் கருதுமாறு, இகல் கொண்டு எதிர்த்த சூரபதுமன் இறந்து பட (முருகப்பெருமான்) செலுத்திய வேற்படையையொத்த சுட் டழிக்குந் தன்மை வாய்ந்த அம்புகளை (வானர சேனைகளின்மேற்) பொழிந்தான்.

கு :- சேமத்தேர் என்பது, போர்வீரர் தாம் ஏறிச்செலுத்தும் தேர் பகைவரால் அழிந்துபடும் நிலையில் எய்ப்பில் வைப்பாக உடன் கொண்டுச்செல்லும் தேராகும். இந்திரசித்து தான் ஏறிச்சென்ற தேர் இலக்குவனது அம்பினுற் சிதைவுற்றபொழுது அதனையொத்த பிறிதொரு தேரைப்பெற இயலாத நிலையில் இருந்தனன் என்பதனை 'சேமத்தேர் பிறிது இலன்' என்ற தொடராற்குறித்தார். ஊர் அழிந்திடத் தனிநின்ற கதிரவன் ஒத்தான்' என்றது, இந்திரசித்தனை. கதிரவன் ஒத்தான், சுடுசரம் சொரிந்தான் என முடிக்க. ஊர்-ஊர் கோள்; சூரிய சந்திரர்களைச்சுற்றி வட்டமாகக் காணப்படும் ஒளி வட்டம். இதனைப் பரிவேடம் எனவும் வழங்குவர். பார்-பூமி. என-என்று கண்டோர் கருத. பகைத்த சூர்-(முருகப்பெருமான்மேல்) இகல் கொண்டு எதிர்த்த சூரபதுமன். துரந்து அன்ன-செலுத்தினுல் ஒத்த. சுடுசரம்-சுட்டழிக்குந் தன்மையதாகிய அம்பு. (76)

**8649. அற்ற தேர்மிசை நின்றுபோ**
**ரங்கத னலங்கற்**
**கொற்றத் தோளினு மிலக்குவன்**
**புயத்தினுங் குளித்து**
**முற்ற வெண்ணிலா முரட்கணை**
**தூர்த்தனன் முரட்போர்**
**ஒற்றைச் சங்கெடுத் தூதின**
**னுலகெலா முலைய.**

அற்ற தேர்மிசைநின்று, போர்
அங்கதன் அலங்கல்
கொற்றத் தோளினும், இலக்குவன்
புயத்தினும், குளித்து
முற்ற, எண்இலா முரண்கணை
தூர்த்தனன்; முரண்போர்
ஒற்றைச் சங்கு எடுத்து ஊதினன்,
உலகுஎலாம் உலைய.

பொ :- (இந்திரசித்து) அறுபட்டுச் சிதைந்த (தன்) தேரின் மேல் நின்று போர்வலிமிக்க அங்கதனது மாலையணிந்த வெற்றி பொருந்திய தோளின்மேலும், இலக்குவன் தோளிலும் அழுந்தி நிறையுமாறு அளவில்லாத வன்மையினையுடைய அம்புகளைச் சொரிந்து நிரப்பினுன்; உலகங்களெல்லாம் நடுங்கும்படி வலிய போரிலே முழங்குதற்குரிய ஒப்பற்ற வெற்றிச் சங்கினை எடுத்து ஊதினுன்.

கு :- அறுதல்-சிதைவுற்று அழிதல். தேர்மிசை நின்று, அங்கதன் தோளினும் இலக்குவன் புயத்தினும் கணை தூர்த்தனன், ஒற்றைச் சங்கு ஊதினான் என்க. குளித்து முற்றுதல்-அழுந்தி நிறைதல். (77)

## இலக்குவன், இந்திரசித்தின் கங்கணமும் கவசமும் மூட்டறக் கழல அவன்மேற் பத்து அம்புகளைச் சிதறி வில்நாண் ஒலி செய்தல்

8650. சங்க மூதிய தசமுகன்
தனிமகன் றரித்த
கங்க ணத்தொடு கவசமு
மூட்ட றக் கழல
வெங்க டுங்கணை யையிரண்
டுருமென வீசிச்
சிங்க வேறன்ன விலக்குவன்
சிலையைநா ணெறிந்தான்.

சங்கம் ஊதிய தசமுகன்
தனிமகன் தரித்த
கங்கணத்தொடு கவசமும்
மூட்டு அறக் கழல,
வெங்கடுங்கணை ஐ-இரண்டு
உருமென வீசி,
சிங்க ஏறு அன்ன இலக்குவன்
சிலையை நாண் எறிந்தான்.

பொ :- ஆண்சிங்கத்தையொத்த இலக்குவன், (வெற்றிச்) சங்கினை எடுத்து ஊதிய இராவணன் தனிப்புதல்வனாகிய இந்திரசித்து அணிந்த வீர கங்கணத்துடன் (மார்பிலுள்ள) கவசமும் மூட்டுவாய் சிதைந்து கழலும்படி வெம்மையும் விரைவும் வாய்ந்த அம்புகள் பத்தினை இடியேறு என்னும்படி வீசித் தன் வில்லின் நாணைத் தெறித்துப் பேரொலியெழச் செய்தான்.

கு :- சிங்க ஏறு அன்ன இலக்குவன், தசமுகன் தனிமகன் தரித்த கங்கணத்தொடு கவசமும் மூட்டு அறக் கழல, வெங்கடுங் கணை ஐயிரண்டு வீசிச் சிலையை, நாண் எறிந்தான் என்க. தசமுகன்-

பத்துத்தலைகளையுடையவனாகிய இராவணன். தனிமகன்-ஒப்பற்ற புதல்வன்; இந்திரசித்து. 'சங்கம் ஊதிய' என்புழி ஊதிய என்னும் பெயரெச்சம் தனிமகன் என்னும் பெயர்கொண்டு முடிந்தது. கங்கணம் என்றது, வீரர்கள் அணிதற்குரிய தோள் வளையினை. கவசம், மார்பில் அம்பு முதலியன தைத்து ஊன்றுதவண்ணம் அணியப்படுவது. முட்டு-முட்டுவாய். உரும்-இடி. சிலையை நாண் எறிதல், வில்லின் நாணைத்தெறித்து பேரொலியுண்டாக்குதல். (78)

## இலக்குவனது வெற்றிகண்டு, ஆரவாரம் செய்யும்படி இராமன் பணிக்க, வானரர் ஆரவாரித்தல்.

8651. கண்ட கார்முகில் வண்ணனுங்
கமலக்கண் கலுழத்
துண்ட வெண்பிறை நிலவென
முறுவலுந் தோன்ற
அண்ட முண்டதன் வாயினு
லார்மினென் றருள
விண்ட தண்டமென் றுலைந்திட
வார்த்தனர் வீரர்.

கண்ட கார்முகில் வண்ணனும்,
கமலக்கண் கலுழ,
துண்ட வெண்பிறை நிலவுஎன
முறுவலும் தோன்ற,
அண்டம் உண்ட தன்வாயினுல்,
ஆர்மின் என்று அருள,
'விண்டது அண்டம்' என்று
உலைந்திட, ஆர்த்தனர், வீரர்.

பொ :- (தம்பியின் போர்த்திறமையைக்) கண்ட கருமுகில் வண்ணனாகிய இராமனும், செந்தாமரை மலர்போலும் கண்கள் உவகைக் கண்ணீர் சொரிய, துண்டமாகிய வெள்ளிய பிறைச் சந்திரனது நிலவினையொத்து (த் தன்முகத்திற்) புன்சிரிப்பின் ஒளி தோன்ற, அண்டமாகிய உலகினை உட்கொண்ட தன் வாயினுல் ('நம் படை வீரர் எல்லீரும்) ஆரவாரம் செய்வீராக' எனப் பணித்தருள, 'இவ் அண்டம் பிளவுற்றது' என்று உலகத்தார் நடுங்கி வருந்தும்படி (வானர) வீரர்கள் (பேரொலியுண்டாக வாய் விட்டு) ஆரவாரித்தார்கள்.

கு :- கார்முகில் வண்ணன்-கரிய மழைமேகம் போலும் கரிய திருமேனியையுடைய இராமன். கலுழ்தல், இங்கு அளவிறந்த உவகையால் நேர்ந்த மெய்ப்பாடு. திருமாலாகிய தன் தெய்வ நிலையில் உலகினை உண்டு உமிழ்ந்த பெரிய வாயினால் பணித்தருளினான் என்பார். 'அண்டம் உண்ட தன் வாயினால் ஆர்மின் என்று அருள' என்றார். விண்டது-பிளவுற்றது. உலைதல்-நடுக்குற்று வருந்துதல். (79)

இதன் பின் 23, 26, 29, 43, 44, 60-ஆம் எண்ணுள்ள பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல் உளது.

8651.a ஆர்த்த வானரர் வாயெலாங்
கையெலா மசையப்
பார்த்த கண்ணெலாம் அங்கதன்
உடலெலாம் பாரிற்
சீர்த்த வீரியன் இளையவன்
இராமன்மேன் செறியத்
தூர்த்த வாளியன் சிலையொடும்
விசும்பினைத் தொடர்ந்தான்.

இந்திரசித்து வானில் மறைந்த நிலையில், இலக்குவன் 'அவன் மேல் அயன்படை தொடுப்பேன்' என இராமனிடம் கூற, இராமன் அது கூடாதெனத் தடுத்தல்

8652. கண்ணி மைப்பதன் முன்புபோய்
விசும்பிடைக் கரந்தான்
அண்ணன் மற்றவ னாக்கைகண்
டறிகில னாழிப்
பண்ண வற்கிவன் பிழைக்குமேற்
படுக்குநம் படையை
எண்ண மற்றிலை யயன்படை
தொடுப்பலென் றிசைத்தான்.

கண் இமைப்பதன் முன்புபோய்
விசும்பிடைக் கரந்தான்;
அண்ணல்; மற்றுஅவன் ஆக்கை
கண்டறிகிலன்; ஆழிப்

பண்ணவற்கு, 'இவன் பிழைக்குமேல்,
படுக்கும் நம்படையை;
எண்ணம் மற்றுஇலை; அயன்படை
தொடுப்பல்' என்று இசைத்தான்.

பொ :- (அப்பொழுது, இந்திரசித்து) கண்ணிமைக்கும் நேரமாகிய நொடிப்பொழுதிற்கு முன்பே விரைந்து சென்று ஆகாயத்தில் மறைந்தான். (அதனையுணர்ந்த) பெருமையுடையோனாகிய இலக்குவன், அவ் இந்திரசித்தின் உடம்பினைக் கண்டறிய இயலாதவனாய், 'இவ் இந்திரசித்து இவ்விடத்தைவிட்டுத் தப்பி உய்ந்தானாயின் நம் சேனைகளை அழித்தொழிப்பான். (ஆதலால்) இப்பொழுது சிந்தித்துச் செய்யத்தக்க கருமம் வேறொன்றுமில்லை. பிரமாத்திரத்தை (இப்பொழுதே இவன்மேல்) தொடுப்பேன்' என்று ஆழிப்படையேந்திய திருமாலின் அமிசமாகிய இராமனுக்கு எடுத்துரைத்தான்.

கு :- 'கரந்தான்' என்னும் பயனிலைக்குரிய இந்திரசித்து என்னும் எழுவாய் உரையில் வருவித்துரைக்கப்பட்டது. அண்ணல் என்றது பெருமைக் குணமுடையவனாகிய இலக்குவனை. ஆக்கை-உடம்பு. ஆழிப்பண்ணவன்-சக்கரப்படையினையுடைய திருமாலாகிய தேவன்; ஈண்டு அவதார மூர்த்தியாகிய இராமனை யுணர்த்தியது. 'இவன் பிழைக்குமேல், நம் படையைப் படுக்கும்? என இயைக்க. படுத்தல்-அழித்தல். எண்ணம் என்றது, ஈண்டு எண்ணித் துணிதற்குரிய கருமத்தையுணர்த்தி நின்றது. அயன் படை-பிரமாத்திரம். (80)

### இராமனது ஆணைக்கு இசைந்து இலக்குவன் அச் செயலைத் தவிர்தல்.

8653. ஆன்ற வன்னது பகர்தலு
மறநிலை வழாதாய்
ஈன்ற வந்தணன் படைக்கலந்
தொடுக்கிலிவ் வுலக
மூன்றை யுஞ்சுடு மொருவனை
முடிகல தென்றான்
சான்ற வன்னது தவிர்ந்தன
னுணர்வுடைத் தம்பி.

ஆன்றவன் அது பகர்தலும்,
‘அறநிலை வழாதாய்!
ஈன்ற அந்தணன் படைக்கலம்
தொடுக்கில், இவ்உலகம்
மூன்றையும் சுடும்; ஒருவனல்
முடிகலது’ என்ருன்,
சான்றவன்; அது தவிர்ந்தனன்,
உணர்வுடைத் தம்பி.

பொ :- (குணங்களால்) நிறைந்தவனுகிய இலக்குவன் அதனைக் கூறிய அளவில் (எவ்வுயிர்க்கும்) சாட்சியாய் விளங்கும் இறைவனுகிய இராமன், (தன் தம்பியை நோக்கி) ‘அறநெறியில் நிற்றலில் வழுவா தொழுகவல்லாய்! (உலகினைப்) படைத்த வேதியனுகிய பிரமனது படைக்கலத்தினை நீ தொடுத்து எய்தனையாயின், (பிரமாத்திரமாகிய அது, மேல், கீழ், நடு என்னும்) இவ்வுலகங்கள் மூன்றினையும் ஒருசேரச் சுட்டழிக்கும்; (இந்திரசித்து என்னும்) பகைவன் ஒருவனை அழிப்பதோடு மட்டும் தீர்ந்து விடுவதன்று’ என அறிவுறுத்தினுன். (அதனைச் செவிமடுத்த) நல்லுணர்வுடைய தம்பியாகிய இலக்குவன், (பிரமாத்திரந் தொடுத்தலாகிய) அச் செயலைச் செய்யாதொழிந்தான்.

கு :- ஆன்றவன்-(அன்பு, நாண், ஒப்புரவு முதலிய குணங்களால்) நிறைந்தவன்; இலக்குவன். ஆறுதல்-நிறைதல். ஈன்ற அந்தணன்-உலகங்களைப் படைத்த வேதியனுகிய பிரமன். படைக்கலம் என்றது, பிரமாத்திரத்தினை. ஒருவனுன் முடிகலது-ஒருவனைக் கொன்றெழித்தலோடு தீர்வதன்று. ‘ஆன்’ உருபு ‘ஒடு’ உருபின் பொருளதாய் நின்றது, சான்றவன்-உயிர்கள் செய்யும் வினைகட்கெல்லாம் சாட்சியாய் விளங்கும் இறைவன்; என்றது, திருமாலின் அவதாரமாகிய இராமனை. இறைவன், உயிர்கள் செய்யும் வினைகட்கெல்லாம் சாட்சியாய் விளங்குதலை ‘எவ்வுயிர்க்கும் சான்ரும் ஒருவனை’ (பெரிய-திருநாவுக்-134) என்ற தொடரில் சேக்கிழாரடிகள் குறித்துள்ளமை இங்கு ஒப்புநோக்குத் தகுவதாகும். பிறர் உணர்த்தலின்றித் தானேயுணரவல்ல அறிவினையுடைய இலக்குவன் தமையனது அறிவுரைகேட்ட அப்பொழுதே. தான் செய்யக்கருதிய செயலின் தவறுணர்ந்து அதனைச் செய்யாதொழிந்தான் என்பார் ‘அது தவிர்ந்தனன் உணர்வுடைத் தம்பி’ என்ருர். இச்செய்யுளால்,

‘உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று’ (718)

என வரும் திருக்குறட் பொருள் எடுத்தாளப் பெற்றுள்ளமை உணர்ந்து மகிழத்தக்கதாகும். (81)

மறைந்த இந்திரசித்து, அவரது கருத்தறிந்து,
அவர்கள்மேல் தானே தெய்வப்படையினை ஏவுவதாகத் துணிந்து
அவ்விடத்தை விட்டு நீங்க, அதனையுணராத
தேவர்களும் வானரர்களும் ஆரவாரித்தல்

8654. மறைந்து போய்நின்ற வஞ்சனு
மவருடைய மனத்தை
அறிந்து தெய்வவான் படைக்கலந்
தொடுப்பதற் கமைந்தான்
பிறிந்து போவதே கருமமிப்
பொழுதெனப் பெயர்ந்தான்
செறிந்த தேவர்க ளாவலங்
கொட்டினர் சிரித்தார்.

மறைந்துபோய் நின்ற வஞ்சனும்,
அவருடை மனத்தை
அறிந்து, தெய்வவான் படைக்கலம்
தொடுப்பதற்கு அமைந்தான்;
'பிரிந்து போவதே கருமம்
இப்பொழுது' எனப் பெயர்ந்தான்;
செறிந்த தேவர்கள் ஆவலம்
கொட்டினர், சிரித்தார்.

பொ :- (விரைந்து) சென்று விசும்பில் மறைந்து நின்ற வஞ்சகனாகிய இந்திரசித்தும், (இராம இலக்குவர் என்னும்) அவ் விருவரது மனக்கருத்தை அறிந்து தெய்வத்தன்மை வாய்ந்த மிகப்பெரிய ஆயுதமாகிய பிரமாத்திரத்தை (அவர்கள்மீது) தொடுப்பதற்குப் பொருந்தியவனாகி, 'இப்பொழுது இவ்விடத்தைவிட்டு நீங்கிச் செல்வதே செய்யத்தக்க செயலாகும்' எனக் கருதி (அவ்விடத்தினின்றும்) மீண்டான். அவனது வஞ்சனைச் செயலையுணராமல், அங்குக் கூடியிருந்த தேவர்கள் கைகொட்டி ஆரவாரித்துச் சிரித்தார்கள்.

கு :- வஞ்சன் என்றது, வஞ்சனைக் குணமுடைய இந்திரசித்தினை. வஞ்சனையால்தான் விசும்பில் மறைந்துள்ள நிலையில், தன்மேல் பிரமாத்திரத்தைத் தொடுத்தற்கு இலக்குவன் முற்பட்டதனையும் அதனை அறமன்றெனை இராமன் தடுத்ததனையும் அங்கு மறைந்திருந்து குறிப்பால் அறிந்த இந்திரசித்து, பிரமாத்திரத்தை அவர்கள்

தன்மேல் தொடுப்பதற்குமுன் தானே அதனை அவர்கள்மேல் தொடுப்பதாகத் துணிந்து, அதற்குரிய மந்திரச் சடங்குகளைச் செய்தல் கருதி அங்கு நின்றும் மீண்டானாக, அவனது செய்கையையும் நினைவினையும் உணர்ந்து கொள்ளாத தேவர்கள், அவன் தோற்றோடியதாக எண்ணிக் கைகொட்டிச் சிரித்தார்கள் என்பதாம். ஆவலங் கொட்டுதல்-கைகொட்டி ஆரவாரித்தல். (82)

8655. செஞ்ச ரத்தொடு செம்மழை
விசும்பிடைச் செல்ல
மஞ்சின் மாமழை போயின
தாமென மறைய
அஞ்சி னானகன் றானென
வறிந்தன ரார்த்தார்
வெஞ்சி னந்தரு களிப்பினர்
வானர வீரர்.

செஞ் சரத்தொடு செம்மழை
விசும்பிடைச் செல்ல.
மஞ்சின் மாமழை போயினதாம்
என மறைய,
'அஞ்சினான் அகன்றான்' என,
அறிந்தனர் ஆர்த்தார்—
வெஞ்சினம் தருகளிப்பினர்,
வானர வீரர்.

பொ :- செம்மைவாய்ந்த அம்புடன்கூடிய செம்மேகம் வானத்தின் கண்ணே செல்ல (அங்குள்ள கரிய நிறமுடைய) மழைமேகம் (அவ்விடத்தைவிட்டு) அகன்று சென்றது என்னுமாறு (கருநிறமுடைய இந்திரசித்து) அவ்விடத்தினின்றும், மறைந்தோட, பகைவனாகிய இந்திரசித்து பொருதற்கு அஞ்சியவனாய்ப் போர்க்களத்தை விட்டு ஓடினான்' என்பதனை அறிந்தவர்களாகிய வானர வீரர்கள், மிக்க வெகுளியும் அதனால் பயனாகிய வெற்றிக் களிப்பும் உடையவர்களாய் ஆரவாரித்தார்கள்.

கு :- இலக்குவன் எய்த செஞ்சரமாகிய அம்பு மழைக்கு எதிர் நிற்றலாற்றாது மறைந்தோடிய கருமேனியனாகிய இந்திரசித்துக்கு, செம்மேகத்தினால் மோதப்பட்டு அகன்ற கருமேகத்தை உவமை

கூறினர். அகன்றான் என அறிந்தனர் வானவீரர், வெஞ்சினம் தருகளிப்பினர் ஆர்த்தார் என முடிக்க. வானர வீரர் என்றது, நீலன் முதலிய படைத்தலைவர்களை. (83)

## தோல்வியுற்ற இந்திரசித்து யாவரும் உணராதபடி மறைந்து இலங்கையை அடைதல்

8656. உடைந்த வானரச் சேனையு
மோதிநீ ருவரி
அடைந்த தாமென வந்திரைத்
தார்த்தெழுந் தாடித்
தொடர்ந்து சென்றது தோற்றவன்
யாவர்க்குந் தோற்றான்
கடைந்த வேலைபோற் கலங்குறு
மிலங்கையைக் கலந்தான்.

உடைந்த வானரச் சேனையும்,
ஓதநீர் உவரி
அடைந்தது ஆம்என வந்து,இறைத்து,
ஆர்த்து, எழுந்துஆடி.
தொடர்ந்து சென்றது, தோற்றவன்,
யாவர்க்கும் தோற்றான்
கடந்த வேலைபோல், கலங்குறும்
இலங்கையைக் கலந்தான்.

பொ : - (முன் இந்திரசித்தின் சங்க முழக்கங்கேட்டு அஞ்சி) தோற்றுப் பிரிந்து பின் சென்ற வானரசேனையும், கடலின்றும் புறத்தே சென்ற ஓதமாகிய நீர், மீண்டும் கடலைச் சேர்ந்தாற் போன்று திரும்பிவந்து பேரிரைச்சலுடன் ஆரவாரித்து எழுந்து கூத்தாடி) ஏனைய வானர சேனைகளோடு) தொடர்ந்து சென்றது. தோல்வியுற்றவனாகிய இந்திரசித்து, யாவர் கண்ணுக்கும் புலப் படாதவனாகி (மந்தரமலையாற்) கடையப்பட்டுக் கலங்கிய கடலை யொத்து (ப் பகைவரது தாக்குதலாற்) கலங்கிய இலங்கை மாநகரைச் சென்று சேர்ந்தான்.

கு : - உடைதல் - தோற்றேடுதல், ஓதநீர் என்றது, நிறை மதி நாளிற் கடலினின்றும் பொங்கி நிலத்திற்பாயும் நீர்ப்பெருக்கினை. நிலத்திற் படர்ந்த ஓதநீர் மீண்டும் கடலில் வந்தடைவதுபோல, முன் அச்சத்தாற் பிரிந்து, புறத்தே சென்ற வானரசேனையும் திரும்பி வந்து ஏனைய வானரசேனைத் தொகுதியில் வந்து சேர்ந்தது என்க. தோற்றவன் - தோல்வியுற்றவனாகிய இந்திரசித்து. தோற்றவன், யாவர்க்குந் தோற்றுதவனாகி இலங்கையைக் கலந்தான் என்க. பகைவர் தாக்குதலாற் கலக்கமுற்ற இலங்கை நகரத்திற்கு, மந்தர மலையாற் கலக்குண்ட கடலை உவமை கூறினர். தோற்றுதல் - புலப் படுதல். 'தோற்றுதென் வயிற்றினகம்படியே' (84)

**அயன்படையைத் தானே முற்படத் தொகுத்தற்கு எண்ணிச் சென்ற இந்திரசித்தின் கருத்தினையுணராத இராம இலக்குவர் போர்க்கோலம் களைதலும் வானவர் மலர்மழை சொரிந்து வாழ்த்துதலும்**

8657. **எற்கொ ணுன்முகன் படைக்கல**
**மிவரென்மேல் விடாமுன்**
**முற்கொள் வேனெனு முயற்சியன்**
**மறைமுறை மொழிந்த**
**சொற்கொள் வேள்விபோய்த் தொடங்குவா**
**னமைந்தவன் றுணிவை**
**மற்கொ டோளவ ருணர்ந்தில**
**ரவன்றிற மறந்தார்.**

'எல்கொள் நான்முகன் படைக்கலம்
இவர்என்மேல் விடாமுன்
முற்கொள் வேன்'எனு முயற்சியன்,
மறைமுறை மொழிந்த
சொல்கொள் வேள்விபோய்த் தொடங்குவான்
அமைந்தவன் துணிவை
மல்கொள் தோளவர் உணர்ந்திலர்;
அவன்திறம் மறந்தார்.

பொ :- (‘இராம இலக்குவராகிய) இவர்கள் ஒளியினைக்கொண்ட பிரமனது படைக்கலத்தினை என்மேல் செலுத்துவதற்கு முன்னே (அதனை) முற்படக் கொண்டு (இவர்மேற்) செலுத்துவேன்’ என்னும் போர்த்தொழில் முயற்சியை யுடையவனாய்ச் சென்று, வேதமுறைப் படி விதிக்கப்பட்ட மந்திரங்களைக்கொண்ட யாகத்தினைத் தொடங்கு தற்குப் பொருந்திய இந்திரசித்தின் உள்ளத்துறுதியை மற்றொழில் வன்மை வாய்ந்த தோள்களையுடையவராகிய (இராம இலக்குவர்) இருவரும் உள்ளவாறு உணரப்பெறாராய், அவனது வஞ்சனைத் திறத்தினை (அறவே) மறந்தாராயினர்.

கு :- எல் - ஒளி. எற்கொள் படைக்கலம் என இயையும். நான் முகன் படைக்கலம் - பிரமாத்திரம். ‘இவர்’ என்றது, இராம இலக்கு வரை. முற்கொள்ளுதல் முற்படக்கொண்டு செலுத்துதல். சொல் மந்திரம். வேள்வி தொடங்குவான் அமைந்தவன், இந்திரசித்து, மற்கொள்தோளவர், இராமஇலக்குவர். (85)

8658. அனும னங்கதன் றோளினின்
றிழிந்தன ராகித்
தனுவும் வெங்கணைப் புட்டிலுங்
கவசமுந் தடக்கைக்
கினிய கோதையுந் துறந்தன
ரிருந்தன ரிமையோர்
பனிமலர் பொழிந் தார்த்தனர்
வாழ்த்தொலி பரப்பி.

அனுமன் அங்கதன் தோளின்நின்று
இழிந்தனர் ஆகி,
தனுவும், வெங்கணைப் புட்டிலும்,
கவசமும், தடக்கைக்கு
இனிய கோதையும் துறந்தனர்
இருந்தனர்; இமையோர்
பனிமலர் பொழிந்து ஆர்த்தனர்,
வாழ்த்தொலி பரப்பி.

பொ :- (இராமன், இலக்குவன் என்னும் அவ்விருவரும் முறையே) அநுமன் அங்கதன் என்பவர்களுடைய தோள்களி னின்றும் (தரையில்) இறங்கியவர்களாய், வில்லும் கொடிய அம் புகளைக் கொண்ட தூணியும் மார்பின் கவசமும் பெரிய கைகட்கு

இனியவாகிய கையுறையும் ஆகியவற்றை நீக்கியவர்களாய் (ப் போர்க்கோலம் களைந்து) இருந்தார்கள். (அப்பொழுது) தேவர்கள் வாழ்த்தொலிகளை (எவ்விடத்தும்) பரப்பிக் குளிர்ந்த மலர்களை மழைபோற் சொரிந்து ஆரவாரித்தார்கள்.

கு :- முன் செய்யுளில் வந்த 'மற்கொள்தோளவர்' என்பதை எழுவாயாக இங்கும் வருவித்து, இழிந்தனராகித் துறந்தனர் இருந்தனர் என முடிக்க. இமையோர் வாழ்த்தொலி பரப்பி, பனி மலர் சொரிந்து ஆர்த்தனர் என்க. கணைப்புட்டில் - அம்பறுத்தூணி, கோதை என்பது, வில்வீரர் அம்பினை எய்யும்பொழுது கையில் அணிதற்குரிய கையுறை. (86)

## சூரியன் மறைதல்

8659. ஆர்த்த சேனையி னமலைபோய்
விசும்பினை யலைக்க
ஈர்த்த தேரொடுங் கடிதுசென்
றகன் றிரவி
தீர்த்தன் மேலவன் திசைமுகன்
படைக்கலஞ் செலுத்தப்
பார்க்கி லேன்முந்திப் படுவலென்
பானெனப் பட்டான்.

ஆர்த்த சேனையின் அமலைபோய்
விசும்பினை அலைக்க,
ஈர்த்த தேரொடும் கடிதுசென்று
அகன்று இரவி,
'தீர்த்தன்மேல் அவன் திசைமுகன்
படைக்கலம் செலுத்தப்
பார்க்கிலேன்; முந்திப் படுவல்'
என்பான் என, பட்டான்.

பொ :- ஆரவாரித்த சேனையின் பேரொலி சென்று வானத்தினைக் கலக்கமுறச் செய்ய (க் குதிரைகளால்) இழுக்கப்பட்ட தேருடனே (அவ்விடத்தை) விட்டு நீங்கி விரைந்து சென்றவனாகிய கதிரவன், 'தூயோனாகிய இலக்குவன்மீது (இந்திரசித்தாகிய) அவன் பிரமாத்திரத்தைச் செலுத்த (அவ்வஞ்சனைச் செயலை) க் காணமாட்டேன், அதற்கு முந்தியே மறைந்தொழிவேன்' என்பான் போன்று (மேல்கடலில்) மறைந்தான்.

கு :- அமலை - பேரொலி. ஈர்த்த தேரொடும் அகன்று கடிது சென்றான் இரவி, 'தீர்த்தன்மேல் அவன் திசைமுகன் படைக் கலம்' செலுத்தப் பார்க்கிலேன்; முந்திப் படுவப் படுவல்' என்பான் என, பட்டான் எனமுடிக்க. இரவி - சூரியன். தீர்த்தன் - தூயோன்; என்றது, இராமன் தம்பியாகிய இலக்குவனை. திசைமுகன் - நாற்றிசையிலும் முகம் உடையவன்; என்றது நான்முகங்களையுடையவனாகிய பிரமனை. அவனது படைக்கலம் பிரமாத்திரம். படுவல் - படுவேன்; படுதல் - மறைதல். இச் செய்யுள் தற்குறிப்பேற்ற அணி. (87)

**இராமன், சேனைகட்கு உணவுதேடிக் கொணருமாறு வீடணனுக்குக் கூற, அவன் தமரொடும் விரைந்து செல்லுதல்**

8660. இரவு நன்பக லும்பெரு நெடுஞ்செரு வியற்றி
உரவு நம்படை மெலிந்தள தருந்துதற் குறைவு
வரவு தாழ்த்தது வீடண வல்லை யி னேகித்
தரவு வேண்டின னென்றனன் றாமரைக் கண்ணன்.

'இரவும் நண்பகலும் பெரு நெடுஞ்செரு இயற்றி,
உரவுநம் படை மெலிந்துளது; அருந்துதற்கு உணவு
வரவு தாழ்த்தது; வீடண! வல்லையின் ஏகி,
தரவு வேண்டினென்' என்றனன், தாமரைக் கண்ணன்.

பொ :- 'இரவிலும் நல்ல பகலிலும் நீண்ட பெரும் போரைச் செய்து வலிமைமிக்க நம் சேனை மெலிவடைந்துளது. (சேனை வீரர்கள்) அருந்துதற்குரிய உணவுவரத் தாமித்தது. வீடணனே! (நீ) விரைவிற் சென்று (அதனைக் கொணர்ந்து) தருதலை விரும்புகின்றேன்' என (வீடணனை நோக்கி)க் கூறினான், செந்தாமரை மலர் போலும் கண்களையுடைய இராமபிரான்.

கு :- நன்பகல் என்றது கதிரவன் உச்சியில் நின்ற வெம்மை மிக்க பகற் பொழுதினை. உரவு—வலிமை. தரவு—தருதல். (88)

8661. இன்ன தேகடி தியற்றுவெ
னெனத்தொழு தெழுந்தான்
பொன்னின் மோலியன் வீடணன்
றமரொடும் போனான்

கன்ன லொன்றிலோர் காலினின்
வேலையைக் கடந்தான்
அன்ன வேலையி னிராமனீ
திளையவற் கறைந்தான்.

'இன்னதே கடிது இயற்றுவென்'
எனத்தொழுது எழுந்தான்,
பொன்னின் மோலியன் வீடணன்,
தமரொடும் போனான்;
கன்னல் ஒன்றில் ஓர்காலினின்
வேலையைக் கடந்தான்;
அன்ன வேலையின் இராமன்ஈது
இளையவற்கு அறைந்தான்.

பொ :- பொன்னால் இயன்ற முடியினையுடைய வீடணன், (உணவினைக் கொணர்தலாகிய) இச் செயலையே விரைந்து செய்வேன் என்று (இராமனைக்) கைதொழுது எழுந்து தன் ஏவற் சுற்றத்தாரொடும் (விரைந்து) போயினான்; ஒரு நாழிகைப் பொழுதிற்குள் ஒப்பற்ற காற்றினை யொத்துக் கடலைக் கடந்து சென்றான். அந்தச் சமயத்தில் இராமன், தன் தம்பியாகிய இலக்குவனுக்கு (ப் பின்வரும்) இவ் வார்த்தையைக் கூறினான்.

கு :- மோலி என்பது, மௌலி என்னும் வட சொல்லின் திரிபு. மௌலி—முடி. கன்னல்—நாழிகை. காலினின்—காற்றைப் போன்று, கால்—காற்று, இன், உவமவுருபு. வேலை—கடல். அறைதல்—கூறுதல். (89)

**தெய்வப் படைக்கலங்களுக்குப் பூசனைபுரிய எண்ணிய இராமன் இலக்குவனை நோக்கிச் சேனைகளைக் காக்கும்படி பணித்து, தான் போர்க்களத்தைவிட்டு வேறிடஞ் செல்லுதல்**

8662. தெய்வ வான்பெரும் படைகட்கு
வரன் முறை திருந்து
மெய்கொள் பூசனை யியற்றினம்
விடுமிது விதியால்
ஐய நானிவை யாற்றினன்
வருவதோ ரளவும்
கைகொள் சேனையைக் காவெனப்
போர்க்களங் கடந்தான்.

'தெய்வ வான்பெரும் படைகட்கு
வரன்முறை திருந்து
மெய்கொள் பூசனை இயற்றினம்
விடும்இது விதியால்;
ஐய! நான் இவை ஆற்றினன்
வருவதுஓர் அளவும்
கைகொள் சேனையைக் கா'எனப்
போர்க்களம் கடந்தான்.

பொ :- 'தெய்வத் தன்மை வாய்ந்த பெருமை மிக்க ஆயுதங்கட்கு வரன்முறையாகத் திருந்திய மெய்ம்மையொடு பொருந்திய வழிபாடுகளைச் செய்தோமாகி நிறைவேற்றும் இச் செயல், (போரில் வெற்றியினைப் பெற விரும்பும் வீரர்க்குரிய) கடமையாகும். ஐயனே! யான் இவ்வழிபாடுகளைச் செய்து முடித்தேனாகி (இங்குத் திரும்பி)-வரும் அளவும் அணிவகுத்தலைக் கொண்ட சேனையை (இடரின்றி) பாதுகாத்திருப்பாயாக' என்று கூறிப் போர்க்களத்தை விட்டு நீங்கிப் புறத்தே சென்றான்.

கு :- போரில் வெற்றியளிக்கவல்ல அத்திரதேவதைகட்குப் பூசனை புரிதல்வேண்டி, இராமன் போர்க்களத்தை விட்டு நீங்கிப் பூசனை புரிதற்கேற்ற தூய்மை வாய்ந்த இடத்தினை அடைந்தான் என்க. வரன்முறை திருந்து பூசனை, மெய்கொள் பூசனை எனத் தனித்தனி இயையும். கைகொள் சேனை—அணி அணியாக வகுத்தலைக் கொண்ட சேனை. கா—காத்திடுக; முன்னிலை ஏவலொருமை. (90)

இதன்பின் 45, 52-ல் பின்வருமாறு ஒரு மிகைப் பாடல் உளது.

8662அ. இன்ன திவ்வழி நிற்கமற்
றிருஞ்சமர்க் குடைந்தே
துன்னு வான்வழி இலங்கையிற்
போகின்ற தோன்றல்
பொன்னின் வார்சிலைக் கரத்தொடும்
பொருக்கெனப் புகுந்து
தன்னை யீன்றிடும் ஒருதனித்
தந்தையைக் கண்டான்.

### தன் தந்தையைக் கண்டு போரில் நிகழ்ந்தவற்றை இந்திரசித்து கூற இராவணன் 'இனிச் செய்தற்குரியது யாது?' என வினவுதல்

8663. தந்தை யைக்கண்டு புகுந்துள
தன்மையுந் தன்மேல்
முந்தை நான்முகன் படைக்கலந்
தொடுக்குற்ற முறையும்
சிந்தை யுட்புகச் செப்பின
னணையவன் றிகைத்தான்
எந்தை யென்னினிச் செயத்தக்க
திசையென விசைத்தான்.

தந்தையைக் கண்டு, புகுந்துள
தன்மையும், தன்மேல்
முந்தை நான்முகன் படைக்கலம்
தொடுக்குற்ற முறையும்
சிந்தையுள் புகச் செப்பினன்;
அனையவன் திகைத்தான்,
'எந்தை! என், இனிச் செயத்தக்கது?
இசை'என இசைத்தான்.

பொ :- (தோல்வியுற்றவனாகி மறைந்து இலங்கை நகரத்தையடைந்த) இந்திரசித்து) தந்தையாகிய இராவணனைக் கண்டு, (போரில்) நிகழ்ந்துள்ள செயலையும், தன் மீது பழையோனாகிய பிரமனது படைக் கலத்தை (ப் பகைவர்) தொடுத்தற்கு எண்ணிய முறைமையையும், (தன் தந்தையின்) மனத்திற் பதியும்படி எடுத்துரைத்தான். (அதனைக் கேட்டுணர்ந்த) அவ் இராவணன் திகைப்புற்றவனாகி, 'எந்தாய்! இப்பொழுது நம்மாற் செய்யத் தக்கது யாது? சொல்வாயாக' என (இந்திரசித்தை நோக்கி) வினவினான்.

கு :- 'தோற்றவன்... இலங்கையைக் கலந்தான்' என 84-ஆம் செய்யுளில் உள்ள தொடரிற் குறிக்கப்பட்ட இந்திரசித்து என்னும் எழுவாய் ஈண்டு வருவித்துரைக்கப்பட்டது. இவ்வுலகில் வாழும் மன்னுயிர்க்கெல்லாம் முன்னோனாகிய' பிரமன் என்பார், 'முந்தை நான்முகன்' என்றார். சிந்தையுட் புகழ் செப்புதல்—மனத்திற் பதியுமாறு எடுத்துரைத்தல். அனையவன்—அத் தன்மையனாகிய இராவணன். தன் மகனை அன்பின் மிகுதியால் 'எந்தையே' என அழைத்தான். (91)

## இந்திரசித்து, இனி செய்யத் தகுவது இதுவெனக் கூறுதல்

8664. தன்னைக் கொல்வது துணிவரேற்
றனக்கது தகுமேல்
முன்னர்க் கொல்லிய முயல்கவென்
றறிஞரே மொழிந்தார்
அந்நற் போரவ ரறிவுரு
வகைமறைந் தயன்றன்
வென்னற் போர்ப்படை விடுதலே
நலமிது விதியால்.

"தன்னைக் கொல்வது துணிவரேல்,
தனக்கு அது தகுமேல்,
முன்னர்க் கொல்லிய முயல்க' என்று
அறிஞரே மொழிந்தார்;
அந்நற் போரவர் அறிவுருவகை
மறைந்து அயன் தன்
வெல்நல் போர்ப்படை விடுதலே
நலம்; இது விதியால்.

பொ :- (பிறர்) தன்னைக் கொல்லுதற்குத் துணிந்தாராயின் (அத்தகையவரைக் கொல்லுதலாகிய) அச் செயல் தன்னாற் செய்வதற்கு இயல்வதாயின், (அவர்கள் அதனைத் தொடங்குதற்கு) முன்னரே (அன்னோரைக்) கொல்லுதற்கு முயலுக' என்று அறிஞர்களே (தெளிவாகக்) கூறியுள்ளார்கள். அத்தகைய நல்ல போர்த் தொழிலில் வல்ல (பகைவராகிய) அம் மனிதர்கள் அறிந்து கொள்ளாதவாறு மறைந்திருந்து வெற்றியைத் தரும் நல்ல பிரமனது படைக்கலமாகிய அத்திரத்தை (அவர்கள் மீது) செலுத்துதலே நன்மை தரும் செயலாகும். இதுவே நமக்குரிய முறையுமாகும்.

கு :- வன்மையிற் சிறந்த பகைவர் தன்னை முற்படக் கொல்லுதற்குத் துணிந்தாராயின், அத்தகையோரைக் கொன்றொழித்தல் தன்னால் இயல்வதாயின், பகைவராகிய அன்னோர்தம் முயற்சியைத் தொடங்குதற்கு முன்னரே தான் அவரைக் கொன்றொழித்தற்கு முந்துக என்பது, போர்முறை தெரிந்த அறிஞர்கள் கூறிய அறிவுரையாகும். ஆகவே:ஆற்றல்மிக்க போர் வீரராகிய இராம இலக்குவர் அறியாதபடி மறைந்திருந்து அவர்மேற் பிரமாத்திரத்தை முற்படச் செலுத்திக் கொல்லுதலே நமக்கு நலந்தரும் செயலாகும். இப்பொழுது நாம் மேற்கொள்ளவேண்டிய போர்முறையும்

இதுவே என இந்திரசித்து தன் கருத்தினைத் தந்தைக்கு எடுத்துரைத்தான் என்பதாம். (92)

8665. தொடுக்கின் றேனென்ப துணர்வரே
லப்படை தொடுத்தே
தடுப்பர் காண்பரேற் கொல்லவும்
வல்லரத் தவத்தர்
இடுக்கொன் றாகின்ற தில்லை நல்
வேள்வியை யியற்றி
முடிப்ப லன்னவர் வாழ்வையோர்
கணத்தென்று முடித்தான்.

'தொடுக்கின்றேன் என்பது உணர்வரேல்
அப்படை தொடுத்தே
தடுப்பர்; காண்பரேல், கொல்லவும்
வல்லர்; அத் தவத்தோர்;
இடுக்கு ஒன்று ஆகின்றது இல்லை;
நல் வேள்வியை இயற்றி
முடிப்பல், அன்னவர் வாழ்வைஓர்
கணத்து'என்று முடித்தான்.

பொ :- (யான் பிரமாத்திரத்தைத்) தொடுக்கின்றேன் என்ற செய்தியை (ப் பகைவர்) அறிந்தனராயின் அதே பிரமாத்திரத்தை (எதிராக) த் தொடுத்து (யான் ஏவியதனை)த் தடுத்து விடுவார்கள். தவத்திற் சிறந்தாராகிய அவர்கள் (என்னை நேரிற்) காண்பார்களாயின் (அப்பொழுதே) கொன்றொழிக்கவும் வல்லமையுடையவர்கள். (இது பற்றிச்) சங்கடம் ஒன்றும் நேர்ந்துவிடப் போவதில்லை. நன்மையைத் தரும் யாகம் ஒன்றைச் செய்து அம் மனிதர்களது வாழ்வை ஒரு கணப்பொழுதிற்குள் முடித்துத் தீர்வேன்' என (த் தன் துணிபினை) உறுதியாகக் கூறினான். (இந்திர சித்து)

கு :- தொடுத்தல்-வில் நாணிற் பூட்டி எய்தல். அத் தவத்தர் என்றது தவ வேடத்தினராகிய இராம இலக்குவர்களை. இடுக்கு-சங்கடம். 'இடுக்கி வணியம்புவதில்லை' (கம்ப-யுத்த-மந்திர-27) என்புழியும் இச் சொல் இப் பொருளில் வழங்குதலறியலாம். ஒன்றும் என உம்மை வருவித் துரைக்கப்பட்டது. அன்னவர் வாழ்வை ஓர் கணத்து முடிப்பல் என்று முடித்தான் என்க. முடித்தல்—துணிவாகக் கூறுதல். (93)

இந்திரசித்தின் கருத்திற்கிசைந்த இராவணன், மகோதரனை நோக்கி, 'நீ படையுடன் முன்னதாகச் சென்று மகோதரனை மாயப் போர் புரிக' எனப் பணித்தல்,

8666. என்னை யன்னவர் மறந்தனர்
நின்றிக லியற்றத்
துன்னு போர்ப்படை முடிவிலா
தவர்வயிற் றூண்டிற்
பின்னை நின்றது புரிவலென்
றனையவன் பேச
மன்னன் முன்னின்ற மகோதரற்
கிம்மொழி வழங்கும்.

'என்னை அன்னவர் மறந்தனர்
நின்றுஇகல் இயற்ற
துன்னு போர்ப்படை முடிவுஇலாது
அவர்வயின் தூண்டின்
பின்னை, நின்றது புரிவன்' என்று
அன்னவன் பேச
மன்னன், முன்நின்ற மகோதரற்கு
இம்மொழி வழங்கும்.

பொ :- (இராம இலக்குவராகிய) அவர்கள் என்னை அறவே மறந்தவராய் நின்று போர் செய்யுமாறு, நெருங்கிய சேனைகளை ஒழிவின்றி அவர்கள்மீது செலுத்துவாயாயின், பின்பு (நான் செய்ய வேண்டியதாய்) எஞ்சி நின்ற செயலைச் செய்வேன்' என்று அவ் இந்திரசித்து கூறினனாக, அரக்கர் மன்னவனாகிய இராவணன் (தன்) முன்நின்ற மகோதரனுக்கு (ப் பின் வரும்) இம் மொழியினைக் கூறுவானாயினன்.

கு :- அன்னவர் என்னை மறந்தனர் நின்று இகல் இயற்ற என இயையும். அன்னவர் என்றது, இராம இலக்குவரை. முடிவு இலாது—ஒழிவில்லாமல். தூண்டுதல் – செலுத்துதல், பின்னை நின்றது—பின்பு நான் செய்தற்குரியதாக எஞ்சிநின்ற செயல்; என்றது, பகைவர் அறியாதபடி அவர்மீது பிரமாத்திரத்தைச் செலுத்திக் கொல்லுதலை. அன்னவன் – அவ் இந்திரசித்து. மன்னன் என்றது, இராவணனை. (94)

8667. வெள்ள நூறுடை வெஞ்சினச்
சேனையை வீர
அள்ளி லைப்படை யகம்பனை
முதலிய வரக்கர்
எள்ளி லெண்ணிலர் தம்மொடு
விரைந்தனை யேகிக்
கொள்ளை வெஞ்செரு வியற்றுதி
மனிதரைக் குறுகி.

'வெள்ளம் நூறுடை வெஞ்சினச்
சேனையை, வீர!
அள் இலைப்படை அகம்பனை
முதலிய அரக்கர்
எள்இல் எண் இலர் தம்மொடு
விரைந்தனை ஏகி,
கொள்ளை வெஞ்செரு இயற்றுதி,'
மனிதரைக் குறுகி.

பொ :- வீரனே! கொடுஞ்சினம் உடைய நூறுவெள்ளம் சேனையை உடையையாய், கூரிய இலைத் தொழிலமைந்த வேற் படையையுடைய அகம்பன் முதலாகவுள்ள அரக்கர்கள் இகழ்தல் இல்லாத எண்ணற்றவராயுள்ளவர்களோடு விரைந்து சென்று (இராம இலக்குவரென்னும்) மனிதரை நெருங்கி அவரது உயிரைக் கவர்ந்து கொள்ளுதற்குரிய கொடிய போர்ச் செயலை நிகழ்த்து வாயாக.

கு :- வீர—வீரனே; இராவணன் மகோதரனை நோக்கியழைத்த அண்மை விளி. சேனையை—சேனையையுடையாய்; சேனை என்னும் பெயரடியாகப் பிறந்த முன்னிலை யொருமை குறிப்பு வினைமுற்று; அஃது எச்சமாய் நின்று ஏகி இயற்றுதி என்னும் வினைகொண்டு முடிந்தது. அள்—கூர்மை. (95)

8668. மாயை யென்றன வல்லன
யாவையும் வழங்கித்
தீயிருட்டு பெரும் பரப்பினைச்
செறிவுறத் திருத்தி

நீயொ ருத்தனே யுலகொரு
மூன்றையு நிமிர்வாய்
போயு ருத்தவ ருயிர்குடித்
துதவெனப் புகன்ருன்.

'மாயை என்றன, வல்லன
யாவையும், வழங்கி,
தீஇருட் பெரும் பரப்பினைச்
செறிவுஉறத் திருத்தி,
நீஒருத்தனே உலகு ஒரு
மூன்றையும் நிமிர்வாய்;
போய் உருத்தவர் உயிர்குடித்து
உதவு' எனப் புகன்ருன்.

பொ :- மயக்குந் தன்மைய எனச் சொல்லப்பட்டனவாகி (நீ கற்று) வல்லன எல்லாவற்றையும் செயற்படுத்திக் கொடிய பெரிய இருட்பரப்பினை (எவ்விடத்தும்) நெருங்கிச் செறியுமாறு செய்து நீ ஒருவனே ஒப்பற்ற மூவுலகங்களையும் (அகத்திட்டு) உயர்ந்தோங்க வல்லாயாகிச் சென்று, சினந்து பொருவோராகிய பகைவரது உயிரைக் கவர்ந்து (இந்திரசித்தின் வெற்றிக்கு) உதவுவாயாக' என (மகோதரனை நோக்கி)க் கூறினன் (இராவணன்).

கு :- மாயை—மயக்குந் தன்மையனவாகிய வஞ்சனைச் செயல்கள். திருத்துதல்—செய்தல். நிமிர்தல்—உயர்தல். உருத்தவர் என்றது, வெகுண்டு போர்புரியும் இராம இலக்குவர் முதலியவர்களை. இந்திரசித்து பிரமாத்திரத்தைச் செலுத்திப் பகைவரது உயிரைக் கவர்தற்குத் துணைசெய்யும் முறையில் நீ முன்சென்று அவருடன் தொடர்ந்து போர் புரிவாயாக என்பான், 'போய் உருத்தவர் உயிர் குடித்து உதவு' என்ருன். உயிர் குடித்து என்பதனை உயிர் குடிக்க என எச்சத் திரிபாகக் கொள்ளுதலும் பொருந்தும். (96)

### மகோதரன் மகிழ்ந்து போருக்குப் புறப்பட்ட நிலையில் உடன்சென்ற நால்வகைச் சேனைகளின் தோற்றம்

8669. என்ற காலையி னென்றுகொ
லேவுவ தென்று
நின்ற வாளெயிற் றரக்கனு
முவகையி னிமிர்ந்தான்

சென்று தேர்மிசை யேறின
னிராக்கதர் செறிந்தார்
குன்று சுற்றிய மதகரிக்
குலமன்ன குறியார்.

என்ற காலையின், 'என்றுகொல்
ஏவுவது ?' என்று
நின்ற வாள்எயிற்று அரக்கனும்
உவகையின் நிமிர்ந்தான்;
சென்று தேர்மிசை ஏறினன்;
இராக்கதர் செறிந்தார்,
குன்று சுற்றிய மதகரிக் குலம்
அன்ன குறியார்.

பொ :- என்று இவ்வாறு இராவணன் கூறியபோது, ('மன்னன் என்னைப் போர்மேல்) ஏவுவது எந்த நாளோ ?' என ஆசையால் எதிர்பார்த்து நின்ற வாள்போலும் (கோரப்) பற்களையுடைய அரக்கனாகிய மகோதரனும் மகிழ்ச்சியாற் கிளர்ந்து ஓங்கியவனாய் (விரைந்து) சென்று தேரின்மேல் ஏறியமர்ந்தான். அரக்க வீரர்கள் மலையைச் சூழ்ந்து நின்ற மதயானைக் கூட்டத்தினையொத்த தோற்றமுடைய கூட்டத்தினராய் (அம் மகோதரனைப்) புடைசூழ்ந்து நெருங்கினார்கள்.

கு :- "ஏவுவது என்று கொல்' என்று நின்ற வாள் எயிற்று அரக்கன்" என்றது, பகைவரைப் போரிற் புறங்காணும் விருப்புடன் மன்னன் தன்னைப் போருக்கு ஏவும் நாள் எந்த நாளோ ? என ஏக்கற்றுநின்ற பெரு வீரனாகிய மகோதரனை. மகோதரனுக்கு மலையும், அவனைச் சுற்றிநின்ற அரக்கர் கூட்டத்திற்கு மதயானைக் கூட்டமும் உவமை. குறி—சபை; ஈண்டுக் கூட்டம் என்னும் பொருளில் ஆளப் பட்டது (97)

8670. கோடி கோடிநூ றுயிர
மாயிரம் குறித்த
ஆடல் யானைக ளனிதொறு
மணிதொரு மமைந்த
ஓடு தேர்குல முலப்பில
கோடிவந் துற்ற
கேடில் வாம்பரி கணக்கையுங்
கடந்தன கிளர்ந்த.

கோடி கோடி நூறுயிரம்
ஆயிரம் குறித்த
ஆடல் யானைகள் அணிதொறும்
அணிதொறும் அமைந்த;
ஓடு தேர்க்குலம் உலப்புஇல
கோடி, வந்து உற்ற;
கேடுஇல் வாம்பரி, கணக்கையும்
கடந்தன கிளர்ந்த.

பொ :- கோடி கோடி நூறுயிரம் ஆயிரம் என்னும் (பெருந்) தொகையினவாகக் குறித்துரைக்கப்படும் வலிய யானைகள் சேனைகளின் அணிதோறும் அணிதோறும் பொருந்தி நின்றன. விரைந்து செல்லும் தன்மையினவாகிய தேர்த் தொகுதிகள் அளப்பில்லனவாகிய கோடிகள் வந்து சேர்ந்தன. கெடுதல் இல்லாதனவாகி (ப் போரில்) தாவிச் செல்லும் குதிரைகள்எண்ணின் அளவையுங்கடந்தனவாய் உள்ளக் கிளர்ச்சியுடன் எழுந்தன.

கு :- இதனுல் யானை, தேர், குதிரை என்னும் முவகைச் சேனைகள் அளவற்றனவாய் மகோதரன் படையில் வந்துகூடிய செய்தி கூறப்பட்டது. உலப்பில—எண்ணத் தொலையாதன. அளவற்றன. வாவும் என்னும் செய்யுமென்னும் பெயரெச்சம் இடைநின்ற உயிர்மெய் கெட்டு வாம் என நின்றது. வாவுதல்—தாவுதல். கணக்கு—எண்ணின் அளவு. (98)

8771. படைக்க லங்களும் பருமணிப்
பூண்களும் பகுவாய்
இடைக்க லந்தன வெயிற்றிளம்
பிறைகளு மெறிப்பப்
புடைப்ப ரந்தன வெயில்களு
நிலாக்களும் புரள
விடைக்கு லங்கள்போ
லிராக்கதப் பதாதியு மிடைந்த.

படைக்க லங்களும், பருமணிப்
பூண்களும், பகுவாய்
இடைக் கலந்தன எயிற்று
இளம்பிறைகளும் எறிப்ப,

புடைப் பரந்தன வெயில்களும்
நிலாக்களும் புரள,
விடைக் குலங்கள்போல், இரக்கதப்
பதாதியும் மிடைந்த.

பொ :- (கையிற்கொண்ட) ஆயுதங்களும் பருமைவாய்ந்த மணிகள் பதிக்கப்பெற்ற அணிகலன்களும், பிளவுபட்ட வாயினிடையே விலங்கி அமைந்தனவாகிய (கோரப்) பற்களாகிய இளம் பிறைகளும் ஒளி வீசுதலால், பக்கத்திற் பரவிய வெயில் ஒளியும் நிலவொளியும் மாறிமாறி விளங்க, வலிமிக்க எருதுகளின் தொகுதிகளையொத்து இராக்கதர்களாகிய காலாட் படையும் மிக்கு நெருங்கின.

கு :- அரக்கர்கள் கையிற்கொண்ட படைகலங்களும் அவர்கள் அணிந்துள்ள அணிகலன்களும் ஒளிவிடுதலால் வெயிலின் ஒளியும் அவர்தம் வாயிலுள்ள இளம்பிறைபோலும் எயிறுகள் ஒளிவிடுதலால் நிலவொளியும் பக்கங்களில் மாறி மாறி விளங்கின என்க. இராக்கதப் பதாதி—அரக்க வீரர்களாகிய காலாட் படை. இச் செய்யுளில் மகோதரனுடன் சென்ற காலாட்படையின் இயல்பு விரித்துரைக்கப் பட்டது. (99)

8672. கொடிக்கு ழீஇயன கொழுந்தெடுத்
தெழுந்துமேற் கொள்ள
இடிக்கு ழீஇயெழு மழைப்பெருங்
குலங்களை யிரித்த
அடிக்கு ழீஇயிடு மிடந்தொறும்
பிதிர்ந்தெழுந் தார்த்த
பொடிக்கு ழீஇயண்டம் படைத்தவன்
கண்ணையும் புதைத்த.

கொடிக் குழீஇயன, கொழுந்து
எடுத்துஎழுந்து மேற்கொள்ள,
இடிக் குழீஇஎழு மழைப்பெருங்
குலங்களை இரித்த;
அடிக் குழீஇஇடும் இடந்தொறும்
பிதிர்ந்துஎழுந்து ஆர்த்த
பொடிக் குழீஇ, அண்டம் படைத்தவன்
கண்ணையும் புதைத்த.

பொ :- கொடிகள் பலவாகக் குழுமியவை (அவற்றின் ஆடையாகிய) கொழுந்து (காற்றினால்) எடுத்து வீசப்பட்டு மேலெழுந்து விசும்பின் மேலிடத்தைப்பற்றிக் கொள்வதனால், இடியேற்றுடன் கூடி எழுந்த பெரிய மேகக் கூட்டங்களை (அங்கு நிலைத்திராதபடி) ஓட்டின. (சேனைகளின்) கால்கள் பூமியில் ஆழப் பதியவைக்கும் இடந்தோறும் பிதிர்பட்டு எழுந்து நிரம்பிய தூளிகள் ஒருசேரத் திரண்டு (மேற்சென்று) உலகத்தைப் படைத்தவனாகிய பிரமதேவனுடைய கண்களையும் மறைத்தன.

கு :- குழீஇயன—குழுமியவை. குழுவுதல்—பலவும் ஒன்றாகக் கூடுதல். கொழுந்து என்றது, கொடியாடையின் நுனியினை. இரித்தல்—ஓட்டுதல். பிதிர்தல்—பிளந்து சிதைதல். ஆர்த்தல்—நிறைதல். பொடி—தூளி. அண்டம்—உலகம். (100)

8673. ஆனை யென்னுமா மலைகளி
னிழிமத மருவி
வான யாறுகள் வாசிவாய்
நுரையொடு மயங்கிக்
கான மாமரங் கல்லொடு
மீர்த்தன கடிதிற்
போன போக்கரும் பெருமைய
புணரியுட் புக்க.

ஆனை என்னும்மா மலைகளின்
இழிமத அருவி
வான யாறுகள், வாசிவாய்
நுரையொடு மயங்கி,
கான மாமரம் கல்லொடும்
ஈர்த்தன, கடிதின்
போன, போக்கஅரும் பெருமைய,
புணரியுள் புக்க.

பொ :- யானைகளென்னும் பெரிய மலைகளிலிருந்து விழும் மத நீர் அருவியாகிய வான நதிகள், குதிரைகளின் வாயிலிருந்து வெளிப்படும் நுரைகளுடன் கலந்து, காட்டிலுள்ள பெரு மரங்களைக் கற்களுடன் இழுத்துக்கொண்டு விரைந்து ஓடியவை, தடுத்தற்கு அரிய பெருக்கத்தையுடையனவாய்க் கடலினுள்ளே சென்று புகுந்தன.

கு :- யானையை மலையாகவும் அதன் மத்தகத்தினின்று இழியும் மதநீரை மலையினின்று இழியும் அருவியாகவும் உருவகித்தார். வாசி – குதிரை. மயங்குதல்—கலத்தல். போக்குதல்—தடுத்தல். புணரி – கடல். வானயாறுகள், நுரையொடு மயங்கி, ஈர்த்தன, கடிதிற்போன, பெருமைய, புக்க என முடியும். (101)

8674. தடித்து மீன்குலம் விசும்பிடைத்
தயங்குவ சலத்தின்
மடித்த வாயினர் வாளெயிற்
றரக்கர்தம் வலத்திற்
பிடித்த திண்படை விதிர்த்திட
விதிர்த்திடப் பிறழ்ந்து
பொடித்த வெம்பொறி கொதித்துமேற்
போவன போன்ற.

தடித்து, மீன்குலம் விசும்பிடைத்
தயங்குவ சலத்தின்
மடித்த வாயினர், வாள்எயிற்று
அரக்கர்,தம் வலத்தின்
பிடித்த திண்படை விதிர்த்திட
விதிர்த்திடப் பிறழ்ந்து
பொடித்த வெம்பொறி, கொதித்துமேல்
போவன போன்ற.

பொ :- மின்னலும் விண்மீன் தொகுதிகளும் வானிடத்தே விளங்குவன. வாள்போற் கூரிய பற்களையுடைய அரக்கர்கள், வெகுளியால் மடித்த வாயினையுடையராய்த் தம் வலக் கையிலே பற்றிய திண்ணிய ஆயுதங்களை அசைக்குந் தோறும் அசைக்குந் தோறும் மாறுபட்டுத் தோன்றிய வெவ்விய அனற் பொறிகள் கனன்று மேலே போவனவற்றை ஒத்தன.

கு :- தடித்து—மின்னல். மீன்குலம்—விண்மீன் கூட்டம். விதிர்த்தல்—அசைத்தல். பொடித்தல்—தோன்றுதல். அரக்கர்கள் தம் கையில் ஏந்திய ஆயுதங்களை அசைக்குந் தோறும் அசைக்குந் தோறும் ஒன்றோடொன்று மோதுதலாற் பிறந்த தீப் பொறிகள் மேலே பரந்து சென்றவற்றையொத்து வானிடத்தே மின்னலும் விண்மீன்களும் விளங்கின என்றார் ஆசிரியர். இவ்வாறு பொருளையே உவமையாகக் கூறினும், அரக்கர்தம் கையிடத்துள்ள

ஆயுதங்களை அடைக்குந்தோறும் ஒன்றோடொன்று தாக்குதலாற் பிறந்த தீப்பொறிகள் விசும்பிடத்தே போவன வானிடத்தேயுள்ள மின்னலையும் விண்மீன்களையும் ஒத்துத் தோன்றின என்பது இதன் கருத்தாகக் கொள்க. (102)

8775. சொன்ன நூறுடை வெள்ளமென்
றிராவணன் றுரந்த
அன்ன சேனையை வாயிலூ
டுமிழ்கின்ற வமைதி
முன்னம் வேலையை முழுவதுங்
குடித்தது முறையீ
தென்ன மீட்டுமிழ் தமிழ்முனி
யொத்ததவ் விலங்கை.

சொன்ன நூறுடை வெள்ளம்என்று,
இராவணன் துரந்த
அன்ன சேனையை வாயிலூடு
உமிழ்கின்ற அமைதி,
முன்னம் வேலையை, முழுவதும்
குடித்தது 'முறைஈது'
என்ன மீட்டுஉமிழ் தமிழ்முனி
ஒத்தது,அவ் இலங்கை.

பொ :- நூறு வெள்ளம் என்று எண்ணிச் சொல்லப்பட்டனவும் இராவணனால் செலுத்தப்பட்டனவும் ஆகிய அத்தகைய சேனைகளை (த் தன்) வாயிலின் வழியாக (ஒருங்கே) வெளிவிடுகின்ற தன்மையினால், முற்காலத்திற் கடல் முழுவதனையும் (ஒரு சேரக்) குடித்திட்டது இம் முறையே யென்ன அக் கடலினை மீளவும் உமிழ்ந்து வெளிப்படுத்தின தமிழ் முனிவராகிய அகத்திய முனிவரை ஒத்துத் தோன்றியது, அந்த இலங்கை நகரம்.

கு :- அவ் இலங்கை, அன்ன சேனையை வாயிலூடு உமிழ்கின்ற அமைதி (யால்) வேலையை மீட்டு உமிழ் தமிழ்முனி ஒத்தது என்க. சிவபெருமான் மலையரசன் மகளாராகிய உமையம்மையைத் திருமணம் புரியும் நாளில் தென்றிசையுயர்ந்து வடதிசை தாழ்வுற அத் தாழ்வு நீக்குதல் வேண்டி அகத்திய முனிவரைத் தென்றிசைக்குச் செல்ல என ஏவியருளினாராகத் தென்றிசைக்கு வரும் அகத்தியர் சிவபெருமான்பால் தமிழ் மொழியை நன்கு பயின்று பொதிய மலை

யில் தங்கித் தமிழ் மொழியை முத்தமிழ்த் துறைகளாக வளர்த்து வளம்பெறச் செய்தார் என்னும் புராண கதையிணையுளங் கொண்ட இந் நூலாசிரியர், அம் முனிவர் பெருமானைத் தமிழுக்கே சிறப் புரிமையுடையவர் என்னும் கருத்தில் 'தமிழ்முனி' எனச் சிறப் பித்துப் போற்றினர். இவ்வாறே "நெற்றியுமிழ் செங்கண் தழற் புரை சுடர்க் கடவுள் தந்த தமிழ் தந்தான்' (கம்பர்-அகத்தியப்-41) எனவும், 'தென்றமிழ் நாட்டகன் பொதியிற்றிரு முனிவன் தமிழ்ச் சங்கம்' (கம்பர்-நாடவிட்ட-31) எனவும் முன்னர்க் குறித்துள்ளமை யும் இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும். *(103)*

## அரக்கர்க்கும் வானரர்க்கும் இடையே நிகழ்ந்த பெரும்போர்

*8676.* சங்கும் பேரியுந் தாளமுங்
காளமுந் தலைவர்
சிங்க நாதமுஞ் சிலையினு
ணொலிகளுஞ் சினமாப்
பொங்கு மோதையும் புரவியி
னோதையும் பொலந்தேர்
வெங்க ணோலமு மாலென
விழுங்கிய வுலகை.

சங்கும், பேரியும், தாளமும்,
காளமும், தலைவர்
சிங்க நாதமும், சிலையின்நாண்
ஒலிகளும், சினமாப்
பொங்கும் ஓதையும் புரவியின்
ஓதையும், பொலந்தேர்
வெங்கண் ஓலமும், மால் என,
விழுங்கிய உலகை.

பொ :- சங்கொலியும் பேரிகையொலியும் தாளத்தொலியும் எக்காளத்தோசையும் படைத் தலைவர்களது சிங்கத்தின் முழக்கத் தினையொத்த பெரு முழக்கமும் வில் நாணின் ஒலிகளும் வெகுளி மிக்க விலங்காகிய யானை கிளர்ந்தெழும் பிளிற்றொலியும் குதிரையின் கனைப்பொலியும் பொன்மயமான தேர்களின் சக்கரங்களினின் றெழும் ஓசையும் திருமாலைப் போன்று உலகினை (த் தன் அகத் திட்டு) விழுங்கின.

கு :- சங்கு, பேரி, தாளம், காளம் என்பன அவற்றின் ஒலிகளைக் குறித்தன. சிங்கநாதம்—சிங்கம் கர்ச்சிப்பது போன்ற பெரு முழக்கம். சேனைகளினின்றெழுந்த இவ் வொலிகள் யாவும் இவ் வுலகின் கீழும் மேலும் நாற்புறமும் சூழ்ந்து இவ்வுலகினைத் தம் அகத்தே அடக்கின என்பார், 'மால் என விழுங்கின உலகை' என்றார். மால் என—திருமாலைப் போன்று. விழுங்கிய—விழுங்கின; அகரவீற்றுப் பலவின்பால் வினைமுற்று. (104)

8677. புக்க தார்ப்பெரும் போர்ப்படை
பறந்தலைப் புறத்தில்
தொக்க தானெடு வானரத்
தானையுந் துவன்றி
ஒக்க வார்த்தன வுறுக்கின
தெழித்தன வுருத்த
மிக்க வான்படை விடுகணை
மாமழை விலக்கி.

புக்க தார்ப்பெரும் போர்ப்படை,
பறந்தலைப் புறத்தில்
தொக்க தால்;நெடு வானரத்
தானையும் துவன்றி
ஒக்க ஆர்த்தன, உறுக்கின,
தெழித்தன, உருத்த
மிக்க வான்படை விடுகணை
மாமழை விலக்கி.

பொ :- (முற்படப்) புகுந்த தூசிப் படையாகிய பெரும்போரைச் செய்யும் சேனையானது, போர்க்களத்தின் புறத்தே சென்று கூடியது. நீண்ட வானர சேனையும் நிறைந்து ஒருங்கு ஆரவாரித்தனவாய், மேற்பட்டுவந்த பெரிய அத் தூசிப்படை செலுத்திய அம்புப் பெருமழையை விலக்கித் தண்டித்து அதட்டினவாய் வெகுண்டன.

கு :- தாராகிய படை, பெரும் போர்ப்படை எனத் தனித்தனி இயையும். தார் என்றது, சேனைகளின் அணிவகுப்பில் பகைவர் மேல் முற்படச் சென்று தாக்கும் சேனையை. இதனைத் தூசி யெனவும் வழங்குவர். 'தார் தாங்கிச் செல்வது தானை' (767) என்பது திருக்குறள். பறந்தலை—போர்க்களம். தொகுதல்—கூடுதல்.

வானரத் தானையும், துவன்றி ஆர்த்தன, மிக்கவான்படை விடுகணை மாமழை விலக்கி உறுக்கின, தெழித்தன, உருத்த என முடிக்க. துவன்றுதல்—நிறைதல். உறுக்குதல்—தண்டித்தல், தெழித்தல்—அதட்டுதல். மிக்க வான்படை என்றது, மேற்பட்டெழுந்த அரக்கரது தூசிப்படையை. மிகுதல்—மேற்படுதல். உருத்தல்—வெகுளுதல். (105)

8678. குன்று கோடியுங் கோடிமேற்
கோடியுங் குறித்த
வென்றி வானர வீரர்கண்
முகந்தொறும் வீச
வொன்றி னல்வரு மைவரு
மிராக்கத ருலந்தார்
பொன்றி வீழ்ந்தன பொருகரி
பாய்பரி பொலந்தேர்.

குன்று கோடியும் கோடிமேல்
கோடியும் குறித்த
வென்றி வானர வீரர்கள்,
முகம்தொறும் வீச
ஒன்றின், நால்வரும் ஐவரும்
இராக்கதர் உலந்தார்;
பொன்றி வீழ்ந்தன, பொருகரி,
பாய்பரி, பொலந்தேர்.

பொ:- கோடியும் கோடிக்குமேற் கோடியும் ஆக மலைகளை இலக்கு நோக்கிய வெற்றித்திறன் வாய்ந்த வானர வீரர்கள், இடந்தோறும் (எடுத்து) வீசுதலால் (அவர்கள் எடுத்து வீசிய மலை) ஒன்றுக்கு இராக்கதர் நால்வரும் ஐவரும் என்ற எண்முறையில் இறந்துபட்டார்கள். (அரக்கர்களுடைய) போர்த்தொழிலில் வல்ல யானை, பாய்ந்து செல்லும் குதிரை, பொன்னால் இயன்ற தேர் என்பனவும் கெட்டொழிந்தன.

கு:- குறித்தல்—குறிபார்த்துச் செலுத்தல். முகந்தொறும்—இடந்தோறும். வீச என்னும் செயவெனெச்சம் காரணப் பொருளில் வந்தது. ஒன்றின்—ஒன்றுக்கு; உருபு மயக்கம். உலத்தல்—இறத்தல். (106)

8679. மழுவுஞ் சூலமும் வலயமு
நாஞ்சிலும் வாளும்
எழுவு மீட்டியுந் தோட்டியு
மெழுமுனைத் தண்டும்
தழுவும் வேலொடு கணையமும்
பகழியுந் தாக்கக்
குழுவி னேடுபட் டுருண்டன
வானரக் குலங்கள்.

மழுவும், சூலமும், வலயமும்,
நாஞ்சிலும், வாளும்,
எழுவும், ஈட்டியும், தோட்டியும்,
எழுமுனைத் தண்டும்;
தழுவும் வேலொடு கணையமும்,
பகழியும், தாக்க,
குழுவினேடு பட்டு உருண்டன,
வானரக் குலங்கள்.

பொ :- (அரக்கர்களுடைய) மழுவாயுதமும் சூலப்படையும், சக்கரப் படையும், நாஞ்சிற் படையும், வாளும், எழுவும் ஈட்டியும், அங்குசமும் மேற்பட்டெழுந்த கூரிய முனையையுடைய தண்டாயுதமும் கையிற் பற்றிய வேற்படையுடன் கணையமும் அம்பும் தாக்குதலால், வானரத் தொகுதிகள் தத்தம் குழுவுடன் கொல்லப்பட்டு (த் தரையில்) உருண்டன.

பொ :- மழுவும்...பகழியும் தாக்க, வானரக் குலங்கள் குழுவினேடு பட்டு உருண்டன என்க. இதுவும் அடுத்த செய்யுளும் அரக்கர் ஏவிய படைக்கலங்களால் வானரங்கள் இறந்த செய்தியை விரித்துரைப்பன. (107)

8680. முற்க ரங்களு முசலமு
முசுண்டியு முளையும்
சக்க ரங்களும் பிண்டிபா
லத்தொடு தண்டும்
கப்ப ணங்களும் வளையமுங்
கவணுமிழ் கல்லும்
வெற்பி னங்களை நுறுக்கின
கவிகளை வீழ்த்த.

முற்க ரங்களும், முசலமும்,
முசுண்டியும், முளையும்,
சக்க ரங்களும், பிண்டி
பாலத்தொடு தண்டும்,
கப்ப ணங்களும், வளையமும்,
கவண் உமிழ் கல்லும்
வெற்பி ணங்களை நுறுக்கின;
கவிகளை வீழ்த்த.

பொ :- (அரக்கர்கள் செலுத்திய) முற்கரங்களும் இருப்புலக்கையும் முசுண்டியும் முளையும் சக்கரப் படைகளும் பிண்டிபாலமும் தண்டும் கப்பணங்களும் வளையமும் கவண் வெளிப்படுத்தும் கல்லும் ஆகியவை (குரங்குகள் வீசிய) மலைத் தொகுதிகளைப் பொடியாக நொறுக்கின; (அவற்றை எறிந்த) குரங்குகளைக் கொன்று வீழ்த்தின.

கு .- முற்கரம், முசலம், முசுண்டி, முளை, பிண்டிபாலம், தண்டு என்பன ஆயுத வகைகள். கப்பணம் என்பது, நெருஞ்சில் முள்வடிவாக இரும்பினால் செய்யப்பட்டுப் போர்க்களத்திற் பகைவர் படை தம்மை அணுகவொண்ணாதவாறு தூவப்படுவது. (108)

8681. கதிர யிற்படைக் கலமவர்
முறைமுறை கடாவ
அதிர்பி ணப்பெருங் குன்றுகள்
படப்பட வழிந்த
உதிர முற்றபே ராறுக
டிசைதிசை யோட
எதிர் நடக்கில குரக்கின
மரக்கரு மியங்கார்.

கதிர் அயில்படைக் கலம்அவர்
முறைமுறை கடாவ.
அதிர் பிணப்பெருங் குன்றுகள்
படப்பட, அழிந்த
உதிரம் உற்றபேர் ஆறுகள்
திசைதிசை ஓட,
எதிர் நடக்கில குரக்கினம்;
அரக்கரும் இயங்கார்.

பொ :- (அரக்கராகிய) அவர்கள் ஒளியுடைய கூரிய படைக் கலங்களை அடுத்தடுத்து முறையே செலுத்துதலாலும், அதிர்ச்சி யுற்று விழும் பிணங்களாகிய பெருமலைகள் மேலும் மேலும் உண் டாவதாலும் (ஆயுதங்கள்பட்டு உடல்) சிதைந்தமையால் தோன்றிய குருதிப் பேராறுகள் (போர்க்களத்தில்) திசைகள் தோறும் ஓடுதலா லும் வானரக் கூட்டங்கள் (அரக்கர் சேனைக்கு) எதிரே நடத்தற்கு இயலாதனவாயின. அரக்கர்களும்(அப் போர்க்களத்தில்) மேற்செல்லு தற்கு இயலாதவராயினர்.

கு :- அவர், கதிர் அயிற்படைக்கலம் முறைமுறை கடாவ குரக்கினம் எதிர் நடக்கில எனவும், பிணப் பெருங் குன்றுகள் படப் பட, உற்ற உதிரப் பேராறுகள் திசைதிசை ஓட அரக்கரும் இயங்கார் எனவும் இருதொடராக இயைத்துரைக்க. செயவென் எச்சங்கள் காரணப் பொருளில் வந்தன. அவர் என்றது, அரக்கர்களை. (109)

### இறந்த வானரர், வானவராதல்

8782. யாவ ராங்கிகல் வானர
ராயின ரெவருந்
தேவ ராதலி னவரொடும்
விசும்பிடைத் திரிந்தார்
மேவு காதலின் மெலிவுறு
மரம்பையர் விரும்பி
ஆவி யொன்றிடத் தழுவினர்
பிரிவுநோ யகன்றார்.

யாவர், ஆங்குஇகல் வானரர்
ஆயினர், எவரும்
தேவர் ஆதலின், அவரொடும்
விசும்பிடைத் திரிந்தார்;
மேவு காதலின் மெலிவுறும்
அரம்பையர் விரும்பி,
ஆவி ஒன்றிடத் தழுவினர்,
பிரிவுநோய் அகன்றார்.

பொ :—யார் யார் அப் போர்க்களத்தில் மாறுபட்டுப் பொருதலை யுடைய வானரராகி வந்துள்ளார்களோ அவர்கள் எல்லோரும்

(முன்னைத் தம் உண்மை நிலையில்) தேவர்களேயாதலால் (தாம் உயிர் துறந்த நிலையில் வானரவுடம்பினை நீத்து) அத் தேவர்களோடும் (ஒன்றுகூடி) விண்ணுலகில் உலவுவாராயினர். (பிரிந்து சென்ற அவர்களை) மீண்டும் அடையப்பெறுதல் வேண்டும் என்னும் காதலால் தளர்ந்து மெலியும் வானுலக மகளிராகிய அரம்பையர்கள் (அவர்களை) விரும்பி உயிரோடொன்றாக இறுகத் தழுவியவராய்ப்பிரிவுத் துன்பம் தீர்ந்தார்கள்.

கு :- இரக்கயற்ற இராவணன் முதலிய அரக்கர்களைக் கொன்று உலகவுயிர்களைக் காத்தற்பொருட்டுத் திருமால் இராமனாக அவதரித்தபொழுது, திருமால் பணித்தவண்ணம் தேவர்கள் வானரர்களாகப் பிறந்தார்கள் என்பது வரலாறு. அங்ஙனம் பிறந்த வானரர்களிற் சிலர் இப் போரில் இறந்து வானரவுடம்பைத் துறந்து மீண்டும் தேவவுடம்பினையுடையவராய்ப் புகுந்தபொழுது அவர்தம் மனைவிமார்களாய் அரம்பையர்கள் தம் கணவராகிய அன்னோரை உயிர்பொருந்த இறுகத் தழுவிக்கெண்டு தம் பிரிவுத் துன்பம் தீர்ந்தனர் என்பதாம். இது கவிக் கூற்று. (110)

### இரக்கமற்ற அரக்கர்களும் பெருந் தேவராதல்

8683. கரக்கு மாயமும் வஞ்சமுங்
களவுமே கடனு
இரக்க மேமுதற் றருமத்தி
னெறியொன்று மில்லா
அரக்க ரைப்பெருந் தேவர்க
ளாக்கின வமலன்
சரத்தின் மேலினிப் பவித்திர
முளவெனத் தகுமே.

கரக்கும் மாயமும், வஞ்சகமும்,
களவுமே கடனு,
இரக்கமே முதல் தருமத்தின்
நெறிஒன்றும் இல்லா
அரக்கரைப் பெருந் தேவர்கள்
ஆக்கின, அமலன்
சரத்தின்மேல் இனிப் பவித்திரம்
உளஎனத் தகுமே?

பொ :- ஒளித்துச் செய்யும் சூழ்வினையும் வஞ்சனையும் களவுத் தன்மையும் ஆகிய இவற்றையே தம் செயல்முறையாகக் கொண்டு (எவ்வுயிர்க்கும் பரிந்து நலஞ்செய்யும்) இரக்கம் முதலிய அறநெறி சிறிதும் இல்லாத (கொடியோர்களாகிய) அரக்கர்களையும் பெருமையுடைய தேவர்களாக ஆக்கிய தூயோனாகிய இலக்குவனது அம்பினைக்காட்டிலும் தூய்மை விளைப்பன பிற உளவென்றல் பொருத்தமுடையதோ ?

கு :- கரக்கும் மாயம்—மற்றையோர்க்குப் புலனாகாதவாறு ஒளித்து நின்று செய்யும் சூழ்வினை. தருமத்தின் நெறி—அறநெறி. அரக்கரையும் என்னும் இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. அமலன்—குற்றமற்ற தூயோன்; என்றது, இலக்குவனை. சரம்—அம்பு. பவித்திரம்—தூய்மை. தகுமே என்புழி வினா ஏகாரம், தகாது என எதிர்மறைப் பொருள் உணர்த்தி நின்றது. அறநெறி என்பது சிறிதும் இல்லாத இரக்கமற்ற கொடியோர்களாகிய அரக்கர் களும் தூயோனாகிய இலக்குவனது அம்பினால் தீண்டப்பெற்று இறந்தமையால், தம் மாசு தீர்ந்து தேவவுடம்பினைப்பெற்று வீரர்கள் அடைதற்குரிய துறக்கவுலகினையடைந்தனர் என்பதாம். இதுவும் கவிக்கூற்று. (111)

### இலக்குவன் பெரும் போர் விளைத்தல்

8684. அந்த கன்பெரும் படைக்கல
மந்திரத் தமைத்தான்
இந்து வெள்ளெயிற் றரக்கரும்
யானையுந் தேரும்
வந்த வந்தன வானக
மிடம்பெரு வண்ணம்
சிந்தி னுன்சர மிலக்குவன்
முகந்தொறுந் திரிந்தான்.

அந்தகன் பெரும் படைக்கலம்
மந்திரத்து அமைத்தான்;
இந்து வெள்எயிற்று அரக்கரும்,
யானையும், தேரும்,

வந்த வந்தன வானகம்
இடம்பெறு வண்ணம்
சிந்தினுன் சரம்—இலக்குவன்,
முகம்தொறும் திரிந்தான்.

பொ :- இலக்குவன், இயமனது பெரிய அத்திரத்தினை மந்திரத்தால் அமைத்துக் கொண்டவனுகி, போர்முகத்தில் எங்குந் திரிந்து, பிறையினையொத்த வெள்ளிய பற்களையுடைய அரக்கர்களும் (அவர் தம்) யானைகளும் தேர்களும் அடுத்தடுத்து வந்தன (சேனைகள்) எல்லாமும் (உயிர் துறந்து) வானுலகில் இடம் கொள்ளாது நெருங்கும்படி அம்புகளைச் சிதறினுன்.

கு :- அந்தகன்—இயமன். அவனது படைக்கலம், இயமாத்திரம். மந்திரத்து அமைத்தல்—மந்திரத்தால் படைக்கலமாக அமைத்துக் கொள்ளுதல். இந்து—சந்திரன்; என்றது பிறைச் சந்திரனை. தன் அம்பிற்பட்டு இறந்து துறக்கம் புகும் அரக்கர்களுக்கு விண்ணுலகில் இடம் போதாது என்னும்படி இலக்குவன் தன் அம்புகளால் அரக்கர் சேனையைக் கொன்று குவித்தான் என்பதாம். (112)

### கும்பகருணன் கையாண்ட தண்டாயுதம் போர்க்களத்திற் கிடந்ததை அனுமன் தன் கையிற்கொண்டு போர் செய்தல்

8685. கும்ப கன்னனுன் டிட்டது
வயிரவான் குன்றின்
வெப்பு வெஞ்சுடர் விரிப்பது
தேவரை மேனுள்
தும்பை யின்றலைத் துரந்தது
சுடர்மணித் தண்டொன்
றிம்பர் ஞாலத்தை நெளிப்பது
மாருதி யெடுத்தான்.

கும்ப கன்னன்ஆண்டு இட்டது,
வயிரவான் குன்றின்
வெம்பு வெஞ்சுடர் விரிப்பது,
தேவரை மேல்நாள்

தும்பையின் தலைத்துரந்தது—சுடர்
மணித்தண்டு ஒன்று
இம்பர் ஞாலத்தை நெளிப்பது,
மாருதி எடுத்தான்.

பொ :- (இராவணன் தம்பியாகிய) கும்பகருணன் அப் போர்க் களத்தில் இட்டுச் சென்றதும் பெரிய வயிர மலையினைப் போன்று வெதும்பச் செய்யும் கடுங்கதிர்களை விரிப்பதும், முன்னாளில் (அரக்கரொடு பொருதற்கு வந்த) தேவர்களைத் தும்பைப் போரில் (தோற்று ஓடும்படி) துரத்தியதும் (பொறுத்தற்கரிய பாரத்தால்) இப் பூமியை நெளியச் செய்ததும் ஆகிய ஒளியுடைய மணிகள் பதிக்கப்பெற்ற தண்டாயுதம் ஒன்றினை வாயுவின் புதல்வனாகிய அனுமன் (தன் கையில்) எடுத்துக் கொண்டான்.

கு :- கும்பகருணன் இராமனொடு பொருது இறந்த நிலையில் அவனால் விடப்பட்டுப் பிறரால் எடுத்தற் கரியதாய்ப்போர்க்களத்திற் கிடந்த தண்டாயுதம் ஒன்றை அனுமன் தன் கையிற்கொண்டு அரக்கர் சேனையைப் புடைத்தற்கு முற்பட்டான் என்பதாம். ஆண்டு இட்டது என இரு சொல்லாகப் பிரித்துரையாது ஆண்டிட்டது என ஒரு சொல்லாகக்கொண்டு, கும்பகருணனால் போரில் ஆளப்பட்டது (பயன்படுத்தப்பட்டது) எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். ஆண்டு இட்டது, சுடர் விரிப்பது, துரந்தது, நெளிப்பது—சுடர்மணித் தண்டு ஒன்று மாருதி எடுத்தான் என்க. தும்பையின் தலை—தும்பைப் போரில். தும்பைப் போர் என்பது, இரு திறத்துச் சேனைகளும் ஒரு களத்திலே எதிர்எதிர் ஒத்து நின்று பொரும் போராகும். தலை, ஏழாம் வேற்றுமை யுருபு. (113)

8686 காற்றன்றிது கனலன்றென
* விமையோரிடை காணு
ஏற்றங்கடு விசையோடுயர்
கொலைநீடிய வியல்பால்
சீற்றந்தன துருவாயிடை
தேருதலொர் மாருய்க்
கூற்றங்கொடு முனைவந்தெனக்
கொன்ருனிக னின்ருன்.

'காற்றுஅன்று, இதுகனல் அன்று'என,
இமையோர் இடைகாணு
ஏற்றம் கடுவிசையோடு, உயர்கொலை
நீடிய இயல்பால்,
சீற்றம்தனது உருவாய், இடைதேருதது
ஓர்மாறு ஆய்,
கூற்றம், கொடுமுனை வந்தெனக்
கொன்றான், இகல்நின்றான்.

பொ :- இகல் மேற்கொண்டு நின்றவனாகிய அனுமன், 'இது காற்று அன்று, தீயும் அன்று' என்று தேவர்கள் (தன்னோடு அவற்றிடை) வேற்றுமையுணராதவாறு மிகுந்த கடுவேகத்துடனே மிக்க கொலைத் தொழிலில் நிலைபெற்றுள்ள தன்மையால், கூற்றுவனாகிய தெய்வம் சீற்றத்தையே தனது உருவாகக் கொண்டு )தன்னை இன்னான் என) வேற்றுமை தெளிந்துணர வியலாத நிலையில் மாறு பட்டுக் கொடிய போர்முனைக்கு வந்தது என்னும்படி (தன் கையிலுள்ள தண்டாயுதத்தால் அரக்கர்களைக்) கொல்லலுற்றான்.

கு :- இகல் நின்றான், கடு விசையோடு உயர்கொலை நீடிய இயல்பால், 'கூற்றம், சீற்றம் தனது உருவாய், இடை தேருதது ஓர் மாறாய்க் கொடுமுனை வந்(த)து' எனக் கொன்றான் என முடிக்க. இகல்—பகைமை, இடை—வேறுபாடு. ஏற்றம்—மிகுதி. அனுமனது கடிய விரைவினையெண்ணிக் காற்றோ எனவும், பகை கொண்டு சேர்ந்தாரைக் கொல்லுந் தன்மையினை யெண்ணிக் கனலோ எனவும் ஐயுற்ற தேவர்கள் இவ் விரு தன்மைகளும் ஒரு பொருட்கு இன்மை கருதி 'இது, காற்று அன்று; கனலன்று' எனக் கூறி அனுமனோடு அவற்றுக்குள்ள வேற்றுமை காணாராயினர் என்க. *(114)*.

8687. வெங்கண்மத மலைமேல்விரை
பரிமேல் விடு தேர்மேல்
சங்கந்தரு படைவீரர்க
ளுடன்மேலவர் தலைமேல்
எங்கும்முள னொருவன்னென
விருநான்மறை தெரிக்கும்
செங்கண்ணவ னிவனேயெனத்
திரிந்தான்கலை தெரிந்தான்.

வெங்கண் மதமலைமேல், விரை
பரிமேல், விடுதேர்மேல்,
சங்கம்தரு படைவீரர்கள்
உடல்மேல்: அவர்தலைமேல்;
''எங்கும்உளன் ஒருவன்'என
இருநான்மறை தெரிக்கும்
செங்கண்ணவன் இவனே''எனத்
திரிந்தான்—கலைதெரிந்தான்.

பொ:- கலை நூல்களைக் கற்றுணர்ந்தானாகிய அனுமன், வெகுளிமிக்க கண்களையுடைய மதத்தையுடைய மலைபோலும் யானையின்மேலும், விரைந்து பாயும் குதிரையின் மேலும், (வீரர் களாற்) செலுத்தப்படும் தேரின் மேலும், தொகுதியாகவுள்ள வீரர் களின் உடம்பின் மேலும், 'எங்கும் நீக்கமற நிறைந்துள்ளவன் ஒருவனே' எனப் பெருமையுடைய வேதங்களால் தெளிந்து போற் றப் பெறும் சிவந்த (தாமரை மலர்போன்ற) கண்களையுடைய திரு மால் இவனே என(க் கண்டோர்) கருதும்படி (தான் ஒருவனே எங்கும் உள்ளவனாகித்) திரிந்தான்.

கு:- அரக்கர்கள் செலுத்திய யானை குதிரை தேர் ஆகிய ஊர்திகளின் மேலும், அவற்றைச் செலுத்திக்கொண்டும் தனியாக வும் வந்த அரக்க வீரர்கள் உடம்பின் மேலும் இவ்வாறு போர்க்கள மெங்கும் உள்ளவனாகித் திரிந்து தோன்றிய அனுமனது தோற்றத் தைக் கண்டோர், 'எல்லாப் பொருள்களிலும் நீக்கமறக் கலந்துள்ள வன் ஒருவனே' என நான்மறைகளால் தெளிந்து போற்றப்படும் திருமாலாகிய இறைவன் இவன்தானோ? என ஐயுற்று வியந்தனர் என்பதாம். (115)

8688. கிளர்ந்தாரையுங் கிடைத்தாரையுங்
கிழித்தான்கனல் விழித்தான்
களந்தானொரு குழம்பாம்வகை
யரைத்தானுருக் கரைத்தான்
வளர்ந்தானிலை யுணர்ந்தாருல
கொரூருன்றையும் வலத்தால்
அளந்தானுமுன் னிவனேயென
விமையோர்களு மயிர்த்தார்.

கிளர்ந்தாரையும் கிடைத்தாரையும்
கிழிந்தான், கனல்விழித்தான்;
களம்தான் ஒருகுழம்பாம்வகை
அரைத்தான், உருக்கரைத்தான்;
வளர்ந்தான்நிலை உணர்ந்தார், 'உலகு
ஒருமூன்றையும் வலத்தால்
அளந்தானும் முன்இவனே?'என
இமையோர்களும் அயிர்த்தார்.

பொ :- (அனுமன் சினத்தாற்) பொங்கியெழுந்தாரையும் எதிர்ப் பட்டாரையும் தீப்பொறி தோன்ற (ச் சினந்து) நோக்கியவனாய் (அவர்தம் உடம்பைக்) கிழித்தெறிந்தான்; போர்க்களம் எங்கும் (நிணக்) குழம்பாகுமாறு (அரக்கர் உடம்புகளை) அரைத்து உருவின் றிக் கரைத்தவனாய்ப் பேருருவாக வளர்ந்து தோன்றிய அவனது நிலைமையையுணர்ந்தவர்களாகிய தேவர்களும் ஒப்பற்ற மூவுலகங் களையும் தனது வலிமையால் முன்னம் அளந்தவனும் இவனோ என ஐயுற்று வியந்தார்கள்.

கு :- கிளர்தல்—(சினத்தாற்) பொங்கியெழுதல். கிடைத்தல்- நேர்படுதல்; எதிர்ப்படுதல். கனல் விழித்தான் கிழித்தான் என மாற்றுக. உலகொரு மூன்றையும் வலத்தான் அளந்தான் என்றது திருமாலை. (116)

8689. மத்தக்கரி நெடுமத்தகம்
வகிர்பட்டுக மண்மேல்
முத்திற்பொலி முழுமேனியன்
முகில்விண்டொரு மெய்யான்
ஒத்தக்கடை யுகமுற்றுழி
யுறுகால்பொர வுடுமீன்
தொத்தப்பொலி கனகக்கிரி
வெயில்சுற்றிய தொத்தான்.

மத்தக் கரிநெடு மத்தகம்
வகிர்பட்டு உக, மண்மேல்
முத்தின் பொலி முழுமேனியன்,
முகில்விண்தொடு மெய்யான்,

ஒத்துஅக்கடையுகம் உற்றுழி,
உறுகால்பொர, உடுமீன்
தொத்தப்பொலி கனகக்கிரி
வெயில்சுற்றியது ஒத்தான்.

பொ :- மதம் பொருந்திய யானையின் நெடிய மத்தகம் பிளவு பட்டுச் சிந்த (ப் பூமியின்கண்) முத்துக்களாற் பொலிந்து விளங்கும் முழுவுடம்பினையுடையவனும் மேகம்பொருந்திய ஆகாயத்தைத் தொடுகின்ற உடம்பினையுடையவனும் ஆகிய அனுமன், (உலகில் எல்லாப் பொருள்களும்) ஒருசேர அழியும் அந்த ஊழிக்காலம் வந்த பொழுது பெருங்காற்று மோத உடுவாகிய விண்மீன்கள் தொத்தி நிற்க விளங்குவதும் கதிரவனால் சூழப்பெறுவதும் ஆகிய பொன் மயமான மேருமலையையொத்துத் தோன்றினான்.

கு :- வகிர்படுதல்-பிளவுபடுதல். உகுதல் - சிந்துதல். யானையின் மத்தகம் பிளத்தலால் உதிரும் முத்துக்கள் பொருந்தி விளங்கும் மேனியையும் விண்ணுறவோங்கிய உடம்பினையும் உடைய அனுமனுக்கு, ஊழியிறுதியில் கடுங்காற்று வீசுதலால் உதிரும் விண்மீன்களொடு பொருந்திய மேருமலை உவமை. தொத்துதல்-பற்றிப் பொருந்துதல், கனகக்கிரி-பொன்மலை ; மேருமலை. (117)

8690. இடித்தானிலம் விசுப்போடென
விட்டானடி யெழுந்தான்
பொடித்தான்கடற் பெருஞ்சேனையைப்
பொலந்தண்டுதன் வலத்தால்
பிடித்தான்மத கரிதேர்பரி
பிழம்பானவை குழம்பா
அடித்தானுயிர் குடித்தானெடுத்
தார்த்தான்பகை தீர்த்தான்.

'இடித்தான்நிலம் விசும்போடு 'என'
இட்டான்அடி, எழுந்தான்.
பொடித்தான்,கடற் பெருஞ்சேனையை ;
பொலந்தண்டு தன்வலத்தால்
பிடித்தான், மதகரிதேர்பரி
பிழம்புஆனவை குழம்பா
அடித்தான் ; உயிர்குடித்தான் ;
எடுத்துஆர்த்தான் ; .பகைதீர்த்தான்.

பொ :- (அவ் அனுமன்,) நிலத்தினை (அண்ட முகடாகிய) ஆகாயத்துடன் இடித்தான் என்னும்படி (பூமியில்) அடியிட்டு (வான முகடளவும்) நிமிர்ந்தான் ; பொன்மயமான தண்டாயுதத்தை வெற்றித்திறத்தாற் பிடித்தவனாகிக் கடல்போலும் (அரக்கரது) பெருஞ்சேனையைப் பொடியாக்கினான் ; மதம்பொருந்திய யானை தேர் குதிரையென்னும் வடிவுள்ளவற்றை உருச் சிதைந்து குழம்பாகும்படி அடித்தான் ; (அவற்றின்) உயிரைக் குடித்துத்தன் பகையை ஒழித்தவனாகிப் பேர் ஆரவாரஞ் செய்தான்.

கு :- அடியிடுதலால் நிலத்தினையும் நிமிர்ந்து மேல் எழுதலால், விசும்பினையும் இடித்தான் எனக் கண்டோர் கருதுமாறு நிலத்தில் அடியிட்டு விசும்பினைமுட்ட நிமிர்ந்தெழுந்தான் என்பார், 'இடித்தான் நிலம், விசும்போடு என இட்டான் அடி, எழுந்தான்' என்றார். தன் வலத்தாற் பொலந்தண்டு பிடித்தான், கடற்பெருஞ் சேனையைப் பொடித்தான் ; மதகரி தேர் பரி பிழம்பானவை குழம்பா அடித்தான் ; உயிர்குடித்தான் பகைதீர்த்தான், எடுத்து ஆர்த்தான் என இயையும். பிழம்பு- வடிவம், எடுத்து ஆர்த்தல்- பெருங்குரல் எடுத்துப் பெருமுழக்கஞ் செய்தல். *(118)*

*8691.* நூறுயிர மதமால்கரி
யொருநாழிகை நுவல்போ
தாறுய்நெடுங் கடுங்சோரியி
னளறும்வகை யரைப்பான்
ஏறுயிர மெனலாயெழு
வயவீரரை யிடறித்
தேருதுறு கொலைமேவிய
திசையானையிற் றிரிந்தான்.

நூறுயிரம் மதமால்கரி,
ஒரு நாழிகை நுவல்போது,
ஆறுய்,நெடுங் கடுஞ்சோரியின்
அளறுஆம்வகை அரைப்பான் ;
ஏறுஆயிரம் எனலாய்
எழுவய வீரரைஇடறி,
தேருதுஉறு கொலைமேவிய
திசையானையின் திரிந்தான்.

பொ :- ஒரு நாழிகை என்று சொல்லப்படும் நேரத்திற்குள் ஒரு நூருயிரம் மதயானைகளை ஆருகிப் பெருகும் நெடிய கடிய இரத்தவெள்ளத்தில் இட்டுச்சேருகும்படி துகைத்து அரைப்பவனுகிய அனுமன், ஆண்சிங்கங்கள் ஆயிரம் என்னும்படி பொங்கியெழுந்த வலிய (அரக்க) வீரர்களை (க் காலிஞல்) இடறித்தள்ளி (மதமயக்கத்தினின்றும்) தெளியாது மிக்ககொலைத்தொழிலைப் பொருந்தியதிய திசையானைபோன்று (போர்க்களமெங்கும்) திரிவானுயினுன்.

கு:- நூருயிரம்—இலட்சம், அரைப்பான், திரிந்தான் என முடிக்க. அரைப்பான், வினையாலணையும் பெயர். ஏறு— ஆண் ; ஈண்டு ஆண்சிங்கத்தினைக் குறித்தது. தேருது—தெளியாது. (119)

8692. தேரேறினர் பரியேறினர்
விடையேறினர் சினவெங்
காரேறினர் மலையேறினர்
கடலேறினர் பலவெம்
போரேறினர் புகழேறினர்
புகுந்தார்புடை வளைந்தார்
நேரேறினர் விசும்பேறிட
நெறித்தான் கதை திரித்தான்.

தேர்ஏறினர், பரிஏறினர்,
விடைஏறினர்; சினவெம்
கார்ஏறினர், மலைஏறினர்;
கடல்ஏறினர்; பலவெம்
போர்ஏறினர், புகழ்ஏறினர்,
புகுந்தார், புடைவளைந்தார்
நேர்ஏறினர் விசும்புஏறிட,
நெரித்தான், கதைதிரித்தான்.

பொ :- தேரில் ஏறியவர்களும். குதிரைமீது ஏறியவர்களும் விடையேற்றினையொத்த (காலாட்படை) வீரர்களும், வெகுளிமிக்க கொடிய மேகத்தையொத்த யானையின்மேல் ஏறியவர்களும் ஆகிய அரக்கர்கள் (அனுமனுடன்) எதிர்த்துநிற்கும் வலியின்றி) மலைகளில் ஏறிஒளிந்தார்கள்; கடலில் சென்று ஒளிந்தார்கள். பல போர்களிலும் (பகைவர்களை) எதிர்த்து முன் சென்றவர்களும் (வென்றிப்) புகழ்மிக்கவர்களும் ஆகிய அரக்க வீரர்கள் போர்க்களத்திற் புகுந்தவர்களாய் (அனுமனைப்) பக்கத்தில் சூழ்ந்து

கொண்டவர்களும் நேரில் எதிர்த்துச் சென்றவர்களும் ஆகிய (அரக்க வீரர்கள்) யாவரும் விண்ணுலகிற் செல்லுமாறு தண்டாயுதத்தைச் சுழற்றியவனாய் (அவர்களை) நெரித்துக் கொன்றான்.

கு:- விடை ஏறினர் என்றது, ஆற்றல்மிக்க காளையின் தன்மையினையுடைய காலாட்படை வீரர்களை. நால்வகைச் சேனைகளில் உள்ள அரக்கர்பலர் அனுமனை எதிர்த்து நிற்றலாற்றாது மலையிலும் கடலிலும் புகுந்து ஒளிந்துகொண்டார்கள் எனவும், வெம்மை மிக்க பலபோர்களிலும் முந்திச் சென்று வென்றிப்புகழ் பெற்ற வீரர்களாகிய அரக்கர்கள் அனுமனை வளைத்துச் சூழ்ந்தும் நேர் நின்று எதிர்த்தும் அவனது தண்டாயுதத்தினால் உடல் நெரிக்கப்பட்டு விண்ணுலகடைந்தார்கள் எனவும் அரக்கர் சேனைகளில் தோற்றோடியவர்களையும் எதிர்த்து நின்று இறந்தவர்களையும் முறையே எடுத்துரைத்தார். இச்செய்யுளில் 'ஏறினர்' என்ற சொல்லும் பொருளும் பலமுறை பயின்று வருதலால் இது, சொற்பொருட்பின் வருநிலை என்னும் அணியின்பாற்படும். (120)

**சுக்கிரீவன் முதலியோர் ஒருவரையொருவர் காணாதவராகி அரக்கர் படைக்கடலில் அமைதல்**

8693. அரிகுல மன்ன னீல
னங்கதன் குமுதன் சாம்பன்
பருவலிப் பனச னென்றிப்
படைத்தலை வீரர் யாரும்
பொருசினந் திருகி வென்றிப்
போர்க்கள மருங்கிற் புக்கார்
ஒருவரை யொருவர் காணா
ருயர் படைக் கடலினுள்ளார்.

அரிகுல மன்னன், நீலன்,
அங்கதன், குமுதன், சாம்பன்,
பருவலிப் பனசன், என்றுஇப்
படைத்தலை வீரர் யாரும்
பொருசினம் திருகி, வென்றிப்
போர்க்கள மருங்கில் புக்கார்
ஒருவரை ஒருவர் காணார்,
உயர்படைக் கடலின் உள்ளார்.

பொ :- வானர குலமன்னனாகிய சுக்கிரீவனும் நீலனும் அங்கதனும் குமுதனும் சாம்பனும் பெருவன்மைபடைத்த பனசனும் என்று தலைமைபெற்றஇச்சேனைவீரர்கள் யாவரும் போர் உடற்றுதற்குரிய வெகுளியால் மாறுபட்டு வெற்றியை விளக்கும் போர்க்களத்தின் கண்ணே (தனித்தனியே) புகுந்தவர்கள், ஒருவரையொருவர் காண ஒண்ணாதவர்களாய் அரக்கர் சேனையாகிய கடலினுள்ளே உள்ளவரானார்கள்.

கு :- வீரர்யாரும், புக்கார், காணார், உயர் படைக்கடலின் உள்ளார் ஆயினர் என ஆக்கச் சொல்வருவித்துரைக்கப்பட்டது. அரிகுலம்—வானரகுலம். அதற்கு மன்னன் என்றது, சுக்கிரீவனை. படைக்கடல்—சேனா சமுத்திரம். (121)

## அனுமன் அகம்பனொடு பொருதல்

8694. தொகும்படை யவுணர் வெள்ளந்
துறை தொறு மள்ளித் தூவி
நகம்படை யாகக் கொல்லு
நரசிங்க நடந்த தென்ன,
மிகும்படைக் கடலுட் செல்லு
மாருதி வீர வாழ்க்கை
அகம்பனைக் கிடைத்தான் றண்டா
லரக்கரை யரைக்குங் கையான்.

தொகும்படை அவுணர் வெள்ளம்
துறைதொறும் அள்ளித் தூவி
நகம்படை ஆகக் கொல்லும்
நரசிங்கம் நடந்தது என்ன
மிகும்படைக் கடலுள் செல்லும்
மாருதி வீர வாழ்க்கை
அகம்பனைக் கிடைத்தான், தண்டால்
அரக்கரை அறைக்கும் கையான்.

பொ: - கூட்டமாக வந்து கூடிய சேனைகளாகிய அவுணர் வெள்ளத்தை(ப் போர்முனைகளாகிய) துறைகள் தோறும் வாரி வீசி(த் தன்னுடைய விரலின்) நகமே படைக்கலமாகக் கொண்டு கொன்று குவிக்

கும் நரசிங்கம் (ஆகிய திருமால் முன்னர்) நடந்ததுபோன்று, மிக்கு நிறைந்த அரக்கர் சேனையாகிய கடலினுள்ளே செல்லும் அனுமன் தண்டாயுதத்தினல் அரக்கர்களை அரைக்கும் கையையுடையவனுகி, வீரத்திறத்துடன் வாழ்தலையுடையவனுகிய அகம்பன் என்னும் அரக்கனை எதிர்ப்பட்டான்.

கு: - தொகுதல்—ஒருங்கே கூட்டமாக வந்து கூடுதல். அவுணர் என்பார், தேவர்க்கு ஒத்த பகைவராய் அரக்கரின் வேருகிய மற்ருேரினத்தவர். சூரபதுமன், இரணியர் முதலியோர் அவுணர் இனத்தைச் சார்ந்தவர்கள். தன் கையிலுள்ள தண்டாயுதத்தால் எதிர்ப்பட்டவரைக் கொன்று அரக்கரது படையினுள்ளே வெகுண்டு செல்லும் அனுமனுக்கு, நகமே படையாகக்கொண்டு எதிர்ப்பட்டார்களைக் கொன்று அவுணர் படையினுள்ளே செல்லும் நரசிங்கமூர்த்தியாகிய திருமாலை உவமை கூறினுர். கிடைத்தல்—எதிர்ப்படுதல். (122)

8695. மலைப்பெருங் கழுதை யைஞ்நூற்
றிரட்டியான் மனத்திற் செல்லுந்
தலைத்தடந் தேரன் வில்லன்
ருருக னென்னுந் தன்மைக்
கொலைத்தொழி லவுணன் பின்னை
யிராக்கத வேடங் கொண்டான்
சிலைத்தொழிற் குமரன் கொல்லத்
தொல்லைநாட் செருவிற் றீர்ந்தான்.

மலைங்பெரும் கழுதை ஐஞ்நூற்று
இரட்டியான், மனத்தில் செல்லும்
தலைத்தடங் தேரன், வில்லன்,
தாருகன் என்னும் தன்மைக்
கொலைத்தொழில் அவுணன், பின்னை,
இராக்கத வேடம் கொண்டான்,
சிலைத்தொழில் குமரன் கொல்ல,
தொல்லை நாள் செருவில் தீர்ந்தான்.

பொ: - மலையினையொத்த பெரிய உயர்ச்சியினுடைய ஆயிரங் கழுதைகளால் (இழுக்கப்பட்டு) மனத்தைக் காட்டிலும் விரைந்து செல்லும் தலைமைபெற்ற பெரிய தேரையுடையவனும் வில்லை ஏந்தியவனும் ஆகிய அகம்பன், தாருகன் என்னும் பெயரைப் பெற்ற கொலைத் தொழிலையுடைய அவுணர் என்பான் முற்காலத்தில் விற்

ருெழிலில் வல்ல முருகப் பெருமான் போரிற் கொல்ல உயிர் நீங்கிய வனுய்ப் பிற்காலத்தில் இராக்கத வேடத்தைக்கொண்டு தோன்றி யவன்.

கு: - முற்காலத்தில் முருகக்கடவுளாற் போரிற் கொல்லப்பட்ட தாருகன் என்னும் அவுணனே இப்பொழுது அகம்பன் என்னும் பெயருடைய அரக்கனுகப் பிறந்துள்ளான் என அவ்வரக்கனது பேராண்மையை ஆசிரியர் விளக்கும் முறையில் அமைந்தது இச் செய்யுள். (123)

8696. பாகசா தனனு மற்றைப்
பகையடுந் திகிரி பற்றும்
ஏகசா தனனும், மூன்று
புரமும்பண் டெரித்து ளோனும்
போகதா மொருவர் மற்றிக்
குரங்கொடு பொரக்கற் றுரே?
ஆக,கூற் றுவி யுண்ப
திதனின் மேற்ருகு மென்ருன்.

'பாகசா தனனும், மற்றைப்
பகைஅடுங் திகிரி பற்றும்
ஏகசா தனனும், மூன்று
புரமும் பண்டு எரித்து ளோனும்
போக,தாம் ஒருவர் மற்றுஇக்
குரங்கொடு பொரக் கற்ருரே?
ஆக,கூற்று ஆவி உண்பது
இதனின் மேற்றுஆகும்' என்ருன்.

பொ :- பாகன் என்னும் அசுரனைக் கொன்ற இந்திரனும், ஏனைப் பகையினையழிக்குந் தன்மையினையுடைய சக்கரப் படையினைக் கையிற்கொண்ட திருமாலும், முப்புரங்களையும் முற்காலத்தே ஒருங்கே எரித்தழித்து (என்றும்) உள்ளோனுகிய சிவபெருமானும் தவிர, ஏனைத் தேவர் முதலியவர்களில் ஒருவர் இக்குரங்குடன் தனி நின்று போர் செய்தற்குக் கற்றுள்ளாரோ? (அங்ஙனம் கற்ருராயி னும்) ஆகுக; கூற்றுவன் (போர்களத்திற் போர் செய்வோரது) உயி ரைக் கவர்தல் என்பது, (அனுமன் என்னும்) இக் குரங்கின் போர் வன்மையின் மேலதேயாகும்' என்ருன் (அகம்பன்).

கு:-இந்திரன், திருமால், சிவன் என்னும் ஆற்றல் மிக்கோரன்றி ஏனைத் தேவர் முதலியோர் இக்குரங்குடன் தனிநின்று போர் செய்யத்தக்க ஆற்றலுடையோர் அல்லர் என்றும், அங்ஙனம் எரித்துப் பொருவாராயின் அப்போரிற் கூற்றுவன் இக்குரங்கின் வலியைத் துணையாகக்கொண்டே போர் செய்வோர் உயிரைக் கவர்வானுதலில் அன்னோர் இக்குரங்கினுல் அழிந்துபடுதல் உறுதியென்றும், அகம்பன் அனுமனது பெருவன்மையை வியந்து கூறியவாறு பாகன் என்ற அசுரனைக் கொன்ற காரணத்தால், இந்திரனுக்குப் பாகசாதனன் என்ற பெயர் வழங்குவதாயிற்று. திகிரி—சக்கரப்படை. ஏகசாதனன்—ஒப்பற்ற கருவியையுடையவன். (124)

8697. யான்றடே னென்னின் மற்றிவ்
வெழுதிரை வளாக மென்னும்
வான்றடா தரக்க ரென்னும்
பெயரையு மாய்க்கு மென்ன
வூன்றடா நின்ற வாளி
மழைதுரந் துருத்துச் சென்றான்
மீன்றொடா நின்ற திண்டோ
ளனுமனும் விரைவின் வந்தான்.

'யான்தடேன் என்னின், மற்றுஇவ்
எழுதிரை வளாகம் என்ஆம்?
வான்தடாது; அரக்கர் என்னும்
பெயரையும் மாய்க்கும்' என்ன
ஊன்தடா நின்ற வாளிமழை
துரந்து உருத்துச் சென்றான்;
மீன்தொடா நின்ற திண்தோள்
அனுமனும் விரைவின் வந்தான்.

பொ:-யான் (அனுமனாகிய இக் குரங்கினைத்) தடுக்காமல் விடுவேனாயின் ஏழுகடற்களாற் சூழப்பட்ட இந்நிலவுலகம் யாதாய் முடியும்? வானுலகத்தவராகிய தேவர்களோ இதனைத் தடுக்கமாட்டார்கள் (இக்குரங்கு) அரக்கர் என்ற பெயர்கூட இல்லாதபடி அழித்துவிடும் என்று சொல்லி, ஊனுடம்பினையுடைய உயிர்களைத் தடுத்து அழிக்க வல்ல அம்பு மழையைச் சொரிந்து வெகுண்டு (நெருங்கிச்) சென்றான் (அகம்பன்). விண்மீன்களைத் தீண்டுமாறு (உயர்ந்துநின்ற திண்ணிய தோள்களையுடைய அனுமனும் (அவனைநோக்கி) விரைந்து எதிர்த்து வந்தான்.

கு:- வான் என்பது ஆகு பெயராய் வானுலகில் வாழ்வோராகிய தேவர்களை உணர்த்தி நின்றது. ஊன் என்றது, ஊனுடம்பினைப் பெற்ற உயிர்களை, வாளி—அம்பு, உருந்தல்—வெகுளுதல். சென்ருன் என்றது, அகம்பனை. (125)

8698. தேரொடு களிறு மாவு
மரக்கரு நெருக்கித் தெற்றக்
காரொடு கனலுங் காலுங்
கிளர்ந்ததோர் கால மென்ன
வாரொடு தொடர்ந்த பைம்பொற்
கழலினுன் வருத லோடும்
சூரொடுந் தொடர்ந்த தண்டைச்
சுழற்றினுன், வயிரத் தோளான்.

தேரொடு களிறும் மாவும்
அரக்கரும் நெருக்கித் தெற்ற,
காரொடு கனலும் காலும்
கிளர்ந்ததுஓர் காலம் என்ன,
வாரொடு தொடர்ந்த பைம்பொன்
கழலினுன் வருத லோடும்,
சூரொடும் தொடர்ந்த தண்டைச்
சுழற்றினுன், வயிரத் தோளான்.

பொ:- தேருடன் யானைகளும் குதிரைகளும் அரக்கராகிய வீரர்களும் (ஆகிய நால்வகைச் சேனைகளும்) நெருக்கிச் செறிந்து உடன்வர, மேகத்துடன் நெருப்பும் காற்றும் பொங்கி யெழுந்ததோர் ஊழிக்காலம் (இது) என்று சொல்லும்படி வாரினுற் பிணிக்கப்பட்ட பசிய பொன்னுலாகிய வீரக்கழலையணிந்த அகம்பன் (எதிர்த்து) வந்த அளவில், வயிரம்போலும் திண்ணிய தோள்களையுடைய அனுமன் கொடுந்தன்மையுடன் கூடிய தண்டாயுதத்தைச் சுழற்றி வீசினுன்.

கு:- தெற்றுதல்-செரிதல். வாரொடும் தொடர்ந்த பைம்பொற் கழலினுன் என்றது அகம்பனை. வயிரத்தோளான் என்றது அனுமனை. சூர்-கொடுமை. (126)

8699. எற்றின வெறிந்த வல்லே
யேவின வெய்த பெய்த
முற்றின படைகள் யாவு
முறைமுறை முறிந்து சிந்தச்
சுற்றின வயிரத் தண்டாற்
றுகைத்தன னமரர் துள்ளக்
கற்றில னன்று கற்ருன்
கதையினுல் வதையின் கல்வி.

எற்றின, எறிந்த, வல்லே
ஏவினன, எய்த, பெய்த,
முற்றின மடைகள் யாவும்,
முறைமுறை முறிந்து சிந்த,
சுற்றின வயிரத் தண்டால்
துகைத்தனன், அமரர் துள்ள ;
கற்றிலன், அன்று கற்ருன்,
கதையினுல் வதையின் கல்வி.

பொ:- (அரக்கர்களால்) எறியப்பட்டவைகளும், வீசப்பட்டவைகளும், விரைந்து ஏவப்பட்டவைகளும், எய்யப்பட்டவைகளும், சொரியப்பட்டவைகளும் ஆக (த் தன்னை) ச் சூழ்ந்தடைந்த படைக் கலங்கள் யாவும் முறைமுறையே முறிபட்டுப் பொடியாய்ச் சிதறும்படி (அனுமன் தான்) சுழற்றின திண்ணிய தண்டாயுதத்தால் தேவர்கள் மகிழ்ந்து கூத்தாட மோதிச் சிதைத்தான், (இவ்வாறு) தண்டாயுதத்தாற் (பகைவரைக் கொல்லுந்தொழிலை (இதற்கு முன்பு) பழகாதவனுகிய அனுமன், அகம்பனெடு பொருத அன்று அதனையும் துறைபோகக் கற்றுமுடித்தான்.

கு:- எற்றின-அணுக வந்து மோதித்தாக்கிய ஆயுதங்கள், எறிந்த-சிறிது அகல நின்று வீசியவை, ஏவின-சேய்மையில் நின்று செலுத்தின அத்திரங்கள்; எய்த-வில்லில் தொடுத்து எய்த அம்புகள், பெய்த-மேல் நின்று சொரியப்பட்ட ஆயுதங்கள். எற்றின......முற்றினவற்றை வயிரத்தண்டால் அமரர் துள்ளத் துகைத்தனன் எனவும் கதையினுல் வதையின் கல்வி கற்றிலன் அன்று கற்ருன் எனவும் இரு தொடராக இயைத்துரைக்க, முற்றுதல்-வளைத்தல், கதை-தண்டாயுதம், வதையின் கல்வி-கொல்லுதலாகிய தொழில், அனுமன் தண்டாயுதத்தைக் கொண்டு அன்று பகைவர்

சேனைகளைக் கொன்றொழித்தது போன்று அதற்கு முன்பு ஒரு பொழுதும் அவ்வாறு செய்ததில்லை எண்ணும்படி அரக்கர்களை மிகுதியாகக் கொன்று தீர்த்தான் என்பதாம். (127)

8700. அகம்பனுங் காணக் காண
வையிரு கோடி கைம்மா
முகம்பயில் கலினப் பாய்மா
முளையெயிற் றரக்கர் மூரி
நுகம்பயி றேரி னோடு
நுறுக்கின னூழி தீர்த்தான்
உகம்பெய ரூழிக் காற்றி
னுலைவிலா மேரு வொப்பான்.

அகம்பனும் காணக் காண,
ஐ-இருகோடி கைம்மா,
முகம்பயில் கலினப் பாய்மா,
முளைஎயிற்று அரக்கர், மூரி
நுகம்பயில் தேரி னோடும்
நுறுக்கினன்; நூழில் தீர்த்தான்—
உகம்பெயர் ஊழிக் காற்றின்
உலைவுஇலா மேரு ஒப்பான்.

பொ :- ஊழி முடிவடைகின்ற காலத்து வீசும் பெருங்காற்றினாலும் அசைக்கப்படாத மேருமலையையொத்த அனுமன், அகம்பனாகிய பகைவனும் கண்டுகொண்டிருக்க, பத்துக் கோடி யானைகள் முகத்திற் பொருந்திய கடிவாளத்தைப் பூண்ட பாயுந் தன்மையுடைய குதிரைகள், முளைபோலும் கூரிய பற்களையுடைய அரக்கர்கள் ஆகிய சேனைகளை வலிய நுகத்தொடு பொருந்திய தேர்களோடு பொடியாக்கினவனாகிக் கொன்று குவித்தலைச் செய்துமுடித்தான்.

கு :- உலைவிலா மேருவொப்பான், நுறுக்கினன் நூழில் தீர்த்தான் என முடியும். மேருவொப்பான் என்றது அனுமனை. நுறுக்குதல்—பொடியாகச் சிதைத்தல். நூழில்—கொன்று குவித்தல். தீர்த்தல்—கடைபோகச் செய்து முடித்தல். ஊழிப்பெருங் காற்றினையொத்த பெருவலி படைத்த அகம்பனும் கண்டுகொண்டு செயலற்றிருக்க அவனுடன் வந்த நால்வகைச் சேனைகளைக் கொன்று குவித்துச் சலிப்பின்றி நின்ற தன்மைபற்றி அனுமனை 'ஊழிக்காற்றின் உலைவிலா மேருவொப்பான்' எனச் சிறப்பித்தார் ஆசிரியர். கைம்மா—துதிக்கையினையுடைய விலங்கு; என்றது யானையை. (128)

8701. படுகளப் பரப்பை நோக்கிப்
பாழிவாய் மடித்த வூழிச்
சுடுகனற் பொறிகள் வெங்கண்
ரோன்றிடக் கொடித்தேர் தூண்டி
விடுகனற் பகழி மாரி
மழையினு மும்மைவீசி
முடுகுறச் சென்று குன்றின்
முட்டினுன் முகிலினார்ப்பான்.

படுகளப் பரப்பை நோக்கி
பாழிவாய் மடித்து, அ-ஊழிச்
சுடுகனற் பொறிகள் வெங்கண்
தோன்றிட, கொடித்தேர் தூண்டி,
விடுகனல் பகழி மாரி
மழையினும் மும்மை வீசி,
முடுகுறச் சென்று, குன்றின்
முட்டினுன், முகிலின் ஆர்ப்பான்.

பொ :- மழைமேகத்தின் இடியோசையை யொத்து ஆரவாரித்தலையுடைய அகம்பன், (அரக்கர்கள்) இறந்துபட்ட போர்க்களப் பரப்பைப் பார்த்துப் பிலம் போன்ற (தன்) வாயை மடித்து, அத்தகைய ஊழிக்காலத்தே (எல்லாவற்றையும்) சுட்டழிக்கும் தீயின் கொழுந்தினையொத்த நெருப்புப் பொறிகள் வெகுளிக் குறிப்புடைய கண்களிலே தோன்றக் கொடிகட்டப்பெற்ற (தனது) தேரைச் செலுத்திக் கொண்டு தீயைக் கக்குகின்ற அம்பு மழையை மேகத்தைக் காட்டிலும் மும்மடங்கு மிகுதியாகப் பொழிந்து விரைந்து சென்று மலையைப் போன்று (அனுமனை) மோதித் தாக்கினுன்.

கு :- முகிலின் ஆர்ப்பான் என்றது அகம்பனை, முகிலின் ஆர்ப்பான், வாய்முடித்து, தேர் தூண்டி, பகழிமாரி வீசி, சென்று, முட்டினுன் என முடியும். குன்றின்—மலையைப் போன்று; இன், உவமவுருபு. (129)

8702. சொரிந்தன பகழி மாரி
தோளினு மார்பின் மேலும்
தெரிந்தன வசனி போல்வ
தெறுபொறி பிதிர்வ திக்கின்

வரிந்தன வெருவை மானச்
சிறைகளா லமரர் மார்பை
அரிந்தன வடிம்பு பொன்கொண்
டணிந்தன வாங்கு கண்ண.

சொரிந்தன பகழி மாரி
தோளினும் மார்பின் மேலும்
தெரிந்தன- அசனி போல்வ,
தெறுபொறி பிதிர்வ திக்கின்,
வரிந்தன எருவை மானச்
சிறைகளால், அமரர் மார்பை
அரிந்தன, வடிம்பு பொன்கொண்டு
அணிந்தன, வாங்கு கண்ண.

பொ :- இடியை ஒத்தனவும் செறிந்த தீப்பொறிகளைத் திசைகள் தோறும் சிதறுவனவும், கழுகினுடைய பெருமைவாய்ந்த சிறகுகளாற் கட்டப்பட்டனவும், தேவர்களின் மார்பினைப் பிளந்தனவும் கூரிய ஓரங்களிற பொன்கொண்டு புனையப்பட்டனவும் (ஒளியின் மிகுதியால், நோக்கினார்) கண்ணொளியினைப் பறித்துக்கொள்ளுந் தன்மையனவும் (ஆக, அகம்பன்) சொரிந்தனவாகிய அம்பு மழைகள் (அனுமனுடைய) தோளிலும் மார்பின் மேலும் ஊன்றித் தோன்றின.

கு :- அசனி போல்வ, தெறுபொறி திக்கின் பிதிர்வ, எருவை மானச் சிறைகளால் வரிந்தன, வடிம்பு பொன் கொண்டு அணிந்தன வாங்கு கண்ண-சொரிந்தன பகழிமாரி, தோளினும் மார்பின் மேலும் தெரிந்தன என இயைத்துரைக்க. வாங்கு கண்ண என்பது, கண் வாங்குவ என விகுதி பிரித்துரைக்கப்பட்டது. கண் என்றது, கண்ணின் ஒளியினை. எருவை—கழுகு. மானச் சிறை—பெருமை வாய்ந்த சிறகு. (130)

8703. மார்பினுந் தோளின் மேலும்
வாளிவாய் மடுத்த வாயில்
சோர்பெருங் குருதி சோரத்
துளங்குவான் றேரு முன்னம்
தேரிரண் டருகும் பூண்ட
கழுதையு மச்சுஞ் சிந்தச்
சாரதி புரள வீரத்
தண்டினாற் கண்டஞ் செய்தான்.

மார்பினும் தோளின் மேலும்,
வாளிவாய் மடுத்த வாயில்,
சோர்பெருங் குருதி சோரத்,
துளங்குவான் தேரு முன்னம்,
தேர்இரண்டு அருகும் பூண்ட
கழுதையும் அச்சும் சிந்த,
சாரதி புரள, வீரத்
தண்டினல் கண்டம் செய்தான்.

பொ :- (தன்) மார்பிலும் தோளின்மீதும் அம்பின்வாய் தைத்து ஊன்றிய இடங்களில் வழிந்து பெருகுந் தன்மையதாகிய பெரிய இரத்த நீர் பெருகி வழியத் தளர்ச்சியுற்று நின்றவனுகிய அனுமன், (தான் மூர்ச்சை) தெளிவதற்கு முன்னரே (அகம்பனது) தேரின் இருமருங்கும் பூட்டப்பட்டுள்ள (ஆயிரம்) கழுதைகளும் தேரின் அச்சும் சிதைந்து அழியுமாறும் தேர்ப்பாகன் (தரையில் வீழ்ந்து) புரளுமாறும் (தன்கையிற்கொண்ட) வீரத் திறன்வாய்ந்த தண்டாயுதத்தால் துண்டித்தான்.

கு :- அகம்பன் எய்த அம்புகள் தோளிலும் மார்பிலும் தைத்து ஊன்றிய நிலையில் அம்பின் வாய்கள்தோறும் குருதிநீர் பெருகி வழியத் தான் மூர்ச்சையுற்று நின்ற நிலையிலும், அகம்பனது தேரிற் பூட்டப்பட்டுள்ள ஆயிரங் கழுதைகளையும் தேரின் அச்சினையும் தேர்ப்பாகனையும் அனுமன் தன் கையிலுள்ள தண்டாயுதத்தாற் கண்டங்கண்டமாகத் துண்டித்தான் என அவனது வெகுளிமிக்க போர் வன்மையினை ஆசிரியர் வியந்துரைத்தவாறு. (131)

**வில்லினல் அனுமனை வெல்லுதல் அரிதென்றுணர்ந்த அகம்பன், தண்டாயுதத்தைக் கொண்டு அனுமனெடு பொருதல்**

*8704.* **வில்லின லிவனை வெல்வ**
**தரிதென நிருதன் வெய்ய**
**மல்லின லியன்ற தோளின்**
**வலியினல் வானத் தச்சன்**
**கொல்லின லமைத்த தாண்டோர்**
**கொடுமுனைத் தண்டு கொண்டான்**
**அல்லினல் வகுத்த தன்ன**
**மேனியான் கடலி னர்ப்பான்.**

‘வில்லினுல் இவனை வெல்வது
அரிது’என, நிருதன் - வெய்ய
மல்லினுல் இயன்ற தோளின்
வலியினுல், வானத் தச்சன்
கொல்லினுல் அமைத்தது ஆண்டு
ஓர்கொடு முனைத்தண்டு கொண்டான்
அல்லினுல் வகுத்தது அன்ன
மேனியான், கடலின் ஆர்ப்பான்.

பொ :- இருளைக் கொண்டு இயற்றியது போன்ற (கரிய) உடம்பினை யுடையவனும், கடல்போற் பெருமுழக்கஞ் செய்பவனுமாகிய அகம்பன் என்னும் அரக்கன், (அனுமனாகிய) இவனை விற்றொழிலால் வெற்றி கொள்வதென்பது எளிதின் இயலாதது என எண்ணிக் கொடிய மற்றொழில் வளத்துடன் இயன்ற தன் தோள் வன்மையால் (வெல்லக்கருதித்) தெய்வச்சனாகிய விசுவகர்மன் கொல்லுத் தொழிலினுற் செய்தமைத்த கொடிய முனையினையுடைய தண்டாயுதமொன்றை அவ்விடத்தில் (கையில்). எடுத்துக்கொண்டான்.

கு :- அல்லினுல் வகுத்தது அன்னமேனியான், கடலின் ஆர்ப்பான், நிருதன், ‘இவனை வில்லினுல் வேறல் அரிது’ என, மல்லினுல் இயன்றதோளின் வலியினுல், ஆண்டு ஓர் கோடு முனைத் தண்டு கொண்டான் என்க. வானத்தச்சன் கொல்லினுல் அமைத்தது ஓர் கொடு முனைத்தண்டு என்க. வானத்தச்சன்- விசுவகர்மா. கொல்- கொற்றொழில். அல்-இருள். (132)

8705. இன்றிவன் றன்னை விண்ணு
டேற்றிவா ளிலங்கை வேந்தை
வென்றிய னுக்கி மற்றை
மனிதரை வெறிய ராக்கி
நின்றுயர் நெடிய துன்ப
மமரர்பா னிறுப்ப லென்னுச்
சென்றன னரக்க னன்று
வருகென வனுமன் சேர்ந்தான்.

'இன்றுஇவன்தன்னை விண்ணுடு
ஏற்றி,வாள் இலங்கை வேந்தை
வென்றியன் ஆக்கி, மற்றை
மனிதரை வெறியர் ஆக்கி,
நின்று,உயர் நெடிய துன்பம்
அமரர்பால் நிறுப்பல்' என்னாச்
சென்றனன் அரக்கன்; 'நன்று
வருக'என அனுமன் சேர்ந்தான்.

பொ :- ('அனுமனாகிய) இவனை இன்றைக்கே விண்ணுட்டில் ஏற்றி, வாட்படையுடைய இலங்கைமன்னனாகிய இராவணனை வென்றியையுடையவனாக்கி, ஏனை (இராம இலக்குவர் ஆகிய) மனிதர்களை (வெற்றியின்றி) வெறுமையுடையவராகச் செய்து நின்று, மேன்மேல் ஓங்கிய பெருந்துயரத்தைத் தேவர்கள்பால் நிலைபெறச் செய்வேன்' என்று (அகம்பன்) ஆகிய அரக்கன் அனுமனை நெருங்கிச் சென்றான். (அதுகண்ட) அனுமன், 'நல்லது வருக' எனக் கூறி அவனை நெருங்கினான்.

கு :- 'இன்று இவன் தன்னை...... நிறுப்பல்' என்பது அகம்பனது உட்கொள். விண்ணுடு ஏற்றுதல்- தேவருலகிற்கு அனுப்புதல்; என்றது போரில் உயிரைப்போக்குதலை, சிவபெருமான் உளமுவந்தளித்த வாட்படையினையுடையான் என்பது தோன்ற 'வாள் இலங்கை வேந்து' என்றான். அனுமன் முதலியோரைத் தான் போர்க்களத்திற் கொன்றழித்தலால் தன்வேந்தனாகிய இராவணனுக்கு வென்றியும், பகைவராய்ப் பொருதற்கு வந்துள்ள மனிதராகிய இராம இலக்குவர்க்குத் தோல்வியும், அதன் பயனாகத் தேவர்குலத்தார்க்குத் தீராப் பெருந்துன்பமும் நிலைநிற்றல் உறுதி என்பான், 'இலங்கை வேந்தை வென்றியன் ஆக்கி, மற்றைய மனிதரை வெறியர் ஆக்கி, நெடியதுன்பம் அமர்பால் நிறுப்பன்' என்றான். நிறுப்பல்- நிறுத்துவேன் ; அல் ஈற்றுத் தன்மை ஒருமை எதிர்காலத் தெரிநிலை வினைமுற்று. வெறியராக்குதல்—வெற்றியின்றி, வெறுமையுடையராக 'வென்றியனாக்கி...வெறியராகி' என வரும் தொடரில் (தோல்வியுற்றவராக ச்) செய்தல், 'வென்றி' என்ற சொல்லிலுள்ள னகர எழுத்துக் குறைந்து 'வெறி' என ஆக்கி அக்கரச் சுதகம் (எழுத்துக் குறைப்பு) என்னும் அணி நலம் அமையக் கூறியதிறம் அறிந்து மகிழத்தக்கதாகும். (133)

8706. தாக்கினர் வலத்து மற்றை
யிடத்தினுந் திரிந்தார் சாரி
ஓக்கின ரூழி னார்ப்புக்
கொட்டினர் கிட்டி னர்கீழ்த்
தூக்கினர் சுழற்றி னர்மேற்
சுற்றின ரெற்ற வெற்றி
நீக்கினர் நெருங்கி னர்போய்
நெருக்கி னர்நீங் கினர்மேல்.

தாக்கினர்; வலத்தும் மற்றை
இடத்தினும் திரிந்தார் சாரி;
ஓக்கினர், ஊழின் ஆர்ப்புக்
கொட்டினர்; கிட்டினர்; கீழ்த்
தூக்கினர், சுழற்றினர்; மேல்
சுற்றினர்; எற்ற, எற்றி
நீக்கினர், நெருக்கினர் போய்;
நெருக்கினர், நீங்கினர் மேல்.

பொ :- (அனுமான் அகம்பன் ஆகிய அவ்விருவரும்) ஒருவரை யொருவர் முட்டித் தாக்கினர். வலப்பக்கத்திலும் மற்றை இடப் பக்கத்திலுமாகச் சாரி திரிந்தனர். (கைகளை) ஓங்கியவர்களாய் ஊழிக் காலத்தைப் போன்று பேராரவாரம் செய்து (போருக்குத் தோள்) கொட்டினர். (தம்முள்) கிட்டி நெருங்கியவர்களாய்த் தூக்கிக் கொண்டு (உடம்பு தரையிற் படுமாறு) கீழே சுற்றினர்; மேலே (கிறு கிறுவென்று) சுழற்றினர். (ஒருவர், காலால்) எற்றித் தள்ள மற்றவரும் அவ்வாறே உதைத்துத் தள்ளி அப்பால் நீக்கினர். (மீண்டும்) சென்று நெருக்கினர். (அந் நிலையில்) நீங்கிச் சென்றவரும் மேல்வந்து நெருக்குவாராயினர்,

கு :- ஓக்குதல்—உயர்த்துதல். கொட்டுதல்—தோளைக் கொட் டிக் கொண்டு போருக்கு எழுதல். தூக்கி என்பதனைக் கீழ்ச் சுழற்றி னர் மேல் சுற்றினர் என்னும் ஈரிடத்தும் இயைத்துரைக்க. இதுவும் அடுத்த செய்யுளும் அனுமனும் அகம்பனும் பொருத மற்றொழில் நிகழ்ச்சியை வகுத்துக் கூறுவன. (134)

8707. தட்டினர் தழுவி னர்மேற்
றாவினர் தரையி னேடும்
கிட்டினர் கிடைத்தார் வீசிப்
புடைத்தனர் கீழு மேலும்
கட்டினர் காத்தா ரொன்றுங்
காண்கிலா ரிறவு கண்ணுற்
றொட்டினர் மோதி வட்ட
மோடின ராதி போனர்.

தட்டினர்; தழுவினர்; மேல்
தாவினர்; தரையி னேடும்
கிட்டினர்; கிடைத்தார், வீசிப்
புடைத்தனர் கீழும் மேலும்;
கட்டினர்; காத்தார்; ஒன்றும்
காண்கிலார், இறவு; கண்ணுற்று
ஒட்டினர்; மோதி, வட்டம்
ஓடினர்; ஆதி போனர்.

பொ :- (தோள்) தட்டியவராய் (ஒருவரையொருவர்) தழுவிக் கொண்டனர்; விசும்பின்மேல் தாவினர். தரையிற் கிட்டி நெருக்கினர்; தம் கையிற் கிடைத்தாரைக் கீழும்மேலும் வீசி மோதித் தாக்கினர்; நெருக்கிக் கட்டிக்கொண்டனர்; (அக் கட்டினின்றும் நெகிழ்ந்து வெளிவந்து) தம்மைக் காத்துக்கொண்டனர்; ஒருவர் (மற்றவரை) இறத்தலைச் சிறிதுங் காணமாட்டாதவராயினர்; (ஒருவரையொருவர்) கண்ணுற்று நெருங்கி நின்று சபதங் கூறினர்; (தம்முள்)மோதித் தாக்கி இடம் வலமாகச் சாரிதிரிந்தனர்; நேராக ஓடினர்.

கு :- தழுவுதல்—இறுக்கிப் பிடித்தல். வட்டம் ஓடுதல்—வட்டமாகச் சுற்றி ஓடுதல்; சாரிபோதல். ஆதிபோதல்—நேராக ஓடுதல். **(135)**

8708. மையொடும் பகைத்து நின்ற
நிறத்தினன் வயிர மார்பிற்
பொய்யொடும் பகைத்து நின்ற
குணத்தினன் புகுந்து மோத

வெய்யவ னதனைத் தண்டால்
விலக்கினான் விலக்க லோடும்
கையொடு மிற்று மற்றக்
கதைகளம் கண்ட தன்றே.

மையொடும் பகைத்து நின்ற
நிறத்தினான் வயிர மார்பில்,
பொய்யொடும் பகைத்து நின்ற
குணத்தினான் புகுந்து மோத,
வெய்யவன், அதனைத் தண்டால்
விலக்கினான்; விலக்க லோடும்,
கையொடும் இற்று மற்று
அக்கதை களம்கண்டது அன்றே.

பொ:- பொய்மையோடும் மாறுபட்டு நின்ற வாய்மைக் குணமுடையனாகிய அனுமன், மைக்குழம்புடன் பகைத்து மிக்கு நின்று கருமை நிறத்தினையுடையனாகிய அகம்பனுடைய திண்ணிய மார்பின்கண்ணே புக்குத் தாக்கி மோதிய அளவில், கொடியவனாகிய அகம்பன், (தன் கையிற்கொண்ட) தண்டினால் தடுத்து விலக்கினான்; அங்ஙனம் தடுத்த அளவில் அத் தண்டாயுதமானது (தன்னைப்பற்றியிருந்த) வலக்கையுடனே முறிந்து போர்க்களத்தில் விழுந்தது.

கு:- மை—அஞ்சனம். மையினைப் பகைத்து நிற்றல், நிறத்தால் கீழ்ப்படுத்தித் தான் அதனின்மிக்குத் தோன்றுதல். பொய்யொடும் பகைத்து நிற்றலாவது, பொய்மைக்கு இடமில்லாதபடி அதனை நீக்கி மெய்மையே யுருவாய் விளங்குதல். வெய்யவன் என்றது, கொடுமைக் குணமுடையனாகிய அனுமனை. கதை—தண்டாயுதம். களம் கண்டது—(யாவரும் காணப்) போர்க்களத்தையிடமாகக்கொண்டு கிடந்தது. அனுமன் தண்டாயுதத்தால் தன்னை மார்பில் தாக்கியபோது அகம்பன் தன் கையிலுள்ள கதையினால் தடுத்து விலக்கினானாக, அக் கதாயுதமானது தன்னைப்பற்றிய கையுடன் முறிந்து போர்க்களத்தில் வீழ்ந்தது என்பதாம். (136)

8709. கையொடு தண்டு நீங்கக்
கடலெனக் கலக்க முற்ற
மெய்யொடு நின்ற வெய்யோன்
மிடலுடை யிடக்கை யோச்சி

ஐயனை யலங்க லாகத்
தடித்தன னடித்த வோசை
ஒய்யென வயிரக் குன்றத்
துருமினே றிடித்த தொத்த.

கையொடு தண்டு நீங்க,
கடல்எனக் கலக்கம் உற்ற
மெய்யொடு நின்ற வெய்யோன்,
மிடலுடை இடக்கை ஓச்சி,
ஐயனை, அலங்கல் ஆகத்து
அடித்தனன்; அடித்த ஓசை,
ஒய்யென வயிரக் குன்றத்து
உருமின்ஏறு இடித்தது ஒத்த.

பொ .- (பற்றிய வலக்)கையுடனே தண்டாயுதயம் (முறிந்து) நீங்க, கடலையொத்துக் கலக்கமுற்ற உடம்புடனே நின்ற கொடியோனாகிய அரக்கன், வலிமிக்க தனது இடக்கையினை ஓங்கித் தலைமைப் பண்புடைய அனுமனை வெற்றிமாலை விளங்கும் மார்பின்கண்ணே அடித்தான்; அவ்வாறு அடித்தலால் எழுந்த பேரோசை, திண்ணிய வயிரமலையில் பேரிடி விழுந்ததையொத்து விரையத் தோன்றியது.

கு.- வெய்யோன் என்றது, அகம்பனை. அவனது கை முறிந்து விழுந்த நிலையில் அவனுடைய கரிய பேருடம்பு அலைமறியும் கடலையொத்துக் கலக்கமுற்றது என்பார், 'கடல் எனக் கலக்கமுற்ற மெய்' என்றார். மிடல்—வன்மை. ஐயன் என்றது, அனுமனை. அலங்கல்—மாலை. ஆகம்-மார்பு. (137)

வெறுங்கையனுய் நின்ற அகம்பனை
அனுமன் கையாற் குத்தி வீழ்த்துதல்

*8710.* அடித்தவன் றன்னை நோக்கி
யசனியே றனைய தண்டு
பிடித்துநின் றேயு மெற்றான்
வெறுங்கையான் பிழையிற் றென்னு
மடித்துவா யிடத்த கையான்
மார்பிடைக் குத்த வாயாற்
குடித்துநின் றுமிழ்வா னென்னக்
கக்கினன் குருதி வெள்ளம்.

அடித்தவன் தன்னை நோக்கி,
அசனிஏறு அனைய தண்டு
பிடித்து நின்றேயும் என்றான்,
'வெறுங்கையான், பிழையிற்று' என்று,
மடித்துவாய், இடத்த கையால்
மார்பிடைக் குத்த, வாயால்
குடித்து நின்று உமிழ்வான்
என்னக் கக்கினன், குருதிவெள்ளம்.

பொ : - அனுமன் (தன்னை) அடித்தவனாகிய அகம்பனை நோக்கி 'இவன் (ஆயுதம் எடாத) வெறுங் கையினையுடையான், (இவனை ஆயுதத்தால் தாக்குதல்) குற்றமுடைய செயலாம்' என்று எண்ணி, இடியேற்றினையொத்த தண்டாயுதத்தைத் தான் பிடித்திருந்தும் (அவ்வாயுதத்தால்) அடிக்காதவனாகி வெகுளிக் குறிப்புடன் தன் வாயை மடித்து இடக்கையினால் அவனது மார்பின்கண்ணே குத்தினானாக, (அவ் வரக்கன்) (முன்னே நிறையக்) குடித்து நின்று மறுபடியும் கொப்பளிப்பவனைப் போன்று தன் வாயினால் வெள்ளம் போலும் குருதி நீரைக் கக்கினான்.

கு : - அசனி ஏறு—இடியேறு; பேரிடி. 'வெறுங்கையான், பிழையிற்று' என்பது, அகம்பனைக் குறித்து அனுமன் தன் உள்ளத்திலே எண்ணியது. தண்டுமிடித்து நின்றேயும் (அதனால்) எற்றான், இடத்த கையால் மார்பிடைக் குத்த குடித்து நின்று உமிழ்வான்போல வாயால் குருதிவெள்ளம் கக்கினன்என இயைத்துரைக்க. இடத்த கை—இடது கை. (138)

**8711. மீட்டுமக் கையால் வீசிச்**
**செவித்தலத் தெற்ற வீழ்ந்தான்**
**கூட்டினா னுயிரை விண்ணோர்**
**குழாத்திடை யரக்கர் கூட்டம்**
**காட்டில்வாழ் விலங்கு மாக்கள்**
**கோளரி கண்ட வென்ன**
**ஈட்டமுற் றெதிர்ந்த வெல்லா**
**மிரிந்தன திசைக ளெங்கும்.**

மீட்டும் அக்கையால் வீசி,
செவித்தலத்து எற்ற, வீழ்ந்தான் ;
கூட்டினான் உயிரை, விண்ணோர்
குழாத்திடை ; அரக்கர் கூட்டம்

காட்டில்வாழ் விலங்கு மாக்கள்
கோள்அரி கண்ட என்ன,
ஈட்டம்உற்று எதிர்ந்த எல்லாம்
இரிந்தன, திசைகள் எங்கும்.

பொ : - (அனுமன்) மறுபடியும் அந்த இடக்கையினுலே ஓங்கி (அகம்பனது) கன்னத்திலே அறைந்து தாக்கக் கீழேவிழுந்தவனுகிய அகம்பன் தனது உயிரைத் தேவர் கூட்டத்திடையே செலுத்தி இறந்துபட்டான். (அந்நிலையில், போர்க்களத்தில்) கூட்டமாய்த் திரண்டுநின்று பொருத அரக்கர் கூட்டம் யாவும், காட்டிடத்தே வாழும் ஐயறிவுடையனவாகிய விலங்குகள் வலிய சிங்கத்தைக் கண்டாற்போன்று அஞ்சினவாகித் திசைகள்தோறும் நிலைகெட்டு ஓடின.

கு : - அனுமனைக் கண்டு அஞ்சியோடிய அரக்கர் கூட்டத்திற்கு, சிங்கத்தைக்கண்டு அஞ்சியோடிய விலங்குகள் உவமை. மன உணர்வின்றி ஐம்பொறியுணர்வுகளை மட்டும் பெற்ற உயிர்களை மாக்கள் என வழங்குதல் மரபு. (139)

### இலக்குவன் அம்பால் அரக்கர் சேனை மாளுதல்

8712. மாண்டன னகம்பன் மண்மேன்
மடிந்தன நிருதர் சேனை
மீண்டனர் குரக்கு வீரர்
விழுந்தன சினக்கை வேழம்
தூண்டின கொடித்தே ரற்றுத்
துணிந்தன தொடுத்த வாசி
யாண்டகை யிளைய வீர
னடுசிலை பொழியு மம்பால்.

மாண்டனன் அகம்பன்; மண்மேல்
மடிந்தன நிருதர் சேனை;
மீண்டனர் குரக்கு வீரர்;
விழுந்தன சினக்கை வேழம்;
தூண்டின கொடித்தேர் அற்றுத்
துணிந்தன தொடுத்த வாசி;
ஆண்தகை இளைய வீரன்
அடுசிலை பொழியும் அம்பால்.

பொ : - அகம்பன் மண்மேல் இறந்து வீழ்ந்தான். அரக்கர் சேனைகளும் மடிந்தன. (முன்னர் அஞ்சியோடிய) வானர வீரர்கள் யாவரும் (அகம்பன் முதலிய அரக்கர்கள் அழிவுற்றமைகண்டு) மீண்டும் போர்க்களத்தை அடைந்தனர். ஆடவரிற் சிறந்த இளையோனாகிய இலக்குவனது கொல்லுந் தன்மை வாய்ந்த வில்லி லிருந்து சொரியப்படும் அம்புகளால், (அரக்கர் சேனையிலுள்ள) வெகுளிமிக்க கையொடு பொருந்திய யானைகள்பட்டு வீழ்ந்தன; (அரக்கராற்) செலுத்தப்பட்ட கொடியுடன் கூடிய தேர்கள் (கொடி) அறுபட்டு அவற்றிற் பூட்டப்பெற்ற குதிரைகள் துணிக்கப்பட்டு இறந்தன.

கு : - அடுசிலை பொழியும் அம்பால், வேழம் வீழ்ந்தன. கொடித் தேர் அற்றுத் தொடுத்த வாசி துணிந்தன என இயையும். தொடுத்தல்—தேரிற் பூட்டப்படுதல். வாசி—குதிரை. இச் செய்யுள் சில ஏடுகளில் இல்லை. (140)

## இலக்குவன் இருக்கும் சூழல் இதுவென அறியாது அனுமன் கலக்கமுறுதல்

8713. ஆர்க்கின்ற குரலுங் கேளா
னிலக்குவ னசனி யேற்றைப்
பேர்க்கின்ற சிலையி ஞாணின்
பேரொலி கேளான் வீரர்
யார்க்கின்ன லுற்ற தென்ப
துணர்ந்தில னிசைப்போ ரில்லை
போர்க்குன்ற மனைய தோளா
னினையதோர் பொரும லுற்றான்.

ஆர்க்கின்ற குரலும் கேளான்;
இலக்குவன் அசனி ஏற்றைப்
பேர்க்கின்ற சிலையின் நாணின்
பேர்ஒலி கேளான்; வீரர்
யார்க்குஇன்னல் உற்றது என்பது
உணர்ந்திலன்; இசைப்போர் இல்லை;
போர்க்குன்றம் அனைய தோளான்
இனையது ஓர் பொருமல் உற்றான்.

பொ : . பொருதல் தொழிலையுடைய மலையினையொத்த தோள்களை யுடையனாகிய அனுமன், (மீண்டுவந்த வானர வீரர்கள்) ஆரவாரிக்கின்ற ஆரவாரத்தையும் கேட்டிலன் ; இடியேற்றின் ஒலியையும் மாற்றி அடக்கத்தக்கதாகிய இலக்குவனது வில் நாணின் பேரொலியையும் கேட்கப்பெற்றிலன் ; (தன்) சேனையைச் சேர்ந்த வீரர்களில் இன்னார்க்கு இன்ன துன்பம் நேர்ந்தது என்பதனை உணரப் பெற்றிலன் ; (அதனை) உணர்ந்து உரைப்பவர்களும் (அங்கு) இல்லை. (அதனால்) இத்தகையதொரு பெருந்துயரத்தை அடைந்தான்.

கு : - 'போர்க்குன்ற மனைய தோளான்' என்றது பொருதற்றொழிலையுடைய மலையுளதாயின் அம்மலையின் உவமை சொல்லத்தக்க தோள்களையுடையவன் (அனுமன்) என இல்பொருளுவமையாய் வந்தது. தோளான், குரலுங்கேளான், பேரொளி கேளான், உணர்ந்திலன் ; பொருமல் உற்றான் என இயையும். 'இசைப்போர் இல்லை' என்னும் தொடர்; இடைப்பிறவரலாய் நின்றது. இனையதோர் பொருமலாவது, தான் பகைவர்களைக் கொன்றழித்த நிலையிலும் தன் அன்புக்கும் பெருமதிப்புக்கும் உரிய தலைவனாகிய இலக்குவனைப் பற்றியும் உடன்வந்த சுக்கிரீவன் முதலிய தலைவர்களைப்பற்றியும் ஒன்றும் உணரமுடியாத நிலையில் தனக்கேற்பட்ட தனிமை நிலையால் உளதாகிய பொருந்துயரத்தினை. (141)

**அரக்கருடைய படைக் கடலினிடையே அங்கதன் முதலியோர் ஒருவரையொருவர் காணமுடியாத நிலையில் செய்மையில் நிற்றல்**

8714. **வீசின நிருதர் சேனை**
**வேலையிற் றென்மேற் றிக்கின்**
**யோசனை யேழு சென்று**
**னங்கத னதனுக் கப்பால்**
**ஆசையி னிரட்டி சென்று**
**னரிகுலத் தரச னப்பால்**
**ஈசனுக் கிளைய வீர**
**னிரட்டிக்கு மிரட்டி சென்றான்.**

வீசின நிருதர் சேனை
வேலையில் தென்மேல் திக்கின்
யோசனை ஏழு சென்றான்
அங்கதன்; அதனுக்கு அப்பால்

ஆசையின் இரட்டி சென்றான்
அரிகுலத்து அரசன்; அப்பால்
ஈசனுக்கு இளைய வீரன்
இரட்டிக்கும் இரட்டி சென்றான்.

பொ:- சிதறிய அரக்கர் சேனையாகிய கடலினுள்ளே தென் மேற்குத் திசையில் ஏழு யோசனையளவு அங்கதன் சென்றான்; அதற்கு அப்பால் அதன் இரண்டு மடங்கு (பதினான்கு) யோசனை யளவு சென்றான் வானரகுல மன்னனாகிய சுக்கிரீவன்; இராம னுக்குத் தம்பியாகிய இலக்குவன் அதற்கு அப்பால் நான்கு மடங்கு (இருபத்தெட்டு) யோசனையளவு சென்றான்.

கு:- வீசுதல்—சிந்துதல். சேனை வேலை—சேனையாகிய கடல்; உருவகம். ஒரு யோசனை என்பது நான்கு குரோசங் கொண்ட தூரம் என்றும் ஒரு குரோசம் என்பது இரண்டேகால் கல் தொலைவு என் றும் கூறுவர். ஆசை—திசை. இரட்டி—முன் சொன்ன அளவுக்கு இருமடங்கு; அஃதாவது பதினான்கு யோசனை தூரம். இரட்டிக்கு இரட்டி—நான்கு மடங்கு, அஃதாவது இருபத்தெட்டு யோசனை தூரம். அனுமன் நின்ற இடத்திற்கும் அங்கதன் நின்ற இடத்திற் கும் இடையிலுள்ள தூரம் ஏழு யோசனை. அங்கதன் நிற்கும் இடத் திற்கும் அதற்கு அப்பால் சுக்கிரீவன் நின்ற இடத்திற்கும் இடையி லுள்ள தூரம் பதினான்கு யோசனை. சுக்கிரீவன் நின்ற இடத்திற்கும் அவனுக்கு அப்பால் இலக்குவன் நின்ற இடத்திற்கும் இடையிலுள்ள தூரம் இருபத்தெட்டு யோசனை. எனவே அனுமன் நின்ற இடத்திற் கும் இலக்குவன் நின்ற இடத்திற்கும் இடையிலுள்ள தூரம் நாற்பத் தொன்பது யோசனை என்றாராயிற்று. (142)

### அனுமன் இலக்குவன் நின்ற இடத்திற்கு இரண்டு மூன்று காத தூரத்திற்கு அண்மையில் அடைதல்

8715. மற்றையோர் நாலு மைந்தும்
யோசனை மலைந்து புக்கார்
கொற்றமா ருதியும் வள்ள
லிலக்குவ னின்ற சூழல்
முற்றின னிரண்டு மூன்று
காவத மொழியப் பின்னும்
சுற்றிய சேனை நீர்மேற்
பாசியின் மிடைந்து துன்ன.

மற்றையோர் நாலும் ஐந்தும்
யோசனை மலைந்து புக்கார்;
கொற்ற மாருதியும், வள்ளல்
இலக்குவன் நின்ற சூழல்
முற்றினன்; இரண்டு மூன்று
காவதம் ஒழிய பின்னும்
சுற்றிய சேனை நீர்மேற்
பாசியின் மிடைந்து துன்ன.

பொ:-ஏனைய வீரராகிய படைத் தலைவர்கள் நாலு யோசனையும் ஐந்து யோசனையும் அளவே (அரக்கர் சேனையைப்) பொருது (உள்ளே) புகுந்தனர். வெற்றி வீரனாகிய அனுமனும், சுற்றிய அரக்கர் சேனைகள் நீர்மேற் படர்ந்த பாசியினைப் போன்று மீண்டும் செறிந்து நெருங்க இலக்குவன் போர் செய்து நின்ற இடத்தினை இரண்டு மூன்று காததூரம் இடைவெளியிருக்குமளவு சென்று சேர்ந்தான்.

கு:- மற்றையோர் என்றது, நீலன் முதலிய படைத் தலைவர்களை. காவதம்—காததூரம்; பத்துக்கல் தொலைவு மாருதியும் சுற்றிய சேனை நீர்மேற் பாசியின் பின்னும் மிடைந்து துன்ன இலக்குவன் நின்ற சூழல் இரண்டு மூன்று காவதம் ஒழிய முற்றினன் என இயையும். முற்றுதல்—சென்று சேர்தல். மிடைதல்—செறிதல். துன்னுதல்—நெருங்குதல். (143)

அனுமன், இலக்குவனால் நிகழ்த்தப்பட்ட போரின்
பல்வேறு அடையாளங்களைக் காணுதல்

8716. இளையவ னின்ற சூழ
லெய்துவென் விரைவி னென்றோர்
உளைவுவந் துள்ள ந் தூண்ட
வூழிவெங் காலிற் செல்வான்
களைவருந் துன்ப நீங்கக்
கண்டன னென்ப மன்னோ
விளைவன செருவிற் பல்வே
றுயின குறிகண் மேய.

'இளையவன் நின்ற சூழல்
எய்துவென் விரைவின்' என்று,ஓர்
உளைவுவந்து உள்ளம் தூண்ட,
ஊழிவெங் காலின் செல்வான்,
களைவுஅருந் துன்பம் நீங்கக்
கண்டனன் என்ப மன்னோ—
விளைவன செருவில் பல்வேறு
ஆயின குறிகள் மேய.

பொ:- (இலக்குவனைக் காணாமையால் உண்டாகிய) ஒரு துயரந் தோன்றித் தன் உள்ளத்தைச் செலுத்துதலால், 'இளையோனாகிய இலக்குவன் நின்ற இடத்தினை விரைவில் அடைவேன்' என்று ஊழிக் காலத்துக் கடுங்காற்றினை யொத்து விரைந்து செல்பவனாகிய அனுமன், (இலக்குவனால் அங்கு) நிகழ்வனவாகிய போர்ச் செயல் களிற் பொருந்திய பல்வேறு அடையாளங்களை நீக்குதற்கரிய தன் மனத்துயரம் நீங்கும்படி கண்டான்.

கு:- ஓர் உளைவு வந்து உள்ளம் தூண்ட, 'இலக்குவன் நின்ற சூழல் விரைவின் எய்துவன்' என்று ஊழிவெங்காலிற் செல்வான், விளைவன செருவில் மேய பல்வேறாயின குறிகள் களைவு அருந் துன்பம் நீங்கக் கண்டனன் என இயையும். ஊழிவெங்காலிற் செல் வான் என்றது, அனுமனை வெங்காலின்—கடுங்காற்றினைப்போன்று; இன், உவம உருபு. அவன் கண்ட குறிகள் வருஞ்செய்யுளில் விரித்து ரைக்கப்படும். என்ப, மன், ஓ என்பன அசைகள். (144)

8717. ஆனையின் கோடும் பீலித்
தழைகளு மாரத் தோடு
மானமா மணியும் பொன்னு
முத்தமுங் கொழித்து வாரி
மீனென வங்கு மிங்கும்
படைக்கல மிளிர வீசும்
பேனவெண் குடைய வாய
குருதிப்பே ராறு கண்டான்.

ஆனையின் கோடும், பீலித்
தழைகளும், ஆரத் தோடு
மானமா மணியும், பொன்னும்,
முத்தமும், கொழித்து வாரி,

மீன்என அங்கும் இங்கும்
படைக்கலம் மிளிர, வீசும்
பேனவெண் குடைய ஆய,
குருதிப்பேர் ஆறு கண்டான்.

பொ:- யானைத் தந்தங்களையும் மயிற் பிச்சங்களையும் மாலைகளோடு பெருமைமிக்க அரதனங்களையும் பொன்னையும் முத்துக்களையும் கொழித்து வாரிக்கொண்டு (ஒளிமிக்க வாள் முதலிய) ஆயுதங்கள் மீன்களைப் போன்று விளங்க வீசியொதுக்கும் நுரைகளையொத்த வெண்குடைகளைத் தன்னகத்தே கொண்டு செல்வனவாகிய இரத்தப் பேராறுகளைக் கண்டான் (அனுமன்).

கு:- கோடு—தந்தம். பீலித்தழை—மயிற்றோகையால் அமைந்த பிச்சம். ஆரம்—மாலை. பே—நுரை. (145)

8718. ஆசைக டோறுஞ் சுற்றி
யலைக்கின்ற வரக்கர் தம்மேல்
வீசின பகழி யற்ற
தலையொடும் விசும்பை முட்டி
ஓசையி னுலக மெங்கு
முதிர்வுற வூழி நாளிற்
காசறு கல்லின் மாரி
பொழிவபோல் விழுவ கண்டான்.

ஆசைகள் தோறும் சுற்றி
அலைக்கின்ற அரக்கர்தம் மேல்
வீசின பகழி, அற்ற
தலையொடும் விசும்பை முட்டி,
ஓசையின் உலகம் எங்கும்
உதிர்வுற, ஊழி நாளில்
காசுஅறு கல்லின் மாரி
பொழிவபோல், விழுவ கண்டான்.

பொ :- திசைகள் தோறும் சூழ்ந்து வளைத்துப் போர் செய்கின்ற அரக்கர்களின் மேலே(இலக்குவன்)ஏவிய அம்புகள் அறுபட்ட தலைகளோடு வான முகட்டைச் சென்று முட்டிப் பெருமுழக்கத்துடன்

உலகம் எங்கும் பொடியாய்ச் சிதர்ந்து உதிருமாறு ஊழி முடிவில் குற்றமற்ற கல்மழை சொரிவனவற்றையொத்து (த் தரையில்) வீழ் வனவற்றைக் கண்டான் (அனுமன்).

கு :- அலைத்தல்—போர் செய்து வருத்துதல். விசுதல்—எய்தல். பகழி—அம்பு. காசு—குற்றம். இலக்குவன் அரக்கர்மேல் ஏவிய அம்புகள் அரக்கர் தலைகளையறுத்துக் கொண்டு வான முகட்டளவும் சென்று மேலும் செல்லுதற்கு இயலாமல் தரையில் வீழ்வன, ஊழி முடிவில் உலகமெல்லாம் பொடியாய்ச் சிதையுமாறு பொழியும் கல் மழையினையொத்துத் தோன்றின என்பதாம். (146)

8719. மானவே லரக்கர் விட்ட
 படைக்கலம் வான மாரி
ஆனவன் பகழி சிந்தத்
 திசையொடும் பொறியோ டற்ற
மீனினம் விசும்பி னின்று
 மிருளுக வீழ்வ போலக்
கானகந் தொடர்ந்த தீயிற்
 சுடுவன பலவுங் கண்டான்.

மானவேல் அரக்கர் விட்ட
 படைக்கலம், வான மாரி
ஆனவன் பகழி சிந்தத்
 திசையொடும் பொறியோடு அற்ற,
மீன் இனம் விசும்பி னின்றும்
 இருள்உக வீழ்வ போல,
கானகம் தொடர்ந்த தீயின்
 சுடுவன பலவும் கண்டான்.

பொ :- (வீரத்திற் குன்ருத) பெருமைவாய்ந்த வேற்படையை யுடைய அரக்கர்கள் செலுத்திய ஆயுதங்களாகிய பெருமழை, அத் தகைய வீரத் தன்மையினை யுடையனாகிய இலக்குவன் (எய்த) அம்பு கள் துணிக்கத் திக்குகள தோறும் தீப்பொறிகளோடும் துணிபட்டு(த் தரையில்) வீழ்வன, விண்மீன் தொகுதிகள் வானத்தினின்றும் இருள் கெட வீழ்வனவற்றைப் போன்று (தரையில் வீழ்ந்து) காட்டிற் பற் றிய பெருந் தீயினையொத்துச் சுடுவன பலவற்றையும் கண்டான் (அனுமன்).

கு :- மானம்—தன்னிலையிற்று ழாமையாகிய பெருமை. வான மாரி—பெருமழை. ஆனவன்—அத் தன்மையன்; என்றது, மற னிழுக்கா மானமுடையனாகிய இலக்குவனை. சிந்துதல்—துணித்துச் சிதைத்தல். இருள்உக—இருள்கெட. கானகம் தொடர்ந்த தீ—காட் டிற் பற்றிய பெருந்தீ. தீயின்—தீயினைப் போன்று; இன், உவம வுருபு. (147)

8720. அருளுடைக் குரிசில் வாளி
யந்தர மெங்குந் தாமாய்த்
தெருளுறத் தொடர்ந்து வீசிச்
செல்வன தேவர் காண
இருளிடைச் சுடலை யாடு
மெண்புயத் தண்ணல் வண்ணச்
சுருளுடைச் சடையின் கற்றைச்
சுற்றெனச் சுடர்வ கண்டான்.

அருளுடைக் குரிசில் வாளி,
அந்தரம் எங்கும் தாம்ஆய்,
தெருள்உறத் தொடர்ந்து வீசிச்
செல்வன தேவர் காண
இருளிடைச் சுடலை ஆடும்
எண்புயதது அண்ணல் வண்ணச்
சுருளுடைச் சடையின் கற்றைச்
சுற்றுஎனச் சுடர்வ கண்டான்.

பொ :- அருட்குணமுடைய தலைவனாகிய இலக்குவன் (எய்த) அம்புகள் ஆகாயமெங்கும் தாமேயாய்ப் பரவி (வீரர் யாவரும், இருள் நீங்கித்) தெளிவுபெறுமாறு தொடர்ந்து ஒளிவீசி (உயர்ந்து) செல் பவை, தேவரெல்லாம் கண்டு போற்றச் சுடுகாட்டகத்தே நள்ளிருளில் நடம்புரியும் எண் தோள் ஈசனாகிய இறைவனது அழகுவாய்ந்த சுருளுதலைப் பொருந்திய சடைத்தொகுதியின் வட்டம் (திசைதோறும் விரிந்து பரவினாற்) போன்று சுடர்விட்டு விளங்குவனவற்றை (அனு மன்) கண்டான்.

கு :- இலக்குவன், இருள் நிரம்பிய இரவுப் பொழுதிலே இரக்க மற்ற அரக்கரொடு நிகழ்த்தும் இப் போரிலே, இருளிலகப்பட்டு வழி தெரியாது மயங்கிய வானரவீரர்கள் ஒளியினால் தெளிவுபெறும் நிலை யில் ஒளிமிக்க அம்புகளை வானத்திற் செலுத்த, அவை ஆகாயமெங்

கும் பரவி ஒளி வீசுவன, நள்ளிருளில் ஈமப்புறங்காட்டில் ஆடல் புரிந்தருளும் எண்தோளீசனது செஞ்சடைக் கற்றையின் ஒளி வட்டத்தையொத்துத் தோன்றின என்றவாறு. அருளுடைக் குரிசில் என்றது, இலக்குவனை. வாளி—அம்பு. தெருள்—தெளிவு. 'நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே' எனும் திருவாசகப் பொருளையடியொற்றி 'இருளிடைச் சுடலையாடும் எண்புயத் தண்ணல்' என்றார். 'எண்டோள் வீசி நின்றாடும் பிரான்' (4-9-2.) எனவரும் அப்பர் அருள் மொழியும் இங்கு ஒப்புநோக்கி யுணர்தற்குரியதாகும். (148)

8721. நெய்யுறக் கொளுத்தப் பட்ட
நெருப்பெனப் பொருப்பி னோங்கும்
மெய்யுறக் குருதித் தாரை
விசும்புற விளங்கு கின்ற
ஐயனைக் கங்குன் மாலை
யரசென வறிந்து காலம்
கைவிளக் கெடுத்த தன்ன
கவந்தத்தின் காடு கண்டான்.

நெய்உறக் கொளுத்தப் பட்ட
நெருப்புஎன, பொருப்பின் ஓங்கும்
மெய்உறக் குருதி தாரை
விசும்புஉற விளங்கு கின்ற,
ஐயனை, கங்குல் மாலை,
அரசுஎன அறிந்து, காலம்
கைவிளக்கு எடுத்தது அன்ன—
கவந்தத்தின் காடு கண்டான்.

பொ:- நெய் பொருந்தக் கொளுத்தப்பட்ட தீயினையொத்து, மலைபோன்று ஓங்கிய உடம்பினின்றும் பொருந்தக் குருதிப் பெருக்கு விசும்பினைப் பொருந்தி விளங்குபவை, வியக்கத்தக்க குணமுடையவனாகிய இலக்குவனை அரசன் என்று உணர்ந்து கங்குல் மாலையாகிய இரவுப்பொழுது கைவிளக்கு எடுத்து வரவேற்பதனை ஒத்த கவந்தங்களின் மிகுதியை (அனுமன்) கண்டான்.

கு:- கவந்தம் என்பது, தலையற்ற உடம்பு. தலையறுபட்ட நிலையில் அவ் வுடம்பின் கழுத்திலிருந்து பீறிட்டு மேலெழும் இரத்த தாரை, நெய்விட்டுக் கொளுத்தப்பட்ட தீச் சுடரையொத்து விளங்குதலால், அக் கவந்தங்கள், கங்குல் மாலையாகிய இராக்காலம், இலக்கு

வனே அரசர் குலத்தோன்றல் என்றுணர்ந்து எடுத்த கைவிளக்கு களாகிய தீவட்டிகளையொத்துத்தோன்றின எனத் தற்குறிப்பேற்றம் என்னும் அணியமையப் புனைந்துரைத்தவாறு. கங்குல் மாலையாகிய காலம் என இயையும். காடு—செறிவு; மிகுதி. (149)

8722. ஆளெலா மிழந்த தேரு
மானையு மாட லின் மாவும்
நாளெலா மெண்ணி னாலுந்
தொலைவில நாத ரின்றித்
தாளெலாங் குலைய வோடித்
திரிவன தாங்க லாற்றும்
கோளிலா மன்ன னாட்டுக்
குடியெனக் குலைவ கண்டான்.

ஆளெலாம் இழந்த தேரும்
ஆனையும் ஆடல் மாவும்,
நாள்எலாம் எண்ணி னாலும்
தொலைவுஇல, நாதர் இன்றி,
தாள்எலாம் குலைய ஓடித்
திரிவன; தாங்கள் ஆற்றும்
கோள்இலா மன்னன் நாட்டுக்
குடிஎனக் குலைவ கண்டான்.

பொ :- (மேல் இருந்து செலுத்தும்) வீரர்களையிழந்து வெறுமை யுற்ற தேரும் யானையும் வெற்றிமிக்க குதிரையும் (வாழ்) நாட்க ளெல்லாம் (இருந்து) எண்ணினாலும் எண்ணத் தொலையாதன, (தம்மை ஊர்ந்து செலுத்தும்) தலைவரை இன்றிக் கால்களெல்லாம் குலைந்து தளருமாறு (நிலைபெறாது) ஓடித்திரிபவை, (தளர்ச்சி நீக் கித்) தாங்கிக் காக்கும் கொள்கையில்லாத (கொடுங்கோல்) மன்ன னது நாட்டிலுள்ள குடிமக்களை யொத்து நிலைகுலைந்து சிதைவன வற்றை (அனுமன்) கண்டான்.

கு :- ஆள் என்றது மேல் இருந்து செலுத்தும் வீரர்களை. இழந்த என்னும் பெயரெச்சத்தைத் தேர் ஆனை மாட என்னும் பெயர்களுடன் தனித்தனி இயைத்துரைக்க. நாதர்—மேல் இருந்து செலுத்தும் தலைவராகிய வீரர். அரக்கர் சேனைகளில் உள்ள தேர் யானை குதிரைகளாகிய இவை ஒருவரது வாழ்நாள் முழுதும் எண்ணி அளவிட்டாலும் எண்ணத் தொலையாத பேரளவின என்

பார், 'நாளெலாம் எண்ணினும் தொலைவில' என்றார். தாள்—சக்கரம், கால். தாங்கல்-பொறுத்துக் காத்தல். கோள்-கொள்கை; என் கீழ் வாழும் குடிகளுக்கெல்லாம் யானே உயிராவேன் என்னும் உண்மையையுணர்ந்து அச்சம் நீக்கிக் காக்கும் அறநெறி வழிப்பட்ட உறுதிப்பாடு. அக் கொள்கையில்லாத மன்னன் என்றது கொடுங்கோல் மன்னனை. கொடுங்கோலனால் ஆளப்படும் நாட்டிலுள்ள குடிகள் அவன் செய்யும் பலவகைக் கொடுமைகளையும் தாங்கலாற்றாது ஓரிடத்தில் நிலைபெறாது அலைந்து துயருழப்பர் என்பது, 'ஆள்பவர் கலக்குற அலைபெற்ற நாடுபோற் பாழ்பட்ட முகத்தோடு பைதல் கொண்டழிவாளோ' (கலித்—4) எனவும், 'முறை தளர்ந்த மன்னவன் கீழ்க்குடிபோலக் கலங்குப, பொறைதளர்பு பனி வாருங் கண்ணுயின் எவன் செய்கோ' (கலித்—33) எனவும் வரும் பாலைக்கலித்தொடர்களில் உவம வாயிலாக எடுத்துரைக்கப்பட்டமை காண்க. (150)

8723. மிடல்கொளும் பகழி மாரி
வானினு மும்மை வீசி
மடல்கொளு மலங்கன் மார்பன்
மலைந்திட வுலைந்து மாண்டார்
உடல்களு முதிர நீரு
மொளிர்படைக் கலமு முற்ற
கடல்களு நெடிய கானுங்
கார்தவழ் மலை யுங் கண்டான்.

மிடல்கொளும் பகழி, மாரி
வானினும் மும்மை வீசி,
மடல்கொளும் அலங்கல் மார்பன்
மலைந்திட, உலைந்து மாண்டார்
உடல்களும் உதிர நீரும்,
ஒளிர்படைக் கலமும், உற்ற
கடல்களும், நெடிய கானும்,
கார்தவழ் மலையும் கண்டான்.

பொ:- இதழ்களைக் கொண்ட மலர்மாலையை அணிந்தவனாகிய இலக்குவன், வன்மைகொண்ட அம்புமழையினை மேகத்தைக் காட்டிலும் மும்மடங்கு சொரிந்து போர் செய்தமையால் உயிர்நீங்கி இறந்தோராகிய அரக்கர்களின் உடம்புகளும் (அவற்றிலிருந்து பெருகிய) குருநீர்ப்பெருக்கும் ஒளி வீசும் படைக்கலங்களும் பொருந்தினமையால் கடல்களையும் நீண்ட காட்டினையும் மேகந்தவழும் மலையினையும் (அனுமன் ஒருங்கே) காண்பானாயினன்.

கு :- மடல்கொளும் அலங்கல் மார்பன் என்றது, இலக்குவனை. மார்பன், பகழி மாரி வானினும் முர்மை வீசி மலைந்திட, உலைந்து மாண்டார் உடல்களும் உதிர நீரும் ஒளிர்படைக்கலமும் உற்ற என இயையும். வான்-மேகம். கண்டான் என்றது அநுமனை. இலக்குவன் அரக்கருடன் நிகழ்ந்திய போரின் பயனாக அரக்கர்களின் உயிர் நீங்கிய உடம்புகள் மலைபோலவும், அவற்றிலிருந்து பெருகிய குருதி நீர்க் குட்டங்கள் கடல்கள் போலவும், அவற்றிடையே செறிந்துள்ள ஒளிமிக்க படைக்கலங்கள் காடுபோலவும் அப் போர்க்களத்தில் தோன்றுதலை அநுமன் கண்டான் என்பதாம். (151)

## இலக்குவனது நாணொலிகேட்டு மகிழ்ந்த அநுமன் ஆரவாரித்தல்

8724. சுழித்தெறி யூழிக் காலிற்
றுருவினன் றொடருந் தோன்றல்
தழிக்கொண்ட குருதி வேலை
தாவுவான் றனிப்பே ரண்டம்
கிழித்தது கிழித்த தென்னு
நாணுரு மேறு கேட்டான்
அழித்தொழி காலத் தார்க்கு
மார்கலிக் கிரட்டி யார்த்தான்.

சுழித்துஎறி ஊழிக் காலின்
துருவினன் தொடரும் தோன்றல்,
தழிக்கொண்ட குருதி வேலை
தாவுவான், ‘ தனிப்பேர் அண்டம்’
கிழித்தது, கிழித்தது’ என்னும்
நாண்உறும் ஏறு கேட்டான் ;
அழித்து ஒழிகாலத்து ஆர்க்கும்
ஆர்கலிக்கு இரட்டி ஆர்த்தான்.

பொ :- (எல்லாப் பொருள்களையும்) சுழற்றி வீசும் யுகாந்த காலத்துப் பெருங்காற்றுப்போல யாண்டும் ஊடுருவியவனைப் (இலக்குவனைத்) தேடிச்செல்லும் பெரியோனாகிய அநுமன், (நாற்புறத்தும்) வளைத்துக்கொண்டுள்ள குருதிநீர்க் கடலைத் தாவிக் கடந்து செல்பவன், ‘தனித்துள்ள இப்பெரிய அண்டத்தைப் பிளந்தது பிளந்தது’ என்னும்படி தோன்றிய வில் நாணின் ஒலியாகிய பெரிய

இடியோசையைக் கேட்டவனுகி, (எல்லாப் பொருள்களையும்) அழித்தொழிக்கின்ற ஊழி முடிவு நாளில் ஆரவாரித்து (ப் பொங்கி) எழும் கடலோசையினும் இருமடங்கு ஆரவாரித்தான்.

கு:- ஊழிக்காலின் என்புழி, இன் உவம வுருபு. ஊழிக்கால் யுகமுடிவில் வீசும் பெருங்காற்று. 'துருவினன் தொடரும் தோன்றல்' என்றது, இலக்குவன் எங்கேயுள்ளான் என்று போர்க்களத்தின் உள்ளே புகுந்து விரைந்து தேடிச் செல்வோனுகிய அனுமனை. தோன்றல், தாவுவான், நாண் உருமேறு கேட்டான், ஆர்கலிக்கு இரட்டி ஆர்த்தான் என இயையும். ஆர்கலி—கடல். (152)

## தன்னையடைந்து வணங்கிய அனுமனை இலக்குவன் தழுவிக் கொண்டு, வானர வீரர்களைக் குறித்து வினவுதல்

8725. ஆர்த்தபே ரமலை கேளா
வணுகின னனும னெல்லார்
வார்த்தையுங் கேட்க லாகு
மென்றக மகிழ்ந்து வள்ளல்
பார்ப்பதன் முன்னம் வந்து
பணிந்தனன் விசயப் பாவை
தூர்த்தனை யிளைய வீரன்
றழுவின னினைய சொன்னுன்.

ஆர்த்த பேர் அமலை கேளா,
'அணுகினன் அனுமன்; எல்லார்
வார்த்தையும் கேட்கல் ஆகும்'
என்று அகம் மகிழ்ந்து, வள்ளல்
பார்ப்பதன் முன்னம் வந்து
பணிந்தனன்; விசயப் பாவை
தூர்த்தனை இளைய வீரன்
தழுவினன் இனைய சொன்னுன்.

பொ:- ஆரவாரித்த (அனுமனது) பேராரவாரத்தை கேட்டு 'அனுமன் (இங்கு) வந்து சேர்ந்தான். (அவன் வாயிலாக) எல்லோருடைய செய்திகளையும் கேட்டறியலாம்' என்று தன்னுள்ளத்தே மகிழ்ச்சியுற்று, வள்ளன்மை யுடையோனுகிய இலக்குவன், (அவனைத் திரும்பிப்) பார்ப்பதற்கு முன்னே, (இலக்குவனை) அடைந்து வணங்கினுன் (அனுமன்). இளையோனுகிய வீரன்,

வெற்றி மங்கையைக்கூடி மகிழ்ந்தவனுகிய அனுமனை (ஆரத்) தழுவிக் கொண்டவனுய் (ப் பின்வருமாறு) இவ் வார்த்தைகளைக் கூறினுன்.

கு :- வள்ளல், கேளா, மகிழந்து, பார்ப்பதன் முன்னம் (அனுமன்) வந்து (அவனே) வணங்கினன் என்க. ஈண்டு வள்ளல் என்றது, வள்ளன்மைக் குணமுடையோனுகிய இலக்குவனை. ' விசயப் பாவை தூர்த்தன்' என்றது, அனுமனை. அனுமன் தான் பிரமசரிய ஒழுக்கமுடையவனுக இருந்தும் அகம்பன் என்னும் கொடிய அரக்கனைக் கொன்று வெற்றித் திருவாகிய மங்கையைக் கூடினமையால் தூர்த்தன் (காமுகன்) என்ற பெயர்க்கும் உரியவனு யினுன் என்பது ஒரு நயம். இளைய வீரன்—இலக்குவன். இளைய வீரன், விசயப்பாவை தூர்த்தனைத் தழுவினன். இனைய சொன்னுன் என முடிக்க. அவன் சொல்லியவை அடுத்த செய்யுளில் விரித் துரைக்கப்படும். (153)

8726· அரிகுல வீர ரைய
யாண்டைய ரருக்கன் மைந்தன்
பிரிவுனைச் செய்த தெவ்வா
றங்கதன் பிரிந்த தெங்கே
விரியிருட் பரவைச் சேனை
வெள்ளத்து விளைந்த தொன்றும்
தெரிகிலெ னுரைத்தி யென்ருன்
சென்னிமேற் கையன் சொல்வான்.

' அரிகுல வீரர், ஐய.' யாண்டையர்?
அருக்கன் மைந்தன்
பிரிவுஉனைச் செய்தது எவ்வாறு?
அங்கதன் பிரிந்தது எங்கே?
விரிஇருள் பரவைச்சேனை
வெள்ளத்து விளைந்தது ஒன்றும்
தெரிகிலன் உரைத்தி' என்ருன்;
சென்னிமேல் கையன் சொல்வான்.

பொ :- ' வியக்கத்தக்க வீரனே! வானர குலத்து வீரர்கள் எவ் விடத்தே உள்ளார்கள்? சூரியன் புதல்வனுகிய சுக்கிரீவன் உன்னை விட்டுப் பிரிந்து சென்றது எவ்வாறு? அங்கதன் பிரிந்தது எவ் விடத்தே? செறிந்து பரவிய இளிதே கடல்போலும் சேனைப் பரப்ரு

பிலே நிகழ்ந்த செயல் எதனையும் அறிந்திலேன். (இவற்றை விளங்கச்) சொல்வாயாக' என வினவினன் (இலக்குவன்). (அது கேட்ட அனுமன்) தலைமேற் கை குவித்தவனாகி (ப்பின் வருமாறு மறுமொழி) கூறுவானாயினன்.

கு :- அரிகுல வீரர்—வானர குலத்தில் தோன்றிய வீரர்கள். என்றான் என்றது, இலக்குவனை. சொன்னான் என்றது, அனுமனை. அனுமன் கூறியன அடுத்துவரும் இரண்டு செய்யுட்களில் விரித் துரைக்கப்படும். (154)

**வானர வீரர்களைப்பற்றித் தான் ஒன்றும் அறிந்திலாமையை அனுமன் தெரிவித்தல்**

8727. போயினர் போய வாறு
போயின தன்றிப் போரில்
ஆயின ராய தொன்று
மறிந்திலெ னைய யாரும்
மேயினர் மேய போதே
தெரிவது விளைந்த தென்றான்
தாயினன் வேலை யோடு
மயிந்திரப் பரவை தன்னை.

'போயினர் போய வாறு
போயினது அன்றி, போரில்
ஆயினர் ஆயது ஒன்றும்
அறிந்திலென், ஐய! யாரும்
மேயினர் மேய போதே
தெரிவது, விளைந்தது' என்றான்—
தாயினன் வேலை யோடும்
அயிந்திரப் பரவை தன்னை.

பொ :- (கரிய) நீர்க்கடலுடன் ஐந்திர வியாகரணமாகிய நூற் கடலையும் ஒருங்கே கடந்தவனாகிய அனுமன், (இலக்குவனை நோக்கி) 'தலைவனே! போர்மேற் சென்றவர்களாகிய அவர்கள் (தம்மை எதிர்த்த பகைவர்களைத் தொடர்ந்து) போயினதைத் தவிரப் போரில் ஈடுபட்டோராகிய அவர்களிடையே நிகழ்ந்த செய்தி எதுவும் அறியப் பெற்றிலேன். (போரிற்) பொருந்தியவர்களாகிய அவர்கள் யாவரும் (இங்கு மீண்டு) வந்த போதுதான் (அங்கு) நிகழ்ந்த செய்தி இது வெனத் தெரியும்' என்று கூறினான்.

கு :- ‘பரவையோடும் அயிரந்திப் பரவை தன்னைத் தாயினுன்’ என்றது, கரிய நீர்க் கடலையும் ஐந்திர வியாகரணமாகிய நூற்கடலையும் ஒருசேரக் கடந்தவனுகிய அனுமனை; உடல் வன்மையிலும் அறிவு வன்மையிலும் ஒப்பச் சிறந்தவன் என்றபடி. அனுமன் கருங் கடலைத் தாவிக் கடந்த செய்தி, முன்னர்க் கடல்தாவு படலத்தில் விரித்துரைக்கப்பட்டது. அயிந்திரம் என்பது, இந்திரனுற் செய்யப் பட்ட வடமொழி இலக்கண நூல். இதனைச் சூரியன் அறிவுறுத்தக் கசடறக் கற்றுணர்ந்தவன் அனுமன் ஆதலால் ‘அயிந்திரப் பரவை தன்னைத் தாயினுன்’ என அவனைச் சிறப்பித்தார் ஆசிரியர். பரவை —கடல். தாவுதல்—கடந்து கரைகாணல்; ஐயந்திரக் கற்றுணர்தல்.

(155)

**போர்க்களத்தில் ஒருவரையொருவர் அறியவியலாத நிலையில் உளதாய மயக்கத்தை யொழித்ததற்கு அனுமன் உபாயங் கூறுதல்**

8728. மந்திர முளதா லைய
வுணர்வுறு மாலைத் தஃதுன்
சிந்தையி னுணர்ந்து செய்யற்
பாற்றெனிற் செய்தி தெவ்வர்
தந்திர மிதனைத் தெய்வப்
படைகளாற் சமைப்பி னல்லால்
எந்தைநின் னடியர் யாரு
மெய்தவர் நின்னை யென்றான்.

‘மந்திரம் உளதால், ஐய!
உணர்வுறும் மாலைத்து; அஃது, உன்
சிந்தையின் உணர்ந்து, செய்யற்
பாற்றுஎனின் செய்தி; தெவ்வர்
தந்திரம் இதனைத் தெய்வப்
படைகளாற் சமைப்பின் அல்லால்
எந்தை! நின் அடியர் யாரும்
எய்தலர், நின்னை’ என்றான்.

பொ :- ‘ஐயனே! (பகைவரது மாயையாற் பொருந்திய திகைப்பு நீங்கி) நல்லுணர்வினை அடையச்செய்யும் இயல்பினதாகிய உபாயம் ஒன்றுளது. அதனை நின் மனத்தின் கண்ணே

ஆராய்ந்து தெளிந்து (அஃது இப்பொழுது) செய்யத்தக்கதாயின் அதனைச் செய்வாயாக, பகைவரது சூழ்ச்சித் திறமாகிய இம் மயக்கத்தினை தெய்வத்தன்மை வாய்ந்த அத்திரங்களால் அழித்துப் போக்கினலன்றி, எந்தையே நின்னடித் தொண்டராகிய வானர வீரர்கள் எவரும் (மயக்கந்தெளிந்து) நின்னை வந்தடையும் ஆற்றலுடையாரல்லர்' என (அனுமன் இலக்குவனுக்கு)க் கூறினன்.

கு:- மந்திரம்—உபாயம். மாலை—இயல்பு, தெவ்வர்—பகைவர் தந்திரம்—சூழ்ச்சி. சமைத்தல்—அழித்தல். *(156)*

## இலக்குவன் இராமபிரானை நினைந்து வாழ்த்தி அரக்கர்மேற் சிவன்படை தொடுத்தல்

8729. அன்னது புரிவெ னென்னு
வாயிர நாமத் தண்ணல்
தன்னையே வணங்கி வாழ்த்திச்
சரங்களைத் தெரிந்து தாங்கிப்
பொன்மலை வில்லி னுன்றன்
படைக்கலம் பொருந்தப் பற்றி
மின்னெயிற் றரக்கர் தம்மே
லேவினுன் வில்லின் செல்வன்.

'அன்னது புரிவன்' என்று,
ஆயிர நாமத்து அண்ணல்—
தன்னையே வணங்கி வாழ்த்தி,
சரங்களைத் தெரிந்து தாங்கி,
பொன்மலை வில்லி னுன்தன்
படைக்கலம் பொருந்தப் பற்றி,
மின்எயிற்று அரக்கர் தம்மேல்
ஏவினுன்—வில்லின் செல்வன்.

பொ;- விற்றொழில் வன்மையாகிய செல்வத்தையுடைய இலக்குவன், (நீ கூறிய) 'அதனையே செய்வேன்' என (அனுமனுக்கு)ச் சொல்லி, ஆயிரம் திருப்பெயர்களையுடைய இறைவனாகிய இராமபிரானை வணங்கி வாழ்த்தி, அம்புகளைத் தெரிந்தெடுத்து, பொன்மயமான மேருமலையை வில்லாகக் கொண்ட சிவபெருமானது படைக்கலத்தினைப் பொருந்தச்செய்து மின்னலையொத்து ஒளிரும் பற்களையுடைய அரக்கர்மீது செலுத்தினன்.

கு :- அநுமன் கூறியதனை உளங்கொண்ட இலக்குவன் அரக்கர் மீது தெய்வப் படைக்கலத்தை ஏவத்துணிந்து, இராமபிரானை மனத்தால் வணங்கி வாழ்த்தி அம்பினைத் தெரிந்தெடுத்து அதன்கண் சிவபெருமானது பாசுபதாத்திரத்தினைப் பொருந்தச்செய்து பகைவர்மீது செலுத்தினான் என்பதாம். வில்லின் செல்வன், 'அன்னது புரிவென்' என்னா, வணங்கி வாழ்த்தி, தெரிந்து தாங்கி, பற்றி ஏவினான் என முடிக்க. வில்லின் செல்வன் என்றது, இலக்குவனை. ஆயிரநாமத்து அண்ணல் என்றது இராமனை. பொன்மலை வில்லினான்—மேருமலையை வில்லாகக்கொண்ட சிவபெருமான். அம் முதல்வனது படைக்கலமாவது பாசுபதாத்திரம். (157)

## இலக்குவன் ஏவிய பாசுபதப் படையினால் அரக்கர் சேனையழிய இருள் நீங்குதல்கண்டு தேவர்கள் மயக்கந்தீர்தல்

8730. முக்கணான் படையை மூட்டி
விடுதலு மூங்கிற் காட்டிற்
புக்கதோ ரூழித் தீயிற்
புறத்தினோ ருருவும் போகா
தக்கணத் தெரிந்து வீழ்ந்த
தரக்கர்தஞ் சேனை யாழித்
திக்கெலா மிருளுந் தீர்ந்த
தேவரு மயக்கந் தீர்ந்தார்.

முக்கணான் படையை மூட்டி
விடுதலும், மூங்கில் காட்டில்
புக்கது ஓர்ஊழித் தீயின்,
புறத்தின் ஓர்உருவும் போகாது
அக்கணத்து எரிந்து வீழ்ந்தது,
அரக்கர்தம் சேனை; ஆழித்
திக்குஎலாம் இருளும் தீர்ந்த.
தேவரும் மயக்கம் தீர்ந்தார்.

பொ :- (இலக்குவன்) மூன்று கண்களையுடையவனாகிய இறைவனது படைக்கலத்தைத் தொடுத்துச் செலுத்திய அளவில், மூங்கிற் காட்டிற் பற்றியதொரு ஊழிக்காலத் தீயினைப் போன்று புறத்தே ஒரு பொருளும் தப்பிப் போகாதவாறு அரக்கர் சேனை அப்பொழுதே

எரிந்து விழ்ந்தது. கடலை எல்லையாகவுடைய திசைகள் யாவும் இருள் நீங்கின. தேவர்களும் மன மயக்கந் தீர்ந்து உணர்வு பெற்றார்கள்.

கு :- முக்கணன் என்பது, மூன்று கண்களையுடைமையாற் பெற்ற காரணப் பெயர்; அஃது, மூன்று கண்களையுடைய விநாயகர், வீரபத்திரர் முதலிய ஏனைய தெய்வங்களைக் குறிக்காமல் இடுகுறி யளவாய் நின்று சிவபெருமானையே குறித்தலின் காரணவிடுகுறிப் பெயரெனப்படும். மூட்டி விடுதல்—இணைத்துச் செலுத்தல். வான கத்தாராகிய தேவரும் மயக்கந் தீர்ந்தார் எனவே மண்ணில் உள்ள வானர வீரர்கள் மயக்கந் தீர்ந்து உணர்வு பெற்றமை தானே பெறப் படும். (158)

## மாயை நீங்கினமையால் வானர வீரர்கள் இலக்குவனை வந்தடைதல்

8731. தேவர்தம் படையை விட்டா
னென்பது சிந்தை செய்யா
மாபெரு மாயை நீங்க
மகோதரன் மறையப் போனான்
ஏவரும் பிரிந்தா ரெல்லா
மினமழை யிரிய வார்த்துக்
கோவிளங் களிற்றை வந்து
கூடினா ராடல் கொண்டார்.

தேவர்தம் படையை விட்டான்
என்பது சிந்தை செய்யா,
மாபெரும் மாயை நீங்க
மகோதரன் மறையப் போனான்;
ஏவரும் பிரிந்தார் எல்லாம்,
இனமழை இரிய ஆர்த்து,
கோஇளங் களிற்றை வந்து
கூடினார்; ஆடல் கொண்டார்.

பொ :- ('இலக்குவன்) தேவர்க்குரிய (ஆற்றல்மிக்க) படைக் கலத்தைச் செலுத்தினான்' என்பதனை மனத்தில் எண்ணி, மிகப் பெரிய தனது மாயை நீங்கியொழிய, மகோதரன் என்னும் அரக்கன்

(அங்கு நில்லாது) மறைந்து சென்றான். (முன் தனித்தனியே) பிரிந்து போர்செய்த வானர வீரர்கள் யாவரும் எல்லாமாக மேகக் கூட்டங்கள் அஞ்சியோடுமாறு ஆரவாரித்துத் தலைமையுடைய இளைய ஆண்யானை போல்வானாகிய இலக்குவனை வந்தடைந்து (மகிழ்ச்சி மிகுதியாற்) கூத்தாடுதலைப் பொருந்தினார்கள்.

கு :- பிரிந்தார் எவரும், எல்லாம் (ஆக) ஆர்த்து வந்து கூடினார் ஆடல் கொண்டார் என இயையும். பிரிந்தார் என்றது, முன் தனித்தனியே பிரிந்து சென்று அரக்கரோடு பொருது நின்ற சுக்கிரீவன், அங்கதன், நீலன் முதலிய வானரத் தலைவர்களை; கோவிளங் களிறு—இளங்கோவாகிய களிறு என்க. இளங்கோ - அரசகுமாரனாகிய இலக்குவன். (159)

8732. யாவர்க்குந் தீதி லாமை
கண்டுகண், டுவகை ஏற,
தேவர்க்குந் தேவன் தம்பி
திருமனத் தையந் தீர்ந்தான்.
காவற்போர்க் குரக்குச் சேனை
கல்லெனக் கலந்து புல்ல,
பூவர்க்க மிமையோர் தூவப்
பொலிந்தனன்; றூதர் போனார்.

யாவர்க்கும் தீது இலாமை
கண்டுகண்டு, உவகை ஏற,
தேவர்க்கும் தேவன் தம்பி
திருமனத்து ஐயம் தீர்ந்தான்;
காவல்போர்க் குரக்குச் சேனை
கல்எனக் கலந்து புல்ல
பூவர்க்கம் இமையோர் தூவப்
பொலிந்தனர்; தூதர் போனார்.

பொ :- தேவர்கட்கெல்லாம் தேவனாகிய இராமனுடைய தம்பி இலக்குவன், (தன் சேனையிலுள்ளார்) யாவர்க்கும் எத்தகைய இடையூறும் நேராத தன்மையினைக் கண்டு உள்ளத்தே மகிழ்ச்சி பெருகித் தோன்றத் (தான் முன்கொண்ட) சந்தேகந் தீர்ந்தவனாகி (த் தனது) காவலிற் புரியும் போர்த்தொழிலையுடைய வானர சேனைகள் கல்லென்ற ஆரவாரத்துடன் (தன்னைச்) சேர்ந்து தழுவி நிற்கவும், வான

வர்கள் இன மலர்களை (மழைபோற்) சொரிந்து வாழ்த்தவும் (வெற்றிப்)பொலிவுடன் விளங்கினுன். தூதர்கள் (அச் செய்தியைச்சொல்ல, இராவணனிடம்) சென்ருர்கள்.

கு :- தேவர்க்குந் தேவன்—தேவதேவன் எனப் போற்றப் பெறுந் திருமால்; என்றது, அவனது அமிசமாகிய இராமபிரானை. தம்பி என்றது, இலக்குவனை. தம்பி, கண்டு கண்டு ஐயம் தீர்ந்தானுகி, குரக்குச் சேனை கலந்து புல்ல, இமையோர் பூவர்க்கம் தூவப் பொலிந்தனன் என முடிக்க. தூதர் என்றது, இராவணனுடைய தூதர்களை. (160)

### அரக்கராகிய தூதர்கள் சென்று இராவணனுக்கும் இந்திரசித்திற்கும் போர்க்களத்தில் நிகழ்ந்தவற்றை எடுத்துரைத்தல்

8733. இலங்கையர் கோனை யெய்தி
யெய்திய துரைத்தார் நீவிர்
விலங்கினிர் போலும் வெள்ள
நூற்றையோர் வில்லால் வேழக்
குலங்களி னேடுங் கொல்லக்
கூடுமோ வென்னக் கொன்றை
அலங்கலான் படையி னென்ரு
ரன்னதே லாகு மென்ருன்.

இலங்கையர் கோனை எய்தி,
எய்தியது உரைத்தார்; 'நீவிர்
விலங்கினிர் போலும்; வெள்ளம்
நூற்றை ஒர்வில்லால், வேழக்
குலங்களினேடும் கொல்லக்
கூடுமோ? என்ன, 'கொன்றை
அலங்கலான் படையின்' என்ருர்;
'அன்னதேல், ஆகும்' என்ருன்.

பொ :- (சென்ற தூதர்கள்) இலங்கையர் வேந்தனுகிய இராவணனை அடைந்து (போர்க்களத்தில்) நிகழ்ந்த செய்தியை எடுத்துரைத்தார்கள். (அதுகேட்ட இராவணன், அவர்களை நோக்கி) நீங்கள் (அஞ்சி) விலகித் திரும்பினீர் போலும்? யானைக் கூட்டத்

துடன் நூறுவெள்ளம் சேனைகளையும் ஒரு வில்லாலே கொன்ற ழித்தல் இயலுமோ?' என வினவ, 'கொன்றை மாலையையணிந்த சிவபெருமானது படைக்கலமாகிய பாசுபதத்தால் (இவ்வாறு நம் சேனை அழிவுற்றது) என்று விடை பகர்ந்தார்கள் (தூதர்கள்). (அதனைக்கேட்ட இராவணன்) 'சிவனது படைக்கலமாகிய) அது வாயின் அவ்வாறு அழிக்கவல்லதே என உடன்பட்டுரைத்தான்.

கு:- தூதர் வார்த்தையினைக் கேட்ட இராவணன், இலக்கு வனது வில் ஒன்றினால் தன்னுடைய நூறுவெள்ளஞ் சேனைகளும் அழிந்தது என்னும் செய்தியை நம்ப முடியாதவனாகித் தூதர்களைப் பார்த்து 'நீங்கள் இலக்குவனது அம்புக்குப் பயந்து அங்கு நில்லாது இங்குத் திரும்பி ஓடிவந்துவிட்டீர்களோ? நூறுவெள்ளம் சேனை களும் இலக்குவனது வில் ஒன்றினால் அழிந்துபட்டது எவ்வாறு?' என வினவ, அதுகேட்ட தூதர்கள், 'இலக்குவன் வில்லில் தொடுத்து ஏவிய படைக்கலம் சிவபெருமானது பாசுபதாத்திரம்' என்று மறுமொழிகூற, அதன் ஆற்றலையுணர்ந்த இராவணன், 'அதுவாயின் நூறுவெள்ளம் சேனைகளையும் ஒருசேர அழிக்க வல்லதே' எனக் கூறித் தூதர் வார்த்தையினை ஏற்றுக்கொண்டான் என்பதாம். (161)

8734. தோடவி ழலங்க லென்சேய்க்
குணர்த்துமி னென்னச் சொன்ன
னோடினர் சாரர் வல்லை
யுணர்த்தினர் துணுக்க மெய்தா
ஆடவர் திலகன் யாண்டை
யானிக லனும னேனோர்
வீடணன் யாங்க ணுள்ளா
ருணர்த்துமின் விரைவி னென்றான்.

'தோடுஅவிழ் அலங்கல் என்சேய்க்கு
உணர்த்துமின்' என்னச் சொன்னான்;
ஓடினர், சாரர் வல்லை
உணர்த்தினர்; துணுக்கம் எய்தா,
ஆடவர் திலகன், 'யாண்டையான்
இகல் அனுமன்? ஏனோர்,
வீடணன் யாங்கண் உள்ளார்?
உணர்த்துமின் விரைவின்' என்றான்.

பொ :- 'இதழ்கள் முறுக்கவிழ்ந்து மலர்ந்த மலர்களாகிய மாலையினையணிந்த என் மைந்தன் இந்திரசித்துக்கு இச்செய்தியை அறிவிப்பீராக' என(இராவணன், தூதர்களை நோக்கிச்) சொன்னான். (அப் பணியினை மேற்கொண்டு) ஓடியவர்களாகிய தூதர்கள் (அச் செய்தியை, இந்திரசித்துக்கு) விரைந்து தெரிவித்தார்கள். ஆண்மையிற் சிறந்த வீரர்கட்கெல்லாம் திலகம்போற் சிறந்தவனாகிய இந்திரசித்து, மனந்துணுக்குற்று 'வன்மைமிக்க அனுமன் எவ்விடத்துள்ளான்? விடணன் முதலிய ஏனையோர்கள் எவ்விடங்களில் உள்ளார்கள்? விரைந்து தெரிவிப்பீராக' என(த் தூதரை நோக்கி) வினவினான்.

கு :- தோடு - இதழ். அவிழ்தல் - முறுக்கவிழ்ந்து மலர்தல். அலங்கல்-மாலை. 'என்சேய்க்கு உணர்த்துமின்' என்பது இராவணன் தூதர்களை நோக்கிக் கூறியது. சாரர்-தூதர். ஆடவர் திலகன் என்றது ஆண்மைமிக்க வீரர் எல்லாருள்ளும் சிறந்தோனாகிய இந்திரசித்தினை. இகல் அனுமன் யாண்டையான்? வீடணன், ஏனோர் யாங்கண் உள்ளார்? விரைவின் உணர்ந்துமின்' என்பது, இந்திரசித்து தூதர்களை நோக்கி வினவியது. (162)

8735. வந்தில னிராமன் வேறோர்
மலையுளா னுந்தை மாயம்
தந்தன தீர்ப்பான் போனா
னுண்பன தாழ்க்கத் தாழா
தெந்தையீ தியன்ற தென்றார்
மகோதரன் யாண்டை யென்றான்
அந்தரத் திடையா னென்ன
விராவணி யழகி தென்றான்.

'வந்திலன் இராமன்; வேறுஓர்
மலைஉளான்; உந்தை மாயம்
தந்தன தீர்ப்பான் போனான்,
உண்பன தாழ்க்க தாழாது;
எந்தை! ஈது இயன்றது' என்றார்;
'மகோதரன் யாண்டை?' என்றான்;
'அந்தரத் திடையான்' என்ன,
இராவணி 'அழகிது' என்றான்.

பொ:- இராமன் (போர்நிகழுமிடத்திற்கு) வந்தானல்லன்(அவன்) வேறொரு மலையின்கண்ணே தங்கியுள்ளான்; உன் தந்தை (இராவணன்) மாயத்தாற் செய்வனவாகிய திங்குகளை யெல்லாம் (முன்னறிந்து) விலக்குபவனாகிய வீடணன், (வானர சேனைகள்) உண்ணுதற்குரியனவாகிய உணவுகள் வரத்தாழ்த்தமையால் (அவற்றைத்) தாமதமின்றிக் கொணர்தற்கு (ப் புறத்தே) சென்றுள்ளான், எந்தையே! இதுவே (அங்கு) நிகழ்ந்த செய்தியாகும்' என்று (தூதர்கள் கூறினர். அதனைக் கேட்ட இந்திரசித்து) 'மகோதரன் எவ்விடத்துள்ளான்?' என வினவ, 'அவன் ஆகாயத்தின்கண்ணே மறைந்தனன்' என(த் தூதர்') கூற இராவணன் மைந்தனாகிய இந்திரசித்து, '(மகோதரன் செயல்) அழகாயிருக்கிறது' என (இகழ்ந்து) கூறினான்.

கு:- உந்தை என்றது, கேட்போனாகிய இந்திரசித்தின் தந்தையை. 'உந்தை மாயம் தந்தன தீர்ப்பான்' என்றது, உன் தந்தையாகிய இராவணன் இராம இலக்குவர் திறத்து வஞ்சனையாற் செய்யும் தீங்குகளையெல்லாம் முன்னறிந்து தீர்ப்பதனைக் கடமையாகக் கொண்டுள்ள உன் சிறிய தந்தையாகிய வீடணன் எனக் குறித்தவாறு, தீர்ப்பான், வினையாலணையும் பெயர். தீர்ப்பான், உண்பன தாழ்க்க, தாழாது போனான் என இயைத்துப் பொருள் கொள்க. தாழ்க்க-தாமதித்தலால்; செயவென்னும் எச்சம் காரணப் பொருளில் வந்தது. இராவணி என்பது, இராவணன் மைந்தன் என்ற பொருளில் இந்திரசித்திற்கு இந்நூலாசிரியர் படைத்து வழங்கிய பெயராகும். அந்தரம்-வானம். உண்ணுகின்றவன் உணவிலுள்ள கற்களைக் கடித்தவண்ணம், சமைத்தவனை நோக்கி, 'நன்கு அட்டாய்' என்புழிபோல், இந்திரசித்து 'அழகிற்று' எனக்கூறிய இம்மொழியும் தன்னுடன் சென்ற சேனைகளெல்லாம் அழிந்துபடவும் தான்மட்டும் ஆகாயத்தில் மறைந்து தப்பிய மகோதரனது செயலை இகழ்ந்துரைக்கும் குறிப்பினதாகும். (163)

**'பிரமாத்திரத்தினைப் பகைவர்மேல் ஏவுதற்கு இதுவே ஏற்றகாலம்' என எண்ணிய இந்திரசித்து முறைப்படி வேள்வியினைச் செய்தல்**

**8736. கால மீதெனக் கருதிய**
*** விராவணன் காதல்**
**ஆல மாமர மொன்றினை**
**விரைவினி லடைந்தான்**

மூல வேள்விக்கு வேண்டுவ
கலப்பைகண் முறையால்
கூல நீங்கிய விராக்கதப்
பூசுரர் கொணர்ந்தார்.

'காலம் ஈது'எனக் கருதிய
இராவணன் காதல்,
ஆல மாமரம் ஒன்றினை
விரைவினில் அடைந்தான்;
மூல வேள்விக்கு வேண்டுவ
கலப்பைகள் முறையால்
கூலம் நீங்கிய இராக்கதப்
பூசுரர் கொணர்ந்தார்.

பொ :- (தான் பிரமாத்திரம் விடுவதற்குரிய) காலம் இதுவே என எண்ணிய இராவணன் மகனாகிய இந்திரசித்து, பெரியதோர் ஆலமரத்தின் அடியிடத்தை விரைவாகச் சென்றடைந்தான், ஒழுக்க நெறியைவிட்டு விலகிய அரக்கர்குல வேதியர்கள், முதன்மையுடைய யாகத்திற்கு இன்றியமையாது வேண்டப்படும் சாதனங்களை முறைமைப்படக் கொண்டு சேர்த்தார்கள்.

கு :- இராவணன் காதல் - இராவணன் மகன்; இந்திரசித்து. அன்பென்னும் பொருளுடைய காதல் என்னும் சொல், இங்கு ஆகு பெயராய், அன்பு செய்தற்குரிய மகன் என்னும் பொருளை யுணர்த்தி நின்றது. கூலம் நீங்கிய இராக்கதப் பூசுரர், மூல வேள்விக்கு வேண்டுவ கலப்பைகள் முறையாற் கொணர்ந்தார் என இயையும். கூலம்-ஒழுக்கம்; இராக்கதப் பூசுரர் என்றது, வேதங்களை முறைப்படஓதி அரக்கர் குலத்தினருக்கு ஆக்கங் கருதி வேள்வித் தொழில் புரியும் வேதியர்களை இவர்கள் வேதங்களையுணர்ந்தாராயினும் பார்ப்பான் பிறப்பு, ஒழுக்கம் குன்றக்கெடும் (திருக்குறள்) என்றவாறு உயிரினும் சிறந்த ஒழுக்கத்தை விட்டமையின், இரக்கமற்ற இழிந்த பிறப்பினராயினர் என்பார், 'கூலம் நீங்கிய இராக்கதப் பூசுரர்' எனக் குறித்தார். கலப்பைகள்-வேள்வி செய்தற்கு வேண்டப் படும் சுருக்கு, சுருவம் முதலிய சாதனங்கள். (164)

8737. அம்பி னூற்பெருஞ் சமிதைக
ளமைத்தன னனலிற்
றும்பை மாமலர் தூவினன்
காரியெட் சொரிந்தான்

**கொம்பு பல்லொடு கரியவெள்**
**ளாட்டிருங் குருதி**
**வெம்பு வெந்தசை முறையினிட்**
**டெண்ணெயால் வேட்டான்.**

அம்பினல் பெருஞ் சமிதைகள்
அமைத்தனன்; அனலில்
தும்பை மாமலர் தூவினன்;
காரிளள் சொரிந்தான்;
கொம்பு பல்லொடு, கரிய
வெள்ளாட்டு இருங்குருதி,
வெம்பு வெந்தசை முறையின் இட்டு,
எண்ணெயால் வேட்டான்.

பொ :- (இந்திரசித்து) வேள்விக்குரிய சமித்துக்களை அம்பினாலேயே (துணித்து) அமைத்துக்கொண்டான்; வேள்வித் தீயில் பெருமைவாய்ந்த தும்பை மலர்களைத் தூவினான்; கருமை நிறமுடைய எள்ளினைச் சொரிந்தான்; கொம்பு, பல் இவற்றுடன் கூடிய கருமை நிறம்வாய்ந்த வெள்ளாட்டின் பெருகிய இரத்தத்தையும் வேகக்கூடிய வெவ்விய தசையினையும் முறையாக இட்டு எள்ளின் நெய்யைச் சொரிந்து ஓமஞ் செய்தான்.

கு :- இந்திரசித்து, தன் பகைவரையழித்தற்பொருட்டுச் செய்த யாகம், உலகம் நலம்பெறுதற்பொருட்டுத் தூய நற்பொருள்களைத் துணையாகக்கொண்டு ஒழுக்கம்மிக்க அந்தணர்களாற் செய்யப்படும் நல்வேள்விக்குமுற்றிலும் மாறுபட அமைந்த தன்மையினை ஆசிரியர் இச் செய்யுளிற் குறித்துள்ளமை கூர்ந்து நோக்கத்தக்கதாகும். (165)

## வேள்வி முற்றிய இந்திரசித்து பிரமாத்திரத்துடன் வானிற்சென்று மறைந்திருத்தல்

**8738. வலஞ்சு ழித்துவந் தெழுந்தெரி**
**நறுவெறி வயங்கி**
**நலஞ்சு ரந்தன பெருங்குறி**
**முறைமையி னல்கக்**

குலஞ்சு ரந்தெழு கொடுமையான்
முறையினிற் கொண்டே
நிலஞ்சு ரந்தெழு வென்றியென்
றும்பரி னிமிர்ந்தான்.

வலம்சுழித்து வந்து எழுந்து எரி.
நறுவெறி வயங்கி,
நலம் சுரந்தன பெருங்குறி
முறைமையின் நல்க,
குலம் சுரந்துஎழு கொடுமையான்,
முறையினின் கொண்டே,
'நிலம்சுரந்து எழும் வென்றி'
என்று உம்பரின் நிமிர்ந்தான்.

பொ :- (வேள்விக் குண்டத்தில் உள்ள) தீயானது நறுமணத்துடன் விளங்கி வலப்பக்கமாகச் சுழன்று வந்து மேலெழுந்து நன்மையை விளைப்பனவாகிய பெரிய அறிகுறிகளை முறைப்படி புலப்படுத்திக்காட்ட, (அரக்கர்) குலத்தில் ஊற்றெடுத்துப் பெருகும் கொடுமைகட்கெல்லாம் நிலைக்களமான இந்திரசித்து அம்முறையினை ஆதரவாகக் கொண்டு (நமக்குச்) 'செரு நிலத்தில் வெற்றி பெருகித் தோன்றும்' என்று விசும்பின்மேல் உயர்ந்து சென்றான்.

கு :- பகைவரை வென்றழித்தற் பொருட்டுக் கொடுமையுடைய வேள்வியினை இயற்றிய இந்திரசித்து, அவ் வேள்வியின்கண்ணே ஓமத்தீ வலஞ் சுழித்து எழுந்து நறுமணத்துடன் விளங்குதல் முதலிய நிகழ்ச்சிகளை நல்ல அறிகுறிகளாகக் கண்டு போரில் தனக்கு வெற்றியுண்டாதல் நிச்சயம் என்பதனை உறுதியாகத் தன் உள்ளத்திற் கொண்டவனாய், இலக்குவன்மேற் பிரமாத்திரத்தை விடுதற்கெண்ணி விசும்பின்மீது உயர்ந்தான் என்க. எரி, நறு வெறி மயங்கி, வலஞ் சுழித்து வந்து எழுந்து, நலஞ் சுரந்தன பெருங்குறி முறைமையின் நல்க என இயைத்துரைக்க. குலம் சுரந்து எழு கொடுமையான் என்றது இந்திரசித்தினை. 'நிலம் வென்றி சுரந்து எழும்' என்பது அவனது உட்கோள். (166)

8639. விசும்பு போயினன் மாயையின்
பெருமையான் மேலைப்
பசும்பொ னாட்டவர் நாட்டமு
முள்ளமும் படரா

அசும்பு விண்ணிடை யடங்கினன்
முனிவரு மறியார்
தசும்பு நுண்ணெடுங் கோளொடு
காலமுஞ் சார.

விசும்பு போயினன், மாயையின்
பெருமையான்; மேலைப்
பசும்பொன் நாட்டவர் நாட்டமும்
உள்ளமும் படரா,
அசும்பு விண்ணிடை அடங்கினன்;
முனிவரும் அறியார்;
தசும்பு நுண்நெடுங் கோளொடு
காலமும் சார.

பொ :- (யாவரையும் மயக்குந்தன்மையாகிய) மாயத்தின் மிகுதியை யுடையவனாகிய இந்திரசித்து (வானப் பெருவெளியில்) அசையுந் தன்மையனவாகிய நுண்ணிய நீண்ட கோள்களுடன், (வெற்றியைத் தரும்) காலமும் சேர ஆகாயத்திற் சென்றவனாகி, மேலேயுள்ள பசிய பொன்மயமான துறக்கவுலகத்தவராகிய தேவர்களுடைய கண்களும் உள்ளமும் (ஊடுருவிச்) செல்லவொண்ணாத நீர்த் திவலையையுடைய வானத்திடையிலே நுண்ணுருவுடையவனாய் ஒடுங்கினான்; (அவனது இருப்பினை) முனிவர்களும் அறிய முடியாதவராயினர்.

கு :- மாயையின் பெருமையான் என்றது, பெரிய மாயச் செய்கையையுடையவனாகிய இந்தரசித்தினை. மாயையின் பெருமையான், தசும்பு நுண் நெடுங்கோளொடும் காலமும் சார விசும்பு போயினன்; மேலைப் பசும்பொன் நாட்டவர் நாட்டமும் உள்ளமும் படரா அசும்பு விண்ணிடை அடங்கினன் எனவும், (அவனை) முனிவரும் அறியாராயினர் எனவும் இயைத்துரைக்க. மேலைப் பசும்பொன்னாடு என்றது மேலேயுள்ள துறக்கவுலகத்தை. பொன்னாட்டவர்-தேவர்கள். நாட்டம்-கண். படர்தல்-ஊடுருவிச் செல்லுதல். அசும்பு-நீர்த் திவலை. அடங்குதல்-ஒடுங்குதல். தசும்பு-ததும்பு; தகரத்திற்குச் சகரம் போலியாய் வந்தது; ததும்புதல்-அசைதல்; இயங்குதல். கோள்-கிரகம். காலம் என்றது, வெற்றிபெறுதற்குரிய நற்காலத்தை. (167)

## மகோதரன் மாயையினுல் இந்திரனுக வெள்ளை யானையின் மேல் அமர்ந்து போருக்கு வர, அது கண்டு வானரர் திகைப்புற்று வருந்துதல்

8740. அனைய னின்றன னவ்வழி
மகோ தர னறிந்தோர்
வினைய மெண்ணின னிந்திர
வேடத்தை மேவித்
துனைவ லத்தயி ராவதத்
தெருத்தின்மேற் ருேன்றி
முனைவர் வானவ ரவரொடும்
போர்செய மூண்டான்.

அனையன் நின்றனன்; அவ்வழி
மகோதரன் அறிந்து,ஓர்.
வினையம் எண்ணினன், இந்திர
வேடத்தை மேவி,
துனைவலத்து அயிரா வதத்து
எருத்தின்மேல் தோன்றி,
முனைவர் வானவர் அவரொடும்
போர்செய மூண்டான்.

பொ:- அத் தன்மையனுகிய இந்திரசித்து (விசும்பில் உருக் கரந்து) நின்ருன்; அவ்விடத்து மகோதரன் அதனையறிந்து ஒரு சூழ்ச்சிச் செயலை நிகழ்த்துதற்கு எண்ணியவனுய், இந்திரனது உருவத்தைத் தான் மேற்கொண்டு விரைவும் வன்மையும் உடைய வெள்ளை யானையின் பிடரின்மேல் அமர்ந்து முனிவர் தேவர் முதலியவர்களோடும் கூடி (இலக்குவன் முதலியவருடன்) போர் செய்தற்கு முற்பட்டான்.

கு:- அனையன்-அத் தன்மையன்; என்றது, தேவர் முனிவர் முதலியவர்களாலும் கண்டுகொள்ள முடியாத மாயத்தன்மையினையுடைய இந்திரசித்தினை. வினையம்-சூழ்ச்சிச் செயல். துனைவு-விரைவு. வலம்-வன்மை. ஐராபதம்-இந்திரனுக்குரிய ஊர்தியாகிய வெள்ளை யானை. முனைவர்-முனிவர். இந்திரசித்து நுண்ணிய உருவுடன் மேகத்தில் மறைந்து நிற்றலையறிந்த மகோதரன் தனது மாயையின் வன்மையால், இந்திரனது வடிவத்தை மேற்கொண்டு

வெள்ளை யானையின்மேல் அமர்ந்து முனிவர்களையும் தேவர்களையும் தனக்குத் துணையாகக்கொண்டு இலக்குவன் முதலியோருடன் போர்செய்ய முற்பட்டான் என்பதாம். (168)

8741. அரக்கர் மானிடர் குரங்கெனு
மவையெலா மல்லா
உருக்கள் யாவுள வுயிரினி
யுலகத்தி னுழல்வ
தருக்கு போர்க்குடன் வந்துள
வாமெனச் சமைத்தான்
வெருக்கொ ளப்பெருங் கவிப்படை
குலை ந்தது விலங்கி.

'அரக்கர் மானிடர் குரங்குஎனும்
அவைஎல்லாம் அல்லா
உருக்கள் யாவுள உயிர்இனி
உலகத்தின் உழல்வ,
தருக்கு போர்க்கு உடன்வந்து
ளவாம்'எனச் சமைத்தான்;
வெருக்கொளப் பெருங் கவிப்படை
குலைந்தது, விலங்கி.

பொ :- (தன் இனத்தவராகிய) அரக்கரும் (பகைவர் இனத்தவ ராகிய) மனிதரும் குரங்கும் ஆகிய அவையல்லாத உருவங்களை யுடையவாய் இவ்வுலகத்தில் திரிவனவாகிய உயிரினங்கள் யாவை யுள்ளன அவை எல்லாமும் இப்பொழுது (இலக்குவன் முதலாயினு ரொடு) செருக்கிச் செய்யும் போர்க்கு (த் துணைசெய்ய) உடன் வந் துள்ளன எனக் கண்டோர் கருதும்படி (மகோதரன் தன் மாயத் தால்) படைத்துக் காட்டினான். (அதுகண்டு) பெரிய வானர சேனை அச்சங் கொண்டமையால் (போரிற்) பின்வாங்கி நடுக்கமுற்றது.

கு :- அரக்கர்க்கும் மனிதர் வானரர்கட்கும் இடையே நிகழும் இப் போரில் அவ் விரு திறத்தார்க்கும் வேறுபட்ட உடம்பினையுடைய உயிரினங்களாக இவ் வுலகத்தில் திரிவனவாகிய பல்வேறுடம் புடைய உயிரினங்களையும் மகோதரன் தன் மாயையின் வல்லமை யால் தனக்குத் துணையாகப் படைத்துக் கொண்டு போர் செய்ய முற் பட்டபொழுது, அவற்றைக் கண்ட வானரசேனை அஞ்சி நடுங்கிப் பின்னிட்டது என்றவாறு. (169)

8742. கோடு நான்குடைப் பானிறக்
குன்றமேற் கொண்டான்
ஆட லிந்திர னல்லவர்
யாவரு மமரர்
சேடர் சிந்தனை முனிவர்க
ளமர்பொரச் சீறி
ஊடு வந்துற்ற தென்கொலோ
நிபமென வுலைந்தார்.

'கோடு நான்குடைப் பால்நிறக்
குன்றமேல் கொண்டான்
ஆடல் இந்திரன்; அல்லவர்
யாவரும் அமரர்,
சேடர், சிந்தனை முனிவர்கள்;
அமரர் பொரச்சீறி.
ஊடு வந்துஉற்றது என்கொலோ,
நிபம்?'என உலைந்தார்.

பொ :- 'நான்கு தந்தங்களையுடைய பால்போலும் வெண்ணிறம் வாய்ந்த மலையினையொத்த யானையினை ஊர்தியாகக்கொண்டு (அதன் மேல் ஏறிச்) செலுத்துபவன், போர்த் தொழிலில் வல்ல இந்திரன்; (அவனைச் சுற்றியுள்ள) ஏனையோர் தேவர்களும் சேடர்களும் (பரம் பொருளைத்) தியானித்தலையுடைய முனிவர்களும் (ஆவார்கள்). இவர்கள் அனைவரும் நம்முடன் இகல்கொண்டு) போரைச் செய்தற்கு வெகுண்டு (இப் போர்க்களத்தின்) இடையே வந்துசேர்ந்தது எக் காரணத்தினாலோ' என (வானரவீரர்கள் திகைப்புற்று) வருந்தினார்கள்.

கு :- 'விண்ணவர் வேந்தனாகிய இந்திரன் தேவர்களையும் முனிவர்களையும் துணையாகக் கொண்டு நம்மீது வெகுண்டு இவ்வாறு போர் செய்ய வருதற்குக் காரணமாக நாம் செய்த பிழை யாது?' என வானர வீரர்கள் திகைப்புற்று வருந்தினார்கள் என்பதாம். 'கோடு நான்குடைப் பால்நிறக் குன்றம்' என்றது, நான்கு தந்தங்களையுடைய ஐராவதம் என்னும் வெள்ளை யானையை. அமர் பொரச் சீறி ஊடு உற்றது நிபம் என்கொலோ என இயையும். நிபம்—காரணம்.
(170)

‘முனிவர், வானவர் முதலியோர் நம்முடன் போர்செய்ய வருவ தற்குக் காரணம் யாது ?’ என இலக்குவன் அனுமனை நோக்கி வினவுதல்

8743. அனுமன் வாண்முக நோக்கின
ளுழியை யகற்றித்
தனுவ லங்கொண்ட தாமரைக்
கண்ணவன் றம்பி
முனிவர் வானவர் முனிந்துவந்
தெய்தயா முயன்ற
துனியி தென்கொலோ சொல்லுதி
யுணர்ந்தெனச் சொன்னன்.

அனுமன் வாள்முகம் நோக்கினன்,
ஆழியை அகற்றித்
தனுவலம் கொண்ட தாமரைக்
கண்ணவன் தம்பி,
‘முனிவர் வானவர் முனிந்து
வந்துஎய்த, யாம்முயன்ற
துனிஇது என்கொலோ? சொல்லுதி,
உணர்ந்து’ எனச்சொன்னன்.

பொ :- (தன் கையிற் கொண்ட) சக்கரப் படையை நீக்கி வில்லை வலக் கையிற் கொண்ட செந்தாமரை மலர்போலும் கண்களையுடைய இராமபிரானது தம்பியாகிய இலக்குவன், அனுமனது ஒளி பொருந் தியமுகத்தை நோக்கியவனாய், ‘முனிவர்களும் தேவர்களும் வெகுண்டு (நம்முடன் போர்செய்ய) வருமாறு நாம் செய்த வெறுக்கத்தக்க குற் றம் யாதோ? ஆராய்ந்து கூறுவாயாக’ என்று கூறினன்.

கு :- சொல்லின் செல்வனாகிய அனுமனது முகம் அவனது சிந் தனையாற்றலைப் புலப்படுத்தும் முறையில் ஒளியுடன் திகழ்வதனைப் புலப்படுத்துவார் ‘அனுமன் வாள்முகம்’ என அடைமொழி புணர்த் துக் கூறினர். வாள்—ஒளி. செந்தாமரை மலர்போலும் கண்களை யுடைய திருமாலே இராமனாக அவதரித்து, தன் கையிலுள்ள சக்கரா யுதத்தை அகற்றி வில்லைக் கையிற்கொண்டு அரக்கர்களைப் பொரு தழித்தற்கு வந்துள்ளான் என அறிவுறுத்துவார், ‘ஆழியை அகற்

றித் தனுவலங் கொண்ட தாமரைக் கண்ணவன்' என்றார். ஆழி-சக்கராயுதம். தனு-வில். துனி-வெறுப்பு; ஆகுபெயரால் வெறுத்தற்குக் காரணமாகிய குற்றத்தையுணர்த்தியது. (171)

## அந் நிலையில் இந்திரசித்து பிரமாத்திரத்தை இலக்குவன்மேல் ஏவுதல்

8744. இன்ன காலையி னிலக்குவன்
மேனிமே லெய்தான்
முன்னை நான்முகன் படைக்கல
மிமைப்பதன் முன்னம்
பொன்னின் மால்வரைக் குரீஇயின
மொய்ப்பது போல
மன்ன லாந்தர மல்லன
சுடர்க்கணை பாய்ந்த.

இன்ன காலையின் இலக்குவன்
மேனிமேல் எய்தான்,
முன்னை நான்முகன் படைக்கலம்;
இமைப்பதன் முன்னம்
பொன்னுல் மால்வரைக் குரீஇ
இனம் மொய்பதுபோல,
மன்னல் ஆம்தரம் அல்லன
சுடர்க்கணை பாய்ந்த.

பொ :- இவ்வாறு (அநுமனை நோக்கி இலக்குவன்) வினவும் நேரத்தில் (வானில் மறைந்து நின்ற இந்திரசித்து) காலத்தால் முற்பட்ட முதியோனாகிய நான்முகனது படைக்கலத்தை இமைப்பொழுதிற்குள் இலக்குவனது மேனியின்மேற் செலுத்தினான். பொன்மயமான பெரிய மலையின் மேலே குருவியென்னும் சிறிய பறவையினங்கள் நெருங்கி மொய்ப்பதனையொத்து (இன்னத் தன்மைய என்று) சொல்லுந் தன்மையவல்லாத ஒளிமிக்க அம்புகள் (இலக்குவனது மேனியிற்) பாய்ந்து தைத்தன.

கு :- இன்ன காலையில் (இந்திரசித்து) முன்னை நான்முகன் படைக்கலம் இலக்குவன் மேனிமேல் இமைப்பதன் முன்னம் எய்தான் என்க. எய்தான் என்னும் வினைக்குக் கருத்தாவாகிய இந்திர

சித்து என்னும் எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. பொன்னிற மேனியனாகிய இலக்குவனது உடம்பின்மேல் ஒளிமிக்க அம்புகள் தொகுதியாகப் பாய்ந்து தைத்தமைக்கு, பொன்மலையில் குருவிக் கூட்டங்கள் பறந்துசென்று தங்கினமையை உவமை கூறினார். இது பண்பும் தொழிலும் பற்றிவந்த உவமை. (172)

## பிரமாத்திரத்தால் தாக்கப்பட்டு இலக்குவன் உணர்வற்று வீழ்தல்

8745. கோடி கோடி நூ றுயிரஞ்
சுடர்க்கணைக் குழாங்கள்
மூடி மேனியை முற்றுறச்
சுற்றின மூழ்க
ஊடு செய்வதொன் றுணர்ந்தில
னுணர்வுபுக் கொடுங்க
ஆடன் மாக்கரி சேவக
மமைந்தென வசைந்தான்.

கோடி, கோடி, நூறாயிரம்
சுடர்க்கணைக் குழாங்கள்
மூடி மேனியை முற்றுறச்
சுற்றின மூழ்க,
ஊடு செய்வதுஒன்று உணர்ந்திலன்,
உணர்வுபுக்கு ஒடுங்க,
ஆடல் மாக்கரி சேவகம்
அமைந்தென, அசைந்தான்.

பொ :- கோடிகோடி நூறாயிரம் என்னும் தொகையினவாகிய கொடிய அம்பின் தொகுதிகள் (இலக்குவனது) மேனியை முழுவதுமாக மூடி மறைத்தனவாய்த் தைத்துப் பதிதலால் அவ் விடை நேரத்தில் இன்னது செய்வது என்று உணர இயலாதவனாகித் தன்னுணர்வு உள்ளே சென்று ஒடுங்க, போர்வலி மிகக பெருமைவாய்ந்த யானையானது தான் துயிலுமிடத்தில் அயர்ந்து துயில் கொண்டாற் போன்று செயலற்றுத் தளர்ந்து கிடந்தான் (இலக்குவன்).

கு :- ஆடல் — வன்மை. சேவகம் — யானை துயிலுமிடம். அசைதல்—செயலற்றுத் தளர்தல். (173)

## 'இந்திரனுகி வந்தவனை அந்தரத்து எற்றுவேன்' என எழுந்த அனுமன் பிரமாத்திரத்தால் அயர்ந்து வீழ்தல்

8746. அனும னிந்திரன் வந்தவ
னென்கொலி தமைந்தான்
இனியெ னெற்றுவன் களிற்றினே
டெடுத்தென வெழுந்தான்
தனுவி னுயிர கோடிவெங்
கடுங்கணை தைக்க
நினைவுஞ் செய்கையு மறந்துபோய்
நெடுநிலஞ் சேர்ந்தான்.

அனுமன், 'இந்திரன் வந்தவன்
என்கொல்,இது அமைந்தான்?
இனிஎன்? எற்றுவன், களிற்றினேடு
எடுத்து'என எழுந்தான்,
தனுவின் ஆயிரகோடி வெங்
கடுங்கணை தைக்க,
நினைவும் செய்கையும் மறந்துபோய்,
நெடுநிலம் சேர்ந்தான்.

பொ :- (அதுகண்ட) அனுமன், 'வந்தவனே இந்திரன், (நம் மொடு போர் செய்தலாகிய) இதனை எது கருதி மேற்கொண்டான்? (இவ்வாறு இகல் மேற்கொண்டு வந்துள்ள) இப்பொழுது செய்தற்குரியது வேறு என்ன இருக்கிறது? (இவனை) யானையோடும் எடுத்து எற்றித் தள்ளுவேன்' எனக் கிளர்ந்து எழுந்தவன், (தனது) உடம்பின்கண்ணே ஆயிரங்கோடி வெம்மைமிக்க அம்புகள் தைத்து ஊன்றுதலால் தன் நினைவும் செயலும் மறந்துபோய் (மூர்ச்சையுற்று) நெடிய தரையிற் சேர்ந்தனன்.

கு :- அனுமன், எழுந்தான், கணைதைக்க, நினைவும் செய்கையும் மறந்துபோய் நெடுநிலஞ் சேர்ந்தான் என முடிக்க. 'வந்தவன் இந்திரன். இது என்கொல் அமைந்தான்? இனி என்? களிற்றினேடு எடுத்து எற்றுவன்' என்பது, அனுமன் தன் மனத்து எண்ணிய எண்ணம். தைக்க—தைத்தலால்; செயவெனச்சம் காரணப்பொருளில் வந்தது. தனு—உடம்பு. நிலஞ்சேர்தல் என்றது—மூர்ச்சையாகித் தரையில் வீழ்தலை. (174)

## சுக்கிரீவன் வீழ்தல்

8747. அருக்கன் மாமக ளுடகக்
குன்றின்மே லலர்ந்த
முருக்கின் கானக மாமெனக்
குருதிநீர் முடுகத்
தருக்கி வெஞ்சரந் தலைத்தலை
மயங்கின தைக்க
உருக்கு செம்பன்ன கண்ணின
னெடுநில முற்றான்.

அருக்கன் மாமகன், ஆடகக்
குன்றின்மேல் அலர்ந்த
முருக்கின் கானகம் ஆம்எனக்
குருதிநீர் முடுக,
தருக்கி வெஞ்சரம் தலைத்தலை
மயங்கின தைக்க
உருக்கு செம்புஅன்ன கண்ணினன்,
நெடுநிலம் உற்றான்.

பொ :- பெருமைவாய்ந்த சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவன் பொன்மலையின்மேற் பூத்துத் தோன்றும் செம்முருக்க மரக் காட்டினையொத்து, (தன் உடம்பின்மேல்) செந்நீர் சுரந்து பெருகித் தோன்றுமாறு வெம்மையுடைய அம்புகள் (தன் உடம்பின்) இடந்தோறும் விரவினவாய்த் தைத்து ஊன்றுதலால்,உருக்கிய செம்பினை யொத்த (சிவந்த) கண்களையுடையவனாகிச் செருக்குற்று நீண்ட தரையிடத்தே சாய்ந்தான்.

கு :- 'தருக்கி' என்னும் செய்தெனச்சம் 'வீழ்ந்தான்' என்னும் வினை முதல்வினைகொண்டு முடிந்தது. அருக்கன் மாமகன்—பெருமையுடைய சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவன். ஆடகக் குன்று—பொன் மலை. பொன்னிற மேனியனாகிய சுக்கிரீவனது உடம்பில் அம்புகள் தைத்த இடங்கள்தோறும் சிவந்த குருதி நீர்ப்பெருக்கு வெளிப்பட்டுத் தோன்றிய தோற்றம் பொன்மலையில் செம்முருக்க மரக்காடு சிவந்த பூக்களைப் பூத்து விளங்குதல் போன்று காணப்பட்டது என்பதாம். இது பண்புவமை. (175)

## அங்கதனும் சாம்பனும் தரையிற் சாய்தல்

8748. அங்க தன்பதி னுயிர
மயிற்கணை யழுந்தச்
சிங்க வேறிடி யுண்டென
நெடுநிலஞ் சேர்ந்தான்
சங்க மேறிய பெரும்புகழ்ச்
சாம்பனுஞ் சாய்ந்தான்
துங்க மார்பையுத் தோளையும்
வடிக்கணை தொளைக்க.

அங்க தன்பதி னுயிரம் அயில்
கணை அழுந்த,
சிங்க ஏறுஇடி யுண்டென
நெடுநிலம் சேர்ந்தான்;
சங்கம் ஏறிய பெரும்புகழ்ச்
சாம்பனும் சாய்ந்தான்;
துங்க மார்பையும் தோளையும்
வடிக்கணை தொளைக்க.

பொ :- அங்கதன், (தன் உடலின்மீது) கூர்மைவாய்ந்த பதினு யிரம் அம்புகள் ஆழப் பதிந்தமையால், ஆண் சிங்கம் இடியினுற் தாக்கப்பட்டாற் போன்று நீண்ட நிலத்திலே சாய்ந்தான். அறிஞர் அவையிலே (பேசப்பட்டுப்) பொருந்திய பெரும்புகழையுடைய சாம்பவானும் உயர்ந்த மார்பையும் தோளையும் கூரிய அம்புகள் துளைத்ததனுல் (தரையிற்) சாய்ந்தான்.

கு:- அயில்—கூர்மை. சங்கம்—அறிஞர்கூடிய அவை. சாம் பன்—சாம்பவான் என்னும் வீரன். இவன் அறிஞர்கள் போற்றிப் புகழும் நிலையில் வீரச் செயல்கள் பல செய்து நெடுங்காலம் இந் நில வுலகிற் பெரும்புகழுடன் வாழ்ந்தவனுதலின், 'சங்கம் ஏறிய பெரும் புகழ்ச் சாம்பன்' எனச் சிறப்பிக்கப் பெற்றுன். துங்கம்—உயர்ச்சி. வடிக்கணை—கூர்மை வாய்ந்த அம்பு. (176)

## நீலன், இடபன், பனசன், குமுதன் ஆகியோர் உயிர் நீத்தல்

8749. நீல ளுயிரம் வடிக்கணை
நிறம்புக்கு நெருங்கக்
கால ஞர்முகங் கண்டன
னிடபன்விண் கலந்தான்
ஆல மேயன்ன பகழியாற்
பனசனு மயர்ந்தான்
கோலின் மேவிய கூற்றிஞற்
குமுதனுங் குறைந்தான்.

நீலன், ஆயிரம் வடிக்கணை
நிறம்புக்கு நெருங்க,
காலஞர் முகம் கண்டனன்;
இடபன்விண் கலந்தான்;
ஆலமே அன்ன பகழியால்,
பனசனும் அயர்ந்தான்;
கோலின் மேவிய கூற்றிஞல்,
குமுதனும் குறைந்தான்.

பொ :- (வானர வீரர்களில்) நீலன் என்பான் ஆயிரம் கூரிய அம்புகள் (தன்) மார்பிற் புகுந்து செறிதலால் (உயிர் துறந்து) கூற்றுவனது முகத்தைக் காண்பாஞயினன். இடபன் வாஞுலகத்தையடைந்தான். பனசன் ஆலகால நஞ்சினையொத்த அம்பிஞல் (உயிர் ஒடுங்கி) அயர்வுற்ருன். அம்பின் வடிவத்தில் வந்தடைந்த கூற்றுவஞல் குமுதனும் உயிர் குறைந்தான்.

கு :- காலஞர் முகங்காண்டலாவது, உயிர் உடம்பை விட்டு நீங்கி இயமன் உலகினை அடைதல்; அஃதாவது இறந்தொழிதல். கோலின் மேவிய கூற்று—அம்பின் வடிவு கொண்டுவந்த கூற்றுவன்; என்றது உடம்பினின்று உயிரைத் தப்பாது கவருந் திறத்தில் கூற்றுவனையொத்த கொடுமைவாய்ந்த அம்பு என்றவாறு. கோல்—அம்பு. (177)

## நளன், மயிந்தன், துமிந்தன், கவயன், கேசரி என்போர் மடிதல்

8750. வேலை தட்டவ னுயிரம்
பகழியால் வீழ்ந்தான்
வாலி நேர்வலி மயிந்தனுந்
துமிந்தனு மடிந்தார்
கால வெந்தொழிற் கவயனும்
வானகங் கண்டான்
மாலை வாளியிற் கேசரி
மண்ணிடை மடிந்தான்.

வேலை தட்டவன், ஆயிரம்
பகழியால் வீழ்ந்தான்;
வாலி நேர்வலி மயிந்தனும்
துமிந்தனும் மடிந்தார்;
கால வெந்தொழில் கவயனும்
வானகம் கண்டான்;
மாலை வாளியின் கேசரி
மண்ணிடை மடிந்தான்.

பொ :- (மலைகளைக் கொண்டு) கடலை (அணை கட்டி)த் தடுத்தவனுகிய நளன், ஆயிரம் அம்புகளால் வீழ்ந்து இறந்தான். வாலியையொத்த வலிமைவாய்ந்த மயிந்தன் என்பானும் (அவன் தம்பி) துமிந்தனும் ஒருசேர மாண்டனர். காலனையொத்த கொடுந் தொழிலையுடைய கவயன் என்பவனும் (உயிர் துறந்து) துறக்க வுலகினைக் கண்டான். மாலை போன்று (தொடர்ச்சியாக) வந்த அம்புகளால் கேசரி என்பான் நிலத்தின்கண் இறந்துபட்டான்.

கு :- வேலை—கடல். தட்டவன் என்றது கடலை அணைகட்டித் தடுத்தவனுகிய நளன் என்னும் வானர வீரனை. தட்டல்—தடுத்தல். மாலை வாளி என்றது, மாலைபோன்று ஒன்றன்பின் ஒன்ருகத் தொடர்ந்து வரும் அம்பின் வரிசையை, (178)

இதன் பின், 18, 23, 26, 40, 41, 43, 45, 52, 60, 61, 70 என்னும் எண்ணுள்ள பிரதிகளிற் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் உளது :

8750. உ. கனக ணுயிரம் கணேபட
விண்ணிடைக் கலந்தான்
அனக ணுயின சங்கனும்
அக்கணத் தயர்ந்தான்
முனே யின் வாளியின் சதவலி
என்பவன் முடிந்தான்
புனேயும் அம்பினில் தம்பனும்
பொருப்பெனப் புரண்டான்.

**சதவலி, சுசேடணன், கந்தமாதனன், இடும்பன், ததிமுகன் என்போர் இறத்தல்**

8751. விந்தமன்ன தோட் சதவலி
சுசேடணன் வினதன்
கெந்த மாதன னிடும்பன்வன்
றதிமுகன் கிளர
உந்து வார்கணே கோடிதம்
முடலமுற் றுளிப்பத்
தந்த நல்லுணர் வொடுங்கினர்
மண் ணுறச் சாய்ந்தார்.

விந்தம் அன்னதோள் சதவலி,
சுசேடணன், வினதன்,
கெந்த மாதனன், இடும்பன், வன்
ததிமுகன், கிளர
உந்து வார்கணே கோடிதம்
உடலம்முற்று ஒளிப்ப,
தம்தம் நல்உணர்வு ஒடுங்கினர்,
மண்உறச் சாய்ந்தார்.

பொ :- விந்த மலேயினே ஒத்து உயர்ந்த தோளேயுடைய சதவலி சுசேடணன், வினதன், கந்த மாதனன், இடும்பன், வன்மையுடைய ததிமுகன் ஆகிய வானர வீரர்கள், கிளர்ந்து மேலெழ (இந்திர சித்தி ணுற்) செலுத்தப்பட்ட நீண்ட அம்புகள் கோடிக்கணக்கினவாகத் தம் உடலில் அழுந்தத் தைத்து மறைத்தலால் தங்கள் தங்களது நல்லுணர்வு ஒடுங்கியவர்களாய் மண்ணிற் பொருந்த வீழ்ந்தார்கள்.

கு :- உந்துதல்—செலுத்துதல். வார், என்பது நெடுமை என்னும் பொருளில் வந்த உரிச் சொல். (179)

## பிரமாத்திரத்தால் தாக்கப்பட்டு வானரவீரர் அனைவரும் இறந்துகிடக்கும் போர்க்களத்தின் தோற்றம்

8752. மற்றை வீரர்கள் யாவரும்
வடிக்கணை மழையால்
முற்றும் வீந்தனர் முழங்குபே
ருதிரத்தின் முந்நீர்
எற்று வான்றிரைக் கடலொடு
பொருது சென்றேற
ஒற்றை வார்கணை யாயிரங்
குரங்கினை யுருட்ட

மற்றை வீரர்கள் யாவரும்
வடிக்கணை மழையால்
முற்றும் வீந்தனர்; முழங்குபேர்
உதிரத்தின் முந்நீர்
எற்றுவான்திரைக் கடலொடு
பொருது சென்று ஏற,
ஒற்றை வார்கணை ஆயிரம்
குரங்கினை உருட்ட.

பொ: ஒலிக்கின்ற பெரிய குருதி நீராகிய (செங்) கடல் மோதுகின்ற பெரிய அலைகளையுடைய கருங்கடலொடு எதிர்த்து மோதி மேற் செல்லும்படி, (இந்திரசித்தினுல் ஏவப்பட்ட) நெடிய ஓர் அம்பு ஆயிரம் வானரங்களை ஒரு சேர உருட்டித் தள்ளுதலால், எஞ்சியுள்ள வானர வீரர்கள் எல்லோரும் கூரிய அம்பு மழையால் (தாக்கப் பட்டு) முற்றும் இகந் தொழிந்தார்கள்.

கு:- இந்திர சித்து ஏவிய பிரமாத்திரத்தால் உந்தப்படும் கூரிய அம்பு மழையினுல் அம்பு ஒன்றுக்கு ஆயிரம் குரங்குகள் வீதம் உருட்டித் தள்ளப்பட்டு அங்கு எஞ்சியிருந்த வானர வீரர்கள் எல்லோரும் மடிந்தனர் என்பதாம். உதிரத்தின் முந்நீர்—உதிரமாகிய கடல். இன், அல்வழிச் சாரியை. முந்நீர் என்பது கடலுக்கு ஒரு பெயர். உதிரத்தின் முந்நீர், கடலொடும் பொருது சென்று ஏற, ஒற்றை வான்கணை ஆயிரம் குரங்கினை உருட்ட, வடிக்கணை மழையால் மற்றை வீரர்கள் யாவரும் முற்றும் வீந்தனர் என இயையும். (180)

8753. தளைத்து வைத்தது சதுமுகன்
பெரும்படை தள்ளி
ஒளிக்க மற்றொரு புகலிட
முணர்கில ருருமின்
வளைத்து வித்திய வாளியான்
மண்ணொடுந் திண்ண
முளைப்பு டைத்தன வொத்தன
வானர முடிந்த.

தளைத்து வைத்தது, சதுமுகன்
பெரும்படை தள்ளி
ஒளிக்க, மற்றொரு புகலிடம்
உணர்கிலர்; உருமின்
வளைத்து வித்திய வாளியால்,
மண்ணொடும் திண்ணம்
முளைப் புடைத்தன ஒத்தன;
வானரம் முடிந்த.

பொ :- நான்முகனது பெருமைவாய்ந்த படைக்கலமானது (வானர வீரர்களைக் கீழே) தள்ளிப் பிணித்து விட்டது. (அவ் விடத்தை விட்டுத் தப்பியோடி) மறைதற்கு அன்னோர் வேறொரு பாதுகாப்பான இடத்தை உணர்தற்கு இயலாதவராயினர். இடியினைப் போன்று சுற்றிலும் தூவப்பட்ட அம்புகளால் பூமியுடன் சேர்த்து உறுதியாக முளையடிக்கப்பட்டவற்றை யொத்தனவாய் அங்குள்ள குரங்குகள் யாவும் இறந்தன.

கு :- சதுமுகன் பெரும்படை - நான்முகனை அதிதெய்வமாக வுடைய பெருமைவாய்ந்த பிரமாத்திரம் என்னும் தெய்வப் படை. நான்முகன் பெரும்படை தள்ளித் தளைத்து வைத்தது என இயையும். முளைப்புடைத்தல்-வேறெங்கும் அசைய வொண்ணாதபடி நாற்புறத்தும் முளையடித்து நிறுத்துதல். (181)

8754. குவளைக் கண்ணினை வானவர்
மடந்தையர் கோட்டித்
துவளப் பாரிடைக் கிடந்தனர்
குருதிநீர் சுற்றிப்

திவளக் கீழொடு மேல்புடை
பரந்திடைப் செறியப்
பவளக் காடுடைப் பாற்கட
லொத்ததப் பரவை.

குவளைக் கண்ணினை வானவர்
மடந்தையர் கோட்டித்
துவள, பாரிடைக் கிடந்தனர்;
குருதிநீர் சுற்றித்
திவள, கீழொடு மேல்
புடைபரந்து இடைசெறிய,
பவளக் காடுடைப் பாற்கடல்
ஒத்தது, அப்பரவை.

பொ:- வானுலகில் உள்ள தேவ மகளிர் நீலோற்பல மலர்போலும் தம் கண்களைச் சாய்த்து நோக்கி வாட்டமுற்று வருந்த (வானர வீரர்கள்) பூமியிற் (பிணமாகக்) கிடந்தார்கள். (அவர்தம் வெண்ணிற உடம்பினின்றும் வெளிப்பட்ட) இரத்தநீர் கீழும் மேலும் பக்கங்களிலும் இடையிடையே நெருங்கி விளங்குதலால் அந்த (வானர சேனையாகிய) கடற்பரப்பானது பவளக் கொடிகளாகிய காடுகளையுடைய பாற்கடலையொத்துத் தோன்றியது.

கு:- கோட்டி-வளைத்து; துன்ப மிகுதியால் தலை கவிழ்ந்து நிலத்தினை நோக்கி. துவளல்-வாட்டமுறுதல். திவளுதல்-விளங்குதல். வெண்ணிறம் வாய்ந்த வானரசேனை பாற்கடல் போன்றும், அச் சேனை வீரர்கள் உடம்பினின்றும் வெளிப்பட்டு ஓடிய இரத்தப் பெருக்குகள் அக் கடலிற் படர்ந்து செறிந்த பவளக் கொடிக் காடுகள் போன்றும் காணப்பட்டன என்பதாகும். (182).

**தம் உடம்பினைத் துறந்து விண்ணிற்சென்ற வானர வீரர்களை வானவர்கள் உபசரித்து மீட்டும் மண்ணுலகிற் செல்லுமாறு வற்புறுத்துதல்**

8755. விண்ணிற் சென்றது கவிக்குலப்
பெரும்படை வெள்ளம்
கண்ணிற் கண்டனர் வானவர்
விருந்தெனக் கலந்தார்

உண்ணிற் கும் பெருங் களிப்பின
ரளவளா யுவந்தார்
மண்ணிற் செல்லுதி ரிக்கணத்
தேயென வலித்தார்.

விண்ணில் சென்றது, கவிக்குலப்
பெரும்படை வெள்ளம்;
கண்ணில் கண்டனர் வானவர்,
விருந்துஎனக் கலந்தார்,
உள்நிற்கும் பெருங் களிப்பினர்,
அளவளாய் உவந்தார்;
'மண்ணில் செல்லுதிர் இக்கணத்தே'
என வலித்தார்.

பொ:- வானர குலத்தின் பெருஞ்சேனையாகிய வெள்ளம் (மண்ணில் தம் உடம்பினைத் துறந்து தேவர்களாகி) விண்ணுலகிற் சென்றது. (அதனைத்) தேவர்கள் தம் கண்களாற் கண்டவர்களாய் விருந்தினர் என அன்பினுற் கலந்தவர்களாய், உள்ளத்தில் நிலை பெற்ற பெருங்களிப்பினையுடையவர்களாய் (அவர்களோடு) அளவளாவி மகிழ்ந்தார்கள்; '(நீங்கள், எம்பொருட்டு) இப்பொழுதே மண்ணுலகத்திற்கு (மீண்டு) செல்வீராக' என வற்புறுத்தி வேண்டினுர்கள்.

கு:- கவிக்குலப் பெரும்படை வெள்ளம் விண்ணிற் சென்றது; வானவர், கண்ணிற் கண்டனர், விருந்து எனக் கலந்தார்; உள் நிற்கும் பெருங்களிப்பினர், அளவளாய் உவந்தார்; 'இக் கணத்தே மண்ணிற் செல்லுதிர்' என வலித்தார் என இயைத்துரைக்க. பிரமாத்திரத்தால் உயிர்துறந்து வானுலகடைந்த வானர வீரர்களைக் கண்டு வானுலகத்திலுள்ள தேவர்கள் அன்பினுல் விருந்து எதிர் கொண்டு அளவளாவித் தம் நன்றியுணர்வு புலப்படப் பாராட்டியுரைப்பனவாக அமைந்தவை, இச் செய்யுள் முதலாகவுள்ள மூன்று செய்யுட்களும். *(183)*

8756. பார்ப டைத்தவன் படைக்கொரு
பூசனை படைத்தீர்
நீர்ப டக்கட வீரலீர்
வரிசிலை நெடியோன்

பேர்ப டைத்தவர்க் கடியவர்க்
கடியரும் பெறுவார்
வேர்ப டைத்தவெம் பிறவியிற்
றுவக்குணு வீடு.

'பார் படைத்தவன் படைக்கு
ஒருபூசனை படைத்தீர்;
நீர்படக் கடவீர் அலீர்;—
வரிசிலை நெடியோன்
பேர் படைத்தவர்க்கு அடியவர்க்கு
அடியரும் பெறுவார்,
வேர் படைத்தவெம் பிறவியில்
துவக்குணு, வீடு.

பொ:- வரிந்து கட்டப்பட்ட வில்லினையுடைய நெடியோனுகிய இராமபிரானது பெயரைத் தாங்கியவர்களுக்கு அடித்தொண்டுபட்டார்க்கு அடியவராயினரும், வேரூன்றி நெடுங்காலம் தொடர்தலையுடைய பிறவிப் பாசத்தாற் பிணிப்புண்ணு நிலையாகிய வீட்டின் பத்தினைப் பெறுதற்குரியவராவர். (இராம நாமத்தைத் தம் பெயராகக் கொண்டார்க்கு அடியவர்க்கு அடியவர் பெறும் பதமே இத் தன்மையதாயின்) இராமபிரானுக்கே நேரில் தொண்டுபட்ட நீங்கள் ஏனைய பாசப் பிணிப்புடையாரைப்போன்றுபோரிற் படைக்கலத்தால். இறந்துபடக் கடவீரல்லீர். இப் பூமியைப் படைத்த பிரமதேவனது படையாகிய பிரமாத்திரத்திற்குச் செய்யத்தக்கதொரு வழிபாட்டினைச் செய்தவராய் (நும் உடம்பைத் துறந்து. இங்கு வந்தீர்கள்.

கு:- 'இராமனது திருப்பெயரைத் தமது பெயராகக்கொண்டுள்ள மனிதர் ஒருவருக்கு அடியராயினர்க்கு அடியவரும் பிறவிப் பாசத்தால் தொடக்குண்ணுத வீடு பேற்றின்பத்தைப் பெற்று மகிழும் பெருமையுடையாராயின், இராமபிரானுக்கே நேர்முறையில் அணுகி நின்று அத் தொண்டு புரியும் நற்பேறுபெற்ற வானரராகிய நீங்கள் ஏனையோர் போல இறத்தல் பிறத்தல்களாகிய துன்பச் சுழலிற்பட்டு அழுந்துந் தன்மையுடையீரல்லீர். நுமது இயல்பு இவ்வாராகவும் நீவிர் பிரமாத்திரத்தால் உடம்பைத் துறந்து இங்கு வந்தது, படைத்தற் கடவுளாகிய பிரமதேவரது படைக்கலத்திற்குப் பாரில் உள்ளோர் மதிப்புத்தந்து பூசித்தலாகிய வழிபாட்டினைக்

கடமையாகக் கொள்ளுதல் வேண்டும் என்பது பற்றியே யாம்' எனப் பிரமாத்திரத்தினுல் உயிர் துறந்து வானுலகுபுக்க வானர வீரர்களை நோக்கி வானவர்கள் பாராட்டுரை கூறி உபசரித்தனர் என்றவாறு. (184)

8757. நங்கள் காரிய மியற்றுவா
னிலத்திடை நட ந்தீர்
உங்க ளாருயி ரெம்முயி
ருடல்பிறி துற்றீர்
செங்க ணுயகற் சாகவெங்
களத்துயிர் தீர்ந்தீர்
எங்க ணுயகர் நீர்களென்
றிமையவ ரிசைத்தார்.

'நங்கள் காரியம் இயற்றுவான்
நிலத்திடை நடந்தீர்;
உங்கள் ஆர்உயிர் எம்உயிர்;
உடல்பிறிது உற்றீர்;
செங்கண் நாயகற்காக வெங்களத்து
உயிர் தீர்ந்தீர்;
எங்கள் நாயகர் நீர்கள்'என்று,
இமையவர் இசைத்தார்.

பொ :- நீங்கள், (தேவர்களாகிய) நம்முடைய செயல்களை நிறை வேற்றுதற்காகவே நிலவுலகிற் சென்று பிறந்தீர்கள். உங்களது அரிய உயிர் எம்முடைய உயிரே. உடம்பு (மட்டும்) வேருகப் பெற்றுள்ளீர்கள். (தாமரை மலர்போலும்) சிவந்த கண்களையுடைய இறைவனுகிய இராமபிரானுக்காகக் கொடுமைமிக்க போர்க்களத்தில் உயிர் துறந்தீர்கள். எம்முடைய இறைவர் நீங்களே என்று தேவர்கள் (வானர வீரரைப்) புகழ்ந்து பாராட்டினுர்கள்.

கு :- 'இக் கணத்தே மண்ணிற் செல்லுதிர்' என வலித்தாராய், 'எங்கள் நாயகர் நீர்கள்' என்று வானவர் இசைத்தார் என முடிக்க. 'நீயிர்' என்னும் முன்னிலைப் பன்மைப் பெயர் 'நீர்' என்ருகிப் பன்மைமேற் பன்மையாகக் கள் விகுதிபெற்று 'நீர்கள்' என வந்தது. 'நீர்கள் சாரப் பெறீர்' (5—92—3) என வருந் திருக்குறுந் தொகைத் தொடரில், 'நீர்கள்' என்னும் இப் பெயர் ஆளப்பெற்றிருத்தல் அறியத் தக்கதாகும். திருமால் இராமனுக அவதரித்தருளிய

நிலையில் அவ்விறைவன் பணித்தவண்ணம் தேவர்களே வானரர் களாகப் பிறந்தனர் ஆதலின் 'உங்கள் ஆருயிர் எம்உயிர், உடல் பிறிது உற்றீர்' என வானவர்கள் வானரர்களைத் தம்மினத்தவராகக் குறித்துப் பாராட்டினர். (185)

## 'வானரக் குழுவுடன் இலக்குவன் இறந்தான்; இராமன் இங்கு வந்திலன்' என எண்ணிய இந்திரசித்து வெற்றிச் சங்கினை ஊதி இராவணனை அடைந்து நிகழ்ந்தன கூறுதல்

8758. வெங்கண் வானரக் குழுவொடு
மிளையவன் விளிந்தான்
இங்கு வந்தில னகன்றன
னிராமனென் றிகழ்ந்தான்
சங்க மூதினன் றாதையை
வல்லையிற் சார்ந்தான்
பொங்கு போரிடைப் புகுந்துள
பொருளெலாம் புகன்றான்.

'வெங்கண் வானரக் குழுவொடும்
இளையவன் விளிந்தான்;
இங்கு வந்திலன், அகன்றனன்
இராமன்'என்று இகழ்ந்தான்;
சங்கம் ஊதினன்; தாதையை
வல்லையிற் சார்ந்தான்;
பொங்கு போரிடைப் புகுந்துள
பொருள்எலாம் புகன்றான்.

பொ :- 'தம்பியாகிய இலக்குவன், வெகுளிமிக்க கண்களை யுடைய வானரக் கூட்டத்துடன் இறந்தான். (அவன் தமையனாகிய) இராமனோ இங்கு (ப் போர்க்களத்திற்கு) வந்து சேர்ந்திலன்' என்று இகழ்ந்தவனாகிய இந்திரசித்து, (வெற்றிச்) சங்கினை ஊதியவனாய்த் தன் தந்தையாகிய இராவணனை விரைவில் அடைந்தான்; கிளர்ந்தெழும் போரின்கண்ணே விளைந்துள்ள நிகழ்ச்சிகளையெல்லாம் எடுத்துரைத்தான்.

கு :- 'வெங்கண் வானரக் குழுவொடும் இளையவன் விளிந்தான்; இராமன் இங்கு வந்திலன்' என்று இவ்வாறு இகழ்ந்தவன் இந்திர சித்து. இகழ்ந்தான், வினையாலணையும் பெயர். இகழ்ந்தான், ஊதினன், சார்ந்தான், புகன்றான் என முடியும். விளிதல்—இறத் தல். தாதை என்றது, இராவணனை. பொங்குதல்—வெகுளியாற் கிளர்ந்தெழுதல். போரிடைப் புகுந்துள பொருள்களாவன, இலக் குவன், அனுமன், அங்கதன், சுக்கிரீவன் முதலியோர் இறந்துபடு மாறு நிகழ்ந்த நிகழ்ச்சிகள். (186)

**'இராமன் இறந்திலனோ?' என வினவிய இராவணனுக்கு அவன் அங்கு இல்லாமையை இந்திரசித்து எடுத்துரைத்தல்.**

8759. இறந்தி லன்கொலவ் விராமனென்
றிராவண னிசைத்தான்
துறந்து நீங்கின னல்லனேற்
றம்பியைத் தொலைத்துச்
சிறந்த நண்பரைக் கொன்றுதன்
சேனையைச் சிதைக்க
மறந்து நிற்குமோ மற்றவன்
றிறனென்றான் மதலை.

'இறந்திலன்கொல் அவ்இராமன்?' என்று
இராவணன் இசைத்தான்;
'துறந்து நீங்கினன்; அல்லனேல்,
தம்பியைத் தொலைத்து,
சிறந்த நண்பரைக் கொன்று,தன்
சேனையைச் சிதைக்க,
மறந்து நிற்குமோ, மற்று அவன்
திறன்?' என்றான்' மதலை.

பொ :- (இந்திரசித்து சொல்லியவற்றைக் கேட்ட) இராவணன், 'அந்த இராமன் இறந்திலனோ' என வினவினான். 'அவன் (போர்க் களத்தை) விட்டு நீங்கி எங்கேயோ சென்றுவிட்டான்'' அங்ஙன் செல்லாதிருந்திருப்பானாயின், (யான்) தம்பியை உயிர்போக்கிச் சிறந்த நண்பர்களைக் கொன்று தன்னுடைய வானர சேனைகளை அழிக்குமளவும் அவ் இராமன் (தன்) போர்த் திறமையை மறந்து சும்மா இருந்திருப்பானோ?' என மறுமொழி பகர்ந்தான் மைந்தனாகிய இந்திரசித்து.

கு :- தன் மைந்தன் செய்தபோரிற்பெற்ற வெற்றிகளைச் சொல்லக் கேட்டும் அமைதிபெறாத இராவணன், தான் சீதையை யடைதற்குத் தடையாயுள்ளது இராமன் உயிரோடுள்ளமையே என்றெண்ணி இராமனது இறப்பினையே எதிர்நோக்கியிருந்த தன் கருத்துப் புலப்பட, 'இறந்திலன் கொலாம் அவ் இராமன்?' எனத் தன் மைந்தனை நோக்கி ஏக்கற்று வினவினான் என்க. தந்தையின் மனக் கருத்தறிந்த இந்திரசித்து, 'இராமன் போர்க்களத்தை விட்டு நெடுந்தூரம் நீங்கிச் சென்றான். நீங்காமல் அங்கேயே இருந்திருப்பானாயின், தன் ஆருயிர்த் தம்பி இலக்குவனையும் சிறந்த நண்பர்களாகிய அனுமன் சுக்கிரீவன் அங்கதன் முதலியவர்களையும் யான் பிரமாத்திரத்தால் கொன்றொழிக்கவும் தான் தன் வீரத்திறமை யெல்லாவற்றையும் மறந்து சும்மா இருந்திருக்கமாட்டான்' என மறுமொழி பகர்ந்தான் என்பதாம். (187)

### இந்திரசித்தும் மகோதரனும் தத்தம் இருப்பிடம் சேர்தல்

8760. அன்ன தேயென வரக்கனு
மாதரித் தமைந்தான்
சொன்ன மைந்தனுந் தன்பெருங்
கோயிலைத் தொடர்ந்தான்
மன்ன னேவலின் மகோதரன்
போயினன் வந்தான்
என்னை யாளுடை நாயகன்
வேறிடத் திருந்தான்.

'அன்னதே' என அரக்கனும்
ஆதரித்து அமைந்தான்;
சொன்ன மைந்தனும், தன் பெருங்
கோயிலைத் தொடர்ந்தான்;
மன்னன் ஏவலின், மகோதரன்
போயினன், வந்தான்;
என்னை ஆளுடை நாயகன்
வேறுஇடத்து இருந்தான்.

பொ :- ('நீ கூறிய) அதுவே நிகழ்ந்திருத்தல் வேண்டும்' என்று கூறி இராவணன் (தன் மைந்தன் சொல்லியதை) அன்புடன் உடன்பட்டு மன அமைதி கொண்டான். (நிகழ்ந்தவற்றைச்)

சொன்ன இந்திரசித்தும் தனது பெரிய மாளிகையினை அடைந்தான். இராவணனது ஏவலால் முன் போர்க்குச் சென்றவனாகிய மகோதரனும் (மீண்டு தன் இருப்பிடத்திற்கு) வந்து சேர்ந்தான். (இந்நிலையில்) என்னை அடிமையாகவுடைய இறைவனான இராமன் (தெய்வப் படைக்கலங்கட்கு வழிபாடு செய்துகொண்டு) வேறோர் இடத்தில் தங்கியிருந்தான்.

கு :- அன்னதே என்பது, அதுவே நிகழ்ந்திருத்தல் வேண்டும் என உடன்பட்டு ஏற்றுக்கொள்ளும் குறிப்பினது. ஆதரித்தல்— அன்பு கூர்தல்; ஈண்டு அன்புடன் உடன்படுதல் என்ற பொருளில் ஆளப்பெற்றது. 'என்னை ஆளுடை நாயகன்' என்பது கவிக் கூற்று. இதனால் இராமபிரானை வழிபடு தெய்வமாகக் கொண்டு அன்பு செய்தவர், இந்நூலாசிரியர் ஆகிய கம்பர் என்னும் புலவர் பெருமான் என்பது உய்த்துணரப்படும். (188)

இதன் பின் 9, 18, 19, 21, 40, 66, 70, 74 என்னும் எண்ணுள்ள பிரதிகளிற் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் உளது :

8760.a. ஆர்க்கின்ற குரலுங் கேளான்
இலக்குவன் அசனி யேற்றை
போர்க்கின்ற சிலையின் நாணின்
போரொலி கேளான் வீரன்
யார்க்கின்ன லுற்ற தென்ன
வுணர்கில னிசைப்பா ரில்லைப்
போர்க்குன்ற மனைய தோளான்
இனையதோர் பொரும லுற்றான்.

வேறிடத்திருந்து படைக்கலங்களுக்கு வழிபாடியற்றிய இராமன் அக்கினிப் படையினால் இருளை அகற்றிப் போர்க்களத்தை அடைதல்

8761. செய்ய தாமரை நாண்மலர்க்
கைத்தலஞ் சேப்பத்
துய்ய தேவர்தம் படைக்கெலாம்
வன்முறை துரக்கும்

**மெய்கொள் பூசனை விதிமுறை**
**யியற்றிமேல் வீரன்**
**மொய்கொள் போர்க்களத் தெய்துவா**
**மினியென முயன்ருன்.**

செய்ய தாமரை நாள்மலர்க்
கைத்தலம் சேப்ப,
துய்ய தேவர்தம் படைக்குஎலாம்
வரன்முறை துரக்கும்
மெய்கொள் பூசனை விதிமுறை
இயற்றி, மேல்,வீரன்,
'மொய்கொள் போர்க்களத்து எய்துவாம்
இனி' என முயன்ருன்.

பொ :- (வீரருட் சிறந்த) வீரனுகிய இராமபிரான், செம்மை யுடையதாய் அன்றலர்ந்த தாமரை மலர்போலும் தன் கைத்த லங்கள் மேலும் சிவக்கும்படி தூய்மைவாய்ந்த தேவர்களின் படைக் கலங்களுக்கெல்லாம் (தொன்றுதொட்டுச் செய்து) வருகின்ற முறைப்படி செலுத்துதற்குரிய மெய்மையான வழிபாட்டினை விதி முறைப்படி செய்து முடித்து, அதன்பின்னர், ('சேனை வீரர்கள்) நெருங்கி நிறைதலைக் கொண்ட போர்க்களத்திற்கு இனிச் செல் வோம்' என்று (புறப்படுதலாகிய) முயற்சியை மேற்கொண்டான்.

கு :- வீரன், கைத்தலம் சேப்ப, இயற்றி, முயன்ருன் என முடியும். வீரன் என்றது, வீரராயுள்ளார் யாவரினுஞ் சிறந்த பெரு வீரனுகிய இராமபிரானை. நாள் மலர்—அன்றலர்ந்த மலர். சேப்ப— செந்நிறமடைய. துய்ய—தூய. வரல்முறை—தொன்றுதொட்டு நிகழ்ந்து வருதலாகிய முறை. துரத்தல்—செலுத்துதல்; செய்து நிறைவேற்றுதல். மெய்கொள் பூசனை—பொய்மையானவற்றை விலக்கி மெய்ம்மையில் வழுவாது நின்று செய்யும் வழிபாடு. 'வாய் மையே தூய்மையாக.........போற்றவிக் காட்டினேமே' (4—76—4) எனவும், 'மெய்யே யெங்கள் பெருமான் உன்னை நினைவாரவரை நினைகண்டாய்' (7—41—7) எனவும் வரும் தேவாரத் தொடர்கள் மெய்ம்மை நெறியில் நிகழும் வழிபாட்டினைக் குறிப்பன. 'பொக்க மிக்கவர் பூவும் நீருங்கண்டு, நக்கு நிற்பன்' (5—90—9) என்புழிப் பொய்ம்மையொடுபட்ட பூசனை குறிக்கப்பெற்றமை காணலாம்.

(189)

8762. கொள்ளி யிற்சுட ரனலிதன்
பகழிகைக் கொண்டான்
அள்ளி நுங்கலா மாரிருட்
பிழம்பினை யழித்தான்
வெள்ள வெங்களப் பரப்பினைப்
பொருக்கென விழித்தான்
தள்ளி ருமரைச் சேவடி
நுடங்குறச் சார்ந்தான்.

கொள்ளியின் சுடர் அனலிதன்
பகழிகைக் கொண்டான்;
அள்ளி நுங்கலாம் ஆர்இருட்
பிழம்பினை அழித்தான்;
வெள்ள வெங்களப் பரப்பினைப்
பொருக்கென விழித்தான்;
தள்ளில், தாமரைச் சேவடி
நுடங்குறச் சார்ந்தான்.

பொ :- தீக் கொள்ளியினையொத்துச் சுடர்விட்டொளிர்கின்ற அக்கினிதேவனது அம்பினைத் தன் கையிற் கொண்டவனாகி, (கையினால்) அள்ளியெடுத்து விழுங்குதற்குத் தக்கவாறு திரண்டுள்ள அரிய இருளின் பிழம்பினைச் சிதைத்து அழித்தான். இகழ்ந்து ஒதுக்கப்படுதல் இல்லாத செந்தாமரை மலர்போலும் சிவந்த பாதங்கள் அசைவுற்றுத் தளர நடந்து சென்று (குருதி) வெள்ளம் நிரம்பிய கொடுமைமிக்க போர்க்களமாகிய பரந்த இடத்தினை விரைந்து விழித்துப் பார்த்தான் (இராமன்)

கு :- கொள்ளி—தீக்கொள்ளி; கொள்ளிக்கட்டை அனலிதன் பகழி—அக்கினி யாத்திரம். அனலி—அக்கினிதேவன். பகழி—அம்பு. தனக்கென்று ஒரு வடிவில்லாத இருளானது, தனது செறிவு காரணமாக, கையினால் அள்ளியெடுத்து உட்கொள்ளத்தக்க அளவு பிழம்புடையது போலத் தோன்றியது என்பார், 'அள்ளி நுங்கல் ஆம் ஆர் இருட்பிழம்பு' என்றார். நுங்குதல்—உண்ணுதல். பொருக்கென—விரைய. தள்இல் தாமரை—இகழ்ந்து ஒதுக்கப்படுதல் இல்லாத தாமரை; என்றது, புழு முதலியவற்றால் இதழ் அரிக்கப்படுதல் வடிவும் நிறமும் சிதைதல் முதலியனவாக மலரிடத்து உளவாம் குற்றங்கள் எதுவும் இல்லாத சிறந்த தாமரைப் பூவினை. நுடங்குதல்—தளர்ந்து அசைதல். (190

## இராமன், போர்க்களத்தில் வீழ்ந்து கிடக்கும் சுக்கிரீவன் முதலிய வானரத் தலைவரைத் தனித்தனி கண்டு வருந்துதல்

8763. நோக்கி ஞன்பெருந் திசைதொறு
முறைமுறை நோக்கி
ஊக்கி ஞன்றடந் தாமரைத்
திருமுகத் துதிரம்
போக்கி ஞனிணப் பறந்தலை
யழுவத்துட் புக்கான்
காக்கும் வானரத் தலைவரைத்
தனித்தனி கண்டான்.

நோக்கினன் பெருந் திசைதொறும்,
முறை முறைநோக்கி,
ஊக்கினன், தடந் தாமரைத்
திருமுகத்து உதிரம்
போக்கினன்; நிணப் பறந்தலை
அழுவத்துள் புக்கான்;
காக்கும் வானரத் தலைவரைத்
தனித்தனி கண்டான்.

பொ :- (அங்ஙனம்போர்க்களத்தை) விழித்துப் பார்த்தவனுகிய இராமபிரான், திசையிடங்கள்தோறும் அடுத்தடுத்து உற்றுப் பார்த்து (அங்குள்ள அவலக் காட்சிகளைக் கண்டு) முயன்று மேற் சென்றவனுய், விரிந்த பெரிய செந்தாமரை மலர் போலும் (தன்) அழகிய முகத்தின் கண்ணே உதிரத்தை வெளிப்படுத்தினன்; நிணம் நிறைந்த போர்க்களப் பரப்பினிடத்தே புகுந்தான்; (தன் சேனையைக்) காத்தற்றொழிலை மேற்கொண்டிருந்த வானரத் தலைவர் களை (ஒவ்வொருவராகத்)தனித்தனியே சென்று பார்த்தான்.

கு :- ஊக்குதல்—முயலுதல்; ஈண்டு முயன்று மேற்செல்லுதல் என்ற பொருளில் வந்தது. திருமுகத்து உதிரம் போக்கினன், அழுவத்துட் புக்கான், கண்டான் என முடியும். போக்குதல்—ஒழுக விடுதல். பறந்தலை—போர்க்களம். அழுவம்—இடப்பரப்பு. இராம பிரான் தன்னுடைய சேனை வீரர்கள் போர்க்களமெங்கும் மாண்டு கிடத்தலைக் கண்டு, தன் கண்களில் இரத்தம் வெளிப்பட்டொழுக

வெகுளியும் அவலமும் ஒருங்கேயுடையனாய், வானர வீரர்கள் ஒவ்வொருவரையும் தனித்தனியே சென்று கண்டு வருந்திய துன்ப நிலையினை விரித்துரைக்கும் முறையில் இச் செய்யுளும் அடுத்துவரும் செய்யுட்களும் அமைந்துள்ளன. (191)

8764. சுக்கி ரீவனை நோக்கித்தன்
 றாமரைத் துணைக்கண்
உக்க நீர்த்திர ளொழுகிட
 நெடிதுநின் றுயிர்த்தான்
தக்க தோவிது நினக்கென்று
 தனிமனந் தளர்ந்தான்
பக்க நோக்கினன் மாருதி
 தன்மையைப் பார்த்தான்.

சுக்கிரீவனை நோக்கி, தன்
 தாமரைத் துணைக்கண்
உக்க நீர்த்திரள் ஒழுகிட,
 நெடிதுநின்று உயிர்த்தான்;
'தக்கதோ இதுநினக்கு?' என்று,
 தனிமனத் தளர்ந்தான்;
பக்கம் நோக்கினன்; மாருதி
 தன்மையைப் பார்த்தான்.

பொ :- (உணர்வற்றுக் கிடக்கும்) சுக்கிரீவனைப் பார்த்துத் தாமரை மலர்போலும் இரண்டு கண்களிலும் சிந்திய அவலக் கண்ணீர்த்திரள் (அருவி போன்று) ஒழுக, நெடுநேரம் (அசைவற்று) நின்று பெருமூச்சு விட்டான், ('என்னைத் தனியே புலம்புமாறு விட்டுப் பிரிந்த) இச்செயல், நினக்குத் தகுதியுடையதோ' என்று கூறி, மனந்தளர்ந்து வருந்தினான்; (அச் சுக்கிரீவனது) மருங்கே நோக்கியவன் (அவ்விடத்திதில்) அனுமனது நிலைமையைக் கண்ணுற்றான்.

கு :- இராமபிரான், போர்க்களத்தில் இறந்துகிடக்கும் சுக்கிரீவனைப் பார்த்து, 'இவ்வாறு என்னைத் தனித்திருக்கச் செய்து நின்னுயிரைத் துறந்தமை என்னுயிர்த் தோழனாகிய நினக்குத் தகுதியுடையதாகுமோ' எனக் கூறி நெடுநேரம் உயிர்ப்பற்று நின்று, பின்னர்ப் பெருமூச்சு விட்டு மனங்கலங்கி வருந்தினான் என்பதாம். துணைக்கண்— இரண்டு கண்கள். உகுதல்—சிந்துதல். 'இது நினக்குத் தக்கதோ' என்பது இராமன் சுக்கிரீவனை எதிர்முகமாக்கிக் கூறிய அரற்றுதல் மொழியாகும். (192)

## அனுமனது நிலைகண்டு இராமன் அழுது புலம்புதல்

8765. கடல்க டந்துபுக் கரக்கரைக்
கருவொடுங் கலக்கி
இடர்க டந்துநா னிருக்கநீ
நல்கிய திதற்கோ
உடல்க டந்தன வோவுனை
யரக்கன்வில் லுதைத்த
அடல்க டந்தபோர் வாளியென்
றுகுலித் தழுதான்.

'கடல்கடந்து புக்கு அரக்கரைக்
கருவொடும் கலக்கி,
இடர் கடந்து நான் இருக்க,
நீ நல்கியது இதற்கோ?
உடல் கடந்தனவோ, உனை
அரக்கன்வில் உதைத்த
அடல் கடந்தபோர் வாளி?'
என்று ஆகுலித்து அழுதான்.

பொ:- 'கடலைக் கடந்து (பகைவர் பதியாகிய இலங்கையினுள்ளே) புகுந்து (எதிர்ப்பட்ட) அரக்கர்களைக் கருவுடனே கலங்கச் செய்து (அன்னோர் செய்த) இடரைக் கடந்து நான் (உயிர்தாங்கி) இருக்கும்படி நீ (எனக்கு) உதவியது, இவ்வாறு ஆதற்கு (இறத்தற்கு) த் தானோ? உன்னை (இலக்காகக்கொண்டு) அரக்கனாகிய இந்திரசித்து வில்லினின்று செலுத்திய வலிமையில் மேம்பட்ட போர்த்தொழிற்குரிய அம்புகள் (உனது) உடம்பினை ஊடுருவி அப்பாற் சென்றனவோ?' என்று மனங்கலங்கித் துன்புற்று அழுது அரற்றினான்.

கு:- இந்திரசித்து ஏவிய அம்பினால் துளைக்கப்பட்டுக் கிடக்கும் அனுமனது உடம்பினைநோக்கிய இராமன், தன் துயர்தீர்த்தல் வேண்டிக் கடலை கடந்து இலங்கையுட் புக்குச் சீதா பிராட்டியைக் கண்டு தன்னிலையை எடுத்துரைத்து அங்கு அரக்கர் செய்த இடர்களை யெல்லாம் கடந்து மீண்டுவந்து தன்னைக் கண்டு கற்பினுக்கணியாகத் திகழும் சீதையின் இயல்புரைத்துத் தன்னை உயிர்தாங்கி இருக்கச்செய்த

அனுமனது பேருபகாரத்தை நினைந்து, அனுமனை எதிர்முகமாக்கி இங்ஙனம் அழுது புலம்பினுன் என்பதாம். உதைத்தல்-செலுத்து தல். ஆகுலித்தல்-துன்புறுதல்; ஆகுலம் என்ற பெயரடியாகப் பிறந்த வினைச்சொல். ஆகுலம்-மனக்கலக்கம். (193)

8766. முன்னைத் தேவர்தம் வரங்களு
முனிவர்த மொழியும்
பின்னைச் சானகி யுதவியும்
பிழைத்தன பிறந்த
புன்மைச் செய்தொழி லென்வினைக்
கொடுமையாற் புகழோய்
என்னைப் போல்பவ ராருள
ரொருவரென் றிசைத்தான்.

'முன்னைத் தேவர்தம் வரங்களும்,
முனிவர்தம் மொழியும்,
பின்னைச் சானகி உதவியும்
பிழைத்தன—பிறந்த
புன்மைச்செய் தொழில் என்வினைக்
கொடுமையால்; புகழோய்!
என்னைப் போல்பவர் ஆர்உளர்.
ஒருவர்?' என்று இசைத்தான்.

பொ:- 'புகழத்தக்க பெருமையுடையோனே, (என்னுடன்) தோன்றிய இழிந்த செய்தொழிலுக்குக் காரணமாகிய எனது தீவினையின் கொடுமையால், முன்பு (நினக்குத்) தேவர்கள் கொடுத்த வரங்களும் முனிவர்கள் அருளிய வாழ்த்துரையும் (நீ இலங்கை சென்று கண்ட) பின்பு சனகன் மகளாகிய சீதை (உனக்கு) புரிந்த உதவியும் ஆகிய இவையெலாம் பயனற்றவாய் ஒழிந்தன. (இவ்வளவு பெருங் கேட்டிற்கும் காரணமாய்) என்னைப் போன்று (இவ்வுலகில் உயிர் தாங்கி) உள்ளார் ஒருவர் (என்னையன்றிப்) பிறர் யாருளர்?' என்று (தன்னை வெறுத்துக்) கூறினுன் (இராமன்).

கு:- அனுமனுகிய நீ நினக்கென வாழாது பிறர்க்கென வாழ்ந்து போரில் உயிர்கொடுத்துப் புகழ்கொண்ட என்பான், 'புகழோய்' என அழைத்தான். நீ முன்பு தேவர்கள் வாயிலாகவும் முனிவர்கள் வாயிலாகவும் கற்பின் செல்வியாகிய சீதை வாயிலாகவும் பெற்றுள்ள சிறந்த வரங்கள் யாவும் என் தீவினையின் கொடுமை

யொன்றினுலேயே பயனின்றிச் சிதைந்தன என்பான், 'தேவர்தம் வரங்களும், முனிவர்தம் மொழியும், சானகியுதவியும் என் வினைக் கொடுமையாற் பிழைத்தன' என்ருன். தேவர்தம் வரங்களாவன, 'உலகமுள்ளளவும் பெறுதி பெயராப்புகழ்' என்று இந்திரனும், 'என் வில்லார் கரத்திற் சத கூற்றில் ஒரு கூறுனக்கு மேவிடுக, எல்லா விஞ்சைகளும் தரிக்க இசைந்த சத்தியுண்டாக, நல்லாய் கொள்' நீ தருகின்றேன்' என்று சூரியனும், 'இரண பூமியிடை நேர்ந்தால் என பாசத்தால் மரணமில்லை உனக்கு' என்று வருணனும், 'என் தண்டத்தால் முரணின்மிகு மாருதி ஆவி முடியாதொழிய' என்று இயமனும், 'என் கதையால் நீ கூற்றின் சூழல் உருய்' என்று குபேரனும், 'என் பிரம தண்டால் தானும் சாவின்றி மேதாவியுமாய், ஒரு நாளும் விளியா நாளும் உறுக' என்று பிரமதேவனும், 'என்கர மூவிலையினுலும் என்னுலும் மாருதி ஆவியகலாதொழிக' என்று ஈசானனும், 'தேவர் படையாற் செருக்களத்தில் வாதா மகன் சாவொழிக, என்று வானோர் தச்சனும் முதலானோர் அனுமனுக்கு அளித அழிவிலாதத் வரங்கள். இவற்றின் விரிவினை உத்தரகாண்டம் அனுமப் படலத்திற் காண்க. சானகி யுதவியாவது, அனுமன் இலங்கையில் அசோக வனத்திற் சிறையிருந்த செல்வியைக்கண்டு இராமனது மணியாழியைத் தந்தபொழுது அதனைப்பெற்றுப் பிரிவின் துயர் தவிர்ந்த பிராட்டி அனுமனை நோக்கி,

'பாழிய பணைத்தோள் வீர
துணையிலேன் பரிவு தீர்த்த
வாழிய வள்ளலே யான்
மறுவிலா மனத்தே னென்னின்
ஊழியோர் பகலா யோதும்
யாண்டெலாம் உலக மேழும்
ஏழும் வீவுற்ற ஞான்றும்
இன்றென இருத்தி'

(சுந்தர—உருக்காட்—72)

என்று உளமகிழ்ந்து அளித்துதவிய இறவாமையாகிய பெருவரம். பிழைத்தல்-பயன் விளைத்தலில் தவறுதல். (194)

## இராமன், தன்னை நொந்துரைத்தல்

8767. புன்றொ ழிற்புலை யரசினை
வெஃகியென் பூண்டேன்
கொன்றொ ருக்கினே னெந்தையைச்
சடாயுவைக் குறைத்தேன்
இன்றொ ருக்கினே னித்தனை
வீரரை யிருந்தேன்
வன்றொ ழிற்கொரு வரம்புமுண்
டாய்வர வற்றோ.

புன்தொழில் புலை அரசினை
வெஃகிஎன் பூண்டேன்?
கொன்று ஒருக்கினேன்,எந்தையை;
சடாயுவைக் குறைத்தேன்;
இன்று ஒருக்கினேன், இத்தனை
வீரரை; இருந்தேன்;
வன்தொழிற்கு ஒரு வரம்பும்
உண்டாய்வர வற்றோ ?

பொ :- 'தாழ்வான செயலால் இழிந்த அரச பதவியை விரும்பி என்ன புகழை மேற்கொண்டேன்? என் தந்தையாகிய தசரத மன்னரைக் கொன்றொழித்தேன்; சடாயுவை வீழ்த்தினேன்; (இப் போர்க் களத்திலுள்ள) இத்தனை வானர வீரர்களையும் இன்று இறக்கச் செய்தேனாய் (நான்மட்டும் உயிர்தாங்கி) இருந்தேன்; (இத்தகைய என்னுடைய) கொடிய தீச்செயல்களுக்கு ஓர் எல்லையும் உண்டாகி அமைய வல்லதோ?'

கு :- 'அரச பதவியை விரும்பி மேற்கொள்ள இசைந்தமையால் நான் அடைந்தது புகழன்று பழியே' என்பான், 'புன் தொழிற் புலை அரசினை வெஃகி என்பூண்டேன்?' எனத் தனக்குள் வினவினான். 'யான் தந்தை பணித்தவண்ணம் அரசபதவியை விரும்பி ஏற்றுக் கொண்டதனால் விளைந்தவை என் தந்தையின் இறப்பும் சடாயுவின் மரணமும் என்பொருட்டுப் போர் செய்யப்புக்க இத்தனை வானரவீரர்களது அழிவுமே யாதலின் என் தீவினையின் காரணமாக நேர்ந்த துன்ப விளைவுகட்கு ஓர் எல்லையில்லை' என இராமன் தன்னை நொந்துரைத்தவாறு. வற்றோ—வல்லதோ?; வல்லதன்று என்பதாம். ஓகாரம், எதிர்மறை. (195)

8768. தமைய னைக்கொன்று தம்பிக்கு
வானரத் தலைமை
அமைய நல்கினெ னடங்கலு
மவிப்பதற் கமைந்தேன்
கமைபி டித்து நின் றுங்களை
யித்துணை கண்டேம்
சுமையு டற்பொறை சுமக்கவந்
தேனெனச் சொன் னான்.

'தமையனைக் கொன்று, தம்பிக்கு
வானரத் தலைமை
அமைய நல்கினென், அடங்கலும்
அவிப்பதற்கு அமைந்தேன்;
கமைபிடித்து நின்று, உங்களை
இத்துணை கண்டேன்;
சுமைஉடல் பொறைசுமக்க வந்தேன்'
எனச் சொன்னான்.

பொ :-அண்ணனைக் கொன்று தம்பிக்கு வானரகுல அரசனாந் தன்மையைப் பொருந்த அளித்தேனாகி, (அவ்வானரர் குலம்) முழுவதும் அழிப்பதற்கு அமைந்துவிட்டேன்; பொறுமையை உறுதியாகக் கொண்டு உங்களை (இவ்வளவு துன்பத்திற்கும் உட்படச்செய்தேன்; பூமிக்குப் பாரமாகவுள்ள எனது உடம்பின் சுமையினைச் சுமத்தற் கென்றே (இவ்வுலகிற்) பிறந்தேன்' என்று கூறி வருந்தினான் (இராமன்).

கு:- பகைவர் சூழலினின்றும் என் மனைவியை மீட்டுக்கொள்ளுதலாகிய எனது காரியம் ஒன்றினையே முடித்துக்கொள்ள எண்ணி, அரசியல் நெறிமுறைக்கு மாறாக மூத்தோனாகிய வாலியைக் கொன்று இளையோனாகிய சுக்கிரீவனை வானரகுல வேந்தனாக்கினேன் என்பான், 'தமையனைக் கொன்று தம்பிக்கு வானரத் தலைமை அமைய நல்கினேன்' என்றான். வாலியின் தம்பியாகிய சுக்கிரீவனுக்கு யான் செய்த உதவியாகிய இதனைக் காரணமாகக்கொண்டு, சுக்ரீவன் முதலிய வானர வீரர்களை எனக்குத் துணையாகப் பெற்று யான் இலங்கை நகரை முற்றி அரக்கரொடு மேற்கொண்ட இப்போர் வானர குல முழுவதும் அழிவதற்கே ஏதுவாயிற்று என்பான், அடங்கலும் அவிப்பதற்கு அமைந்தேன்' என்றான். அடங்கலும்-முழுவதும். அவித்தல்-அழித்தல். கமை-பொறுமை. இவ்வாறு யான் மேற்

கொண்ட செயல்கள் யாவும் பிறர்க்குத் துன்பம் விளைப்பனவாக அமைந்தனவேயன்றி அவற்ருல் யான் எத்தகைய பயனும் அடையப் பெருதேனுகி நிலத்திற்குச் சுமையாகவுள்ளேன் என்பான், 'சுமை உடற்பொறை சுமக்கவந்தேன்' எனத்தன் வாழ்வினை வெறுத்துரைத் தான். 'உங்களை இத்துணை கண்டேன்' என்றது, போர்க்களத்தில் இறந்துகிடக்கும் அனுமன் முதலியோரை முன்னிலைப்படுத்துரைக் கும் நிலையில் அமைந்ததாகும். (196)

### விழுந்துகிடக்கின்ற அங்கதனை நோக்கி அழுதல்

8769. விடைக்கு லங்களி னடுவனோர்
விடைகிடந் தென்னக்
கடைக்கண் டீயுக வங்கதக்
களிற்றினைக் கண்டான்
படைக்க லங்களைச் சுமக்கின்ற
பதகனேன் பழிபார்த்
தடைக்க லப்பொருள் காத்தவா
றழகிதென் றழுதான்.

விடைக் குலங்களின் நடுவன் ஓர்
விடை கிடந்தென்ன
கடைக்கண் தீஉக, அங்கதக்
களிற்றினைக் கண்டான்;
'படைக் கலங்களைச் சுமக்கின்ற
பதகனேன், பழிபார்த்து
அடைக்கலப் பொருள் காத்தவாறு
அழகிது' என்று அழுதான்.

பொ :- எருதுக் கூட்டங்களின் நடுவே ஒப்பற்றதோர் இடபம் கிடந்தாற்போல (ப் பெரு வீரர்களின் நடுவிலே கிடக்கும்) அங்கத ஞகிய யானையை (இராமன் தன்) கண்களின் கடையினின்றும் தீப் பொறி பறக்குமாறு பார்த்தான்; ('பகைவரால் நலிவுருது அடைந் தாரைப் பாதுகாக்கும் நோக்குடன்) ஆயுதங்களைச் சுமந்துகொண் டுள்ள தீவினையாளனுகிய யான், பழி (நேராமற் குறிக்கொண்டு) நோக்கி (என்பால் ஒப்புவித்த) அடைக்கலப் பொருளைப் பாதுகாத்த திறம் மிகவும் அழகாயுள்ளது' என்று கூறி அழுதான்.

கு :- விடை-எருது, இடபம். விடை கிடந்தெனக் கிடந்த அங்கதக்களிறு-என உவமையிலுள்ள 'கிடந்த' என்னும் வினைபொருளிலும் வருவித்துரைக்கப்பட்டது. அங்கதக் களிறு-அங்கதனாகிய யானை; தறுகண்மையாலும்பெருமிதத்தாலும் யானையையொத்த அங்கதனைக் களிறு என உருவகித்தார். கடைக்கண்-கண்கடை; பின்முன்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத் தொகை. அங்கதக் களிற்றினைக் கடைக்கண் தீயுகக்கண்டான் என இயைத்துரைக்க. தீ - வெகுளித்தீ. இராமன் அங்கதனைக் காணும் நிலையில் அவனைக் கொன்ற பகைவன் மேற்சென்ற வெகுளி காரணமாக இராமன் கண்களிலிருந்து தீப்பொறிகள் உக்கன என்பதாம். தன்னைச்சார்ந்தாரைப் பகைவரால் நலிவு தோன்ருவாறு காக்கவல்ல படைக்கலங்களை ஏந்திய யான் அவற்றைக் காலமறிந்து பயன்படுத்தாமல் வெறும் சுமையாகவே கொண்டு திரியும் தீவினையாளனாயினேன் என்பான், 'படைக்கலங்களைச் சுமக்கின்ற பதகனேன்' என்ருன். பதகன் — கொடியான். பழிபார்த்தல் — தன்கண் பழிவராமல் விழிப்பாக இருத்தல். பழிபார்த்து என்னும் செய்தென் வாய்ப்பாட்டு வினையெச்சம், 'காத்தவாறு' என்புழிக்காத்தல் என்னும் வினைமுதல் வினைகொண்டு முடிந்தது. அடைக்கலப் பொருள் என்றது, இறக்கும் நிலையினுலாகிய வாலியால் 'பொய்யடையுள்ளத் தார்க்குப் புலப்படாப் புலவ...... உன்கையடையாகும்' என ஒப்புவிக்கப்பட்ட அங்கதனை, 'காத்தவாறு அழகிது' என்றது, கற்களித்து நண்கட்டாய் என்புழிப்போல 'அழகன்று' என இகழும் நிலையில் வந்த குறிப்புமொழி. (197)

## இராமன், பிரமாத்திரத்தால் தாக்குண்டு கிடக்கும் தம்பியைக் காணுதல்

8770. உடலி டைத்தொடர் பகழியி
னெளிர்கதிர்க் கற்றை
சுடரு டைப்பெருங் குருதியிற்
பாம்பெனச் சுமந்த
மிடலு டைப்பண மீமிசைத்
தான்பண்டை வெள்ளைக்
கடலி டைத்துயில் வானன்ன
தம்பியைக் கண்டான்.

உடலிடைத் தொடர் பகழியின்
ஒளிர்கதிர்க் கற்றை,
சுடருடைப் பெருங் குருதியில்
பாம்புஎன, சுமந்த
மிடலுடைப் பணம் மீமிசை,
தான்,பண்டை வெள்ளைக்
கடலிடைத் துயில்வான் அன்ன
தம்பியைக் கண்டான்.

பொ :- உடம்பின் இடையே துளைத்து ஊடுருவிய அம்புகளின் ஒளிவிட்டு விளங்கும் ஒளித்தொகுதியானது சுடரினையுடைய பெரிய குருதியினிடத்தே (விரவிப்) பாம்பினையொத்து (ச் சூழ்ந்து) தோன்ற, இராமனாகிய தான்,-(திருமாலாகிய) பண்டைநிலையில் சுமக்கின்ற வன்மையினையுடைய (ஆதிசேடன் என்னும்) பாம்பின்மேல் வெண்ணிறம்வாய்ந்த பாற்கடலின்கண்ணே துயில்பவனாகிய தன்னையொத்துக் கிடக்கின்ற தன் தம்பியாகிய இலக்குவனைக் கண்ணுற்றான்.

கு :- இலக்குவனது உடலிடமெங்கும் துளைத்து ஊடுருவிய அம்புகளின் ஒளித்தொகுதியானது, தன்னுடன் வெளிப்பட்ட பெருங்குறுப்பரப்பிலே விரவித்தோன்ற, வெண்மைநிறம்வாய்ந்த வானர சேனையின் நடுவே வீழ்ந்து கிடக்கும் இலக்குவனுக்கு ஆதிசேடன் என்னும் பாம்பணைமேல் பாற்கடலில் துயில்கொள்ளும் திருமால் உவமை. பகழியின் ஒளிகதிர்க் கற்றை, குருதியிற் பாம்பு எனத் தோன்ற என ஒரு சொல் வருவித்துரைக்க. மிடல் - வலிமை. பணம் என்றது, படத்தினையுடைய பாம்பினை. மீ, மிசை என்னும் இரண்டு சொற்களும் மேல் என்னும் ஒரு பொருளனவாய் இணைந்து வந்தன. இவ்வாறு ஒரு பொருளுடைய இரு சொற்கள் ஒன்றி வருவனற்றை மீமிசைச் சொல் என வழங்குவர். வெள்ளைக்கடல் என்றது, வெண்மை நிறம்வாய்ந்த பாற்கடலை. பாற்கடலில் ஆதி சேடன்மேல் அறிதுயில் கொள்ளும் பரமனாகிய திருமாலே தீயோரை ஒறுத்து நல்லோரைப் பாதுகாத்தருளுதற் பொருட்டு இராமனாக அவதரித்துத் தன் ஆருயிர்த் தம்பியாகிய இலக்குவன் பகைவனது படையால் இறந்துகிடக்கும் இவ் அவல நிலையைக்கண்டு இத்துணையின்னலுழந்தான் என்பது உணர்த்துவார், 'தான், பண்டை வெள்ளைக் கடலிடைத் துயில்வான் அன்ன தம்பியைக் கண்டான்' என்றார் ஆசிரியர். (198)

## இராமன் ஆற்றொணாத் துயருற்று உணர்வு ஒடுங்குதல்

8771. பொருமி னானகம் பொங்கினா
னுயிர் முற்றும் புகைந்தான்
குரும ணித்திரு மேனியு
மன மெனக் குலைந்தான்
தரும நின்றுதன் கண்புடைத்
தலமரச் சாய்ந்தான்
உருமி னாலிடி யுண்டதோர்
மராமர மொத்தான்.

பொருமினான், அகம்; பொங்கினான்;
உயிர்முற்றும் புகைந்தான்;
குரு மணித் திருமேனியும்,
மனம்எனக் குலைந்தான்;
தருமம் நின்று தன்கண்புடைத்து
அலமரச் சாய்ந்தான்;
உருமினால் இடியுண்டது ஓர்
மராமரம் ஒத்தான்.

பொ :- (இரத்த வெள்ளத்திற் கிடக்கும் இலக்குவனைக் கண்ணுற்ற இராமன்,) உள்ளத்தே துன்புற்றான்; வெகுளி மீதூரப்பெற்ற வனாகி உயிர்ப்பு முழுவதும் புகையுடன் தோன்றப் பெற்றான்; நிறந் தங்கிய நீலமணி போலும் (தனது) அழகிய உடம்பும் உள்ளம்போல நடுக்கமுற்றான். அறக்கடவுள் (இத் துன்பநிலையினைக் கண்டு இரங்கி) நின்று தன் கண்களில் அடித்துக் கொண்டு மனஞ்சுழன்று வருந்துமாறு (நிலத்திற்) சாய்ந்தான்; இடியினால் தாக்கப்பட்டதொரு மராமரத்தையொத்து (த் தரையில்) வீழ்ந்தான்.

கு :- அகம் பொருமினான் என இயையும். பொங்குதல்-வெகுளுதல். மனம் எனக் குருமணித் திருமேனியும் குலைந்தான் என்க. குரு-நிறம். மணி-நீலமணி. குலைதல்-நடுங்குதல். காணவொண்ணாப் பெருந்துயர்தரும் அவல நிகழ்ச்சியைக் காண்போர் தம் கண்களிற் புடைத்துக்கொண்டு வருந்தும் உலக மக்களது நிகழ்ச்சியை அருவப் பொருளாகிய அறத்தெய்வத்தின் மேலேற்றி, 'தருமம் நின்று தன் கண் புடைத்து அலமர' எனக் கூறினர். தருமம்-அறமாகிய தெய்வம். இடியுண்ட மரம்போல் உணர்வற்றுத் தரையின் மிசை வீழ்ந்தான் என்பார், 'உருமினால் இடியுண்டதோர் மராமரம் ஒத்தான்' என்றார். உரும்-இடி. (199)

8772. உயிர்த்தி லன்னெரு நாழிகை
யுணர்ந்தில னென்றும்
வியர்த்தி லன்னுடல் விழித்திலன்
கண்ணிணை விண்ணேர்
அயிர்த்தி லன்கொலென் றஞ்சின
ரங்கையுந் தாளும்
பெயர்த்தி லன்னுயிர் பிரிந்திலன்
கருணையாற் பிறந்தான்.

உயிர்த்திலன் ஒரு நாழிகை;
உணர்ந்திலன் ஒன்றும்;
வியர்த்திலன் உடல்; விழித்திலன்
கண் இணை; விண்ணோர்
அயிர்த்து, 'இலன்கொல் ?' என்று
அஞ்சினர்; அங்கையும்தாளும்
பெயர்த்திலன்; உயிர் பிரிந்திலன்—
கருணையால் பிறந்தான்.

பொ :- (அவ் இராமன்) ஒரு நாழிகைப் பொழுதளவும் மூச்சு விட்டிலன்; (அங்கு நிகழ்வது) ஒன்றும் உணர்ந்திலன்; உடம்பில் வியர்வையுண்டாகப் பெற்றிலன்; இரண்டு கண்களையும் விழித்துப் பார்த்திலன்; அழகிய கைகளும் கால்களையும் இடம்பெயர்த்து அசைத்திலன்; (அந் நிலையில்) தேவர்கள் ('உடம்பின்கண் உயிர்) இன்றி இறந்து போயினனோ ?' என ஐயுற்று அச்சமுற்றனர். (அவன் உயிர்கள்மேல் வைத்த) கருணை காரணமாகப் பிறந்தவனாதலால் (உடம்பை விட்டு) உயிர் நீங்குதல் இலனாயினான்.

கு :- ஒரு நாழிகை உயிர்த்திலன்; ஒன்றும் உணர்ந்திலன்; உடல் வியர்த்திலன்; கண் இணை விழித்திலன்; அங்கையும் தாளும் பெயர்த்திலன்; விண்ணோர், 'இலன்கொல்' என்று அயிர்த்து அஞ்சினர்; கருணையாற் பிறந்தான் (ஆதலின்) உயிர் பிரிந்திலன் என இயைத்துரைக்க. ஒருவரது உடம்பின்கண்ணே உயிர் நீங்காது நிலைபெற்றுளது என்பதனைத் துணிதற்கு உயிர்த்தலும் உணர்தலும், வியர்த்தலும், விழித்துப் பார்த்தலும், கைகால்களை இடம் பெயர்த்து அசைத்தலும் என உயிரொடுகூடிய வழியுளவாம் உடலின் இயக்கங்களுள் யாதானும் ஒன்று அவ் வுடம்பின்கண் இருத்தல் வேண்டும். ஒரு நாழிகையளவு இராமனது உடம்பினுல் இவற்

றுள் எதனையும் காணாத தேவர்கள் இராமன் இறந்து விட்டானோ என்று ஐயுற்று அஞ்சினார்கள் என்க. இராமன் அன்புடைய நல்லோர்களை இடர் நீக்கி உய்வித்தல் வேண்டும் என்னும் பெருங்கருணை காரணமாக இரக்கமற்ற கொடியோர்களை ஒறுத்தடக்கத் தோன்றிய வனாதலால் தன் தோற்றத்தின் நோக்கம் இன்னும் நிறைவேறாத நிலையில் உயிர் நீங்குதல் கூடாது என்னும் கருத்தால் உயிர் நீங்காத வனாயினான் என்பது புலப்பட, 'கருணையாற் பிறந்தான் உயிர்பிரிந்திலன்' என்றார். இந் நிலையில் இராமன் உயிர் நீங்காமைக்குக் கருணையாற் பிறந்தமையே காரணம் என்றாராயிற்று. இனி, கருணையாற் பிறந்தான் என்பதனை இச் செய்யுளுக்கு எழுவாயாக்கியுரைத்தலும் உண்டு. கருணையாற் பிறந்தலாவது, இறைவன், ஏனைய உயிர்களைப்போன்று முன்செய்த வினைக்காரணமாகப் பிறவாது, அவ்வுயிர்கள்மேல் வைத்த தனது அருள் காரணமாகத் தான் விரும்பிய திருமேனியினைக்கொண்டு பிறத்தல். (200)

8773. தாங்கு வாரில்லைத் தம்பியைத்
தழீ இக் கொண்ட தடக்கை
வாங்கு வாரில்லை வாக்கினாற்
றெருட்டுவா ரில்லை
பாங்க ராயினர் யாவரும்
பட்டனர் பட்ட
தீங்கு தானிது தமியனை
யார்துயர் தீர்ப்பார்.

தாங்குவார் இல்லை; தம்பியைத்
தழீஇக்கொண்ட தடக்கை
வாங்குவார் இல்லை; வாக்கினால்
தெருட்டுவார் இல்லை;
பாங்கர் ஆயினர் யாவரும்
பட்டனர்; பட்ட
தீங்குதான் இது; தமியனை
யார்துயர் திர்ப்பார்.

பொ :- (அங்கு, இராமபிரானைத்) தாங்கிக் கொள்வார் எவரும் இலர்; தம்பியாகிய இலக்குவனைத் தழுவிக்கொண்டுள்ள (இராமனது) பெரிய கையினை (ப் பிரித்து) வாங்கி எடுப்பவர் ஒருவருமிலர்; தேறுதல் மொழிகளால் தேற்றுவாரும் இலர்; (அவனுக்கு) அணுக்க

ராயுள்ளோர் அனைவரும் இறந்துபட்டனர். (அவனுக்கு) உண்டாகிய துன்பம் இத் தன்மையது. (உற்றார் சுற்றத்தார் எருவருமின்றித்) தனியனாகவுள்ள அவனைத் துயர் தீர்க்கவல்லார் (அங்கு) யாருளர்? (ஒருவரும் இல்லை).

கு :- தாங்குதல், சாய்ந்து தரையில் விழாது கைகளால் தாவிக்கொண்டு அயர்வு நீக்குதல். தடக்கை வாங்குதல்-பெரிகையினைப் பற்றி எடுத்தல். வாக்கினால் தெருட்டுதல்-ஆறுதல் மொழிகளைக்கூறி உள்ளத்திலுள்ள கலக்கத்தைப் போக்கித் தெளிவடையச் செய்தல். பாங்கர் ஆவார், அன்பினால் அணுகிநின்று இடர்நீக்கி ஆவனபுரியும் உற்றார் சுற்றத்தார் முதலானோர். படுதல்-இறத்தல், உண்டாதல். இது-இத் தன்மையது; என்றது, துன்பக்காலத்துத் துணையாவார் ஒருவருமில்லாத் தனிமையை. இச் செய்யுள் கவிக்கூற்று. (201)

### இராமனைத் தேற்றுவாரில்லாத போர்க்களத்தின் தோற்றம்

8774. கவந்த பந்தமுங் கழுதுந்தங்
கணவரைக் காணார்
சிவந்த கண்ணியர் தேடினர்
திரிபவர் திரளும்
உவந்த சாதக ரீட்டமு
மோரியி னொழுக்கும்
நிவந்த வல்லது பிறரில்லைக்
களத்திடை நின்றார்.

கவந்த பந்தமும், கழுதும்,
தம்கணவரைக் காணார்
சிவந்த கண்ணியர் தேடினர்
திரிபவர் திரளும்,
உவந்த சாதகர் ஈட்டமும்,
ஓரியின் ஒழுக்கும்,
நிவந்த; அல்லது பிறர் இல்லை,
களத்திடை நின்றார்.

பொ :- தலையற்ற உடம்புகளின் தொகுதியும் பேயும், தம்முடைய கணவரைக் காணாமையால் (துயரத்தால்) சிவந்த கண்களையுடையராய்த் தேடி அலைபவராகிய மகளிர் கூட்டமும் (தமக்கு இரை

யாகும் பிணங்களைக் கண்டு) உவகையுற்ற பூதங்களின் தொகுதியும், நரிகளின் வரிசையும் மிக்குக் காணப்பட்டன அல்லது (அப்) போர்க் களத்தின்கண்ணே உயிர்தாங்கி நின்றார் பிறர் யாரும் இலர்.

கு:- கவந்தம்-தலையற்ற உடம்பு. கழுது-பேய். தம் கணவரது உடம்பினைக் காணாது அலமந்து அழுது துன்புற்றமையாற் செந்நிற மடைந்த கண்களையுடைய மகளிர் கூட்டம் என்பார், 'சிவந்த கண்ணியர் தேடினர் திரிபவர்திரள்' என்றார். சாதகர்-பூதங்கள். பந்தம், திரள், ஈட்டம் என்பன கூட்டம் என்னும் ஒருபொருள் குறிப்பன. ஒழுக்கு-வரிசை. நிவத்தல்-மிக்கு உயர்தல். (202)

**இராமனது துயர்கண்டு தேவர் முதலிய யாவரும் வருந்துதல்**

**8775. வான நாடியர் வயிறலைத்**
**தழுதுகண் மழைநீர்**
**சோனை மாரியிற் சொரிந்தனர்**
**தேவருஞ் சோர்ந்தார்**
**ஏனை நிற்பவுந் திரிபவு**
**மிரங்கின வெவையும்**
**ஞான நாயக னுருவமே**
**யாதலி னடுங்கி.**

வான நாடியர் வயிறுஅலைத்து
அழுது, கண்மழைநீர்
சோனை மாரியின் சொரிந்தனர்;
தேவரும் சோர்ந்தார்;
ஏனை நிற்பவும் திரிபவும்
இரங்கின, எவையும்
ஞான நாயகன் உருவமே
ஆதலின் நடுங்கி.

பொ:- (இராமனது துயர்நிலையைக் கண்ணுற்ற) வானவர் நாட்டு மகளிர் தம் வயிற்றில் அடித்துக்கொண்டு அழுதுகரிய கண்ணின் நீரை விடாமழையினுடைய மேகமபோலச் சொரிந்தனர். (உடன் நின்ற) தேவர்களும் மனம் சோர்வுற்று வருந்தினர். (உலகிலுள்ள) யாவையும் ஞானப் பொருளாம் இறைவனாகிய திருமாலின் வடிவமேயாதலால் ஏனைய நிற்பனவும் நடப்பனவும் ஆகிய எல்லாவுயிர்களும் நடுங்கி வருந்தின.

கு :- வானநாடர் என்னும் ஆண்பாற்பன்மையினை அடியொற்றி யமைந்தது, வானநாடியர் என்னும் பெண்பாற் பன்மைப் பெயர். கண்மழைநீர் என்பதனை மழைக்கண் நீர் என மாற்றுக. சோனை மாரி—விடா மழையினுடைய மேகம். இன், உவமவுருபு. நிற்ப—நிலையியற் பொருள்கள்; அசரம். நடப்ப—இயற்கியற் பொருள்கள்; சரம். ஞானநாயகன்—ஞானத்தினையே தன் உண்மையுருவாகக் கொண்டுள்ள இறைவன்; என்றது, ஈண்டுத் திருமாலின் அமிச மாகிய இராமபிரானை. நிற்பன நடப்பனவாக இவ் வுலகிலுள்ள எல்லாவுயிர்களும் இறைவனுக்குரிய உடம்புகளாகத் திகழ்தலால் உயிர்க்குயிராகிய இராமபிரானுற்ற துயரம் அவனுக்கு உடம்பா யுள்ள அவ் வுயிர்களைப்பற்றி வருத்தின என்பதாம். (203)

**8776.** முகையி ணுண்மலர்க் கிழவற்கு
முக்கணுன் றனக்கும்
நகையி னீங்கின திருமுகங்
கருணையு ணலியத்
தொகையு ணின்றவர்க் குற்றன
சொல்லியென் றொடர்ந்த
பகையும் பார்த்தன்று பாவமுங்
கலுழ்ந்தது பரிவால்.

முகையின் நாள்மலர்க் கிழவற்கும்
முக்கணுன் தனக்கும்
நகையின் நீங்கின, திருமுகம்,
கருணை உள் நலிய;
தொகையுள் நின்றவர்க்கு உற்றன
சொல்லி என்? தொடர்ந்த
பகையும் பார்த்தின்று; பாவமும்
கலுழ்ந்தது, பரிவால்.

பொ :. முகையின் தன்மையினையுடையதாய் அன்றலர்ந்த (திருமாலின் உந்தித் தாமரை) மலரிலே வாழும் முதியோனாகிய பிரமனுக்கும் மூன்று கண்களையுடையவனாகிய உருத்திர மூர்த்திக்கும் (அத் துன்பத்தினைக் காணப்பொறாத) அருட்குணம் உள்நின்று வருத்துதலால் திருமுகங்கள் மகிழ்ச்சியாகிய மலர்ச்சியின் நீங்கி வாட்டமுற்றன. (முப்பது என்னும்) எண்ணின் அளவினையுடைய

ராய் நின்ற (ஏனைய) தேவர்களுக்கு நேர்ந்த துன்பநிலையைச்சொல்லி யாது பயன்? தொடர்ந்துள்ள பகையும் அத் துன்பநிலையினைக் கண் விழித்துப் பார்த்ததன்று. (வருத்திநிற்கும்) பாவமாகிய தீவினையும் இரக்கத்தினுற் கண்ணீர் விட்டழுதது.

கு :- நாண்மலர்க் கிழவர்க்கும் முக்கணுன் தனக்கும் கருணை உள் நலியத் திருமுகம் நகையின் நீங்கின என இயையும். கிழவன்—முதியோன்; 'மூத்துடன் நடுங்கிநிற்கும் இக்கிழவனே' (7- ) இச் சொல் இப் பொருளில் வழங்கியுள்ளமை காணலாம். நலிய—வருத்துதலால், செயவெனச்சம் காரணப் பொருளில் வந்தது. நகை—மகிழ்ச்சிக் குறிப்பாகிய முக மலர்ச்சி. நகையின் என்புழி ஐந்தாவதாகிய இன்னுருபு நீக்கப் பொருளில் வந்தது. தொகையுள் நின்றவர் என்றது, பிரமா விஷ்ணு உருத்திரன் என்னும் இம் மூவரின் வேருக முப்பத்து முக்கோடி என்னும் தொகையினராகிய ஏனைத் தேவர்களை பார்த்ததன்று என்பது பார்த்தன்று என வந்தது. பார்த்தல்—கண் களைவிழித்துப் பார்த்தல். பார்த்ததன்று என எதிர்மறுத்துரைக்கவே காணுதற்கு ஆற்றுது கண்களை மூடிக்கொண்டது என்றவாறு. பாவமும் பரிவால் கலுழ்ந்தது என்க. பரிவு—இரக்கம். (2΄4)

## இராமன், சிறிது உணர்வு வரப்பெற்றுக் கண் விழித்துப் பார்த்து தம்பி இலக்குவன் இறந்தான் என்பதனை யுணர்ந்து பலவாறு புலம்புதல்

8777. அண்ண லுஞ்சிறி துணர்விஞேெ
டயாவுயிர்ப் பணுகிக்
கண்வி ழித்தனன் றம்பியைத்
தெரிவுறக் கண்டான்
விண்ணை யுற்றனன் மீள்கில
னென்றகம் வெதும்பிப்
புண்ணி னுற்றதோ ரெரியன்ன
துயரினன் புலம்பும்.

அண்ணலும், சிறிது உணர்விஞேடு
அயாவுயிர்ப்பு அணுகி,
கண் விழித்தனன்; தம்பியைத்
தெரிவுறக் கண்டான்;

'விண்ணை உற்றனன்; மீள்கிலன்'
என்று,அகம் வெதும்பி,
புண்ணின் உற்றது ஓர்எரிஅன்ன
துயரினன் புலம்பும்.

பொ:- பெரியோனாகிய இராமபிரானும் சிறிது உணர்வுடன் பெருமுச்சு வரப்பெற்றுக் கண்களை விழித்தான். தம்பியாகிய இலக்குவனை நன்கு உற்றுப்பார்த்தான். '(இவன் இறந்து) விண்ணுலகடைந்தான்; (இனி) மீள மாட்டான்' என்று எண்ணி உள்ளம் அழன்று வெம்பிப் புண்ணிடத்தே நெருப்புத் தோய்ந்தாலொத்த (தாங்கொணுத்) துன்பத்தினையுடையவனாகி (ப் பின் வருமாறு) வருந்தி அரற்றுவானாயினான்.

கு:- அண்ணல் என்றது, இராமபிரானை. அயாவுயிர்ப்பு—பெருமுச்சு. 'விண்ணையுற்றனன் மீள்கிலன்' என்றது,இலக்குவனது நிலையையுற்று நோக்கிய இராமனது எண்ணம். மாற்றானது சூழ்ச்சியால் ஆருயிர்த் தேவியாகிய சீதையைப் பிரிந்து வருந்தும் வருத்தத்தின்மேலும் தன் ஆருயிர்த் தம்பியாகிய இலக்குவனையிழந்த துயரமும் சேர்ந்து புண்ணிலுள்ளே நெருப்புத் தோய்த்தாற் போன்று இராமபிரானை வருந்தின என்பார், 'புண்ணின் உற்றதோர் எரியன்ன துயரினன்' என்றார். புலம்புதல்—செயலற்று அரற்றி வருந்துதல். (205)

8778. எந்தை யிறந்தா னென்று
மிருந்தே னுலகெல்லாந்
தந்தன னென்னுங் கொள்கை
தவிர்ந்தேன் றனியல்லேன்
கந்தனி ருந்தாய் நீயென
நின்றே னிதுகாணேன்
வந்தனெ னையா வந்தென
னையா வினிவாழேன்.

'எந்தை இறந்தான்' என்றும்,
இருந்தேன்; உலகுஎல்லாம்
தந்தனன் என்னும் கொள்கை
தவிர்ந்தேன் தனிஅல்லேன்,

கந்தன் இருந்தாய் நீ என,
நின்றேன்; இது காணேன்;
வந்தனென், ஐயா ! வந்தனென்,
ஐயா! இனிவாழேன்.

பொ :- (முன்னியது முடிக்குந் திறத்தால்) முருகனாகிய நீ (துணையாக) இருந்தாய்; (ஆதலால், நான்) தனித்துள்ளவன் அல்லேன் என்ற எண்ணத்தால், எம் தந்தை (தசரதன்) இறந்தான் எனக் கேள்வியுற்றும் (இறவாது உயிர்தாங்கி) இருந்தேன்; 'உலகம் முழுவதனையும் (பரதனே ஆளத்) தந்தேன்' என்ற (எனது உறுதி யான) கொள்கையில் நெகிழ்ந்து நீங்கி (எனது ஆணையின் வழிநின்று பரதன் ஆளும்படி) ஆட்சியுரிமையை ஏற்றுக்கொண்டேனாகி (ப் பகைவரை எதிர்க்கும் உறுதிபூண்டு) நின்றேன். (நினக்கு நேர்ந்த) இத் துயர்நிலையைக் காணப் பெறுகிறேன்; ஐயனே ! (நீயின்றி ஒருகணமும் உயிர் வாழமாட்டேன்; ஐயனே ! இதோ (நின்னுடன்) வந்தேன் வந்தேன்.

கு :- கந்தன் நீ இருந்தாய் (ஆதலால்) தனி அல்லேன் என, இருந்தேன், தவிர்ந்தேன், நின்றேன் என இயையும். என்றும் - என்று சொல்லக் கேட்டும். இருந்தல்—இறவாது உயிரோடிருத்தல். கொள்கை தவிர்தல்—தான் முன்கொண்ட உறுதிப்பாட்டினின்றும் நெகிழ்ந்து விலகுதல். கந்தன் – முருகன். 'முருகொத்தீயே முன்னி யது முடித்தலின்' (புறம்— ) என்றவாறு எத்தகைய பெருஞ் செயலையும் இடையூறின்றி இனிது நிறைவேற்றவல்ல அஞ்சாமை யும் ஆண்மையும்வாய்ந்த இளையோன் இலக்குவனாதலின் கந்தனை உவமை கூறத்தக்க பேருற்றல்மிக்க அவனை 'கந்தன் நீ இருந் தாய்' என முன்னிலைப் படுத்திக் கூறினான் இராமன். 'இது' என்றது, இந்திரசித்து ஏவிய பிரமாத்திரத்தால் இலக்குவன் உடல் முழுதும் துளைக்கப்பட்டுக் கிடக்கும் அவலநிலையை. (206)

8779. தாயோ நீயே தந்தையு
நீயே தவநீயே
சேயோ நீயே தம்பியு
நீயே திருநீயே
போயோ நின்று யென்னை
யிகந்தாய் புகழ்பாராய்
நீயோ நானு நின்றன
னெஞ்சம் வலியேனே.

'தாயோ நீயே; தந்தையும்
நீயே; தவம்நீயே;
சேயோ நீயே; தம்பியும்
நீயே; திருநீயே;
போயோ நின்ருய், என்னை
இகந்தாய், புகழ்பாராய்,
நீயோ; நானும் நின்றனன்;
நெஞ்சம் வலியேனே!

பொ :- (எனக்குத்) தாயும் நீயே; தந்தையும் நீயே; தவமும் நீயே; மைந்தனும் நீயே; தம்பியும் நீயே; செல்வமும் நீயே. (இத் தகைய) நீயோ புகழைச் கருதாமல் என்னை விட்டு, நீங்கினையாய். (உயிர் துறந்து) சென்று நின்ருய். (நின் அன்புக்குரிய) நானும் (உடனுயிர் துறவாது) உயிர்தாங்கி நின்றேன். (ஆகவே, நின்னை விட) நெஞ்சம் வலிமை படைத்துள்ளேன் போலும்?

கு :- தம்பியாகிய நீ என்னை அன்பினுல் உணவு முதலியன அளித்துப் பாதுகாப்பதில் பெற்ற தாயாகவும், நல்லுணர்வளித்து நெறிப்படுத்துவதில் தந்தையாகவும், வேண்டிய வேண்டி யாங்கு எய்துவித்தலில் தவமாகவும் என் பொருட்டு நல்லறங்களைச் செய்து மேற்கதி உய்க்கும் திறத்தில் மைந்தனுகவும் அறமும் இன்பமுமாகிய இரு பயன்களையும் ஒருங்கேயடையத் துணைபுரித லால் திருவாகவும் நிகழ்ந்தனை என்பான், 'தாயோ நீயே தந்தையும் நீயே தவம் நீயே, சேயோ நீயே தம்பியும் நீயே திருநீயே' என இரா மன் இலங்குவனை விளித்தான். இத் தொடர்,

'தாயொக்கும் அன்பின் தவமொக்கும் நலம் பயப்பின்
சேயொக்கும் முன்னின்ருெரு செல்கதி யுய்க்கு நீரால்'
(கம்பர்-பால.)

என முன் தசரத மன்னனைக் குறித்துக் கூறிய செய்யுட் பொருளை அடியொற்றியமைந்திருத்தல் காணலாம். தாயோ, சேயோ என் புழி ஓகாரங்கள் சிறப்புணர்த்தி நின்றன. நீயோ புகழ் பாராய் என்னை இகழ்ந்தாய் போயோ நின்ருய் என இயைக்க. ஓகாரம், அசை. தம்பியாகிய நீ உடன் பிறந்தான் என்ற அளவில் அமை யாது எனக்கு இருமுது குரவரும் தவமும், மைந்தனும் பொருளும் ஆகப் பல்வகையானும் அன்புசெய்து ஆதரித்தனை. அத்தகைய நீ இப்பொழுது வன்னெஞ்சமுடையையாய் என்னை இன்னலுட் படுத்தி என்னைவிட்டுப் பிரிந்து சென்றமையால் யான் எல்லா நலங்

களையும் இழந்து தனிமையுற்றவனாயினேன். நின்னாற் பலவகையாலும் உதவிபெற்ற யான் நீ இறக்கவும் நின்னுடன் இறவாது உயிர்தாங்கி யிருந்தலால் மிகவும் நின்னினும் வலிய நெஞ்சினையுடையேன் போலும் என இராமன் துயருழந்து புலம்பினான் என்பதாம். (207)

8780. ஊறு நின்ற புண்ணுடை
யாய்பா லுயிர்காணேன்
ஆறு நின்றே னாவி
சுமந்தே யழிகின்றேன்
ஏறே யின்னு முய்யினு
முய்வே னிருகூறுக்
கீறு நெஞ்சம் பெற்றன
னன்றோ கெடுவேனே.

'ஊறு நின்ற புண்ணுடையாய்பால்
உயிர் காணேன்;
ஆறு நின்றேன், ஆவி
சுமந்தே அழிகின்றேன்;
ஏறே! இன்னும் உய்யினும்
உய்வேன்; இருகூறுக்
கீறு நெஞ்சம் பெற்றனன்
அன்றோ, கெடுவேனே?

பொ:- (உதிரம்) ஊறுகின்ற புண்ணையுடையாய் உள்ள நினது உடம்பின்கண்ணே உயிர் நிலைபெற்றிருத்தலைக் காணப் பெற்றிலேன்; ஆறுதலுடையேனாய் உயிரைச் சுமந்து வருந்துகின்றேன். ஆண் சிங்கம் போல்வானே! (அன்பின் திறமின்றிக்) கெட்டொழிவேனாகிய யான், (நீ இறந்தமையறிந்தும்) இரண்டு கூறாகப் பிளந்து சிதைவுறாத வலிய நெஞ்சத்தைப் பெற்றேன் அல்லேனோ? (ஆதலால்) இனிமேலும் பிழைத்து உயிர்தாங்கியிருப்பினும் இருப்பேன்.

கு:- ஊறுதல்—உள்ளிருந்து சுரத்தல். 'ஊறுநின்ற புண்' என்புழி இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது. ஆறுதல், என்றது, துன்பங்கண்டவழி ஆற்றாமையுறுதலின்றி அமைதியாக இருத்தலை. என்பால் உடன் பிறந்தார்க்குரிய உண்மையான அன்பு நிலைபெற்றிருக்குமாயின், நின்னுடம்பினை

விட்டு உயிர் நீங்கினமை கண்ட அப்பொழுதே என் நெஞ்சம் இரண்டு பிளவாகப் பிளந்து சிதைய என் உயிரும் அப்பொழுதே நீங்கியிருத்தல் வேண்டும். அவ்வாறன்றி யான் இன்னும் உயிருடன் இருப்பதொன்றே யான் உடன்பிறப்பாளரிடத்து அன்பு சிறிதும் இல்லாதவன் னெஞ்சமுடையேன் என்பதனையும் அது காரணமாக நின்னையிழந்துள்ள இந்நிலையிலும் மேலும் உயிருடன் வாழ்ந்தாலும் வாழ்வேன் என்பதனையும் நன்கு புலப்படுத்தும் என இராமன் இலக்குவனது பிரிவாற்ருமையினை எண்ணிப் புலம்பினுன் என்றவாறு. ஏறு – ஆண்; சிங்கத்துள் ஆணினைக் குறித்தது. ஏறு போல் வானை ஏறு என்ருர். ஏறு, உவம ஆகுபெயர். இராமன் தன்பால் அன்புடைய இலக்குவனைப் பிரிந்த நிலையிற்கூறிய இவ் வரற்றுதல் மொழி, திருவாதவூரடிகள் தம்பால் அருளுடைய குருவைப் பிரிந்த நிலையில்,

‘தாயிலாகிய இன்னருள் புரிந்த எங் தலைவனை நனிகாணேன்
தீயில் வீழ்கிலேன் திண்வரையுருள் கிலேன் செழுங்கடல்
புகுவேனே’

எனக் கூறிய அரற்றுதல் மொழியினை ஒத்தமைந்திருத்தல் காணலாம். (208)

8781. பயிலுங் காலம் பத்தொடு
நாலும் படர்கானத்
தயில்கின் றேனுக் காவன்
நல்கி யயிலாதாய்
வெயிலென் றுன்ருய் நின்று
தளர்ந்தே மெலிவெய்தித்
துயில்கின் ருயோ வின்றிவ்
வுறக்கந் துறவாயோ.

‘பயிலும் காலம் பத்தொடு
நாலும் படர்கானத்து
அயில் கின்றேனுக்கு ஆவன
நல்கி, அயிலாதாய்!
வெயில்என்று உன்ருய்,நின்று
தளர்ந்தே! மெலிவுஎய்தி,
துயில்கின்ருயோ, இன்று? இவ்
உறக்கம் துறவாயோ?

பொ :- பரவிய இடமகன்ற காட்டின்கண்ணே பழகி வாழும் பதினான்கு ஆண்டுகளிலும் (உணவினை) உண்கின்றேனாகிய எனக்குப் பொருந்திய உணவுகளைத் (தேடித்) தந்து, (நீ மட்டும்) உண்ணா திருந்தவனே! (வெம்மைமிக்க) வெயில் என்று நினையாது (எனக்குத் துணையாக) நின்று தளர்ச்சியுற்று. இப்பொழுது மேலும் மெலிந்து உறங்குகின்றாயோ? இந்த(ப் பெரிய) உறக்கத்தினை விட்டு எழமாட்டாயோ?

கு :- படர்கானத்துப் பயிலும் காலம் பத்தொடு நாலும் அயில்கின்றேனுக்கு ஆவன நல்கி, அயிலாதாய்! வெயில் என்று உன்னாய் நின்று தளர்ந்தாய்; இன்று மெலிவு எய்தித் துயில்கின்றாயோ? இவ் உறக்கம் துறவாயோ? என இயைத்துப் பொருள் கொள்க. பயிலுதல் – பழகி வாழ்தல். காலம் பத்தொடு நாலும் என்றது, மீளவும் விழித்து எழாத நிலையில் ஏற்பட்ட பேருறக்கமாகிய இறப்பினை. உறக்கந் துறத்தல் – இறப்பினை நீங்கி உய்திபெற்று எழுதல். (209)

8782. அயிரா நெஞ்சு மாவியு
மொன்றேயெனுமச் சொற்
பயிரா வெல்லைப் பாதக
னேற்கும் பரிவுண்டோ
செயிரோ வில்லா வுன்னை
யிழந்துந் திரிகின்றேன்
உயிரோ நானோ வாரினி
யுன்னோ டுறவையா.

'அயிரா நெஞ்சும் ஆவியும்
ஒன்றேஎனும் அச்சொல்
பயிரா எல்லைப் பாதகனேற்கும்
பரிவு உண்டோ ?
செயிரோ இல்லா உன்னை
இழந்தும், திரிகின்றேன்;
உயிரோ, நானோ, ஆர்இனி
உன்னோடு உறவு?ஐயா!

பொ :- ஐயுறாத தெளிந்த நெஞ்சமும் உயிரும் (தம்முட் பிரிவின்றி ஒன்றிக்கலந்து நிற்றலால்) ஒன்றே என (அறிந்தோர்) கூறும் அம் மொழி(என்னிடத்தும் பொருந்தியமையச்) கூறப்படாத நிலையில் தீவினையாளனாகிய எனக்கும் அன்பென்பது உண்டா

குமோ? ஒரு குற்றமும் இல்லாத (அன்பிற் சிறந்த தம்பியாகிய) உன்னையிழந்த இந் நிலையிலும் (வருத்தமின்றித்) திரியும் நிலையின னாகவுள்ளேன். ஐயனே! நின்னுடன் (உண்மையான) உறவுடையார் (அன்புடைய நெஞ்சத்தினனாகச் சொல்லிக் கொண்டிருக்கிற) யானோ? எனது உயிரோ? இவ் விருவருள் யார்?

கு :. அயிர்த்தல்—ஐயுறுதல். பயிர்தல்—அழைத்தல்; கூறுதல். செயிர்—குற்றம். ஓ, ஆசை. உள்ளமும் உயிரும் பொருட்டன்மையால் வேறாயினும் அன்பின் கலப்பினால் உள்ளமும் உயிரும் ஒன்றே எனக் கொள்ளத் தக்கவாறு ஒற்றித்து நிற்பனவாதலால் அன்புக்குரிய தம்பியாகிய உன்னையிழந்த இத்துயர்நிலையில் எனது உள்ளம் பிளந்து சிதைய என்னுயிரும் உடம்பைவிட்டு நீங்கியிருத்தல் வேண்டும். என்னைப் பொறுத்தவகையில் அவ்வாறு எதுவும் நிகழாமையால் யான் எனது உள்ளத்தாலும் உயிராலும் நின்பால் உண்மையான அன்பின் தொடர்பினைப் பெற்றேனல்லேன் என இராமன் இலக்குவனது பிரிவாற்றாமையால் இரங்கி வருந்தினான் என்க. பரிவு—அன்பு. (210)

8783. வேள் விக் கேகி வில்லு
மிறுத்தோர் விட மம்மா
வாழ்விக் கும்மென் றெண்ணினென்
முன்னே வருவித்தேன்
சூழ்வித் தென்னைச் சுற்றின
ரோடுஞ் சுடுவித்தேன்
தாழ்வித் தேனோ வித்தனை
கேடுந் தருவித்தேன்.

‘வேள்விக்கு ஏகிவில்லும் இறுத்து,
“ஓர்விடம் அம்மா
வாழ்விக்கும்” என்று எண்ணினென்,
முன்னே வருவித்தேன்;
சூழ்வித்து, என்னைச் சுற்றின
ரோடும் சுடுவித்தேன்;
தாழ்வித்தேனோ, இத்தனை
கேடும் தருவித்தேன்?

பொ :- (சனக மன்னன் புரிந்த) வேள்விக்குச் சென்று வில்லை யும் முறித்து, (என்னை) வாழ்விக்க வல்லது என்று எண்ணினேனாய் (சீதை எனப் பெயரிய) ஒரு நஞ்சினை என் முன்னே வருவித்துக் கொண்டேன். (என்னைச்) சூழ்ந்து வரச்செய்து என்னைச் சுற்றி யிருந்தவர்களையும் (விரைவில்) உண்டாக்கிவிட்டேன்.

கு :- வேள்வி என்றது, சனக மன்னன் தன் மகள் சீதைக் குரிய கணவனைத் தேர்ந்து கொள்ளுதல் பொருட்டு அமைத்த வில் லேற்று விழாவினை. வில்-சிவதநுசு. விடம்—நஞ்சு; என்றது, சீதையை. அமிழ்தாகித் தன்னை வாழ்விக்கவல்ல வாழ்க்கைத் துணை வியாகத் தன்னால் மணந்து கொள்ளப்பெற்று தன்னைத் தொடர்ந்து வனம் புகுந்த சீதை காரணமாகவே தனக்கு இத்துணைத் துன்பங் களும் மேன்மேல் உண்டாயின என்றெண்ணிய இராமன், தன் வாழ்க்கைத் துணைவியாகிய சீதையைக் கொடிய நஞ்சு எனக் குறித் தான். சூழ்வித்து - சூழ்ந்து வரச்செய்து. தாழ்வித்தல்—காலந்தாழ்த் தல், பிற்படுதல். தாழ்விந்தேனோ என்புழி ஓகாரம் எதிர்மறை.
(211)

8784. மண்மேல் வைத்த காதலின்
மாதா முதலோர்க்குப்
புண்மேல் வைத்த தீநிகர்
துன்பம் புகுவித்தேன்
பெண்மேல் வைத்த காதலி
னிப்பேறுகள் பெற்றேன்
எண்மேல் வைத்தே னென்புகழ்
யான்றா னெளியேனோ.

‘மண்மேல் வைத்த காதலின்,
மாதா முதலோர்க்குப்
புண்மேல் வைத்த தீநிகர்
துன்பம் புகுவித்தேன்;
பெண்மேல் வைத்த காதலின்,
இப்பேறுகள் பெற்றேன் ;
எண்மேல் வைத்தேன்; என்புகழ்;
யான் தான் எளியேனோ?

பொ :- மண்ணிடத்தே வைத்து பற்றுக்காரணமாக (என்னு டைய) தாய் முதலோர்க்கு புண்ணிடத்தே தீ நுழைத்தாற் போன்ற

பெருந் துன்பத்தை உண்டாக்கிவிட்டேன். (சீதை என்னும்) பெண்ணிடத்தே வைத்துள்ள ஆசையினால் இத்தகைய பயன்களை அடைந்தேன். எனது புகழ்த் திறங்களை (ஒன்றென்மேலொன்றாகப் பிறர்) எண்ணி மதிக்குமாறு உயர்த்தினேன். நான்தான் வலியற்ற எளியவனோ?

கு :- மண்மேல் வைத்த காதல் என்றது, இராமன் தன் தந்தை தசரதன் பணித்தவண்ணம் முடிசூடிக்கொண்டு நாடாளுதற்குத் தான் மனமிசைந்து உடன்பட்டதனை. அது காரணமாகத் தான் வனம்புக நேர்ந்தமையால் தந்தையிறக்கத் தன் தாயாகிய கோசலை முதலியோர்க்குப் புண்ணில் நெருப்பினை நுழைத்தாலொத்த பெருந் துன்பத்தினையுண்டாக்கினேன் என்றான். பெண்மேல் வைத்த காதல் என்றது, காதலால் தன்வழியொழுகற் பாலளாகிய சீதையாகிய தன் மனைவி விரும்பியவண்ணம் பொன் மானைப்பற்றித் தொடர்ந்து தான் சென்றதனை. இப் பேறுகள் என்றது, மனைவியை மாற்றான் கொண்டேக அன்புடைய தம்பியையும் ஆருயிர்த்தோழர்களையும் போரில் இழக்க வருந்தும் பேறின்மையைக் குறிப்பினாற் சுட்டி நின்றது. எண்மேல் வைத்தல் — அளவுக்கு மேலாக உயர்த்து வைத்தல். புகழ் என்றது, குறிப்பினால் புகழுக்கு மாறாகிய பழியை உணர்த்தியது. எளியயேனோ என்புழி ஓகாரம் எதிர் மறையாய், இரக்கமற்ற வன்னெஞ்சினேன் என்னும் பொருள்தந்து நின்றது. (212)

8785. மாண்டாய் நீயோ யானொரு
போது முயிர் வாழேன்
ஆண்டா னல்ல னானில
மந்தோ பரதன்றான்
பூண்டா ரெல்லாம் பொன்றுவர்
துன்பம் பொறையாற்றார்
வேண்டா வோநா னல்லற
மஞ்சி மெலிவுற்றால்.

' மாண்டாய் நீயோ; யான்
ஒருபோதும் உயிர்வாழேன்;
ஆண்டான் அல்லன் நானிலம்,
அந்தோ பரதன்தான்

பூண்டார் எல்லாம் பொன்றுவர்,
துன்பம் பொறைஆற்ருர்;
வேண்டாவோ, நான் நல்அறம்
அஞ்சி மெலிவுற்ருல்?

பொ :- (என் ஆருயிர்த் தம்பியாகிய) நீயோ இறந்தொழிந்தனை (நின்னையின்றி) யான் ஒருகணமும் உயிருடன் வாழமாட்டேன். ஐயோ! (எனது பிரிவாற்ருமை காரணமாகப்) பரதனும் இவ் வுலகத்தை ஆளமாட்டான். (நம்மோடு அன்பின் தொடர்பினைப்) பூண்டவர்கள் எல்லோரும் (பிரிவுத்) துன்பத்தைப் பொறுக்கும் வலியற்றவராய் இறந்துபடுவர். நான் நன்மையுடைய அறத்திற்குப் பயந்து (பகைவர்களை அழிக்குந் தொழிலில்) தளர்ச்சியுற்ருல் (அதன் பயனுக) இத்தனைத் துயரங்களும் வேண்டத்தக்கன அல்லவோ?

கு :- 'நீயோ மாண்டாய்; யான் ஒருபோதும் உயிர்வாழேன்; அந்தோ பரதன்தான் நானிலம் ஆண்டான் அல்லன்; பூண்டார் எல்லாம் துன்பம் பொறை ஆற்ருர் பொன்றுவர்; நான் நல்லறம் அஞ்சிமெலிவுற்ருல்(இவை யாவும்) வேண்டாவோ? என இயைத்துப் பொருள் கொள்க. பூணுதல்—மேற்கொள்ளுதல். இலக்குவனுகிய நின்னைப் பிரிந்து ஒருகணமும் வாழமுடியாத நான், இப்பொழுதே எனது உயிரைத் துறக்கும் நிலையிலுள்ளேன். நான் இறந்தமை செவிப்பட்ட அளவில் பரதனும் உயிர் துறப்பான்; நமது பிரிவுத் துன்பத்தைப் பொறுக்கலாற்ருத உறவினரும் நாட்டு மக்களும் தம் முயிரைத் துறத்தல் உறுதி; இத்தனை கேடுகளும் நிகழ்தற்குக் காரணமாயமைந்தது இந்திரசித்தின்மேல் பிரமாத்திரத்தை விடுவதற்கு நீ முற்பட்டபொழுது அறநெறிக்குஅஞ்சி அதனை அவன்மேல் விடாதபடி தடுத்த எனது செயல் மெலிவே ஆதலால், அவ்வாறு அறத்திற்கு அஞ்சியமைந்த எனது தளர்ச்சியே உன் உயிர்க்கும் ஆருயிர் நண்பர்களுயிர்க்கும் தீங்காய் முடிந்ததாதலின் அதன் பயனுக இத்தனைத் துயரங்களையும் யான்அடைதற்குரியவனுயினேன் என்பான், 'நான் நல்லறம் அஞ்சி மெலிவுற்ருல் (இத்தனையும்) வேண்டாவோ' என இரங்கிக் கூறினுன். இராமன். (213)

8786. அறந்தாய் தந்தை சுற்ற மு
முற்று மெனையல்லால்
துறந்தா யென்று மென்னை
மருதாய் துணைவந்து

பிறந்தா யென்னைப் பின்பு
தொடர்ந்தாய் பிரிவாற்றாய்
இறந்தா யுன்னைக் கண்டு
மிருந்தே னெளியேனே.

'அறம், தாய், தந்தை, சுற்றமும்.
மற்றும், எனை அல்லால்,
துறந்தாய்; என்றும் என்னை
மறாதாய்! துணைவந்து
பிறந்தாய்! என்னைப் பின்பு
தொடர்ந்தாய்! பிரிவுஆற்றாய்
இறந்தாய்; உன்னைக் கண்டும்
இருந்தேன், எளியேனே?

பொ:- (எனக்குத்) துணையாக வந்து பிறந்தவனே! எக்காலத்தும் என்னை மறவாதவனே! அறமும் தாய் தந்தை முதலிய சுற்றமும் ஏனைய எல்லாமும் (நின் தமையனாகிய) என்னையன்றி (வேறில்லையென்று) துறந்தவனே! (எனது) பிரிவினைப் பொறுத்திருத்தற்கு இயலாதவனாகி என்னைப் பின் தொடர்ந்து (வனத்திற்கு) வந்தவனே! (அத்தகைய பேரன்பினனாகிய நீ என்னைவிட்டு) இறந்தாய். இத் துயர்நிலையில்) உன்னை நேரிற்கண்டும் யான் உயிர் தாங்கியிருந்தேன். வலியற்றவனாவேனே?

கு:- அறம் என்றது, நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாகிய அறநெறியினை. மணம்புரிந்து மனை வாழ்க்கையினை மேற்கொண்ட இலக்குவன், தன் வாழ்க்கைத் துணைவியாகிய மனையாளொடுங்கூடி இல்லிறந்து விருந்தோம்புதலாகிய அறநெறியையும், தன்னைப்பெற்ற தாய் தந்தை முதலிய சுற்றத்தாரைப் பேணும் கடமையையும் துறந்து, தான் பின்பற்றத்தக்க அறமும் பேணத்தக்கஇருமுது குரவரும் சுற்றமுமாகிய எல்லாமாக விளங்குபவன் தன் தமையனாகிய இராமன் ஒருவனேயென்று கொண்டு தன்னுடன் வனம்போந்த பேரன்பினனாதலின், 'அறந்தாய் தந்தை சுற்றமும் மற்று மெனையல்லால் துறந்தாய்' என்றான். எக்காலத்தும் என்னுடைய நலங்களையே மறவாது எண்ணும் பேரன்பினையுடையாய் என்பான், 'என்றும் என்னை மறாதாய்' என்றான். 'எனது தனிமை நீங்கத் துணைசெய்யும் நிலையில் உடன்பிறந்த தம்பியாகிய நீ நின் வாழ்வுக்கு வழிகாட்டியாகப் பின்பற்றத்தக்க அறமும் அன்பினாற் பேணத்தக்க தாய் தந்தை முதலிய சுற்றமுமாகிய அவை யாவும் நின் தமையனாகிய என்னையன்றி வேறில்லையெனக்

கொண்டு என்னை நிழல்போற் பிரியாது பின்தொடர்ந்து வனம்புக்கு என்னை அல்லும் பகலும் பேணிக்காத்தனை. யானோ என் ஆருயிர்த் தம்பியாகி நின்னைப் பிரிந்தும் உயிருடன் இருக்கின்றேன். ஆதலால் பெரிதும் மனத்திண்மையுடையேன் காண்' என இராமன் தன்னை வியந்துரைப்பதுபோன்று இகழ்ந்து கூறியவாறு. எளியேனோ என்புழி ஓகாரம் எதிர்மறை. (214)

8787. சான்றோர் மாதைத் தக்க
வரக்கன் சிறைவைக்க
ஆன்றோர் சொல்லு நல்லற
மன்னான் வயமானால்
மூன்றாய் நின்ற பேருல
கொன்றாய் முடியாவேல்
தோன்று வோவென் வில்வலி
வீரத் தொழிலம்மா.

'சான்றோர் மாதைத் தக்க
அரக்கன் சிறைவைக்க,
ஆன்றோர் சொல்லும் நல்அறம்,
அன்னான் வயமானால்,
மூன்றாய் நின்ற பேர்உலகு,
ஒன்றாய் முடியாவேல்,
தோன்றுவோ, என் வில்வலி,
வீரத்தொழில் அம்மா ?

பொ :- குணங்களால் நிறைந்த பெரியோர்களாற் பாராட்டத் தகும் (கற்பென்னும் திண்மையுடைய) நங்கையை (இரக்கமற்ற கொடுந்தொழிலுக்குத்) தக்கவனான அரக்கன் சிறைப்படுத்தி வருத்தவும், அறிவால் நிறைந்தோரால் உண்டென்று உறுதியாகவுரைக்கப் படும் நல்ல அறமாகிய தெய்வம் அத்தகைய கொடியோனது கொடுமைக்கு உட்பட்டு அடங்கிச் செயலற்றிருக்குமானால், (மேல் கீழ் நடு என) மூவகையான நிலைபெற்றுள்ள பெரிய உலகம் யாவும் (இன்னும்) ஒருசேர அழியாதிருக்குமானால், என்னுடைய வில்லின் வன்மையும் வீரத்தொழிலும் (உலகத்தார்க்கு) நன்கு விளங்க மாட்டாவே ?

கு :- சான்றோர்-அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை முதலிய குணங்களால் நிறைந்த பெரியோர். அத்தகைய சான்றோர்களால் உயர்த்துப் புகழத்தக்க கற்பின் செல்வி சீதையாத லின் 'சான்றோர் மாது' எனக் குறித்தார். 'உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்' என்னும் சிலப்பதிகாரப் பொருள் முடிவு இவ் விராம காதையின் சிறப்புடைக் கருப்பொருளாக அமைந்திருத்தலை இக் காப்பியத்திற் பல இடங்களிலும் ஆசிரியர் குறித்துச் செல்லுதல் கூர்ந்துணரத்தக்கதாகும். இரக்கமற்ற அரக்கர் குல வேந்தனாகிய இராவணன் தன்குல இயல்பாகிய கொடுமைக்குத் தக்கவாறே மெல்லியலாளாகிய பிராட்டியைச் சிறைபடுத்தி வைத்தனன் என்பார், 'தக்க அரக்கன் சிறை வைக்க' என்றார். என்பில்லாத புழு முதலிய வற்றை வெயில் தெறுமாறு போன்று அன்பில்லாத கொடியோர்களை ஒறுத்தழிக்கவல்ல அறமாகிய தெய்வம் ஒன்றுண்டு என அறிவுடை யோரால் உறுதியாகத் துணிந்துரைக்கப்படும் அறமும் கொடியோனா கிய இராவணன் சீதையைச் சிறைவைத்துள்ள இந் நிலையில் அவனை அழித்தொழிக்கும் வலியற்றதாய் அவனது கொடுமைக்கு அடங்கிச் செயலற்று ஒடுங்கி விட்டது என்பான், 'சான்றோர் மாதை அரக்கன் சிறைவைக்க, ஆன்றோர் சொல்லும் நல்லறம் அன்னான் வசம் ஆனால்' என்றான். உலகங்களைப் பிறழாது நெறிப்படுத்தி நிலை நிறுத்துங் கடமையினையுடைய அறம் இவ்வாறு கொடியோனொரு வனுக்கு அஞ்சிச் செயலற்று அடங்கிய நிலையில் எனது வில் வன்மை யாலும் வீரத்தொழிலாலும் மூவகையுலகங்களும் ஒருசேர அழிந்து சிதைதல் வேண்டும்; அவ்வாறு சிதையாது இன்னும் நிலைபெற்றி ருப்பது முறையன்று என்பான், 'மூன்றாய் நின்ற பேருலகு ஒன்றாய் முடியாவேல்' என்றான். இவ்வாறு அறநூல் விதிமுறைக்கு மாறாக இவ் வுலகியல் அமைந்துள்ள இந்நிலையில் யானும் இறவாது உயிர் தாங்கியிருப்பது என் விற்படையின் வலியற்ற தன்மையையும் எனது வீரமின்மையையும் எல்லோரும் அறிய நன்கு புலப்படுத்தும் என்பான், 'நல்லறம் அன்னான் வயம் ஆனால், பேருலகு ஒன்றாய் முடியா வேல், என் வில்வலி வீரத்தொழில் தோன்றாவோ?' எனச் சினக் குறிப்புடன் செயலற்று இரங்கினான். 'வில்வலி' 'வீரத் தொழில்' என்பன முறையே வில்லின் வலியற்ற தன்மையினையும் செயலில் வீரமற்ற தன்மையினையும் குறிப்பால் உணர்த்தி நின்றன. தோன்றாவோ—விளங்கித் தோன்றமாட்டாதனவோ? ஓகாரம்— எதிர்மறை; எல்லார்க்கும் நன்கு விளங்கித் தோன்றுவனவே என்ற வாறு. (215)

8788. வேலைப் பள்ளக் குண்டக
ழிக்கும் விராதற்கும்
காலிற் செல்லாக் கவந்த
னுயிர்க்குங் கரனுக்கும்
மூலப் பொத்தற் செத்த
மரத்தேழ் முதலுக்கும்
வாலிக் கும்மே யாயின
வாறென் வலியம்மா.

'வேலைப் பள்ளக் குண்டு
அகழிக்கும் விராதற்கும்
காலின் செல்லாக் கவந்தன்
உயிர்க்கும், கரனுக்கும்,
மூலப் பொத்தல் செத்த
மரதது ஏழ்முதலுக்கும்,
வாலிக் கும்மே ஆயினவாறு
என்வலி அம்மா!

பொ :- எனது வன்மையனைத்தும் கடற்பள்ளமாகிய ஆழ்ந்த அகழியை (அணைகட்டி)க் கடத்தற்கும், விராதனைக் கொல்லுதற்கும், கால்கொண்டு நடக்கமாட்டாத கவந்தனது உயிரைக் கவர்தற்கும், கரன் என்னும் அரக்கனை அழித்தற்கும், புரையுடைய பட்டுப்போன ஏழு மராமரங்களின் முதலைத் துளைத்தற்கும் வாலியைக் கொல்லுதற்கும் மட்டுமே ஆகித் தீர்ந்தொழிந்தது (அந்தோ! இரங்கத் தக்கதே).

கு :- என் வலி, அகழிக்கும், விராதற்கும், கவந்தனுயிர்க்கும், கரனுக்கும், ஏழ்மர முதலுக்கும், வாலிக்குமே ஆயினவாறு என இயையும். அகழிக்கும்...வாலிக்கும் என்புழி நான்காம் வேற்றுமை யாகிய குவ்வுருபுகள் 'பிணிக்கு மருந்து' என்றாற் போன்று பகைப் பொருளில் வந்தன ஆதலின், அப் பொருளை விளக்குதற்கு இன்றி யமையாத வினைச் சொற்கள் உரையில் வருவித்துரைக்கப்பட்டன. வேலை—கடல். குண்டு—ஆழம். 'வண்டுண மலர்ந்த குண்டு நீரிலஞ்சி' என்பது மணிமேகலை. கவந்தன் என்பான், தலையாகிய உறுப்பின்றி வயிற்றிடத்தே வாயினையுடையனாய்க் கால்கொண்டு நடவாது இருந்த இடத்திலேயே இருந்து தன் இரண்டு கைகளாலும் எல்லாவற்றையும் ஒருசேர வாரி வயிற்றிலடக்கும் இயல்பினனாதலால் 'காலிற் செல்லாக் கவந்தன்' என்றார். 'இருந்தே நீட்டி யெவ்

வுயிருங் கையின் வளைத்து வயிற்றடக்குங் கவந்தன்' (கவந்தப்-2) என முன்னர்க் கூறியுள்ளமை ஈண்டு நினைக்கத் தக்கதாகும். என்னுடைய ஆற்றலனைத்தும் விராதன், கரன், கவந்தன், வாலி ஆகியோரை அழித்தலும் பட்டுப்போன ஏழு மரங்களைத் துளைத்தலும், கடலைத் தூர்த்து அணையமைத்தலும் ஆகிய இச் சிறிய செயல்களின் அளவிலே பயன்பட்டுத் தீர்ந்தொழிந்ததேயன்றி இரக்கமற்ற கொடியோனாகிய இராவணனைக் குலத்துடன் கொன்றழிக்குந் திறத்திலும் என்பால் அன்புடையார்களை இடரகற்றிப் பாதுகாக்குந் திறத்திலும் சிறிதும் பயன்படாத நிலையிற் சிதைந்தொழிந்ததே என இராமன் செயலற்று இரங்கியவாறு. மூலம் அடி. பொத்தல்—துளை. செத்தமரம்—பட்ட மரம். 'வாலிக்கும்மே' என்புழி, மகரம் விரித்தல் விகாரம். (216)

8789. இருந்தே னுறு லிந்திர
சித்தே முதலாய
பெருந்தே ராரைக் கொன்று
பிழைக்கப் பெறுவேனோ
வருந்தே னீயே வெல்லுதி
யென்னும் வலிகொண்டேன்
பொருந்தே னுனிப் பொய்ப்பிற
விக்கும் பொறையல்லேன்.

'இருந்தே னுறல், இந்திர
சித்தே முதலாய
பெருந் தேராரைக் கொன்று
பிழைக்கப் பெறுவேனோ?
வருந்தேன், "நீயே வெல்லுதி"
என்னும் வலிகொண்டேன்;
பொருந்தேன், நான்,இப் பொய்ப்பிறவிக்கும்
பொறை அல்லேன்!

பொ :- வருத்தம் இல்லாதேனாகி, 'நீயே (இந்திரசித்தைப் போரிற் கொன்று) வெற்றியடைவாய்' என்னும் (மன) வலிமையைக் கொண்டு இருந்தேன். (இனி, நின்னை இழந்த இந் நிலையிலும் உயிர் துறவாது) இருந்தேனாயின் இந்திரசித்து முதலாகவுள்ள பெரிய தேர் வீரர்களாகிய பகைவர்களைப் (போரிற்) கொன்று பிழைத்திருத்தலாகிய ஆற்றலைப் பெறவல்லேனோ? உள்ளீடு இல்லாத இவ் வுடம்பினைச் சுமத்தற்கும் ஆற்றலில்லாதேனாகிய யான் இனி இங்குப் பொருந்தி உயிர்வாழ மாட்டேன்.

கு:- வருந்தேன், 'நீயே வெல்லுதி' என்னும் வலி கொண்டேன். (இனியும்) இருந்தேன் ஆனுல், இந்திரசித்தே முதலாய பெருந் தேராரைக் கொன்று குவிக்கப் பெறுவேனே? இப் பொய்ப் பிறவிக்கும் பொறை அல்லேன் (ஆதலால்) நான் பொருந்தேன் என முடிக்க. வாழ்க்கை நோக்கமாகிய உள்ளீடில்லாத புரைபட்ட இவ் வுடம்பினைச் சுமத்தற்கும் வலியுடையேனல்லேன் என்பான், 'இப் பொய்ப் பிறவிக்கும் பொறை அல்லேன்' என்ருன். பெருந்தேரார்— மகாதரர் ஆகிய வீரர்கள். பெறுவேனே என்புழி ஓகாரம் எதிர் மறை. பொய்ப்பிறவி—உள்ளீடில்லாத பிறவி; என்றது புரைபட்ட உடம்பினை. உம்மை—இழிவு சிறப்பு. பொறை—பொறுத்தல். பொருந்துதல்—உடம்புடன் பொருந்தி வாழ்தல். நின்னை இழந்து தனியனுகிய இந் நிலையில் இனி ஒருகணமும் உயிர்தாங்கியிருத்தல் என்னுல் இயலாது என்பான், 'இருந்தேன் ஆனுல்' என்ருன். எனது அன்பின்மை காரணமாக யான் ஒருகால் உயிர்தாங்கி இருந் தேனுயினும் தம்பியாகிய நினது துணையையிழந்த இந் நிலையில் தன்னந் தனியனுக நின்று பகைவரைக் கொன்று வெற்றியுடன் பிழைத்திருத்தலென்பது இயலாததொன்று. பகைவரை வெற்றி கொள்ளாத நிலையிற் புரைபட்ட உடம்பினைச் சுமத்தற்கும் வலியில் லாத யான் இவ்வுலகில் உடம்பொடு பொருந்தி வாழேன் என இராமன் இலக்குவனையிழந்த தனது ஆற்ருமை தோன்ற இரங்கி வருந்தினுன் என்பதாம். (217)

8790. மாதா வுந்நஞ் சுற்றமு
நாடு மறையோரும்
ஏதா னுரோ வென்று
தளர்ந்தே யிறுவாரைத்
தாதாய் காணச் சால
நினைந்தே தளர்கின்றேன்
போதா, யையா, பொன்முடி
யென்னைப் புனைவிப்பான் !

'மாதாவும், நம்சுற்றமும்,
நாடும் மறையோரும்,
'ஏதுஆனுரோ' என்று
தளர்ந்தே இறுவாரை,
தாதாய்! காணச்சால
நினைந்தே தளர்கின்றேன்;
போதாய், ஐயா, பொன்முடி
என்னைப் புனைவிப்பான்!

பொ : - என் அப்பனே ! (நம்மைப்பெற்ற) தாயும் நம் சுற்றத் தாரும் நாட்டு மக்களும் வேதியர்களும் (வனம்புக்க நம்மைக் குறித்து) 'என்ன நிலையினராயினரோ' என்று தளர்ச்சியுற்று முடி கின்றவர்களை (அவர்தம் துயர் நீங்கக்) காணுதற்குப் பெரிதும் எண்ணி வருந்துகின்றேன். ஐயனே ! என்னைப் பொன்னுலியன்ற முடியைப் புனைவித்தல் வேண்டி (மீண்டும் உயிர்பெற்று) வருவாயாக.

கு : - மாதா—தாய்; என்றது, கோசலை சுமித்திரை முதலி யோரை. 'ஏதானேரோ' என்பது, வனம்புக்க இராமன் சீதை இலக் குவன் ஆகியோரைக் குறித்து அயோத்தி நகரத்திலுள்ள மாதர் முதலானேர் தம்முள்ளத்து எண்ணிய எண்ணமாகும். இறுதல்— முடிதல். தாதை என்பது தாதாய் என விளியேற்றது. தாதை— தந்தை; முறைப் பெயராகிய இது, சொல்லினும் எழுத்தினும் தோன்று முறையினவாகிய அன்னை, என்னை என்ற பெயர்களை யொத்து முறை குறியாது அன்புரிமையொன்றினையே குறித்து நின்றது. (தொல்—பொருளியல்—52. நச். உரை நோக்குக.) ஐயா ! என்னைப் பொன்முடி புனைவிப்பான் போதாய் என இயைத் துரைக்க. (218)

8791. பாசமு முற்றச் சுற்றிய
போதும் பகையாலே
நாசமு முற்றிப் போது
நடந்தே னுடனல்லேன்
நேசமு மற்றுன் செய்வன
செய்தே நிலைநின்றேன்
தேசமு மற்றென் கொற்ற
நலத்தைச் சிரியாதோ.

'பாசமும் முற்றச் சுற்றிய
போதும், பகையாலே
நாசமும் முற்று இப்போதும்
நடந்தேன், உடன் அல்லேன் ;
நேசமும் அற்றூர் செய்வன
செய்தே நிலைநின்றேன் ;
தேசமும் மற்றுஎன் கொற்ற
நலத்தைச் சிரியாதோ ?

பொ :- நாகபாசம் முழுவதும் (உனது உடம்பைச்) சுற்றிய அப்பொழுதும், பகைவனாலே (நம் சேனைக்குக்) கேடு சூழப்பட்ட இப்பொழுதும் நின்னுடன் துணை நிற்பேன் அல்லதேனாகி (நின்னை விட்டுப் புறத்தே) சென்றுவிட்டேன். அன்பில்லாதார் செய்வன வாகிய சிறுமைகளையே செய்து தளர்ச்சியின்றி நிற்கின்றேன். (இத்தகைய) எனது வெற்றிநலத்தை உலகமும் கண்டு சிரிக்கு மல்லவா ?

கு :- பாசம் என்றது, இந்திரசித்து ஏவிய நாகபாசத்தினை. முற்ற—முழுவதும். சுற்றுதல்—இறுகப் பிணித்தல். பாசமும், நாசமும், நேசமும் என்புழி வந்த உம்மை இசைநிறை. என் செயல் எனக்கேநகைவிளைப்பதோடு தேசத்தார்க்கும் நகை விளைப்பதாயிற்று என்னும் பொருள் தந்தமையின் தேசமும் என்புழி உம்மை எச்ச வும்மை. முற்றுதல்—சூழ்தல்; வளைதல். நேசம்—அன்பு. அன்பில்லாதார் செய்வனவாவன, துன்பக் காலத்தில் தம்மால் இயன்ற உதவிகளை விரைந்து செய்யாது விலகி மறைதலும் தம் நலன் ஒன்றையே குறிக்கொண்டு அஞ்சியகலுதலும் முதலாயின. தேசம் —உலகம்; ஆகுபெயராய் உலகில் வாழ்வாரை உணர்த்தியது. கொற்றநலம் என்றது, பகைவனை உரிய காலத்தில் எதிர்த்து அழிக்கலாற்றாத தனது தோல்வி நிலையை; இகழ்ச்சிக் குறிப்பு. (219)

8792. கொடுத்தே னன்றே வீடண
னுக்குக் குலமான
முடித்தோர் செல்வம் யான்முடி
யாதே முடிகின்றேன்
படித்தே னன்றே பொய்மை
குடிக்குப் பழிபெற்றேன்
ஒடித்தே னன்றே யென்புகழ்
நானே யுணர்வற்றேன்.

கொடுத்தேன், அன்றே, வீடண
னுக்குக் குலம்ஆள
முடித்துஓர் செல்வம் ; யான்
முடியாதே முடிகின்றேன் ;
படித்தேன் அன்றே, பொய்மை ?
குடிக்குப் பழிபெற்றேன் ;
ஒடித்தேன் அன்றே என்புகழ்
நானே, உணர்வுஅற்றேன் ?

பொ : - (என்னை அடைக்கலம் அடைந்த) விடணனுக்கு அவன் குலமுழுவதனையும் ஆளுமாறு முடிவுசெய்து ஒப்பற்ற (இலங்கையரசாகிய) செல்வத்தை அன்றே கொடுத்துவிட்டேன். (அவ்வாறு வாக்குறுதி தந்த) யான் அதனை நிறைவேற்றுமலே இறந்து போகின்றேன். பொய்ம்மொழி கூறப் பயின்றேன் அல்லவா? (அதனுல்) என் குடிக்குப் பழியை(த் தேடி)ப் பெற்றேன். உணர்வற்றேனுகிய யான் எனது புகழினை நானே சிதைத்தழித்தேன் அன்ருே?

கு : - விடணனுக்கு குலம் ஆளமுடித்து ஓர் செல்வம் அன்றே கொடுத்தேன்; (அதனை) யான் முடியாதே முடிகின்றேன், பொய்ம்மை படித்தேன் அன்றே? குடிக்குப் பழிபெற்றேன்; உணர்வு அற்றேன் என் புகழ் நானே ஒடித்தேன் அன்றே? என இயைத்துப் பொருள் கொள்க. முடித்து—முடிவு செய்து. முடியாது—முற்றுவிக்காமல்; நிறைவேற்றுமல். முடித்தல்—இறத்தல். படித்தல்—பயிலுதல். ஒடித்தல்—சிதைத்தழித்தல். என்னைத் தஞ்சமடைந்த விடணனுகிய அரக்கா குலத் தோன்றலுக்கு 'இலங்கைச் செல்வம் நின்னதே தந்தேன்' என்று உறுதிமொழி கூறிய யான், நின்னை இழந்த இத் துயர்நிலையில் அதனை நிறைவேற்றுமலே இறந்தொழிகின்றேன். சொல்லிய சொல்லை நிறைவேற்ற டியாதமுநிலையில் என்னுற் கூறப்பட்ட அவ் வுறுதிமொழி பொய்யாய்ப் பயனின்றியொழிதலால் என் குடிக்குப் பழியைத் தந்து எனது புகழையும் அழித்தவனுயினேன் என இராமன் தன் நிலையினை யெண்ணி இரங்கியவாறு. (220)

### புலம்பிய இராமன் 'இறந்தொழிவோம்' என்னும் நிலையில் அறிவு சோர்ந்து துயில் கொள்ளுதல்

8793. என்றென் றேங்கும் விம்மு
முயிர்க்கும் மிடையஃகிச்
சென்ருென் ருென்ருே டிந்திய
மெல்லாஞ் சிதைவெய்தப்
பொன்றும் மென்னுத் தம்பியை
மார்பத் தொடுபுல்லி
ஒன்றும் பேசான் லன்னை
மறந்தான் றுயில்வுற்ருன்.

என்றுஎன்று ஏங்கும், விம்மும்,
உயிர்க்கும், இடை அஃகி,
சென்றுஒன்று ஒன்றேடு இந்தியம்
எல்லாம் சிதைவு எய்த,
'பொன்றும்' என்னுத் தம்பியை
மார்பத் தொடு புல்லி,
ஒன்றும் பேசான் ; தன்னை
மறந்தான், துயில் வுற்றான்.

பொ : - என்று என்று இவ்வாறு புலம்பி வருந்துவான் ; மனம் விம்முவான் ; பெருமூச்சு விடுவான் ; இடையிடையே (நெட்டுயிர்ப்பு) அடங்கிச் சென்று (கண் முதலிய) பொறிகளெல்லாம் (தத்தம் புலன்களைக் கொள்ளுதலின்றிச்) சிதைந்து கெட, 'இறந்தொழிவோம்' என்று தம்பி இலக்குவனை மார்போடு இறுகத் தழுவிக் கொண்டு, ஒன்றும் பேச இயலாதவனாகித் தன்னை மறந்து உறங்கிக் கிடந்தான் (இராமன்).

கு : . ஏங்குதல்—அழுதரற்றுதல். விம்முதல்—மனம் வெதும்பி வருந்துதல். உயிர்த்தல்—பெருமூச்சு விடுதல். அஃகுதல்—சுருங்குதல். இந்தியம்—இந்திரியம் ; மெய் வாய் கண் மூக்கு செவி ஆகிய ஐம்பொறிகள். பொறிகள் சிதைவெய்தலாவது தத்தமக்குரிய புலன்களைக் கொள்ளுந் தன்மை சிதையக் கேடுறுதல். பொன்றும்—இறந்தொழிவோம் ; என்பது இராமனது உட்கோள். புல்லுதல்—இறுகத் தழுவிக்கொள்ளுதல். பேசான், மறந்தான் என்னும் வினைமுற்றுக்கள் எச்சமாய்த் துயில்வுற்றான் என்னும் வினையைக் கொண்டு முடிந்தன. (221)

**இராமன் துயர்நிலையைக்கண்டு துணுக்குற்ற தேவர்கள், அவனது இறைமைத் தன்மையையும் அவதாரத்தின் உண்மையையும் எடுத்துக்கூறி தம்மைக் காத்தருளுமாறு வேண்டுதல்.**

*8794.* கண்டார் விண்ணோர் கண்கள்
புடைத்தார் கலுழ்கின்றார்
கொண்டார் துன்பமென் முடி
வென்னுக் குலைகின்றார்

அண்டா வையா வெங்கள்
பொருட்டா லயர்கின்ருய்
உண்டோ வுன்பாற் றுன்பென
வன்பா லுரை செய்தார்.

கண்டார் விண்ணேர்; கண்கள்
புடைத்தார், கலுழ்கின்ருர்;
கொண்டார் துன்பம், 'என்முடிவு?'
என்று, குலேகின்ருர்?
'அண்டா! ஐயா! எங்கள்
பொருட்டால் அயர்கின்ருய்;
உண்டோ உன்பால் துன்பு?'
என,அன்பால் உரைசெய்தார்.

பொ :- (இராமனுற்ற இப் பெருந்துயரத்தை) வானுலகத்தவராகிய தேவர்கள், கண்டார்கள்; (அதனைக் காணநேர்ந்த தமது அவல நிலேக்கு இரங்கித்) தம்முடைய கண்களில் மோதி அறைந்து கொண்டவர்களாய் அழுவாராயினர்; (எல்லேயற்ற) துன்பத்தினே மேற்கொண்டார்கள்; 'முடிவில் நிகழப்போவது யாதோ?' என அஞ்சி நடுங்குகின்ருர்கள்; 'அண்டம் முழுவதும் ஆனவனே! (எம்முடைய) தலேவனே! (இறைவனுகிய) உன்னிடத்துத் துன்பம் என்பது உளதோ? (நின் அன்பர்களாகிய) எங்கள் பொருட்டாகவே (இத் தகைய துன்பங்களே மேற்கொண்டு)தளர்ந்து வருந்துகின்ருய்' என்று சொல்லி (அம் முதல்வன்பால் தாம் கொண்டுள்ள) பேரன்பிஞல் பின்வருமாறு கூறிஞர்கள்.

கு :- விண்ணேர், கண்டார்; கண்கள் புடைத்தார், கலுழ்கின்ருர்; துன்பம் கொண்டார் குலேகின்ருர்; 'அண்டா! ஐயா! உன்பால் துன்பு உண்டோ? எங்கள் பொருட்டால் அயர்கின்ருய்' என அன்பால் உரைசெய்தார் என முடிக்க. அண்ட முழுவதுமாய் நிறைந்து விளங்கும் இறைவனது அமிசமாதல்பற்றி இராமனே 'அண்டா' என அழைத்தார். 'வாஞடும் மண்ஞடும் மற்றுள்ள பல்லுயிரும், தாஞய எம்பெருமான்' (பெரிய திருமொழி 4—1—3) என்பது திருமங்கையாழ்வார் அருளிச்செயல். துன்பங்களில்லாத தூயோஞகிய நீ நின் அன்பர்களாகிய எங்கள் பொருட்டே இத்தகைய துயரங்களே அடைந்தன என்பார், 'ஐயா உன்பால் துன்பு உண்டோ? எங்கள் பொருட்டால் அயர்கின்ருய்' என அன்பால் உரைசெய்தார் என்க. வேதர்கள் கூறிய பரிவுரைகள் அடுத்து ஏழு வரும் செய்யுட்களில் விரித்துக் கூறப்படும். (222)

8795. உன்னை யுள்ள படியறியே
மூலகை யுள்ள திறமுள்ளேம்
பின்னை யறியே முன்னறியே
மிடையு மறியேம் பிறழாமல்
நின்னை வணங்கி நீவகுத்த
நெறியி னிற்கு மதுவல்லால்
என்னை யடியேஞ் செயற்பால
வின்ப துன்ப மில்லோனே.

'உன்னை உள்ளபடி அறியேம்;
உலகை உள்ளதிறம் உள்ளேம்;
பின்னை அறியேம்; முன் அறியேம்,
இடையும் அறியேம், பிறழாமல்;
நின்னை வணங்கி நீவகுத்த
நெறியின் நிற்கும் அதுஅல்லால்,
என்னை, அடியேம் செயற்பால?—
இன்ப துன்பம் இல்லோனே!

பொ :- இன்பமும் துன்பமும் இல்லாதவனே! (நின் அடியே மாகிய நாங்கள்) உன் இறைமைத் தன்மையை உள்ளவாறு அறியப் பெற்றிலேம். உலகினை (உள்ளும் புறம்பும்) நிறைந்துள்ள நின் வியாபகத் தன்மையைச் சிந்தித்துணரும் திறமுடையேமல்லேம். முடிவு இதுவென்றறியேம்; முதல் இதுவென்றறியேம்; நடுவும் இது வென்றறியேம். (ஆதி நடு இறுதியில்லாத முழுமுதற் பொருளாகிய) நின்னை வழிபட்டு நீ வகுத்தருளிய அறநெறியில் மாறுபடாமல் நின்று ஒழுகுதலையின்றி நின் அடியேங்களாகிய எங்களாற் செய்யத் தக்கன யாவையுள்ளன?

கு :- பின்-அந்தம். முன்-ஆதி. இடை-மத்தி; நடு. நின்னைவணங்கி நீ வகுத்த நெறியிற் பிறழாமல் நிற்கும் அது அல்லால், அடியேம் செயற்பால என்னை ? என இயைத்துரைக்க. ஒரு பொருளையும் விரும்புதலும் வெறுத்தலும் இல்லாத இறைவனாகிய உனக்கு இரு வினைப் பயன்களாய் இன்ப துன்பங்கள் இல்லையென்பார், 'இன்ப துன்பம் இல்லோனே' என்றார். உன்னை-உன் இறைமைத் தன்மையை; சொரூப நிலையை. உலகை உள்ள திறமாவது இறைவன் உடலின்கண் உயிர்போன்று உலகின் உள்ளும் புறம்பும் பரவி நிறைந்துளனாய் நிற்கும் நிறைவு.

'திடவிசும் பெரிவெளி நீர்நில மிவைமிசை
படர்பொருள் முழுவது மாயவை யவைதொறும்
உடல்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியு ளிவையுண்ட சுரனே'

(திருவாய்மொழி 1—1—7)

என வரும் நம்மாழ்வார் அருளிச்செயல் இங்கு நினைக்கத் தக்கதாகும். 'நீ வகுத்த நெறியின் நிற்குமது வல்லால், என்னை அடியேம் சொற்பால' என்ற தொடர்,

'இவையன் றேநல்ல இவையன் றேதீய
இவையென் றிவையறிவ னேலும்—இவையெல்லாம்
என்னு லடைப்புநீக் கொண்ணு திறையவனே
எண்ணுற் செயற்பால தென்'

(இயற்பா-பெரிய திருவந்தாதி—3)

என வரும் அருளிச்செயற்பொருளை அடியொற்றியமைந்திருத்தல் அறியத்தக்கதாகும். (223)

8796. அரக்கர் குலத்தை வேரறுத்தெம்
மல்ல னீக்கி யருளாயென்
றிரக்க வெம்மேற் கருணையினு
லியையா வுருவ மிஃதெய்திப்
புரக்கு மன்னர் குடிப்பிறந்து
போந்தா யறத்தைப் பொறைதீர்ப்பான்
கரக்க நின்றே நெடுமாய
மெமக்குங் காட்டக் கடவாயோ.

'அரக்கர் குலத்தை வேர்அறுத்து,
எம்அல்லல் நீக்கியருளாய்' என்று
இரக்க, எம்மேல் கருணையினுல்,
இயையா உருவம் இஃதுஎய்தி,
புரக்கும் மன்னர் குடிப்பிறந்து
போந்தாய்! அறத்தைப் பொறைதீர்ப்பான்,
கரக்க நின்றே, நெடுமாயம்
எமக்கும் காட்டக் கடவாயோ ?

பொ :- (இரக்கமற்ற கொடியோர்களாகிய) அரக்கரினத்தை வேருடன் அறுத்துக் களைந்து எம்முடைய துன்பங்களை நீக்கியருள் வாயாக; என்று யாம் (நின்னைக்) குறையிரந்து வேண்ட, எம்மேல் (நீ வைத்த) பேரருளால் (நினக்கு) ஒவ்வாத மானிட வடிவமாகிய இதனையடைந்து (உலகவுயிர்களைக்)காக்கும் மன்னர் குடும்பத்தில் அவதரித்து, அறத்தின் (பொறுக்கவொண்ணாத) பாரமாகிய தீமை களை அறிந்துப் போக்குதல் வேண்டி இங்கு வந்தாய். (இவ்வாறு எமது துயர்தீர்க்க வந்தருளிய நீ நின் இறைமைத்தன்மை) மறைய நின்று நினது நெடிய மாயத் தன்மையினை (நின்பால் அன்புடைய, எங்கள் திறத்திலும் காட்டும் முறைமையினையுடையாயோ ?

கு :- 'அரக்கர் குலத்தை வேரறுத்து எம் அல்லல் நீக்கியருளாய் என்று இரக்க' என்றது, இராவணன் முதலிய அரக்கர்களது கொடு மைக்கு ஆற்றாத இந்திரன் முதலிய தேவர்கள் திருப்பாக்கடலில் அறிதுயில் கொள்ளும் திருமாலை அடைந்து குறையிரந்து வேண்டிய நிகழ்ச்சியைக் குறித்தது. இந் நிகழ்ச்சி பாலகாண்டம் திருவவதாரப் படலத்துள் கூற பட்டுள்ளது. நின்பால் அன்புடைய அடியார்க ளாகிய எங்கள் திறத்து வெளிப்பட்டு அருள்புரியும் கடமையை யுடைய நீ, பகைவர் திறந்து மறந்து நின்று செய்யும் நின்மாயச் செயலை எங்களிடத்தும் செய்துகாட்டுதல் நின்னருளின் முறையா குமோ என வினவுவார், 'கரக்க நின்றே நெடுமாயம் எமக்கும் காட்ட கடவாயோ' என்றனர். 'இயையா உருவம் இஃது' என்றது, எத்த கைய ஆற்றல்மிக்க பெருவடிவத்தினையும் நின் இச்சையின்படி எடுத்துக் கொள்ளவல்ல நீ நின்னுடைய வரம்பிலாற்றல் முழுவதனை யும் மேற்கொண்டு வெளிப்படுத்துதற்குப் போதாத மனித வடிவ மாகிய இது எனவும், மறைந்தும் வெளிப்பட்டும் தாக்கும் வஞ்சனைச் சூழ்ச்சியில்வல்ல இரக்கமற்ற கொடியோர்களாகிய அரக்கரொடு ஒத்து நின்று பொருதற்கு ஒவ்வாத மனித வடிவமாகிய இதுவென வும் இருபொருள் தந்து நின்றது. நீ தோன்றுதற்கு இடனாகிய குடும்பம், சிற்றுயிர்களுக்கும் தீங்கு நேராதவாறு குறிக்கொண்டு பாதுகாத்து ஆட்சிபுரியவல்ல பெருவேந்தர் குடும்பம் என்பார் 'புரக்கும் மன்னர்குடி' என்றார். அறத்தின் பொறை என்றது, அரக்கர் குலத்தால் அறத்தெய்வத்திற்கு நேர்ந்துள்ள பொறுக்க வொண்ணாச் சுமையாகியகொடுமைகளை. தீர்ப்பான்-தீர்க்க; பானீற்று வினையெச்சம். (224)

8797. ஈன்றெம் மிடுக்கண் டுடைத்தளிப்பா
னிரங்கி யரச ரிற்பிறந்தாய்
மூன்று முலகந் துயர்தீர்த்தி
யென்னு மாசை முயல்கின்றேம்

ஏன்று மறந்தே மவனல்லன்
மனித னென்றே யிதுமாயம்
போன்ற தில்லை யாளுடையாய்
பொய்யும் புகலப் புக்காயோ.

'ஈன்ற எம்இடுக்கன் துடைத்து
அளிப்பான்இரங்கி; அரசர் இல்பிறந்தாய்!
"மூன்றுஆம் உலகம் துயர்த்தி"
என்னும் ஆசை முயல்கின்றேம்
ஏன்றும் மறந்தேம், "அவன்அல்லன்;
மனிதன்" என்றே; இதுமாயம்
போன்றது இல்லை, அளுடையாய்!
பொய்யும் புகலப் புக்காயோ?

பொ :- (நின்னால்) படைக்கப்பட்டவராகிய எம்முடைய துன்பங்களை அறவே நீக்கி (எம்மை)க் காத்தற் பொருட்டுக் கருணை கூர்ந்து மன்னர் குடும்பத்தில் அவதரித்தவனே! (அவ்வாறு அவதரித்தருளிய நீ) மூன்றாகிய உலகங்களின் துயர்களைத் தீர்த்தருள்வாய் என்னும் ஆசையினாலேயே முயன்று (உயிருடன்) வாழ்கின்றேம். (நீ எம்மை உறுதியாகப் பாதுகாப்பாய் என்பதனை மனம் பொருந்த) ஏற்றுக் கொண்டிருந்தும், (நின் அரற்றுதல் கேட்டு, 'இராமனாகிய இவன்,) திருமாலாகிய அவனல்லன்; மனிதருள் ஒருவனே' என்று (அவ் வுண்மையை) மறந்தேமாயினேம்; (எம்மிடத்து நீ காட்டிய) இதனையொப்பதொரு வஞ்சனைச் செயல் (வேறெங்கும் நிகழ்ந்தது) இல்லை. எம்மை அடிமையாகவுடைய இறைவனே! (மெய்ம்மையேயுருவாக விளங்கும் நீ) இத்தகைய (துன்பம் விளைக்கும்) பொய்யுரைகளையும் புகலுதற்கு முற்பட்டு விட்டாயோ?

கு :- ஈன்ற என்னும் பெயரெச்சம் 'எம்' என்னும் செயப்படு பொருளாகிய பெயர் கொண்டது. ஈன்ற என்புழி அகரம் விகாரத்தால் தொக்கது. எல்லாவுலகங்கட்கும் இறைவனாகிய நீ இவ்வாறு மண்ணுலகில் மன்னர் குலத்தில் அவதரித்தற்கு மூவகையுலகங்களிலும் வாழ்வார்களின் துயரங்களைத் தீர்த்தல் வேண்டும் என்னும் நினது அருட் குறிப்பே காரணம் என்பதனை நன்குணர்ந்து நின் திருவவதாரத்தால் எம்முடைய துன்பங்களெல்லாம் தவிர்ந்து இன்பமாக வாழ்தல் வேண்டும் என்னும் எம்முடைய ஆசை காரணமாகவே பலவகைத் துன்பங்களிலும் உழன்று உயிர் வாழ்கின்றோம் என்பார், 'மூன்றும் உலகம் துயர்தீர்த்தி என்னும் ஆசை முயல்கின்றேம்,

என்றார். முயலுதல் என்றது, அல்லற்காலத்துப் பலவகை முயற்சிகளையும் மேற்கொண்டு வாழ்தலை. ஏன்றும் - (மனம் பொருந்த) ஏற்றுக்கொண்டும். ('இவன்) அவனல்லன், மனிதன்' என்றே மறந்தேம் என இயைத்துரைக்க. மனிதன் என்னும் பெயர்ப் பயனிலைக்கு ஏற்ப 'இவன்' என்னுஞ்சொல் எழுவாயாக வருவித்துரைக்கப்பட்டது. இவன் என்றது, இலக்குவன் உயிர் நீத்தான் எனக் கவன்று அரற்றிச் செயலற்று விழ்ந்துகிடக்கும் இராமனை. அவன் என்றது, திருமாலுருவிற் பரமபதத்துள் எழுந்தருளிய அவ் விறைவனை. 'இது' என்றது, வரம்பிலாற்றலுடையனாகிய இறைவன் மக்களினத்தில் ஆற்றல் குன்றிய எளியோனொருவனைப் போன்று அழுதரற்றி வருந்துதலாகிய இவ் அவநிலையினை. 'இது மாயம் போன்றது இல்லை' என வரும் இத் தொடர், 'வஞ்சம் இது வொப்பது கண்டதில்லை' (தேவாரம் 4-1-2) என்பதனை அடியொற்றியமைந்திருத்தல் அறியத்தக்கதாகும். மெய்ம்மையேயுருவாகத் திகழ்பவன் இறைவன் என்பது, 'மெய்ப்பொருள்' (திருக்குறள்-354, 355) 'உள்ளது' (ஷை 357) (வாய்மை' (ஷை 365) என அதனைத் தெய்வப் புலவர் பெயரிட்டு வழங்குதலால் நன்கு தெளியப்படும். வாய்மையேயுருவாகிய தூயவனாகிய நீ இங்ஙனம் எங்களை அச்சுறுத்தும் நிலையிற் பொய்கூறுதல் நின் இறைமைத் தன்மைக்குச் சிறிதும் பொருந்தாத செயலாம்என்பார்,'பொய்யும் புகலப் புக்காயோ' என்றார். 'பொய்யும்' என்புழி உம்மை இழிவு சிறப்பு. (225)

8798. அண்டம் பலவு மனைத்துயிரு
மகத்தும் புறத்து முளவாக்கி
உண்டு முமிழ்ந்து மளந்திடந்து
முள்ளும் புறத்து முளையாகிக்
கொண்டு சிலம்பி தன்வாயி
னூலா லியையக் கூடியயற்றிப்
பண்டு மின்று மமைக்கின்ற
படியை யொருவாய் பரமேட்டி.

'அண்டம் பலவும்; அனைத்து உயிரும்,
அகத்தும் புறத்தும் உளஆக்கி,
உண்டும் உமிழ்ந்தும், அளந்து இடந்தும்,
உள்ளும் புறத்தும் உளைஆகிக்

கொண்டு, சிலம்பிதன் வாயில் நூலால்
இயையக் கூடு இயற்றி,
பண்டும் இன்றும் அமைக்கின்ற
படியை ஒருவாய்—பரமேட்டி!

பொ :- மேலான பரம்பொருளே! அண்டங்கள் பலவற்றையும் எல்லாவுயிர்களையும் (இறைவனுகிய நினக்கு) உள்ளேயும் புறத்தேயும் உள்ளனவாகச் செய்து (உலகங்களை ஒருசேர) உண்டு (வயிற்றில்) அடக்கியும், உமிழ்ந்து வெளிப்படுத்தியும் (நின் அடியினுல்) அளந்தும், பிளந்தும் அவற்றின் உள்ளேயும் புறம்பேயும் நீக்கமற நிறைந்துள்ளாயாகி இருந்துகொண்ட,சிலந்தியானது தனது வாயின் நூலினுல் கூடியற்றி அதன்கண் நிலைபெற்றிருத்தல் போன்று (உலகுயிர்களை நிலைநிறுத்திக்) காக்கின்ற நின் தன்மையினைத் தொன்மைக் காலத்தும் இக் காலத்தும் நீங்காது உள்ளாய்.

கு :- பரமேட்டி - உயர்ந்த நிலையில் உள்ளவன்; பரம்பொருள்; இங்கு இப் பெயர் அண்மைவிளியாய் நின்றது. அகத்து உளவாக்கி உண்டும் புறத்து உளவாக்கி உமிழ்ந்தும் என நிரனிறையாக்கிப் பொருள் கொள்க. உள்ளும் உளையாகி, புறத்தும் உளையாகி எனத் தனித்தனி இயைத்துரைக்க. உளை-உள்ளாய். உள்ளே உள்ளாயாதல், உயிர்தோறும் (அந்தரியாமியாய்) உயிர்க்குயிராய்க் கலந்திருத்தல். புறத்தே உள்ளாயாதல் உலகிற் பொருள்தோறும் நீக்கமறச் செறிந்து (வியாபித்து) இருத்தல். சிலம்பி-சிலந்தி. படி-தன்மை. ஒருவுதல்-நீங்குதல். சிலம்பி, தன் வாயின் நூலால் கூடு இயற்றி அமைக்கின்ற படியைப் பண்டும் இன்றும் ஒருவாய் என இயைத்துரைக்க. 'பரம்பொருளின்றும் ஆகாயம் தோன்றி, அதனினின்றும் காற்றுத் தோன்றி, அதனினின்றும் தீத் தோன்றி அதனினின்றும் நீர் தோன்றி அதனின்றும் நிலம்தோன்றிற்று' என வேதத்துட் கூறப்பட்ட கொள்கை வைணவ சமய தத்துவத்திற்கு ஒத்ததாலின் அண்டம் பலவும் திருமால் தன்னிடத்தே தோற்றி ஒடுக்குவதாகக் கூறினுர் ஆசிரியர்.

'தீவளி விசும்பு நில னீரைந்து
ஞாயிறுந் திங்களும் அறனும் ஐவரும்
திதியின் சிருரும் விதியின் மக்களும்
மாசில் எண்மரும் பதினெரு கபிலரும்
தாமா இருவரும் தருமனும் மடங்கலும்
மூவே ழுலகமும் உலகினுள் மன்பதும்
மாயோய் நின்வயிற் பரந்தவை யுரைத்தேம்
மாயா வாய்மொழி யுரைதர வலந்து' (பரிபாடல் 3. 4—11)

என வரும் பரிபாடற்பகுதி திருமாலை வழிபடும் சமயத்தின் தொன்மையான தத்துவக் கொள்கையினை விளக்கும் நிலையில் அமைந்திருத்தல் காணலாம். திருமாலாகிய இறைவன் தன்கண்ணின்றே உலகுயிர்களைப் படைத்து அவற்றைத் தன்னுள்ளே மீளவும் ஒடுக்கிக் கொள்ளுதற்குச் சிலந்திப்பூச்சி தன் வாயின் நூலால் கூடியிற்றி அந் நூலினை மீளவும் தன்னுட் சுருக்கிக் கொள்ளுதலை உவமையாகக் கூறுவர் வைணவ சித்தாந்திகள். இந் நூலாசிரியரும் இச் சமய தத்துவத்தை அடியொற்றியே சிலந்தியினை உவமை கூறியுள்ளமை கூர்ந்துணரத் தக்கதாகும். இத்தகைய கருத்து,

'சின்னூல் பலபல வாயா லிழைத்துச் சிலந்தி பின்னும்
அந்நூ லருந்தி விடுவதுபோல அரங்க ரண்டம்
பன்னூறு கோடி படைத்தவை யாவும் பழம்படியே
மன்னூழி தன்னில் விழுங்குவர் போத மனமகிழ்ந்தே'

என வரும் திருவரங்கத்துமாலையில் இடம்பெற்றிருத்தல் காணலாம். பரம்பொருளாகிய இறைவன் தனக்கு யாதொரு விகாரமுமின்றித் தன்கணிருந்தே உலகினைப் படைத்துத் தன்னாற் படைக்கப்பட்ட உலகினைத் தானே தன்னுள் ஒடுக்கிக் கொள்ளுதற்குச் சிலந்தியின் செயல் இங்கு உவமையாகக் கூறப்பட்டது. (226)

8799. துன்ப விளையாட் டிதுவேயு
முன்னைத் துன்பந் தொடர்பின்மை
இன்ப விளையாட் டாமெனினு
மறியா தோமுக் கிடருற்ருல்
அன்பு விளையு மருள்விளைய
மறிவு விளையு மவையெல்லாம்
முன்பு பின்பு நடுவில்லாய்
முடித்தா லன்றி முடியாவே'.

'துன்ப விளையாட்டு இதுவேயும்,
உன்னைத் துன்பம் தொடர்புஇன்மை,
இன்ப விளையாட்டு ஆம்;எனினும்,
அறியா தோமுக்கு இடர்உற்ருல்
அன்பு விளையும், அருள் விளையும்,
அறிவு விளையும் அவைஎல்லாம்,
முன்பு பின்பு நாடு இல்லாய்!—
முடித்தால் அன்றி முடியாவே.

பொ :- தோற்றம் நிலை இறுதி இல்லாதவனே! (நீ மேற்கொண்ட) இச் செயல் துன்பத்தைத் தரும் விளையாட்டாம் ஆயினும் (இறைவனாகிய நின்னை)அத் துன்பம் தொடர்தல்இல்லாமையால் இன்பத்தைத் தரும் விளையாடலேயாகும். ஆயினும் (நின் இயல்பினை) அறியாதேமாகிய எங்களுக்குத் துன்பத்தையே விளைப்பதாயிற்று. (நீ செய்த இச் செயலால் எங்கள் உள்ளத்தில்) அன்பு உண்டாகும்; அருள் உண்டாகும்; ஞானம் உண்டாகும். அத்தகைய பயன்களெல்லாம் (முதல்வனாகிய நீ முன்னின்று) முடித்து வைத்தாலன்றி (எம்மிடத்து) நிறைவேறுவன அல்ல.

கு :- 'முன்பு பின்பு நடு இல்லாய்! இது, துன்ப விளையாட்டேயும் உன்னைத் துன்பம் தொடர்பின்மை(யால்) இன்ப விளையாட்டாம்; எனினும், அறியா தேமுக்கு இடரிற்று; (இதனால்) அன்பு விளையும்; அருள் விளையும்; அறிவு விளையும்; அவையெல்லாம் (நீ) முடித்தால் அன்றி முடியா' என இயைத்துப் பொருள் கொள்க. தோற்றமும் இறுதியும் நிலையும் இல்லாத முதல்வனே இவ்வாறு இராமனாக அவதரித்துள்ளாய் என்பார், 'முன்பு பின்பு நடு இல்லாய்' என அழைத்தார். முன்பு-தோற்றம். பின்பு - இறுதி. நடு - இடையில் நிலைத்திருத்தல். இடரிற்று-இடரினையுடையது; இடர் என்னும் பெயரடியாகப் பிறந்த வினைக்குறிப்புமுற்று. ஆல், அசை. அன்பு என்பது, சுற்றத்தார் முதலிய தொடர்புடையார்கண் செல்லும் விருப்பம். அருள் என்பது, தொடர்பு வேண்டாது எல்லாவுயிர்கள்மேலும் செல்வதாகிய கருணை. முடித்தல் - நிறைவேற்றுதல். முடிதல் - நிறைவேறுதல். 'யார்க்கும் முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளவோ' (பெரிய-மனுநீதி கண்ட . ) என்பது இங்கு ஒப்புநோக்கத்தக்கது. இனி, 'இடருற்றால்' என்ற பாடங்கொண்டு, 'அறியாதேமாகிய எங்கள் பொருட்டு நீ இத்தகைய துன்பத்தினை அடைவாயானால் அதன் பயனாக எங்கள் உள்ளத்தில் நின்பக்கல் அன்பு தோன்றும், அன்பின் பயனாக நின்பால் கருணை தோன்றும், கருணையின் பயனாக எங்களுக்கு ஞானமுண்டாகும். அப் பயன்களெல்லாம் முதல்வனாகிய நீ முன்னின்று முடித்து வைத்தாலன்றி எம்மிடத்து நிறைவேறமாட்டா' எனப் பொருளுரைத்தலும் ஏற்புடையதாகும். (227)

8800. வருவாய் போல வாராதாய்
வந்தா யென்று மனங்களிப்ப
வெருவா திருந்தே நீயிடையே
துன்பம் விளைக்க மெலிகின்றேம்

**கருவா யளிக்குங் களைகண்ணே**
**நீயே யிதனைக் களையாயேல்**
**திருவாழ் மார்ப நின்மாயை**
**யெம்மாற் றீர்க்கத் தீருமோ.**

'வருவாய் போல வாராதாய்!
வந்தாய்என்று மனம் களிப்ப,
வெருவா திருந்தோம்; நீஇடையே
துன்பம் விளைக்க, மெலிகின்றேம்;
கருஆய் அளிக்கும் களைகண்ணே!
நீயே இதனைக் களையாயேல்
திருவாழ் மார்ப! நின்மாயை
எம்மால் தீர்க்கத் தீருமோ?

பொ :- (வெளிப்பட) வருவாய் போன்று தோன்றி; (யாவரும் கிட்டி நெருங்கும் நிலையில்) வாராமல் இருப்பவனே! (காணுதற்கு அரிய நீ இன்று இராமனாக அவதரித்து) வந்தாய் என்று எம் உள்ளம் மகிழ்ச்சியுறுதலால் (பகைவர் செய்யும் இடர்களுக்குச் சிறிதும்) அஞ்சாதிருந்தோம். (அச்சந் தீர்த்தருளவல்ல) நீயே (எம் மகிழ்ச்சி யின்) இடையே துன்பத்தையுண்டாக்கினமையால் மெலிவுற்று வருந்துவேம் ஆயினேம். (தாய் வயிற்றிற்) கருவுற்றுப் பிறந்து எம்மைப் பாதுகாத்தருளும் பற்றாகிய பெருமானே! திருமகள் வாழும் மார்பினையுடையவனே! (அருளாளனாகிய) நீயே இத் துன்பத்தைக் களையாதொழிவாயாயின், நினது மாயச்செயல் (உணர்வற்ற) எங்களால் தீர்க்கத் தீர்ந்தொழியும் எளிமையுடையதோ?

கு :- தன்னை அன்பின் மிகுதியால் அணைந்து மகிழ விரும்பும் ஆர்வமுடையார்க்கு மனநிறைவு பிறக்கும்படிவெளிப்பட்டு வருவான் போன்று தோற்றங்காட்டிப், புறத்தே அவனை அணையப் புகுங்கால் கைக்கு எட்டமாட்டாதபடியாய் அப்பாற்பட்டு விலகும் எளிமையும் அருமையும் ஒருங்குடைய இறைவன் நீயே என்பார், 'வருவாய்போல வாராதாய்' என்றார். இத்தொடர், 'வந்தாம் போலே வாராதாய், வாராதாய் போல் வருவானே' (6—10—9) என வரும் திருவாய் மொழித் தொடரை அடியொற்றி அமைந்ததாகும். யாவராலும் அணு குதற்கு அரியனாகிய நீ இப்பொழுது எம்மனோர் துன்பந்துடைத்தற் பொருட்டு இராமனாக அவதரித்து எக்காலத்தும் நாங்கள் நின்னைக் கண்ணாரக்கண்டு எம்முடைய துன்பங்களைப் போக்கி இன்புறும் நிலையில் இங்கு வந்துள்ளாய் என்று எம்முள்ளத்தில் மகிழ்ச்சி மிக

அரக்கர் செய்யும் துன்பங்களைக் கண்டு சிறிதும் அச்சமின்றியிருந் தோம்'என்பார், 'வந்தாய் என்று மனம் களிப்ப, வெருவாதிருந்தேம்' என்றனர். அன்பராயினரது அச்சந் தீர்ந்தருள்புரிதற் பொருட்டு அவதரித்த அருளாளனாகிய நீயே நினது பேராற்றலை உரிய காலத் திற் புலப்படுத்துக் கொடியோரை அழித்தொழிக்காமல் இவ்வாறு தாமதித்து வருந்தி அரற்றி எங்கள் மகிழ்ச்சிக்கிடையே துன்பத்தை விளைத்தலால் மெலிந்து துயருறுகின்றோம் என்பார், 'நீ இடையே துன்பம் விளைக்க மெலிகின்றேம்' என்றனர். எம்துயர் தீர்த்தலில் நின்னை முற்படச் செய்யும் அருட் சத்தியாகிய திருமகள் வாழும் மார்புடைய பெருமானே! நினது மாயச்செயல், வலியற்ற எங்களால் தீர்க்கத் தீர்ந்துவிடும் அத்துணை எளிமையுடையதோ என்பார், 'திரு வாழ் மார்ப நின்மாயை எம்மால் தீர்க்கத் தீருமோ' (228)

8801. அம்பரீடற் கருளியது மயனார்
மகனார்க் களித்ததுவும்
எம்பி ரானே யெமக்கின்று
பயப்பதென்றே யேமுறுவோம்
வெம்பு துயர நீயுழக்க
வெளிகா ணாது மெலிகின்றேம்
தம்பி துணைவா நீ யிதனைத்
தவிர்ந்தெம் முணர்வைத் தாராயோ.

'அம்பரீடற்கு அருளியதும், அயனார்
மகனார்க்கு அளித்ததுவும்,
எம்பிரானே! எமக்கு இன்று
பயந்தது' என்றே ஏமுறுவோம்;
வெம்பு துயரம் நீ உழக்க,
வெளி காணாது மெலிகின்றேம்;
தம்பி துணைவா! நீ இதனைத்தவிர்ந்து,
எம் உணர்வைத் தாராயோ?

பொ: - எம்முடைய இறைவனே! அம்பரிடன் என்பானுக்கு அருள்புரிந்ததும், பிரமதேவருடைய புதல்வராகிய உருத்திர மூர்த்திக்கு அருள்வழங்கியதும் ஆகிய நினது அருட்பண்பு எங்களுக்கு இப்பொழுது பயன் விளைப்பதென்றெண்ணி (நினது) பாதுகாப்பினை நாடி அடைதற்கு உள்ள யாங்கள், மனம் வெதும்பு தற்குக்காரணமான துன்பத்தை நீ அடைந்தமையால்(துன்ப இருளை

விட்டுச் செல்லும்) வழிகாணுது தளர்ந்து வருந்துகின்றேம். தம்பிக்குத் துணைவனே! நீ (மேற்கொண்டுள்ள) இத் துயரத்தை நீக்கி (உணர்விழந்த) எங்களுக்கு நல்லுணர்வினைத் தந்தருள மாட்டாயா?

கு:- அம்பரீடன்—சூரிய குலத்தில் பிறந்தஅம்பரீஷன் என்னும் பெயருடைய அரசன். ஏகாதசி விரதந்தினை மேற்கொண்ட இவன் மறுநாள் இறைவனை வழிபட்டுப் பாரணை பண்ணும் நிலையில், துருவாச முனிவர் வந்து நாட்கடன்களை முடித்து வருவதாகச் சொல்லிச் சென்றார். முனிவரது வருகையை எதிர்பார்த்திருந்த மன்னன் தான் பாரணை முடித்தற்குரிய காலங்கடத்தல் கண்டு இறைவனை வழிபட்ட தீர்த்தந்தை உட்கொண்டு பாரணையை முடித்திருந்தான். அங்கு வந்த துருவாசர் அரசனது செய்கையை அறிந்து வெகுண்டு தன் சடையிலுள்ள மயிரொன்றைப் பறித்து நிலத்தில் எறிய அதிலிருந்து பூதம் ஒன்று தோன்றி அரசனை அழிக்க முற்பட்டது. அரசன் திருமாலைத் தியானித்தான். திருமாலருளாற் சக்கரப்படைத் தோன்றிப் பூதத்தைக் கொன்று முனிவர்மேற் சென்றது. அஞ்சி ஓடிய முனிவர் மும்மூர்த்திகளிடமும் சரண் புகுந்து அடைக்கலம் பெருது மீண்டுவந்து அம்பரீடனையே சரண் புகுந்தார். அரசன் சக்கரப்படையை வணங்கி முனிவரை வருத்தாது மீளும்படி வேண்டினுன். சக்கரப்படையும் முனிவரைத் துன்புறுத்தாது விட்டுச்சென்றது என்பது புராண கதை. அயனுர் மகனுர் என்றது, உருத்திரமூர்த்தியை. சிவனை நோக்கித் தவம் புரிந்த பஸ்மாசுரன், தான் யாருடைய தலையைத் தொட்டாலும் அன்னேர் சாம்பராய்ப் போகும்படி வரம்பெற்றவன். தன் வரத்தின் மெய்ம்மையை அறிவதற்காகச் சிவனது தலையையே தொடுதற்கு முற்பட்டபொழுது சிவன் மறைய, அந்நிலையில் திருமால் ஒரு பெண்ணுகத் தோன்ற, அசுரன் அப் பெண்ணைக்கண்டு காமுற்று அணையவர, 'நீராடித் தூயோனுகிவருக' என அவள் கூற, அசுரனும் அவள் சொல்லியவண்ணமே நீரில் முழுகித் தன் தலையை ஈரம் புலரத் துவட்டியபொழுது பெற்ற வரத்தின்படி சாம்பராய் அழிந்தான் என்பது கதை. தனக்கு வரமளித்த சிவனையே அழிக்க முற்பட்ட பஸ்மாசுரனைத் திருமால் பெண்ணுருவாகிச் சூழ்ச்சியாற் கொன்றருளிய செய்தியையே 'அயனுர் மகனுக்குக் அருளியது' இந் நூலாசிரியர் குறித்தார் என்பர். எம்பெருமாணுகிய நீ செய்தருளிய இச் செயல்கள் இரண்டிற்கும் காரணமாகிய நினது திருவருட் பண்பு, தேவர்களாகிய எங்களுக்கு இப்பொழுது நற்பயன் விளைக்கும் என நம்பியிருந்தேம் என்பார், 'அம்பரீடற்கருளியதும் அயனுர் மகனுர்க்கு அளித்ததுவும் எமக்கு இன்று பயப்பது என்றே ஏமுறுவேம்' என்றனர். ஏமுறுதல்—பாதுகாப்பினை அடைதல்.

வெம்பு துயரம்—கண்டோர் செய்வதறியாது மனம் வெதும்புதற்குக் காரணமாகிய பெருந்துயர். எம்முடைய துயரங்களையெல்லாம் துடைத்து அருள்புரிய வந்த நீயே இப் பெருந் துயரடைந்தனையாதலின் என்பால் அருளுடைய இறைவனாகிய நீயுற்ற துயர் எங்களுக்கு மேலும் பெருந்துயரத்தை விளைத்தலால் தப்பியுய்தற்கு வழிகாணாது கலங்குகின்றோம் என்பார், 'வெம்பு துயரம் நீயுழக்க வெளிகாணாது மெலிகின்றேம்' என்றனர். வெளி என்பது, துன்ப இருளைக் கடந்து சென்றடைதற்குரிய உபாயமாகிய ஒளிமிக்க வழியினை. இலக்குவனாகிய தம்பியைத் தன்னுயிர்த் துணைவன் எனக்கொண்ட பேரன்பினனாதல்பற்றி இராமனைத் 'தம்பி துணைவ' என அழைத்தனர். (229)

### அரக்கராகிய தூதர்கள், இராவணனையடைந்து 'உன்பகை முடிந்தது' என அறிவித்தல்

8802. என்ப பலவு மெடுத்தியம்பி
யிமையா தோரு மிடருழந்தார்
அன்பு மிகுதி யாலைய
னாவி யுள்ளே யடங்கினான்
துன்ப மனிதர் கருமமேபுரிய
முன்பு துணிந்த மையால்
புன்க ணிருதர் பெருந்தூதர்
போனா ரக்கனிடம் புகுந்தார்.

என்ப பலவும் எடுத்துஇயம்பி,
இமையாதோரும் இடர் உழந்தார்;
அன்பு மிகுதியால், ஐயன்
ஆவி உள்ளே அடங்கினான்,
துன்ப மனிதர் கருமமே புரிய
முன்பு துணிந்த மையால்;
புன்கண் நிருதர் பெருந்தூதர்
போனார், அரக்கனிடம் புகுந்தார்.

பொ :- என மேற்குறித்தன பலவற்றையும் எடுத்துரைத்துக் கண்ணிமையாதவராகிய தேவர்களும் துன்புற்று வருந்தினார்கள். இறைவனாகிய இராமன், துன்பத்தில் உழலும் மனிதர்களுக்குரிய செயல்முறையினையே புரிவதாகத் தான் முன்பு துணிந்து மேற்

கொண்ட அவதாரச் செய்கை காரணமாக (இலக்குவன்பால் வைத்த) அன்பு மிகுதியால் (அவனது பிரிவினை ஆற்றியிருக்க இயலாதவனாகி) உயிர் உள்ளே ஒடுங்கப்பெற்றான். (அதுகண்டு) துன்பஞ் செய்தலையே இயல்பாகவுடைய அரக்கருடைய பெரிய தூதர்கள் போர்க்களத்தைவிட்டு நீங்கிச் சென்றவர்கள், அரக்கனாகிய இராவணன் (இருக்கும்) இடத்தை அடைந்தார்கள்.

கு : - இமையாதோர்—கண் இமைத்தல் இல்லாத தேவர்கள். ஐயன்—இராமன். ஐயன் துன்ப மனிதர் கருமமேபுரிய முன்பு துணிந்தமையால், அன்பு மிகுதியால் ஆவி உள்ளே ஒடுங்கினான் என்க. இராமன் தான் மேற்கொண்ட அவதாரமுறைக்கு ஏற்பத் தனது தெய்வத் தன்மையை வெளிப்படுத்திக் காட்டாது துயரில் உழலும் மனிதரது இயல்பினையே மேற்கொண்டு தம்பியின் பிரிவால் ஆற்றாது வருந்தி உயிர் ஒடுங்கினான் என்பதாம். துயரில்லாதவனும் வரம்பிலாற்றலுடையவனுமாகிய இறைவன், இங்ஙனம் துயர்மிகுந்த மனிதப் பிறவியை மேற்கொண்டமைக்கேற்பத் துயரில் உழந்த எளிமை நிலையினை,

'துயரில் சுடரொளி தன்னுடைச்
சோதி நின்றவண்ணம் நிற்கவே
துயரில் மலியும் மனிசர் பிறவியில்
தோன்றிக் கண்காண வந்து
துயரங்கள் செய்துதன் தெய்வ
நிலையுலகில் புகவுய்க்கு மம்மான்
துயரமில் சீர்க்கண்ணன் மாயன்
புகழ்துற்ற யானோர் துன்பமிலனே'

(திருவாய்மொழி 3—10—6)

என நம்மாழ்வார் உளங் கசிந்து போற்றியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கியுணர்தற்குரியதாகும். (230)

8803. என்வந் ததுநீ ரென்றரக்கர்க்
கிறைவ னியம்ப வெறிசெருவில்
நின்மைந் தனது நெடுஞ்சரத்தாற்
றுணைவ ரெல்லா நிலஞ்சேரப்
பின்வந் தவனு முன்மடிந்த
பிழையை நோக்கிப் பெருந்துயரால்
முன்வந் தவனு முடிந்தானுன்
பகைபோல் முடிந்த தெனமொழிந்தார்.

'என் வந்ததுநீர் ?' என்றுஅரக்கர்க்கு
இறைவன் இயம்ப, எறிசெருவில்
நின் மைந்தன்தன் நெடுஞ்சரத்தால்
துணைவர் எல்லாம் நிலம்சேர,
பின்வந்தவனும் முன்மடிந்த பிழையை
நோக்கி, பெருந் துயரால்,
முன்வந்தவனும் முடிந்தான் ;உன்பகை
போய் முடிந்தது' எனமொழிந்தார்.

பொ : - அரக்கர் வேந்தனாகிய இராவணன், (வந்த தூதர்களை நோக்கி) 'நீர் வந்தது என்ன காரணம்பற்றி' என வினவ, (அது கேட்ட தூதர்) 'நின்னுடைய புதல்வன் (இந்திரசித்து) ஏவிய நெடிய பிரமாத்திரத்தால் தன்னுடைய தோழர்கள் எல்லோரும் நிலத்தில் (மடிந்து) விழந் தன் பின்னே வந்த தம்பி இலக்குவனும் தனக்கு முன்னேயிறக்க நேர்ந்தமைக்குக் காரணமாயமைந்த தனது (காலத் தாழ்வாகிய) பிழையை எண்ணிப் பெருந்துயரால்) முத்தோனாகிய இராமனும் இறந்துபோனான். (ஆகவே) உனது தீராப்)பகையும் அறவே தொலைந்து முடிந்தது என்று கூறினார்கள்.

கு : - போர்க்களத்தினின்றும் விரைந்து வந்த தூதர்களைக் கண்ட இராவணன், தன் மைந்தன் இந்திரசித்துக்குப் போரில் என்ன இடையூறு நேர்ந்ததோ என்னும் அச்சத்தால், 'நீர்வந்தது என்' என வினவினான். அச்சமுற்று வினவிய தம் வேந்தனது அச்சத்தை நீக்கி மகிழ்ச்சியளிக்கும் முறையில், 'நின்மைந்தனது நெஞ்சரத்தால் துணைவர் எல்லாம் நிலஞ்சேர, பின்வந்தவனும் முன் மடிந்த பிழையை நோக்கி முன் வந்தவனும் பெருந்துயரால் முடிந் தான் ; உன் பகை போய் முடிந்தது' எனத் தூதர்கள் மகிழ்ச்சிச் செய்தியினை எடுத்துரைத்தார்கள். நின் மைந்தன் என்றது. இந்திர சித்தினை. துணைவர் என்றது, துன்பக் காலத்துத் துணைபுரியப் பட்ட சுக்கிரீவன் அநுமன் முதலியோரை. பின் வந்தவன்— இராமனுக்குப் பின்னே பிறந்தவன் ; என்றது, இலக்குவனை. முன் வந்தவன்—முன்னே பிறந்த தமையன்; என்றது இராமனை. (231)

# 22. சீதை களங்காண் படலம்

## முன்னுரை

சீதை, போர்க்களத்தில் இந்திரசித்தின் பிரமாத்திரத்தால் விழ்ந்துகிடக்கும் இராம இலக்குவரைக் கண்டு வருந்துகின்ற பகுதியாகலின், இது சீதை களங்காண் படலம் எனப்பெயர்பெறுகின்றது. இப் படலப் பெயர், சிற்சில சுவடிகளில், 'பிராட்டி களங்காண் படலம்' எனவும், 'ஜானகி களங்காண் படலம்' எனவும், 'நாச்சியாரைக் களங்காட்டு படலம்' எனவும், 'சனகி களங்காட்டு படலம்' எனவும், 'சனகி களங்காட்சிப் படலம்' எனவும் 'நாச்சியார் சோகப் படலம்' எனவும் 'சீதை சோகப் படலம்' எனவும் வேறுபட்டும் காணப்படுகின்றது.

அயன் கணையால் இராம இலக்குவரும் வானர வீரர்களும் இறந்தார்கள் எனத் தூதுவர் சொல்லக் கேட்ட இராவணன், மகிழ்ச்சி பொங்கி 'இலங்கை நகர மக்கள் வெற்றி கொண்டாடி நெய்யாடல் செய்க' என்று முரசறையச் செய்துவிட்டு மருத்து என்பவனை விளித்துப் போர்க்களத்துள்ள அரக்கர் பிணங்களையெல்லாம் ஆழ் கடலில் எறியுமாறு கட்டளையிட, அவன் அப்படியே செய்கின்றான். சீதையைப் புட்பக விமானத்தில் ஏற்றிவந்து, போர்க்களத்தில் இராம இலக்குவர் இறந்துகிடப்பதைக் காட்டுமாறு இராவணன் இட்ட கட்டளைப்படி அரக்கியர் சீதையைக் கொணர்ந்து காட்டுகின்றனர்.

கணவன் உருவன்றி மற்றொன்றும் காணாத சீதை, இராமன் முச்சற்றுக் கிடப்பதைக் கண்டு நஞ்சினை அருந்தியவள்போல உடலும் உயிரும் உணர்வும் சோர்ந்து விழுகின்றாள். பின்பு சிறிது தெளிந்து புலம்பி அழுகின்றாள். அவள் அருந்துயர் கண்டு பார்வதி தேவி முதலிய மும்மூர்த்தியர் மனைவியர் தேவமாதர் முதலிய பெண்டிரெல்லாம் அழுகின்றார்கள். இரக்கமில்லா அரக்கிமாரும் இரங்கி அழுகின்றார்கள். அறக்கடவுளை நோக்கியும் விதியை நோக்கியும், எமனை நோக்கியும் இராமனையும் இலக்குவனையும் நோக்கியும் சீதை பலபல சொல்லி அரற்றுகின்றாள். பின்பு இராமன் மேனியில் வீழ்ந்து உயிர்விடத் துணிந்து எழுகின்றாள். அப்போது திரிசடை விலக்கி அவள் கலக்கந்தீர, இராம இலக்குவர் மாய்ந்திலர் என்பதைக் காரணங்காட்டி நிறுவுகின்றாள். அவள் சொல்லில் நம்பிக்கை கொண்ட சீதை 'இன்றிரவு வரையில் இருக்

கின்றேன்' என்று உடன்படுகின்ருள். கணவனுடைய கவினுர் மேனியை நோக்கி வைத்தகண் வாங்காதிருந்த சீதையைக் கைகளால் பற்றிக்கொண்டு விமானத்தை அசோக வனத்திற்கே மீண்டும் செலுத்துகின்றனர். சீதை அசோகவனத்தில் இராமனையே எண்ணி எண்ணி ஏங்கிக் கொண்டிருக்கின்ருள்; என்பது இப் படலத்தில் கூறப்படும் செய்தியாகும்.

## வான்மீகத்தோடு கம்பர் வேறுபடும் இடங்கள்

1. இந்திரசித்து விடுத்த நாகபாசத்தால் கட்டுண்டுகிடந்த நிலையில் இராம இலக்குவரைச் சீதை கண்டு புலம்பியதாக வான்மீகம் கூறுகின்றது.

கம்பர், அதை மாற்றி, இந்திரசித்தின் பிரமாத்திரத்தால் இராம இலக்குவர் வீழ்ந்துகிடக்கும் நிலையில் சீதை கண்டு புலம்பியதாகக் கூறியுள்ளார்.

2. இராமன் இறந்துகிடப்பதாகக் கருதிச் சீதை புலம்புகின்றபோது தன்னைப்பற்றிய சிறப்புகளையே மிகுதியாகக் கூறிப் புலம்புகின்றதாக வான்மீகம் கூறுகின்றது :-

''என் கணவன் இங்கு இறந்துகிடக்கின்றமையால், ''என் உடம்பில் அமைந்த உத்தம இலக்கணங்களைக் கண்டு, ' இவள் நித்திய சுமங்கிலியாகவும் பிள்ளைப்பேறு உடையவளாகவும் இருப்பாள்' என்றும், 'அசுவமேதம், சத்திரம் என்னும் வேள்விகளைச் செய்தற்குரிய அரசனுடையபட்டத்தரசியாகத் தக்கவள் என்றும் சொன்னவர்கள் பொய்யர் ஆயினர்'' எனவும்,

'பட்டத்தரசி ஆதற்குரிய பதும ரேகைகள் என் பாதங்களில் இருக்கின்றனவே! 'பெண்டிற்கு இப் பதும ரேகையிருந்தால் அவர்கள் பட்டத்து அரசி ஆவர்' என்ற சாத்திரம் பொய்யாய்விட்டதே! கைம்மை அடைவதற்குரிய தீய அடையாளங்கள் என்னுடம்பில் தேடினுலும் காணப்படவில்லையே! எனவும்,

என் இருகால்களிலும் உள்ள பத்து விரல்களும் இரு உள்ளங் கால்களும் தரையில் நன்கு படிந்து உயர்ந்த இலக்கணமுடையதாக உள்ளனவே! என் உள்ளங் கைகளும் உள்ளங் கால்களும் சிவந்து காணப்படுகின்றனவே! என்னிறம் மாணிக்கத்தை ஒத்து விளங்குகின்றதே! என் புருவங்கள் இரண்டும் சேர்ந்திராமல் விலகி இருக்கின்றனவே! பற்கள் இடைவெளி

யின்றி நெருங்கியிருக்கின்றனவே! என் நகங்களும் அவ்வாறே நெருங்கியுள்ளனவே! என் கூந்தல் மயிர் தடிப்பின்றி மென்மையுடன் இருக்கின்றதே! 'இந்த இலக்கணமுடையவர்கள் எப்போதும் கணவரோடு புன்னகையுடன் வாழ்ந்திருப்பார்கள்' என்று சொல்லும் சாத்திரம் பொய்யாயினதே! எனவும், தன் உத்தம இலக்கணங்களைப் பற்றியே பெரிதும் சொல்லிச் சீதை புலம்பியதாக வான்மீகம் கூறுகின்றது.

கம்பர், இந்த உத்தம இலக்கணங்களைக் கூறிச் சீதை புலம்பியதாகச் சொல்லவேயில்லை.

இராமன் இறந்துகிடப்பதாகக கருதிய சீதை, அறக் கடவுளையும் விதியையும், எமனையும் விளித்துக் கடிந்துகூறி அரற்றியதாகக் கம்பர் கூறியுள்ளார்.

''அறக்கடவுளே! உன்னிடத்தில் பேரன்புடையவராய்ப் பாவம் சிறிதும் செய்தறியாத என் கணவரோடு நீ நட்புக் கொள்ளாமல் பாவத்தையே விரும்பிச் செய்கின்ற அரக்கர்வசம் ஆயினையே? கொடியாய்! உன்னருள்தான் இதுதானோ?''

''விதியே! வேதம் கூறும் நெறியில் தவறாது நடக்கும் இராம இலக்குவர்க்கும் துன்பத்தைச் செய்திருக்கின்றாயோ? கொடியாய்! விளையாடுகின்றாயோ?''

''எமனே! அடியேனது உயிர் என் கணவனே ஆவன்; அவனைக் கவர்ந்துகொண்டு என்னைக் கொல்லாமல் முடிவிலாத துன்ப இருளில் என்னை வீசினையே' முறையோ?''

என்பன கம்பர் படைத்த சீதையின் அரற்றல் ஆகும். இவை யாவும் இராமனையே உயர்த்திக் கூறுவனவாகவும் உயர்ந்த குறிக்கோளாகப் பற்றியனவாகவும் அமைந்துள்ளமை காணலாம். அறத்தைப் பின்பற்றுபவன்; வேதநெறி வழுவாது ஒழுகுகின்றவன், தனக்கு உயிரினும் சிறந்த பேரன்பினன் என்பன இராமன் சிறப்புகளே அதில் காணலாம்.

மேலும், 'தன் கைபிடித்து மணந்தமையினால்தான் இராமன் உயிர்க்கு இக் கேடு வந்தது' எனவும், 'அயோத்தியில் தங்கியிருப்பாயாக' என்று இராமன் கூறவும் பிரிந்திராது, தொடர்ந்து காடு புகுந்து ஒரு மான் காரணமாக இராமனைக் கொல்லும் பகையைத் தேடித்தந்த அன்பிலாதவள் தான் என்றும், 'இராமனுக்கிருந்த

முடிசூடுதற்குரிய விதியும், அவன் தந்தை முடிசூட்டுவதாகச் சொன்ன வாய்மையான சொல்லும் தன்னை மணந்ததனுல் பொய்யாயின' என்றும் சீதை சொல்லிப் புலம்பியதாகக் கம்பர் சொல்லியுள்ளார்.

கணவனை இழந்த நிலையில் ஒரு கற்புடைய பெண், தன் உத்தம இலக்கணங்களையே புகழ்ந்து சொல்லி, அவ் விலக்கணங்களுக்கு மாருகக் கணவன் இறந்துவிட்டானே! என்று புலம்புவதைக் காட்டிலும், தன் பெருமையெலாம் மறந்து தன் பாவத்தால்தான் கணவன் இறந்தான் என்று தாழ்வெனும் தன்மையோடு சொல்லிப் புலம்புவது துன்ப நிலையில் உள்ள ஒரு கற்புடைய பெண்டுக்கு ஏற்றதாகவும் 'தான் மானை விரும்பிக் கேட்டதால்தான் இக் கேடு நிகழ்ந்தது' எனத் தன்னையே நொந்துகொள்வது கதைத் தொடர்புக்கு ஏற்றதாகவும் அமைந்து கம்பர் படைப்பு சிறந்து காட்டுதல் காணலாம்.

3. வீரமிக்க இராமன் இறந்ததாக நினைந்து புலம்பிக்கொண்டிருக்கும் சீதையைத் திரிசடை தடுத்து இராம இலக்குவர் உயிருடன் இருப்பதாகக் குறிகளால் தெளிவித்தாள் என்று வான்மீகம் கூறுகின்றது.

'அழுவது இனி எதற்கு?' என்று அழுகையை நிறுத்திவிட்டு இராமன் மேனிமேல் வீழ்ந்து உயிர்விடத் துணிந்து எழுந்த சீதையைத் திரிசடை, இராம இலக்குவர் இறந்திலர் என்பதை நிறுவி அமைதியுண்டாக்கியதாகக் கம்பர் கூறுகின்ருர்.

சீதையின் புலம்புதலைத் தடுத்து அமைதியுண்டாக்கினள் திரிசடை என்பதைக்காட்டிலும், கணவன்மேல் வைத்த காதல் மிகுதியால் அவன் மேனிமேல் வீழ்ந்து உயிர்விடத் துணிந்தவளைத் தடுத்து நிறுத்தினுள் திரிசடை என்பது சீதையின் பெருங்கற்பையும் திரிசடையின் பேருதவியையும் உயர்த்திக் காட்டுதல் காணலாம்.

## படலப் பொருட் சிறப்பு

சீதை களங்காண் படலம் முழுவதும் பெரும்பாலும் அழுகைச் சுவையே நிரம்பியுள்ளது என்னலாம். கற்பினுக்கணியாகிய சீதை தன்னுயிரினும் சிறந்த கணவனுகிய இராமன் இறந்துகிடப்பதாகக் கண்ட நிலையைக் கூறும் இப் படலத்தில் வேறு சுவையை அதிகமாக எதிர்பார்க்கவியலாமை தெளிவு. சீதையின் துயரத்தைப் படிப்படியாக உயர்த்திச்செல்லும் அழுகைச் சுவையுடைய செய்யுட்கள் மிகச்

சிறந்தனவாய்ப் படிப்போருள்ளத்தை உருக்குவனவாக உள்ளன. கணவன் உருவத்தையன்றி மற்றென்றுங் காணாது பழகிய சீதை, தன் கண்முன் அக் கணவன் மூச்சற்று வீழ்ந்துகிடப்பதைக் காணும்போது, எந்த நிலையை எய்தியிருப்பாள் என்பதைக் கம்பர் சிந்தித்து நமக்குக் காட்டியுள்ளமுறை மிகவும் பொருத்தமானது; கருத்தாழமுடையது. இராமன் உடம்பைக் கண்டவுடன் நஞ்சினை உண்டவள்போலச் சீதை உடம்பும் உருவும் உணர்வும் சோர்ந்து விழ்ந்தாள் எனவும், அவள் வாடி விழுந்துகிடக்கும் நிலை, தண்டாமரைப் பூ ஒன்று கனன்று எரியும் கடுங்கனலில் விழ்ந்த தன்மை போன்று இருந்தது எனவும் கூறி விளக்கியுள்ளார். இந்த உவமை எவ்வளவு பொருத்தமான உவமை என்பதை ஊன்றி நோக்கியுணரலாம். தண்மையும் வெம்மையும் முரண்பட்ட குணங்கள். தண்ணீரில் தோன்றித் தண்ணீரில் வளர்ந்து தண்ணீரில் வாழ்கின்ற தண்டாமரைப் பூ வெம்மைமிக்க நெருப்பில் சாய நேருமாயின் வாடிக் கருகிச் சுருண்டுபோகும். தாமரை விடுத்துச் சனகன் மனையில் வளர்ந்த மென்மைமிக்க பதுமினிசாதிப் பெண்ணாகிய சீதை, தன் உயிரினும் சிறந்த கணவனது பெரும்பிரிவாகிய கொடுந் தீயினால் வாடி வருந்தினாள் என்பதை இவ் வுவமை எவ்வளவு அழகாகப் பொருத்தமாகத் தெளிவுபடுத்துகின்றது காண்மின்!

இத்தகைய பெருந்துயரைச் சீதை அடைதற்குக் காரணம் என்ன என்பதை, ''தகவுடைய பெண்டானுற்ற பெரும்பீழை யுலகுக் கெல்லாம் பெரிதன்றோ?'' என்று வினவி விளக்குகின்றார். இத் தொடரில் உள்ள ஒவ்வொரு சொல்லும் பொருளழுத்தம் மிக்குக் கவிஞனுடைய கருத்தை விளக்குவதில் போட்டியிட்டு உயர்ச்சி பெறுவதை ஆழ்ந்து காணலாம்.

தகவிலாத எளிய பெண்ணுக்கு ஆயின், கணவனை இழந்த துன்பம் சாதாரணமாகத் தோன்றலாம்; சீதை அத்தகையள் அல்லள்; மிகவுயர்ந்த தகுதியுடையவள் என்பார். 'தகவுடைய பெண்' என அவட்கு அடைகொடுத்துச் சிறப்பித்து, அவள் அடைந்த துன்பம் மிகப்பெரிதாதல் இயல்பே என்பதைப் புலப்படுத்தியுள்ளார். ஒரு பெண் துயர்மிக உறும்போது, அத் துன்பத்திற்குத் துணையாகத்தக்க உற்றார் உறவினரோடு இருந்தால், அத் துன்பம் சிறிது குறைந்துகாட்டும்; துணிவாகவும் அத் துன்பத்தை அனுபவிக்கலாம். அப் பேறு தானும் இன்றி, இரக்கமற்ற அரக்கியர்க்கு இடையில், பகைவர் நேரில் இறந்துகிடக்கும் கணவனைத் தன்னந்தனியாகக் கண்டு துன்புறும் சீதையின் தனித்துறு துயரம் மிகப் பெரிது ஆதலை விளக்கப் 'பெண் தான் உற்ற பெரும்பீழை' என்று கூறியுள்ள சிறப்புக் காணலாம். 'பெண் தான் உற்ற பெரும்

பீழை' என்றமையால், ஆருமொரு துணையின்றி ஆழ்கடல் போன்ற பெருந்துயரைச் சீதை தானே தனித்து உற்ருள் என்பது புலப்படுத்தியதாதல் காணலாம். ஒரு கற்புடைய பெண்ணுக்குத் தாயும், தந்தையும், அண்ணனும், தம்பியும், தமக்கையும், தங்கையும் ஆகிய நெருங்கிய உறவினர் இறந்தால் உளதாகும் துன்பத்தினும் உயிரொன்ருக மணந்துகொண்டு தழைவாது வாழ்ந்த கணவனை இழந்த கடுந்துன்பமே, மிகப்பெரிதாதல் புலப்படத் 'பீழை' என்ருெழியாது, 'பெரும்பீழை' என்று அடைமொழி கொடுத்து விளக்கியுள்ளார். ''கணவனை இழந்தோர்க்குக் காட்டுவதில்'' (சிலப்.—20, 80) என்று இத் துயரை இளங்கோவடிகள் விளக்கியுள்ளமை நினையலாம். ஒன்றன் பெருமையினை விளக்கத் தெய்வப் புலமைத் திருவள்ளுவர் போன்ற பெரும்புலவர்கள், 'மயிலையினும் மாணப்பெரிது' எனவும், 'கடலிற் பெரிது' எனவும் 'நிலத்தினும் பெரிதே' எனவும், உறழ்ச்சியுவமை கூறி விளக்குவர். சீதையின் துன்ப மிகுதியையுணர்த்த அம்மலையும் கடலும் நிலமும் போதாமையின் அவற்றையெல்லாம் உள்ளடக்கியுள்ள அண்டமாகிய உலக உருண்டைக்கெல்லாம் பெரிது என்பார், 'உலகிற்கெல்லாம் பெரிதன்ருே' என்று உறழ் பொருவாகக் கூறி அவள் துன்பமிகுதியை விளக்கியுள்ளமை நினைந்து நினைந்து உருகத்தகுவதாகும்.

இவ்வாறு மருந்து பிறிதரியாப் பெருந்துயர் உற்ற சீதை புலம்பி அழுத நிலையினைச் சிறப்பிக்க வந்த கம்பர், 'மங்கை அழலும் வானுட்டு மயில்கள் அழுத' என்று தொடங்கிப் பார்வதியும் திருமகளும், கலைமகளும், கொற்றவையும், கங்கையும் அரக்கமகளிரும் அழுதாகக் கூறியுள்ளார். இத் தெய்வ மங்கையர் யாவரும் இராமன் இறக்கவில்லை என்பதை நன்குணர்ந்தவர்கள்; பின்விளைவு தெரிந்தவர்கள்; இவ்வாறு தெரிந்துள்ள தெய்வ மடந்தையரையே கலங்கி அழச்செய்துவிட்டது சீதை அழுகை, என அவள் அழுகையின் சிறப்புப் புலப்படுத்தியவாறு. அதற்கு மேலும் கூறுகின்ருர். 'இரங்காத அரக்கிமாரும் தளர்ந்தழுதார்' என்கின்ருர். இதில் அரக்கிமாருக்குக் கொடுத்துள்ள அடையும் இழிவு சிறப்பும்மையும் அவர்கள் பிறர் துன்பம் கண்டு இரங்கியழுதற்கு உரியரே அல்லர் என்பதை விளக்கி நிற்கச்செய்து, அத்தகையாரும் தளர்ந்து அழுதார் எனச் சீதை அழுகையின் உருக்கமிகுதியைப் புலப்படுத்தியுள்ளமை, படிப்போர் உள்ளத்தை உருக்காமல் இராது. சிற்றூர்களில் ஒருத்தியின் கணவர் இறந்துவிட்டதைக் கேட்ட ஊர்ப் பெண்டிரெல்லாம் அவள் அழுகையைக் காணச்சென்று கூட்டமாகக் கூடிவிடுவதையும், அவள் அழுகையின் மிகுதிகண்டு உருகி இயைபேதும் இல்லாத அவ்வூர்ப் பெண்டிர் எல்லாம் கண்ணீர் வடித்து அழுதலையும் இன்றும் காணலாம். சீதை அழுதமைகண்டு

தேவமாதர் முதலிய பெண்டிரும் அரக்கிமாரும் புலம்பி அழுததாகக் கூறியது அவ் வியல்பு பற்றியேயாம்.

அதற்கு மேலும் ஒன்று கூறுகின்றார். 'பின்னு துடற்றும் பெரும்பாவம் அழுத பின்னென் பிறர் செய்கை' என்று வினவுகின்றார். தன்னை ஆக்கினாரை விடாது பின்பற்றிச் சென்று தொடர்ந்து வருந்துவதையே இயல்பாகக் கொண்டது பாவம். அந்தக் கொடிய பெரும்பாவமும் சீதையின் அழுகைகண்டு தன்னியல்பையும் மறந்து அழுதுவிட்டது என்றால், மற்றையோர் அழுவதுபற்றிக் கூறவேண்டுமோ? என்று விளக்குகின்றார். இவ்வாறாகச் சீதை அழுகையின் இயல்பைப் படிப்படியாக உயர்த்திச்சென்று இறுதியில் அதற்கு ஒரு முடிகவித்தாற்போன்று இதைக் கூறியுள்ள அழகு சாலச்சிறப்புடையதாய் உள்ளமுருக்கும் உயர்பினதாதல் காணலாம்.

இவ்வாறு நைந்து அழுத சீதை, அறக்கடவுளையும், விதியையும் எமனையும் விளித்து எதிர்பெய்துகொண்டு கடிந்துகூறி அரற்றிப் பின் இராமனையும் இலக்குவனையும் விறுத்து இரங்கிக்கூறி அரற்றி விட்டுத தன் உயிரனைய கணவன் மேனிமேல் வீழ்ந்து உயிர்விடத் துணிந்து எழுகின்றாள்; எழுகின்றவளைத் திரிசடை விலக்கி, இராம இலக்குவர் உயிருடன் இருக்கின்றனர் என்பதைக் காட்சியளவையானும் அனுமான அளவையானும் அருத்தாபத்தி அளவையானும் ஆகம அளவையானும் நிறுவிக் கூறிச் சீதையை அமைதியுறச் செய்யும் முறையை நோக்கின், அத் திரிசடையின் அளவை நூலறிவும், செயச்சொல்லும் சொற்றிறனும், அமையத்தேற்ற நுண்ணிய அறிவும், அன்புகனிந்த அவள் நன்னெஞ்சமும் நன்கு விளங்கும். மேலும், தொல்காப்பியர் "உறுகணோம்பல் தன்னியல்பாகலின் உரியதாகும் தோழிகள் உரனே" (பொருளியல்—45) எனத் தோழிக்கு உரியதாகக் கூறிய 'உரன்' சீதையின் உறுகணோம்பித் தோழியாய்த் திகழ்ந்த திரிசடைக்கு மிக்கிருந்தது என்பதும் உணரலாம்.

# 22. சீதை களங்காண் படலம்

## வெற்றிவிழாக் கொண்டாட இராவணன் கட்டளையிடுதல்

8804. பொய்யார் தூத ரென்பதனாற்
பொங்கி யெழுந்த வுவகையனாய்
மெய்யார் நிதியின் பெருவெறுக்கை
வெறுக்க வீசி விளைந்தபடி
கய்யார் வரைமேன் முரசேற்றிச்
சாற்றி நகரங் களிசிறப்ப
நெய்யா ராடல் கொள்கென்று
நிகழ்த்து கென்றா னெறியில்லான்.

பொய்யார் தூதர் என்பதனால்,
பொங்கி எழுந்த உவகையன் ஆய்
மெய்யார் நிதியின் பெருவெறுக்கை
வெறுக்க வீசி, விளைந்தபடி
கைஆர் வரைமேல் முரசுஏற்றிச்
சாற்றி நகரம் களிசிறப்ப
நெய்ஆர் ஆடல் கொள்,கென்று
நிகழ்ந்து கென்றான்—நெறிஇல்லான்.

பொ :- நெறிதவறினவனாகிய இராவணன்; தன் தூதுவர் பொய் சொல்லமாட்டார்கள் என்ற உறுதியினால், உள்ளத்தில் பொங்கி எழுந்த மகிழ்ச்சியுடையவனாய் (அத் தூதுவர்க்குத்) தன் உடம்பில் அணிகலன்களாக நிறைந்துள்ள நிதியாகிய பெரிய செல்வத்தை அவர் வெறுக்குமாறு கொடுத்துவிட்டு, "நமக்கு வெற்றி விளைந்த தன்மையை (யாவரும் அறிய) யானைமேல் முரசத்தை ஏற்றச் சொல்லி "இலங்கை மாநகரம் களிப்புமிகுமாறு நெய்யிட்டு

முழுகுகின்ற நீராடல் மேற் கொள்வதாக,'' என்று சொல்லுக' என்று கட்டளையிட்டான்.

கு :- இராவணன், போர்க்களத்தில் இந்திரசித்தின் பிரமாத்திரத்தால் யாவரும் வீழ்ந்ததை நேரில் சென்று அறியாமல் தன் தூதுவர் சொன்னதையே கொண்டு மகிழ்ந்து, நகரம் வெற்றிவிழாக் கொண்டாடக் கட்டளையிட்டதற்குக் காரணம் கூறுவாராய்ப் 'பொய்யார் தூதர் என்பதனுல்' என்ருர். தூதுவர்பால் அவ்வளவு நம்பிக்கை இருந்தது இராவணனுக்கு. தூதுவர் சொல் கேட்டவுடன் விரைந்து தோன்றிய மகிழ்ச்சியின் விளைவு தோன்றப் 'பொங்கியெழுந்த வுவகையனுய்' என்ருர். மெய்யார் நிதி என்றது, இராவணன் தன்னுடம்பில் அணியாக அணிந்துள்ள நவமணிகளால் ஆய ஆரமுதலிய நிதியை மகிழ்ச்சிக்குரிய நிகழ்ச்சி சொன்னவர்க்கு விரைந்து அன்புடன் கொடுக்கத்தக்கது அந் நிதியேயாதலும் நினைக. நிதியாகிய பெருவெறுக்கை என இருபெயரொட்டு ஆக்குக; 'இன்' தவிர்வழிச்சாரியை. மெய்யார் அணியே யாயினும் விலை வரம்பறியாப் பெருமையது என்பார் 'பெருவெறுக்கை' என்றும், அவ்வணிகலன்களை வாங்குவோர் வெறுக்குமாறு மிகுதியாகக் கொடுத்தான் என்பார். 'வெறுக்க வீசி' என்றும் கூறினுர். வெறுக்கை வெறுக்க வீசி என்ற சொல்நயம் காண்க. கையார் வரை என்றது; துதிக்கை பொருந்திய மலைபோன்ற யானையை. இதனைப் பிசியுவமை என்பர். விளைந்தபடி—வெற்றி உண்டான தன்மையை. விளைந்தபடி சாற்றி நகரம் நெய்யாராடல் கொள்க என்று நிகழ்த்துக என்ருன் என இயையும். நகரம் இடவாகு பெயராய் நகரமக்களையுணர்த்தியது. வெற்றிக்கு அறிகுறியாக நெய முழுக்காடுதல் மரபு. நிகழ்த்துதல் இங்குச் சொல்லுதலை உணர்த்தியது. (1)

## இராவணன் கட்டளைப்படி மருத்தன் மாய்ந்த அரக்கருடலைக் கடலில் எறிதல்

8805. அந்த நெறியை யவர்செய்ய
வரக்கன் மருத்தன் றனைக்கூவி
முந்த நீபோ யரக்கருடன்
முழுதுங் கடலின் முடுக்கிடுநின்
சிந்தை யொழியப் பிறரறியிற்
சிரமும் வரமுஞ் சிந்துவனென்
றுந்த வவர்போ யரக்கருடன்
முழுதுங் கடலி னுள்ளிட்டான்.

அந்த நெறியை அவர்செய்ய,
அரக்கன் மருத்தன் தனைக்கூவி
'முந்த நீபோய் அரக்கர்உடல்
முழுதும் கடலில் முடுக்கிடு;நின்
சிந்தை ஒழியப் பிறர் அறியின்,
சிரமும் வரமும் சிந்துவென்'என்று
உந்த; அவன்போய் அரக்கர்உடல்
அடங்கக் கடலினுள் இட்டான்.

பொ :- (இராவணன் இட்ட) அப் பணியை அப் பணியாளர் செய்யாநுற்க, இராவணன் மருத்தன் என்பவனை அழைத்து ''முன்னே நீ சென்று, இறந்துகிடக்கும் அரக்கரின் உடம்புகள் எல்லாவற்றையும் கடலில் வீசுக' (இச்செய்தியை) நின் மனம் தவிரப் பிறர் யாரேனும் அறிந்தால் நின் தலையையும் நீ தவத்தால் பெற்றுள்ள வரத்தையும் சிந்திவிடுவேன்;'' என்று கூறி அனுப்ப, அந்த மருத்தன் சென்று அரக்கர் உடல்முழுவதையும் கடலில் போட்டான்.

கு :- நெறி என்றது, இங்குப் பணியை. கடவுதல்-அழைத்தல். விரைந்து சென்று செய்யவேண்டிய செயல் என்பது புலப்பட 'முந்த நீ போய்' என்றான். முடுக்கிடுதல் இங்கு விரையச் சொரிதலை உணர்த்தியது. அரக்கர் பிணம் அனைத்தும் அலைகடலில் சொரியப் பட்டது என்பதை யாரேனும் ஒருவர் அறியச் சொன்னாலும் அச் செய்தி எல்லோர்க்கும் பரவித் தன் வஞ்சனைச் செயலைப் புலப்படுத்து மாகலின் அது அவ்வாறு பரவலாகாது என்ற கருத்தால் 'நின் சிந்தையொழியப் பிறரறியின் சிரமும் வரமும் சிந்துவென்' என்றான். இதனால் இராவணன் ஆட்சியில் நிகழுங் குற்றத்திற்குக் கொடுக்கும் தண்டனை மிகுதி புலனும். அரசியல் மறையைப் புலப் படுத்தல் பெருந்தீமை விளைத்தலின் பின்னும் அவன் அங்ஙனம் செய்யாதவறு அவன் சிரத்தை சிதைத்தலும் அவன் தவஞ்செய்து பெற்ற வரத்தால் சிரத்தைச் சிதைப்பது தடைபடுமாயின், அவ் வரத்தையும் சேர்த்துச் சிதைப்பதும் நிகழும் என்று, அச்சுறுத்தியவாறு. நின் மனத்தோடு இருக்கவேண்டும் என்பது கருத்து. உந்துதல்-செலுத்துதல். சீதைக்குப் போர்க்களத்தைக் காட்டவேண்டும் என்ற எண்ணமுடையன் ஆகலின் அவள் பார்க்கும்போது, அரக்கர் ஒருவரும் இறக்கவில்லை; இராமனும் அவன் சேனையுமே அழிந்தன என்று புலப்படுத்தவேண்டி இங்ஙனம் இராவணன் செய்வித்தான் என்க. (2)

## இராவணன் ஏவியபடி சீதையைக் களத்திற்குக் கொணர்தல்

8806. தெய்வ மானத் திடையேற்றி
மனிசர்க் குற்ற செயலெல்லாம்
தையல் காணக் காட்டுமின்கள்
கண்டா லன்றித் தனதுள்ளத்
தைய நீங்கா ளென்றுரைப்ப
வரக்கர் மகளி ரிரைத்தீண்டி
உய்யு முணர்வு நீத்தாளை
நெடும்போர்க் களத்தின் மிசையுய்த்தார்.

'தெய்வ மானத்திடை ஏற்றி
மனிசர்க்கு உற்ற செயல்எல்லாம்
தையல்காணக் காட்டுமின்கள்;
கண்டால் அன்றித் தனது உள்ளத்து
ஐயம் நீங்காள்' என்றுஉரைக்க,
அரக்கர் மகளிர் இரைத்துஈண்டி,
உய்யும் உணர்வு நீத்தாளை
நெடும்போர்க் களத்தின் மிசைஉய்த்தார்.

பொ :- (பின்பு இராவணன் சீதைக்குக் காவலாக உள்ள அரக்கியரை அழைத்து, நீங்கள்,) சீதையைத் தெய்வத்தன்மையுள்ள புட்பக விமானத்தில் ஏற்றி, இராம இலக்குவராகிய மனிதர்க்கு நேர்ந்த கதி எல்லாவற்றையும் அவள் காணுமாறு காட்டுங்கள்; தன் கண்ணால் கண்டால் அல்லது தன் மனத்துள்ள ஐயம் (நம் சொல்லால்) நீங்கமாட்டாள்' என்று சொல்ல, அரக்கிமார் ஆர வாரித்துக்கொண்டு நெருங்கி இவ்வுலகத்தில் உய்ந்திருக்க வேண்டும் என்னும் உணர்ச்சியற்ற சீதையை நெடிய போர்க்களத்திற்கு மேலாக அழைத்துச் சென்றார்கள்.

கு :- தெய்வமானம் என்றது புட்பக விமானத்தை. மனிசர் என இழித்துக் கூறியவாறு. மனிதர்க்குற்ற செயல் என்றது இராம இலக்குவர் இறந்து கிடக்கும் நிலையை. தையல் என்றது சீதையை. இராம இலக்குவர்கள் இறந்து விட்டார்கள் என்று சொன்னால் சீதை நம்பாமல் ஐயுறுவாள்; அவள் கண்களால் போர்க்களத்தில் சென்று அவர் இறந்துகிடப்பதைக் கண்டால் தன் கருத்திற்கு இசைவாள் என்பது இராவணன் எண்ணம் ஆதலின், இவ்வாறு செய்யச் சொல்

கின்றான். இறப்பதற்குத் துணிந்த நெஞ்சத்தவள் சீதை ஆதலின் ‘உய்யுமுணர்வு நீத்தாள்’ என அவளைக் குறிப்பிட்டார். உயிரினும் கற்பே சிறந்தது என்று எண்ணுகின்ற சீதை, இராமன் இறந்ததைக் கண்டால் உயிர்நீப்பாளே அன்றி இராவணன் இச்சைக்கு இணங்காள் என்பதை அறியாமல் அவளைக் கொண்டுபோன அரக்கர் மகளிரின் மடமையைப் புலப்படுத்துவதாக இறுதியடி அமைந்துள்ளமை காணலாம். (3)

## சீதை விமானத்திலிருந்தபடியே தரையில் வீழ்ந்து கிடக்கும் இராமனைக் கண்டு வருந்துதல்

8807. கண்டாள் கண்ணாற் கணவனுரு
வன்றி யொன்றுங் காணாதாள்
உண்டாள் விடத்தை யெனவுடலு
முணர்வு முயிர்ப்பு முடனோய்ந்தாள்
தண்டா மரைப்பூ நெருப்புற்ற
தன்மை யுற்று தரியாதாள்
பெண்டா னுற்ற பெரும்பீழை
யுலகுக் கெல்லாம் பெரிதன்றே.

கண்டாள் கண்ணால் கணவன் உரு;
அன்றி, ஒன்றும் காணாதாள்;
உண்டாள் விடத்தை என, உடலும்
உணர்வும் உயிர்ப்பும் உடன் ஓய்ந்தாள்;
தண்தா மரைப்பூ நெருப்புற்ற
தன்மை உற்றாள்; தரியாதாள்
பெண்தான் உற்ற பெரும்பீழை
உலகுக்கு எல்லாம் பெரிது அன்றே!

பொ:- கணவன் உருவைச் சீதை கண்ணால் கண்டாள்; அவ்வுருவத்தையன்றி வேறு ஒன்றும் காணாதாள் ஆயினாள்; (பின்பு) விடத்தை உண்டாள்போல உடம்பும் உணர்ச்சியும் உயிர்ப்பும் ஒருங்கே ஓயப்பெற்றாள். குளிர்ந்த தாமரைப்பூ நெருப்பில் வீழ்ந்தாற் போன்ற தன்மையை அடைந்தாள். தரியாதவளாகிய சீதை என்னும் பெண் அடைந்த பெருந்துயரம் உலகங்கள் எல்லாவற்றினும் பெரியதாகும் அன்றோ!

கு:- காணுதாள் ஆயினள் என ஆக்கச்சொல் வருவிக்க. இனிக் கணவன் உருவன்றி ஒன்றும் காணுதாளாகிய சீதை கணவனுருவைக் கண்ணுல் கண்டாள் என இயைத்துக்கூறலும் ஆம். இப் பொருட்டுக் 'கணவனுரு' என்பதைத் தாப்பிசைப் பொருள்கோளாக முன்னும் பின்னும் இயைத்தல் வேண்டும்; உண்ணுமையுள்ள துயிர்நிலை யூனுண்ண அண்ணுத்தல் செய்யாதளறு'' (குறள்-255) என்புழிப்போல. கணவன் இறந்தான் என்ற துன்பம் விடம் போன்றது ஆதலின், விடமுண்டாள்போல உடலுயிர் உணர்வுகள் ஒடுங்கப் பெற்ருள் என்க. உடலும் உணர்வும் உயிர்ப்பும் ஒய்ந்த நிலையில் அவள் தோற்றம் நெருப்பில் விழ்ந்த குளிர்ந்த தாமரைப்பூப் போன்று துவண்டு காணப்பட்டது என்றவாறு. அவள் துயரின் அளவிற்கு மலையும் கடலும் நிலமும் ஈடாகாமையின், அவற்றைக் கூருது 'உலகுக்கெல்லாம் பெரிதென்ருே' என்ருர். பதினுலு உலகங்களையும் ஒன்று சேர்த்துப் பார்த்தாலும் அவள் துயரின் அளவிற்கு ஒப்பாகாது தாழ்தலின் 'உலகுக்கெல்லாம் பெரிது' என்ருர். பெரும் பிழை, யுலகுக்கெல்லாம் பெரிதாதலின் அவள் உடலும் உணர்வும் உயிரும் உடன் ஓய்வாளானுல் என்க. இனிப் பீழை என்பதை இடைநிலை விளக்தாக்கிப் பெண்டானுற்ற பெரும் பீழை உலகுக்கெல்லாம் பெரிதன்ருே! என்று இயைத்துக் கணவனையிழந்த பெருந் துன்பம், துன்பங்கள் பலவற்றினும் பெரிதன்ருே என்று பொருள் கூறலும் ஆம். பீழை- துன்பம். துன்பக்கூட்டம் இங்குத்துன்பஉலகமாகக் கூறப்பட்டது. 'கணவனையிழந்தோர்க்குக் காட்டுவதுஇல்' ஆதலின், அத்துன்பம் தலையாய துன்பமாதல் பெறப்படும். (4)

### சீதை அழுதலும் அதுகண்டு பெண்டிருலகமே அழுதல்

8808. மங்கை யழலும் வானுட்டு
மயில்க ளழுதார் மழவிடையோன்
பங்கி னுறையுங் குயிலழுதாள்
பதும மலர்மேல் மாதழுதாள்
கங்கை யழுதா ளுமடந்தை
யழுதாள் கமலத் தடங்கண்ணன்
தங்கை யழுதா ளிரங்காத
வரக்கி மாருந் தளர்ந்தழுதார்.

மங்கை அழலும்—வான் நாட்டு
மயில்கள் அழுதார்; மழவிடையோன்
பங்கின் உறையும் குயில்அழுதாள்;
பதுமத்து இருந்த மாதுஅழுதாள்·

கங்கை அழுதாள்; நாமடந்தை
அழுதாள்; கமலத் தடங்கண்ணன்
தங்கை அழுதாள்; இரங்காத
அரக்கிமாரும் தளர்ந்து அழுதார்.

பொ :- (உயிரோய்ந்திருந்த) சீதை எழுந்து அழுதலும்—(அவளைக்கண்டு) விண்ணுலகத்தில் உள்ள மயில்போன்ற சாயலையுடைய தேவமாதர் அழுதார்கள். இளமையான எருதை ஊர்தியாகக்

கொண்ட சிவபிரானது இடதுபாகத்தில் தங்கியுள்ள குயில்போன்ற குரலையுடைய உமையவள் அழுதாள்; செந்தாமரை மலர்மேல் தங்கியுள்ள திருமகள் அழுதாள்; (சிவபிரான் சடையில் இருக்கும்) கங்கை அழுதாள்; பிரமனது நாவில் இருக்கும் கலைமகள் அழுதாள்; தாமரை மலர்போன்ற பெரிய கண்களையுடைய திருமாலின் தங்கையான கொற்றவை அழுதாள்; இரங்காத வன்னெஞ்சராகிய அரக்கிமாரும் தம் வன்மை தளர்ந்து அழுதார்கள்.

கு:— கணவனை இழந்ததாகக் கருதிச் சீதை அழும் துன்பத்தைக் கண்டு கணவனோடு உறையும் பெண்டிரும் அழத்தொடங்கினர் என்றவாறு. வானாட்டு மயில்கள் என்றது தேவமாதரை. முன்பு இலக்குவன் இறந்ததாகக் கருதி, இராமன் அழுதபோது சிவபிரான் முதலிய ஆடவர் வருந்தியதை "முகையினான் மலர்க்கிழவற்கு முக்கணான் தனக்கும் நகையும் நீங்கிய திருமுகம் கருணையின் நலிந்த" (பிரமாத்திரம்—204) என முன்கூறியுள்ளது போலவே, இங்குச் சீதை அழுதல் கண்டு வானாட்டு மகளிர் முதலிய பெண்டிர் அழுதமை கூறியவாறு. கமலத்தடங்கண்ணன் தங்கை என்றது கொற்றவையை. "சூலி, நீலி மாலவற் கிளங்கிளை" (சிலப்-12:68) என்றதும் காண்க. எதற்கும் இரக்கம் கொள்ளாத இயல்பினரான அரக்கிமாரும் இரங்கி அழுதார் என்றமையால் சீதையின் அவல மிகுதி புலப்படுத்தியவாறு உம்மை இழிவு சிறப்பு. (5)

8809. பொன்றாள் குழையா டணையீன்ற
பூமா மடந்தை புரிந்தழுதாள்
குன்று மறையுந் தருமமுமெய்
குழைந்து குழைந்து விழுந்தழுத
பின்று தூடற்றும் பெரும்பாவ
மழுத பின்னென் பிறர்செய்கை
நின்றார் நின்ற படியழுதார்
நினைப்பு முயிர்ப்பு நீத்திட்டாள்.

பொன்தாழ் குழையாள் தனைஈன்ற
　　பூமா மடந்தை புரிந்துஅழுதாள்;
குன்றுமறையும், தருமமும், மெய்
　　குழைந்து குழைந்து விழுந்து அழுத;
பின்றுது உடற்றும் பெரும்பாவம்
　　அழுதபின் என்பிறர் செய்கை?
நின்றூர் நின்றபடி அழுதார்;
　　நினைப்பும் உயிர்ப்பும் நீத்திட்டாள்.

பொ :- பொன்னுற் செய்யப்பெற்றுக் காதில் தொங்குகின்ற குழை என்னும் அணியை அணிதற்குரியவளாய சீதையைப் பெற்ற தாயாகிய பூமிதேவி என்னும் பெண் மனம் மாறுபட்டு அழுதாள்; தன் இயல்பில் குன்றுது என்றும் ஒருதன்மைத்தாக இருக்கும் வேதங்களும் தருமமும் மெய் நெகிழ்ந்து நெகிழ்ந்து விழுந்து அழுதன; பிற்படாமல் முற்பட்டு வந்து வருந்துகின்ற பெரும்பாவமும் அழுதது; பின்பு பிறர் செய்கை கூறி என்? தன்னை நோக்கி அழுதவர்கள் எல்லாம் ஒன்றும் (செய்யவியலாதவராய்) நின்றபடியே நின்றூர்கள்; சீதை நினைப்பு இழந்தாள்; பின் உயிர்ப்பும் இழந்தாள்.

கு :- சீதை என்று பெயர் கூறுமல் 'குழையாள்' எனக் கூறியது' பூமாதேவி தான்பெற்ற சீதை மங்கல மகளாய்க் குழையணிதற் குரியளாய்இருந்தவள், அதை அணியாமைக்குறிய கைம்மை நிலையை அடைவாளோ என்ற ஏக்கத்தால் அழுத குறிப்புணர்ந்தவேயாம். கணவனை இழந்தவர்க்குச் சிறந்த அடையாளம் குழையணியாமையே யாதல் உலகியல் நோக்கியுணரலாம். மலர்நீத்துள்ள பூங்கொம்பு போல அணிகலன்களையெல்லாம் நீத்துள்ள சீதையைப் 'பொன்றுள் குழையாள்' என்றது, அதை அணிதற்குரிய மங்கல மகளாயுள்ளமை புலப்படுத்தவேயாம். தருமத்தைக் காக்கவந்த இராமன் மனைவி, வேதத்தில் கூறிய அறநெறிப்படி ஒழுகிய நிலையிலும் இத்தகைய துன்பம் எய்துகின்றுளே என்ற ஏக்கத்தால் வேதங்களும் தருமமும் குழைந்து விழுந்து அழுதல் இயல்பே; ஆயின், முற்பட்டு வந்து வருத்துகின்ற கொடுமையுடைய பெரும்பாவமே அழுதது' என்றபோது, மற்றையோர் அழுதமை கூறவேண்டா என்பார் 'பின்னென் பிறர்செய்கை' என்றூர். உடற்றுதல்—துன் புறுத்தல். இராமன் துன்பத்தை விளக்கும்போது "கொகையி னின்றவர்க் குற்றதுசொல்லியென்? தொடர்ந்த பகையும் பார்க்கின்ற பாவமுங் கலுழ்ந்தன பரிவால்" (பிரமாத்திரம் – 204) என்று கூறியுள் ளது இங்கு ஒப்பு நோக்குதற்குரியது; அழுதார் நின்றபடி நின்றூர் என இயையும். நினைப்பு நீங்கிய பின்னரே உயிர்ப்பு நீங்கும் இயல்பு

தோன்ற 'நினைப்பும் உயிர்ப்பும் நீத்திட்டாள்' என முறைதெரிந்து ஓதினர்.

சீதை தெளிந்து துன்புற்றேங்குதல்

8810. நினைப்பு முயிர்ப்பு நீத்தாளை
நீராற் றெளித்து நெடும்பொழுதின்
இனத்தி னரக்கர் மடவார்க
ளெடுத்தா ருயிர்வந் தேங்கினள்
கனத்தி னிறத்தான் றனைப்பெயர்த்துங்
கண்டாள் கயலைக் கமலத்தால்
சினத்தி னலைப்பா ளெனக்கண்ணைச்
சிதையக் கையால் மோதினள்.

நினைப்பும் உயிர்ப்பும் நீத்தாளை
நீரால் தெளித்து, நெடும்பொழுதின்
இனத்தின் அரக்கர் மடவார்கள்
எடுத்தார்; உயிர்வந்து ஏங்கினள்;
கனத்தின் நிறத்தான் தனைப்பெயர்த்தும்
கண்டாள்; கயலைக் கமலத்தால்
சினத்தின் அலைப்பாள் எனக்கண்ணைச்
சிதையக் கையால் மோதினள்.

போ :- நினைப்பும் உயிர்ப்பும் இன்றி மூர்ச்சையுற்றிருந்த சீதையைக் கூட்டமான அரக்கப் பெண்டிர் நெடிது நேரம்வரை நீர் தெளித்துத் தெளியச் செய்து, எடுத்து அமரச் செய்தார்கள்; சீதை அவர்தம் உதவியால் உயிர்வரப்பெற்று வருந்தினள். மேக வண்ணனாகிய இராமனை மீண்டும் முன்கிடந்தவாறே கிடக்கக்கண்டாள், கயல்மீனைத் தாமரை மலரால் கோபங்கொண்டு அடிப்பாள்போல கண்களைக் கைகளால் சிதையுமாறு அடித்துக்கொண்டாள்.

கு :- அனுவாதமாக 'நினைப்பு முயிர்ப்பு நீத்தாளை' என இச் செய்யுளிலும் கூறித் தொடங்கியவாறு. நீர் தெளித்து என்னாது நீரால் தெளித்து என்றமையால் தெளிந்து என்பதற்குத் தெளியச் செய்து எனப் பொருள் கூறலாயிற்று. நெடும்பொழுதின் நீரால் தெளித்து என இயையும். இனம்—கூட்டம். ஒடுங்கிய உயிர் வந்தவுடன் பழைய துன்பமும் மீண்டும் தொடரும் ஆகலின் 'உயிர்வந்து ஏங்கினள்' என்றார். தான் மூர்ச்சித்துக் கிடந்து, பின் தெளிந்தது போல, இராமனும் மூர்ச்சை தெளிந்திருப்பானோ என்று மீண்டும்

அவன் முகத்தைக் கண்டவள், அவன் முன்னைய நிலையிலேயே கிடப்பதைக் கண்டு, இத் துன்பக் காட்சியைக் காண நேர்ந்ததே எனக் கண்கள்மேல் கைகளை மோதினாள் என்க. கனம்—மேகம். கயல்போன்ற கண்களைக் கமல மலர்போன்றத் தன் கைகளால் மோதினாள் எனத் தனித்தனியாகக் கூறவேண்டியதைத் தற்குறிப் பேற்ற உவமமாக்கிக் 'கயலை கமலத்தால் சினத்தின் அலைப்பாள் எனக் கண்ணைச் சிதையக் கையால் மோதினாள்' என்றார். கையால் மோதிய கடுமை புலப்படக் 'கண்ணைச் சிதைய மோதினாள்' என்றார். மிதிலையில் கன்னிமாடத்திலிருந்தபோது, வில்லொடு செல்லும் மேகம் போன்ற இராமனைக் காட்டிக் காதலை உண்டாக்கியதும் கண் வழி நுழையும் அக் கள்வனுக்கு வழியாக நின்று அவனை உள்ளத் துள் நுழைவித்ததும் தன் கண்களேயாதலின் அக் கண்களைச் சிதையத் தாக்கினாள் என்று கூறலும் ஆம். "உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து வேண்டி யவர்க்கண்ட கண்" (குறள்-1177) எனத் தன் கண்களை ஒரு தலைவி வெறுத்துக் கூறியுள்ளதும் காணலாம். (7)

8811. அடித்தாண் முலைமேல் வயிறலைத்தா
ளழுதா டொழுதா ளனல்வீழ்ந்த
கொடித்தா னென்ன மெய்சுருண் டாள்
கொதித்தால் பதைத்தாள் குலைவுற்றாள்
துடித்தாண் மின்போ லுயிர்கரப்பச்
சோர்ந்தாள் சுழன்றா டுள்ளினாள்
குடித்தா டுயரை யுயிரோடுங்
குழைத்தா னுழைத்தாள் குயிலன்னாள்.

அடித்தாள் முலைமேல்; வயிறு அலைத்தாள்;
அழுதாள்; தொழுதாள்; அனல்வீழ்ந்த
கொடித்தான் என்ன, மெய்சுருண்டாள்;
கொதித்தாள்; பதைத்தாள்; குலைவுற்றாள்;
துடித்தாள்; மின்போல்; உயிர்காப்பச்
சோர்ந்தாள், சுழன்றாள்; துள்ளினாள்
குடித்தாள் துயரை, உயிரோடும்
குழைத்தாள்; உழைத்தாள்—குயில்அன்னாள்.

பொ :— குயில்போன்ற இனிய குரலுடைய சீதை—மார்பின் மேல் அடித்துக்கொண்டாள்; வயிற்றின்மேல் அறைந்தாள்; அழு தாள்; கணவனை நினைந்து தொழுதாள்; நெருப்பில் வீழ்ந்த கொடி

போல உடம்பு சுருண்டாள்; மனம் கொதித்தாள்; பதை பதைந்தாள்; நடுநடுங்கினாள்; துடிதுடித்தாள்; மின்னல் தோன்றி மறைவது போல முன்வந்த உயிர்ப்பு மீண்டும் மறையச் சோர்வுற்றாள்; (பின் எழுந்து விமானத்துள்) சுழன்று சுழன்று வந்தாள்; பின்பு துள்ளிக் குதித்தாள்; கணவனை இழந்த துயரைத் தன் உயிரோடும் குழைத்துக் குடித்தாள்; வருந்தினாள்.

கு :— கணவனை இழந்த பெண்டிரிடத்து இயல்பாக நிகழும் செயல்களை முறைப்படுத்திக் கூறியவாறு. அரக்கியரின் உபசாரத் தால் தோன்றிய உயிர் மீண்டும் மறைந்தநிலை, தோன்றி மறையும் மின்னலைப் போலுதலின் 'மின்போல் உயிர்கரப்ப' என்றார். குலைவுறு தல்—நடுங்குதல். உழைத்தல்—வருந்துதல். துயரையும் உயிரையும் நீர்ப் பொருள்போலக் குழைத்தலும் குடித்தலும் கூடாதாயினும் துயர மிகுதியால் உயிரோயப் பெற்றமையுணர்த்த சமாதி அணிதழுவிக் கூறியதாகக் கொள்க. (8)

8812. விழுந்தாள் புரண்டா ளுடன்முழுதும்
வியர்த்தா ளுயிர்த்தாள் வெதும்பினாள்
எழுந்தா ளிருந்தாண் மலர்க்கரத்தை
நெரித்தாள் சிரித்தா ளேங்கினாள்
கொழுந்தா வென்று ளயோத்தியர்தங்
கோவே யென்று ளெவ்வுலகும்
தொழுந்தா ளரசே யோவென்றாள்
சோர்ந்தா ளரற்றத் தொடங்கினாள்.

விழுந்தாள்; புரண்டாள்; உடல்முழுதும்
வியர்த்தாள்; அயர்த்தாள்; வெதும்பினாள்;
எழுந்தாள்; இருந்தாள்; தளிர்க்கரத்தை
நெரித்தாள்; சிரித்தாள்; ஏங்கினாள்;
'கொழுந்தா!' என்றாள், 'அயோத்தியர்தம்
கோவே!' என்றாள்; எவ்வுலகும்
தொழும்தாள் அரசேயோ!' என்றாள்;
சோர்ந்தாள் அரற்றத் தொடங்கினாள்.

பொ :- (பின்பு சீதை விமானத்திற்குள்) விழுந்தாள்; விழுந்து புரண்டாள்; உடல் முழுவதும் வியர்க்கப் பெற்றாள்; பெருமூச்சு விட் டாள்; பின்பு மனம் வெதும்பினாள்; பின்பு எழுந்தாள்; உடனே

உட்கார்ந்தாள்; தாமரை மலர்போன்ற முன் கையை நெரித்துக் கொண்டாள்; (பின்பு தன் நிலையை நினைந்து எண்ணிச்) சிரித்தாள்; உடனே வருந்தினுள்; (இலக்குவனைப் பார்த்து) கொழுந்தா! என்று கூவினுள்; இராமனைப் பார்த்து அயோத்தி நகரத்தவர்தம் அரசே! என்று விளித்தாள். அயோத்திக்கு அரசாயிருந்தாலும் எவ்வுலகத் தாரும் வந்து தொழுதற்குரிய பெருமைவாய்ந்த திருவடிகளையுடைய அரசே! என்று அழைத்தாள்; (அத்தகைய அவன் பெருமையை நினைந்து) சோர்ந்தாள்; (பின்பு சோர்வு சிறிது நீங்கப்பெற்று) வாய் திறந்து பல சொல்லி அரற்றத் தொடங்கினுள்.

கு :- துன்புற்ற சீதையின் பலவகைச் செயல்களையும் இங்குக் கூறியவாறு. துன்பத்தால் அறிவு மழுங்கிய நிலையில் எழுதலும் உடனே இருத்தலும் துன்பத்தால் கைகளை நெறித்தலும் உடனே சிரித்தலும் உடனே அழுதலும் ஆகிய முரண்பட்ட செயல்கள் நிகழும் என்பதை இதனுல் அறியலாம். கொழுந்தன்—கணவனுக் குத் தம்பி. இராமனோடு இலக்குவனும் களத்தில் வீழ்ந்துகிடத்த லின் அவனைக் கண்டு 'கொழுந்தா' என விளித்தாள். மண்ணுலகத் தில் ஒரு பகுதியாகிய அயோத்திக்கு அரசனுயினும் ஆற்றலாலும் பண்பினுலும் எல்லாவுலகத்தவரும் இராமனடியைத் தொழுவார்கள் என்பது நினைந்து கூறியவாறு. இதை நோக்கும்போது "தென்னு டுடைய சிவனே போற்றி எந் நாட்டவர்க்கும் இறைவா போற்றி" என்ற மணிவாசகம் நினைவுக்கு வருதல் இயல்பு. அரற்றுதல்—வாய் விட்டுப் பல சொல்லிப் புலம்புதல். (9)

### சீதையின் அரற்றல்
### அரத்தை நோக்கிக் கூறியது

8813. உறமே வியகா தலுனக் குடையார்
புறமே துமிலா ரொடுபூ ணலையோ
மறமே புவிவார் வசமா யினையோ
அறமே கொடியா யிதுவோ வருடான்.

'உறமேவிய காதல் உனக்கு உடையார்,
புறம் ஏதும் இலாரொடு பூணலையோ?
மறமே புரிவார்வசம் ஆயி னையோ?
அறமே! கொடியாய்; இதுவோ, அருள்தான்?

பொ :- அறக் கடவுளே! உன்னிடத்தில் மிகுதியாகப் பொருந் திய அன்புடையவராய் உனக்குப் புறம்பான பாவச் செயல் சிறிதும்

இல்லாதவராகிய என் கணவரோடு சேரவில்லையோ? பாவத்தையே விரும்பிச் செய்கின்ற அரக்கர்வசம் ஆய்விட்டாயோ? கொடியவனே! உனது அருள்தான் இதுதானோ?

கு :- அறச் சார்புடையார் வெல்லுதலும் பாவச் சார்புடையார் தோற்றலுமே நியதியாகவும் அதற்குமாருக நிகழ்ந்திருப்பது கண்டு சீதை அறக்கடவுளை விளித்து இங்ஙனம் வினவுகின்றாள். இராமன் அறத்தின்மேல் பேரன்புடையவன் என்பதை, ''ஆரறத்தினோடன்றி நின்றாரவர் வேரறுப்பன்'' (ஆரணிய—அகத்தியப்) என அவன் முனிவர்க்குக் கூறிய உறுதி மொழியால் உணரலாம். அறத்தில் அன்பு மிகவுடையவராதலோடு பாவம் சிறிதும் செய்யாதவர்கள் இராம இலக்குவர் ஆதலின், அறக் கடவுள் அவர்களோடு நண்பு பூண்டு பாவிகளை மாய்க்காமல், பாவிகளோடு நண்பு பூண்டு தனக்குத் துணையானவர்களைக் கொல்வித்த கொடுமை நினைந்து 'கொடியாய்' என விளிக்கலாயினள். இச்செயல் அருள்நெறிக்கு மாறுபட்டதாகலின் 'இதுவோ அருள்தான்' என வினவினாள். 'மறமே புரிவார்' என்புழி ஏகாரம் பிரிநிலை. மறத்தையே விரும்பிச் செய்பவர் என்பார் 'புரிவார்' என்ற வினையால் கூறினார். புரிதல் விரும்புதல், செய்தல் என்னும் இரு பொருளையும் உணர்த்தும். அறத்தை மறந்தும் செய்யாதவர் என்பது கருத்து, பூணல்—நண்பு பூணல். அறக் கடவுள் மறமே புரியும் அரக்கர்வசம் ஆகாமலிருந்தால் இராம இலக்குவர்க்கு இந்த நிலை ஏற்படாது என்ற நம்பிக்கையால் இங்ஙனம் கூறலாயினாள். (10)

### விதியை நோக்கிக் கூறியது

**8814. முதியா ருணர்வே தமொழிந் தவலால்**
**கதியே துமிலார் துயர்கா ணுதியோ**
**மதியேன் மதியே னுனைவாய் மையிலா**
**விதியே கொடியாய் விளையா டுதியோ.**

முதியார் உணர்வேதம் மொழிந்த அலால்,
கதிஏதும் இலார் துயர் காணுதியோ?
மதியேன் மதியேன் உனை வாய்மையிலா;
விதியே! கொடியாய்; விளையாடுதியோ?

பொ :- வாய்மை தவறிய விதியே! அறிவினால் பெரியவர்கள் எல்லாம் உணர்தற்குரிய வேதங்கள் சொல்லிய நெறியில் அல்லது

வேறு வழியில் சிறிதும் ஒழுகாதவர்களாகிய இராம இலக்குவரின் துன்ப நிலையைக் கண்டுகொண்டுதான் இருக்கின்றாயோ? அல்லது (என் மனநிலையைச் சோதிக்க) விளையாடுகின்றாயோ? (எங்ஙனம் ஆயினும்; உனை மதிக்கமாட்டேன்; மதிக்கமாட்டேன்.

கு:- வேதத்தின் பெருமை புலப்பட முதியார் உணர் வேதம் என்றார். முதியார் என்றது, அறிவினால் முதிர்ந்தவரை. வேதம் ஓதிய வழியில் நடப்பவர்க்கு நன்மை செய்தலும், அதற்கு மாறாக நடப்பவர்க்குத் தீமை செய்தலும் விதிக்கு இயல்பாகவும், இப்போது அந்நிலை மாறி, வேத விதிப்படி நடக்கும் இராம இலக்குவர்க்குத் துன்பமும் அதற்கு மாறாக நடப்பவர்க்கு இன்பமும் விதி செய்து விட்டமையால், அதன் கொடுமை புலப்படக் 'கொடியாய்' என்றாள். கொடுமையுடையை என்றவாறு. கதி—வழி. அடுக்கு வற்புறுத்த வந்தது. துயர் காணுதியோ? விளையாடுதியோ? என்ற ஐய வினா இரண்டனுள் பின்னது உண்மையாதல் பின் நிகழ்ச்சியால் உணர லாம். விதி என்பது இருவினைப் பயன் செய்தவனையே சென்றடை தற் கேதுவாகிய நியதி. ஊழ், பால், முறை என்பன ஒரு பொருட் கிளவி. வேதம் கூறிய நன்னெறியில் நடக்கும் இராம இலக்குவர்க்கு நல்வினைப் பயனை எய்துவிப்பது விதியின் கடமையாக இருக்கவும், அவர்க்குத் தீவினைப் பயனை எய்துவித்த கொடுமையைச் செய்தமை யினால் அதனைச் சீதை மதியாள் ஆயினாள். வேதநெறி நடப்பவர்க்கு விதி விளையாட்டாகத் துன்பம் செய்திருந்தாலும் அது தீயதே என்ற வாறு. காணுதியோ என்பதற்குச் செய்தியோ என்னும் பொருள் கூறலாம். (11)

## எமனை நோக்கிக் கூறியது

8815. கொடியே னிவைகா ணகிலே னுயிர்கோள்
முடியாய் நமனே முறையோ முறையோ
விடியா விருள்வா யெனவீ சினையே
அடியே னுயிரே யருளு யகனே.

கொடியேன் இவை காணகிலேன்; உயிர்கோள்
முடியாய், நமனே! முறையோ? முறையோ?
விடியா இருள்வாய் எனை வீசினையே!
அடியேன் உயிரே, அருள் நாயகனே.

பொ:- நமனே! அடியேனுடைய உயிரே அருள்மிக்க என் நாய கன் தான்; (அத்தகைய என் நாயகனும் தம்பியும் இறந்துகிடக்கும்)

இத்துன்பக் காட்சிகளைக் கொடியேனுகிய யான் காணமாட்டாத வளாக இருக்கின்றேன்; அத்தகைய மேலியனுகிய என் உயிரைக் கொள்ளும் செயலைச் செய்துமுடிக்காமல், விடிவில்லாத இருளில் (முடிவில்லாத துன்பத்தில்) என்னை வீசிவிட்டாயே! இது முறை யாகுமா? முறையாகுமா? (முறையன்று).

கு:- உயிர்போன்ற இராமனை மட்டும் கவர்ந்து கொண்டு உடல் போன்ற என்னை முடிக்காமல் முடிவில்லாத துன்பத்தில் உழலுமாறு விட்டுச்செல்வது முறையாகாது என்று எமனை நோக்கிச் சீதை அரற்றியவாறு. சீதைக்கு உயிர் இராமனே என்பதை,

"எனக்குயிர் பிறிதுமொன்றுள் சென்றிரேல் இரக்கமல்லால்
தனக்குயிர் வேறின்ருகித் தாமரைக் கண்ணதாகி
கணக்கரு மேகம் ஒன்று கார்முகம் தாங்கி ஆர்க்கும்
மணக்கினி தாகி நிற்கு மஃதன்றி—வரம்பிலாதாய்"
(மாயாசனகப்-24)

என்று சீதை முன் கூறியுள்ளதால் அறியலாம். 'யான் கொடியவளே ஆயினும், இத்துன்பக் காட்சியைக் கண்டு வாழும் அளவிற்கு வன்மைபடைத்திலேன்' என்பாள். கொடியன், 'இவை காண இல்லேன்' என்ருள். களத்தில் உயிர் நாயகனும் தம்பியும் சேனையும் இறந்துகிடக்கும் துன்பக் காட்சியை நேரே சுட்டிக் காட்டி 'இவை' என்ருள். கில் ஆற்றலுணர்த்தும் இடைச் சொல்; காணகிலேன் என்றது, 'கண்டு வாழும் ஆற்றல் உடையேன் அல்லேன்' என்றவாறு. காணகிலேனது உயிர் என்க. 'கோள்' முதலிய நீண்ட தொழிற் பெயர். நானே! என் உயிர் கொள்ளுதலைச் செய்து முடியாயாய் எனை இருள்வாய் வீசினையே முறையோ? என இயையும். 'விடியா இருள்' என்றது, ஒட்டணியாய்க் கணவனையிழந்து வாழும் முடிவிலாத துன்பக் கடல் என்ற உவமேயப் பொருளை உணர்த்தியது. அருள் நாயகனே என்புழி ஏகாரம் ஈற்றசை. அடியேனுயிரே என்புழி ஏகாரம் தேற்றப் பொருளது. நமனே! அடியேன் உயிரே நாயகன் ஆதலின் கொடியேன் இவை காணகிலேன்; உயிர்கோள் முடியாய் இருள்வாய் எனைவீசினையே முறையோ என இயையும். (12)

### இராமனை நோக்கி அரற்றியது

8816. எண்ணு மயலோ டுமிருந் ததுநின்
புண்ணு கியமே னிபொருந் திடவோ
மண்ணே ருயிரே யிமையோர் வலியே
கண்ணே யமிழ்தே கருணு கரனே

‹எண்ணு, மயலோடும் இருந்தது நின்
புண்ஆகிய மேனி பொருந்திட வோ ?—
மண்ணேர் உயிரே ! இமையோர் வலியே !
கண்ணே ! அமிழ்தே ! கருணு கரனே !

பொ :- மண்ணுலகத்தவர்க்கு உயிர் போன்றவனே ; தேவர் கட்கு (பகை வெல்வதில்) வலிமையாக இருப்பனே ! என் கண் போன்றவனே ! தேவர் அமிர்தம் போன்றவனே! கருணைக்கு இருப் பிடமானவனே ! யான் அளவிடமுடியாத காதல் மயக்கத்தோடும் இதுகாறும் அரக்கர் ஊரில் உயிர் வாழ்ந்திருந்தது, நின் புண்ணுன உடம்பைப் பொருந்திடத்தானே ? (அரக்கரை வெற்றிகொண்டு பூரிக்கும் பொன்னுன மேனியைத் தழுவ அல்லவோ ? என்றபடி).

கு :- சீதை ஊணுறக்கமின்றிப் பகைவர் ஊரில் உயிர் வாழ்ந் திருந்தது, பகைவரை வென்று புகழோடுவரும் இராமன் அழகைக் காணவேண்டும் என்னும் ஆசையால்தான் எனபதை :—ஊணிலா யாக்கை பேணி உயர்புகழ் சூடாதுன்முன், நாணிலா திருந்தேனல் லேன் நவையறு கிணங்க ளென்னும், பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணியமூர்த்தி தன்னைக்; காணலாம் இன்னும் என்னும் காதலால் இருந்தேன் கண்டால்'' (மாயசனகப்—22) எனவும், ‹‹சென்று சென்றழியும் ஆவி திரிக்குமால்—செருவிற் செம்பொன், குன்று நின்றனைய தம்பி புறக்கொடை காத்து நிற்ப, கொன்றுநின் தலைகள் சிந்தி அரக்கர்தம் குலத்தை முற்றும், வென்று நின்றருளும் கோலம் கானிய கிடந்த வேட்கை'' (மாயசனகப்—23) எனவும் முன் கூறியுள்ளதால் அறியலாம். ‹மன்னனுயிர்த்தே மலர்தலை யுலகம்' (புறநா—186) என்பவாகலின் உலகின் மன்னனுகிய இராமனை ‹மண்ணோருயிரே' என்றும், சம்பனை வென்ற தந்தைபோலவே தேவர்க்குத் துணைசெய்யும் அவன் வீரம் நினைந்து ‹இமையோர் வலியே' என்றும், தனக்குக் காணும் கண்ணுகவும் உண்ணும் அமுதமாகவும் இருப்பவன் இராமனே என்ற கருத்தால் ‹கண்ணே ! அமிழ்தே !' என்றும்; இவரல்லல் உறத்தக்காயல்லை என்பாள், ‹கருணுகரனே !' என்றும் கூறினுள். ‹‹அல்லல் அருளாள்வார்க் கில்லை '' (குறள்-245) என்றது கான்க. எண்ணுமயல் என்றது, அளவில்லாத காதல் மயக்கத்தை. இராமன் இரத்த வெள்ளத்தில் கிடந்தமை கண்டு அவனைப் புண்பட்டு இறந்ததாக நினைத்தாள் ஆத லின், ‹‹நின் புண்ணுகிய மேனி பொருந்திடவோ '' என்ருள். இரா மன் மேனியில் புண்ணில்லை என்பதை, ‹‹ஆழியானக்கை தன்னில் அம்பொன்றும் அறுக்கிலாமை ஏழை நீ காண்டி யன்றே'' எனப் பின் திரிசடை கூறுவதால் அறியலாம். (13)

8817. மேவிக் கனன்முன் மிதிலைத் தலையென்
பாவிக் கைபிடித் ததுபண் ணவநின்
ஆவிக் கொருகோள் வரவோ வலர்வாழ்
தேவிக் கமிழ்தே மறையின் றெளிவே.

மேவிக் கனல்முன், மிதிலைத் தலை, என்
பாவிக் கை பிடித்தது, பண்ணவ! நின்
ஆவிக்கு ஒருகோள் வரவோ?—அலர்வாழ்
தேவிக்கு அமிழ்தே! மறையின் தெளிவே!

பொ :- செந்தாமரை மலரில் வாழ்கின்ற திருமகளுக்கு அமிழ்தம் போன்றவனே! வேதத்தின் தெளிபொருளாக உள்ளவனே! கடவுளே! (நீ) மிதிலைக்கு வந்து ஓமத்தீ முன்னர் பாவியாகிய என் கை பிடித்து மணந்துகொண்டது, நின் உயிருக்கு ஒரு துன்பம் வரத்தானோ?

கு :- தன்னைச் சிறைமீட்டற் பொருட்டுப் போர்செய்து இராமன் இத் துன்பத்திற்குள்ளானமையின் சீதை பாவியாகிய தன்னைச் கைப்பற்றி மணந்தமையால் வந்ததாக நொந்து கூறியவாறு, பாவி என் கை என மாற்றுக. பண்ணவன்—கடவுள். திருமகள் கொழுநுதவும் மறையின் தெளிபொருளாகவும் உள்ள கடவுள், முன்னியது முடிக்கும் ஆற்றலுடையவனே எனினும் தன் சார்பால் அப் பெருமையெல்லாம் மறைந்து இறக்கவும் நேர்ந்தது எனத் தன் பிழையாகச் சீதையென்று கொண்டு கூறினாள். கோள்-துன்பம். இலக்குவன் இறந்தது கண்டு இராமனும் இவ்வாறே: வேள்விக் கேகி வில்லு மிறுந்தோர் விடமம்மா, வாழ்விக்கும் மென்றெண்ணினன் முன்னே வருவித்தேன், சூழ்வித்தென்னைச் சுற்றின ரோடுஞ் சுடுவித்தேன்'' (பிரமாத்திரம்—211) என்று சீதையால் அழிவு வந்ததாகக் கூறியிருத்தலும் காணலாம். (14)

8818. உய்யா ருயர்போ சலைதன் உயிரோ
ஐயா இளையோ ருயிர்வாழ் கிலரால்
மெய்யே வினையெண் ணிவிடுத் தகொடுங்
கய்கே,சிகருத் திதுவோ களிறே.

'உய்யாள், உயர் கோசலைதன் உயிரோ'
ஐயா! இளையோர் உயிர்வாழ் இலரால்,
மெய்யே, வினை எண்ணி, விடுத்த கொடுங்
கைகேசி கருத்து இதுவோ?—களிறே!

பொ:- (இருகைகளையுடைய) யானைபோன்றவனே! ஐயா! (நின் நிலைமையைக் கேட்டால்) உயர்ந்த பண்பினளாகிய கோசலை தன் உயிர் உய்ந்திருக்க மாட்டாள்; பரதனும் சத்துருக்கனும் ஆகிய இளையோரும் (நின்னை இழந்து) உயிர் வாழ்ந்திருக்கமாட்டார்கள்; வஞ்சனை நினைந்து நின்னைக் காட்டிற்கு அனுப்பிய கொடிய குணத்தினளான கைகேசியின் கருத்து உண்மையாகவே இது தானோ? (அன்று என்றபடி).

கு:- இராமன் இறந்ததாக அறிந்தால் கோசலை இறப்பாள்; பரதனும் இளவலும்; இறந்து படுவர். எனவே, கைகேசியின் கருத்து இவ்வழிவுதானோ? அரசியர் மூவரில் கோசலை முதியவளாதலாலும் பண்புகளால் உயர்ந்தவள் ஆதலாலும் 'உயர்கோசலை' எனச் சிறப்பிக்கப்பட்டாள். மூத்தவர் குறித்து அரசு என்ற முறைமையினை மாற்றிக் கணவனைக் கொல்வித்து நாட்டை நலிவித்த கொடுமையுடையவள் கைகேசியாதலின் 'கொடுங்கைசி' என இகழப்பட்டாள். உயிரோ உய்யாள் என இயையும். கோசலை உய்யாள் என்றமையால், சுமித்திரையும் உய்யாள் என்பது இனம்பற்றிக் கொள்ளப் படும். (15)

8819. தகைவா ணகர்நீ தவிர்வா யெனவும்
வகையா துதொடர்ந் தொருமான் முதலாய்
புகையா டியகா டுபுகுந் துடனே
பகையா டியவா பரிவே துமிலேன்.

'"தகைவாள் நகர்நீ தவிர்வாய்" எனவும்,
வகையாது, தொடர்ந்து, ஒருமான் முதலா,
புகையாடிய காடு புகுந்து; உடனே
பகை ஆடியவா! பரிவு ஏதும்இலேன்.

பொ:- '(போர் இல்லாத) பெருமையுடைய ஒளிமிக்க அயோத்தி நகரத்தில் நீ தங்கியிருப்பாயாக' என்று நீ கூறவும் (அது கேளாது) இரக்கம் சிறிதும் இல்லாத யான் நின்னைப் பிரிந்திராமல் தொடர்ந்து புகைமிக்க காட்டில் நின்னுடனே புகுந்து, ஒரு பொன்மான் காரணமாக நின்னைக் கொல்லும் பகையை உண்டாக்கியவாறு என்னே!

கு :- தகை—பெருமை; இனிப் போர் இல்லாமல் தடுக்கும் நகர், தகைவாள் நகர் எனப்பட்டது எனினும்அமையும். அயோத்தி என்ற வட சொல்லின் பொருளை விளக்கித் தகைவாள் நகர் என்ருர். போர் இல்லாத நகரில் இராமன் காடுபுகுந்து போரை உண்டாக்கிக் கொன்ற வள் யானே எனச் சீதை தன் பிழை நினைந்து புலம்பியவாறு. பரிவு-இரக்கம். வகையாது-பிரியாது, 'அழல் காட்டதர்க், கல்லரக்கும் கடுமைய வல்ல நின், சில்லரக் குண்ட சேவடிப் போது' (நகர் நீங்கு : 222) என்று இராமன் சீதையை நோக்கி கூறியபோது, சீதை பரிவி கந்த மனத்தொடு பற்றிலாது ஒருவுகின்றனை (223) என இராமனைப் பரிவிகந்த மனத்தினளுகப் பழி கூறிஞளன்றே. அப் பழி அவனுக் கில்லே; தனக்கே என்பார் 'பரிவேதுமிலேன்' எனத் தன்னைக் கூறிக் கொள்கின்ருள். வகையாது தொடர்ந்து காடு உடனே புகுந்து ஒரு மான் முதலாப் பகையாடியவா என இயையும். ஒருமான் முதலா என்றது, பொன்மான் காரணமாக என்றவாறு. பகையாடுதல்-பகையை யுண்டாக்குதல். நன்மை செய்பவள்போல் பிரியாது தொடர்ந்து காடுடன் புகுந்து மான் காரணமாகத் தீமை செய்துவிட்டேனே! என்று ஏங்கியவாறு. காட்டின் வெப்பம் புலப்படப் 'புகை யாடிய காடு' என்ருள். (16)

63 என்ற எண்ணுள்ள சுவடியில் இச் செய்யுளுக்குப்பின் பின் வரும் செய்யுள் காணப்படுகின்றது.

8819a. "வன்றீயிடை யான்விழ நின்வடிவி.
னின்றீயவர் புல்லரு நேர்கிலரால்.
என்றீவினை பாலிரும்—
டறா சென்றீடையே யிதுவன் செயலே"

8820. **இன்றீ கலையே லிறவிவ் விடைமான்**
**அன்றீ யெனவே பரிவோ டடியேன்**
**நின்றீ வதுநின்னை நெடுஞ் செருவில்**
**கொன்றீ வதோர்தீ மைகுறித் தலினே.**

"இன்று ஈக்லேயேல், இறவு இவ் இடை; மான்
அன்று ஈ" எனவே பரிவோடு அடியேன்
நின்றீவது, நின்னை நெடுஞ் செருவில்,
கொன்றீவது ஓர் தீமை குறித்தலினே?

பொ :- அக் காலத்தில், இன்று மானைப் பிடித்துக் கொடுக்க வில்லையானால் இவ் விடத்து எனக்கு இறப்புத்தான்;(ஆதலால்) அம் மானைப் பிடித்துக் கொடு! என வற்புறுத்திக் கூறிவிட்டு, இரக்கத் தோடு அடியேன் தனித்து நின்றது, நின்னை நெடிய போரில் கொல்வதோர் தீமை நினைத்திலினால்தானோ ?

கு :- அன்றுஎன்றது, மாரீசனாகிய மாயமானைக் கண்ட அன்று என்றவாறு. 'அன்று மான் இன்றிகலையேல் இவ்விடை இறவு ; ஈ' எனப் பரிவோடு அடியேன் நின்றீவது, என இயையும். ஈ-அந்த மானைப் பிடித்துக் கொடு. எனச் சொல்லி நின்றீவது என ஒருசொல் வருவிக்க. நின்றீவது, கொன்றீவது என்பன வினைத் திரி சொற்கள். இராம இலக்குவர் இருவரையும் பிரித்துச் சீதை தனித்து நின்ற னடியே இராவணனால் கவரப்பட்டமைக்கும் இப் போர் நிகழ்ச்சிக்கும் பரம்பரையான் காரணமாதல் நினைந்து, 'அடியேன் நின்றீவது, நின்னை நெடுஞ்செருவில் கொன்றீவதோர் தீமை குறித்தலினோ ?' என்றாள். அன்று மாயமானைப் பிடித்துத்தர வற்புறுத்தித் தனிமைப் படாமல் இருந்தால் இக் கதி நேர்ந்திராது என்பது கருத்து. (17)

## இலக்குவனை நோக்கி அரற்றியது

8821. மேதா விளையோய் விதியார் விளிவால்
போதா நெறியெம் மொடுபோ துறுநாள்
மூதா னவன்முன் னர்முடிந் திடெனும்
மாதா வுரையின் வழிநின் றனையோ.

மேதா ! இளையோய் ! விதியார் விளிவால்,
போதா நெறி எம்மொடு போதுறுநாள்,
"மூதுஆனவன் முன்னம் முடிந்திடு" எனும்
மாதா உரையின் வழி நின்றனையோ ?

பொ :- அறிவு நிரம்பியவனே! இளவரசே! விதியின் விளைவால் செல்லமுடியாத காட்டு நெறியில் எங்களோடு வரப் புறப்படும்போது 'முன்னவனாகிய இராமன் இறக்கும் நிலை நேர்ந்தால், அவனுக்கு முன் நீ முடிந்திடுவாயாக' என்று கூறிய நின் தாய் சுமித்திரையின் சொல் வழியே முன்னம் இறந்தனையோ ?

கு :- இராமனுக்கு இளையவன் ஆதலின் இலக்குவனை இளை யோய்! என விளித்தாள். இராமனைக் காட்டிலும் எதிராத உணரும் அறிவுமிக்குப் பொன்மானை மாயமான் என்று கண்டு முன்னமே

சொன்னது மெய்யானதைப் பின் உணர்ந்தவள் ஆதலின், அவ்வறிவைப் பாராட்டுகின்றாளாய் 'மேதா' என அவனை முன் விளித்தாள். இராமன் நாடாளாது காடாள நேர்ந்தது விதியின்வினையே என்பதை: "விதியின்பிழை நீ இதற்கென்னை வெகுண்டது" என்று இராமன் இலக்குவனை நோக்கிக் கூறியதாலும் அறியலாம். போதா நெறி என்றது மக்கள் போக்குவரவு புரியாத கல்லும் முள்ளும் நிறைந்த காட்டுவழியை. இராமனை உளப்படுத்தி 'எம்மொடு' என்றாள். முதானவன் என்றது, அண்ணனை. மாதா என்றது, சுமத்திரையாகிய தாயினை. "மகனே! இவன்பின் செல்; தம்பி எனும்படி அன்று; அடியாரினில் ஏவல் செய்தி; மன்னும் நகர்க்கே இவன் வந்திடின் வா; அது அன்றேல் முன்னம்முடி" (நகர் நீங்கு—148) என முன் சுமத்திரை கூறியதை உடனிருந்து கேட்டவள் ஆதலின், அதை நினைவு கூர்ந்து இங்கு வினவுவாளாயினள். (18)

8822. பூவுந் தளிருந் தொகுபொங் கணைமேல்
கோவுந் துயிலத் தவிர்வாய் கொடியார்
ஏவின் றலைவந் தவிருங் கணையால்
மேவுங் குளிர்மேல் லணை மே வினையோ.

'பூவும் தளிரும் தொகுபொங்கு அணைமேல்
கோவும் துயில, தவிர்வாய்! கொடியார்
ஏவின் தலைவந்த இருங் கணையால்
மேவும் குளிர்மெல் அணைமே வினையோ?

பொ :- மெல்லிய பூவும் தண்ணிய தளிரும் நிறைந்துள்ள சிறந்த படுக்கையில் இராமன் தூங்கா நிற்கவும், அவனைக் காதத்துக் கொண்டு தூக்கத்தை விடுத்து விழித்திருப்பவனே! இப்போது கொடியவர்களாகிய அரக்கர்தம் வில்லினிடத்தில் வெளிப்பட்டு வந்த பெரிய அம்புகளால் அமைந்த குளிர்ந்த மெல்லிய படுக்கையை விரும்பிப் படுத்துறங்குகின்றாயோ?

கு :- கோவும் என்புழி உம்மையைப் பிரித்து துயிலவும் எனப் பின் கூட்டுக. தவித்தல்-துயில் நீங்கி விழித்திருத்தல். அம்பு ஏவுதற்குரிய கருவியாதலின், வில் ஏவு எனப்பட்டது. கணையால் மேவும் வெய்ய வலிய படுக்கையைக் 'குளிர் மெல்லிணை' என்று இகழ்ச்சிக் குறிப்பால் கூறியவாறு. பூவாலும் தளிராலும் அமைந்த படுக்கையை விரும்பாத நீ, பகைவர்விட்ட அம்புகளால் அமைந்த வெவ்விய வலிய படுக்கையை விரும்பித் தூங்குதல் பொருந்துமோ? என்றவாறு பகைவர்விட்ட அம்புகளின்மேல் விழுந்து கிடக்கின்றன இலக்குவனை

அம்புப் படுக்கையில் படுத்துப் பேருறக்கம் கொள்வதாகக் கற்பித்துத் தற்குறிப்பேற்றம் எனும் அணிபற்றிக் கூறியவாறு. (19)

### மீண்டும் இராமனை நோக்கிக் கூறியது

8823. நெய்யார் பெருவேள் விநிரப் பிநெடுஞ்
செய்யார் புனனா டுதிருத் துதியால்
மெய்யா கியவா சகமும் விதியும்
பொய்யா னவென்மே னிபொ ருந் துதலால்.

நெய்யார் பெருவேள்வி நிரப்பி, நெடுஞ்
செய்ஆர் புனல்நாடு திருந்துதி யால்;
மெய் ஆகிய வாசகமும் விதியும்
பொய் ஆன என்மேனி பொருந்துதலால்.

பொ :- (முடிசூட்டு விழாவில் செய்தற்குரிய) நெய் நிரம்பச் சொரியப்பெறும் பெரிய வேள்வியை நிறைவுறச்செய்து, பின், வயல்கள் நிறைந்த நீர்வளமிக்க கோசலநாட்டை நீதிவழுவாமல் அரசாண்டிருப்பாய்; (பாவியாகிய) என் உடம்பைத் தீண்டிய குற்றத்தால், (நின் தந்தை நினக்கு முடிசூடுவதாகக் கூறிய) மெய்யான சொல்லும் நீ முடி சூடுதற்குரியதாக அமைந்த விதியும் பொய்யாயின.

கு :- இராமன் மணிமுடிசூடி அணிமிகு நாட்டை ஆளாத நிலை தன் தொடர்பால் வந்தது எனச்சீதை நொந்து கூறியவாறு. நெய்யார் பெருவேள்வி என்றது, முடிசூட்டு விழாவில் செய்தற்குரிய ஓமத்தை. "அங்கியின் வினையிற்கேற்ற யாவையும் அமைத்து வீரச் சிங்கவாதனமும் வைத்துச் செய்வன பிறவுஞ் செய்தான்" (கைகேயி சூழ்வினை-81) என வசிட்டன் செய்ததை முன் கூறியுள்ளமை காணலாம். நாடு திருத்துதல் என்றது, இங்கு அரசாளுதலை உணர்த்தியது. அரசர் மேற்கொள்ளவேண்டிய செயல் நாடுதிருத்தி வளப்படுத்துதலே ஆதலின், அவ்வினையாற் கூறியவாறு, மெய்யாகிய வாசகம் என்றது, தயரதன் இராமனை அழைத்து, "புனையுமாமுடி புனைந்திந்த நல்லறம் புரக்க நினையல் வேண்டும் யான் நின்வயின் பெறுவது ஈது" (மந்திரப்-68) என்று கூறிய வாசகத்தை. தந்தையின் வாசகமும அதற்கேற்ற விதியும் நீ முடிசூடி அரசாளுதற்கேற்றவாறு அமைந்திருந்தும், பாவியாகிய தன் கையைப் பிடித்து மணந்துகொண்ட பாவத்தால் அவை பொய்யான என்பதும் தன் தொடர்பு இல்லாதிருந்தால், இராமன் அயோத்தியில் அரசாண்டு கொண்டிருப்பான் என்பதும் சீதையின் எண்ணம். (20)

## இராமன் மேனிமீது விழச் சீதை எழுதலும் திரிசடை விலக்கலும்

8824. மழுவாள் உறினும் பிளவா மனனுண்
டழுவே னினியென் னிடரா றிடயான்
விழுவே னவன்மே னியின்மீ தினெனு
எழுவா ளைவிலக் கியியம் பினளால்.

'மழுவாள் உறினும் பிளவா மனன் உண்டு
அழுவேன் இனிஏன்? இடர்ஆறிட, யான்
விழுவேன் அவன்மேனியின் மீதின்' எனு,
எழுவாளை விலக்கி இயம்பி னளால்.

பொ:- "மழுவாகிய வாள்வந்து தாக்கினும் பிளந்து வேறு படாத திண்ணிய மனம் உண்டு; இனி ஏன் அழுகின்றேன்? என் பிரிவுத்துயர் தணிய அவன் மேனியின்மேல் விழுவேன்" என்று எழுகின்ற சீதையைத் தடுத்து (திரிசடை) சொல்லலானுள்.

கு:- வன்மையுடைவற்றைப் பிளக்கவல்ல மழுவாள் வந்து தாக்கினுலும் பிளவுபடாத மனம் என்றது, இராமனைத் தழுவி உயிர் விட எண்ணிய திண்ணிய மனத்தை. அவ்வெண்ணம் எக்காரணத் தாலும் வேறுபடாதது என்பதை உணர்த்தவே 'மழுவாள் உறினும் பிளவா மனம் உண்டு' என்ருள். கணவன் மாண்டதற்பின் உயிர் வாழ எண்ணுவோரே எதிர்காலத் துன்பத்தை நினைந்து அழுதல் வேண்டும், கணவனேடு இறக்க எண்ணிய தனக்கு அழுதற்குரிய காரணம் இல்லை என்பாள். 'அழுவேன் இனி ஏன்?' என்ருள், கணவன் மாண்டபின் வாழும் மகளிர் படும் அல்லலை,—"நறுநெய் தீண்டாது. அடையிடைக் கிடந்த கைபழி பிண்டம். வெள்ளெட் சாந்தோடு புளிப்பெய்தட்ட, வேளைவெந்தை வல்கியாகப், பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும் உயவற்பெண்டிர்' (புறநா—146) எனப் பூதபாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு விளக்கி இகழ்ந்திருத்தல் இங்கு நினைவு கூர்தற்குரியது. இடர் என்றது, இராமனைப் பிரிந்தி ருந்த துன்பத்தை. அந்த இடர் இராமன் மேனியைத் தழுவி உயிர் விடுவதால் நீங்குமாதலின், 'இடர் ஆறிட யான் விழுவேன்' என்ருள். உயிர்நீத்த கணவனுடலைத் தழுவி உயிர்விடுதல் கற்புடைப் பெண் டிர்க்கு இயல்பாதலின் சீதை விமானததிலிருந்து இராமன் மேனி மேல் வீழ்ந்து உயிர்விடத் துணிந்து எழுவாளாயினள். இயம்பின வள் திரிசடை என்பதைப் பின்வருஞ் செய்யுளால் அறியலாம். (21)

## சீதையைத் தழுவிச் செவியிடைத் திரிசடை கூறியது

8825. மாடுற வளைந்து நின்ற
வளையெயிற் றரக்கி மாரைப்
பாடுற நீக்கி நின்ற
பாவையைத் தழுவிப் பற்றிக்
கூடின ளென்ன நின்று
செவியிடைக் குறுகிச் சொன்னாள்
தேடிய தவமே யன்ன
திரிசடை மறுக்கந் தீர்ப்பாள்.

'மாடுஉற வளைந்து நின்ற
வளைஎயிற்று அரக்கி மாரைப்
பாடுற நீக்கி, நின்ற,
பாவையைத் தழுவிக் கொண்டு,
கூடினள் என்ன நின்று.
செவியிடை, குறுகிச் சொன்னாள்—
தேடிய தவமே அன்ன'
திரிசடை மறுக்கம் தீர்ப்பாள்.

பொ:- சீதை முன்பு தேடிய தவப்பயன்போன்ற திரிசடை அவளது கலக்க உணர்வைப் போக்கியவளாய், அவள் பக்கத்தில் சுற்றிநின்ற வளைந்த கோரப்பற்களையுடைய அரக்கியர்களை இருபக், கங்களிலும் பிரிந்துபோமாறு நீக்கிக்கொண்டு, (விழும் நோக்கத்தோடு) நின்ற பாவைபோன்ற சீதையைத் தழுவிக்கொண்டு அவளோடு ஒன்றாயினள் என்னுமாறு நெருங்கிநின்று அவள் செவியிற் சென்று சொன்னாள்.

கு:- முன்பு செய்த தவத்தின்பயன் உயிர்போங்காலத்தில் வந்து உதவுவதுபோலச் சீதை உயிர்விட நினைக்கும் நிலையில் உயிர் விடவொட்டாது திரிசடை உதவுகின்றாள் ஆதலின், 'தேடியதவமே அன்ன திரிசடை' என்றார். மறுக்கம் என்றது இங்கு உயிரோடிருக்கும் இராம இலக்குவரை இறந்தாராகக் கருதிய கலக்க உணர்ச்சியை. மாடு-பக்கம். வளைந்து என்புழி வளைதல் சூழ்ந்திருத்தலை உணர்த்தியது. வளை எயிறு என்றது. வாயின் இருபக்கத்தும் அரக்கியர்க்குள்ள கோரப்பற்களை. பற்றிக்கூடினள் என்ன நின்று' என்பது தற்குறிப்பேற்றம். இனி, சீதையைத் தழுவிப் பிடித்துக் கொண்டு தானும் அழுதற்குக் கூடினள் என்று பிறர் நினைக்குமாறு

நின்று, என்றும் பொருள்கூறலாம். தீர்ப்பாள், முற்றெச்சம். தீர்ப்பாளய்ச் சொன்னாள் என இயையும். அவள் சொன்னதைப் பின் வரும் பாடல்களிற் காணலாம். (22)

திரிசடை சொன்னது
அரக்கர் மாயம் என்று தேற்றியது

8826. மாயமான் விடுத்த வாறுஞ்
சனகனை வகுத்த வாறும்
போயமா நாக பாசம்
பிணித்தது போன வாறும்
நீயமா நினையாய் மாள
நினைதியோ நெறியி லாரால்
ஆயமா மாய மொன்று
மறிகிலை யன்ன மன்னாய்.

'மாயமான் விடுத்த வாறும்,
சனகனை வகுத்த வாறும்
போயமா நாக பாசம்
பிணித்தது போன வாறும்,
நீஅமா! நினையாய்; மாள
நினைதியோ? நெறி இலாரால்
ஆயமா மாயம் ஒன்றும்
அறிகிலை, அன்னம் அன்னாய்'.

பொ:- அன்னம் போன்றவளே! அம்மா! மாரீசனாகிய மாய மானை முன்விடுத்த தன்மையும், மாயா சனகனை உண்டாக்கிய தன் மையும், சென்றநாளில் (இராம இலக்குவன்முதலியோரைப்)பிணித்த தாகிய பெரிய நாகபாசம் அழிந்துபோன தன்மையும், நீ நினைத்துப் பார்ப்பாயாக! நல்ல நெறியில் செல்லாதவர்களாகிய அரக்கரால் உண்டாய பெரிய மாயச்செயல் ஒன்றையும் அறிகிலையாய், மாண்டு போக நினைக்கின்றாயோ?

கு :- நீரொடு கலந்த பாலைப் பிரித்தறிந்து பாலைமட்டும் அருந் தும் அன்னம்போலச் சீதையும் அரக்கர்களின் மாயச்செயலையும் உண்மைச் செயலையும் பிரித்தறிதற்கு உரியவளாயிருந்தும், அவர் மாயச்செயலை உண்மைச் செயலாக மயங்கி, இறக்க எண்ணுகின்

ளுளே என்ற இரக்கத்தால் 'அன்னம் அன்னாய்' என விளித்தாள். அம்மா! என்பது இடைக்குறையாய் 'அமா' என நின்றது. மாய மானும் மாயா சனகனும் நாகபாசமும்போலப் பிரமாத்திரத்தால் மூர்ச்சையுறச் செய்ததும் மாயச்செயலே என்பது நீ நினைவாயாக என்றவாறு, 'நெறியிலாரால் ஆயமா மாயம் ஒன்றும் அறிகிலையாய் மாழ நினைதியோ!' என்று முற்றெச்சமாக்கி முடிக்க. மாயமானும் மாயா சனகனும் அரக்கர் தம் மாயச் செயலென்பது சீதையால் முன்னமே அறியப்பட்டவை. பிணித்ததாகிய நாகபாசம் கருடனால் வலியிழந்துபோனதை நேற்றுக் கேள்விமூலம் அறிந்துளாள் ஆகலின் 'நீ நினையாய்!' எனத் திரிசடை கூறினாள். முன்னம் பிணித்த நாகபாசம் பிணிவிட்டுபோனதுபோல, இராம இலக்குவரை மூர்ச்சையுறச் செய்துள்ள பிரமாத்திரமும் வலியற்றுப் போதற்குரியதே. அப்பிரமாத்திரத்தினால் இராமன் இறந்ததாக நினைந்து நீ மாழ நினைதல் கூடாது என்பாள், 'மாழ நினைதியோ?' என்றாள், நெறியிலார் என்றது, தீநெறி செல்லும் அரக்கரை. வஞ்சனையால் வெல்லலாகாது என்ற நெறியில்லாமல் எல்லா மாயச் செயலையும் செய்பவர்கள் ஆதலின், அரக்கரை அப்பெயராற் கூறினாள். (23)

## முன்கண்ட கனவு முதலியன காட்டித் தேற்றியது

8827. கண்டன கனவும் பெற்ற
நிமித்தமு நினது கற்பும்
தண்டவா ளரக்கர் பாவச்
செய்கையுந் தருமந் தாங்கும்
அண்டர்நா யகன்றன் வீரத்
தன்மையு மயர்க்க லாமோ
புண்டரீ கற்கு முண்டோ
விறுதியிப் புலையர்க் கல்லால்.

கண்டன கனவும் பெற்ற
நிமித்தமும், நினது கற்பும்,
தண்டவாள் அரக்கப் பாவச்
செய்கையும், தருமம் தாங்கும்
அண்டர் நாயகன்தன் வீரத்
தன்மையும் அயர்க்க லாமோ?
புண்டரீ கற்கும் உண்டோ,
இறுதிஇப் புலையர்க்கு அல்லால்.

பொ :- நீ முன், கண்டுள்ள கனவும் பெற்றுள்ள நன்னிமித்தங்களும், நின்னுடைய கற்பின் திண்மையும், தண்டாயுதத்தையும் வாளையுமுடைய அரக்கர்தம் பாவச்செய்கையும், தருமத்தைத் தாங்குகின்ற இராமனுடைய வீரத்தன்மையும் மறக்கலாமோ? (மறக்கலாகாது காண்) இப் புலையர்களாகிய அரக்கர்க்கு அழிவு உண்டாவதல்லது, உந்திக் கமலத்தையுடைய திருமாலின் அமிசமான இராமனுக்கும் அழிவுண்டாகுமோ?

கு :- அண்டர்நாயகன் என்றது இராமனை; தேவர்க்குத் தலைவனை திருமாலின் அமிசமான இராமன் என்றவாறு. அயர்த்தல்—மறத்தல். புண்டரீன் என்றது, பிரமனுக்கு ஆதாரமாகிய உந்திக் கமலத்தையுடைய திருமாலை. உலகெலாம் படைக்கின்ற பிரமனுக்கும் ஆதாரமாகிய உந்திக் கமலத்தையுடையவன் ஆதலின், அவனுக்கு அழிவுண்டாக வழியில்லை என்பதுணர்த்த, இராமனை அப் பெயரால் கூறினுள். புலையர் என்றது, புலாலுணவை விரும்புகின்ற அரக்கரை, கண்ட கனவும், பெற்ற நிமித்தமும் நின்கற்பும் அரக்கர் பாவமும் அறத்தை மேற்கொண்ட இராமன் வீரமும் அவன் வெற்றிக்கே துணைசெய்வனவாக அமைந்திருக்கவும், அவற்றையெல்லாம் மறந்து அவனுக்கு அழிவு வந்ததாக எண்ணி இறக்கத் துணிதல் கூடாது என்றவாறு. கண்டனகனவும்என்றதுசுந்தர காண்டத்துக் காட்சிப் படலத்தில் கூறியவை. "எண்ணெய் தன் முடிதொறும் இழுகி ஈறிலாத்திண்ண நெடுங்கழுதை பேய்பூண்ட தேரின்மேல், அண்ணல்வேல் இராவணன் அரத்த ஆடையன் நண்ணினன் தென்புலம்'' (காட்சிப்-40) என்பதும் "வன்துணைக் கோளறி இரண்டு மாறிலாக் குன்றிடைபுழுவயங் குழுக்கொண்டீண்டியே'' வரம்பிலா மகரியுறையு மவ்வனம், நிரம்புற வளைந்தன, நெருக்கி நேர்ந்தன. குரம்பறு பிணம்படக் கொன்று மாறிலாப், புரம்புக இருந்ததோர் மயிலும் போயதால்'' (50, 51) என்பதும் போல்வன ஆம். நிமித்தங்களாவன : "மங்கையர் மங்கலத்தாலி மற்றவர் அங்கையின் வழங்குநர் எவருமின்றியே, கொங்கையின் வீழ்ந்தன' என்பதும் "மன்னவன் தேவியம் மயன் மடந்தைதன், பின்னவிழ் ஓதியும் பிறங்கி வீழ்ந்தன, துன்னருஞ்சுடர் சுடச்சுறுக் கொண்டேறின'' (48, 49) என்பதும் போல்வன. (24)

## இராமன் மேனியில் புண் இன்மை காட்டித் தேற்றியது

8828. ஆழியா னுக்கை தன்னி
லம்பொன்று முறுகி லாமை
ஏழைநீ காண்டி யன்றே
யிளையவன் வதன மின்னும்

**ஊழிநா ளிரவி யென்ன**
**வொளிர்கின்ற துயிருக் கின்னல்**
**வாழியார்க் கில்லை வாளா**
**மயங்கலை மண்ணில் வந்தாய்.**

ஆழியான் ஆக்கை தன்னில்
அம்புஒன் றும் உறுகி லாமை
ஏழைநீ காண்டி அன்றே?
இளையவன் வதனம் இன்னும்
ஊழிநாள் இரவி என்ன
ஒளிர்கின் றது; உயிருக்கு இன்னல்
வாழியார்க்கு இல்லை; வாளா
மயங்கலை—மண்ணில் வந்தாய்.

பொ :- சக்கரப் படைக்கு உரியவனாகிய இராமனது உடம்பில் அம்பு ஒன்றும் அழுந்தவில்லை என்பதை, மெலிந்த உள்ளமுடைய நீ, நேரே காண்கின்றாய் அன்றோ? (அம்பு பட்டிருந்தாலும்) இளையவனாகிய இலக்குவன் முகம் இன்னும் ஊழியிறுதியில் தோன்றும் சூரியனைப்போல ஒளிவிசிக் கொண்டிருக்கிறது; எனவே, நெடிது வாழுந் தன்மையுள்ள அவ்விருவர்க்கும் உயிர்க்கு அழிவில்லை; (என்பது தெளிவு) மண்ணில் தோன்றியவளே! அவர்கள் இறந்தார்கள்என்று வீணாக மயங்காதே!

கு :- இங்ஙனம் மயங்கித் துயருறுதற்கு உரியை அல்லை; பெருமையுடைய என்பாள், 'மண்ணில் வந்தாய்!' என்று விளித்தாள். தாய் வயிற்றில் தோன்றாது பூமியில் உழுகின்ற படைக்காலில் தோன்றியவள் என்பது பாலகாண்டத்துக் கூறப்பட்டது. இராமனுக்கு அழிவில்லை என்பதை; அம்பொன்றும் உறுகிலாமைகாண்டியன்றே எனக் காட்சியளவையானும், இளையவன் இறக்கவில்லை என்பதை வதனம் இரவியென்ன ஒளிர்கின்றது ஆதலின், உயிருக்கு இன்னல் இல்லை என வழியளவையானும் தெளிவித்தவாறு. ஏழை- பெண்; அறிவின்மை என்றும் பொருள்படும். இராமன் மேனியில் அம்பினாலாய புண் ஏதும் இல்லாதிருக்கக் கண்டும் அவன் இறந்தானாக எண்ணி இறக்கத் துணிந்து அவள் அறிவின்மையைக் காட்டுகின்றது என்றகருத்தும் புலப்பட 'ஏழை'எனச் சீதையைத் திரிசடை விளித்தாள் எனக் கொள்ளலும் ஆம். ஊழி இறுதியில், சூரியன் பேரொளியோடு தோன்றுவன் என்னும் புராண மரபு நினைந்து, ஒளிமிக்க இளையவன் முகத்திற்கு ஊழிநாள்இரவியை உவமை

கூறினள். வாழியாள் என்றது, நெடிது வாழ்தற்குரியாராகிய இராம இலக்குவரை. மயக்கம் என்றது, மூர்ச்சித்துக் கிடப்பவரை இறந்தவராகக் கருதியதை. (25)

## உலகம் அழியாமை காட்டித் தேற்றியது

8829. ஓய்ந்துள னிராம னென்னி
லுலகமோ ரேழு மேழும்
தீயந்துறு மிரவி பின்னுந்
திரியுமே தெய்வ மென்னும்
வீய்ந்துறும் விரிஞ்சன் முன்ன
உயிரெலாம் வெருவ லன்னை
ஆய்ந்தவை யுள்ள போதே
யவருள ரறமு முண்டால்.

ஓய்ந்துளான், இராமன், என்னின்,
உலகம்ஓர் ஏழும் ஏழும்
தீய்ந்துறும்; இரவி பின்னும்
திரியுமோ? தெய்வம் என்ஆம்?
வீய்ந்துறும் விரிஞ்சன் முன்ன
உயிர்எலாம்; வெருவல், அன்னை!
ஆய்ந்தவை உள்ள போதே,
அவர்உளர்; அறமும் உண்டால்.

பொ :- இராமன் இறந்துளன் ஆயின் கீழ்ஏழ் உலகமும் மேல் ஏழ் உலகமும் தீய்ந்துபோயிருக்கும்; சூரியன் பின்னும் விண்ணில் திரிவானோ? ஊழாகிய தெய்வம் என்ன பயனுடையதாகும்? பிரமன் முதலிய உயிர்கள் எல்லாம் அழிவுறும்; மேற்கூறியவை அழியாமல் உள்ளபோதே அவரும் இருக்கின்றனர்; தருமமும் உண்டு; அன்னையே நீ அஞ்சாதே.

கு :- உலகத்திற்கு முதற்காரணனாயுள்ள இராமன் இறந்திருந்தால் அவன் காரியமாக விளங்கும் உலகங்களும் உயிர்களும் அழிந்திருக்கவேண்டும். அவை அழியாது இருத்தலின், இராமனும் உளன்; இலக்குவனும் உளன்; தருமமும் உண்டு; என அருத்தாபத்தி அளவையால் நிறுவியவாறு. அவ்வாறு இராமர் இலக்குவர் இறக்கவில்லை என்பதை நிறுவினமையால் 'அன்னை! வெருவலை' என்றாள். தெய்வம் என்றது, வினைத்தெய்வத்தை. அது, இருவினைப் பயன் செய்தவனையே சென்றடைதற்கேதுவாகிய நியதியாதலின்,

நல்வினை செய்யும் இராமனுக்கு நல்வினைப் பயனை எய்துவிக்காமல் தீவினைப் பயனாகிய தோல்வியையும் இறப்பையும் எய்துவித்திருந்தால் அந்த நியதி என்ன பயனுடையதாகும்? பயனற்றுப்போம் என்றவாறு. உயிர்களையெல்லாம் படைக்கின்றவன் பிரமன் ஆகலின், விரிஞ்சன் முன்னு உயிரெலாம் என்றார். ஆய்ந்தவை என்றது, முன் ஆய்ந்து சொன்னவற்றை. தெய்வம் என்றது, அறத் தெய்வத்தை எனலும் ஆம். (26)

### அனுமனைக் காட்டித் தேற்றியது

8830. மாருதிக் கில்லை யன்றே
மங்கைநின் வரத்தி னாலே
ஆருயிர் நீங்கல் நின்பால்
கற்புக்கு மழிவுண் டாமோ
சீரிய தன்றி தொன்றுந்
திசைமுகன் படையின் செய்கை
பேருமிப் பொழுதே தேவ
ரெண்ணமும் பிழைப்ப துண்டோ.

'மாருதிக்கு இல்லை அன்றே,
மங்கைநின் வரத்தி னாலே
ஆர் உயிர் நீங்கல்! நின்பால்
கற்புக்கும் அழிவு உண்டாமோ?
சீரியது அன்று,- இது ஒன்றும்;
திசைமுகன் படையின் செய்கை
பேரும், இப்பொழுதே; தேவர்
எண்ணமும் பிழைப்பது உண்டோ?

பொ :- மங்கையே! அனுமானுக்கு நின் வரத்தினாலே அரிய உயிர்நீங்குதல் என்பது இல்லை அன்றோ? (அனுமன் உயிர்நீங்கி யிருப்பின் நின் கற்பின் பெருமை குன்றும்) நின்பால் அமைந்த கற்பிற்கும் அழிவு உளதாமோ? (நின் கற்பிற்கு அழிவு இன்மையால் மாருதியும் இறந்திலன் என்பது தெளிவு என்றபடி) இவரெல்லாம் மூர்ச்சையுற்றுக் கிடக்கின்ற இந்நிலை ஒன்றும் பிறிதொன்றால் நீங்காத சிறப்பினதன்று; இது பிரமாத்திரத்தின் செய்கையாகும்; இது இப்போதே நீங்கும்; தேவர்களின் எண்ணமும் தவறுபடுவதுண்டோ? (இல்லை).

கு:- சீதை கொடுத்த வரத்தால் அனுமனுக்கு மரணம் இல்லை என்பது தெளிவாதலின் அனுமன் இறக்கவில்லை; மூர்ச்சையுற்றே இருக்கின்ருன் என்பது அருத்தாபத்தியால் புலனும் என்றவாறு. சீதை அனுமனுக்கு மரணமிலா வரம் அளித்தமை: ''பாழிய பணைத் தோள் வீர! துணையிலேன் பரிவு தீர்த்த, வாழிய வள்ளலே! யான் மறுவிலா மனத்தேன் என்னின், ஊழியோர் பகலாயோதும் யாண்டெலாம் உலகம் ஏழும், ஏழும் வீவுற்ற ஞான்றும் இன்றென இருத்தி'' (உருக்காட்டுப்—73) என்று முன் கூறியுள்ளதால், அறியலாம். இதில் 'மறுவிலா மனத்தேன் என்னின்' எனத்தன் கற்பையே சீதை காரணமாகக்கொண்டு வரங் கொடுத்தாள் ஆதலின் இங்கும் நின்பால் கற்புக்கும் அழிவுண்டாமோ? என்று அதனையே காட்டி அனுமன் இறந்திலன் என்பதை நிறுவினுள் திரிசடை என்க. இது ஒன்றும் சீரியதன்று என மாறுக. இலக்குவன் முதலியோர் மூர்ச்சையுற்று கிடக்கும் நிலையை இது என்று சுட்டியவாறு. பிறரால் நீக்க முடியாத சிறப்பினையுடையதன்று என்றவாறு. இது திசைமுகன் படையின் செய்கை எனச் சுட்டினைப் பின்னுங்கூட்டுக. சீரிதன்று; பேரும் இப்பொழுதே என்க. (27)

## தேவரைக் காட்டித் தேற்றியது

8831\. தேவரைக் கண்டேன் பைம்பொற்
செங்கரஞ் சிரத்திற் சேர்த்தி
மூவரைக் கண்டா லென்ன
விரு வரை முறையி னேக்கு
ஆவலிப் பெய்து கின்ரு
ரயர்ந்தில ரஞ்ச லன்னை
கூவலிற் புக்கு வேலை
கோட்படு மென்று கொள்ளேல்.

'தேவரைக் கண்டேன்; பைம்பொன்
செங்கரம் சிரத்தில் சேர்த்தி,
மூவரைக் கண்டால் என்ன,
இருவரை முறையின் நோக்கி,
ஆவலிப்பு எய்து கின்ருர்;
அயர்ந்திலர்; அஞ்சல்; அன்னை!
'' கூவலில் புக்கு; வேலை
கோட்படும் '' என்று கொள்ளேல்.

பொ:- தேவர்களைக் கண்டேன்; அவர்கள் மும்மூர்த்திகளைக் கண்டாற்போல இராம இலக்குவர் இருவரையும் முறையினுல் பணிவோடு பார்த்துப் பசும்பொன்னுற் செய்த அணிகலன் அணிந்த தம் சிவந்த கைகளைத் தலைமேல்வைத்து வணங்கிச் செருக்குற்றிருக்கின்ருர்கள். துன்புறவில்லை; ஆதலால் அன்னையே அஞ்சாதே; கடல் கிணற்றில் புகுந்து அக் கிணற்ருல் கொள்ளப்பட்டுவிடும் என்று கொள்ளாதே.

கு:- கடல்போன்ற பெருமையுடைய இராமன் சிறு கிணறு போன்ற இலங்கை இராக்கதர்களால் கொல்லப்படுவான் என்று கொள்ளாதே என்றவாறு. கூவல்— கிணறு. வேலை கூவலிற்புக்குக் கோட்படும் என உவமையை மட்டும் கூறி இராமன் அரக்கர்களால் இறந்துபடுவான் என்ற உவமேயத்தைக் கூருதது ஒட்டணியின் பாற்படும். கடல் நீர்புகுந்து கிணற்றுநீரைத் தன்மயமாக்கி அழிக்குமே யல்லாமல், அக் கூவல் நீர் கடல் நீரை விழுங்கிவிட முடியாது; அதுபோல, இராமன், இராவணனைக் கொன்று தன்னடியில் சேர்த்துக் கொள்வானேஅன்றி இராவணனுல் கொல்லப்படமாட்டான் என்றவாறு, ''கூவத்தின் சிறுபுனலைக் கடலயிர்த்த தொவ்வாதோ'' (விடணனடைக்கலப்—103) என அனுமன் கூறியதும் இங்கு ஒப்பு நோக்கத்தகும். முன்னைச் செய்யுளில் 'தேவர் எண்ணமும் பிழைப்பதுண்டோ?' என்றவள், அவர் எண்ணத்தை இங்கு விளக்கினுள் எனலாம். பிரமாத்திரத்தால் மூர்ச்சையுற்று இறந்தவர்போலக் கிடக்கின்ற இராம இலக்குவரைக்கண்ட தேவர்கள் துன்புறுதலே இயல்பாகவும், அங்ஙனம் செய்யாது, அவர்களை நோக்கிச் செருக்கு அடைகின்ருர்கள் ஆதலின், விரைவில் இராம இலக்குவர் எழப் போகின்ருர்கள் என்பதை அவர்கள் முன்னமே உணர்ந்து கொண்டுள்ளார்கள் என்பது புலனுகின்றது; ஆதலால், நீ அஞ்ச வேண்டுவதில்லை எனத் தேவர்களைச் சான்ருகக் காட்டித் தேற்றியவாறு, ஆவலிப்பு—செருக்கு. ''நின்னுமங்கற்ற ஆவலிப்புடைமை'' (திவ—திருமாலை1) என்புழியும் இச்சொல் இப் பொருளததாதல் காணலாம். அயர்தல்—சோர்தல்; வருந்துதல்; கோட்படுதல்—கொள்ளப்படுதல். (28)

### விமானத்தின் தன்மை கூறித் தேற்றியது

8832. மங்கல நீங்கி ஞரை
யாருயிர் வாங்கி ஞரை
நங்கையிக் கடவுண் மானந்
தாங்குறு நவையிற் றன்ருல்

இங்கிவை யாவை யாக
 விடர்க்கடல் கடத்தி யென்றுள்
சங்கைய ளாய தையல்
 சிறிதுயிர் தரிப்ப தானுள்.

'மங்கலம் நீங்கி ஞரை
 ஆர்உயிர் வாங்கி ஞரை,
நங்கை! இக்கடவுள் மானம்
 தாங்குறும் நவையிற்று அன்ருல்,
இங்குஇவை அளவை ஆக,
 இடர்க்கடல் கடத்தி' என்ருள்;
சங்கையள் ஆய தையல்
 சிறிதுஉயிர் தரிப்ப தானுள்.

பொ:- "நங்கையே! இந்தத் தெய்வத் தன்மை வாய்ந்த புட்பக விமானம், மங்கலநாண் நீங்கப்பெற்ற கைம்பெண்டிரையும் அரிய உயிர் நீங்கப்பெற்றுப் பிணமானவரையும் தாங்குகின்ற குற்ற முடையதன்று. இங்கு யான்கூறிய இக்கருத்துக்களை அளவையாகக் கொண்டு இராமன் இறக்கவில்லை என்பதறிந்து துன்பக் கடலைக் கடப்பாயாக; என்று திரிசடை கூறினுள்; (இராம இலக்குவர் உணர் வற்று விழ்ந்து கிடப்பதுகண்டு இறந்தார்களோ என) ஐயங் கொண் ளவளாகிய சீதை (அவள் சொற்களால்) சிறிது உயிர் தாங்கியிருப் பாளானுள்.

கு:- கடவுள் மானம் என்றது, புட்பக விமானத்தை. நவை- குற்றம். மங்கல நீங்கினுரைத் தாங்காது தள்ளும்விமானம் நின்னைத் தள்ளாது தாங்கியிருத்தலால் நின்கணவன் இறந்திலன் என்பது துணியலாம் என்றவாறு. 'யான் இங்குக் கூறியவற்றை அளவை யாகக்கொண்டு இராமன் இறந்திலன் என்பது துணிந்து இடர்க் கடல் கடத்தி' என இசையெச்சமாக வேண்டும் சொல் வருவித்து முடிக்க. காட்சியும் அனுமானமும், அருத்தாபத்தியும் ஆகிய அளவை களைக் கூறியே திரிசடை இராமன் முதலியோர் இறந்திலர் என்பதை நிறுவினளாகலின் 'இங்கிவை அளவையாக இடர்க்கடல் கடத்தி' எனக் கூறினுள். இடரின் மிகுதி புலப்படக் கடலாக உருவகம் செய்தவாறு. 'கணவனை இழந்தேன்' என்று சீதையுற்ற துயர், கடல் போன்றமை இதனுல் புலப்படுத்தியவாறு. இடர்க்கடல் கடத்த லாவது இடருருது அமைதல். சங்கை-ஐயம். தரித்தல்—தாங்குதல்.

(29)

## சீதையின் மறுமொழி

8833. அன்னை நீ யுரைத்த தொன்று
மழிந்தில தாத லானே
உன்னையே தெய்வ மாக்கொண்
டித்தனை கால முய்ந்தேன்
இன்னமிவ் விரவு முற்று
மிருக்கின்றே னிறத்த லென்பால்
முன்னமே முடிந்த தன்றே
யென்றனண் முளரி நீத்தாள்.

'அன்னை! நீ உரைத்தது ஒன்றும்
அழிந்திலது ஆத லானே
உன்னையே தெய்வமாக் கொண்டு,
இத்தனை காலம் உய்ந்தேன்;
இன்னம் இவ்இரவு முற்றும்
இருக்கின்றேன்; இறத்தல் என்பால்
முன்னமே முடிந்தது அன்றே?'
என்றனள்—முளரி நீத்தாள்.

பொ :- தாமரை மலரில் தங்குவதை விடுத்துச் சனகன் மகளாகப் பிறந்த திருமகளாகிய சீதை, (திரிசடையை நோக்கி) அன்னையே! நீ இதுவரையில் சொன்னது ஒன்றும் பழுதுபட்டதில்லை; ஆதலால் உன்னையே தெய்வமாகக்கொண்டு இவ்வளவு காலம் உயிரைக் போக்கிக் கொள்ளாமல் உய்ந்திருந்தேன்; இன்னும் (நின்சொல்லையே நம்பி) இந்த இரவு முழுதும் இருக்கின்றேன்; இறப்பது என்பது என்னிடம் முன்னமே முடிவானது அன்றோ? என்று கூறினாள்.

கு :- திருமகளே சீதையாகப் பிறந்தாள் என்பது புலப்படுத்த 'முளரி நீத்தாள்' என்றார். இதனால் இத்துன்பம் எல்லாம் அடைதற்கு உரியளல்லாதவள் இங்ஙனம் துன்புறுகின்றாளே என்ற இரக்கம் தோன்றுதல் காணலாம். சுந்தர கண்டத்துத் திரிசடை கூறிய இராமதூதுவன் வருகை முதலியன தப்பாமல் நிகழ்ந்ததாதலின் 'நீ உரைத்தது ஒன்றும் அழிந்திலது' என்றாள். வருங்கால நிகழ்ச்சிகளைக் கூறவல்லவள் திரிசடை ஆதலின், அவளைத் தெய்வமாகக் கொண்டு சீதை உய்ந்ததாகக் கூறினாள். இராவணன் எடுத்துக்

கொண்டு வந்ததுமுதல் காலம் வாய்க்கும்போது உயிர்விட வேண்டும் என்று துணிந்துவிட்டாள் ஆதலின், 'இறத்தல் என்பால் முன்னமே முடிந்ததன்றே' என்ருள். (30)

8834. நாணெலாந் துறந்தே னில்லி
னன்மையி னல்லார்க் கேய்ந்த
பூணெலாந் துறந்தே னென்றன்
பொருசிலே மேகந் தன்னைக்
காணலா மென்று மாசை
தடுக்கவென் ஞுவி காத்தேன்
ஏணிலா வுடலி னீங்க
லெளிதெனக் கெனவுஞ் சொன்ஞள்.

'நாண்எலாம் துறந்தேன்; இல்லின்
நன்மையின் நல்லார்க்கு ஏய்ந்த
பூண்எலாம் துறந்தேன்; என்தன்
பொருசிலே மேகம் தன்னைக்
காணலாம் என்றும் ஆசை
தடுக்க, என்ஆவி காத்தேன்;
ஏன்இலா உடலின் நீங்கல்
எளிது,எனக்கு எனவும் சொன்ஞள்.

பொ :- இல்லறத்தின் நன்மையினையுடைய கற்புடைப் பெண்டிர்க்குப் பொருந்துதற்குரிய நாண் முதலிய குணங்களையெல்லாம் துறந்தேன்; ஆதலால், பெண்டிர்க்குரிய அணிகலன்கள் யாவற்றையும் துறந்தவள் ஆனேன்; (உயிரினும் சிறந்த நாணம் துறந்தும் உயிர் துறவாமல்) என்னுடைய கணவனுகிய போர்செய்யும் வில்லேந்திய மேகம் போல்வானைக் காணலாம் என்கின்ற ஆசை தருத்தலால் என் உயிரை இதுவரையில் காப்பாற்றிக் கொண்டிருந்தேன்; உணவின்றி வலிகுன்றியுள்ள உடலினின்றும் நீங்குதல் எனக்கு எளிது; (அரிதன்று) என்றும் சொன்ஞள்.

கு :- நாண், மடம், அச்சம், பயிர்ப்பு என்ற நாற்குணங்களும் கற்புடைப் பெண்டிர்க்கு என்றும் நீங்காக் குணங்கள் ஆம். "அச்சமு நாணு மடனுமுந்துறுத்த, நிச்சமும்பெண்பாற்குரிய வென்ப' (தொல். பொருள். 99 சூ) என்றது காண்க. சீதை தன்னை இராவணன் கவர்ந்த அன்றே நாணம் முதலிய குணங்களைத் துறந்துவிட்டதாகக் கருதி இங்ஙனம் கூறினுள். நாண் எலாம் என்றது நாணம் முதலிய நாற்

குணங்களையும் சேர்த்துக் கூறியவாறு. நாண் முதலிய குணங்களே பெண்கட்குப் பூண்கள் ஆதலின், நாண் எலாந் துறந்தமையே நல்லார்க் கேய்ந்த பூணெலாம் துறந்ததாகக் கூறினாள் சீதை. ''அணியன்றோ நாணுடைமை'' (குறள்—1014) என்றதும் காணலாம். கற்புடைப் பெண்டிர்க்குரிய பூணாகிய நாணம் துறத்தற்குரியதன்று ஆதலின், உயிரினும் சிறந்த நாணினைக்காக்க உயிரினைக் துறக்க வேண்டும். ''நாணாலுயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால், நாண் துறவார் நாணாள் பவர்'' (குறள்—1017) என்பது காணலாம். நாணத்தைக் காப்பாற்றும் பொருட்டு உயிரைத் துறவாது இருந்த மைக்குக் காரணம், பொருசிலை தாங்கிய மேகம்போல்வானாய் வெற்றி பெற்றமகிழ்ச்சியோடு வருகின்ற இராமனைக் காணலாம் என்னும் ஆசைதடுத் தமையே என்பது விளக்கியவாறு. தன்னை மீட்டும் பொருட்டு இராமன் வில்லேந்தி வந்து இராவணனைக் கொன்று வென்றி கொண்ட கோலத்தோடு வருவான்; அவன் வாகைபெற்ற கோலத்தைப் பார்க்கவேண்டும் என்ற ஆசையே உயிரைத் தடுத்துக் கொண்டிருக்கின்றது என்றவாறு. கற்புடைப் பெண்டிர் தம் கணவர் வெற்றிபெற்று வருங் கோலத்தைக் காண விரும்புவர் என்பதை: ''பகைவென்று திறைகொண்ட பாய்திண்டேர் மிசையவர், வகை கொண்ட செம்மல் நாம் வனப்பார விடுவதோ'' (கலி—31) என்று கடும்பனியை நினைந்து தலைவி வருந்துவது கொண்டுணரலாம். மேகம் என வாளா கூறாது, பொருசிலை மேகம் என்ற குறிப்பே, சீதையின் கருத்து இராமனுடைய வெற்றிமேலதே என்பதை உணர்த்துதல் காணலாம். இராவணனை வெல்லாமல் இராமன் தன்னைக் காணமாட்டான்; வென்றபின்பே வில்லேந்திய மேகம்போல வருவான்; அவன் வாகைசூடி வரும் காட்சியைக் காணவேண்டும் என்பது சீதையின் ஆசை. ''ஊணிலா யாக்கை பேணி யுயர்புகழ் சூடாதுன்முன், நாணிலா திருந்தே னல்லேன் நவையறு குணங்க ளென்னும், பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணியமூர்த்தி தன்னைக் காணலாம் இன்னுமென்னும் காதலால் இருந்தேன் கண்டாய்'' என இராவண னிடம் கூறியதும் இங்கு ஒப்பு நோக்கத்தகும். ஊணிலாயாக்கை யாதலின் ஏணிலாவுடல் என்றாள், ஏண்-வலிமை. வலிமை மிக்க உடம்பினின்று உயிர் பிரிதல் கடினமாகலாம்; என் உடம்பு ஏணிலா உடம்பு ஆதலின் அதினின்றும் நீங்குதல்—இறத்தல்—மிக எளிது என்றவாறு. (31)

## சீதையை அரக்கியர் மீண்டும் அசோகவனத்திற்குச் செலுத்துதல்

8835. தய்யலை யிராமன் மேனி
தைத்தவேற் றட ங்க ணாளைக்
கய்களிற் பற்றிக் கொண்டார்
விமானத்தைக் கடாவு கின்றார்
மெய்யுயி ருலகத் தாக
விதியையும் வலித்து விண்மேல்
பொய்யுடல் கொண்டு செல்லு
நமனுடைத் தூதர் போன்றார்.

தையலை, இராமன் மேனி
தைத்தவேல் தடங்க ணாளை,
கைகளில் பற்றிக் கொண்டார்,
விமானத்தைக் கடவு கின்றார்,
மெய்உயிர் உலகத்து ஆக,
விதியையும் வலித்து, விண்மேல்
பொய்உடல் கொண்டு செல்லும்
நமனுடைத் தூதர் போன்றார்.

பொ :- கட்டழகுடைய சீதையை-இராமன் மேனியில் பாய்ந்த வேலைப் போன்ற பெரிய கண்களையுடையவளை-தம் கைகளில் பற்றிக் கொண்டு புட்பக விமானத்தைச் செலுத்துகின்ற அரக்கியர்-உண்மையான உயிர் மண்ணுலகத்துஆக விடுத்து, முன்னை விதியையும் வற்புறுத்தி மாற்றி, விண்மேல் பொய்யான உடம்பைக் கொண்டு செல்லுகின்ற எமதூதரைப் போன்றனர்.

கு :- தையல் - கட்டழகுடையவள். தையலை, தடங்கணாளை என்பது இரண்டனுருபேற்று, ஒரு பொருள்மேல் வந்த பலபெயர்கள்; 'பற்றி' என இறுதி ஒருவினை கொடுக்கப்பட்டது. இராமன் மேனி அழகில் ஈடுபட்டு வைத்தகண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்த சீதையின் நிலையை விளக்க 'இராமன் மேனிதைத்த வேற்றடங் கணாளை' என்றார். கடாவுகின்றார் என்ற வினையாலணையும் பெயர், 'போன்றார்' என்ற வினைகொண்டு முடிந்தது. கடாவுதல்-செலுத்துதல். கடாவுகின்றாராகிய அரக்கர் என்க. சீதையைக் கைகளில் பற்றுது விமானத்தைக் கடாவினால் அப் பார்வையோடு தானும் அம்

மேனிமேல் பாய்வளோ என்ற அச்சத்தால் அவனைப் பற்றிக்கொண்டு விமானத்தைக் கடவுவாராயினர். சீதைக்கு மெய்யான உயிர் இராமனே ஆதலின், அவன் மேனி தரையில் கிடக்கப் பொய்யுடலாக விளங்கும் சீதையை விண்மிசை அழைத்துச் செல்லும் அரக்கியர் உயிரைத் தரையில்விடுத்து உடம்பைக் கொண்டுசெல்லும் எமதூதர் போன்றனர் என்றவாறு. உடலைத் தரையில் விடுத்து உயிரைக் கொண்டு செல்லுதலே எமதூதர் இயல்பாகவும் இங்கு மெய்யுயிராகிய இராமனைத் தரையில் விடுத்துப் பொய்யுடலாக விளங்கும் சீதையை விண்மிசைக் கொண்டு செல்லுதற்குத் தக்க உவமையாம்படி இப் பொருளுவமையாகப் 'பொய்யுடல் கொண்டுசெல்லும் நமனுடைத் தூதர் போன்றார்' என்றார். சீதைக்கு இராமனே உயிர் என்பதை: "அடியேன் உயிரே அருள் நாயகனே" எனச் சீதை முன்பு கூறியுள்ளதாலும் அறியலாம். 'விதியையும் வலித்து' என்றது, உயிரைக் கொண்டுசெல்லும் முறையையும் வற்புறுத்தி மாற்றி என்றவாறு. சீதை களங்காண் படலம் முற்றிற்று. (32)

# 23. மருத்துமலைப் படலம்

## முன்னுரை

அனுமன், இறந்தவரை உய்விக்கும் மருந்துகளையுடைய மலையைக் கொணர்ந்து, இராமன் படையில் உள்ள யாவரும் உயிர்பெறச் செய்துவிட்டு மீண்டும் கொண்டுபோய் வைத்த நிகழ்ச்சியைக் கூறும் பகுதியாகலின், இது மருத்துமலைப் படலம் எனப் பெயர்பெறுகின்றது. ‘இப்படலப் பெயர் சில சுவடிகளில் மருத்து மாமலைப்படலம் எனவும், ‘மருத்துப் படலம்’ எனவும் ‘மருத்துவப் படலம்’ எனவும் ‘மருந்துப் படலம்’ எனவும் வேறுபடக் காணப்படுகின்றது. மருந்தையுடைய மாலை என வேற்றுமைத் தொகையாக விரிக்க வேண்டுதலின், மென்தொடர் வன்தொடராய் மருத்து மலை என ஆயிற்று.

## படலப் பொருட் சுருக்கம்

இராமனது கட்டளையின்படி சென்ற வீடணன் உணவைத் திரட்டிக்கொண்டு மீண்டுவந்து போர்க்களத்தைப் பார்க்கின்றான். யாவரும் பிரமாந்திரத்தால் இறந்துகிடப்பதையும் இராமன் முச்சற்றுக் கிடப்பதையும் காண்கின்றான். தன்னை அடைக்கலமாக ஏற்றுகொண்ட இராம இலக்குவருக்கு நேர்ந்த துன்ப நிலையைக் கண்டு கண்ணீர் பெருக்கிக் கலங்குகின்றான். வீடணன் பெருக்கிய கண்ணீரால் அவன் அன்பின் தன்மை அன்று தேவர்களும் கண்டு அறிந்து கொள்கின்றார்கள். இராமன் மேனியை நன்கு நோக்கி வடுவொன்றும் இல்லாதது கண்டு வீடணன் நடுக்கம் தணிகின்றான். பிரமன் கணையால் இலக்குவன் இறந்ததுகண்டு நொந்து இராமன் துன்பத் துயில் கொள்கின்றான் என்பதை உணர்கின்றான். இந்த பிரமாத்திரத்தால் வந்த துன்பத்தைத் தீர்ப்பது எப்படி என்பதைச் சிந்திக்கின்றான். நாகபாசம் அழிந்ததுபோலப் பிரமன் படையும் இன்று நாசமடையும் என்று துணிகின்றான்.

இராமன் தெளிவதற்குள், உற்றுழி உதவும் துணைவர் யாரேனும் உய்ந்திருக்கின்றார்களா? பார்ப்போம் என்று கருதிக் கையில் கொள்ளி ஒன்று ஏந்திக்கொண்டு விடணன் இரத்த வெள்ளத்தில் விரைந்து தேடுகின்றான். அனுமன் யானைப் பிணக்குவியலின்மேல் வீழ்ந்துகிடப்பதைக் கண்டு அவன் மேனியில் தைத்துள்ள அம்புகளை ஒன்றொன்றாகவாங்கிவிட்டுக் குளிர்ந்த நீரால் அவன் முகத்தினைக் குளிரச் செய்கின்றான். அனுமனுக்கு உயிர்ப்பு வருகின்றது; கண்களை விழித்துப் பார்க்கின்றான். புரண்டுகொண்டு இராமன் பெயரை மறவாமல் வாழ்த்துகின்றான். அந்நிலையைக்கண்டு அழுகையோடு உவகையும் அடைந்து விடணன் அனுமனைத் தழுவ, அனுமனும் அன்போடு அவனைத் தழுவி 'இராமன் வழுவிலாதிருக்கின்றானோ? என்று வினவுகின்றான். 'இராமன் வலியன்' என்று விடணன் சொல்லக்கேட்டு மகிழ்ந்து தொழுகின்றான். "இலக்குவன்மேல் வைத்த அன்பினால் அவன் இறந்துகிடப்பது கண்டு அறிவுமயங்கி துன்பொருங் துயில்கின்றான் இராமன். அவனுக்கு உணர்வு வந்த பின் என்ன நிகழுமோ அறியேன்'' என அவர் நிலையை உள்ளவாறு விளக்குகின்றான். விடணன் சொல்லைக்கேட்ட அனுமன் 'சாம்பன் எளவிடத்துள்ளான்? அவன் நம்மை மீட்டும் வாழ்விக்கும் உபாயம் வல்லவன்; இறவா வரம்பெற்றவன்; அவனைக் தேடுவோம்' என இருவரும் சிறிதுதொலைவு சென்று அச் சாம்பனைக் காண்கின்றார்கள். அமபுகள் தைந்த நோவினாலும் மூப்பின் துன்பத்தாலும் உயிர்ப்பு அடங்கியோங்கிய மனத்தனையினும் சாம்பன் "யாரோ வருகின்றார்கள்'' என்ற அடையாளத்தை அறிந்துகொள்கின்றான். 'யாவிர் அணுகினி என வினவுகின்றான். அவ்வொலி கேட்டவுடன் விடணன் உய்ந்தனம்! உய்ந்தனம்! என்று ஆரவாரிக்கின்றான். குரலால் விடணன் வந்துளான் என்பதையறிந்த சாம்பன் 'அயல்கின்றவன் யாவன்' என வினவ 'அனுமன் தொழுகின்றேன' எனக் கூறி வாயுசேய் வணங்குகின்றான். 'ஐய! இறந்திலன் எல்லோரும் எழுந்தனம்! எழுந்தனம்! எனச் சாம்பன் மகிழ்ந்து கூறுகின்றான்.

பிரமன் கணையென்றாலும் இராமனை ஒன்றும் செய்யாது எனபதை முன்னமே அறிவோம்; அவன் எந்நிலையில் உள்ளான்! எனச் சாம்பன் வினவ அனுமன், 'வள்ளல் துன்ப வெள்ளத்தில் துயில்கின்றான்' என்கின்றான். 'தம்பி நிலைகண்டு ஆற்றுவனோ? அது நிற்க; நீ இமைப்பின்முன் சென்று மருந்து கொணர்க எனச் சாம்பன் அனுமனை நோக்கிக் கூறுகின்றான். யான் கூறும் மருந்தினைக் கொணர்ந்தால் யாவரும் உய்வர். அம்மருந்தின் இயல்பு இது; அம் மருந்துள்ள மலைக்குச் செல்லும் வழி இது என விளக்குகின்றான். சாம்பன் சொன்ன வழியே அனுமன் பேருருக்கொண்டு விரைகின்றான். இமயமலையை அடைகின்றான். கயிலையைக்கண்டு

உமையொருபாகனை வணங்குகின்றான், ஏமகூட மலையையும் நிடத மலையையும் தாண்டி மேருமலையின்மீது பாய்கின்றான். அம் மலையில் பெரிய நாவல்மரத்தைக் காண்கின்றான், பிரமனைக் கண்டு வணங்குகின்றான். திருமாலும் திருமகளும் அங்கு தங்கியிருப்பது கண்டு வணங்குகின்றான். ஆயிரம் சூரியன் உதித்தாற்போன்ற பேரொளியுடைய ஐந்து முகங்களோடு கூடிய சதாசிவன் மனோன் மணியோடு வீற்றிருத்தலைக் கண்டு வணங்குகின்றான். இந்திரன் தேவர்தொழ வீற்றிருக்கும் காட்சியை அங்கு கண்டு வணங்கிச் செல்கின்றான். திசைக்காவலர் எண்மர் இருக்கும் இடங்களையும் காண்கின்றான். உத்தரகுரு என்கிற போகபூமியைக் காண்கின்றான். அங்கு சூரியன் ஒளிவீசுவது கண்டு, பொழுது விடிந்ததாக நினைந்து வருந்தின அனுமன், பின்பு தெளிந்து மேரு மலைக்கு வடக்கே வந்திருப்பதால், சூரியன் மேற்கே தோன்றிவந்து ஒளிவீசுகின்றான் என்று ஆறுதல் அடைகின்றான்.

ஆண் பெண் என்ற இருவரே தோன்றி எஞ்ஞான்றும் இளமை மாறாமல் உயிரும் உள்ளமும் ஒன்றுபட்டு இணையிலா இன்பம் துய்த்து வாழ்கின்ற அந்த உத்தர குருவத்தைத் தெளிவாக நோக்கி அப்பாற் செல்கின்றான். நீலமலையைக் கண்டு அதற்கு அப்பால் ஒளி வீசும் மருந்துகளையுடைய மருத்துமலையில் பாய்கின்றான். அம் மருந்துகளைக்காக்கும் தெய்வங்கள் ‟நீ யாவன்? உன் கருத்துதான் என்னை?'' என்று வினவுகின்றன. அனுமன் உற்றதைச் சொல்ல, அத்தெய்வங்கள் ‘ஐய! வேண்டியதைச் செய்துகொண்டு பின்பு எம்மிடம் கொணர்ந்து காட்டுக’ என்று உடன்பாடு தெரிவித்து மறைந்துவிடுகின்றன. திருமாலின் சக்கரம் காட்சி கொடுத்து மறைகின்றது. இன்ன இன்ன மருந்து என்று தெரிந்து எடுக்கப் புகுந்தால் காலம் நீடிக்கும் என்று அம்மலையை வேரோடும் பறித்துக் கையில் தாங்கிகொண்டு விண்ணில் விரைந்து செல்லலானான்.

அங்கு அனுமன் அவ்வாறு புறப்பட்டானாக, இங்கு வீடணனும் சாம்பவனும் இராமனிடம் விரைந்து சென்று அவன் மலரடியை வருடுகின்றனர். அப்போது இராமன் தாமரைமலர் போன்ற தன் கண்களை மெல்லத் திறந்து அவ்விருவரும் அழுத கண்ணினராய்த் தொழுகையினராய் ஏக்கங்கொண்டுநின்றிருப்பதைக் காண்கின்றான். ‘வீடணா! யான் ஏவிய காரியத்தைச் செய்து முடித்துவிட்டுத் துன்ப மின்றி யிருக்கின்றாயா?’ என்று கேட்டுவிட்டுச் சாம்பனை நோக்கி ‘நீ உயிர்வரப் பெற்றாயா?’ என்று வினவுகின்றான். பின்பு அவர்களை நோக்கி ‘அறிவு மிக்கவர்களே! நமக்கு நேர்ந்த அழிவு இதுவாகும்; இறந்தவர்கள் மீண்டும் உயிர்பெற்றெழ வழியுண்டோ?

என்கின்றான். 'சீதை என்ற ஒருத்தியினால் சிந்தை வருந்திய பேதையனாகிய என்னால் நேர்ந்த துன்பத்தை எத்தகையதென்று சொல்வேன் மாயை இம்மான்' என்று என் தம்பி சொன்ன சொல்லைக் கொள்ளாமல் பெண்ணுரை கேட்டுப் போனதால் இப்பழி மிக்க துன்பம் உண்டாயது! என்றார் போன்ற பல துன்பமிக்க சொற்களைச் சொல்லிவிட்டு இறுதியில் 'இத்தகைய துன்பம் எதையும் பார்க்காமல் யான் முடிவேன்' என்று இராமன் முடுகிச் சொன்ன அளவில் சாம்பவன் எழுந்து "அரசே யான் சொல்ல வேண்டுவது உளது. உன்னை நீ அறியாது வருந்துகின்றாய்; பெருந்திறல் பெற்ற அனுமன் உணர்வுபெற்று வடதிசைக்கண் உள்ள மருந்து கொணரப் போயிருக்கின்றான், இனி ஒரு கணத்தில் வந்துவிடுவான்; நீ துன்பத்தைத் துறப்பாயாக" என்று ஆறுதல் கூறி அம் மருந்தின் தன்மையை எல்லாம் விளக்கிக்கொண்டிருக்கின்றான். வடதிசையில் ஓரொலி எழுகின்றது. அனுமன் போர்க்களத்துள்ளோரின் துன்பத்தை ஆற்றும் பொருட்டு ஆரவாரிக்கின்றான். விண்ணில் பறந்துவரும் கலுழன்போல விரைந்து வந்து தோன்றுகின்றான். மருத்துமலை வஞ்சக அரக்கர் ஊர்வர அஞ்சி விண்ணில் நிற்கின்றது. அனுமன்மட்டும் தரைக்கு வருகின்றான். அம்மருந்துகளின் மனம் பட்டவுடன் இறந்தவர்கள் எல்லாம் பழைய நிலையில் எழுந்தனர். வந்த மருந்தினால் அங்கிருந்த பட்டமரங்களும் தழைத்தன என்றால் இராமனுக்குத் துணையாயிருந்த வானரங்கள் உய்ந்ததுபற்றிக் கூறவேண்டுமோ? இலக்குவன் உணர்வு பெற்றெழுகின்றான். யாவரும் எழுகின்றார்கள். எழுந்த தம்பியை இராமன் உளமகிழ்ந்து தழுவிக்கொண்டு துன்பம் நீங்கினான். பிரமாத்திரம் விலகிவந்து இராமனைப் பணிந்து 'என்னைச் செலுத்திய பின் கொலைசெய்யாது விட்டேன்' என்ற பெருமையை எனக்கு அருளினாய்; இதுவே நின்பெருமைக்குச் சான்றாகும் என்று சொல்லி பாராட்டிவிட்டுச் செல்கின்றது.

அன்புக் கண்ணீரோடு இராமன் அனுமனைத் தழுவிக்கொண்டு நாங்கள் முன்னும் தயரத மன்னனிடத்தில் தோன்றினோம்; மாண்டு விட்டோம். இப்போது நின்னில் தோன்றினோம். இந்த உதவிக்கு எம்முயிர் கொடுத்தாலும் ஈடாகாது. எம் பழியையும் வாராமல் காத்துப் பகையும் எம்மை நலியாமல்காத்து எம்மரபையும் காத்தாய்; அதனால் வேத நெறியையும் காத்தாய்; இத்தகைய உதவிசெய்த நீ, இன்னலின்றி என்றும் இனிது வாழ்வாயாக." என்று வாழ்த்துகின்றான். அனுமன் தன் பணிவைத் தெரிவித்துவிட்டுச் சாம்பவன் கூறியபடி மருத்து மலையை மீண்டும் அவ்விடத்தில் வைக்கப் புறப் பட்டுச் செல்கின்றான்.

## கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. வான்மீகத்தில்: இந்திரசித்தின் பிரமாத்திரத்தால் இராம இலக்குவர் இருவரும் துன்புற்றுவிழ்ந்து மூச்சற்றிருப்பதை வீடணன் கண்டதாகவும் அவ்விருவர் நிலையைக் கண்டு கலங்கும் வானர வீரர் சிலர்க்கு அவன் ஆறுதல் கூறுவதாகவும் உள்ளது. எம் பிரான்கள் இருவரும் பிரமதேவனது படையைப் பெருமைப் படுத்தவே மூச்சடங்கிக் கிடக்கின்றனர். ஆதலின் அஞ்சாதீர்கள் என்பது வீடணனது ஆறுதல்மொழியாக அங்குஅமைந்துளது.

கம்பர்: இராமன் தனியிடத்திற் சென்று தெய்வக் கணைகளுக்குப் பூசை செய்துவிட்டுப் போர்க்களத்திற்குத் திரும்பிய போது, தன் வானர வீரர்கள் எல்லாம் இறந்துகிடப்பதைப் பார்த்துக் கவன்று பல கூறிக்கொண்டே சென்று கடைசியாக இலக்குவன் இறந்துகிடப்பதைக் கண்டு உணர்வற்று விழ்ந்தான் என்றும், உணவு கொணரச் சென்ற வீடணன் வந்து இருவரும் விழ்ந்துகிடப்பதைக் கண்டு கலங்கிப் பின் இராமன் மேனியில் அம்புபட்ட வடுவில்லாததைக் கண்டு, இலக்குவனே அயன்கணையால் இறந்துளான் என்றும், அவன் இறந்துகிடப்பதைக் கண்டு இராமன் துன்பத்தால் மயங்கி விழ்ந்துளான் என்றும் உய்த்துணர்வதாக அமைத்துள்ளார்.

கம்பரதுஇவ்வமைப்பினுல்காப்பியத் தலைவனாகிய இராமன் அயன்கணையால் இறந்திலன் என அவன் பெருமையை நிலை பெறுத்தியதாகின்றது.

2. வான்மீகத்தில்: இமயமலையின் சிகரங்களில் இடபக்குன்று கயிலை என்ற இரு சிகரங்களுக்கும் நடுவே மருத்து மலை இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது. சாம்பன் அனுமனுக்கு வழி கூறும் பகுதியும் சுருக்கமாகவே அமைந்துளது.

கம்பர்: இப் பகுதியில் மாற்றமும் விரிவும் செய்துள்ளார். தென்கடலுக்கு ஒன்பதினுயிரம் யோசனைத்தொலைவில் இமயமலை இருப்பதாகவும், இமயத்துக்குஅப்பால்ஒன்பதினுயிரம் யோசனை தொலைவில் ஏமகூட மலையும், அதற்கப்பால் அவ்வளவு தொலைவில் நிடதமலையும் அம் மலைக்கு அப்பால் அவ்வளவு தொலைவில் மேரு மலையும் அம் மலைக்கு அப்பால் அவ்வளவு தொலைவு கடந்தால் நீலகிரியும், நீலகிரிக்கு அப்பால் நாலாயிரம் யோசனை கடந்தால் மருந்துமலையும் இருப்பதாகக் கூறியுள்ளார். கம்பர் கூறும் இவ்வழி கற்பனை வழியாகவே காணப்படு

கின்றது. இமயமலைக்கே மேருமலை என்ற வேறு பெயரும் உண்டு என்பது இலக்கியங்களால் உணரக்கிடக்கின்றது. இக்காலத்து அறிஞர்களும் இமயத்திற்கு வேறாக மேருமலை என்ற ஒரு பெருமலை இருப்பதாகக் கூறுவதில்லை. இமயத்திற்கு அப்பால் நாற்பதினாயிரம் யோசனைத் தொலைவில் மருத்து மலை இருப்பதாகக் கம்பர் கூறியது, அந்த மருந்தின் அருமையும் அதைக் கொணர்ந்த அனுமன் பெருமையும் புலப்படப் புனைந்த புனைவேயாம்.

3. **வான்மீகத்தில்:** அனுமன் இமயமலையை அடைந்தவுடன் அங்குப் பிரமகோசம், ரசதாலயம் முதலிய ஆச்சிரமங்களையும் கயிலையையும் இமவச்சிலையையும் இடப மலையையும் மருத்து மலையையும் கண்டதாகவும், ஆயிரம் யோசனைப் பரப்புள்ள அம்மலையில் மருந்தைத்தேடி அலைந்து, கிடைக்காமையால் அம் மருந்துள்ள மலையின்மேல் கோபங்கொண்டு அந்த மலைச் சிகரத்தையே எடுத்துக்கொண்டு இலங்கைக்குச் சென்றதாகவும் உள்ளது.

**கம்பர்:** இமயங்கடந்த அனுமன் கயிலையைக் கண்டு அங்குள்ள உமையொரு பாகனாகிய உருத்திரனை வணங்கிச் சென்றதாகவும், பின்பு ஏமகூடம், நிடதம் என்ற மலையைக் கடந்து மேருமலையை யடைந்ததாகவும் கூறுகின்றார். பிரமன் தங்கியுள்ள பிரமன் உலகத்தையும் விண்டுவின் உலகத்தையும் ஈசனுலகத்தையும் இந்திரன் உலகத்தையும் கண்டு வணங்கினான் எனவும் திசைக்காவலர் எண்மரையும் கண்டான் எனவும் கூறுகின்றார். உத்தரகுருவில் சூரியன் உதித்திருப்பதைக் கண்ட அனுமன் விடிந்துவிட்டதே எனத் திடுக்கிட்டு வருந்திய பின், சூரியன் மேலைத்திசையில் தோன்றுவதில்லை, மேரு மலைக்கு வடக்கே சூரியன் மாறித் தோன்றிப் பகல் செய்வான் என்ற மேலோர் சொல்லை நினைந்து, துன்பம் தவிர்ந்து போக பூமியாகிய அந்த உத்தரகுருவை நன்கு நோக்கிச் செல்கின்றான். பின் உயர்ந்த நீலமலையைக் கடந்துசென்று மருத்து மலையை அடைந்தவுடன் அனுமனது உடற்பாகத்தைப் பொறாமல் அம் மலை பாகத்தில் அழுந்துகின்றது. அங்குள்ள மருந்துகளைக் காக்கும் தெய்வங்கள் அனுமனுக்கு முன் தோன்றி வெகுண்டு, நீயார்? "உன்கருத்து என்னை?" என வினவ, அனுமன் நிகழ்ந்தவெல்லாங் கூறியவுடன் 'நீ வேண்டியபடி இதைக் கொண்டுசென்று மீண்டும் கொணர்ந்து சேர்க்கவேண்டும்' என உடன்பட்டுக் கூற, அனுமன் அம்மலையைத் தரையில் நின்றும் பெயர்த்து எடுத்தான், அப்போது திருமாலின்

சக்கரம் தோன்றிக் காட்சியளித்து மறைந்தது என்று கூறி யுள்ளார். கம்பர் சொன்ன இக் கற்பனைகள் வான்மிகத்தில் இல்லை. மருந்துமலையைப் பெயர்த்துவந்தது மட்டுமே அங்குச் சொல்லப்பட்டுளது.

அனுமன் மருந்துமலையைக் கொணரச் சென்றபின் வீடண னும் சாம்பனும் இராமனை அடைந்து அவன் நிலைமைகண்டு கண்களைவிட்டுக் கலங்கி அவன் திருவடிகளை மெல்லெனத் தைவரும் நிலையில் இராமன் கண்திறந்து அவ் விருவரையும் பார்க்கின்றான். வீடணனைப் பார்த்து 'யான் ஏவின செயலைச் செய்து முடித்துத் துன்பம் இன்றி இருக்கின்றாயோ' எனவும் சாம்பனைப் பார்த்து 'நீ உயிர் வரப்பெற்றாயோ?' எனவும் வினவிவிட்டு, 'அறிவு மிக்கவர்களே, நம் சேனையில் உயிர் பிரிந்தவர்கள் உய்வதற்கு வழியுண்டா?' என்கின்றான். பின்பு சீதை என்ற ஒருத்தியால் உண்டான தீங்குகளையெல்லாம் விரித்துக் கூறி வருந்துகின்றான். (பன்னிரண்டு செய்யுட் களால்இராமனது இவ் வெறுப்புரையைக் கம்பர் விரித்துக் கூறு கின்றார்.) பின்பு சாம்பன் எழுந்து பலவகையாக ஆறுதல் கூறிப் பின், அனுமன் மருந்து கொணரச் சென்றுள்ளதையும் அம் மருந்தின் ஆற்றலையும் விரித்துக் கூறி இராமனை ஆற்று வித்துக் கொண்டு இருக்கும்போது வடதிசையில் அனுமன் வரும் ஆரவாரம் கேட்கின்றது; என்று கம்பர் கூறும் பகுதி வான்மீகத்தில் சொல்லப்படவில்லை. அனுமன் மருந்துமலை யைக் கொணர்ந்த பின்னரே இராமன் எழுந்ததாகவே கூறப் பட்டுள்ளது. பிரமன் கணையால் சேனை இறந்தபோது இராமன் தனியிடத்தில் இருந்து அம்புகட்குப் பூசை செய்து கொண்டிருந்ததாக முன் கூறியதற்கேற்ப, இங்கும் கம்பர் தம் கற்பனைத்திறத்தால் இக்கதைப் பகுதியை நுழைத்து அழகு செய்துள்ளார். மேலும், அனுமன் கொணர்ந்த மருந்துமலை வஞ்சக அரக்கர்தம் ஊர்வர உடன்படாமல் விண்ணில் நின்ற தாகக் கம்பர் கூறும் செய்தியும் வான்மீகத்து இல்லை. மேலும் மருந்துமலை வந்தவுடன் பிரமாத்திரம் பிடிப்பைவிடுத்து இராமனை வலம்வந்து வணங்கி, வில்லில் தன்னைத் தொடுத்து விட்டபின் கொலைசெய்தல் தப்பாது என்ற பெருமையைத் தனக்கு இராமனே கொடுத்ததாகப் பாராட்டிவிட்டுச் சென்ற தாகக் கம்பர் கூறும் செய்தியும் வான்மீகத்தில் காணப் படாததே.

## படலப் பொருட் சிறப்பு

இம் மருத்துமலைப் படலத்தில் கம்பரது புதிய படைப்பு விளக்கம் பெற்றிருப்பதை மேலே கண்டோம். அப் படைப்பில் அனுமன்

உத்தரகுருவையுற்ருன் என்பதும் ஒன்று. போக பூமியாகிய அந்த உத்தர குருவின் இயல்பைக் கம்பர் நமக்கு நன்கு விளக்கிக் காட்டியுள்ளார்.

" இருவரே தோன்றி என்றும் ஈறிலா ஆயுள் எய்தி
ஒருவரோடு ஒருவர் உள்ளம் உயிராடும் ஒன்றே யாகி—
பொருவரும் இன்பம் துய்த்துப் புண்ணியம் புரிந்தோர் வைகும்
திருமறை கமலம் அன்ன நாட்டையும் தெரியக் கண்டான்'' (57)

என்கின்ருர். இதனுல் உத்தரகுரு என்பது, இப் பூவுலகத்தில் புண்ணியம் மிகப் புரிந்தவர்கள் அந்தப் புண்ணியத்தின் பயனுக ஆண் பெண் எனத் தாமே பிறந்து என்றும் அழிவு இல்லாத ஆயுளை யுடைவராய் ஒருவரோடு ஒருவர் உள்ளமும் உயிரும் ஒன்றே யாகக் கலந்து ஒப்பற்ற இன்பத்தைத் துய்க்கும் இடம் என்பதும் அது செல்வச் சிறப்பாலும் வடிவழகாலும் திருமகள் தங்கியுள்ள தாமரைமலர் போன்றது என்பதும் புலப்படுகின்றன. நாட்டையும் தெரியக் கண்டான்' என்று இங்குக் கூறியவர் அடுத்த செய்யுளிலும் "பொன்னிநாட்டுவமை வைப்பைப் புலன்கொள நோக்கிப் போனுன்'' (58) என அக் கருத்தையே மீண்டும் கூறி விளக்கியுள்ளார்.

கம்பர், உத்தரகுருவை மட்டும் இவ்வாறு அனுமன் நோக்கிச் சென்றதை வற்புறுத்திக் கூறக் காரணம் என்னை? தாம் பிறந்த நாடாகிய பொன்னி நாட்டின்மேல்—சோழ நாட்டின்மேல் வைத்த பெருமதிப்பினுலேயே இங்ஙனம் கூறியுள்ளார் எனலாம். என்னை? சரயுநதி பாயும் கோசல நாட்டைக் கூறும்போதும் காவிரிநாடன்ன கழனிநாடொரீஇ' (முகப்—1) எனத் தம் சோழ நாட்டைப் போன்றது. சரயுநதிபாயும் கோசலநாடு எனத் தம் நாட்டை உவமை கூறிச் சிறப்பிப்பது அவர் இயல்பாக முன்னமே கண்டுளேம் ஆதலின் என்க. இங்கும் அத்தகு இயல்பினுலேயே உத்தரகுருவை, பொன்னி நாட்டு உவமை வைப்பு எனப் புகன்ருர் என்பதும் பொருத்தமே ஆனுல், சரயுபாயும் நாடு, காவிரிபாயும் சோழநாடு போன்றிருப்பது வியப்பான செய்தியன்று. இருவரே தோன்றி ஒருவரோடு ஒருவர் உள்ளமும் உயிரும் ஒன்றேயாகிப் பொருவரும் இன்பம் துய்க்கும் உத்தரகுரு பொன்னி நாட்டின் உவமை வைப்பாதல் யாங்ஙனம்? என்பது ஆழ்ந்து நோக்கி அறிய வேண்டுவதொன்று.

இங்கு கம்பர் தம் நாட்டினைச் சிறப்பிப்பதோடு அமையாது, தமக்கு முற்காலத்துத் தோன்றிப் புகழுடன் விளங்கிய ஒரு பெருங் காப்பியத்தை நினைந்து அக் காப்பியத்தில்கூறிய ஒரு சிறந்த

கருத்தை இங்கு அமைத்துச் சிறப்பிக்கின்றார் என்பதை உளங்கொண்டு நோக்கவேண்டும். கம்பர், இளங்கோவடிகளின் கருத்துக்களைத் தம் காப்பியத்தில் பற்பல விடங்களில் அழகுற அமைத்துக் காட்டியுள்ள மாண்பு அயோத்தியா காண்ட உரையில் விரிவாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இங்கும் இளங்கோவடிகளின் கருத்தை நினைந்தே கம்பர் இவ்வாறு கூறியுள்ளார். மனையறம்படுத்த காதையில் இளங்கோவடிகள் .கண்ணகியையும் கோவலனையும் நமக்கு அறிமுகப்படுத்தும்போது,

உரைசால் சிறப்பின் அரசுவிழை திருவின்
பரதர் மலிந்த பயங்கெழு மாநகர்
..........................................................
..........................................................
குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வர்
அத்தகு திருவின் அருந்தவ முடித்தோர்
உத்தர குருவின் ஒப்பத் தோன்றிய
கயமலர்க் கண்ணியும் காதற் கொழுநனும்.

என்றுகூறி அறிமுகப்படுத்துகின்றார். இப் பகுதிக்குக் குறிப்புரை வரைந்த ஆசிரியர், 'அரசுவிழை திருவினையுடைய கடலோடிகள் மலிந்தநகர் உத்தரகுருவினை ஒக்கும்படி செல்வர்க்குத் தோன்றிய கண்ணகியும் கோவலனும்' எனக் கொண்டு கூட்டிப் பொருள் விளக்கம் செய்துள்ளார். இவ்வுரையை ஆழ்ந்து நோக்குவோமாயின், புகார் நகரம் உத்தரகுருவைப் போன்ற செல்வச் சிறப்பும் பிறசிறப்புகளும் இருந்தும் உயிரும் உள்ளமும் கலந்த ஒப்பற்ற காதலர் இருவர் இல்லாமையால், அந்த உத்தரகுருவாகிய போக பூமிக்கு ஒப்பாகாமல் தாழ்வுற்றிருந்தது என்பதும் கருத்தொருமித்த காதலராகிய கண்ணகியும் கோவலனும் தோன்றிய பின்பு அந்த உத்தரகுருவிற்கு ஒப்பாகும் பெருமைபெற்றது என்பதும் தெளிவாகின்றது.

இதனால், இளங்கோவடிகள் காவிரிபாயும் காவிரிப்பூம்பட்டிணம் உத்தரகுருவோடு ஒக்கும் சிறப்பினது என்பதை விளக்கியவாறு ஆயிற்று. இந்தக் கருத்தோடு கம்பர் 'பொன்னி நாட்டுவமை வைப்பை' என உத்தரகுருவினைக் குறிப்பிட்டுள்ளதையும் இணைத்துப் பார்க்கும்போது இளங்கோவடிகளின் கருத்தை விளக்கவே கம்பர் இதையே இங்குக் கூறியுள்ளார் என்பது பெறப்படும். வான்மீகத்தில் கூறப்படாத உத்தரகுருவைக் கம்பர் இங்கு அனுமன் கண்டதாகக் கூறியதும் அதுபற்றி ஐந்து பாடல்களில் விரித்து உரைத்ததும், சிலப்பதிகாரத்தின் நினைவினாலேயே என்பது ஐயமின்றித் தெளியலாம். இதனால், தாம்பிறந்த நாட்டை கம்பர்,

யும் தமக்கு முற்காலத்துத் தோன்றிப் புகழுடன் விளங்கிய இளங்கோவடிகளின் காப்பியத்தையும் சிறப்பித்தவாறுதல் தெளிவு. மேலும், கம்பர், தம் நாட்டின்மேல் தமக்கிருந்தபற்றினை அனுமன் மேல் 'ஏற்றிப் "பொன்னி நாட்டுவமை வைப்பைப் புலன் கொள நோக்கிப் போனான்" என்றும் கூறியுள்ளார். மற்றைய இடங்களை அனுமன் பார்த்ததாகக் கூறும்போது இவ்வாறு புலன் கொள நோக்கிப் போனதாகக் கூறாமையும் இங்கு நினையத்தகும்.

இனி, இப் பாடலில் மேலும் ஒரு கருத்தைக் கம்பர் விளக்கியுள்ளார் என்பதை நோக்குவோம். தன்னை ஆதரித்த சோழன் பெருமையைக் கம்பர், இங்குச் சிறப்பாக அமைத்துத் தம் நன்றியறிதலைப் புலப்படுத்தியுள்ளார் என்பது நினைத்தற்குரியது. 'சென்னிநாள் தெரியல் வீரன் தியாகமா விநோதன் தெய்வப் பொன்னி நாடு' என்கின்றார். பொன்னி என்பது பொன்னிறமுள்ள நீரினையுடைய காவிரியாற்றை. காவிரி வளம் சுரக்கும் சோழநாடு, பொன்னி நாடு எனப்பட்டது. பொன்னி நாட்டைத் தெய்வப் பொன்னி நாடு எனவும், சென்னி......தியாகமா விநோதன் தெய்வப் பொன்னிநாடு எனவும் சிறப்பித்திருத்தல் காணலாம். சென்னி—சோழன். தியாகமா விநோதன் என்பது வள்ளல் தன்மையை விளையாட்டாகக் கொண்டுள்ளவன் என்ற கருத்துடைய காரணப் பெயர்.

இந்தப் பொன்னி நாட்டுக்கு அடையாகக் கூறியுள்ள,

'வன்னி நாட்டிய பொன்மௌலி
வானவன் மலரின் மேலான்
கன்னிநாள் திருவைச் சேரும்
கண்ணனும் ஆளுங் காணி. (பொன்னி நாடு)

என்னும் முன்னிரண்டு அடிகளும் சிலப்பதிகாரக் கருத்தை நினைந்து சொன்னதே என்று கருத இடமுண்டு. 'வன்னி நாட்டிய பொன் மௌலி வானவன்' என்றது, வன்னிப் பத்திரத்தை நிலை பெற அணிந்த பொன்னால் இயன்ற முடியினையுடைய சிவபிரானை. 'மலரின் மேலான்' என்றது, திருமாலின் உந்திக் கமலத்தில் உதித்த பிரமனை. 'கன்னி நாண் திருவைச் சேரும் கண்ணன்' என்றது நாளும் இளமைச் செவ்வி அழியாதிருக்கும் திருமகளை மார்பகத்தே' கொண்டுள்ள திருமாலை. இந்த மும்மூர்த்திகளும் தாம் ஆளும் உரிமையிடமாகக் கொண்டுள்ள பொன்னி நாடு என்பது கருத்து.

இக் கருத்து சிலப்பதிகாரத்தில் எங்குள்ளது? எனின், கூறுவல் இந்திரவிழவூர் எடுத்த காதையில்,

‘பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செய்வேள் அணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோலுயிம்
நீல மேனி நெடியோன் கோயிலும்
மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்
மாமுது முதல்வன் வாய்மையின் வழாஅ
நான்மறை மரபிற் றீமுறை யொருபால். (169—175)

என்ற பகுதியில் சிவன், திருமால், பிரமன் என்ற மும்மூர்த்திகளின் ஆட்சி காவிரிப்பூம் பட்டிணத்தில் இருப்பதாகக் கூறப்பட்டிருத்தல் காண்க. இப் பகுதியை யுளங்கொண்டே கம்பர், அவ்வாறு கூறி யிருத்தல் வேண்டும். அங்ஙனமாயின், அறுமுகச் செவ்வேள் முதலியோரை இங்குக் குறிப்பிடக்காணோமே எனின், அவர்களை யெல்லாம் இனம்பற்றி உய்த்துணர வைத்துள்ளார் என்றே கொள்ளல் தகும். வன்னி நாட்டிய பொன் மௌலி வானவன் என்ற பிறவா யாக்கைப் பெரியோனைக் கூறியதால் அறுமுகச் செவ்வேறும், திருவைச் சேரும் கண்ணன் என நீலமேனி நெடியோனைக் கூறிய தால், வால்வளை மேனி வாலியோனும், மாலை வெண்கொடை மன்னவனும் இனம்பற்றிக் கொள்ளற்குரியாராதல் நினையலாம்.

கம்பர், இந்த ஒரு பாடலில் தாம் பிறந்த நாட்டின் பெருமையை யும் தமக்கு முற்காலத்துத் தோன்றிய ஒருபெருங் காப்பியத்தின் கருத்துக்களையும், தம்மை ஆதரித்த மன்னவன் புகழையும் புலப் படுத்தியுள்ள அருமை நினைத்தொறும் மகிழ்வூட்டும் சிறப்பின தாகும்.

# 23. மருத்துமலைப் படலம்

## கொணர்ந்த உணவைப் பாசறையில் சேர்த்த வீடணன் களத்தையடைதல்

8836. போயின டைய லிப்பாற்
புரிகெனப் புலவர் கோமான்
ஏயின கரும நோக்கி
யெய்திய விலங்கை வேந்தன்
மேயின உணவு கொண்டு
மீண்டவை யுறையுள் விட்ட
வாயின வாக்கித் தான்வந்
தமர்ப்பெருங் களத்த ணுனன்.

போயினள் தையல்; இப்பால்
புரிகெனப் புலவர் கோமான்
ஏயின கருமம் நோக்கி,
எய்திய இலங்கை வேந்தன்,
மேயின உணவு கொண்டு,
மீண்டு, அவை உறையும் விட்ட
ஆயின ஆக்கி, தான்வந்து,
அமர்ப்பெருங் களத்தன் ஆனுன்,

பொ : - சீதை அசோக வனத்திற்குப் போய்ச் சேர்ந்தாள்; இங்கே, தேவர்கள் தலைவஞன இராமன் 'செய்க' என்று தன்னை நோக்கி ஏவிய பணியைச் செய்யக் கருதிச் சென்ற வீடணன், விரும்பத்தக்க

உணவுப் பொருள்களைக் கொண்டு திரும்பி, அவ்வுணவுப் பொருள் களைப் பாசறையுள் சேர்த்துவிட்டு வந்து பெரிய போர்க்களத்தில் புகுந்தான்.

கு :- புலவர் என்றது தேவரை. தெய்வநிலையை நினைத்து இராமனை 'புலவர் கோமான்' என்றார். ஏயின கருமம் என்றது உணவு கொண்டு வருதலை. வானரசேனை விரும்பத்தக்க சிறந்த உணவு கொணர்ந்தான் என்பார். 'மேயின உணவு கொண்டு மீண்டு' என்றார். வீடணனை இலங்கைவேந்தனாக முன்னரே இராமன் முடிசூட்டிவிட்டதனால் அவனை இங்கு 'இலங்கை வேந்தன்' என்று குறிப்பிட்டார். உறையுள் என்பது சேனை தங்கும் பாசறையை. கொணர்ந்த உணவை பாசறையுள் சேர்த்துவிட்டு என்பார். 'அவை உறையுள்ளிட்ட ஆயினவாக்கி' என்றார். தான்-அசை. (1)

## வீடணன் வானரசேனை முற்றும் மாய்ந்துள்ளமை கண்டு மயங்கி வீழ்தல்

8837. நோக்கினன் கண்டான் பண்டிவ்
வுலகங்கள் படைக்க நோற்றான்
வாக்கினன் மாண்டா ரென்ன
வானர வீரர் முற்றும்
தாக்கினன் ரெல்லாம் பட்ட
தன்மையை விடத்தைத் தானே
தேக்கின னென்ன நின்று
தியங்கின னுணர்வு தீர்ந்தான்.

நோக்கினன் கண்டான்—பண்டு இவ்
உலகங்கள் படைக்க நோற்றான்
வாக்கினால் மாண்டார் என்ன,
வானர வீரர் முற்றும்
தாக்கினர் எல்லாம் பட்ட
தன்மையை ; விடத்தைத் தானே
தேக்கினன் என்ன நின்று
தியங்கினன், உணர்வு தீர்ந்தான்.

பொ :- (போர்க்களத்திற் புகுந்த வீடணன்) ஆதியில் இந்த உலகங்களையெல்லாம் படைக்கும் பேறுபெற்றவனாகிய பிரமனது சாபச் சொல்லால் மாண்டனர் என்னும்படி, வானரவீரர் அனைவரும் (பிரமாத்திரத்தால் தாக்கப்பட்டவராய் எல்லாரும்) இறந்துபட்ட தன்மையைத் தன் கண்களாய் கண்டான்; (கண்டு) நஞ்சினைத் தானே அருந்தினான் என்னுமாறு நின்று மயங்கினவனாய் உணர்வு நீங்கினான்.

கு :- பட்ட தன்மையை நோக்கினான் கண்டான் என இயையும். நோக்கினான் என்புழி ஆன் கருவிப்பொருளது. உலகம் படைக்கும் பேற்றினைத் தவத்தினால் பெற்ற பிரமன் என்பார் 'உலகங்கள் படைக்க நோற்றான்' என்றார். 'வாக்கினால் மாண்டாரென்ன வானர வீரர் முற்றுப்பட்ட தன்மை என்றதும் விடத்தைத்தானே தேக்கினான் என்ன நின்றுதியங்கினான் என்றதும் தற்குறிப்பேற்றமாகக் கூறியவை. இந்திரசித்தின் கணையால் சிறிது போழ்தில் வானரர்கள் விரைந்து மாண்டமை புலப்படுத்தப் பிரமன் சாபத்தால் மாண்டார்போலப் பட்டார் என்றார். "ஐயந்தான் இல்லாவெள்ளம் அறுபது விகவென்று வைகின்றார்" (பிரமாத்திரப்—26) என முன் கூறியுள்ளதும் நினையலாம். தாக்கினர் என்பது செயப்பாட்டு வினைப் பொருளையுணர்த்தும் முற்றெச்சம். தாக்கப்பட்டராய் எல்லாம் பட்ட தன்மையை என இயையும். தியங்குதல்—மயங்குதல். நஞ்சினை உண்டவர் முன் அறிவி மயங்குதலும் பின் உணர்வு நீங்கி வீழ்தலும் இயல்பு. வானரசேனையெல்லாம் பட்ட தன்மையை கண்ட துன்பம் நஞ்சினையுண்ட துன்பம்போன்று வீடணனை வருத்திற்று என்றவாறு. தேக்குதல், உண்ணுதலை உணர்த்தியது நோக்கினான் கண்டான் என்பதற்கு, கருத்தோடு பார்த்தான் என்று பொருள் கூறலும் ஆம். இப்பொருட்டு நோக்கு என்பது, நோக்கல் நோக்கம் ஆகும். ஆன் உடனிகழ்ச்சிப் பொருளது. (2)

### வீழ்ந்த வீடணன் மெல்ல எழுந்து சென்று இராமன் இலக்குவனோடும் வீழ்ந்துகிடப்பதைக் காணுதல்

8838. விளைந்தவா றுணர்ந்தி லாதா
னேங்கினான் தேதும்பி னான்மெய்
உளைந்துளைந் துயிர்த்தா னுவி
யுண் டிலை யென்ன வோய்ந்தான்
வளைந்தபேய்க் கணமு நாயு
நரிகளு மிரிய வந்தான்
இளங்கிளை யோடுஞ் சாய்ந்த
விராமனை யிடை யிற் கண்டான்.

விளைந்தவாறு உணர்ந்தி லாதான்,
ஏங்கினான், வெதும்பினான்; மெய்
உளைந்துஉளைந்து உயிர்த்தான்; 'ஆவி
உண்டு,இலை' என்ன, ஓய்ந்தான்;
விளைந்தபேய்க் கணமும் நாயும்
நரிகளும் இரிய, வந்தான்;
இளங்கிளை யோடும் சாய்ந்த
இராமனை இடையில் கண்டான்.

பொ :- (பிரமாத்திரத்தால்) நிகழ்ந்ததை உணராத வீடணன் ஏக்கம் கொண்டு, மனம் வெதும்பி, உடம்பு வருந்திவருந்தி பெரு மூச்சு விட்டுப் பின்பு 'உயிர் உண்டோ? இல்லையோ' என்று கண்டோர் ஐயுறுமாறு உயிர்நவப் பெற்றவனாய்(ப் பின் சிறிதுதேறி) பிணங்களைச் சூழ்ந்துகொண்டிருந்த பேய்க்கணமும் நாய்க்கூட்டமும் நரிக்கூட்டமும் அஞ்சி ஓடுமாறு (பிணங்களுக்கிடையே) நடந்து வந்து, இளையவனாகிய இலக்குவனோடும் தரையில் சாய்ந்துகிடக்கும் இராமனை இடையே பார்த்தான்.

கு :- உணர்ந்திலாதான் என்றது வினையாலணையும் பெயர். ஏங்கினான், வெதும்பினான், உயிர்த்தான் என்பன முற்றெச்சங்கள், வந்தான் என்பதும் அது வந்து கண்டான் என இயையும். ஓய்தல், மூச்சற்றுக்கிடத்தல். பிணங்களைத் தின்ன மொய்த்துக்கொண்டுள்ள பேய் முதலியன உயிரோடு நடந்துவரும் வீடணனைக் கண்டு அஞ்சி இரிந்தோடின என அக்களத்தின் கோரக்காட்சியைப் புலப்படுத் தியவாறு. இளங்கிளை என்றது 'தம்பி' என்னும் பொருளது. சாய்தல் இங்குத் தரையில் கிடத்தலை உணர்த்தியது. சாய்தல், உள்ளதனுணுக்கம் என்று கொண்டு உணர்ச்சி குறைந்துகிடந்தமை யுணர்த்திற்றாகவும் கொள்ளலாம். (3)

## வீடணனது அன்பு அவன் கண்ணீரால் புலப்படுகின்றது

கவிக்கூற்று

8839. என்பென்ப தியாக்கை யென்ப
துயிரென்ப திவைக ளெல்லாம்
பின்பென்ப தல்ல தென்றுந்
தம்முடை நிலையிற் பேரா

**முன்பென்ப துளதென் ருலு**
**முழுவதுந் தெரிந்த வாற்ருல்**
**அன்பெனப தொன்றின் தன்மை**
**யமாரு மறிந்த தின்றேல்.**

என்புஎன்பது, யாக்கை என்பது,
உயிர்என்பது இவைகள் எல்லாம்
பின்புஎன்பது, அல்லது; என்றும்
தம்முடைய நிலையின் பேரா
முன்புஎன்பது, உளது; என்ருலும்
முழுவதும் தெரிந்த ஆற்ருல்
அன்புஎன்பது ஒன்றின் தன்மை
அமரரும் அறிந்தது இன்று;ஆல்.

பொ :- என்பு எனப்படுவதாகிய உடம்பு என்பதும், அவ்வுடம்பினுள் இருக்கும் உயிர் என்பதும் ஆகிய இவைகளின் தொடர்ச்சியெல்லாம், முன்பிறப்பில் செய்துவந்த அன்பின் பயனே என்று சிலர் சொல்லுவது எக்காலத்தும் பொருத்தமானதன்று ; அவ்வுடம்பும் உயிரும் தம்முடைய ஒன்றுபட்ட நிலையில் நின்றும் பிரிவதற்கு முன்பு (உயிர் உடம்போடு கூடியிருத்தற்குப் பயனுக) உண்டாதற்குரியது அன்பு) என்று சொல்வது உண்மையானது ; என்று அறிஞரால் விளக்கப்பட்டிருந்தாலும், (அதன் தன்மை முழுவதும் இதுகாறும் யா, ாலும் அறியப்படவில்லையாதலின், விடணனிடத்து இப்போது) அவ்வன்பு முழுவதும் நன்கு புலப்பட்டமையால், அன்பு என்கின்ற ஒன்றின் தன்மையைத் தேவர்களும் அறிந்துகொண்டது இன்றைக்கேயாம். ஆல்-அசை.

கு :- அன்பு பின்பு என்பது அல்லது ; எனவும், அன்பு முன்பு என்பது உளது ; எனவும் இயைத்துரைக்க. இராம இலக்குவர் விழ்ந்துகிடப்பதைக் கண்டு பெருக்கிய கண்ணீரால் வீடணனது கண்களே அவர்கள்பால் அவனுக்குண்டாகிய அன்பின் மிகுதியைப் புலப்படச் செய்துவிட்டன ஆதலின், அன்பின் தன்மை இத்தன்மையது என்பதை இதுகாறும் விளங்க அறியாதோரும் விடணனைக்கொண்டுஅறிந்துகொள்வராயினர் என அவ்வீடணனது அன்பின் மிகுதியைச் சிறப்பித்தவாறு, ''அன்போடியைந்த வழக்கென்ப வாருயிர்க்கென்போ டியைந்த தொடர்பு'' (குறள்—73) என்ற குறளைப் பின்பற்றி யெழுந்தது இச் செய்யுளாகும். இக்குறளுக்குக் கூறப்படும் இருவேறு உரைகளில் ஒன்றை மறுத்தும் ஏனையதை உடன்பட்டும் கம்பர் அன்பின் இயல்பை இதில் விளக்குகின்ருர்.

இக் குறளுக்கு மணக்குடவர், ''முற்பிறப்பின்கண் அன்போடு பொருந்தச் சென்ற செலவு என்று சொல்லுவர். பெறுதற்கரிய உயிர்க்கு இப் பிறப்பின்கண் உடம்போடு இடைவிடாத நட்பினை; என்றவாறு'' என்று பொருள் கூறியுள்ளார். இவ்வுரையின்படி, இம்மறைப்பில் பிறப்பில் உயிர் உடம்போடு கூடியிருந்தற்கு, முன்பு அன்போடு பொருந்தி வாழ்ந்த வாழ்க்கையே காரணம் என்பது புலனுகின்றது. இக் கருத்தையே ''யாக்கையென்ப துயிரென்பதிவைகளெல்லாம் பின்பு என்பது, அல்லது என்னும்'' என்று எடுத்துக் கூறி மறுத்துள்ளார் கம்பர். உயிர் முன் செய்த அன்பு காரணமாகவே இம் மனித உடம்போடு கூடியுள்ளது என்பது மறுக்கப்படுதற்குக் காரணம் என்னை? எனின், உடம்போடு இயைந்தல்லது அன்பு செய்யலாகாமையின், உயிர் உடம்போடு இயையாமுன் செய்த அன்பு காரணமாக இவ்வுயிர் உடம்புகளின் கூட்டுறவு உளதாயிற்று என்பது பொருத்தமாக இன்மையேயாம். என்னும் அல்லது என இயையும்.

இனிக் கம்பரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட கருத்து வருமாறு: 'தம்முடை நிலையிற் பேரா முன்பு என்பது உளது' என்றது, அக் குறளுக்குப் பரிமேலழகர் எழுதியுள்ள உரையின் கருத்தை ஒத்துள்ளது. ''பெறுதற்கரிய மக்களுயிர்க்கு உடம்போடு உண்டாகிய தொடர்ச்சியினை அன்போடுபெற விருந்திற்கு வந்த நெறியின் பயன் என்று சொல்லுவர் அறிந்தோர்' என்பது அவர் உரை. உடம்பும் உயிரும் ஒன்றுபட்டிருக்கும் தம் நிலையினின்றும் பிரிந்து போவதற்கு முன்பு அக் கூட்டுறவின் பயனுக உண்டாதற்குரியது எனபது கம்பர் வாக்கின் கருத்தாகும். நூலை பேறுடையதாய் அருவாய் அறிவுடையதாய் மிளிரும் உயிரும், நிலையிலதாய் உருவாய அறிவிலதாய் விளங்கும் உடம்பும் ஆகிய முரண்பட்ட இருபொருள்களும் தம்முள் கூடியிருக்கும் வியத்தகு கூட்டுறவுக்குப் பயன் அன்பு செய்தலே ஆம் என இக் கருத்து அன்பின் சிறப்பினை அறிவிப்பதாக இருந்தாலும், அன்பின் முழுத்தன்மையையும் விளக்கவில்லை ஆதலின், இதுகாறும் மக்களேயன்றி அமரரும் அன்பின் முழுத்தன்மையையும் அறியாதவராகவே இருந்தனர் என்றவாறு.

''அன்பிற்கு முண்டோ அடைக்குந் தாழ்—ஆர்வலர், புன்கணீர் பூசல்தரும்'' (குறள்-71) என்ற குறளின்படி தன்னுல் அன்பு செய்யப்பட்டாராகிய இராம இலக்குவர் துன்பங் கண்டுழி அன்பு மிக்க விடணனது கண் சொரிகின்ற துன்பக் கண்ணீரே அவன் அன்பின் அகலத்தை உணர்த்தியது என்பார், 'முழுவதும் தெரிந்தவாற்ருல்'

என்னும், நுண்ணறிவுடைய தேவர்களும் அன்பென்ப தொன்றன் தன்மையை வீடணனது கண்ணீரால் இன்றைக்கே அறியலாயினர் என்பார். "அன்பென்ப தொன்றன் தன்மை அமரரும் அறிந்தது இன்றால்" என்னும் கூறினர். அமரரும் என உயர்வு சிறப்பும்மை தொடுத்தது, அன்பின் தன்மையை யறிவதில் அமரர்க்குள்ள பயிற்சி பற்றியாகும். இவ்வுலகத்தில் இவ்வாழ்க்கைக் கண் நின்று மனைவியோடும் மக்களோடும் ஒக்கலோடுங் கூடி இன்புற்றார் தாம் செய்த வேள்வித் தொழிலால் தேவர் ஆவர் என்பது மேல்முடிபாகலின், அன்பின் தன்மை அறிவதில் சிறப்புடையர் தேவரே ஆதல் தெளிக. "அன்புற்ற மர்ந்த வழக்கென்ப வையகத்தின்புற்றார் எய்தும் சிறப்பு" (குறள்-75) என்ற குறளையும் அதற்குப் பரிமேலழகர் எழுதியுள்ள உரையையும் இங்கு நினைவுகூர்தல் தகும்.

'எனபோடியைந்த தொடர்பு' என்புழி உடம்பை 'என்பு' என்று வள்ளுவர் ஆகுபெயரால் கூறியதை விளக்கவே இங்கு என்பென்ப தியாக்கை என்பது' எனப் பொருள் விளக்கம் செய்துள்ளார் கம்பர் என்க. என்பு முதலிய ஏழு தாதுக்களால் இயன்ற உடம்பினை என்பு என்றது, கருவியாகுபெயர். அன்பின் தன்மையை இதற்கு முன்னும் அறிந்திருக்கலாம். அது, கடற்பரப்பின் அளவை முழுதுறக் காணாதவரும் கரைக்கு அருகில் உள்ள சிறுபகுதியைப் பார்த்துவிட்டுக் கடல் கண்டேம், என்பது போன்றதாகும்; இராம இலக்குவர் விழ்ந்து கிடப்பதைக்கண்டு வீடணன் உடலுக்கு உயிருருகி உளமுருகிக் கண்ணீர் வடிப்பதைப் பார்த்தபோதுதான் அன்பின் தன்மை முழுதும் அறியப்பட்டதாதலின் "முழுவதுந் தெரிந்தவாற்றால் அன்பென்ப தொன்றின் தன்மை அமரரும் அறிந்தது இன்றால்' என்றார். வீடணன் இராம இலக்குவர்பால் தனக்கிருந்த அன்பு முழுவதையும் காட்டி உடம்பு பெற்றதற்குரிய பயனை எய்திவிட்டான் என்றவாறு. (4)

## வீடணன் புலம்பாது விம்மி இராமன் மேனி கண்டு நடுக்கம் தீர்தல்

8840. ஆயினு மிவருக் கில்லை
யழிவெனு மதனா லாவி
போயின தில்லை வாயாற்
புலம்பலன் பொருமிப் பொங்கித்

**தீயினு மெரியு நெஞ்சின்**
**வெருவலாற் றெரிய நோக்கி**
**நாயகன் மேனிக் கில்லை**
**வடுவென நடுக்கந் தீர்ந்தான்.**

ஆயினும், 'இவருக்கு இல்லை
அழிவு' எனும் அதனால் ஆவி
போயினது இல்லை; வாயால்
புலம்பலன், பொருமி; பொங்கித்
தீயினும் எரியும் நெஞ்சின்
வெருவலால் தெரிய நோக்கி
'நாயகன் மேனிக்கு இல்லை
வடு' என நடுக்கம் தீர்ந்தான்.

பொ :- வீடணன் அத்தகைய பேரன்புடையவனாயினும், 'இவ் விராம இலக்குவர்க்கு அழிவு இல்லை' என்கின்ற உறுதியான நம்பிக்கை யிருந்தமையால் அவன் ஆருயிர் பிரியவில்லை, வாயால் பல சொல்லிப் புலம்பவும் இல்லை; உள்ளுக்குள்ளே பொருமிக் கொண்டு துன்பம் கிளரப் பெற்று, நெருப்பினும் மிக்குக் கொதித்து எரிகின்ற நெஞ்சின் மிக்குத் தோன்றும் அச்சத்தால், அவர்கள் உடம்பைத் தெளிவாகப் பார்த்துவிட்டு, 'தலைவனாகிய இராமன் மேனிக்கு (அம்பினாலாய) வடு ஏற்படவில்லை' என அறிந்து மன நடுக்கம் நீங்கினான்.

கு :- வீடணன் இராம இலக்குவர்பால் பேரன்புடையவனாயின் 'சாவிற் சாதல்' என்கின்ற அன்புடையார் செயலை உயிர்விடாதது ஏன் என்ற வினாவிற்கு விடை கூறுவாராய் "இவருக்கில்லை அழிவு எனும் அதனால் ஆவி போயினதில்லை" என்றார். வீடணன் உயிர் விட ஆயத்தமாக இருந்தும் இராம இலக்குவர்க்கு அழிவில்லை என்ற நம்பிக்கையால் 'ஆவி போயினதில்லை' என அவன் உயிரின் செயலாகக் கூறியுள்ள நயம் காண்க. இவருக்கு அழிவில்லை என்பது தெளிந்தவன் ஆதலின், வாயால் பல சொல்லிப் புலம்பலும் செய்யாதவனன் என்றவாறு. பொருமுதல், உள்ளுக்குள்ளே விம்முதல். பொங்கி என்றது. துன்பம் கிளரப்பெற்று என்றவாறு. பொருமி, பொங்கி, வெருவலால் தெரிய நோக்கி, 'வடுவில்லை என நடுக்கம் தீர்ந்தான்' என இயையும். இவருக்கு அழிவில்லை என்ற நம்பிக்கை யிருந்தும் இறந்திருப்பாரோ? என மனத்தின் நடுவே தோன்றும அச்சத்தால் அவர்கள் உடம்பை நன்கு நோக்கி இராமன் மேனியில-

அம்பினுலாய விடுவேதும் இன்மை தெளிந்து மன நடுக்கம் நீங்கப் பெற்ருன் விடணன் என்றவாறு இராமன் மேனியில் அம்பு தைக்கவில்லை என்பதைத் திரிசடையும் சீதைக்குக் காட்டி "அழியான் ஆக்கை தன்னில் அம்பொன்றும் அறுக்கிலாமை ஏழை நீ காண்டியன்றே" (சீதைகளங்காண்—25) என்று கூறியுள்ளாமை இங்கு நினைதல் தகும். (5)

## இராம இலக்குவர் வீழ்ந்து கிடத்திற்குக் காரணமும் தீர்வும் தேர்தல்

8841. அந்தணன் படையால் வந்த
தென்பது மாற்றல் சான்ற
இந்திர சித்தே யெய்தா
னென்பது மிளவற் காக
நொந்தன னிராம னென்னு
நுண்மையு நொய்தின் நோக்கி
சிந்தையி னெண்ணி யெண்ணித்
தீர்வதோ ருபாயந் தேர்வான்.

அந்தணன் படையால் வந்தது
என்பதும், ஆற்றல் சான்ற
இந்திர சித்தே எய்தான்
என்பதும், இளவற்கு ஆக
நொந்தனன் இராமன் என்னும்
நுண்மையும், நொய்தின் நோக்கி,
சிந்தையின் எண்ணி எண்ணி,
திர்வது ஓர் உபாயம் தேர்வான்.

பொ :- (இராம இலக்குவர் முதலோர்க்கு இத்தகைய துன்பம்) பிரமாத்திரத்தால் என்பதையும், ஆற்றல்மிக்க இந்திரசித்தை அதை எய்தான் என்பதையும்; இலக்குவனுக்காக இராமன் வருந்தி மூச்சற்றுக் கிடக்கின்ருன் என்னும் நுட்பத்தையும் விரைவில் அறிந்து கொண்டு இந்தப் பிரமாந்திரத்தால் வந்த இடர்தீர்வதற்குரிய ஓர் உபாயம் யாது? எனச் சிந்தையினுல் எண்ணி எண்ணி ஆராய் வானுனன்.

கு:- அந்தணன் என்றது பிரமனை. இராமன் மேனியில் அம்பினாலாய வடு ஏதும் இல்லாமையால், இலக்குவன் நிலை கண்டே இராமன், துன்பத்தில் மயங்கிக் கிடக்கின்றான்; என்ற நுட்பத்தை அனுமான அளவையால் விரைவில் வீடணன் அறிந்து கொண்டான் என்றவாறு. நொய்து விரைவு. தேர்தல்—ஆராய்தல். எண்ணி எண்ணி என்ற அடுக்குப் பன்முறை எண்ணியதைஉணர்த்தியது.(6)

## இராமன் மூர்ச்சையுற்றமை நினைந்து வீடணன் கண்ணீர் சொரிதல்

8842. உள்ளுறு துன்ப மூன்ற
வுற்றன வுறக்க மன்றே
தெள்ளிதி னுணர்ந்த பின்னைச்
சிந்தனை தெரிவ தன்றே
வள்ளலோ தம்பி மாய
வாழ்கிலன் மாய வாழ்க்கைக்
கள்ளனோ வென்றா னென்னா
மழையெனக் கலுழுங் கண்ணான்

'உள்ளுறு துன்பம் ஊன்ற,
உற்றனன் உறக்கம் அன்றே?
தெள்ளிதின் உணர்ந்த பின்னை,
சிந்தனை தெறிவது அன்றே;
வள்ளலோ, தம்பி மாய
வாழ்கிலன்; மாய வாழ்க்கைக்
கள்ளனோ? என்றான்; என்னா,
மழை எனக்கலுழும் கண்ணான்.

பொ :- உள்ளத்தில் பொருந்திய துன்பம் நிலையாக ஊன்றிக் கொண்டதால் இராமன் உறக்கம் (மூர்ச்சை) உற்றான் அன்றோ? அத் துன்ப உறக்கம்நீங்கித் தெளிவாக உணர்ந்தபின் அவர் சிந்தனையைத் தெரிந்து கொள்வது என்றாலோ, அது பொருத்தமுடையது அன்று; என்னை? எனின், வள்ளல் குணமுடைய இராமனோ, தன் அன்புடைத் தம்பி இறந்துவிழத் தான் வாழமாட்டான்; தன் தம்பி இறந்தபின்னும் வாழ்தற்கு இராமன் மாய வாழ்க்கையுடைய கள்வனாகிய இராவணனோ? அல்லன், என்று தனக்குள் கூறிக் கொண்டான்; அவ்வாறு சொல்லிக்கொண்டே மழைபோல் நீர் சொரியும் கண்களையுடையவனானான். (வீடணன்)

கு :- இராமன் மூர்ச்சைதெளிவான் என்பதில் நம்பிக்கை அற்றவனாய் வீடணன் கண்ணீர் விட்டுக் கலங்கினான் என்றவாறு. தம்பி மாய வாழகில்லா அன்பினன் இராமன ஆகலின், தெள்ளிதின் உணர்ந்தபின்னைச் சிந்தனை தெரிதல் பொறுந்துவதன்றாயிற்று. இராமன் தம்பிமேல் வைத்த பாசத்தை நினையும்போது அதற்கு மாறான இராவணனது அன்பற்ற நிலை நினைந்து இகழ்ந்தவாறு ஒருதம்பி உயிரோடு பிரியவும் மற்றொரு தம்பி தனக்காகப் போர் செய்து மாளவும் தான் மாளாது வாழ்வை நச்சியுள்ள இராவணன் போல இராமன் இரான் என்று அவன் அன்பொழுகச் சிறப்பித்தவாறு மாய வாழ்க்கைக் கள்ளனாயின் தம்பி மாய்ந்த பின்னும் வாழ்வான் என்றபடி. தம்பி மாய வாழ இல்லானே இராமன் என்ற ஏக்கத்தால் கண்ணீர்விட்டுக் கலங்கினான் வீடணன் என்க. கண்ணான் ஆயினன், என ஆக்கச் சொல் வருவிக்க கண்ணான், ஆக்க வினைக் குறிப்பு. (7)

8843. பாசம்போ யிற்றாற் போலப்
பதுமத்தோன் படையு மின்றே
நாசம்போ யெய்து நம்பி
தம்பிக்கு நடுக்க மில்லை
வீசும்போர்க் களத்து வீழ்ந்த
சேனையு மீளும் வெய்ய
நீசர்போர் வெல்வ துண்டோ
வென்றுள நிலையி னின்றான்.

பாசம்போய் இற்றாற் போலப்
பதுமத்தோன் படையும் இன்னே
நாசம்போய் எய்தும்; நம்பி
தம்பிக்கு நடுக்கம் இல்லை;
வீசும்போர்க் களத்து வீழ்ந்த
சேனையும் மீளும்; வெய்ய
நீசன்போர் வெல்வது உண்டோ?
என்றுஉளம் நிலையில் நின்றான்.

பொ :- நாகபாசம் அழிந்துபோனது போலப் பிரமன் கணையும் இப்பொழுதே நாசம் அடையும்; இராமன் தம்பியாகிய இலக்குவனுக்காக நடுங்கவேண்டிய நிலை இல்லை; படைகளை வீசுதற்குரிய போர்க்

களத்தில் இறந்து வீழ்ந்துள்ள சேனையும் உயிர்பெற்று மீண்டெழும்; கொடியவனாகிய அரக்கன் போரில் வெற்றிபெறுவது உளதாமோ? என்று வீடணன் மனம் தடுமாறாமல் ஒருநிலையில் நிற்கப்பெற்றான்.

கு :- பாவம் வெல்வது இயலாது; அறநெறியில் நிற்கும் இராம இலக்குவர்க்குத் தெய்வம் துணைசெய்யும்; என்ற நம்பிக்கையால் வீடணன் மனத் தடுமாற்றம் நீங்கி நின்றமை கூறியவாறு. முன்னும் நாகபாசம் இற்றுப் போதற்குத் துணைசெய்த தெய்வம், பதுமத்தோன் படையை நாசமாக்குதற்கும் துணைசெய்யும் ஆதலின், இலக்குவன் இறந்துபட்டானே என்று நடுங்குதற்குக் காரணமில்லை. சேனையும் மீளும் என்று நம்பிக்கை கொண்டான் வீடணன் என்க. இந்த நம்பிக்கைக்கெல்லாம் அடிப்படையான காரணம் 'வெய்ய நீசன் போர் வெல்வதுண்டோ?' என்ற நியதியே ஆதலின், அதனை இறுதியில் கூறினார். வெய்ய நீசன் என்றது, கொடியவனாகிய இராவணனை; இந்திரசித்து எனலும் ஆம். (8)

### இறவாதவர் யாரேனும் உளரோ என வீடணன் தேடச் செல்லுதல்

8844. உணர்ந்தவன் முன்ன மின்னே
யுற்றுழி யுதவற் கொத்த
துணைவர்க டுஞ்ச லில்லா
ருளரெனிற் றுருவித் தேடிக்
கொணர்குவென் விரைவி னென்னுக்
கொள்ளியொன் றங்கை கொண்டான்
புணரியின் குருதி வெள்ளத்
தொருதனி விரைவிற் போனான்.

'உணர்வதன் முன்னம், இன்னே
உற்றுழி உதவற்கு ஒத்த
துணைவர்கள், துஞ்சல் இல்லார்,
உளர்எனின், துருவித் தேடிக்
கொணர்குவென், விரைவின்' என்னு,
கொள்ளிஒன்று அங்கை கொண்டான்
புணரியின் குருதி வெள்ளத்து
ஒருதனி விரைவிற் போனான்.

பொ :- ''இராமன் உணர்வு வந்து எழுவதற்குமுன் இப்பொழுது துன்பம் உற்றபோது உதவுதற்குரிய துணைவர்கள் இறவாதவர்கள் உளராயின் ஆராய்ந்து தேடி அழைத்துக்கொண்டு விரைவில் வருவேன்'' என்று விடணன் கொள்ளிக் கட்டை ஒன்றை அகங்கையில் எடுத்துக்கொண்டு கடல்போன்ற இரத்த வெள்ளத்தில் தனி ஒருவனாக விரைந்து போனான்.

கு :- மூர்ச்சையுற்று வீழ்ந்துகிடக்கும் இராமன் உணர்வுவந்து எழுங்காறும் அவன் பக்கல் வாளா இருப்பதினும் உற்றுழி உதவும் நண்பர்களில் இறவாதவர் யாரேனும் உளரோ எனத் தேடிக் கொணர்தல் நல்லது என விடணன் இருளில் வழிதெரியக் கையில் கொள்ளி ஒன்று ஏந்திக்கொண்டு விரைந்து போனான் என்றவாறு. குருதி வெள்ளத்தின் மிகுதி புலப்படக் கடலை உவமை கூறியவாறு. அகங்கை என்பதில் இடையில் உள்ள எழுத்துக் கெட்டது. அகங்கை-உள்ளங் கை. 'அகமுனர்ச் செவி கைவரின் இடையன கெடும்' (நன்னூல்-221) என்பது விதி. (9)

## விடணன் அனுமன் வீழ்ந்துகிடப்பதைக் காணுதல்

8845. வாய்மடித் திரண்டு கையு
முறுக்கித்தன் வயிரச் செங்கண்
தீயுகக் கனகக் குன்றிற்
றிரண்டதோண் மழையைத் தீண்ட
ஆயிர கோடி யானைப்
பெரும்பிணத் தமளி மேலான்
காய்சினத் தனும னென்னுங்
கடல்கடந் தானைக் கண்டான்.

வாய்மடித்து, இரண்டு கையும்
முறுக்கி,தன் வயிரச் செங்கண்
தீஉக, கனகக் குன்றின்
திரண்டதோள் மழையைத் தீண்ட
ஆயிர கோடி யானைப்
பெரும்பிணத்து அமளி மேலான்,
காய்சினத்து அனுமன் என்னும்
கடல் கடந்தானைக் கண்டான்.

பொ :- தன் வாயை மடித்துக்கொண்டும், சிவந்த கண்களில் கோபக் கனல் சிந்தா நிற்கவும், பொன்னாலாய மேருமலை போன்ற திரண்ட தோள்கள் மேகத்தைத் தொடா நிற்கவும், ஆயிரங்கோடி யானைகளின்மிக்க பிணங்களாகிய படுக்கைமேல் கிடப்பவனாகிய கொல்லும் கோபத்தையுடைய அனுமன் என்கின்ற கடல்கடந்த வீரனைக் கண்டான்.

கு :- நாகபாசத்தால் கட்டுண்ட வருத்தமும் இந்திரசித்தின் மேல் எழுந்த கோபமும் புலப்பட அனுமன் யானைப் பிணங்களின் மேல் கிடந்தான் என்றவாறு. வாய் மடித்தலும் செங்கண் தீயுகக் கிடத்தலும் கோபக் குறிப்பால் நிகழ்ந்தவை. இரண்டு கையும் முறுக்கியிருத்தல் நாகபாசத்தால் கட்டுண்ட வருத்தநிலையை யுணர்த்தும். வயிரத்தீ என இயையும். வயிரம்-கோபம். கனகக் குன்று என்றது மேருமலையை; அது நிறத்தாலும் வடிவாலும் அனுமன் தோள்களுக்கு உவமையாயது. மழை-மேகம். தோள் மேகத்தைத் தீண்ட என்றது அனுமனது தோளின் உயர்ச்சியைப் புலப்படுத்த என்க. 'ஆயிரங்கோடி யானைப் பெரும்பிணம் என்றது உயர்வு நவிற்சி. பிணத்தமளி என்புழி அத்து அல்வழிச் சாரியை. கடல் கடந்த ஆற்றலையுடைய அனுமன், நாகபாசத்தின் பிணிப்பைக் கடக்கவியலாது கிடக்கின்றானே என்ற இரக்கம் தோன்றக் 'கடல்கடந்தானைக் கண்டான்' என்றார். மேலானாகிய அனுமன் என்னும் கடல் கடந்தானைக் கண்டான் என்க. கடல்கடந்த ஆற்றலுடைமையின் இந் நாகபாசத்தாலாய துன்பக் கடலையும் கடத்தற்குரியவனே என்ற குறிப்பும் தோன்றும். (10)

## வீடணன் அனுமனுடம்பிலுள்ள அம்புகளை நீக்கி முகத்தை நீரால் குளிர்வித்தல்

8846. கண்டுதன் கண்க ளூடு
மழையெனக் கலுழி வார
உண்டுயி ரென்ப துன்னி
யுடற்கணை யொன்றொன் றாக
விண்டநீர்ப் புண்ணி னின்று
மெல்லென வாங்கிக் கையால்
கொண்டனீர் முகந்து கொண்டு
முகத்தினைக் குளிரச் செய்தான்.

கண்டு, தன்கண்களுடு மழை
எனக் கலுழி வார
'உண்டுஉயிர்' என்பது உன்னி,
உடற்கணை ஒன்றுஒன்று ஆக,
விண்டநீர்ப் புண்ணின் நின்று
மெல்லென வாங்கிக் கையால்
கொண்டர் நீர்முகந்து கொண்டு
முகத்தினைக் குளிரச் செய்தான்.

பொ :- வீடணன் அவ்வாறு கண்டு அனுமன்தன் கண்களில் மழைபோலக் கண்ணீர் பெருகுதலால் 'உயிர் உண்டு' என்பதை நினைந்து அவன் உடம்பில் தைந்துள்ள அம்புகளை ஒன்று ஒன்றாக,-குருதி வெளிப்படுகின்ற புண்ணின் நின்றும், மெல்ல வாங்கிவிட்டுத் தன் கையினால் மேகத்தில் உள்ள நீர்முகந்துகொண்டு தெளித்து அவன் முகத்தினைக் குளிரச்செய்தான்.

கு :- அனுமன்தன் கண்களுடு என்க. கலுழி என்றது துன்பக் கண்ணீரை ; அதன் மிகுதி புலப்பட 'மழையெனக் கலுழி வார' என்று உவமை கூறினார். 'வார' என்ற செயவெனெச்சம் காரணப் பொருளது. கண்ணீர் வார்தலால் 'உண்டுயிர்' என்பதுன்னி என்க. உயிர் நீங்கியிருப்பின் கண்ணீர் வார்தல் கூடாமையின், அனுமன் கண்ணீர் வார்தல் அவன் உயிர் உண்டு என்று உன்னுவதற்கு ஏதுவாயிற்று என்க. அனுமனுடைய கண்ணீர்க்குக் காரணம் அம்புகள் தைத்த துன்பமே என்பதறிந்த வீடணன் அனுமனுடைய உடம்பில் தைத்திருந்த அம்புகளை ஒவ்வொன்றாக மெல்ல வாங்கிவிட்டு மேகத்தில் உள்ள குளிர்ந்த நீரைக் கையால் முகந்து வந்து அவன் முகத்தில் தெளித்துக் குளிர்வித்தான் என்க. வீடணன் வடிவம் மேகத்தில் நீர் முகக்கத்தக்க உயர்வுடையதாக இருந்தது என்றோ, விண்ணில் விரைந்துசென்று மேகத்தில் உள்ள நீரைக் கொண்டு வந்தான் என்றோ கொள்ளலாம். விண்ட நீர்ப்புண் என்றது குருதி நீரை வெளிப்படுத்திய புண் என்றவாறு. நீர் விண்ட புண் என மாற்றுக. (11)

### அனுமன் விழித்து இராம நாமத்தைச் சொல்லி வாழ்த்துதல்

8847. உயிர்ப்புமுன் னுதித்த பின்ன
ருரோமங்கள் சிலிர்ப்ப வூறி
வியர்ப்புள தாகக் கண்கள்
விழித்தன மேனி மெல்லப்

பெயர்த்துவாய் புனல்வந் தூற
விக்கலும் பிறந்த தாக
அயர்த்தில னிராம னாமம்
வாழ்த்தின னமர ரார்த்தார்.

உயிர்ப்பு முன்உதித்த, பின்னர்,
உரோமங்கள் சிலிர்ப்ப, ஊறி
வியர்ப்பு உளதாக, கண்கள்
விழித்தன, மேனி மெல்லப்
பெயர்த்து, வாய்புனல் வந்துஊற,
விக்கலும் பிறந்த தாக,
அயர்த்திலன் இராமன் நாமம்,
வாழ்த்தினன்; அமரர் ஆர்த்தார்.

பொ :- (முகங் குளிர்ந்ததும்) முன்பு உயிர்ப்புகள் தோன்றின. பின்பு, மயிர்க் கூச்செறிய, சுரந்துகொண்டு வியர்வை உண்டாக, கண்கள் விழித்தன; அப்போது தன் உடம்பை மெல்ல அசைத்து, வாயில் நீர்வந்து ஊற, விக்கலும் தோன்றியதாக, (அனுமன்) இராமன் நாமத்தை மறவாதவனாய்ச் சொல்லி வாழ்த்தினான்; அது கண்டு தேவர்கள் ஆரவாரித்தனர்.

கு :- 'உதித்த' என்பது அகரவீற்று முற்று. மூக்கின் இரு துளைகளிலும் இடகலை, பிங்கலை என்ற உயிர்ப்புகள் உதித்தமை தோன்ற உதித்தன எனப் பன்மையாற் கூறினார். உயிர்ப்பு என்றது மூச்சுக் காற்றினை. "என்னுளே உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு என்னுளே நிற்கு மின்னம் பரிசனே" (திருநாவுக்கரசர் தேவா- 5-21-1) என்புழி உயிர்ப்பின் இயல்பு விளக்கப்பட்டிருத்தல் காணலாம். மூர்ச்சையுற்றவர் உணர்வுபெறுங்கால் உண்டாகும் மெய்ப்பாடுகள் இங்கு நன்கு விளக்கபபட்டிருத்தல் காணலாம். ஊறுதல்-சுரத்தல். உயிர்ப்பு வந்தவுடன் உரோமம் சிலிர்த்தலும் உடல் வியர்த்தலும் கண் விழித்தலும் உடம்பை அசைத்தலும் நாவில் நீர் ஊறுதலும் விக்கல் தோன்றுதலும் முறையே நிகழும் என்க. அனுமன் அயன் கணையால் உணர்வற்று விழும்போது கூறிய இராம நாமம் அவன் உயிர்த்து எழும்போதும் நினைவிற்கு வருதல் இயல்பாதலின், 'அயர்த்திலன் இராமன் நாமம் வாழ்த்தினன்' என்றார். 'இராமன் வாழ்க' என்று சொல்லி அனுமன் வாழ்த்தியதைக் கண்ட அமரர், அனுமன் உய்ந்தான் என்ற மகிழ்ச்சியால் ஆரவாரித்தனர் என்க. அயர்த்திலன் முற்றெச்சம்; அயர்த்திலனாய் வாழ்த்தினன் என இயையும். (12)

## அனுமன் இராமனைப்பற்றி உசாவி அறிதல்

8848. அழுகையோ டுவகை யுற்ற
வீடண னார் வங் கூரத்
தழுவின னவனைத் தானு
மன்பொடு தழுவித் தக்கோய்
வழுவில னன்றே வள்ள
லென்றனன் வலிய னென்றான்
தொழுதன னுலக மூன்றுந்
தலையின்மேற் கொள்ளுந் தூயான்.

அழுகையோடு உவகை உற்ற
வீடணன் ஆர்வம் கூர,
தழுவினன் அவனை, தானும்
அன்பொடு தழுவி, 'தக்கோய்!
வழுஇலன் அன்றே, வள்ளல்?'
என்றனன்; 'வலியன்' என்றான்;
தொழுதனன், உலகம் மூன்றும்
தலையின்மேல் கொள்ளும் தூயான்.

பொ:- அழுகையோடு மகிழ்ச்சியும் அடைந்த வீடணன் அவ்வனுமனை ஆர்வம் பொங்கத்தழுவினான்; அனுமன்தானும் வீடணனை அன்போடு தழுவி; 'தகுதியுடையோனே! வள்ளலாகிய இராமன் தீங்கில்லாது உளன் அன்றே' என்று வினவினான்; (வீடணனும்) 'வழுவின்றி வலியனாக உளன்' என்று விடை கூறினான்; (அதுகேட்டு மகிழ்ச்சி மிக்கு) மூவுலகத்தோரும் தலையின்மேற் கொண்டு போற்றத்தக்க தூய்மையுடைய அனுமன் திசைநோக்கித் தொழுதான்.

கு:- இலக்குவன் முதலிய பலரும் இறந்துகிடப்பதால் அழுகையும், ஆற்றல்மிக்க அனுமன் உயிரோடிருப்பது அறிந்தமையால் உவகையும் வீடணனுக்கு உண்டாயின என்க. உவகையும் அழுகையும் முரண்பட்ட மெய்ப்பாடுகள். ஆயினும் பெரிய துன்பத்தில் சிறிது மகிழ்ச்சியடைந்தான் வீடணன் என்க. பலரை இழந்த அழுகை பெரிதாதலும் அனுமன் ஒருவனை உயிருடன் கண்ட உவகை அவ் வழுகையினுஞ் சிறிதாதலும் தோன்ற, உயர்பின் வழித்தாய ஒடுக்கொடுத்துள்ளமை ஓர்க. பொய் கூறாது நடுவு நின்று வாய்மைகூறத்தக்கவன் வீடணன் என்ற

கருத்துப் புலப்பட 'தக்கோய்' என்று அவனை அனுமன் விளித்தான். தன்க்கு நேர்ந்தாற்போன்ற துன்பம் இராமனுக்கும் நேர்ந்ததோ என்ற ஐயத்தால் 'வழுவிலனன்றே வள்ளல் ?' என்று அனுமன் வினவலானான். விடணனும் இராமன் உயிர்க்குத் தீங்கொன்றும் இல்லை என்ற கருத்துப் புலப்பட 'வலியன்' என்று ஒரு சொல்லால் விடை கூறினான். தக்கோனாகிய விடணனால் வலியன் என்று கூறப்பட்ட இராமனை நினைந்து அவனிருந்த பக்கம் நோக்கித் தொழுதான் அனுமன் என்றவாறு. உலக மூன்றும் தலையின்மேற் கொள்ளத்தக்க பெருமையை அனுமன் இராம வணக்கம் ஒன்றினாலே பெற்றான் என்ற குறிப்பும் இறுதியடியால் புலப்படுதல் காணலாம். (13)

## இராமனது துன்பத்துயிலை உணர்ந்த அனுமன், சாம்பன் எங்குளன் என்றல்

8849. அன்புதன் றம்பி மேல
தறிவினை மயக்க வையன்
துன்பொடுந் துயில னானா
னுணர்வினித் தொடர்ந்த பின்னை
என்புகுந் தெய்து மென்ப
தறிகில மென்ற லோடும்
தன்பெருந் தன்மைக் கொத்த
சாம்ப னெத்தலைய னென்றான்.

'அன்பு தன்தம்பி மேலது
அறிவினை மயக்க ஐயன்
துன்பொடும் துயிலன் ஆனான் ;
உணர்வுஇனித் தொடர்ந்த பின்னை
என்புகுந்து எய்தும் என்பது
அறிகிலம் !' என்ற லோடும்,
'தன்பெருந் தன்மைக்கு ஒத்த
சாம்பன் எத்தலையன் ?' என்றான்.

பொ :- ,தன் தம்பி மேலதாகிய அன்பு தன் அறிவினை மயக்கியதால் இராமன் துன்பத்தோடு கலந்த துயிலுடையவனாக (மூர்ச்சித்தவனாக) ஆனான் ; 'இனி அவனுக்கு உணர்வு வந்தபின் என்ன நிகழும் என்பதை அறியோம்' என்று வீடணன் கூறியவுடன், (அனு

மன் வீடணனை நோக்கி) 'தன் பெருந்தன்மைக் கொத்த (மூப்பினை உடைய) சாம்பன் எவ்விடத்து உள்ளான்) என்று வினவினான்.

கு :- தம்பி மேலதாகிய அன்பு என்க. இராமன் உணர்வற்றுக் கிடப்பதற்குக் காரணம் தன் தம்பிமேல் வைத்த அன்பே என்பது இங்குப் புலப்படுத்தியவாறு. துன்பொருந் துயிலலாவது, துன்பத்தால் மூர்ச்சையுறுதல். சாம்பன் முதுமைக்கேற்ற பண்பு முதிர்ச்சியுடையவன் என்ற கருத்தால் 'தன் பெரும் தன்மைக் கொத்த சாம்பன்' என்று அனுமன் கூறினான். இனி, தன் பெருந் தன்மைக் கொத்த என்பதைக் கவிக்கூற்றாகக் கொண்டு 'சாம்பன் எத்தலையன் ?' என்பதே அனுமன் வினா எனக் கொள்ளலும் ஆம். அனுமன் தன் பெருமைக்கேற்ற தகுதியுடைய சாம்பன் என்றவாறு. அனுமன் வலிமையை உள்ளவாறறிந்து கடலைத்தாண்டச் செய்தவன் சாம்பனேயாதல் நினைக. இனி, தன் பெருந்தன்மைக்குப் பிறர் உவமமாகவியலாமையால் தானே உவமமாகும் சாம்பன் என அவன் தனக்குவமை யில்லாச் சால்பினை யுணர்த்தியதாகவும் கொள்ளலாம். (14)

## சாம்பனைத் தேடலாம் என அனுமன் கூறல்

8850. அறிந்திலெ னவனை யாண்டுங்
கண்டிலெ னாவி யாக்கை
பிறிந்தில னுளனென் றொன் றுந்
தெரிந்திலென் பெயர்ந்தே னென்று
செறிந்ததார் நிருதர் வேந்த
னுரைசெயக் காலின் செம்மல்
இறுந்திற மவனுக் கின்றா
னாடுது மேகி யென்றான்.

'அறிந்திலென் அவனை; யாண்டும்
கண்டிலென் "ஆவி யாக்கை
பிறிந்துஇலன், உளன்" என்று ஒன்றும்
தெரிந்திலென், பெயர்ந்தேன்' என்று
செறிந்ததார் நிருதர் வேந்தன்
உரைசெய, காலின் செம்மல்,
'இறும்திறம் அவனுக்கு இல்லை;
நாடுதும், ஏகி' என்றான்.

பொ :- அச் சாம்பனை எவ்விடத்தும் கண்டிலேன் ஆதலால், அவனைப்பற்றி ஒன்றும் அறிந்திலேன்; அவன் உயிர் உடம்பிலிருந்து பிரிய, இவன் ஆயினுனு? அல்லது உயிர் பிரியாது இருக்கின்ருனு ? என்று ஒன்றும் தெரியாதவனுய் வந்திருக்கின்றேன், என்று நெருங்கிய மலர்மாலையையணிந்த அரக்கர் வேந்தனுகிய வீடணன் சொல்ல, காற்றின் புதல்வனுகிய அனுமன், 'இறக்கும் தன்மை அவனுக்கு இல்லை. ஆதலால், நாம் சென்று அவனைத் தேடுவோம்' என்று கூறினுன்.

கு:- இலன் ஆயினுன் என ஆக்கச்சொல் வருவிக்க; இலன் என்பது ஆக்கவினைக் குறிப்பு; ஆக்கம் விகாரத்தால் தொக்கது. இலன் உளன் என்ற முரண்தொடை காண்க. இலனு? உளனு? என வினு ஆகாரம் வருவிக்க. சாம்பன் என்றும் இறவாத வரம்பெற்றவன் என்பதை அறிதற்குரிய வாய்ப்பு இல்லாதவன் வீடணன் என்பது புலப்பட 'நிருதர் வேந்தன்' என அவனைக் கூறியதும், அதை அறிதற்குரிய தகுதிமிக்கவன் அனுமன் என்பது புலப்படக் 'காலின் செம்மல்' என அவனைக் கூறியதும் காண்க. எவ்விடத்தும் இயங்கி யாவற்றையும் அறியும் ஆற்றலுடைய காற்றின் புதல்வன் அனுமன் ஆதலின், எல்லாம் அறிதற்குரியனுதல் பெறப்படும். அரக்கர்க்கு அந்த நிலை இன்மை தெளிவு. இன்ருல் என்புழி ஆல், ஆதலால் என்னும் பொருளது. பிறிந்து என்ற வினையெச்சம் காரணப் பொருளது. பிரிதல், எதுகை நோக்கிப் பிறிதல் ஆயது. (15)

### அனுமன் வீடணனேடு சென்று சாம்பனைச் சார்தல்

8851. அன்னவன் றன்னைக் கண்டா
லாணையே யரக்கர்க் கெல்லாம்
மன்னவ நம்மை யீண்டு
வாழ்விக்கு முபாயம் வல்லான்
என்னலு முய்ந்தோ மைய
வேகுதும் விரைவி னென்ருன்
சின்னெறி யிருளிற் சென்ருர்
சாம்பனை விரைவிற் சேர்ந்தார்.

'அன்னவன் தன்னைக் கண்டால்
ஆணையே, அரக்கர்க்கு எல்லாம்
மன்னவ! நம்மை ஈண்டு
வாழ்விக்கும்; உபாயம் வல்லான்'

என்னலும், 'உய்ந்தோம், ஐய!
எகுதும்.விரைவின்' என்ருன்,
சில்நெறி இருளில் சென்ருர்,
சாம்பனை விரைவில் சேர்ந்தார்.

பொ : அரக்கர்க்கு எல்லாம் அரசனே! அந்தச் சாம்பனைக் கண்டால் (அவன்) உபாயம் வல்லான் ஆதலின், சத்தியமாக நம்மை இப்போது வாழ்விப்பான் என்று அனுமன் சொல்லுதலும், (வீடணன்) 'ஐய! வாழ்ந்தோம்; விரைவாகச் செல்வோம்' என்ருன்; (இருவரும்) சிறிது தொலைவு இருளில் சென்ருர்கள்; விரைவில் சாம்பனை அடைந்தார்கள்.

கு :- ஆணை; என்பது சத்தியம் என்ற பொருளில் வந்தது. அன்னவன் தன்னைக் கண்டால், உபாயம் வல்லான் (ஆதலின் நம்மை வாழ்விக்கும் என ஒருசொல் வருவிக்க. கண்டால் வாழ்விக்கும் என இயையும். உபாயம் கூறுவதில் வல்லவன் சாம்பன் ஆதலின், இப்போது அவனைக் கண்டால் இத் துன்பம் தீரும் உபாயம் கூறி நம்மை வாழ்விப்பான் என்றவாறு. மேல் 'இறும்திறம் அவனுக்கு இல்லை' என்று சாம்பன் உயிரோடு இருப்பான் என்பதை உறுதிப் படுத்திய அனுமன், 'இங்கும் அன்னவன் தன்னைக் கண்டால் அவனையே வாழ்விக்கும்' அறுதியிட்டுக் கூறியதனுல், வீடணன் 'உய்ந் தேம் ஐய' எனத் தெளிவுபற்றி இறந்தகாலத்தாற் கூறினுன்; காலவ ழுவமைதி. சிறிதாய வழி என்பதை இங்குச் சின்னெறி என்ருர், குடத்தினும் பிற கலத்தினும் உள்ள நீரைச் சிறிது என்னுது சில என்ருற்போல. சாம்பனைக் காண நெடுந் தொலைவு சென்று தேடி அலையவில்லை; சிறிது தொலைவிலேயே அவனைக் கண்டுகொண்டார் கள் என்றவாறு.

அவர் வருகையைச் சாம்பன் செவிவாயிலாக அறிதல்

8852. எரிகின்ற மூப்பி னுலு
மேவுண்ட நோவி னுலும்
அரிகின்ற துன்பத் தாலு
மாருயிர் படங்கி யொன்றும்
தெரிகின்ற தில்லா மம்மர்ச்
சிந்தைய னெனினும் வீரர்
வருகின்ற சுவட்டை யோர்ந்தான்
செவிகளால் வயிரத் தோளான்.

எரிகின்ற மூப்பி னாலும்,
ஏவுண்ட நோவி னாலும்,
அரிகின்ற துன்பத் தாலும்,
ஆர்உயிர்ப்பு அடங்கி, ஒன்றும்
தெரிகின்றது இல்லா மம்மர்ச்
சிந்தையன் எனினும், வீரர்
வருகின்ற சுவட்டை ஓர்ந்தான்,
செவிகளால்—வயிரத் தோளான்.

பொ :- (வாழ்வையே வெறுத்து) மனம் வருந்துதற்குக் காரணமான மூப்பினாலும், (அதற்குமேல் உடம்பெல்லாம்) அம்புகள் பொத்திய நோவினாலும் (நண்பர்கள் எல்லாம் இறக்க நேர்ந்ததே என்று எண்ணுவதால், நெஞ்சைப் பிளக்கின்ற துன்பவுணர்வினாலும் அரிய உயிர்ப்பு அடங்கப்பெற்று ஒன்றும் தெரியவியலாத மயக்கமிக்க சிந்தையுடையவனாக இருந்தான் என்றாலும், வயிரமலை போன்ற தோள்களையுடைய சாம்பன், வீரர் இருவர் வருகின்ற அடையாளத்தைச் செவிகளால் ஓர்த்து அறிந்தான்.

கு :- எரிதல்-வருந்துதல். மூப்பின் இயல்பு புலப்பட 'எரிகின்ற மூப்பு' என்றார். அதனால் உளதாகும் துன்பம் பொறுக்கமுடியாமையால் வாழ்வையே வெறுத்து வருந்துதற்குக் காரணமானது மூப்பு என்றவாறு. ''வாழு நாளோடு யாண்டு பல வுண்மையின், தீர்தல் செல்லாதென் னுயிரெனப் பலபுலந்து, கோல்காலாகக் குறும்பல வொதுங்கி, நூல் விரிந்தனன் கதுப்பினள் கண் துயின்று முன்றிற் போகா முதிர்வினள் யாயும்'' (புறநா—159) என மூப்பின் இயல்பைப் பெருஞ்சித்திரனார் விளக்கியிருத்தல் இங்கு நினையலாம். உடம்பின் முதிர்ச்சியினால் இயல்பாக உளதாய துன்பமும், இந்திரசித்தின் அம்பு தைத்ததால் உண்டான துன்பமும், தன்னைச் சார்ந்தோர்க்கு வந்த இறப்பைஎண்ணிக் கலங்கும் துன்பமும் ஆகிய மூவகைத் துன்பங்கட்கும் இடனாகச் சாம்பவன் மயங்கிக் கண் திறக்கவியலாது வருந்திக்கிடக்கின்றானாயினும் அவ்விருவர் வருகின்ற ஒலியைச் செவிகளால் நுண்ணிதின் உணர்ந்தான் என்றவாறு. சுவடு- அடையாளம். ஓர்தல்-நுனித்தறிதல். (17)

### வருபவர் யார் எனச் சாம்பன் கருதுதல்

8853. அரக்கனோ வென்னை யாளு
மண்ணலோ வனுமன் றானோ
இரக்கமுற் றருள வந்த
தேவரோ முனிவ ரேயோ

வரக்கட வார்க ளல்லர்
மாற்றலர் மலைந்து போனர்
புரக்கவுள் ளாரே யென்னக்
கருதினன் பொரும ரீர்ந்தான்.

'அரக்கனோ? என்னை ஆளும்
அண்ணலோ? அனுமன் தானோ?
இரக்கம்உற்று அருள வந்த
தேவரோ? முனிவ ரேயோ?
வரக்கட வார்கள் அல்லர்
மாற்றலார் மலைந்து போனர்;
புரக்க உள்ளாரே!' எண்ணக்
கருதினன், பொருமல் தீர்ந்தான்.

பொ :- (வருபவன்) விடணனாகிய அரக்கனோ? அல்லது, என்னை ஆட்கொள்ளும் பெருமையுடைய இராமனோ? அல்லது அனுமன்தானோ? அல்லது என்மேல் இரக்கம்கொண்டு (இத் துன்பம் நீக்கி) அருள வந்த தேவரோ? அல்லது, முனிவர்தாமோ? பகைவர்கள் போர்செய்து வென்று போனர் ஆதலின், அவர்கள் இவ் விரவில் வரத்தக்கவர்கள் அல்லர்; எனவே, இப்போது வருபவர் எம்மைக் காப்பாற்றும் தன்மையுள்ள அன்பரே ஆவர்' என்ன நினைந்து துணிந்தவனாய்த் துன்பம் தீர்ந்திருந்தான்.

கு :- சாம்பன்; தன்னைச் சார்ந்தவர்களில் பிரமாத்திரத்தால் உயிர் நீங்காதிருத்தற்குரியவர் விடணன், இராமன், அனுமன் என்ற மூவரே எனத் தெரிந்துளான் ஆதலின், அவர்களையே முன்னர் எண்ணலானன். தெரிந்த பொருளில் ஐயந்திர, அரக்கனோ? அண்ணலோ? அனுமன்தானோ? எனத் தனக்குள் ஐயுற்று வினவிக்கொண்டான். வருவோர் இம் மூவரும் இல்லை எனின், இரக்கங்கொண்டு அருள வந்த தேவராகவோ அல்லது முனிவராகவோ இருக்கலாம் என்பது சாம்பவன் துணிபு. வருபவர் அரக்கராக இருந்தல்கூடாதோ எனின்? அவர்கள் போர்செய்து வெற்றிப்பெற்றுப் போனர் ஆதலின் வெற்றிக்கொண்டாட்டத்தில் மகிழ்வதை விடுத்து இரவில் இங்கு வாரார்; எனவே, இங்கு வருபவர் நம்மைக் காப்பாற்ற வருபவரே ஆவர்; என்று துணிந்தனன் ஆதலின், பொருமல் தீர்ந்தான் ஆனன் என்க. பொருமல்- உள்ளுக்குள்ளே தேம்பி வருந்துதல். இரக்கமுற்று அருள வந்த முனிவரோ எனப் பின்னும் இயையும். (18)

## 'உய்ந்தனம்' என்ற குரல்கேட்டு வீடணன் என்று சாம்பன் அறிதல்

8854. வந்தய னின்று குன்றின்
வார்ந்துவீ ழருவி மானச்
சிந்திய கண்ணி ணீர
ரேங்குவார் தம்மைத் தேற்றி
அந்தமில் குணத்தீர் யாவி
ரணுகினி ரென்ருு னைய
உய்ந்தன முய்ந்தே மென்ற
வீடண னுரையைக் கேட்டான்.

வந்துஅயல் நின்று, குன்றின்
வார்ந்துவீழ் அருவி மானச்
சிந்திய கண்ணின் நீரர்
ஏங்குவார் தம்மைத் தேற்றி,
'அந்தம்இல் குணத்தீர் யாவிர்,
அணுகினிர்?' என்ருன்; 'ஐய!
உய்ந்தனம்! உய்ந்தோம்!' என்ற
வீடணன் உரையைக் கேட்டான்.

பொ :- வந்து தன்பக்கத்தில் நின்றுகொண்டு, குன்றிலிருந்து பெருகி வீழ்கின்ற அருவிபோலச் சிந்திய கண்ணீரையுடையவராய் ஏங்குகின்றவர்களைத் தேற்றி, முடிவிலாத குணத்தையுடையவர்களே! என்னை அணுகிய நீவிர் யாவிர்? என்று சாம்பன் வினவினனுய் 'ஐய' வாழ்ந்தோம், வாழ்ந்தோம் என்ற வீடணன் சொல்லைக் கேள்வியுற்ருன்.

கு :- குன்று போன்ற தம் உடம்பில் அருவிபோலக் கண்ணீரைப் பெருகிக்கொண்டு வீடணனும் அனுமனும் ஏங்கினர் என்க. அவர் தேம்பும் ஒலியால் அவர் வருத்தத்தை உணர்ந்தான் சாம்பன் ஆதலின், அவர்களைத் தேற்றுவானுனுன். தன் துன்பங் கண்டு ஏங்குகின்றவர்கள் நிரம்பிய குணத்தினரே ஆதல் வேண்டும். என்ற நம்பிக்கையால் அந்தமில் குணத்தீர்! என அவரை விளித்தான். உய்ந்தனம் உய்ந்தேம் என்ற குரல் ஒலியால் இது வீடணன் சொல் என்பதைச் சாம்பன் உணர்ந்தான் என்பார், 'வீடணனுரையைக் கேட்டான், என்ருர். கண்ணீர்விட்டு ஏங்கினராயினும் அவர் இன்னுர் என அறிந்துகொள்ள இயலாமையின், பொதுவகையால் அந்தமில் குணத்தீர் என விளிக்க வேண்டியவனுனுன். (19)

8855. மற்றய னின்ருன் யாவ
னென்ன மாருதியும் வாழி
கொற்றவ வனும னின்றேன்
றெழு தன னென்று கூற
இற்றில மைய வெல்லே
மெழுந்தன மெழுந்தே மென்ஞ
உற்றபே ருவகை யாலே
யோங்கிஞ னூற்ற முற்ருன்.

'மற்றுஅயல் நின்ருன் யாவன் ?'
என்ன, மாருதியும், வாழி!
கொற்றவ! அனுமன் நின்றேன்;
தொழுதனென்' என்று கூற
இற்றிலம், ஐய, எல்லேம்
எழுந்தனம், எழுந்தேம்!' என்ஞ,
உற்றபேர் உவகை யாலே,
ஓங்கிஞன், ஊற்றம் மிக்கான்.

பொ:- (சாம்பன்) 'நினக்கு அருகில் நின்றவன் யாவன்?' என்று வினவ, அனுமனும், 'வெற்றியுடையவனே! வாழ்க! (விடணன் அருகில்) அனுமன் நிற்கின்றேன்; தொழுதேன், என்று சொல்ல, (சாம்பன்) "ஐய! நாம் இறந்துபட்டிலம்; எல்லேமும் உயிர்பெற்று எழுந்தோம்! எழுந்தோம்!" என்று கூறிக்கொண்டு உள்ளத்தில்உற்ற மகிழ்ச்சியாலே வலிமைமிக்கவனுய்ப் பூரித்தான்.

கு:- மற்று, அசைநிலை; பிறிது எனும் பொருளது எனலும் ஆம். அனுமன் இருந்தால் அவன் துணையால் எல்லோரும் உயிர் பெறலாம் என்ற துணிவால் 'இற்றிலம்' எனவும், எல்லேம் எழுந் தனம் எனவும் சாம்பன் கூறலாஞன். ஊற்றம்—வலிமை. ஓங் குதல். உடம்பு பூரித்தல். மேருமலையில் உள்ள மருந்தினை அனு மான் கொணர்ந்தால் எல்லோரும் உயிர்பெற்றெழுவர் என்று சிந் தித்துக் கொண்டிருந்த சாம்பனை நோக்கி, 'வாழி கொற்றவ!' என்று அனுமன் வாழ்த்துக் கூறியதனுல் சாம்பன் எண்ணம் வெற்றிபெறுவது திண்ணம் என்ற குறிப்பும் தோன்றுதல் காண லாம். கொற்றம்—வெற்றி. மூப்பினுலும் அம்புபட்ட புண்ணினுலும் கண்திறந்து பார்க்கவியலாத நிலையில் சாம்பன் இருந்தாஞகலின் இருவர் வந்துளர் என்ற குறிப்புமட்டும்;புலப்பட்டு மற்ருருவர் யார்? என்று.தெரியாமலிருந்தமையால் 'மற்றயனின்ருன் யாவன்?' என்று வினவிஞன். (20)

## இராமன் நிலையைச் சாம்பன் வினவியறிதல்

3856. விரிஞ்சன்வெம் படையென் ருலும்
வேதத்தின் வேத மன்ன
அரிந்தமன் றன்னை யொன்று
மாற்றில தென்னு மாற்றம்
தெரிந்தனென் முன்னே யன்னுன்
செய்ததென் றெரித்தி யென்ருன்
பெருந்தகை துன்ப வெள்ளத்
துயிலுளான் பெரும வென்ருன்.

'விரிஞ்சன் வெம்படை என்ருலும்,
வேகத்தின் வேதம் அன்ன
அரிந்தமன் தன்னை ஒன்றும்
ஆற்றிலது என்னும் ஆற்றல்
தெரிந்தனென்; முன்னே, அன்னுன்
செய்தது என் ? தெரித்தி' என்ருன்;
'பெருந்தகை துன்ப வெள்ளத்
துயில்உளான், பெரும !' என்ருன்.

பொ :- 'பிரமனுடைய கொடிய அம்பு ஆயினும் வேதத்திற்கும் மேலான வேதம் போன்றவனுகிய - பகைவரை அழிக்கவல்ல -இராமனை ஒன்றும் செய்யாது என்பதற்குரிய அவனுடைய ஆற்றலை முன்னமே தெரிந்திருக்கின்றேன்; அவன் செய்த செயல் என்ன ? தெரிவிப்பாயாக!' எனச் சாம்பன் வினவினுன், (அனுமன்) 'பெருமானே! பெருந்தகையாகிய இராமன் துன்ப வெள்ளத்தினுல் தோன்றிய துயிலில் இருக்கின்ருன்' (துன்பத்தினுல் உணர் விழந்து கிடக்கின்ருன்) என்று கூறினுன்.

கு ,- விரிஞ்சன்-பிரமன். மக்களுக்கு ஒழுக்கம் கற்பிப்பது வேதம்; அவ் வேதற்திற்கும் ஒழுக்கம் கற்பிக்கும் முறையில் இராமன் ஒழுகுகின்றவன் ஆதலின். 'வேதத்தின் வேதமன்ன அரிந்தமன்' என்ருர். 'நின் செய்கை கண்டு நினைந்தனவோ'நின் மறைகள். (ஆரணிய-கவந்தப்49) எனக் கவந்தன் புகழ்வது இக்கருத்தானே ஆம். வேதத்தை இயற்றிய பிரமன் அம்பு வேதத்திற்கும் வேதம் போன்ற இராமனை ஏதும் செய்யாது என்ற கருத்து இதனுல் புலப் படுத்தியவாறு. 'அரிந்தம்' என்ற வடசொல் பகைவரை அழிப்பவன் என்னும் பொருளது; அது அரிந்தமன் என வந்தது என்பர்

இனித் தமிழ்ச் சொல்லெனவே கொண்டு 'அரிந்தமன்' எனப் பிரித்துப் பகைவரைப் படையினுல் அரிந்து வென்ற அரசன் எனப் பொருள்கூறலும் ஆம். ஆற்றிலது செய்கிலது - என்னும் ஆற்றல்-என்று எண்ணுதற்குரிய அவனது ஆற்றல், 'முன்னே தெரிந்தனென்' என்றது. தேவசபையில் முடிந்த முடிவை முன்னமே சாம்பன் அறிந்திருந்தமையைக் குறிப்பிட்டவாறு 'உன்னை நீ உனர்கிலயடியேனுனே, முன்னமே அறிகுவேன் மொழிதல் தீதது; என் எனில் இமையவர் எண்ணுக்கு ஈனமாம்' (82) எனப் பின்னர் இராமனை நோக்கி இவன் கூறுவதாலும் இதை அறியலாம். கடல் வெள்ளத்தில் துயின்று ;பழகியவன், இப்போதும் துன்பவெள்ளத் துயிலுளான் என்று நயம்பட விடைகூறிணுயினும் வெள்ளம் போன்ற துன்பத்தால் உணர்விழந்து மூர்ச்சையுற்றிருக்கின்றான் என்பதே அதற்குப் பொருளாகும். ''ஐயன் துன்பொடுந் துயிலன் ஆனுன்''(14 என முன் விடணன் தனக்குக் கூறியதையே அனுமன் சாம்பனுக்கு இவ்வாறு கூறினான். (21)

### சாம்பன் அனுமனை மருந்து கொணர்க எனல்

8857. அன்னவன் றன்மை கண்டா
லாற்றுமே யாக்கை வேறே
இன்னுயி ரொன்றே மூலத்
திருவரு மொருவ ரேயால்
இன்னது கிடக்கத் தாழா
திப்பொழு திமைப்பின் முன்னம்
கொன்னியல் வயிரத் தோளாய்
மருந்துபோய்க் கொணர்த்தி யென்றான்.

'அன்னவன் தன்மை கண்டால்
ஆற்றுமே? யாக்கை வேறே;
இன்உயிர் ஒன்றே மூலத்து
இருவரும் ஒருவரே யால்;
இன்னது கடக்கத் தாழாது
இப்பொழுது இமைப்பின் முன்னம்
கொன்இயல் வயிரத் தோளாய்
மருந்துபோய்க் கொணர்தி' என்றான்.

பொ :- இராம இலக்குவர் இருவரும் தமக்கு மூலமான தெய்வ நிலையில் ஒருவரே ஆவர்; (இப்போதும்) உடம்பு மட்டுமே வேறு; இனிய உயிர் இருவருக்கும் ஒன்றே ஆகும். ஆதலால் அந்த இலக்கு வன் இறந்துகிடக்கும் நிலையைக் கண்டால் ஆற்றியிருப்பானோ? (ஆற்றாது மூர்ச்சையுறல் இயல்பே) வலிமை பொருந்திய வயிரம் போன்ற தோள்களையுடையவனே! இந்தத் துன்பநிலையைக் கடக்கும் படிகாலம் தாழ்த்தாது இப்போதே இமைப்பதற்குமுன் போய் மருந்து கொணர்வாயாக' என்று சாம்பன் கூறினான்.

கு :- இன்னது என்றது இலக்குவன் இறந்துகிடப்பது கண்டு இராமன் உணர்விழந்துகிடக்கும் துன்பநிலையை. 'இருவரும் ஒரு வரேயால் யாக்கை வேறே உயிர் ஒன்றே ஆதலின், அன்னவன் தன்மை கண்டால் ஆற்றுமோ? இன்னது கடக்கத் தோளாய் போய் மருந்து கொணர்தி' எனக்கொண்டு கூட்டுக. 'மூலமான தெய்வநிலையிலும் அவதார நிலையிலும் உயிரொன்றாக இருக்கும் இருவரில் ஒருவனாகிய இலக்குவன் இறந்த தன்மையைக் கண்டால் அவனைப் பிரிவறியாத இராமன் ஆற்றாது மூர்ச்சித்தல் இயல்புதானே என்று கூறி, இத் துன்பநிலையை நாம் நீங்க நீ விரைந்துசென்று மருந்து கொணர்க எனச் சாம்பன் அனுமனை நோக்கிக் கூறியவாறு. மூலத்திருவரும் ஒருவரே என்பதை, 'என்னை நீ புகலக் கேண்மோ! எங்குமாய்யாவுமாகி, மன்னிய பொருளும் யானே மறைக்கெலா முடிவும் யானே, உன்னையான் பிறிவதில்லை யொருமுறை பிரிந்து மேனாள், நன்னிலா வெறிக்கும் பூணாய் நானு நாரணனு மானோம்.' "பின்னொரு பிறப்பில் யாருமே லக்குமப் பேர் பெற்றோம் இந் நெடும் பிறப்பில் நீயும் யானுமாய் ஈண்டு நின்றோம்" (வில்லி பாரதம். முதற்போர்-6, 7) எனக் கண்ணன் அருச்சுனன் நோக்கிக் கூறியுள்ளமையால் அறியலாம். கொன்—வலிமை. 'பெருந்தகை துன்பத் துயிலுளான், என்று அனுமன் கூறினானே அன்றி இலக் குவன் தன்மையைக் கண்டு இராமன் துன்பெருந்துயின்றதாகக் கூறவில்லை யாயினும் சாம்பன் தன் உய்த்துணர்ச்சியினால் 'இலக் குவன் இறந்தது கண்டே இராமன் துன்ப வெள்ளத்து துயிலனா னான்' என்பதை உணர்ந்து இங்கு 'அன்னவன தன்மை கண்டா லாற்றுமோ?' என்று கூறுவானானான். கடத்தல்-வெல்லுதல்; நீங்கு தல். மருந்து விரைந்து கொணர்தற்குரிய வலிமையன் அனுமன் என்பது புலப்பட 'கொன்னியல் வயிரத் தோளாய்' என விளித் தான். (22)

## மருந்து கொணர்வதால் உளதாம் பயன்

8858. எழுபது வெள்ளத் தோரு
மிராமனு மிளைய கோவும்
முழுதுமிவ் வுலக மூன்று
நல்லற மூர்த்தி தானும்
வழுவலின் மறையு முன்னால்
வாழ்ந்தன வாகு மைந்த
பொழுதிறை தாழா தென்சொ
னெறிதரக் கடிது போதி.

'எழுபது வெள்ளத் தோரும்,
இராமனும், இளைய கோவும்,
முழுது இவ் உலகம் மூன்றும்,
நல்அற மூர்த்தி தானும்,
வழுஇலா மறையும், உன்னால்
வாழ்ந்தன ஆகும்; மைந்த!
பொழுதுஇறை தாழாது, என்சொல்
நெறிதரக் கடிது போதி.

பொ:- வலிமையுள்ள அனும! (மருந்து கொணர்ந்தால்) எழுபது வெள்ளம் சேனையும், இராமனும் இலக்குவனும், இம் மூவுலகம் முழுவதும் நல்ல தருமதேவதையும், தவறுதல் இல்லாத வேதமும், உன்னால் வாழ்ந்தனவாகும்; ஆதலால், சிறுதுபோழ்தும் காலம் தாழ்த்தாது என்சொல் நினக்கு வழியைக் கொடுக்க விரைந்து செல்வாயாக.

கு:- மருந்து கொணர்ந்தால் இறந்துகிடக்கும் இலக்குவனும் எழுபதுவெள்ளம் வானரரும் எழுவர்; இலக்குவன் எழுந்தால் இராமனும் துன்பம் நீங்கி எழுவான்; அவனால் மூவுலகமும் தருமமும் வேதமும் பாதுகாக்கப்பட்டு இடையூறின்றி வாழும் என்பான். 'உன்னால் வாழ்ந்தனவாகும்' எனப் புகழ்ந்து கூறினான் சாம்பன். மைந்து-வலிமை. மருந்து விரைந்து கொணர்தற்குரிய வலிமையுடைமை நினைப்பிக்க அனுமனை மைந்த! என விளித்தவாறு. இறைப்பொழுது என மாறுக; சிறிதுபொழுது என்பது பொருள். யான் சொல்லும் நெறியில் போதி என்பான் 'என் சொல் நெறிதரக் கடிது போதி' என்றான். சொல் நெறிதர என்றது இயக்குந போலக் கூறியது. (23)

## சாம்பன் மருத்துமலைக்கு வழிகூறல்

8859. பின்புளதிக் கடலென்னப் பெயர்ந்ததற்பி
* னியோசனைகள் பேச நின்ற
ஒன்பதினு யிரங்கடந்தா லிமயமெனுங்
குலவரையை யுறுதி யுற்றால்
தன்பெருமை யோரிரண்டா யிரமுளதி
யோசனைபின் றவிரப் போனால்
முன்புளயோ சனையெல்லா முற்றினைபொற்
கூடஞ்சென் றுறுதி மொய்ம்ப.

'பின்புஉளது இக்கடல் என்னப் பெயர்ந்ததற்பின்
யோசனைகள் பேச நின்ற
ஒன்பதினுயிரம் கடந்தால், இமயம்எனும்
குலவரையை உறுதி; உற்றால்,
தன்பெருமை ஓர்இரண்டாயிரம் உளது
யோசனை; பின்தவிரப் போனால்,
முன்புஉள யோசனைஎல்லாம்முற்றினை,
பொற்கூடம்சென்று உறுதி' மொய்ம்ப!

பொ :- வலிமையுடைய அனும! இத் தென்கடல் பின்புளது என்னுமாறு கடந்து சென்றபின் கண்டோர் சொல்லும்படி நின்ற யோசனைகள் ஒன்பதினுயிரம் கடந்தால், இமயம் என்கின்ற சிறந்த மலையை அடைவாய்; அவ்வாறு அடைந்தால், அந்த இமயத்தின் பரப்பு இரண்டாயிரம் யோசனை உளது; அது பின் நிற்க முற்பட்டுச் சென்றால், நின் முன்பு உள்ள யோசனைகள் எல்லாவற்றையும் கடந்து போனால், ஏமகூடமலையைச் அடைவாய்.

கு :- இக் கடலைக் கடந்தபின் என்பான், 'பின்புளதிக்கடல் என்னப் பெயர்ந்ததற்பின்' என்றான். தென்கடலுக்கும் இமயமலைக்கும் உள்ள தொலைவு ஒன்பதினுயிரம் யோசனை என்றவாறு. இமயத்தின் பரப்பு இரண்டாயிரம் யோசனை. ஏமக்கூடமலை இமயமலைக்கு அப்பால் பல யோசனைத் தொலைவு உளது. ஒன்பதினுயிரம் என்பர். ஏமம், பொன் ஆதலின் ஏமகூடமலையைப் பொற்கூடம் என்ற பெயரால் கூறினர். யோசனை என்பது ஒன்பது கல் தொலைவு என்பர்.

(24)

8860. இம்மலைச்கு மொன்பதினு யிர முளதால்
யோசனையி னிடத மென்னும்
செம்மலைக்கு முளவாய வத்தினையோ
சனை கடந்தாற் சென்று காண்டி
எம்மலைக்கும் பெரிதாய வடமலையை
யம்மலையி னகல மெண்ணின்
மொய்ம்மலைந்த திரடோளாய் முப்பத்தீ
ராயிரயோ சனையின் முற்றும்.

இம்மலைக்கும் ஒன்பதினுயிரம் உளதாம்
யோசனையின் நிடதம் என்னும்
செம்மலைக்கும் உளவாய அத்தனை
யோசனை கடந்நால் சென்றுகாண்டி.
எம்மலைக்கும் பெரிதுஆய வடமலையை ;
அம்மலையின் அகலம் எண்ணின்,
மொய்மலைந்த திண்தோளாய்! முப்பத்தி
ராயிரம் யோசனையின் முற்றும்.

பொ :- வலிமை மேற்கொண்ட திண்ணிய தோளினையுடையவனே! இந்த ஏமகூட மலையிலிருந்து ஒன்பதினுயிரம் யோசனை தொலைவில் நிடதம் என்னும் செம்மலை உளது; அந்தச் செவ்விய நிடத மலையில் நின்று ஒன்பதினுயிரம் யோசனை கடந்து போனால், எல்லா மலைகளுக்கும் பெரியதாய மேருமலையைச் சென்று காண்பாய்; அம் மேருமலையின் அகலம் எண்ணினுல் முப்பத்திரண்டு ஆயிரம் யோசனையில் முடிவு அடையும்.

கு :- ஏமகூடத்திலிருந்து ஒன்பதினுயிரம் யோசனைத் தொலைவில் நிடதமலையும் நிடதமலையிலிருந்து ஒன்பதினுயிரம் யோசனைத் தொலைவில் மேருமலையும் உளது. மேருமலையின் அகலம் முப்பத்திரண்டாயிரம் யோசனைப் பரப்புளது. மொய்-வலிமை. மலைதல்-மேற்கொள்ளுதல். இனி, மொய்ம்மலைந்த என்பதற்குப் போர்புரிந்த என்று பொருள் கூறலுமாம். (25)

8861. மேருவினைக் கடந்தப்பா லொன்பதினு
யிரமுளயோ சனையை விட்டால்
நேரனுகு நீலகிரி தானிரண்டா
யிரமுளயோ சனையி னிற்கும்

மாருதிமற் றதற்கப்பால் யோசனை நா
லாயிரத்து மருந்து வைகும்
கார்வரையைக் காணுதிமற் றதுகாண
வித்துயர்க்குக் கரையுங் காண்டி.

மேருவினைக் கடந்து, அப்பால் ஒன்பதினுயிரம்
உளயோ சனையை விட்டால்,
நேர்அணுகும் நீலகிரி ; தான் இரண்டாயிரம்
உளயோ சனையின் நிற்கும்;
மாருதி ! மற்று அதற்குஅப்பால் யோசனை
நாலாயிரத்து மருந்து வைகும்
கார்வரையைக் காணுதி ; மற்று அதுகாண
இத்துயர்க்குக் கரையும் காண்டி.

பொ :- மாருதி! மேருமலையைக் கடந்து அப்பால் உள்ள ஒன்பதினுயிரம் யோசனையைக் கடந்தால் நீலகிரி நினக்கு நேராக நெருங்கும்; அந் நீலகிரிதான் இரண்டாயிரம் ஆக உள்ள யோசனை அளவில் பரவிநிற்கும்; அந் நீலகிரிக்குஅப்பால் நாலாயிரம் யோசனைத் தொலைவில் மருந்து தங்கியுள்ள கரிய மருத்துமலையைக் காண்பாய்; அம் மலையைக் காணவே இந்தத் துயர்க்கடலுக்குக் கரையையும் காண்பாய்.

கு :- மேருமலைக்கும் நீலமலைக்கும் ஒன்பதினுயிரம் யோசனை; நீலமலையின் பரப்பு இரண்டாயிரம் யோசனை. நீலமலைக்கும் மருத்துமலைக்கும் நாலாயிரம் யோசனை. மருந்து வைகும் கார்வரை என்றது மருந்துமலையை. மருந்துமலையைக் கண்டு அதிலுள்ள மருந்தைக் கொணர்ந்த அளவில் இறந்த இலக்குவன் முதலியோரும் மூர்ச்சித்த இராமனும் வலிமைபெற்று எழுதல் திண்ணம் ஆதலின், 'அதுகாண இத்துயர்க்குக் கரையுங் காண்டி' என்றான். கரையென்ற குறிப்பால் துயரைக் கடலாக உருவகஞ் செய்தமையுய்த்துணர வைத்தமையின் இது குறிப்புருவகம் எனப்படும். தென்கடலிலிருந்து எண்பத்தையாயிரம் யோசனை தொலைவில் மருந்துமலை இருப்பதாக இங்குக்கூறிய கணககால் அறியலாம். (26)

நால்வகை மருந்துகளின் நல் இயல்பு கூறுதல்

8862. மாண்டாரை யுய்விக்கு மருந்தொன்று
முடல்வேறு வகிர்க ளாகக்
கீண்டாலும் பொருந்துவிப்ப தொருமருந்தும்
படைக்கலங்கள் கிளைப்ப தொன்றும்

மீண்டேயும் தம்முரு வே யருளுவதோர்
மெய்ம்மருந்து முளநீ வீர
ஆண்டேகிக் கொணர்தியென வடையாளத்
தொடுமுறைத்தா னறிவின் மிக்கான்.

'மாண்டாரை உய்விக்கும் மருந்துஒன்றும்,
உடல்வேறு வகிர்கள் ஆகக்
கீண்டாலும் பொருந்துவிக்கும் ஒருமருந்தும்,
படைக்கலங்கள் கிளப்பது ஒன்றும்;
மீண்டேயும் தம்உருவை அருளுவதுஓர்
மெய்ம்மருந்தும், உள; நீ, வீர!
ஆண்டுஏகிக் கொணர்தி' என அடையாளத்தொடும்
உரைத்தான், அறிவின் மிக்கான்.

பொ :- அறிவில் மிக்கவனுன சாம்பன் — 'இறந்தவரை உயிர் பெறச்செய்யும் மருந்து ஒன்றும், உடம்பு வெவ்வேறு பிளவுகளாகக் கிழிந்தாலும் முன்போலப் பொருத்தச் செய்யும் மருந்து ஒன்றும், (உடம்பில் தைத்திருக்கும்) படைக்கலங்களை வெளிப்படுத்து மருந்து ஒன்றும், மீண்டும் தம் முன்னைய உருவையே கொடுக்கும் உண்மை மருந்தும் அங்கு உள்ளன; வீர! நீ அங்குச் சென்று அவற்றைக் கொணர்வாயாக'' என அவற்றின் அடையாளத்தோடும் (அனுமனுக்குச்) சொன்னுன்.

கு :- 1. உயிர் கொடுப்பது; 2. பிளந்த உடம்பை ஒன்று படுத்துவது; 3. உடம்பில் தைத்துள்ள படைக்கலங்களை அகற்றுவது, 4. வேறுபட்ட உருவை முன்போல் செய்வது என்ற நான்கு மருந்துகளைக் கூறியதோடு அவ்வம் மருநதுக்குரிய அடையாளத்தையும் சாம்பன் கூறினன் என்றவாறு. இம் மருந்துகளின் இயல்பையும் இடத்தையும் அடையாளந்தையும் நினைவிற் கொண்டிருந்து தெளிந்து கூறுதற்கு உரிமை தோன்றச் சாம்பனை இங்கு 'அறிவின் மிக்கான்' என்ற பெயராற் கூறினர். (27)

சாம்பன், இம் மருந்துகளைப்பற்றித் தான் அறிந்த
வரலாற்றைக் கூறியது

8863. இன்னமருந் தொருநான்கும் டயோததியைக்
கலக்கியஞான் றெழுந்த தேவர்
உன்னியமைத் தனர்மறைக்கு மெட்டாத
பரஞ்சுடரிவ் வுலக மூன்று

தன்னிருதா ளுள்ளடக்கிப் பொலிபோழ்தின்
யான்முரசஞ் சாற்றும் வேலை
அன்னவைகண் டுயாவுதலுந் தொன்முனிவ
ரவற்றியலெற் கறிவித் தாரால்.

'இன்னமருந்து ஒருநான்கும், பயோத்தியைக்
கலக்கியஞான்று, எழுந்த; தேவர்
உன்னிஅமைத்தனர்; மறைக்கும் எட்டாத
பரஞ்சுடர் இவ்உலகம் மூன்றும்
தன்இருதாள் உள்அடக்கிப் பொலிபோழ்தின்
யான்முரசம் சாற்றும் வேலை,
அன்னவைகண்டு, உயாவுதலும், தொல்முனிவர்
அவற்றுஇயல் எற்கு அறிவித்தாரால்.

பொ :- இத் தன்மையுடைய மருந்து ஒருநான்கும், பாற்கடலைக் கடைந்து போன்றும் அப் பாற்கடலிலிருந்து எழுந்தன: தேவர்கள் அவற்றின் பயனை நினைந்து அவற்றை அம் மலையில் அமையுமாறு செய்தனர்; வேதங்கட்கும் எட்டாத திருமால் இவ்வுலகம் மூன்றையும் தன் இரண்டு அடிக்குள் அடக்கிக்கொண்டு நின்றபோது (மூவுலகும் திருமாலுக்குரிமையான செய்தியைச் சொல்லித் திரிந்து) முரசம் சாற்றியபோது, அம் மருந்தினைக்கண்டு அவற்றைப்பற்றிக் கேட்டபோது பழைய முனிவர்கள் அம் மருந்தின் இயல்புகளை எனக்கு அறிவித்தார்கள்.

கு :- பயோததி—பாற்கடல். திருமால் மாவலிபால் மூவடி மண் தானம்பெற்றுப் பேருருவெடுத்து மூவுலகும் ஈரடியால் அளந்து கொண்டபோது அந் நிகழ்ச்சியைச் சாம்பன் உலகெலாந்திரிந்து முரசறைந்து சாற்றினான்;அவ்வாறு சாற்றும்போது மருந்துமலையில் இருக்கும் மருந்துச் செடிகளைக் கண்டு முனியர்களை வினவ அவர்கள் அம் மருந்தின் இயல்புகளைச் சாம்பனுக்கு விளக்கினர் என்றவாறு. இச் செய்யுள் கதை நிகழ்ச்சிக்குஇன்றியமையாதது. அன்று ஆகலானும், சொற்போக்கும வேறுபட்டே இருந்தலானும், இடைச் செருகலாக இருக்கலாம் போலும். (28)

8854. இம்மருந்து காத்துறையுந் தெய்வங்க
ளெண்ணிலவா லிரங்கா யார்க்கும்
நெய்ம்மருங்கு படரகில்லா நெடுநேமிப்
படையுமவற் றுடனே நிற்கும்

**பொய்ம்மருங்கி னில்லாதாய் புரிகின்ற**
**காரியத்தின் பொருளை நோக்கிக்**
**கைம்மடங்கு தொடர்ந்துன்னைக் காவாயென்றப்**
**புறம்போய்க் கரக்கு மென்றான்.**

'இம்மருந்து காத்துஉறையும் தெய்வங்கள்
எண்ணிலவால்; இரங்கா, யார்க்கும்;
நெய்ம்மருங்கு படரகில்லா நெடுநேமிப்
படையுமவற் றுடனே நிற்கும்;
பொய்ம்மருங்கின் நில்லாதாய்! புரிகின்ற
காரியத்தின் பொருளை நோக்கிக்
கைம்மருங்கு தொடர்ந்துஉன்னைக் 'காவாய்'என்று
அப்புறம்போய்க் கரக்கும் என்றான்.

பொ:- இந்த மருந்தைக் காத்துக்கொண்டிருக்கும் தெய்வங்கள் கணக்கிலாதன ; அவை யார்க்கும் இரக்கம் கொள்ளா; யாரும் தன் பக்கத்தே நெருங்க இயலாததும் நெய் பூசப்பட்டதும் ஆகிய நெடிய சக்கரப்படையும் அத் தெய்வங்களுடனே காத்து நிற்கும்; பொய்யின் பக்கத்தில் நில்லாத மெய்மையுடையவனே! நீ செய்கின்ற செயலின் பயனை நோக்கி அத் தெய்வங்கள்உன்னை இருகைகளின் பக்கத்திலும் தொடர்ந்து நின்று 'இம் மருந்தை மீட்டும் கொணர்ந்து கெடாமல் காப்பாயாக' என்று சொல்லிவிட்டு அப்புறம் சென்று மறைந்து கொள்ளும் என்று கூறினான்.

கு :- நெய் பூசப்படுதலும் பிறர் நெருங்க இயலாமையும் சக்கரப் படைக்குக் கூறிய சிறப்புகளாகும். அனுமன் பொய்யர் தொடர்பு கொள்ளாமல் மெய்யர் தொடர்பு கொண்டவன் ஆதலாலும், அவன் செய்கின்ற செயல் உலக முழுமைக்கும் நன்மைபயக்கும் தன்மை யது ஆதலாலும் அத் தெய்வங்கள் அம் மருந்தை மீண்டும் கொணர்ந்து இங்கு வைத்துக் காப்பாற்றுமாறு அவனை வேண்டிக் கொண்டு பின் மறைந்துவிடும் என்றவாறு. அத் தெய்வங்கள் அனுமன் கண்முன் வாராமல் அவன் கைப்பக்கத்தே நின்று அம் மருந்தை அழியாமல் காக்குமாறு கூறிவிட்டு மறையும் என்றது, அத் தெய்வங்களால் அனுமனுக்குத் தீங்கொன்றும் நிகழாது என்பதைப் புலப்படுத்தியவாறு. யார்க்கும் இரங்காத அத் தெய்வங்கள் அனுமனுக்குத் துணை நிற்கும் என்றவாறு. (28)

## மாருதி மருத்துமலை கொணரப் பேருருவெடுத்தல்

8865. ஈங்கிதுவே பணியாகி னிறந்தோரும்
பிறந்தோரே யெங்கோற் கியாதும்
தீங்கிடை யூ றெய்தாமற் றெருட்டுதிர்போ
யெனச்சொல்லி யவரைத் தீர்ந்தான்
ஓங்கினன்வா னெடுமுகட்டை யுற்றனன்பொற்
றோளிரண்டுந் திசையோ டொக்க
வீங்கினவா காயத்தை விழுங்கினனே
யெனவளர்ந்தான் வேதம் போல்வான்.

'ஈங்குஇதுவே பணிஆகில், இறந்தோரும்
பிறந்தோரே: எம்கோற்கு யாதும்,
தீங்குஇடையூறு எய்தாமல், தெருட்டுதிர்போய்'
எனச்சொல்லி, அவரைத் தீர்ந்தான்
ஓங்கினன் வான்நெடுமுகட்டை உற்றனன்,
பொன் தோள்இரண்டும் திசையோடுஒக்க
வீங்கின; ஆகாயத்தை விழுங்கினனே
எனவளர்ந்தான்—வேதம் போல்வான்.

பொ :- ''யான் இவ்விடத்துச் செய்யவேண்டிய பணி இதுவே யானால், இப்போது இறந்துகிடப்பவர் எல்லோரும் மீண்டும் இறப்பு நீங்கி எழுந்தவரே யாவர்; எம் கோனாகிய இராமனுக்கு தீங்குவரத் தக்க இடையூறு ஏதும் எய்தாதபடி போய்த் தெளிவுபடுத்துங்கள்'' என்று சொல்லிவிட்டு வேதம் போல்பவனாகிய அனுமன், அவர்களை விட்டு நீங்கி உயர ஓங்கி வானத்தின் நெடிய முகட்டை அடைந்தான்; அவன் தோள்கள் இரண்டும் திசைகளின் அளவோடு ஒக்கப் பருத்தன; ஆகாயத்தை இடமில்லாமல் விழுங்கிவிட்டான் என்னுமாறு பேருரு எடுத்து வளர்ந்தான்.

கு :- மருத்துமலை கொணர்தல் அனுமனுக்கு எளிதாகலின் இறந்தவர் யாவரும் உயிர்பெறுதல் திண்ணம் என்ற கருத்தால் ' இறந்தோரும் பிறந்தோரே ' என இறந்தகாலத்தால் கூறினான்; இது தெளிவு பற்றிவந்த கால வழுவமைதி. பிறந்தோர் என்பது உயிர்பெற்றவர் என்னும் கருத்தினது. அனுமன் கல்லாத கலையும் வேதக்கடலும் உலகத்து இல்லாதனவேயாகலின் அவனை 'வேதம் போல்வான்' எனச் சிறப்பித்தார். ஆகாய முழுமையும் அனுமன் வடிவமாகவே விளங்குதலின் 'ஆகாயத்தை விழுங்கினனே' எனக்

கண்டோர் கருதுவர் என்றபடி. 'விண்ணை விழுங்கிய மூலையார்' (நாகபாசம்—280) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும். திசையின் எல்லைவரையில் தோள்கள் வளர்ந்து பருத்தன என்பார், "தோளி ரண்டும் திசையோ டொக்க வீங்கின' என்றார். (30)

## அனுமனது பேருருவின் பெருமை

8866. கோளோடு தாரகைகள் கோத்தமைத்த
மணியாரக் கோவை போன்ற
தோளோடு தோளகல மாயிரயோ
சனையளவுச் சொல்ல வொண்ணு
தாளோடு தாள்பெயர்க்க விடமிலதா
யினதிலங்கை தடக்கை வீச
நீளோடு திசைபோதா விசைத்தெழுவா
னுருவத்தி னிலையீ தம்மா.

கோளோடு தாரகைகள், கோத்து அமைத்த
மணிஆரக் கோவை போன்ற;
தோளொடு தோள்அகலம் ஆயிரம் யோசனை
அளவு சொல்ல ஒண்ணு;
தாளோடு தாள்பெயர்க்க, இடம்இலது
ஆயினது இலங்கை; தடக்கைவீச,
நீளோடு திசைபோதா ; விசைத்து எழுவான்
உருவத்தின் நிலைஈது அம்மா.

பொ :- விண்ணில் விளங்கும் நவகோள்களும் நட்சத்திரங் களும் (அனுமனது மார்பிற்கு அணியாகக்) கோத்து அமைத்த மணியும் முத்தும் கலந்தமாலைபோன்று விளங்கின. ஒரு தோளி லிருந்து மற்றொரு தோளுக்கு உள்ள அகலம் ஆயிர யோசனை அளவு எனவும் சொல்ல ஒண்ணுதவையாய் விரிந்திருந்தன ; ஊன்றிய அடியோடு மற்றொரு அடியைப் பெயர்த்து வைக்க இடம் இல்லாத தாகியது இலங்கை; அவன் பெரிய கைகளை வீச நீண்டு ஓடுகின்ற திசைகள் போதாவாயின. (மருந்துமலை கொணர) விரைந்து எழு கின்ற அனுமனது பேருருவத்தின் நிலை இதுவாகும்.

கு :- அம்மா, வியப்பிடைச் சொல். கோள்கள் முத்துப் போன்றன ; விண்மீன்கள் மணிகளைப் போன்றன என்றவாறு. மணி-மாணிக்கமணி. ஆரம்-முத்து. மணிஆரக் கோவை என்றது,

மணியும் முத்தும் விரவக் கோத்தமாலைஎன்றவாறு. கோள் என்றது ஞாயிறும் திங்களும், செவ்வாயும் புதனும் வியாழனும் வெள்ளியும் சனியும் ஆகிய கிரகங்களை. இராகு கேதுக்கள் ஒளிக் கிரகங்கள் அல்லவாதலின் அவற்றை விடுத்து ஏழு கிரகங்களையே கொள்க. தாரகைகள் என்பன அசுவனி, பரணி போன்ற விண்மீன்களை. அனுமன் பேருருவம் நட்சத்திர மண்டலத்தையும் தாண்டிச் சென்றது ஆகலின் கோள்களும் நாள்களும் அவன் மார்பில் அணிந்த மணிமுத்தமாலை போன்றன என்க. ‘மரந்தொறும் மின்மினிக் குலம் மொய்த்துளவாமென முன்னும் பின்னரும், தொத்தின தாரகை மயிரின் சுற்றெலாம்’’ (சுந்தர - உருக்காட்டுப்-11) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும். அனுமனது பேருருவின் பெருமை கூறியவாறு. (31)

8867. வால்விசைத்து கைந்நிமிர்த்து வாயினையும்
சிறிதகல வகுத்து மானக்
கானிலத்தி னிடையூன்றி யுரநெருக்கிக்
கழுத்தினையுஞ் சுருக்கிக் காட்டித்
தோன்மயிர்க்குந் தளம்சிலிர்ப்ப விசைத்தெழுந்தா
னவ்விலங்கை துளங்கிச் சூழ்ந்த
வேலையிற்புக் கழுந்திய தோர் மரக்கலம்போற்
சுரித்துலைய விசயத் தோளான்.

வால் விசைத்து, கைந்நிமிர்த்து, வாயினையும்
சிறிதுஅகல வகுத்து, மானக்
கால் நிலத்தினிடை ஊன்றி, உரம்நெருக்கி
கழுத்தினையும் சுருக்கிக் காட்டி
தோல் மயிர்க்குந்தளம் சிலிர்ப்ப, விசைத்து
எழுந்தான், அவ்விலங்கை, துளங்கிச்சூழ்ந்த
வேலையில் புக்கு அழுந்தியதுஓர் மரக்கலம்போல்
சுரித்துஉலைய—விசயத்தோளான்.

பொ :- வெற்றி பொருந்திய தோளையுடைய அனுமன்,-தன் வாலினை விசைத்துக்கொண்டு, கைகளை நீட்டிக்கொண்டு, வாலினையும் சிறிது விரிந்திருக்குமாறு செய்துகொண்டு, பெருமை பொருந்திய கால்களை நிலத்தில் ஊன்றிக்கொண்டு, மார்பினை நெருக்கிக்கொண்டு, தோலில் உள்ள மயிர்க்கூச்சுகள் சிலிர்க்க, அந்த இலங்கை அசைவுற்று, கடலில் புகுந்து அழுந்தியதொரு கப்பல் போல், சுழன்று வருந்த, விரைவுற்று எழுந்தான்.

கு :- விண்வழிப் பாயந்துசெல்ல அனுமன் எழுங்கால் அவனுடம்பில் தோன்றிய வேறுபாடுகளை உணர்த்தியவாறு. குந்தளம்-மயிர்க்கூச்சு. விசயந் தோளான் விசைத்தெழுந்தான் என இயையும். கடல் சூழிலங்கை மாநகரம், கடலில் மூழ்கும் கப்பல்போலச் சுழன்று அலைந்து வருந்தியது என உவமை கூறி விளக்கியவாறு. "பாரிடை யழுந்துகின்ற படர்நெடும் பனிமரக்குன்றம், கூருகிர்க் குவவுத்தோளான் கூம்பெனக் குமிழி பொங்க, ஆர்கலி அழுவத் தாழுங் கலமென லாயிற்றன்றே" (கடறுவு-9) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும். (32)

## அனுமனது வேகத்தால் நிகழ்ந்தவை

8868. கிழிந்தனமா மழைக்குலங்கள் கீண்டதுநீண்
டகல்வேலை கிழக்கு மேற்கும்
பொழிந்தனமீன் றொடர்ந்தெழுந்த பொருப்பிணமுந்
தருக்குலமும் பிறவும் பொங்கி
அழிந்தனவா னவர்கான மாகாயத்
திசையனில்பே ரசனி யென்ன
விழுந்தன நீர்க் கடலழுந்த வேறினமேற்
கீறினபோய்த் திசைக ளெல்லாம்.

கிழிந்தன, மாமழைக்குலங்கள்; கிண்டது, நீண்டு
அகல்வேலை; கிழக்கும் மேற்கும்;
பொழிந்தன,மின்; தொடர்ந்துஎழுந்த, பொருப்பு
இனமும், தருக்குலமும், பிறவும், பொங்கி;
அழிந்தன வானவர் மானம், ஆகாயத்
திசையினில்பேர் அசனி என்ன
விழுந்தன,நீர்க் கடல்அழுந்த; ஏறினமேல்,
கீறினபோய்த் திசைகள் எல்லாம்.

பொ :- (அனுமன் விசைத்தெழுதலும்) பெரிய மேகக் கூட்டங்கள் கிழிந்தன ; நீண்டு அகன்றுள்ள தென்கடல், கிழக்கும் மேற்குமாகப் பிரிந்து கிழிந்தது ; விண்மீன்கள் உதிர்ந்தன ; மலை இனங்களும் பிறவும் கிளர்ந்து தொடர்ந்து எழுந்தன ; தேவர்களின் விமானம் ஆகாயத்தின் நடுவே அழிந்தனவாய் பெரிய இடியைப்போல நீர்க் கடலில் அழுந்த விழுந்தன ; (அதனல் கடல் நீர்) மேல் ஏறினவாய்த் திசைகளை எல்லாம் கிழித்தன.

கு :- மழைக்குலம் என்றது மேகக் கூட்டத்தை. வேலை கிழக்கும் மேற்கும் நீண்டது என்க. இலங்கையிலிருந்து வடக்கு நோக்கி அனுமன் பாய்ந்து செல்லுங்கால் எழுந்த காற்றால் தென்கடல் கிழக்கிலும் மேற்கிலும் ஒதுங்கின என்பார், 'நீண்டகல்வேலை கிழக்கும் மேற்கும் நீண்டது' என்றார். தேவர்கள் ஏறியிருந்த விமானம் கடலில் வீழ்ந்தபோது எழுந்த ஒலி இடி ஓசை போன்றிருந்தது என்க. வானவர்யினம் ஆகாயத் திசையினில் அழிந்தனவாய் அசனி அன்ன நீர்க்கடல் அழுந்த விழுந்தன என்க. விமானம் விழுந்த வேகத்தில் கடலினின்று மேலேறிய நீர் திசைதொறும் பரவி நிலத்தைக் கிழித்தன என்றவாறு. (33)

8369. பாய்ந்தனனங் கப்பொழுதே பருவரைக
ளெனைப்பலவும் வடபா கத்துச்
சாய்ந்தனபே ருடற்பிறந்த சண்டமா
ருதம்வீசத் தாதை சால
ஓய்ந்தனனென் றுறைசெய்ய விசும்பூடு
படர்கின்ற ஹுருவே கத்தால்
காய்ந்தனவே லைகண்மேகங் கரிந்தன வெந்
தெரிந்தபெருங் கான மெல்லாம்.

பாய்ந்தனன், அங்கு அப்பொழுதே;
பருவரைகள் எனைப்பலவும் வடபாகத்துச்
சாய்ந்தன'பேர்உடல் பிறந்த
சண்டமாருத வீச தாதைசால
ஓய்ந்தனன்' என்று உரை செய்ய,
வீசும்பூடு படர்கின்றான் உருவேகத்தால்,
காய்ந்தன வேலைகள்; மேகம் கரிந்தன;
வெந்துஎரிந்தே பெருங்கானம் எல்லாம்.

பொ :- அவ்விடத்து அப்பொழுதே பாய்ந்தனன்; அவனது பேருடலில் பிறந்த பெருங்காற்று வீசுதலால் பருத்த மலைகள் எல்லாம் வடக்குப் பக்கமாகச் சாய்ந்தன; தந்தையாகிய காற்றுக் கடவுளும் மிகவும் ஓய்ந்தான் என்று கண்டோர் சொல்லுமாறு விரைந்து விண்வழியே செல்கின்ற உருவத்தின் வேக வெப்பத்தால் கடல்கள் வறண்டு காய்ந்தன; மேகங்கள் கரிந்து போயின; பெரிய காடுகள் எல்லாம் வெந்து எரிந்தன.

கு :- அனுமன் வடதிசைக்கண் பாய்ந்துசெல்லும் வேகத்தால் தோன்றிய காற்றினால் மலைகள் எல்லாம் வடக்கு நோக்கிச் சாய்ந்தன என்றவாறு. அனுமன் செல்லும் வேகம் வாயுவேகத்தினும் மிக்கிருப்பதால் தந்தை மிகவும் வேகத்தால் குறைந்துவிட்டான் என்று கண்டோர் சொல்லுவர் என்றவாறு. படர்தல்-செல்லுதல். விரைந்து செல்லும்போது காற்றுப் பிறப்பது போலவே வெப்பமும் பிறக்கும் ஆதலின் அனுமன் வேகத்தில் தோன்றிய வெப்பத்தால் கடல் காய்ந்ததாகவும் மோம் கரிந்ததாகவும் கானம் வெந்து எரிந்ததாகவும் கூறினர். ஒய்தல்-சுருங்குதல்; உள்ளதனுணுக்கம் என்பர். (34)

## அனுமன் பேருருவத்தை நோக்கித் தேவர் புகழ்தல்

8870. கடன் முன்னே நிமிர்ந்தோடக் கால்பின்னே
தொடர்ந்தோடக் கடிதிற் செல்வான்
உடன் முன்னே செலவுள்ளங் கடைக்குழையாய்ச்
செலச்செல்வா னுருவை நோக்கி
அடன் முன்னே தொடங்கியநா ளாழ்கட ல்சூ
ழிலங்கையெனு மரக்கர் வெகும்
திடன் முந்நீ ரிடைப்படுத்து மறித்திலனந்
துயரென்றார் தேவ ரெல்லாம்.

கடன் முன்னே நிமிர்ந்துஓட, கால்பின்னே
தொடர்ந்துஓட, கடிதின் செல்வான்
உடல் முன்னேசெல, உள்ளம் கடைக்குழையாய்ச்
செல,செல்வான் உருவை நோக்கி,
'அடல் முன்னே தொடங்கியநாள், ஆழ்கடல்,சூழ்
இலங்கைஎனும் அரக்கர் வாழும்
திடல் முந்நீர் இடைப்படுத்து மறித்திலன்
நம்துயர் என்றார் தேவர்எல்லாம்.

பொ :- (விரைந்து மருந்தைக் கொணரவேண்டும் என்னும்) கடமை உணர்ச்சி முன்னே நிமிர்ந்து ஓடா நிற்க, கால்கள் அக் கடமையுணர்ச்சிக்குப் பின்னே தொடர்ந்து ஓடா நிற்க, விரைந்துசெல்லும் பொருட்டு உடம்பு அக் கால்களுக்கு முன்னே செல்லா நிற்க, மனம் கடைசியாக வேகங்குறைந்ததாக பின் செல்ல விரைந்து செல்கின்றவனாகிய அனுமனது உருவப் பெருமையை

நோக்கித் தேவரெல்லாம், "அரக்கரைக் கொல்லும் போர்த்தொழிலை முன்னே தொடங்கிய நாளில், ஆழ்ந்த கடலால் சூழப்பட்ட இலங்கை என்கின்ற அரக்கர் வாழ்கின்ற தீவினை எடுத்துக் கடலிடை விழ்த்தி நம் துயரைத் தடுத்திலனே' என்று அவன் உருவினைப் புகழ்ந்து கூறினர்.

கு:- அனுமன் தன் உள்ளத்தினும் விரைந்து சென்றமை முன்னிரண்டடிகளால் புலப்படுத்தியவாறு. கடன் என்றது, விரைந்து மருந்தைக் கொணரவேண்டும் என்னும் கடன்மையுணர்ச்சியை; ஆகுபெயர். கடிதிற் செய்வான் என்புழி 'வான்' வினையெச்சவிகுதி. கடைக்கூழை என்றது, கடைசியில் வரும் கூழைப் படை போன்று வேகங்குறைந்த நிலையையுணர்த்தியது. குழை முதல் குறுகியது வேகம் மிக்கது என்று சொல்லப்படும் மனம் அனுமனது உடம்பினும் பிற்பட்டுவிட்டது என்பார் 'உள்ளங் கடைக் குழையாய்ச் செல' என்றார். உருவப் பொருளாகிய உடம்பு அருவப் பொருளாகிய உள்ளத்தினும் முந்திச்சென்றதுஎன்று அதன் வேகத்தைப் புலப்படுத்தியவாறு. அடல்-கொல்லுதல்; இங்குப் போரை உணர்த்தியது. அனுமனுடைய பேருருவைக் கண்ட தேவர்கள், போர் தொடங்கிய முதல் நாளிலேயே அனுமன் இந்த பேருருவு எடுத்து இலங்கைத் தீவைக் கடலில் போட்டு நம் துயரைத் தடுத்திருக்கலாமே; அது செய்யாது போயினனே! என அனுமனது பேருருவை வியந்து புகழ்ந்தவாறு. அனுமனது பேருருவம் இலங்கைத் தீவை எடுத்துக் கடலில் போடத்தக்க பெருமையுடையது என்றவாறு. எளிதில் செய்யத்தக்க அச்செயலைச் செய்து நம் துயரைத் துடைத்தற்குரிய அனுமன், அது செய்யாது தாழ்ந்து இத்தகைய துன்பம் நேர்ந்தபின் இவ்வுருவை எடுத்தானே என இரங்கிக் கூறுவார் போல அனுமனுருவைப் புகழ்ந்தவாறு. நம் துயர் மறித்திலன் என்றார் என்க. மறித்தல்-வராமல் தடுத்தல். (35)

8871. மேகத்தின் பதங்கடந்து, வெங்கதிருந்
தண்கதிரும் விரைவிற் செல்லும்
மாகத்தி னெறிக்கப்பால் வானமீன்
குலம்வழங்கும் வரம்பு நீங்கிப்
போகத்தி னெறிகடந்தார் புகலிடங்கள்
பிற்படப்போய்ப் பூவின் வந்த
ஏகத்தந் தணனிருக்கை யினிச்சேய்த்தன்
றுமென்ன வெழுந்து சென்றான்.

மேகத்தின் பதம் கடந்து, வெங்கதிரும்
தண்கதிரும் விரைவில் செல்லும்
மாகத்தின் நெறிக்கு அப்பால், வானமீன்
குலம்விளங்கும் வரம்பு நீங்கி,
போகத்தின் நெறி கடந்தார் புகலிடங்கள்
பிற்படப் போய், 'பூவின்வந்த
ஏகத்து அந்தணன் இருக்கை இனிச்சேய்த்து
அன்றும்' என்ன எழுந்து சென்றான்.

பொ :: மேக மண்டலத்தைக் கடந்து வெப்பமிக்க கிரணங்களை யுடைய சூரியனும் குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரனும் விரைந்து செல்லுகின்ற வான வழிக்கு அப்பால், விண்மீன்களின் கூட்டம் இயங்குகின்ற நட்சத்திர மண்டலத்தையும் கடந்துசென்று பெண்டிரோடு கலந்து துய்க்கும் போகத்தின் நெறியையே கடந்தவர் களான தவத்தினர் இருப்பிடங்களாகிய தவலோகம் பிற்படுமாறு உயர்ந்து போய், உந்திக் கமலத்தில் தோன்றிய ஒருவனாகிய பிரமனது சத்திய உலகம் இனிச் சேயது அன்று; (அண்மையதே) ஆம் என்னுமாறு உயர்ந்து சென்றான்.

கு :- மேக மண்டல முதல் நட்சத்திர மண்டலம் வரையில் கடந்து சென்றவன், அதற்கு மேலுள்ள தவலோகத்தையும் கடந்து பிரமனது சத்தியலோகத்தின் அருகுவரையில் உயர்ந்து சென்றான் என்க. மாகம்-ஆகாயம். போகத்தின் நெறிகடந்தார் புகலிடம் என்றது தவலோகத்தை. சிற்றின்பத்தைத் துறந்து பேரின்பத்தை விரும்பி என்றும் தவத்தில் இருக்கும் தவத்தினர் தங்கும் இடம் ஆதலின், அப் பெயரால் கூறினார். தனக்குவமையில்லாத ஓர் அந்தணன் என்று பிரமனைச் சிறப்பித்தவாறு. பிரமனது சத்தியலோகத் திற்கு அருகில் சென்றான் என்பார், 'இனிச் சேய்த்தன்றுமென்ன' என்றார். (36)

விண்வழிச் செல்லும் அனுமனைக் கண்டு
விண்ணவர் பலவாறு கூறுதல்

8872. வானநாட் டுறைகின்றார் வயக்கலுழன்
வயுவிசையான் மாயான் வைகும்
தானநாட் டுறுகின்றா னென்று றைந்தார்
சிலர்சிலர்கள் விரிஞ்சன் றன்றன்

ஏன நாட் டெழுகின்று னென்றுரைத்தார்
சிலர்சிலர்க ளீச னல்லார்
போன நாட் டிடைபோக வல்லரோ
விவன் முக்கட் புனித னென்றார்.

வானநாட்டு உறைகின்றார், 'வயக்கலுழன்
வல்விசையால், மாயன் வைகும்
தானநாட்டு எழுகின்றான்' என்றுஉரைத்தார்
சிலர்சிலர்கள் 'விரிஞ்சன் தான்தன்
ஏனநாட்டு எழுகின்றான்' என்றுஉரைத்தார்
சிலர்சிலர்கள் 'ஈசன் அல்லால்
போனநாட்டிடை போக வல்லரோ?
இவன்முக்கண் புனிதன்' என்றார்.

பொ :- வானநாட்டில் வாழ்கின்றவர்கள் சிலர் 'வலிமைமிக்க கருடன் வலிய வேகத்தோடு திருமால் தங்கியுள்ள இடமாகிய வைகுந்தத்திற்குச் செல்கின்றான்' என்று சொன்னார்கள். வேறுசிலர் 'பிரமன் தான் தன் நாட்டினும் வேறாகிய நாட்டிற்குச் செல்ல எழுகின்றான்' என்று சொன்னார்கள். சிலர்சிலர், 'சிவன் அல்லாதவர்கள், மிகவும் உயர்ந்துபோன நாட்டிடையே செல்ல வல்லவர்களோ' (அல்லர்; ஆதலின்) இவன், மூன்று கண்களையுடைய தூயவனாகிய சிவனே' என்று சொன்னார்கள்.

கு :- அனுமன் விண்ணில் விரைந்து செல்வதுகண்ட விண்ணாட்டவர்கள் அவனைக் கருடனாகவும் பிரமனாகவும் சிவனாகவும் எண்ணினர் என்றவாறு. வய-வலி. விரிஞ்சன்-பிரமன். ஏனநாடு-பிற நாடு. போனநாடு என்றது எல்லா நாட்டினும் உயர்ந்துபோன நாடு என்றபடி. ஈசனல்லார் போன நாட்டிடை போக வல்லரோ? என்றமையால், 'போன நாட்டிடை போகும் இவன்முக்கட்புனிதனே' என்று அருத்தாபத்தியால் முடிவு செய்தவாறு. போதல். இங்கு எல்லாநாட்டினும் உயர்ந்து போதலை உணர்த்தியது. (37)

### அனுமனைத் திருமாலாகவே எண்ணுதல்

8873. வேண்டுருவங் கொண் டெழுந்து விளையாடு
கின்றான்மெய் வேத நான்கும்
தீண்டுருவ னல்லாத திருமாலே
யிவனென்றார் தெரிய நோக்கிக்

காண்டுமென விமைப்பதன்முன் கட்புலத்தைக்
கடந்தகலு மின்னுங் காண்மின்
மீண்டுவருந் தரமல்லன் வீட்டுலகம்
புகுமென்றார் மேன்மே லுள்ளார்.

'வேண்டுஉருவம் கொண்டு எழுந்து,
விளையாடுகின்றான், மெய்வேதம் நான்கும்
தீண்டுஉருவன் அல்லாத திருமாலே
இவன்'என்றார், 'தெரிய நோக்கிக்
காண்டும்'என இமைப்பதன்முன் கட்புலமும்
கடந்துஅகலும்; இன்னும் காண்மின்,
மீண்டுவரும் தரம்அல்லன், வீட்டுலகம்
புகும்'என்றார், மேன்மேல் உள்ளார்.

பொ:- மேல்மேல் உள்ள 'உலகத்தவர்கள்,விரும்பிய உருவந்தாங்கி விளையாடுகின்றவனாகிய இவன், உண்மையான வேதங்கள் நான்கும் எட்டுதற்குரிய வடிவினன் அல்லாத திருமாலே' என்றார்; 'தெளிவுற நோக்கிப் பார்ப்போம்' என்று நினைக்க, இமைப்பொழுதிற்கு முன்னமே கட்புலத்தைக் கடந்து செல்லுவான். இன்னும் பாருங்கள். இவன் திரும்பிவரும் தன்மையன் அல்லன், வீட்டுலகத்திற்கும் போவான்' என்று கூறினார்கள்.

கு:- மேலைச் செய்யுளில் வானநாட்டவர் கூறியதைத் தெரிவித்தவர் இச் செய்யுளில் அதற்கு மேலுள்ள நாட்டவர் கூறுவதைத் தெரிவிக்கின்றார். வேதங்களால் எட்டமுடியாத உருவினன் திருமால் என்பார், வேதம் நான்கும் தீண்டுருவன் அல்லாத திருமால் என்று கூறினார். வடிவம் வானரமாக இருத்தல்கொண்டு திருமால் அல்லன் என எண்ணல் ஆகாது என்பார், 'வேண்டுருவில் கொண்டு எழுந்து விளையாடுகின்றான்' என்றார். 'தெரிய நோக்கிக் காண்டும்' என்று எண்ணுவதற்குள் அவன் உருவம் கட்புலத்திற்கு எட்டாது மறைதலின் 'இமைப்பதன் முன் கட்புலத்தைக் கடந்தகலும், என்றார். அவன் இயல்பை மேலும் கூற விழைகின்றார் ஆகலின் 'இன்னுங் காண்மின்' என்றார். எல்லாவுலகங்கட்கு மேல்நிலையில் இருப்பது வீட்டுலகம் என்பது நூல்வழக்கு ஆகலின், எல்லாவற்றையும் கடந்து விரைந்துசெல்லும் அனுமனை 'வீட்டுலகம் புகும்' என்று எண்ணலானார்கள். மீட்டிங்கு வாரா நெறியது வீடு ஆகலின், 'மீண்டு வருந் தரமல்லன்' என்றார். விளையாடுகின்றானாகிய இவன் திருமாலே என இயையும். (38)

## அநுமனுருவை பற்றிப் பலவாறு எண்ணுதல்

8874. உருவென்றார் சிலர்சிலர்க ளொளியென்றார்
சிலர்சிலர்க ளொளிரு மேனி
அருவென்றார் சிலர்சிலர்க ளண்டத்துக்
கப்புறநின் றுலக மாக்கும்
கருவென்றார் சிலர்சிலர்கள் காற்றென்றார்
சிலர்சிலர்கள் கடலைத் தாவிச்
செருவென்ற னிலையொன்றுந் தெரியகிலா
ருலகனைத்துந் தெரியுஞ் செல்வர்.

'உரு'என்றார், சிலர்சிலர்கள்; 'ஒளி'என்றார்.
சிலர்சிலர்கள் ஒளிரு மேனி
'அரு'என்றார்; சிலர்சிலர்கள் அண்டத்துக்கு
அப்புறம்நின்று உலகம் ஆக்கும்
'கரு'என்றார், சிலர்சிலர்கள்; 'மற்று'என்றார்,
சிலர்சிலர்கள்; கடலைத் தாவிச்
செருவென்றான் நிலைஒன்றும் தெரியஇலார்—
உலகுஅனைத்தும் தெரியும் செல்வர்.

பொ :- உலகனைத்தையும் தெரிந்துணர்ந்த ஞானச் செல்வராகிய பெரியோர், கடலைத் தாண்டி அரக்கரைப் போரில் வென்றவனாகிய அநுமனது நிலையைச் சிறிதும் தெரியாதவர்களாயினர். ஆதலால், அவருள் சிற்சிலர் விளக்கமுடைய அநுமன் மேனியை உருவப் பொருளே என்றார்கள். வேறு சிற்சிலர் அவனை ஒளியுருவினன் என்றார்கள்; அருவப் பொருளே என்றார்கள், மற்றுஞ் சிலர்சிலர்; அண்டத்துக்கு அப்புறத்தில் நின்று உலகத்தைப் படைக்கும் காரணப் பொருள் என்றார்கள் சிலர்சிலர் மற்றுஞ் சிலர்சிலர் காற்றுத்தான் என்றார்கள்.

கு :- விண்ணில் விரைந்துசெல்லும் அநுமன் ஒவ்வொரு சாரார்க்கு ஒவ்வொரு வகையாகத் தோன்றினமை இதனால் புலப்படுத்தியவாறு. உலகனைத்துந் தெரியும் செல்வர்க்கும் அநுமன் உருவம் ஐயத்தை விளைத்தது என அவ் வுருவின் சிறப்பினைப் புலப்படுத்திய வாறு. (39)

### அனுமன் வேகத்தால் உண்டான ஒலி

8875. வாசநாண் மலரோன் ற னுலகளவும்
நிமிர்ந்தனன்மேல் வான ரான
காசமா யினவெல்லாங் கரந்த தன
தருவிடையே கனகத் தோள்கள்
வீசவான் முகடுரிஞ்ச விசைத் தெழுவா
னுடற்பிறந்த முழக்கம் விம்ம
ஆசைகா வலர்தலைகள் பொதிரெறிந்தார்
விதிரெறிந்த தண்ட கோளம்.

வாசநாள் மலரோன்தன் உலகஅளவும்
நிமிர்ந்தனன், மேல்வானம் ஆன
காசம் ஆயினஎல்லாம் கரந்ததனது
உருவிடையே கனகத் தோள்கள்
வீச,வான் முகடுஉரிஞ்ச, விசைத்துஎழுவான்
உடற்பிறந்த முழக்கம் விம்ம
ஆசை காவலர்தலைகள் பொதிரெறிந்தார்
விதிரெறிந்த தண்ட கோளம்.

பொ : மணம் பொருந்திய அன்றலர்ந்த தாமரை மலரில் வாழ்கின்ற பிரமனுடைய உலகத்தின் அளவும் நிமிர்ந்து நின்றவனாகிய அனுமன் மேல்வானம் ஆகிய ஆகாசம் முழுமையும் மறைத்த தன்னுடைய உருவத்தில் உள்ள பொன்னிறத் தோள்களை வானத்தின் உச்சியில்பட்டுத் தேய்க்கும்படி வீசுதலால், விசையால் எழுகின்ற அவனது உடம்பில் பிறந்த முழக்கம் மிக, அதனால் திசைக்காவலர்கள் தலை நடுக்கங்கொண்டனர்; அண்டமாகிய உருண்டை விதிர் விதிர்ப்பு எய்தியது.

கு : - நிமிர்ந்தனன் என்பது வினைப்பெயர். ஆசை—திசை. முகடு – உச்சி. பொதிரெறிதல்—நடுக்கம் கொள்ளுதல். காசம், முதற்குறை, ஆகாசம் என்க. (40)

### அனுமன் பேருருவம் உலகளக்க எடுத்த பாதத்தை ஒத்துத் தோன்றல்

8876. தொடுத்தநாண் மாலை வானோர்
முனிவரே முதல தொல்லோர்
அடுத்தநான் மறைக ளோதி
வாழ்த்தவா ளவுணர் வேந்தன்

**கொடுத்தநா ளளந்து கொண்ட**
**குறளனூர் குறிய பாதம்**
**எடுத்தநா ளொத்த தண்ண**
**லெழுந்தநா ளுலகுக் கெல்லாம்.**

தொடுத்தநாள் மாலை வானோர்
முனிவரே முதல தொல்லோர்,
அடுத்தநான் மறைகள் ஓதி
வாழ்த்த,வாள் அவுணர் வேந்தன்
கொடுத்தநாள், அளந்து கொண்ட
குறளனூர் குறிய பாதம்
எடுத்தநாள் ஒத்தது—அண்ணல்
எழுந்தநாள், உலகுக்கு எல்லாம்.

பொ :- பெருமையிற் சிறந்தவனாகிய அனுமன் வளர்ந்து எழுந்த நாள் உலகுக்கெல்லாம்,—அன்றலர்ந்த மலர்களைத் தொடுத்த மாலையை அணிந்த தேவர்களும் முனிவர் முதலிய பெரியோர்களும் தமக்குரிய நான்கு வேதங்களை ஓதிக்கொண்டு வாழ்த்துக் கூறாநிற்க. அவுணர் வேந்தனாகிய மாபலி தாரைவார்த்துக் கொடுத்த நாளில் உலகத்தை அளந்துகொண்ட வாமனமூர்த்தியின் குறுகிய அளவினை யுடைய பாதத்தை (பெரிதாக்கி) விண்ணின்மேல் எடுத்த நாளை ஒத்து மகிழ்வூட்டியது.

கு :- வாமனனுடைய எடுத்த திருவடியை ஒத்தது அனுமனது பேருருவம் என்றவாறு. இதனால், சிறியதிருவடி எனப் பெயர்பெற்ற அனுமன், உருவத்தாலும் அத் திருவடியை ஒத்தவாறு கூறியவாறு ஆயது. வானோர், தொல்லோர், ஓதிவாழ்த்த, அளந்துகொண்ட குறளனூர் என இயையும். இரண்டு அடி உயரமுள்ளவனாக இருந்தமையின் வாமனன் குறளனூர் எனப்பட்டான். மண்ணுலகை ஓரடியால் அளந்தபின் விண்ணுலகை அளக்க மேலே எடுத்த பாதம் உயர்ந்து சென்றதுபோல, அனுமன் முன்னம் குறியனாக இருந்து, மருந்துமலை கொணரப் பேருருவெடுத்துத்தோன்றினான் என்றவாறு. வாமனனாய்த் திருமால் உலகளந்தது உலகுக்கு மகிழ்ச்சியளித்தது போலவே, அனுமன் மருந்துமலை கொணரப் பேருருவெடுத்ததும் உலகுக்கெல்லாம் மகிழ்ச்சியையூட்டியது என்றவாறு. 'மகிழ் வூட்டியது' என்பது எச்சமாக வந்தியையும். அண்ணல் எழுந்த நாள், உலகுக்கெல்லாம் குறளனூர்குறியபாதம் எடுத்தநாள் ஒத்தது என இயையும். (41)

## வானவர் முதலோர் சொரிந்த மலர் முதலியவற்ருல் அனுமன் கற்பகத் தருப்போலத் தோன்றுதல்.

8877. தேவரு முனிவர் தாமுஞ்
சித்தருந் தெரிவை மாரும்
மூவுல கிடையு ளோரு
முவகையாற் ருெடர்ந்து மொய்த்தார்
தூவின மலருஞ் சாந்துஞ்
சுண்ணமு மணியும் தொத்தப்
பூவுடை யமரர் தெய்வத்
தருவென விசும்பிற் போனுன்.

தேவரும் முனிவர் தாமும்,
சித்தரும் தெரிவை மாரும்,
மூவுல கிடை உளோரும்
உவகையால் தொடர்ந்து மொய்த்தார்
தூவின மலரும் சாந்தும்
சுண்ணமும் மணியும் தொத்த,
பூவுடை அமரர் தெய்வத்
தருஎன, விசும்பில் போனுன்.

பொ. - தேவர்களும் முனிவர்களும், சித்தர்களும் அவர்கள் தேவிமாரும் மூவுலகத்தில் உள்ளவர்களும் மகிழ்ச்சி மேலீட்டினுல் தொடர்ந்து விண்ணில் நெருங்கினவர்களாய்த் தூவிய மலர்களும் சந்தனமும் சுண்ணப் பொடியும் மணிகளும் அனுமன், தன்மேல் தொத்தி நிற்க, தேவர்களுக்கு உரிய மலர்களையுடைய தெய்வத் தன்மைவாய்ந்த கற்பகத்தரு என்னுமாறு விண்வழியே போனுன்.

கு:- தேவர் முதலியோர் சொரிந்த மலர் முதலியன அனுமனுடைய உடம்பில் தொத்திக்கொண்டுள்ள தோற்றம், மலர் நிறைந்த கற்பகத்தருப் போலத் தோன்றிற்று என்றவாறு. தொத்துதல்—ஒட்டிக்கொள்ளுதல். அனுமனுடம்பில் உள்ள மயிர்களில் மலர் முதலியன தொத்திக்கொண்டு நின்றன என்றவாறு. (42)

## அனுமன் கயிலைகண்டு மகிழ்ந்து போதல்

8878. இமயமால் வரையை யுற்று
னங்குள விமைப்பி லோரும்
கமையுடை முனிவர் மற்று
மறனெறி கலந்தோ ரெல்லாம்
அமைகநின் கரும மென்று
வாழ்த்தின ரதனுக் கப்பால்
உமையொரு பாகன் வைகுங்
கயிலைகண் டுவகை யுற்றான்.

இமயமால் வரையை உற்றான்;
அங்குஉள இமைப்பி லோரும்;
கமையுடை முனிவர், மற்றும்
அறன்நெறி கலந்தோர்; எல்லாம்;
'அமைக,நின் கருமம்!' என்று
வாழ்த்தினர்; அதனுக்கு அப்பால்;
உமையொரு பாகன் வைகும்
கயிலைகண்டு; உவகை உற்றான்.

பொ : - அனுமன் இமயம் என்னும் பெரிய மலையை அடைந்தான்; அங்கு வாழும் இமையா நாட்டத்தவர்களாகிய தேவர்களும் பொறுமையுடைய முனிவர்களும் மற்றுமுள்ள அறநெறியில் வாழ்கின்ற பெரியோர்களும் எல்லோரும், (அனுமனைப் பார்த்து) 'நின் காரியம் இனிதாக அமைவதாக' என்று வாழ்த்தினார்கள்; அந்த இமயத்திற்கு அப்பால், உமையவளை ஒரு பாகத்தில் கொண்டுள்ள சிவன் தங்கியுள்ள கயிலை மலையைக்கண்டு மகிழ்ச்சியுற்றான்.

கு : - மருந்து கொணர்ந்து இறந்தவரை எழுப்புகின்ற அனுமன் கருமம் 'வெற்றி தந்து அமைக' என இமயமலையில் உள்ள தேவர் முதலியோர் வாழ்த்துக் கூறினர் என்க. பெரியோர் வாழ்த்தும் நற்செயலுக்குத் துணைசெய்வதேயாகும். கயிலை என்பது இமய மலையின் தொடர்ச்சியேயாதலின் இமயத்தையடுத்துக்கயிலை கண்டதாகக் கூறினர். உமையம்மையைத் தன் இடப்பாகத்தில் கொண்டவன் சிவன் ஆதலின், 'உமையொரு பாகன்' என அவனைக் குறிப்பிட்டார். (43)

## சிவன் அனுமனை உமைக்குக்காட்டிக் கூறுதல்

8879. வடகுண திசையிற் றோன்று
மழுவலா ணுண்டு வைகும்
தடவரை யதனை நோக்கித்
தாமரைச் செங்கை கூப்பிப்
படர்குவான் றன்னை யண்ணல்
பரமனும் விரும்பிப் பார்த்துத்
தடமுலை யுமைக்குக் காட்டி
வாயுவின் றநய னென்றான்.

வடகுண திசையில் தோன்றும்,
மழுவலான் ஆண்டு வைகும்
தடவரை அதனை நோக்கி,
தாமரை கைகள் கூப்பி,
படர்குவான் தன்னை, அண்ணல்
பரமனும் விரும்பிப் பார்த்துத்
தடமுலை உமைக்குக் காட்டி
வாயுவின் தநயன் என்றான்.

பொ :- அங்கு மழுவாயுதந்தையுடைய சிவன் தங்கியிருப்பதும் வட கிழக்கில் தோன்றுகின்றதுமாகிய பெரிய சிகரத்தைப் பார்த்துத் தன் தாமரை மலர்போன்ற சிவந்த கைகளைக் குவித்து வணங்கிச் செல்கின்ற அனுமனைப் பெருமையிற்சிறந்தவனாகிய சிவ பரம்பொருளும் விரும்பிப் பார்த்துப் பருத்த நகில்களையுடைய உமையம்மைக்கும் அவனைச் சுட்டிக்காட்டி 'வாயு தேவனுடைய மகன் அனுமன்' என்று கூறினான்.

கு :- கயிலாய மலையில் ஈசான திசையில் உள்ள சிகரமே சிவன் தங்கியுள்ள சிகரம் ஆகலின், ஆண்டு, வடகுண திசையில் தோன்றும் தடவரை அதனை நோக்கி அனுமன் கைகூப்பியதாகக் கூறினார். தோன்றும் தடவரை, மழுவலான் வைகும் தடவரை, எனத் தனித் தனி இயையும். வடகுண திசை, ஈசன் தங்கியுள்ள திசையாதல் பற்றி ஈசான திசையென்றே பெயர்பெற்றுவிட்டது. பரமன் விரும்பிப் பார்ப்பதையறிந்த பார்வதி, அவன் யார்? என்று அவாவி அறியும் குறிப்பினளாதல் அறிந்து சிவன், 'வாயுவின் தநயன்' என்று சுட்டிக்காட்டிப் பெயர் கூறியவாறு. (44)

**உமையின் வினவுக்குச் சிவன் விடை பகர்தல்**

8880. என்னிவ னெழுந்த தன்மை
யென்றுல கீன்றாள் கேட்ப
மன்னவ னிராமன் றூதன்
மருந்தின்மேல் வந்தான் வஞ்சர்
தென்னக ரிலங்கைத் தீமை
தீர்வது திண்ணஞ் சேர்ந்து
நன் னுத ணாமும் வெம்போர்
காணுது நாளை யென்றான்.

'என்,இவன் எழுந்த தன்மை?'
என்று,உலகு ஈன்றாள் கேட்ப.
'மன்னவன் இராமன் தூதன்
மருந்தின்மேல் வந்தான்; வஞ்சர்
தென்நகர் இலங்கைத் தீமை
தீர்வது திண்ணம்; சேர்ந்து,
நன்னுதல்! நாமும் வெம்போர்
காணுதும், நாளை' என்றான்.

பொ:- 'இவன் விண்ணில் எழுந்து செல்வதற்குக் காரணம் என்ன' என்று உலகத்தையீன்ற உமையவள் கேட்க, (சிவன்) 'நல்ல நெற்றியுடையவளே! மன்னவர் குலத்துப் பிறந்த இராமனது தூதன் ஆகிய இவன் மருந்தைக் கொண்டுபோக வந்திருக்கின்றான். வஞ்சகர்களாகிய அரக்கர்க்குரிய தென்திசையில் உள்ள நகராகிய இலங்கையினால் உளதாகிய தீமை இனித் தீர்வது திண்ணம்; நாளை நாமும் தேவரோடு சேர்ந்து கொடிய போரைக் காண்போம்' என்று கூறினான்.

கு:- இலங்கையினாலுளதாகிய தீமையை 'இலங்கைத் தீமை' என்றார். இலங்கையைப் பற்றியிருந்த தீமை எனக் கூறலும் ஆம். (45)

**அனுமன் ஏமகூடத்தையும் நிடதத்தையும் முறையே அடைதல்**

8881. நாமயோ சனைகள் கொண்ட
தாயிர நடுவு நீங்கி
ஏமகூ டத்தி னுப்ப
ரெய்தினின் றிறுதி யில்லாக்

**காமமே நுகருஞ் செல்வக்**
**கடவுள ரீட்டங் கண்டான்**
**நேமியின் விசையிற் செல்வா**
**னிடதத்தி னெற்றி யுற்ருன்.**

நாம யோசனைகள் கொண்டது
ஆயிரம் நடுவு நீங்கி,
ஏம கூடத்தின் உம்பர்
எய்தினன், இறுதி இல்லாக்
காமமே நுகரும் செல்வக்
கடவுளர் ஈட்டங் கண்டான்;—
நேமியின் விசையின் செல்வான்—
நிடதத்தின் நெற்றி உற்ருன்.

பொ :- சக்கரப் படைபோல விரைவாகச் செல்கின்ற அனுமன், பெயர்பெற்ற (ஒன்பதின்) ஆயிரம் யோசனை தொலைவு கொண்ட நடுவிடத்தைத் தாண்டி ஏமகூடமலையின்மேல் அடைந்து நின்று, முடிவிலாத காம இன்பத்தையே துய்க்கின்ற செல்வச் சிறப்பினை யுடைய தேவர்களின் கூட்டத்தைக் கண்டான்; பின்பு நிடதமலையின் உச்சியையடைந்தான்.

கு :- கயிலைக்கும் ஏமகூடத்திற்கும் உள்ள தொலைவு ஒன்பதி ஞயிரம் யோசனை என்க. இங்குக் கடவுளர் ஈட்டம் என்றது, கின்னரர் கிம்புருடர் போன்ற தேவசாதியினரை. நேமி—சக்கரப்படை.
(46)

### அனுமன் மேருமலையை அடைதல்

8882. **எண்ணுக்கு மளவி லாத**
**வறிவினே ரிருந்து நோக்கும்**
**கணணுக்குங் கருதுந் தெய்வ**
**மனத்திற்குங் கடின ஞனன்**
**மண்ணுக்குந் திசைகள் வைத்த**
**வரம்பிற்கு மலரோன் வைகும்**
**விண்ணுக்கு மளவை மாய**
**மேருவின் மீது சென்ருன்.**

எண்ணுக்கும், அளவு இலாத
அறிவினோர் இருந்து நோக்கும்
கண்ணுக்கும், கருதும் தெய்வ
மனத்திற்கும் கடியன் ஆனான்,
மண்ணுக்கும், திசைகள் வைத்த
வரம்பிற்கும், மலரோன் வைகும்
விண்ணுக்கும், அளவை ஆன
மேருவின் மீது சென்றான்.

பொ :- (மனிதர்) எண்ணத்திற்கும், அளவிட முடியாத அறிவினையுடைய ஞானிகள், இருந்தவாறே எல்லாவற்றையும் நோக்குகின்ற ஞானக் கண்ணுக்கும், எல்லாவற்றையும் கருதவல்ல தெய்வ மனத்திற்கும் பின்பற்ற முடியாத வேகத்தையுடையவனாகிய அனுமன், மண் உலகத்திற்கும் திசைகளுக்குரியவாக வைத்த எல்லைக்கும் பிரமன் தங்கியுள்ள சத்திய லோகமாய விண்ணுலகத்திற்கும் அளவு கருவிபோல் உள்ளதான மேருமலையின்மீது போனான்.

கு :- எண்—எண்ணம். அனுமனுடைய பெரிய வேகத்தைப் புலப்படுத்தியவாறு. அளவிலாத அறிவினோர் என்றது, ஞானியரை. அவர்கள் இருந்த இடத்தில்இருந்தே அனைத்தையும் ஞானக்கண்ணால் நோக்கியறிவாராகலின் ‘இருந்து நோக்கும் கண்’ என்று ஞானக் கண்ணைச் சிறப்பித்தார். மனிதர் மனத்திற்கும் கடியனாதலை மேலே கூறிவிட்டமையின் ‘கருதும் தெய்வ மனத்திற்கும்’ எனத் தெய்வ மனத்தை இங்குக் கூறியவாறு. கடியன்—விரைவுடையவன். மக்கள் மனத்தாலும் ஞானக் கண்ணாலும் தெய்வ மனத்தாலும் பின்பற்ற முடியாத வேகத்தையுடையவன் அனுமன் என்றவாறு. மேருமலை தரைக்குமேல் எவ்வளவு உயர்ந்துள்ளதோ அந்த அளவு தரைக்குக் கீழும் ஆழ்ந்துகிடப்பது ஆகலின், ‘மண்ணுக்கு அளவையாய மேரு’ என்றும், திசைகளின் எல்லைவரை விரிந்துள்ளது ஆதலின், திசைகள் வைத்த வரம்பிற்கும் அளவையாய என்றும், பிரமனுலகம்வரை உயர்ந்திருப்பது தோன்ற, ‘மலரோன் வைகும் விண்ணுக்கும் அளவையாய மேரு’ என்றும் கூறினர். இதனால், மேருமலையின் கீழெல்லையும் பரப்பும் உயரமும் புலப்படுத்தியவாறு. (47)

மேருமலையில் நாவல் மரத்தை
அனுமன் பார்த்தல்

8883. யாவது நிலைமைத் தன்மை
யின்னதென் றிமையா நாட்டத்
தேவருந் தெரிகிலாத
வடமலைக் கும்பர்ச் சென்றான்

நாவலம் பெருந்தீ வென்ன
நளிர்கடல் வளாக வைப்பில்
காவன்மூன் றுலக மோதுங்
கடவுண்மா மரத்தைக் கண்டான்.

'யாவது நிலைமைத் தன்மை
இன்னது,என்று' இமையா நாட்டத்
தேவரும் தெரிகி லாத
வடமலைக்கு உம்பர்ச் சென்றான்;
நாவலம் பெருந்திவு என்ற
நளிர்கடல் வளாக வைப்பில்
காவல்மூன்று உலகம் ஓதும்
கடவுள்மா மரத்தைக் கண்டான்.

பொ:- இமைத்தல் இல்லாத கண்களையுடைய தேவரும் நிலையாக உள்ள தன்மையாவது எனச் சிறிதும் தெரியவியலாத மேருமலைக்கு மேல் சென்று குளிர்ந்த கடலால் சூழப்பட்ட இடமான பூமியில் பெரிய நாவலந்திவு என்று காவலையுடைய மூன்று உலகத்தாரும் சிறப்பித்துக் கூறுவதற்குக் காரணமான தெய்வத்தன்மையுடைய பெரிய நாவல் மரத்தைக், கண்டான்.

கு:- மேருமலையின் இயல்பு இன்னதென்று இமையாத கண்களையுடைய தேவர்க்கும் தெரியாது என அம் மலையின் சிறப்புப் புலப்படுத்தியவாறு. இமைக்கும் கண்ணையுடைய மனிதர் தெரிகிலாமை வியப்பன்று என்ற கருத்துத் தேவர்க்குக் கொடுத்த அடையால் புலனாதல் காணலாம். நாவலந்திவு என்று பெயர் பெறுதற்குக் காரணமாயிருந்த நாவல் மரம் மேருமலையில் இருப்பதை அனுமன் கண்டான் என்றவாறு. (48)

மேருமலையின் நடுவில் உள்ள
பிரமனைக் கண்டு வணங்குதல்

8384. அன்னமா மலையி னும்ப
உலகெலா மமைத்த வண்ணல்
தன்னக ரதனை நோக்கி
டதனடு நாப்ப ணுமைப்

பொன்மலர்ப் பீடந் தன்மே
னான்முகன் பொலியத் தோன்றும்
தன்மையுங் கண்டு கையால்
வணங்கினான் றருமம் போல்வான்.

அன்னமா மலையின் உம்பர்,
உலகுஎலாம் அமைத்த அண்ணல்
தன்நகர் அதனை நோக்கி,
அதன்நடு நாப்பண் நாமப்
பொன்மலர்ப் பீடம் தன்மேல்
நான்முகன் பொலியத் தோன்றும்
தன்மையும் கண்டு கையால்
வணங்கினான் தருமம் போல்வான்.

பொ :- அந்த மேருமலையின் உச்சியில், உலகம் எல்லாவற்றையும் படைத்த பிரமனுடைய நகரைப் பார்த்து அந்த நகரத்தின் நட்ட நடுவே அஞ்சத்தக்க பெருமையுடைய பொற்றாமரை மலர்ப்பீடத்தின் மேல் நான்முகங்களையுடைய பிரமன் பொலிவுறத் தோன்றும் தன்மையும் கண்டு தருமம் போல்வனாகிய அனுமன் தன் கையால் வணங்கினான்.

கு :- நடுநாப்பண் என்பது மீமிசைச் சொல். மேருமலை உச்சியில் மனோவதி என்னும் பிரமனுலகம் இருப்பதையும் அவ் வுலகின் நடுவில் பிரமன் நான்கு முகங்களோடு பொற்றாமரை மலர்மேல் பொலிய வீற்றிருப்பதையும் அனுமன் கண்டு வணங்கினான் என்றவாறு. தருமம் போல்வன் அனுமன் ஆதலின் பிரமனை நேரில் காணும் பேறுபெற்றான் என்பது அப் பெயரால் புலப்படுத்தியவாறு. (49)

### அனுமன் வைகுண்டத்தில் நாரணனைக் கண்டுவணங்குதல்

8885. தருவன மொன்றில் வானோர்
தலைத்தலை மயங்கித் தாழப்
பொருவரு முனிவர் வேதம்
புகழ்ந்துரை யோதை பொங்க
மருவிரி துளவ மோலி
மாநிலக் கிழத்தி யோடும்
திருவொடு மிருந்த மூலத்
தேவையும் வணக்கஞ் செய்தான்.

தருவனம் ஒன்றில் வானோர்
தலைத்தலை மயங்கித் தாழ,
பொருஅரு முனிவர் வேதம்
புகழ்ந்துஉரை ஓதை பொங்க,
மருவிரி துளப மோலி
மாநிலக் கிழத்தி யோடும்
திருவொடும் இருந்த, மூலத்
தேவையும் வணக்கம் செய்தான்.

பொ :- (அந்தப் பிரமன் உலகத்திற்கு மேலைத் திசையில் உள்ள) மரங்கள் அடர்ந்துள்ள காடு ஒன்றில் தேவர்கள் இடங்கள் இடங்கள்தோறும் கலந்து வணங்கா நிற்க, ஒப்பற்ற முனிவர்கள் வேத மந்திரங்களோடு புகழ்ந்துசொல்லும் ஒலிமிக்குத் தோன்ற, மணம் வீசும் துளவ மாலையணிந்த முடியினையுடையனாய்ப், பூதேவி யோடும் சீதேவியோடும் வீற்றிருந்த, எல்லாவற்றிற்கும் மூலமாக உள்ள நாராயணனையும் வணக்கம் செய்தான்.

கு :- திருமால் முல்லை நிலத் தெய்வம் என்பதற்கேற்ப மேரு மலையிலும் தருவனம் ஒன்றில்தான் தங்கியிருப்பான் என்பது இங்குப் புலப்படுத்தியவாறு. "மாயோன் மேய காடுறை யுலகமும்" (தொல்-அகத்-5) என்பதும் நினைக. மயங்குதல்—கலத்தல். தாழ, பொங்க, கிழத்தியோடும் திருவொடும் இருந்த மூலத்தேவு என இயையும். மாநிலக்கிழத்தி என்றது, பூமிதேவியை. எல்லாப் பொரு ளின் தோற்றத்திற்கும் மூலப்பொருளாய் இருத்தலின், நாரணன் மூலத்தேவு எனப்பட்டான். மூலத்தேவு என்பதற்கு இராம அவதா ரத்திற்கு மூலமான தேவு எனப் பொருள் கூறலும் ஆம். (50)

### ஈசனைக் கண்டு வணங்குதல்

8886. ஆயதன் வடகீழ் பாகத்
தாயிர மருக்க ரான்ற
காய்கதிர் பரப்பி யைந்து
கதிர்முகக் கமலங் காட்டித்
தூயபே ருலக மூன்றுந்
தூவிய மலரிற் சூழ்ந்த
சேயிழை பாகத் தெண்டோ
ளொருவனை வணக்கஞ் செய்தான்.

ஆயதன் வடகீழ் பாகத்து
ஆயிரம் அருக்கர் ஆன்ற
காய்கதிர் பரப்பி, ஐந்து
கதிர்முகக் கமலம் காட்டி
தூயபேர் உலகம் மூன்றும்
தூவிய மலரின் சூழ்ந்த
சேயிழை பாகத்து, எண்தோள்
ஒருவனை வணக்கம் செய்தான்.

பொ :- அந்த மனேவதிக்கு வடகிழக்கு மூலையில் ஆயிரம் சூரியர்களின் நிறைந்த ஒளிவீசும் கதிர்களைப் பரப்பிக்கொண்டு, ஐந்து ஒளிவாய்ந்த முகங்களாகிய தாமரைகளைக் காட்டிக்கொண்டு தூயனவாகிய, பெரிய உலகம் மூன்றில் உள்ளோரும் அருச்சனையாகத் தூவிய, மலர்களால் சூழப்பெற்று செம்மையான அணிகலன்களை அணிந்த மனோன்மணியம்மையைப் பாகத்தில் கொண்டுள்ள, எட்டுத் தோள்களையுடைய சதாசிவனைக் கண்டு வணக்கம் செய்தான்.

கு :- பிரமன் வாழும் மனேவதி மேருமலையின் நடுவண் இருக்கின்றதாக மேற்கூறினமையின், 'அதன் வடகீழ் பாகத்து' என அதனை எல்லையாகக்கொண்டு சதாசிவனுடைய இருப்பிடத்தை விளக்கினர், "மேருவரை யதற்கு நடுப் பிரமன் மூதூர் மிக்க மனேவதி, அதற்கு மேலைத் திக்கில், நாரணன் வாழ் வைகுண்டம் வடகீழ் பாலின் நாதன் அமர் சோதிட்கம்; திசைகள் எட்டும் சீரிய இந்திரன் முதலாம் எண்மர் தேயம்" (கந்தபுரா-அண்ட கோசப்-30) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். ஆயிரம் சூரியரைப் போன்ற ஒளியோடும் ஐந்து முகங்களோடும் எட்டுத் தோள்களோடும் கூடிய சதாசிவர் மனோன்மணி என்ற சத்தியோடு வீற்றிருக்கும் இடம் 'சோதிட்கம்' எனப்படும் என்பதும் இங்கு உணரத்தக்கது. சதாசிவனை மூன்றுலகத்தவரும் மலர்கொண்டு அருச்சிப்பர் என்பதும், அம் மலர்கள் அப் பெருமானைச் சூழ்ந்து கிடக்கும் என்பதும் இங்கு விளக்கியவாறு. மேல் கயிலாயத்தில் மழுவலான் என்று கூறியது உருத்திரனை என்றும் 'இங்குச் சேயிழைபாகத் தெண்டோளொருவன்' என்றது சதாசிவனை என்றும் உணர்க. (51)

### திசை காவலரில் இந்திரனைக் கண்டு வணங்குதல்

8887. சந்திர னனைய கொற்றத்
தனிக்குடை தலைமே லோங்கச்
சுந்தர மகளி ரங்கைச்
சாமரை தென்ற றூவ
அந்தர வான நாட
ரடிதொழ முரச மார்ப்ப
இந்திர னிருந்த தன்மை
கண்டுவந் திறைஞ்சிப் போனான்.

சந்திரன் அனைய கொற்றத்
தனிக்குடை தலைமேல் ஓங்க,
சுந்தர மகளிர் அங்கைச்
சாமரை தென்றல் தூவ,
அந்தர வான நாடர்
அடிதொழ, முரசம் ஆர்ப்ப,
இந்திரன் இருந்த தன்மை
கண்டுஉவந்து, இறைஞ்சிப் போனான்.

பொ:- சந்திரனைப் போன்ற ஒற்றை வெண்கொற்றக்குடை தலைமேல் நிழல் செய்துகொண்டு உயர்ந்து தோன்ற, அழகுமிக்க பெண்டிர் தம் அழகிய கையில் தாங்கிய வெண்சாமரைகள் தென்றல் இளங் காற்றை வீசாநிற்க, அந்தரம் என்று சொல்லப்படும் வான நாட்டில் உள்ள தேவர்கள் அடிவணங்கி நிற்க, முரசங்கள் ஆரவாரிக்க, இந்திரன் அரியணையில் இருந்த தன்மையைக் கண்டு மகிழ்ந்து, வணங்கிப் போனான்.

கு:- வெண்ணிறமும் வட்ட வடிவும்பற்றிக் குடைக்குச் சந்திரன் உவமையாயது. குடைக்கு உவமையாகக் கூறப்பட்டமையால் நிறைமதியையே இங்குச் சந்திரன் என்றார் என்பது உய்த்துணர்ச்சியால் பெறலாம். சாமரை தென்றல் போன்ற மெல்லிய காற்றை வீச என்பார், 'சாமரை தென்றல் தூவ' என்றார். (52)

### திசைக் காப்போரைக் காண்டல்

8888. பூவலர் மரத்தைப் போல
வந்தரம் விரிந்து பொங்கும்
தேவர்த மிருக்கை யான
மேருவின் சிகர வைப்பில்

மூவகை யுலகஞ் சூழ்ந்த
முரட்டிசை முறையிற் காக்கும்
காவல ரெண்மர் நின்ற
தன்மையுந் தெரியக் கண்டான்.

பூஅலர் மரத்தைப் போல
அந்தரம் விரிந்து பொங்கும்
தேவர்தம் இருக்கை யான
மேருவின் சிகர வைப்பில்
மூவகை உலகம் சூழ்ந்த
முரண்திசை முறையின் காக்கும்
காவலர் எண்மர் நின்ற
தன்மையும் தெரியக் கண்டான்.

பொ:—பூக்கள் அலர்கின்ற மரத்தைப்போல விண்ணில் விரிந்து உயர்ந்திருக்கின்ற, தேவர்களின் இருப்பிடமான மேருமலையின் சிகரங்களாகிய இடங்களில், மூவகையான உலகத்தைச் சூழ்ந்திருக்கின்ற முரண்பட்ட திசைகள் எட்டையும் முறைமையாகக் காத்து நிற்கின்ற திசைக் காவலர் எண்மரும் நிற்கின்ற தன்மையையும் தெளிவாகப் பார்த்தான்.

கு :- மரம் போன்றது மேருமலை; அம்மரத்தில் அலர்ந்த பூக்களைப் போன்றவை அதன் சிகரங்கள் என்க. விரிந்து பொங்கும் சிகரம்; இருக்கையான சிகரம் எனத் தனித்தனி இயையும். வைப்பு-இடம், திசைகள் ஒன்றற்கொன்று எதிர்எதிராக இருத்தலின் 'முரட்டிசை' என்றார். இந்திரனைச் சிறப்புப்பற்றிப் பிரித்துமேலே கூறிவிட்டமையின் இங்குத் திசைக்காவலர் எண்மர் என்றது உபசாரமாகக் கூறப்பட்டது. இந்திரனை ஒழிந்த திசைக் காவலர் எழுவர் நின்ற தன்மையைக் கண்டான் என்பதே கருத்து. திசைக்காவலராவார் : இந்திரன், அக்கினி, எமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்ற எண்மர் என்க. (53)

## சூரியனைக் கண்டு துன்புறுதல்

8889. அத்தடங் கிரியை நீங்கி
யத்தலை யடைந்த வண்ணல்
உத்தர குருவை யுற்று
ஞெளியவன் கதிர்க ளூன்றிச்

செற்றிய விருளின் ருக்கி
விளங்கிய செயலை நோக்கி
வித்தகன் விடிந்த தென்னு
முடிந்ததென் வேக மென்ருன்.

அத்தடங் கிரியை நீங்கி,
அத்தலை அடைந்த அண்ணல்,
உத்தர குருவை உற்ருன்;
ஒளியவன் கதிர்கள் ஊன்றி,
செற்றிய இருள்இன்று ஆக்கி
விளங்கிய செயலை நோக்கி
வித்தகன், 'விடிந்தது' என்னு,
'முடிந்தது என்வேகம்' என்ருன்.

பொ :- அந்தப் பெரிய மேருமலையைவிட்டு நீங்கி அப்பக்கத்தை அடைந்த அனுமன் உத்தரகுரு என்ற போகபூமியை அடைந்தான்; அங்கு ஒளியையுடைய சூரியன் தன் கதிர்களைப் பரப்பி நெருங்கிய இருள் இல்லையாம்படிச் செய்துகொண்டு விளங்கியசெயலைப் பார்த்து, திறமை மிக்கவனுகிய அனுமன், பொழுது விடிந்துவிட்டது என்று கருதி, 'என் வேகம் முடிந்தது' என்று வருந்திக் கூறினுன்.

கு :- மேருமலைக்கு வடக்கே சென்ருன் என்பார், 'அத்தலை அடைந்த அண்ணல்' என்ருர். மேரு மலைக்குத் தெற்கே இருளாயுள்ளபோது அம் மலைக்கு வடக்கே சூரியன்பகல்செய்வான் என்பது நூற்கொள்கை. இதனை மறந்து அனுமன் சூரியன் ஒளிவீசியிருளைப் போக்குவதைக் கண்டவுடனே விடிந்ததாகக் கருதி வருந்தினுன் என்றவாறு. விடியுமுன் மருந்து கொண்டுபோய் இறந்தரை எழுப்ப எண்ணிய முயற்சி முற்றுப் பெருமல் போனதால் 'என்வேகம் முடிந்தது' என்று மடிந்த மனத்தாற் கூறினுன் என்க. (54)

8890. ஆதியா னுணரா முன்ன
மருமருந் துதவி யல்லிற்
பாதியா லணைய துன்ப
மகற்றுவான் பாவித் தேற்குச்
சோதியா னுதயஞ் செய்தா
னுற்றதோ துணித லாற்றேன்
ஏதியான் செய்வ தென்னு
விடருற்ரு னிணையி லாதான்.

'ஆதியான் உணரா முன்னம்
அருமருந்து உதவி, அல்லின்
பாதியால், அனைய துன்பம்
அகற்றுவான் பாவித் தேற்குச்
சோதியான் உதயம் செய்தான் ;
உற்றதோ துணிதல் ஆற்றேன் ;
ஏதுயான் செய்வது? என்னு,
இடர்உற்ருன், இணைஇ லாதான்.

பொ :- ஒப்பற்றவனுகிய அனுமன், ஆதியானுகிய இராமன் மூர்ச்சைதெளிதற்கு முன்னே அரியதாகிய மருந்தைக் கொணர்ந்து கொடுத்து இரவின் பாதியிலேயே அத் துன்பத்தை நீக்க எண்ணியிருந்த எனக்குச் சோதியானுகிய சூரியன் உதயம் செய்துவிட்டான்; இனிப் பொருந்திய செயல் யாதோ என்பதைத் துணிய இயலாதவனுக இருக்கிறேன்; யான் என்ன செய்வது? என்று துன்புற்ருன்.

கு :- அல்லிற் பாதியால் என்புழி ஆல் உருபு மயக்கம். பாதியில் என்க. பாவித்தல்-நினைத்தல். சோதியான் என்றது சூரியனை. உற்றது என்றது, பொருந்திய செயலை. யான் ஏது செய்வது என மாறுக. (55)

8891. காற்றிசை சுருங்கச் செல்லும்
கடுமையான் கதிரின் செல்வன்
மேற்றிசை எழுவான் அல்லன்;
விடிந்தது மன்று ; மேரு
மாற்றினன் வடபாற் ருேன்று
மென்பது மறைகள் வல்லோர்
சாற்றின ரென்னத் துன்பந்
தணிந்தனன் தவத்தின் மிக்கான்.

கால்திசை சுருங்கச் செல்லும்
கடுமையான் கதிரின் செல்வன்
மேல்திசை எழுவான் அல்லன் ;
விடிந்ததும் அன்று ; மேரு
மாற்றினன் வடபால் 'தோன்றும்
என்பது மறைகள் வல்லோர்
சாற்றினர் என்னத் துன்பம்
தணிந்தனன் தவத்தின் மிக்கான்.

பொ :- காற்றின் வேகம் குறையுமாறும் திசையின் தொலைவு சுருங்குமாறும் செல்லுகின்ற விரைவினையுடையவனும் தவத்தின் மிக்கவனும் ஆகிய அனுமன் 'கதிரினைச் செல்வமாகயுடைய சூரியன் மேற்குத் திசையிலே எழுகின்ற இயல்புடையவன் அல்லன்; போழ்து விடிந்ததும் அன்று; மேருவின் வடபக்கத்தே தன்கதியை மாற்றிக் கொண்டவனாய் மேற்கே தோன்றுவான் என்று வேதம்வல்ல சான்றவர்கள் சொன்னார்கள்' ; என்று நினைந்து துன்பம் தணிந்தான்.

கு :- கால் திசை என்பது உம்மைத் தொகை. காற்றின் வேகத்தினும் மிக்க வேகமுடையவனாய் அனுமன் செல்லும்போது செல்ல வேண்டிய திசையின் தொலைவு சுருங்கிப்போதல் இயல்பாதலின் 'கால் திசை சுருங்கச் செல்லும் கடுமையான்' என்றார். மேருமலைக்குத் தெற்குக் கீழ்த்திசையில் உதயமாகும் சூரியன் அவ் வியல்பை மாற்றி அதன் வடதிசையில் மேல் திசையில் உதயமாவான் என்றவாறு. நூலளவையால் முன்னம் அறிந்ததை நினைவு கூர்ந்து அனுமன் துன்பம் தணிந்தனன் என்க. முன்னே தோன்றிய கலக்கத்தைத் தன் தவமுடைமையால் நீங்கப்பெற்றான் என்பார், 'தணிந்தனன் தவத்தின் மிக்கான்' என்றார். (56)

## உத்தரகுரு நாட்டைக் காணுதல்

8892. இருவரே தோன்றி யென்று
மீறிலா வாயு ளெய்தி
ஒருவரோ டொருவ ருள்ள
முயிரொடு மொன்றே யாகிப்
பொருவரு மின்பந் துய்த்துப்
புண்ணியம் புரிந்தோர் வைகும்
திருவுறை கமல மன்ன
நாட்டையுந் தெரியக் கண்டான்.

இருவரே தோன்றி என்றும்
ஈறுஇலா ஆயுள் எய்தி,
ஒருவரோடு ஒருவர், உள்ளம்
உயிரொடும் ஒன்றே ஆகி,
பொருஅரும் இன்பம் துய்த்து,
புண்ணியம் புரிந்தோர் வைகும்
திருஉறை கமலம் அன்ன
நாட்டையும் தெரியக் கண்டான்.

பொ :- முன் புண்ணியம் புரிந்தோர் (ஆண், பெண் என்ற) இருவரே பிறந்து என்றும் முடிவு இலாத ஆயுளைப்பெற்று, ஒருவரோடு ஒருவர் உள்ளமும் உயிரும் ஒன்றே என்னுமாறு ஒற்றுமையுடையராய் ஒப்பற்ற இன்பம் துய்த்துக்கொண்டு, தங்கியுள்ள திருமகள் தங்கியுள்ள தாமரை மலர்போன்ற, (இலக்குமியின் இருப்பிடம் போன்ற) உத்தரகுரு நாட்டையும் கண்களால் தெரியக் கண்டான்.

கு :- புண்ணியம் புரிந்தோர் தோன்றி எய்தி, ஒன்றேயாகித் துய்த்து வைகும் நாட்டையும் கண்டான் என இயையும். பிறர் வயிற்றிற் பிறவாது முன்புசெய் புண்ணியத்தால்தாமே தோன்றி என்பார். இருவரே தோன்றி என்றார். இனிப் 'பிறர் கொடுப்பவும் அடுப்பவும் அன்றிப் பால்வகையால் தாமே யெதிர்ப்பட்டு' என்று பொருள் கூறலும் ஆம். பிணி மூப்பு இரப்புக்களின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மையாயிருக்கும் தன்மை யெய்தி என்பார். 'ஈறிலா ஆயுளெய்தி' என்றார். இருவர்க்கும் உள்ளம் ஒன்று என்னுமாறு ஒன்றையே நினைத்தலும் உயிர் ஒன்றே என்னுமாறு ஒன்றாய் மகிழ்தலும் உடையர் என்பார், 'உள்ள முயிரொடு மொன்றேயாகி' என்றார். செல்வச் சிறப்பால் திருமகளின் இருப்பிடம் போன்றது உத்தரகுரு என்பார், திருவுறைமலர்கள் மன்ன நாடு என்றார். இதுகாறும் செவிகளால் கேட்டுணர்ந்திருந்ததைத் தன் கண்களால் தெரியக் கண்டான் என்க. (57)

8893. வன்னிநாட் டியபொன் மௌலி
வானவன் மலரின் மேலான்
கன்னிநாட் டிருவைச் சேருங்
கண்ணனு மாளுங் காணி
சென்னிநாட் டெரியல் வீரன்
றியாகமா விநோதன் றெய்வப்
பொன்னிநாட் டுவமை வைப்பைப்
புலன்கொள நோக்கிப் போனான்.

வன்னிநாட் டியபொன் மௌலி
வானவன், மலரின் மேலான்,
கன்னிநாள் திருவைச் சேருங்
கண்ணனும், ஆளுங் காணி

சென்னிநாள் தெரியல் வீரன்
தியாகமா விநோதன் தெய்வப்
பொன்னிநாட்டு உவமை வைப்பப்
புலன்கொள நோக்கிப் போனான்.

பொ :- வன்னிப் பத்திரம் சூடியுள்ள பொன்னிறச் சடைமுடியையுடைய சிவனும், தாமரைமலரில் தங்கியுள்ள பிரமனும், செல்வி மாறாத குமரிப் பருவமுடைய திருமகளை மார்பிலே கொண்டுள்ள திருமாலும், தமக்குரிமையாகக் கொண்டு ஆள்கின்றதும், அன்றலர்ந்தமலராலாய மாலையணிந்த, தியாகமா விநோதன் என்றபெயரையுடைய சோழனுக்குரியதும் ஆய தெய்வத்தன்மையுடைய காவிரி பாயும் சோழநாட்டுக்கு உவமையாகத்தக்க அந்த உத்தரகுருவை அனுமன் கட்புலன் கொள்ளுமாறு கருத்தொடு நோக்கிச் சென்றான்.

கு :— வன்னி, ஓர்மரம். வன்னியின் பத்திரம் சிவன் சூடுதற்குரியது ஆகலின் 'வன்னி நாட்டிய பொன் மௌலி வானவன்' என்றார். வன்னி முதலாகுபெயராய் அதன் இலையை உணர்த்தியது. பொன்போல் ஒளிவிடும் சடைமுடியுடையவன் சிவன் ஆதலின், 'பொன் மௌலி வானவன்' என்றார். கன்னி, குமரிப் பருவம். செவ்வியறிமை புலப்பட 'நாள்திரு' என்றார். பாற்கடலில் தோன்றிய நாள் இருந்ததுபோலவே என்றும் இருக்கின்றாள் திருமகள் என்றவாறு. மும்மூர்த்தியரும் தம் உரிமையிடமாகக் கொண்டு சோழ நாட்டில் விரும்பித் தங்கியுள்ளார் என அச் சோழநாட்டின் பெருமைவிளக்கி அத்தகைய பெருமையுடைய சோழ நாட்டிற்கும் உவமையாகும் தரக்கதாக உத்தரகுரு இருந்தது என்பதை அனுமன் புலன்கொள்ள நோக்கிப் போனதாகக் கம்பர் தம் நாட்டுப்பற்றினைப் புலப்படுத்தியவாறு தியாகமா விநோதன் என்றது, சோழனது பட்டப் பெயர்களுள் ஒன்று. மூன்றாங் குலோத்துங்கனுக்கு வள்ளல் தன்மையையே பெரிய விளையாட்டாகக் கொண்டவன் என்பது அப்பெயரின் பொருள். 'காவிரி நாடன்ன கழனி நாடொரீஇ (குகம்—1) எனக் கோசல நாட்டிற்குத் தன் சோழநாட்டை உவமை கூறிய கம்பர், இங்கு உத்தரகுருவைப் பொன்னி நாட்டிற்கு உவமை வைப்பு எனக் கூறியது ஏன்? எனின், தனக்கு முன்னிருந்த இளங் கோவடிகள், 'உத்தரகுருவினொடொப்பத் தோன்றிய கயமலர்க்கண்ணியும் காதற்கொழுநனும்' (சிலப். 2—10) என்று கூறிப் புகார் நகரம், கோவலனும் கண்ணகியும் தோன்றுதற்குமுன் உத்தரகுருவிற்குஈடாகாது தாழ்ந்திருந்ததாகவும் அது இப்போது ஈடு ஆகுமாறு அவ்விருவரும் தோன்றினர் எனவும் விளக்கிய கருத்துக்கு முரணில்லாதவாறு இங்கு இங்ஙனம் கூறியுள்ளார் என்னலாம். கம்பர் தன் நாட்டுப்பற்றை அனுமன் மூலமாக உவ்வாறு புலப்படுத்தியுள்ளார் என்க. (58)

## அனுமன் நீலமலையைக் காணுதல்

**8894.** **விரியவன் மேரு வென்னும்**
**வெற்பினின் மீது செல்லும்**
**பெரியவ னயனுர் செல்வம்**
**பெற்றவன் பிறப்பும் பேர்ந்தான்**
**அரியவ னுலக மெல்லா**
**மளந்தநாள் வளர்ந்து தோன்றும்**
**கரியவ னென்ன நின்ற**
**நீலமால் வரையைக் கண்டான்.**

விரியவன் மேரு என்னும்
வெற்பினின் மீது செல்லும்
பெரியவன்; அயனுர் செல்வம்
பெற்றவன்; பிறப்பும் பேர்ந்தான்;
அரியவன், உலகம் எல்லாம்
அளந்தநாள் வளர்ந்து தோன்றும்
கரியவன் என்ன நின்ற
நீலமால் வரையைக் கண்டான்.

பொ :- வலிய மேரு என்னும் மலையின்மீது, (அது, தன் வேகந் தாங்காது)பிளவுறுமாறு செல்லும் பெரிய தோற்றத்தையுடையவனும், பிரமனுடைய பட்டத்தைப் பெறப்போகின்றவனும், பிறவித் துன்பத்தில் நின்றும் நீங்கினவனும் குரங்கு வடிவினனுக இருப்பவனும் ஆகிய அனுமன், உலகம் எல்லாவற்றையும் அளந்த காலத்தில் பேருருவினனுக வளர்ந்து தோன்றுகின்ற திருவிக்கிரமனுகிய கரியவன்போல நின்ற பெரிய நீலமலையைக் கண்டான்.

கு :- விரியச் செல்லும் பெரியவன் என்க. வலிய மேருமலையும் பிளவுறுமாறு அம் மலையின்மேல் விரைந்து சென்ற பெரியவன் என்க. 'அயனுர் செல்வம் என்றது பிரமபதத்தை' அப் பதத்தை அனுமன் பெறுவது உறுதியாகலின் 'பெற்றவன்' என இறந்த காலத்தில் கூறினுர். இது தெளிவுபற்றிவந்த காலவழுவமைதி. சீதையாலும் இராமனுலும் என்றும் இருப்பவனுக வரம்பெற்றவன் ஆதலின் 'பிறப்பும் பேர்ந்தான்' என்ருர். அரி – குரங்கு. அரியவன் என்றது குரங்கு வடிவினனுகிய அனுமன் என்றவாறு. நீலமலை

நிறத்தாலும் உயர்ச்சியாலும் திருவிக்கிரமனைப் போன்று தோன்றியது என்க. மாவலியால் மூவடி மணகேட்டுப்பெற்று வளர்ந்து மூவுலகையும் ஈரடியால் அளந்த திருவிக்கிரமனை நீலமலைக்கு உவமை கூறி, அவ் வுருவம் மாவலியை யடக்கியுலகுறுதுயர் துடைத்தது போல இந்த நீலமலையும் இராவணனை வென்று உலகுறுதுயர் துடைக்கத் துணையாகும் என்ற பயனுவமையும் பெறவைத்ததாகக் கொள்ளலாம். (59)

### மருத்துமலையைக் காணுதல்

8895. அற்குன்ற வலங்கு சோதி
யம்மலை யகலப் போனுன்
பொற்குன்ற மனைய தோளா
னேக்கினுன் புலவன் சொன்ன
நற்குன்ற மதனைக் கண்டா
னுணர்ந்தன னுக முற்ற
எற்குன்ற வெறியுந் தெய்வ
மருந்தடை யாள மென்ன

அல்குன்ற அலங்கு சோதி
அம்மலை அகலப் போனுன்,
பொன்குன்றம் அனைய தோளான்
நோக்கினுன்; புலவன் சொன்ன
நல்குன்றம் அதனைக் கண்டான்,
உணர்ந்தனன்—'நாகம் உற்ற
எல்குன்ற எறியும் தெய்வ
மருந்து அடையாளம்' என்ன.

பொ:- இருள் நிறமும் தாழுமாறு விளங்குகின்ற நீலச் சோதியையுடைய அந்த நீலமால்வரை பிற்படச் சென்றவனாகிய, பொன்மலைபோன்ற தோளிணையுடைய அனுமன், கண்களால் நோக்கிப் பேரறிஞனாகிய சாம்பவன் சொன்ன நல்ல மருந்து மலையைக் கண்டு, தெய்வ மருந்துக்கு அடையாளம், விண்ணுலகத்துப் பொருந்திய ஒளியும் குன்றுமாறு ஒளிவீசும் என்று முன் கூறியதால் உணர்ந்தனன்.

கு :- நீலமலையின் நீல ஒளி இருளினும் சிறந்திருந்தது என்றவாறு. அகலம்போதலாவது பின்பட்டு நிற்கப் போதல். புலவன்

என்றது அறிவுசான்ற சாம்பவனை. நோக்குநுயச் சொன்ன என்ன முற்றெச்சமாக்குக. அடையாளம் எல்குன்ற எறியும் என்ன உணர்ந்தனன் என இயையும். நாகம்—விண்ணுலகம். எல்—ஒளி. (60)

## மருந்து காக்கும் தெய்வங்கள் கேட்டவற்றை மாருதி விளக்குதல்

8896. பாய்ந்தனன் பாய்த லோடு
மம்மலை பாத லத்துச்
சாய்ந்தது காக்குந் தெய்வஞ்
சலித்தன கடுத்து வந்து
காய்ந்தனை நீதான் யாவன்
கருத்தென்கொல் கழறு கென்ன
ஆய்ந்தவ னுற்ற தன்மை
யவற்றினுக் கறியச் சொன்னான்.

பாய்ந்தனன்; பாய்த லோடும்,
அம்மலை பாத லத்துச்
சாய்ந்தது; காக்கும் தெய்வம்
சலித்தன; கடுத்து வந்து
காய்ந்தனை; நீதான் யாவன்?
கருத்துஎன்கொல்? கழறு கென்ன
ஆய்ந்தவன்; உற்ற தன்மை
அவற்றினுக்கு அறியச் சொன்னான்.

பொ .- (மருந்துள் இடத்தில் மாருதி) பாய்ந்தான்; அவன் அவ்வாறு பாய்ந்த அளவில் அம் மருத்துமலை பாதலத்தில் சாய்ந்தது; அம் மருந்தினைக் காத்துவரும் தெய்வங்கள் நடுங்கின; 'விரைந்து வந்து கோபித்துப் பாய்ந்தவனாகிய நீதான் யார்? இவ்வாறு இங்கு விரைந்து வந்த கருத்து என்ன? சொல்லுக' என்று கேட்க, நூல்களை ஆராய்ந்தவனாகிய அனுமன், தான் வந்ததற்குரிய காரணத்தை அத் தெய்வங்கட்குத் தெளியச் சொன்னான்.

கு :- ஆய்ந்தவன் என்றது அனுமனை. தெய்வங்கள் கேட்ட கேள்விகளுக்கு அவற்றின் மனங்கொள விடைகூறும் ஆற்றலுடையவன் அனுமன் என்பது புலப்பட அப் பெயராற் கூறினார். நூல்கள் எல்லாவற்றையும் ஆராய்ந்தறிந்தவன் என்பது அப் பெயர்க்கும் பொருள் ஆகும். கடுத்தல்—விரைதல். கழறுதல்—சொல்லுதல். (61)

## மருந்தினை மீட்டுங் கொணர்க எனச் சொல்லித் தெய்வங்கள் மறைதல்

8897. கேட்டவை யைய வேண்டிற்
றியற்றிப்பின் கெடாம லெம்பால்
காட்டென வுணர்த்தி வாழ்த்திக்
கரந்தன கமலக் கண்ணன்
வாட்டலை நேமி தோன்றி
மறைந்தது மண்ணி னின்றும்
தோட்டன னனுமன் மன்றைக்
குன்றினை வயிரத் தோளால்.

கேட்டுஅவை, 'ஐய! வேண்டிற்று
இயற்றி,பின் கெடாமல் எம்பால்
காட்டு'என உரைத்து, வாழ்த்திக்
கரந்தன, கமலக் கண்ணன்
வாள்தலை நேமி தோன்றி,
மறைந்தது; மண்ணில் நின்றும்
தோட்டனன், அனுமன் மற்றுஅக்
குன்றினை, வயிரத் தோளால்.

பொ :- அனுமன் சொன்னதைக் கேட்டு அத் தெய்வங்கள், ஐயனே! நீ விரும்பியதைச் செய்துமுடித்துப் பின்பு இம் மருந்து கெடாதபடி கொண்டுவந்து எமக்குக் காட்டுவாயாக! என்று சொல்லி அவனை வாழ்த்திவிட்டு மறைந்தன; தாமரைமலர்போன்ற கண்களை யுடைய திருமாலின் கூரிய முனையினையுடைய சக்கரப்படை வந்து தோன்றி அதுவும் மறைந்தது; பின்பு அனுமன், அந்த மருத்து மலையை மண்ணில் நின்றும் தன் வயிரம்போன்ற தோளினுல் பெயர்த்து எடுத்தான்.

கு :- காட்டு என்பது கொடு என்னும் பொருளில் வந்தது. திருமாலின் சக்கரம் .காட்சி கொடுத்து மறைந்தது அனுமன் செயல் வெற்றிபெறுவதாக என்னும் கருத்தினுலாகும். தோட்டல்-தோண்டுதல்; பெயர்த்தல். (62)

### மருத்துமலையைக் கையால் அசைத்தல்

8898. இங்குநின் றின்னன மருந்தென் றெண்ணினல்
* சிங்குமாற் காலமென் றுணர்ந்த சிந்தையான்
அங்கதை வேரொடு மங்கை தாக்கிஃறன்
பொங்கிய விசும்பிடைக் கடிது போகுவான்.

'இங்குநின்று, இன்னன மருந்துஎன்று எண்ணினல்,
சிங்குமால் காலம்'என்று உணரும் சிந்தையான்,
அங்குஅதை வேரொடும் அங்கை தாக்கினன்
பொங்கிய விசும்பிடைக் கடிது போகுவான்.

பொ :- 'இவ்விடத்தில் நின்று இத்தன்மையான மருந்து என்று ஆராய்ந்துகொண்டிருந்தால் காலம் கழியும்' என்று உணர்ந்த சிந்தையினையுடைய அனுமன், விரிந்த ஆகாயவழியே விரைந்து செல்வதற்காக அங்குள்ள அம் மருந்துமலையை வேரோடும் பெயர்க்கத் தன் அழகிய கையால் தாக்கி அசைத்தான்.

கு :- நால்வகையான மருந்து இருப்பதாகச் சாம்பவன் சொல்லி யனுப்பினன் ஆதலின், அவன் சொற்படி இம்மருந்து இத் தன்மை யது என ஆராய்ந்து பறிப்பது காலக்கழிவுக்குக் காரணம் ஆகும் ஆதலின் அம் மருந்திருக்கும் மலையையே வேரொடும் பறிக்கக் கையில் தாக்கினன். அனுமன் என்க. சிங்குதல்-குறைதல்; இங்குக் கழிவையுணர்த்தியது. (63)

### மாருதி மருத்துமலையை ஒரு கையில் ஏந்திச் செல்லுதல்

8899. ஆயிரம் யோசனை யகன்று மீதுயர்ந்
தாயிரம் யோசனை யாழ்ந்த தம்மலை
ஏயெனு மாத்திரத் தொருகை யேந்தினன்
தாயின னுலகெலாந் தவழ்ந்த சீர்த்தியான்.

ஆயிரம் யோசனை அகன்று மீதுஉயர்ந்து,
ஆயிரம் யோசனை ஆழ்ந்தது அம்மலை,
'ஏ'எனும் மாத்திரத்து, ஒருகை ஏந்தினன்,
தாயினன் உலகுஎலாம் தவழ்ந்த சீர்த்தியான்.

பொ .- (உலகம் முழுமையும் பரவிய புகழையுடையவனான அனுமன், ஆயிரம் யோசனை அளவு விரிந்தும், ஆயிரம் யோசனை அளவு மேல் உயர்ந்தும், ஆயிரம் யோசனையளவு தரையில் ஆழ்ந்தும் உள்ளதாகிய அம்மலையை 'ஏ' எனும் காலத்திற்குள் ஒரு கையில் ஏந்திக்கொண்டு தாவிச்சென்றான்.

கு :- மருந்துமலை, ஆயிரம் யோசனை பரப்பும், ஆயிரம் யோசனை உயரமும், ஆயிரம் யோசனை அளவு தரையில் ஆழ்ந்தும் இருந்தது என்றவாறு. காலச் சிறுமையுணர்த்த 'ஏ எனும் மாத்திரத்து' என்றார். இரண்டு மாத்திரைப் பொழுதுக்குள் என்றவாறு. ஏ என்னும் எழுத்து இரு மாத்திரை அளவினதாதல் நினைக. அனுமனது புகழ் உலக முழுமையும் பரவியுள்ளது என்பார், 'உலகெலாந் தவழ்ந்த கீர்த்தியான்' என்றார். 'கீர்த்தி மிகுபுகழ்' என்பர் தொல்காப்பியர் (சொல் உரி- 15) (64)

8900. அத்தலை யன்னவ னனைய னாந்துணை
இத்தலை யிருவரும் விரைவி னெய்தினார்
கைத்தலத் தாலடி வருடுங் காலையில்
உத்தமற் குற்றதை யுணர்ந்து வாமரோ.

அத்தலை, அன்னவன் அனையன் ஆம்துணை,
இத்தலை, இருவரும் விரைவின் எய்தினார்,
கைத்தலத் தால்அடி வருடும் காலையில்,
உத்தமற்கு உற்றதை உணர்த்து வாம்அரோ.

பொ :- அவ்விடத்து அவ் அனுமன் அத்தன்மையன் ஆகும் அளவைக்குள், இவ்விடத்து வீடணனும் சாம்பனும் ஆகிய இருவரும் விரைவாக இராமனை அடைந்தவராய்த் தம் கைகளால் அவனுடைய திருவடிகளைப் பற்றிவருடும்போது, உத்தமனாகிய அவ் விராமனுக்கு உற்றதைச் சொல்லுவோம்.

கு :- இத்தலை என்றது, இலங்கையிலுள்ள போர்க்களத்தில் என்றவாறு. எய்தினார் முற்றெச்சம். வருடுதலாவது கையால் தடவிக் கொடுத்தல். உத்தமன் என்றது இராமனை. அரோ, அசை. (65)

## இராமன் கண் மலர்தல்

8901. விண்டன மடந்தையர் மனத்தை வேரொடும்
கண்டன களவறுங் கருணைத் தாமெனக்
கொண்டன கொடுப்பன வரங்கள் கோளிலாப்
புண்ட ரீகந்துணை நயனம் பூத்தன.

விண்டன, மடந்தையர் மனத்தை வேரொடும்
கண்டன, களவுஅறும் கருணைத்து ஆம்எனக்
கொண்டன, கொடும்பன வரங்கள், கோள்இலாப்
புண்ட ரீகத்துணை நயனம் பூத்தன.

பொ :—(காமுறும்) பெண்டிரின் மனத்தை வேரொடும் நீங்கினவாம்படி செய்தனவும், களவு இல்லாத கருணையையுடையது ஆகும் என்று எல்லாராலும் கொள்ளப்பட்டனவும் வரங்களைக் கொடுப்பனவும் ஆகிய குற்றமற்ற தாமரைமலர்போன்ற இருகண்களும் மலர்ந்தன.

கு:- சாம்பவனும் வீடணனும் அடிவருடியதால் இராமன் கண்களைத் திறந்தான் என்றவாறு. இராமன் கண்கள் பிறபெண்டிரை விரும்பிப் பார்க்காதன ஆதலின் அவனை விரும்பிய பெண்டிர்மனம் பயன்பெறாது வெறுத்து நீங்குமாறு அக் கண்கள் செய்தனவாகக் கூறினர். விண்டனவாகக் கண்டன என ஆக்கச்சொல் வருவித்து முடிக்க. விண்டன—நீங்கின. கண்டன—செய்தன. ''மகளிர்க்கெல்லாம் நஞ்செனத் தகையவாகி நளிரிரும் பனிக்குத் தேம்பாக் கஞ்ச மொத்தலர்ந்த செய்ய கண்ண!'' (அனுமப்—17) என இக் கண்களைப்பற்றி அனுமன் முன் கூறியுள்ளது இங்கு நினைக்கத்தகும். இராமன் கண்கள் களவு அறியாதனவாகவும் கருணை நிரம்பினவாகவும் இருந்தன என்பார், 'களவறுங்கருணைத் தாமெனக் கொண்டன' என்றார். கொண்டன என்பது செயப்பாட்டுப் பொருளது; எல்லாராலும் கொள்ளப்பட்டன என்க. மடந்தையர் மனத்தை விண்டனவாக் கண்டன, கொண்டன, கொடுப்பன ஆகிய நயனம் பூத்தன என இயையும். தாமரைக்குக் குற்றமாவது பனிக்குத் தேம்புதல்; அக் குற்றமில்லாத புண்டரீகம் இல்லையாதலின், இதை இல்பொருள் உவமமாகக் கொள்க. துணை நயனம்—இருகண்கள். (66)

## இராமன் சாம்பனையும் வீடணனையும் காணுதல்

8902. நோக்கினன் கரடிகட் கரசு நோன்புகழ்
ஆக்கிய நிருதனு மழுத கண்ணினர்
தூக்கிய தலையினர் தொழுத கையினர்
ஏக்கமுற் றருகிருந் திரங்கு வார்களை.

நோக்கினன்—கரடிகட்கு அரசும், நோன்புகழ்
ஆக்கிய நிருதனும், அழுத கண்ணினர்,
தூக்கிய தலையினர், தொழுத கையினர்,
ஏக்கம்உற்று, அருகுஇருந்து,இரங்கு வார்களே;

பொ :- (மலர்ந்த கண்களையுடைய இராமன்) கரடிகட்கு அரசனுகிய சாம்பனும் மிக்கபுகழ்பெற்றவனுகிய வீடணனும், அழுத கண்ணினராய், தூக்கிய தலையினையுடையராய் தொழுத கையினையுடையவராய்த் துன்பமுற்றுத் தன்னருகில் இருந்துகொண்டு இரங்குகின்றவர்களைக் கண்டான்.

கு :- இரங்குவார்களை நோக்கினன் எனப் பூட்டுவிற்பொருள் கோளாகக் கொள்க. கரடிகட்கு அரசும் நிருதனும் கண்ணினராய்த் தலையினராய்க் கையினராய் ஏக்கமுற்று அருகு இருந்து இரங்குவார்களை நோக்கினன் என இயையும். இராமன் தோன்ரு எழுவாய் மேல் நயனம்பூத்தன என்றவர், பூத்த அந்த நயனத்தால் 'நோக்கினன்' என்று அடுத்துக் கூறினர். இனி, அழுத கண்ணினர், தலையினர், கையினர் ஆய் ஏக்கமுற்றிரங்குவார்களாகிய அரசையும் நிருதனையும் நோக்கினன் என உருபு பிரித்துக் கூட்டிவுரைப்பாருமுளர். சாம்பவனும் வீடணனும் இராமனுடைய திருவடிகளைக் கைகளால் வருடிக்கொண்டிருந்தவர்கள். அவன் கண்களைத் திறந்தவுடன் தூக்கிய தலையினராகவும் எழுத கையினராகவும் ஆயினர் என்க. இராமன் கண்திறப்பதற்குமுன் அழுத கண்ணீரும், இரங்கிய ஏக்கக்குறிப்பும் அவன் கண்திறந்த பின்னும் அப்படியேயிருந்தனவாகலின் அவற்றையும் சேர்த்துக் கூறினுர். வீடணன் நிருதனுகப் பிறந்தும் இராமனைச் சரணடைந்து பெரும்புகழ்பெற்ருன் என்பார், 'நோன்புகழ் ஆக்கிய நிருதனும்' என்ருர். குனிந்த தலையினர் தூக்கிய தலையினர் ஆயினர்; அடிவருடிய கையினர். தொழுத கையினராயினர் என்றவாறு. (67)

## இராமன் அவ் விருவரையும் உசாவுதல்

8903. ஏவிய காரிய மியற்றி யெய்தினை
நோவிலை வீடணு வென்று நோக்கிப்பின்
சாவரும் பெரும்புகழ்ச் சாம்பன் றன்னைநீ
ஆவிவர் தனைகொலென் றருளி னுனரோ.

'ஏவிய காரியம் இயற்றி எய்தினை
நோவிலை; வீடணா! என்று நோக்கிப்பின்
சாவுஅரும் பெரும்புகழ்ச் சாம்பன் தன்னை,நீ,
ஆவிவந்தனை கொல்?' என்று அருளினான் அரோ.

பொ:. 'வீடணா! யான் ஏவிய உணவு கொணர்வதாகிய காரியத்தைச் செய்து வந்தாய் ஆதலின், பிரமாத்திரத்தாலேயே துன்பம் இல்லை யாயினை! என்று வீடணனை நோக்கிக் கூறிவிட்டுப் பின், மரணமில்லாத, பெரிய புகழினையுடைய, சாம்பனை நோக்கி, 'நீ உயிர் வரப் பெற்றாயோ?' என்று கேட்டருளினான் இராமன்.

கு:- இராமன் ஏவிய காரியத்தின்மேல் வீடணன் செல்லாதிருந்தால் அவனும் பிரமாத்திரத்தால் துன்புற்றிருப்பான் என்றவாறு நோக்கிக் கூறி என ஒரு சொல் வருவிக்க. சாம்பன் சிரஞ்சீவி என்பது புலப்பட 'சாவரும் சாம்பன்' என்றார். 'சாவரும் சாம்பன் பெரும்புகழ்ச் சாம்பன் எனத் தனித்தனி இயையும் பிரமாத்திரத்தால் துன்புற்றவன் சாம்பன் ஆதலின் அத் துன்பம் நீங்கி உயிர்ப்பு வரப் பெற்றாயோ? என்று வினவியவாறு. (68)

8904. அய்யன்மீர் நமக்குற்ற வழிவி தாதலின்
செய்வகை பிறிதிலை யுயிரிற் றீர்ந்தவர்
உய்சில றினிச்செயற் குரிய துண்டெனின்
பொய்யிலிர் புகலுதிர் புலமை யுள்ளத்தீர்.

'ஐயன்மீர்; நமக்குற்ற அழிவுஇது ஆதலின்,
செய்வகை பிறிதுஇலை; உயிரின் தீர்ந்தவர்
உய்சிலர்; இனிச்செயற்கு உரியது உண்டுஎனின்,
பொய்இலீர்! புகலுதிர், புலமை உள்ளத்தீர்!

பொ:- ஐயன்மீர்! இது நமக்கு நேர்ந்த அழிவே யாகலின், இதற்குமாறாகச் செய்யும் செயல் வேறு இல்லை; உயிர் நீங்கினவர் மீண்டும் பிழைக்க மாட்டார்கள்; அறிவுமிக்க மனத்தையுடையவர்களே! இனிச் செய்வதற்குரிய செயல் ஏதேனும் இருப்பின், பொய்யில்லாதவர்களே! சொல்லுங்கள்.

கு:- இறந்தவர் மீண்டும் உயிர்பெற்று எழுவதற்கு நாம் செய்யக் கூடிய முயற்சி, யேதேனும் இருப்பின் செய்து பார்க்கலாமே என்ற கருத்தால் 'இனிச் செயற்குரியது உண்டெனின் புகலுதிர்' என்று இராமன்கூறினன். பிறரறியாதவற்றையும் அறியும் தன்மையிர் என்பான், 'புலமையுள்ளத்தீர்.' என்றும் நீங்கள் கூறின் பொய்யாகாது என்பான் பொய்யிலீர் என்றும் விளித்தான். பொய்யிலீராய்ப் புகலுதிர் என முற்றெச்சமாக்கி முடித்தலும் ஆம். பொய்புகலாமல் மெய்யாகச் சொல்லுங்கள் என்பது கருத்து. தன் துன்பத்தைத் தணிக்கும் பொருட்டுப் பொய்யாகவும் ஒன்றைப் புனைந்து கூறலாம் ஆதலின் இராமன் இங்ஙனம் கூறலானன். (69)

8904. சீதையென் றொருத்தியா லுள்ளந் தேம்பிய
பேதையென் சிறுமையா லுற்றஃபெற்றியை
யாதென வுணர்த்துகே னுலக மோதிடும்
காதைவன் பழியொடுந் திருத்திக் காட்டினேன்.

சீதைஎன்று ஒருத்தியால் உள்ளம் தேம்பிய
பேதையேன், சிறுமையால் உற்ற பெற்றியை
யாதுஎன உணர்த்துகேன்! உலகம் ஓதிடும்
காதைவன் பழியொடும் திருத்திக் காட்டினேன்.

பொ:- சீதை என்ற ஒரு பெண்ணினல் மனம்வருந்திய அறிவிலியாகிய யான் என் கீழ்மையால் அடைந்த தன்மையை என்னவென்று சொல்லுவேன்! உலகம் புகழோடு படித்தறிதற்குரிய என் கதையை வலிய பழியோடும் சேர்த்துத் திருத்திக் காட்டிவிட்டேன்.

கு:- தம்பியையும் எழுபதுவெள்ளம் சேனையையும் இழந்த துன்பத்திற்கெல்லாம் காரணம் சீதை என்ற ஒரு பெண்ணும் தன் அறியாமையுமேயாம் என்பதை இராமன் நினைத்து வருந்தியவாறு. புகழோடு அடைய வேண்டிய தன் காதையைப் பழியோடு பொருந்துவதாக ஆக்கிவிட்டேன். ஒன்று இராமன் தன்னை இழித்துக் கூறிக கொண்டவாறு. பெற்றி-தன்மை. காதை என்பது கதை பொதிந்த பாட்டு என்பர். (70)

### இராமன் பெண்சொல் கேட்ட தன்பேதை நினைந்து வருந்துதல்

8906. மாயையிம் மானென வெம்பி வாய்மையால்
தூயன வுறுதிகள் சொன்ன சொற்கொளேன்
போயினென் பெண்ணுரை மருது போகலால்
ஆயதிப் பழியுடை மரண மன்பினீர்.

"மாயை இம்மான்" என,எம்பி வாய்மையால்
தூயன உறுதிகள் சொன்ன சொல்கொளேன்
போயினென், பெண்உரை மருது; போகலால்,
ஆனது, இப்பழியுடை மரணம்—அன்பினீர்!

பொ :- அன்புடையவர்களே! என் தம்பி இலக்குவன், 'இம் மான் மாயத்தால் ஆயது' என்று உண்மையாகச் சொன்ன தூய்மையான உறுதிச் சொற்களை நல்லதெனக் கொள்ளேனாய், பெண் சொல்லை மறுக்காமல் அம் மானின் பின் போயினேன்; அவ்வாறு யான் போனதால் இப் பழியுடைய மரணம் உண்டாயிற்று.

கு :- எம்பி வாய்மையாற் சொன்ன தூய உறுதிச் சொற்களைக் கொளேனாய்ப் பெண்ணுரை மருது போயினென்; போகலால் இப் பழியுடை மரணம் ஆயது எனக் கூட்டுக. எம்பி கூறிய சொற்களைக் கேட்டு மானின் பின் போகாதிருந்தால் இந்தப் பழியுடைய மரணம் நேர்ந்திராது என இலக்குவனைப் புகழ்ந்தும் பெண் சொல்கேட்டதன் செயலால் இத்துன்பம் நேர்ந்தது எனத் தன்னை இகழ்ந்தும் இராமன் கூறியவாறு. (71)

### இராவணனைக் கண்டு அமர்புரிந்தும் கொல்லாதுவிட்டதை நினைந்து வருந்தியது

8907. கண்டனெ னிராவணன் றன்னைக் கண்களால்
மண்டமர் புரிந்தனென் வலியினு லுயிர்
கொண்டில னுறவெலாங் கொடுத்து மாளயான்
பண்டுடைத் தீவினை பயந்த பண்பினால்.

'கண்டனென் இராவணன் தன்னைக் கண்களால்;
மண்டுஅமர் புரிந்தனென் வலியின்; ஆர்உயிர்
கொண்டிலென், உறவுஎலாம் கொடுத்து, மாள, நான்,
பண்டுடைத் தீவினை பயந்த பண்பினால்.

பொ:- இராவணன்தன்னை என் கண்களால் கண்டேன்; அவனோடு வலிமையால் நெருங்கிய போரையும் செய்தேன்; (ஆனால்,) பழைய என் தீவினைப் பயனால் என் உறவாக உள்ள எல்லோரையும் இழந்து யான் மாளும்படி, அவன் ஆருயிரைக் கொள்ளாது விட்டேன்.

கு:- முதனாட் போரில் எல்லாவற்றையும் இழந்து தனியாக நின்ற இராவணனைக் கொல்லாமல் இன்று போய் நாளை வா என விட்டதால், இப்போது என் உறவினரையெல்லாம் இழந்து யானும் இறக்கும் நிலையுற்றேன்; இது என் பழவினைப் பயனே என்று இரங்கியவாறு. இராவணனைக் கொல்லாது விட்டது தன் தீவினைப் பயனே எனத் துன்பம் நேர்ந்த இன்று கழிவிரக்கம் கொள்கின்றான் இராமன் என்க. (72)

## இலக்குவனைப் பிரமாத்திரம் தொடுக்கலாதென்றது நினைந்திரங்கியது

8908. தேவர்தம் படைக்கலந் தொடுத்துத் தீயவன்
சாவது காண்டுமென் றிளவல் சாற்றவும்
ஆவதை யிசைந்தில னழிவ தென்வயின்
மேவுத லுறுவதோர் விதியின் வெம்மையால்.

"தேவர்தம் படைக்கலம் தொடுத்து, தீயவன்
சாவது காண்டும்" என்றுஇளவல் சாற்றவும்,
ஆவதை இசைந்திலன் அழிவது என்வயின்
மேவுதல் உறுவதுஓர் விதியின் வெம்மையால்.

பொ:-என் தம்பி, 'பிரமதேவர்தம் படைக்கலத்தைத் தொடுத்துத் தீயவனாகிய இந்திரசித்து சாவதைக் காண்போம்' என்று சொல்லவும் என்னிடத்தில் அழிவு பொருந்துதற்குக் காரணமான ஒரு விதியின் கொடுமையால் பொருத்தமான அச் செயலை உடன்படாது போயினேன்.

கு:- தேவர் என்றது இங்குப் பிரமதேவரை. "இவன் பிழைக்கு மேற்படுக்கும் நம்படையை, எண்ண மற்றிலை யயன்படை தொடுப்பெனென் றிசைத்தான்' (பிரமாத்திரப்-80) என்புழி இலக்குவன் இந்திரசித்தின்மேல் அயன்படை தொடுப்பதாகச் சொன்னது காண்க. "ஆன்றவன் னது புகறலு மறவனீ முனிந்தால், ஈன்ற வந்தணன் படைக்கலந் தொடுக்க விவ்வுலகம், முன்றையுஞ் சுடும்

ஒருவனால் முடிகலது'' என்றான். (81)என்புழி இலக்குவனை இராமன் தடுத்தமை அறியலாம். இலக்குவன் எண்ணத்திற்கு இசையாததும் தன் அழிவுக்குக் காரணமான தீய விதியின் கொடுமையினால்தான் என இராமன் இரங்கியவாறு. (73)

### இராமன் இலக்குவனுடன் நில்லாது போயதற்கு வருந்துதல்

8909. நின்றிலெ னுடனெறி படைக்கு நீதியால்
ஒன்றிய பூசனை இயற்ற வுன்னினேன்
பொன்றினர் நமரெலா மிளவல் போயினான்
வென்றில னரக்கனை வினையின் மேன்மையால்.

'' நின்றிலென் உடன், எறிபடைக்கு நீதியால்
ஒன்றிய பூசனை இயற்ற உன்னினேன்;
பொன்றினர் நமர்எலாம்; இளவல் போயினான்;
வென்றிலன் அரக்கனை, விதியின் மேன்மையால்.

பொ :- என் தம்பியுடன் நில்லாமல், எறிகின்ற படைக்கலன் களுக்கு மனம் ஒருமித்த பூசனைசெய்ய நினைத்துப் போனேன்; நம்ம வர் எல்லாம் இறந்தனர்; என் தம்பியும் இந்திரசித்தினை வெல்லாமல் தீவினையின் மிகுதியால் இறந்து போயினான்.

கு :- உடன் நின்றிலன் என மாறுக. எறிபடை-பகைவர்மேல் வீசுதற்குரிய படை. ஒன்றிய பூசனை என்றது, மனம் ஒருமித்துச் செய்தற்குரிய பூசனையை. இளவல் அரக்கனை வென்றிலனாய்ப் போயினான் என இயையும். தீவினையின் மிகுதியை இங்கு வினையின் மேன்மை என்றார். (74)

### இராமன் இறத்தலே நலமென எண்ணுதல்

8910. ஈண்டிருந் திவையிவை யியம்பு மேழைமை
வேண்டுவ தன்றினி யமரின் வீடிய
ஆண்டகை யன்பரை யமரர் நாட்டிடைக்
காண்டலே நலம்பிற கண்ட தில்லையால்.

ஈண்டுஇருந்து இவைஇவை இயம்பும் ஏழைமை
வேண்டுவது அன்று ;இனி, அமரின் வீடிய
ஆண்தகை அன்பரை அமரர் நாட்டிடைக்
காண்டலே நலம் ; பிறகண்டது இல்லையால்.

பொ :- இங்கு இருந்துகொண்டு இவற்றை இவற்றை எல்லாம் சொல்லுகின்ற பேதைமை வேண்டத்தகுவதன்று ; போரில் இறந்த ஆண்டகையாகிய இலக்குவனையும் அன்பர்களையும் இறந்துபோய் வீரசுவர்க்கத்தில் காண்பதே நல்லது; இதைத் தவிர வேறு வழி தோன்றவில்லை.

கு :- கழிந்தவற்றைச் சொல்லிப் பயனின்மையின் 'இவை இயம்பும் ஏழைமை வேண்டுவதன்று' என்றான். ஏழைமை—அறியாமை. ஆண்டகையை அன்பரை என உம்மைத் தொகையாக்கி இரண்டனுருபை முன்னுங் கூட்டுக. 'ஆண்டகை' என்றது, இலக்குவனை. சிறப்பு நோக்கி முன் எண்ணப்பட்டான். அன்பர் என்றது தன்பால் கொண்ட அன்பால் வந்தடைந்த சுக்கிரீவன் முதலியோரை. இறப்பதே நலம் என்பான் அதனையே 'அமரர் நாட்டிடைக் காண்டலே நலம்' என வேறோர் வாய்பாட்டால் கூறிய வாறு. அமரர் நாடு என்றது இங்கு வீரர் புகும் வீரசுவர்க்கத்தை. தன் சேனையிலிருந்து போர்செய்து மாண்ட வீரர் அனைவரும் தேவ ராய் வீரசுவர்க்கம் புக்கிருப்பர் என்ற நம்பிக்கையும் இதனால் புலப் படுத்தியவாறு. (75)

### எம்பியை இழந்தபின் ஏதும் வேண்டேன் எனல்

8911. எம்பியைத் துணைவரை யிழந்த நானினி
வெம்புபோ ரரக்கரை முருக்கி வேரறுத்
தம்பினு லிராவண னுவி பாழ்படுத்
தும்பருக் குதவிமே லுறுவ தென்னரோ.

'எம்பியைத் துணைவரை இழந்த நான்,இனி,
வெம்புபோர் அரக்கரை முருக்கி, வேர்அறுத்து,
அம்பினால் இராவணன் ஆவி பாழ்படுத்து
உம்பருக்கு உதவி, மேல்உறுவது என்அரோ ?'

பொ :- "என் தம்பியையும் துணைவரையும் இழந்துவிட்ட நான் இனிமேல், மனம் வெதும்பிச் செய்கின்ற போரில் அரக்கரைக் கொன்று அடியோடு அழித்துவிட்டு, என் அம்பினால் இராவணன் உயிரையும் ஒழித்துவிட்டுத் தேவர்களுக்கு உதவிசெய்து யான் இனி அடையப்போவது என்ன இருக்கின்றது?"

கு :- தம்பியையும் துணைவரையும் இழந்தபின் இராவணனைக் கொல்வதால் தேவர்க்கன்றி எனக்கென்ன பயன்? என்று வெறுத்துக் கூறியவாறு. இறக்கப்போகும் எனக்கு அவ் வெற்றியால் பயனில்லை என்றவாறு. (76)

8912. இளையவ னிறந்தபின் னெவரு மென்னெனக்
களவறு சீர்த்தியென் னறமென் னாண்மையென்
கிளையுறு சுற்றமென் னரசென் கேண்மையென்
விளைவுதா னென்மறை விதியென் மெய்ம்மையென்.

'இளையவன் இறந்தபின், எவரும் என்எனக்கு?
அளவுஅறு சீர்த்திஎன்? அறம்என்? ஆண்மைஎன்?
கிளைஉறு சுற்றம்என்? அரசுஎன்? கேண்மைஎன்?
விளைவுதான் என்?மறை விதிஎன்? மெய்ம்மைஎன்?

பொ :- என் தம்பி இறந்தபின் எனக்கு எவர்தாம் எதற்கு? அளவில்லாத புகழ்தான் எதற்கு? அறம் எதற்கு? ஆண்மை எதற்கு? கிளைத்தல் பொருந்திய சுற்றந்தான் எதற்கு? வேதவிதி எதற்கு? மெய்ந் நெறிதான் எதற்கு?

கு :. இலக்குவன் இல்லையானால் யாராலும் எவற்றாலும் எனக்குப் பயனில்லை என்றது, இலக்குவனைப் போலத் தானும் இறக்கும் எண்ணத்தால் ஆகும். புகழும், தருமமும், ஆண்மையும் சுற்றமும், அரசும், கேண்மையும், நல்விளைவும், மறைவிதியும் மெய்ந்நெறியும் பயனுடையன ஆதல் இலக்குவனோடு இருக்கும் போதேயாம்; என, இலக்குவன்மேல் இராமன் கொண்டுள்ள அன்பின் அகலத்தைப் புலப்படுத்தியவாறு. "எம்பியே பிறர்க்கு மென்னில் எனக்கினி இலங்கை வேந்தன் தம்பியே புகழ்தான் என்னை பழியென்னை அறந்தா னென்னை" (நாகபாசப்-240) என முன்கூறியதும் நினைக. (77)

8913. இரக்கமும் பாழ்பட வெம்பி யீறுகண்
டரக்கரை வென்றுநின் ருண்மை யாள்வனேல்
மரக்கண்வன் கள்வனே வஞ்ச ரென்னிலார்
கரக்கும தல்லதோர் கடனுண் டாகுமோ.

'இரக்கமும் பாழ்பட எம்பி ஈறுகண்டு,
அரக்கரை வென்றுநின்று, ஆண்மை ஆள்வனேல்,
மரக்கண் வன்கள்வனே! வஞ்ச ரென்னில்ஆர்?
கரக்குமது அல்லதுஓர் கடன் உண்டாகுமோ?

பொ :- என் தம்பியின் இறுதியைக் கண்டு வைத்தும் இரக்கம் என்ற பண்பும் பாழ்படுமாறு (அப் பண்பினை விடுத்து) அரக்கரை வென்று நின்று, அவரை வென்றதாலாய ஆண்மையைப் பிறரறியக் காட்டிக்கொண்டிருப்பேனேல், யான் மரக்கண்ணையுடைய வலிய கள்வனே யாவேன்! (அதுமட்டுமின்றி,) என்னினும் வஞ்சகர் ஆருளர்? இத்தகைய எனக்குப் பிறர் பொருளைக் கவர்கின்ற களவுத் தொழில் அல்லது, வேறு ஓர் கடமை இருக்குமோ? (இராது).

கு :- இரக்கமுள்ள நெஞ்சத்தார் தம் தம்பியின் இறப்பைக் கண்டபின் வன்னெஞ்சராய் அரக்கரை வென்று ஆண்மைகாட்ட முயலார் என்பார், "இரக்கமும் பாழ்பட, எம்பி ஈறு கண்டு அரக்கரை வென்று நின்று ஆண்மை ஆள்வனேல்'' என்றான். இத்தகைய வன் நெஞ்சம் எனக்கு இருக்குமாயின் யான்கள்வனே ஆவேன்; மேலும், வஞ்சகரில் தலைமையானவனும் ஆவேன்; எனக்குக் களவு அல்லது வேறு தொழில் பொருந்தாது என்றவாறு. தம்பியின் மரணத்தைக் கண்டபின்னும் ஆண்மை காட்ட விரும்பினால் அவன் உயிரோடிருக்கும்போது காட்டிய அன்பு முழுவதும் கள்ளத்தாலும் வஞ்சகத்தாலும் காட்டப்பட்டதே யாகும் என்பதும், அவ்வாறு காட்டும் தன்மை தனக்கு வந்துவிடுமாயின் பின்பு பிறர் பொருளைக் கவரும் கள்ளத் தொழிலே தனக்கும் பொருத்தமானதாகும் என்பது கூறி அந்த ஆண்மையின் இழிவைப் புலப்படுத்தியவாறு. மரக்கண் என்றது, மரத்தின் கண்ணை. இதைக் கணு என்று வழங்குவர். கண் என்ற பெயர் அல்லது அதற்குறிய கண்ணோட்டம் இல்லாமையால் மரக்கண் என்று மக்கள் கண்ணை இகழ்வதுண்டு. "மண்ணோடியைந்த மரத்தனையர் கண்ணோ டியைந்து கண் ணோடாதவர்'' (குறள் – 576) என்பதும் "வன்பராய் முருடொக்குமென் சிந்தை மரக்கண் என்செவி இரும்பினும் வலிது'' (திருவாசகம்—செத்திலாப்பத்து-4) என்பதும்,

''மரக்கணேனையும் வந்திடப்புணியாய்'' (9) என்பதும் இங்கு ஒப்பு நோக்கத் தகும். கரத்தல்—கவர்தல். ''கழுத்தின தெழிலைச் சங்கங் கரந்தன'' (கந்தபு—மாயைப்—48) என்புழி இப்பொருளில் ஆளப்பட் டிருத்தல் காணலாம். (78)

8914. தாதையை யிழந்தபின் சடாயு வீய்ந்தபின்
காதலின் றுணைவரு முடியக் காத்துழல்
கோதறு தம்பியும் விளியக் கோளிலன்
சீதையை யுவந்துள னென்பர் சீரியோர்.

''தாதையை இழந்தபின், சடாயு வீய்ந்தபின்,
காதலின் துணைவரும் முடிய, காத்துஉழல்
கோதுஅறு தம்பியும் விளிய, கோள்இலன்
சீதையை உவந்துளன்'' என்பர் சீரியோர்.

பொ:- 'தந்தையை இழந்த பின்னும், தந்தை முறையினனாகிய சடாயு இறந்த பின்னும் அன்புள்ள இனிய சுக்கிரீவன் முதலிய துணைவர்களும் இறக்கவும் தன்னைக் காத்துக்கொண்டு திரிந்த குற்றமற்ற தம்பி இலக்குவனும் இறக்கவும் தான் மட்டும் இறவாது சீதையை விரும்பி இருக்கின்றான்; ஆதலால் நல்ல கொள்கை இல் லாதவன் இராமன்' என்று சொல்லுவார்கள் பெரியோர்கள்.

கு:- தாதையாகிய தயரதன் இறந்ததை நேரில் காணும் வாய்ப்பு இல்லாமல் பரதனால் கேள்விப்பட்டு இராமன் தந்தையை யிழந்தேன் என்ற உணர்ச்சியுடையவன் ஆனமை புலப்படத் 'தாதையை யிழந்தபின்' என்றும், சடாயுவின் மரணத்தை அருகி ருந்து பார்த்தமை புலப்படச் 'சடாயு வீய்ந்தபின்' என்றும் கூறி னான். தயரதனும் சடாயுவும் வயது முதிர்ந்தவர்கள்; அவர் இறந்த பின் வாழ்தலும் ஒக்கும்; சுக்கிரீவன் முதலிய துணைவர் முடியவும், தன்னையே காத்துக்கொண்டு திரிந்த குற்ற'ம் அற்ற தம்பி இறக்க வும், தான் இறவாதிருத்தல் பெரியதோர் இழுக்காம் என்றவாறு. பேரன்புடைய இவர்கள் யாவரும் இறக்கவும், யான் இறவாதிருந்தால் பெரியோர்கள், 'இவன் சீதையை விரும்பியே இருக்கின்றான்; நல்ல கொள்கையில்லாதவன்' என்று என்னை இகழ்வர் என இராமன் கூறி வருந்தியவாறு. (79)

8915. வென்றெ னரக்கரை வேரும் வீழ்ந்தறக்
கொன்றெ னயோத்தியைக் குறுகினேன் குணத்
தின்றுணைத் தம்பியை யின்றி யானுளே
னன்றரசாளுமா சால நன்றரோ.

வென்றனென், அரக்கரை வேரும் வீய்ந்துஅறக்
கொன்றனென், அயோத்தியைக் குறுகினேன், குணத்து
இன் துணைத் தம்பியை இன்றி யான்உளேன்
நன்று, அரசு ஆளுமா சால நன்றுஅரோ.

பொ :- குணத்தினையுடைய இனிய துணைவனாகிய தம்பியை இழந்து, (யான்மட்டும் இறவாது) வாழ்பவனாயிருந்து, வேரும் அழிந்துபோகுமாறு அரக்கரை அடியோடு கொன்று, வெற்றிபெற்று அயோத்தியை அடைந்து, யான் அரசு ஆளுமாறு நன்று; மிகவும் நன்று.

கு :- தம்பியில்லாமல் அரக்கரை வெல்லுதலும் அயோத்தியை அரசுஆளுதலும் நன்றன்று என்பது கருத்து. யானுளேன், வென்றனென், கொன்றனென், குறுகினேன், என்பன முற்றெச்சங்கள். தம்பியை யின்றி யானுளேனாய், அரக்கரைக் கொன்று, வென்று, அயோத்தியைக் குறுகி, அரசாளுமாறு நன்று; சாலநன்று என இயையும். ஆளுமாறு என்பது ஆளுமா எனக் கடை குறைந்தது. இகழ்ச்சிக் குறிப்பால் நன்று; சால நன்று; என்றான். (80)

## இராமன் இறப்பேன் எனக் கூறச் சாம்பன் கூறுவது உளதெனல்

8916. படியின்மேற் காதலின் யாதும் பார்க்கலன்
முடிகுவெ னுடனென முடியக் கூறலும்
அடியிணை வணங்கிய சாம்ப னாழியாய்
நொடிகுவ துளதென நுவல்வ தாயினன்.

படியின்மேல் காதலின், யாதும் பார்க்கலன்,
‘முடிகுவென் உடன்’என முடியக் கூறலும்,
அடியிணை வணங்கிய சாம்பன், ‘ஆழியாய்!
நொடிகுவது உளது’என நுவல்தாயினன்.

பொ :- பூமியின்மேல் காதலினால் இராமன் பின் விளைவு எதையும் பார்க்காதவனாய் 'இலக்குவனோடு இறப்பேன்' என்று முடிவாகச் சொல்லுதலும், (அவ் இராமனுடைய) திருவடிகளை வணங்கிய சாம்பவன் 'சக்கரப்படையுடையவனே! யான் சொல்லவேண்டுவது உளது' என்று சொல்லத் தொடங்கினான்.

கு :- இராமன் இலக்குவனோடு முடிந்தால் சீதையின் நிலை என்னாவது? முனிவர்கட்குக் கொடுத்த வாக்கு என்னாவது? பரதன் முதலியோர் நிலை என்னாவது? என எதையும் பார்க்காதவனாய்க் கூறினான் என்பார், 'யாதும் பார்க்கலன் முடிகுவெனுடனென முடியக் கூறலும், என்றார். பார்க்கலன், முற்றெச்சம். முடியக் கூறுதலாவது, தீர்மானமாகச் சொல்லுதல். ஆழியாய் என்றது 'சக்கரவர்த்தியே' என்றும் 'சக்கரப்படையுடைய திருமாலே' என்றும் இரு பொருள் கொள்ள நின்றது. சாம்பவன் அவனைத் திருமால் என்ற நினைவினாலேயே இங்ஙனம் விளித்தான் என்பது பின்வரும் அவன் சொற்களால் உணரலாம். நொடி-சொல். (81)

### சாம்பவன் சொன்னது

8917. உன்னைநீ யுணர்கிலை யடிய னேனுனை
முன்னரே யறிகுவேன் மொழித றீதது
என்னெனி னிமையவ ரெண்ணுக் கீனமாம்
பின்னரே தொகுதி தெரிவில் பெற்றியோய்.

'உன்னைநீ உணர்கிலை; அடியனேன் உனை
முன்னமே அறிகுவேன்; மொழிதல் தீது,அது;
என்எனில், இமையவர் எண்ணுக்கு ஈனம்ஆம்;
பின்னரே தெரிகுதி;—தெரிவுஇல் பெற்றியோய்

பொ :- எவராலும் தெரிந்துகொள்ள முடியாத (அளத்தற்கு அரிய) பெருந்தன்மையுடையவனே! உன்னை நீ உணராமல் இருக்கின்றாய்; அடியேன் உன்னை முன்னமே அறிவேன்; அதைச் சொல்லுதல் நல்லதன்று; என்னவெனின், தேவர்களின் எண்ணத்திற்குக் குறைவாகும்; பின்னர் நீயே தெரிந்துகொள்வாய்.

கு :- நீ திருமாலே என்பதை அறிந்திருந்தால் இங்ஙனம் கூற மாட்டாய் என்ற கருத்தால் 'உன்னை நீ உணர்கிலை' என்றான். உனை முன்னரே அறிவேன் என்றது,நீ திருமால்தான் என்பதை முன்னரே

அறிகுவேன் என்னும் கருத்தினது. இராவண வதத்தின் பொருட்டு உருமாறித் திருமாலும் தேவர்களும் பிறந்துள்ளனர் என்ற இரகசியத்தை வெளிப்படுத்தலாகாது என்பது தேவ சபையின் முடிவு ஆகலின், 'இமையவர் எண்ணுக்கு ஈனமாம்' என்றான். ஈனம்-குறைவு. இராவண வதம் முடிந்தபின் இராமனே தன்னை இன்னான் என அறிகுவான் என்றவாறு. ''என்னால் கினி நியம்பி யின்றறியக் கூறுவெனேல், ஒன்றாது தேவருறுதிக் கெனவுன்னு'' (ஆரணிய-கவந்தப்-51) எனக் கவந்தனும் நினைத்ததாகக் கூறியது இங்கு நினையத்தகும். (82)

8918. அம்புயத் தவன்படை யாத றேறினேன்
உம்பியை யுலப்பரும் வலத்தை யொத்தது
வெம்புபோர்க் களத்திடை விழுத்த வென்றியால்
எம்பெருந் தலைவவீ தெண்ண முண்மையால்.

'அம்புயத்து அயன்படை ஆதல் தேறினேன்,
உம்பியை உலப்புஅரும் வலத்தை ஒத்தது,
வெம்புபோர்க் களத்திடை விழுத்த வென்றியால்;
எம்பெருந் தலைவ! ஈதுஎண்ணம் உண்மையால்.

பொ:- எம்முடைய பெரிய தலைவனே! மனம் கொதித்துச் செய்யும் போர்க்களத்தில் உன் தம்பியை—அழிவில்லாத அவன் வலிமையைப் போன்ற ஒன்றினை விழ்த்திய வெற்றியினால் அது பிரமனுடைய கணையாதலை அறிந்தேன்; இந்த என் எண்ணம் உண்மையானதாகும்.

கு:- சிறப்புக் கருதி 'உம்பியை உலப்பரும் வலத்தை' எனப் பிரித்துக் கூறியவாறு. 'தனியுந் தானுமத்தையலு மாயினான்'(பால-மிதிலை-139) என்று பண்பையும் பண்பியையும் வேறாகப் பிரித்து எண்ணியுள்ளதும் காண்க. வலத்தை ஒத்தது என்புழி ஒத்தல் ஒப்பில் போலி. ''உம்பியை வலத்தை விழுத்த வென்றியால் அம்புயத்தவன் படையாதல் தேறினேன்; ஈது எண்ணம் உண்மை'' என இயையும். இனி, உம்பியினது உலப்பரும் வலத்தை என உருபு மயக்கமாக்கலும் ஆம். இலக்குவனது பெரிய வலிமை பிற படைகளால் விழ்த்தப்படும் தரத்தன்று என்றவாறு. உலத்தல்-அழிதல். (83)

8919. அன்னவன் படைக்கல மமரர் தானவர்
தன்னையும் விடினுயிர் குடிக்குந் தற்பர
உன்னையொன் றிழைக்கில தொழிந்து நீங்கிய
தின்னமு மளவையொன் றெண்ண வேண்டுமோ.

'அன்னவன் படைக்கலம், அமரர் தானவர்—
தன்னையும், விடின்உயிர் குடிக்கும்; தற்பர!
உன்னைஒன்று இழைக்கிலது, ஒழிந்து நீங்கியது;
இன்னமும் அளவைஒன்று எண்ண வேண்டுமோ?

பொ:- அந்தப் பிரமனுடைய கணையை விட்டால் தேவர்கள் தானவர்கள் என்பவர்களையும் உயிர்குடிக்கும் தன்மையது; (அத்தகைய பிரமாத்திரம்) எல்லாப் பொருள்களுக்கும் மேலானவனே! உன்னை ஒன்றும் செய்ய இயலாததாய் விட்டு நீங்கியது. (நீ திருமாலே என்பதற்கு இதுவே சான்றாகும் ஆதலின்,) இன்னமும் வேறு அளவை ஒன்றுகொண்டு நிறுவ வேண்டுமோ? (வேண்டா.)

கு:- அமரரையும் தானவரையும் கொல்லுதற்குரிய பிரமாத்திரம், உன்னை ஒன்றும் செய்யவியலாது போயினமையே நீ திருமால் தான் என்பதற்குப் போதிய அளவையாக அமைதலின் வேறு அளவைகொண்டு அதனை நிறுவ வேண்டுவதில்லை என்றவாறு. இது அருத்தாபத்தி அளவை. நீ திருமாலாக இல்லையானால் பிரமாத்திரம் உன்னை விடுத்துச் சென்றிராது. பிரமாத்திரம் உன்னை ஒன்றும் செய்யாது போனமையால் நீ திருமாலே என்பதை உணரலாம் என்றவாறு. 'உன்னை நீ யுணர்கிலை' என முன் கூறியதை அருத்தாபத்தியளவையான் நிறுவியவாறு. அருத்தாபத்தி அளவையே அமையும். வேறு அளவை வேண்டா என்றவாறு. (84)

8920. பெருந்திற லனுமனிண் டுணர்வு பெற்றுளான்
அருந்துயர் முடிக்குறு மளவி லாற்றலான்
மருந்திறைப் பொழுதினிற் கொணர்கு வாயெனப்
பொருந்தினன் வடதிசைக் கடிது போயினான்.

'பெருந்திறல் அனுமன்ஈண்டு உணர்வு பெற்றுளான்
அருந்துயர் முடுக்குறும் அளவுஇல் ஆற்றலான்,
"மருந்துஇறைப் பொழுதினில் கொணர்குவாய்!" என,
பொருந்தினன், வடதிசைக் கடிது போயினான்.

பொ:-'இங்கு உணர்வு வரப்பெற்றிருக்கின்றவனுகிய பெரிய திறமையுடைய அனுமன், இந்தத் துயரை முடிப்பதற்குரிய அளவு இலாத ஆற்றலை உடையவன்; ஆதலின், (அவனை நோக்கி இறந்த வரை எழுப்புகின்ற) மருந்தினை இமைப்பொழுதில் கொணர்வாயாக' என யான் கூற, அவன் அதற்கு உடன்பட்டவனாய் வடதிசை நோக்கி விரைந்து போயிருக்கின்றான்.

கு:- உணர்வு பெற்றுளானுகிய அனுமன் ஆற்றலான் ஆதலின், 'மருந்து கொணர்குவாய்' எனக் கடிது போயினுன் என இயையும். பிறரால் தீர்த்தற்கு அரிய துயர் என்பார், 'அருந்துயர்' என்ருர். அருந்துயர் முடித்தலாவது, அத்துயர் இல்லையாகச் செய்தல். இறைப்பொழுது—சிறிதுபொழுது; இங்கு இமைப் பொழுது என்ற பொருளில் வந்தது. காலச்சிறுமைககு கூறத்தகுவது அதுவேயாதல் நினைக. பொருந்துதல்—உடன்படுதல். (85)

8921. பனிவரை கடந்தனன் பருப்ப தங்களின்
தனியர சதன்புறந் தவிர்ந்து சார்ந்துளான்
இனியொரு கணத்தின்வந் தெய்து மீண்டுறுந்
துனிவரு துன்பநீ துடைத்தி தொல்லையோய்.

'பனிவரை கடந்தனன், பருப்ப தங்களின்
தனிஅரசு அதன்புறம் தவிர்ந்து சார்ந்துளான்,
இனிஒரு கணத்தின்வந்து எய்தும்; ஈண்டுறும்
துனிவரு துன்பம்நீ துடைத்தி, தொல்லையோய்!

பொ:- (அனுமன் இப்போது) இமயமலைக் கடந்து, மலைகட்கெல்லாம் ஒப்பற்ற அரசாகிய மேருமலையின் புறத்தை நீங்கி அம் மருந்துள்ள மலையைச் சார்ந்திருக்கின்ருன்; பழமையானவனே! இனி ஒருகண நேரத்தில் வந்துசேருவான்; இங்கு நீ உறுகின்ற மனம் கலங்குதற்குக் காரணமான பெருந்துன்பத்தை விடுவாயாக!

கு:- பருப்பதங்களின் தனி அரசு என்றது மேரு மலையை. தவிர்தல்—நீங்குதல். சார்ந்துளான் என்றது, மருத்துமலையைச் சார்ந்துளான் என்றவாறு. ஈண்டுறும் துன்பம், துனிவரு துன்பம் எனத் தனித்தனி இயையும். உலகிற்கு மூலகாரணன் என்ற கருத்தால் இராமனை இங்குத் 'தொல்லையோய்' என விளித்தான். (86)

8922. யானலா லெந்தையா யுலகை யீன்றுளான்
தானலாற் சிவனலா னேமி தாங்கிய
கோனலா லெனவரு முணருங் கோளிலர்
வேனலான் மேனியாய் மருந்தை மெய்யுற.

'யான்அலால், எந்தையாய் உலகை ஈன்றுளான்,
தான்அலால், சிவன்அலால் நேமி தாங்கிய
கோன்அலால், எனவரும் உணரும் கோள்இலர்,—
வேனலான் மேனியாய்!—மருந்தை மெய்உற.

பொ:- மன்மதன் போன்ற அழகுமிக்க மேனியையுடையவனே! யான் அல்லது, என் தந்தையாய் இவ்வுலகை படைத்தவனுன பிரமன் அல்லது, சிவன் அல்லது, சக்கரப்படையேந்திய திருமால் அல்லது, மற்றுள்ள எத் தன்மையோடும் அம் மருந்தை மெய்மையாக உணரும் தன்மையர் அல்லர்.

கு:- யானும், பிரமனும், சிவனும், திருமாலும் அல்லாதோர் அம் மருந்தின் உண்மையை அறியுந் தன்மையர் அல்லர் என்று சாம்பவன் கூறினுன். வேனலான்—மன்மதன். 'மருந்தை மெய் யுற உணருங் கோளிலர்' என்க. கோள்—தன்மை. ''யாக்கைக் கோள் எண்ணுர்''(நாலடி—18)என்புழியும் இச் சொல் இப் பொருளது ஆதல் காணலாம். (87)

8923. ஆர்கலி கடைந்தநா ளமிழ்தின் வந்தன
கார்நிறத் தண்ணறன் னேமி காப்பன
மேருவி னுத்தர குருவின் மேலுள
யாருமுற் றுணர்கிலா வரண மெய்தின.

'ஆர்கலி கடைந்தநாள், அமிழ்தின் வந்தன;
கார்நிறத்து அணல்தன் நேமி காப்பன;
மேருவின் உத்தர குருவின் மேல்உள;
யாரும்உற்று உணர்கிலா அரணம் எய்தின.

பொ:-(அந்த மருந்துகள்) திருப்பாற்கடல் கடைந்த நாளில் அமிழ்திஞேடு தோன்றியவை; மேக வண்ணனுகிய திருமாலின் சக்கரப்படையால் பாதுகாக்கப்படுவன; மேருவின் வடபால் உள்ள உத்தரகுரு நாட்டிற்கும் அப்பால் உள்ளன; யாரும் நெருங்கி அறியவியலாதவண்ணம் பாதுகாவல் பொருந்தியன.

கு :- ஆர்கலி—கடல்; ஆர்க்கின்ற ஒலியையுடையது என்ற காரணம்பற்றி வந்தது. இங்குப் பாற்கடலை உணர்த்தியது. அமிழ்தினெடு வந்தன என்று ஒரு விரிக்க. அரணம்—பாதுகாவல்; தேவர்களால் காக்கப்படுவதையே இங்கு அரணம் எனக் கூறினர் எனலாம். (88)

8924. தோன்றிய நாண்முதல் யாருந் தொட்டில
ஆன்றபே ரண்ணலே யவற்றி னாற்றல்கேள்
மூன்றென வொன்றிய வுலக முன்னை நாள்
ஈன்றவ னிறப்பினு மாவி யீயுமால்.

தோன்றிய நாள்முதல் யாரும் தொட்டில;
ஆன்றபேர் அண்ணலே! ஆவற்றின் ஆற்றல்கேள்,
மூன்றுஎன ஒன்றிய உலகம், முன்னைநாள்,
ஈன்றவன் இறப்பினும், ஆவி ஈயுமால்.

பொ :- (அம் மருந்துகள் பாற்கடலில்) தோன்றிய நாள்முதல் இதுகாறும் யாரும் தொடாதவை; விரிந்த புகழையுடைய அண்ணலே! அம் மருந்துகளின் ஆற்றலைக் கேட்பாயாக; மூன்று என்னுமாறு, பாதலம், பூதலம், மீதலம் என ஒன்றன்மேல் ஒன்ருக அடுக்கியுள்ள உலகங்களைப் பண்டு படைத்த பிரமன் இறந்தாலும் அவனுக்கு உயிரைக் கொடுக்கவல்லது.

கு :- ஆன்ற பேர் என்றது, விரிந்த புகழை. அகன்ற என்பது ஆன்ற எனவும், பெயர் என்பது, பேர் எனவும் வந்தது. படைப்புக் கடவுளாய பிரமனுக்கும் உயிரளிக்கவல்லது என அவற்றின் ஆற்றலைப் புலப்படுத்தியவாறு. (89)

8925. சல்லிய மகற்றுவ தொன்று சந்துகள்
புல்லுறப் பொருத்துவ தொன்று போயின
நல்லுயிர் நல்குவ தொன்று நன்னிறம்
தொல்லைய தாக்குவ தொன்று தொல்லையோய்.

'சல்லியம் அகற்றுவது ஒன்று; சந்துகள்
புல்லுறப் பொருத்துவது ஒன்று; போயின
நல்உயிர் நல்குவது ஒன்று; நல்நிறம்
தொல்லையது ஆக்குவது ஒன்று;—தொல்லையோய்!

பொ :- பழமையானவனே! (அம் மருந்துகளுள்,). உடம்பில் தைத்துள்ள அம்புகளை அகற்றுவது ஒன்று; மூட்டுகள் பொருந்து

மாறு பொருந்துவது ஒன்று; போன நல்லுயிரை மீட்டுக்கொடுப்பது ஒன்று; பழைய நல்ல நிறத்தைப்புண்டாக்குவது ஒன்று.

கு :- சல்லியம்—அம்பு. சந்துகள் என்றது முட்டு வாய்களை. மேல் மருந்து எனப் பொதுவகையாற் கூறியது நான்கு வகைப்படும் என்பதும் அவற்றின் செயல் இவை என்பதும் விளக்கியவாறு. அம்பு முதலிய எதிரிகளின் படைகளை உடம்பிலிருந்து நீக்குகின்ற மருந்து விசல்லிய கரணி எனப்படும். முட்டுகளைப் பொருந்துவது, சந்தான கரணி எனப்படும். போன உயிரைத் தருவது சஞ்சீவி கரணி எனப்படும். படைபட்ட வடு நீக்கி முன்னைய நிறத்தை உண்டாக்குவது சாவர்ணிய கரணி எனப்படும் என்பர். அனுமனுக்கும் இம் மருந்துகளின் நான்கு வகையைப்பற்றிச் சாம்பன் முன் கூறியுள்ளது. (27) நினைக. (90)

8926. வருவது திண்ணநீ வருந்தன் மாருதி
தருநெறி தருமமே காட்டத் தாழ்க்கிலன்
அருமையை தன்றென வடிவ ணங்கினன்
இருமையுந் துடைப்பவ னேம்ப லெய்தினன்.

வருவது திண்ணம்; நீவருந்தல்; மாருதி,
தருநெறி தருமமே காட்ட, தாழ்க்கிலன்;
அருமையது அன்று' என,அடி வணங்கினன்;
இருமையும் துடைப்பவன் ஏம்பல் எய்தினன்.

பொ :- 'மருந்து வருவது உறுதி; நீ வருந்தாதே; அனுமன் தருமமே பழியைக் காட்டத் தாமதிக்காதவனாய்த் தருவான்; அது அவனுக்கு அருமையுடையதன்று;' என்று சொல்லிச் சாம்பன் இராமனடியை வணங்கினன்; (தனையடைந்தவர்களின் நல்வினை தீவினை என்ற) இருவினையையும் நீக்குகின்றவனாகிய இராமன் மகிழ்ச்சி அடைந்தான்.

கு :- தாழ்க்கிலன் தரும் என இயையும். இருமை என்றது, இங்கு இரண்டு என்னும் பொருளதாய் நல்வினை தீவினை என்ற இருவினையை யுணர்ந்தியது. 'தெரிமாண்டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்' பரிபாடல்—என்பது நினைக. இராமனது தெய்வநிலை நினைந்து இங்கு 'இருமையுந் துடைப்பவன்' என்றார். (91)

## இராமன் சாம்பனதுரையை ஏற்கின்றபோது வடதிசையில் ஒலியெழுதல்

8927. பொன்மலை மீதுபோய் போக பூமியின்
நன்மருந் துதவுமென் றுரைத்த நல்லுரைக்
கன்வய மில்லையென் றயிர்க் கின் றேனலேன்
என்னலும் வடதிசை யெழுந்த தோங்கொலி.

"பொன்மலை மீதுபோய், போக பூமியின்
நல்மருந்து உதவும்" என்றுஉரைத்த நல்உரைக்கு
அன்வயம் இல்லைஎன்று அயிர்க்கின்றேன் அலேன்'
என்னலும், விசும்பியை எழுந்தது ஓங்குஒலி.

பொ :- "பொன்மலையாகிய மேருவின் மேற்சென்று போக பூமிக்கு அப்பால் உள்ள நல்ல மருந்தை அநுமன் உதவுவான்" என்று நீ சொன்ன நல்ல சொல்லுக்குப் பொருந்தம் இல்லை என்று யான் ஐயுறவு கொள்ளவில்லை;' என்று இராமன் சொல்லுதலும், வடதிசையில் உயர்ந்த ஒலி எழுந்தது.

கு :- அன்வயம்—பொருந்தம். ஐயுருது ஏற்கத்தக்கதே என்பான். நல்லுரைக்கு அன்வயமில்லை என்று 'அயிர்க்கின்றேனலேன்' என்றுன். நல்லுரைக்கு அன்வயம் உண்டு என்று நம்புகிறேன் என்றவாறு. இறந்தவர் எழுவார்கள் என்ற நல்ல கருத்துடைய உரையாதலின் நல்லுரை எனப்பட்டது. (92)

## வடதிசையில் சண்ட மாருதம் தோன்றுதல்

8928. கடல்கிளர்ந் தெழுந்துமேற் படரக் கார்வரை
இடையிடை பறிந்துவிண் ணேற விற்றிடை
தடையில துடற்றுறு சண்ட மாருதம்
வடதிசை தோன்றிய மறுக்க முற்றதால்.

கடல்கிளர்ந்து எழுந்து மேல்படர, கார்வரை
இடைஇடை பறிந்து விண்ஏற, இற்றுஇடை
தடைஇலது உடற்றுறு சண்ட மாருதம்
வடதிசை தோன்றிய மறுக்கம் உற்றதால்.

பொ :- கடல் பொங்கி எழுந்து கரைகடந்து செல்லவும். கரிய மலைகள் நடுநடுவே பறியுண்டு இடையில் முறிந்து; விண்மேல் ஏறவும், தங்குதடையில்லாமல் வீசுகின்ற சண்ட மாருதம் வடதிசையில் தோன்றியதாலாகிய கலக்கம் இங்கு உண்டாயது.

கு :- கார்வரை இடையிடைபிரிந்து இடையிற்று விண்ணேற என இயையும். சண்டமாருதம்—பெருங்காற்று. சண்ட மாருதம் தோன்றியதால் உளதாகிய மறுக்கம் எனக் கரணப் பெருளில் வந்த பெயரெச்சமாகச் கொள்க; மழை பொழிந்த வெள்ளம் என்புழிப் போல. மறுக்கம்—கலக்கம். (93)

### விண்மீன் முதலியன நிலைகுலைதல்

**8929. மீன்குலங் குலைந்துக வெயிலின் மண்டிலம்**
**தான்குலைந் துயர்மதி தழுவத் தன்னுழை**
**மான்குலம் வெருக்கொள மயங்கி மண்டிவான்**
**தேன்குலம் கலங்கிய நறவிற் சென்றவால்.**

மீன்குலம் குலைந்துஉக, வெயிலின் மண்டிலம்
தான்குலைந்து உயர்மதி தழுவ, தன்னுழை
மான்குலம் வெருக்கொள, மயங்கி, மண்டி,வான்,
தேன்குலம் கலங்கிய நறவின், சென்றவால்.

பொ :- (அனுமன் வரும் வேகத்தால் உண்டான பெருங்காற்றால்) விண்மீன் கூட்டங்கள் நிலைதடுமாறிச் சிந்தவும் வெயிலினையுடைய சூரிய மண்டலம் நிலைகலங்கி உயர்ந்த சந்திரனைத் தழுவவும், அந்தச் சந்திரனில் உள்ள சிறந்த மான் அச்சங் கொள்ளவும், மேகக் கூட்டம், தேன்கூட்டில் கலங்கியெழுந்த தேனீக்கள்போலக் கலங்கி நெருங்கிச் சென்றன.

கு:- அனுமன் விண்வழிவரும் வேகத்தால் வின்மீனும் சூரியனும் சந்திரனும் மேகமும் பட்டபாட்டினைப் புலப்படுந்திவாறு. மான் குலம் என்பதை குலம் மான் என மாற்றுக. தன்னுழைக் குலமான் என்றது, சந்திரனிடத்தில் உள்ள சிறத்த 'மானினை சந்திரனிலுள்ள களங்கத்தை மான் ஆகக்கூறும் மரபுபற்றி இங்ஙனம் கூறினர். நறவு என்பது ஆகுபெயராய்த் தேன்கூட்டினை உணர்த்தியது. தேன் கூட்டினைக் கிளறிவிட்டால் அதில் மொய்த்துள்ள தேனீக்கள் அங்குமிங்குமாகக் கலங்கித் திரண்டு பறந்துசெல்வதுபோல, மேகக் கூட்டங்கள் காற்றால் செறிவு கலங்கிப்பின் நெருங்கிச் சென்றன என்க. நறவு கலங்கிய தேன் குலத்தின் என மாற்றுக. (94)

## அனுமன் ஆர்த்தல்

8930. வேர்த்துணர் தூரொடு விசும்பை மீச்செலப்
போர்த்தன மலையொடு மரனு முன்புபோல்
தூர்த்தன வேலையைக் காலின் றோன்றலும்
ஆர்த்தன னணையவ ரரந்தை யாற்றுவான்.

வேர்த்துணர் தூரொடு விசும்பை மீச்செலப்
போர்த்தன மலையொடு மரனும், முன்புபோல்
தூர்த்தன, வேலையை; காலின் தோன்றலும்,
ஆர்த்தனன், அணையவர் அரந்தை ஆற்றுவான்.

பொ :- வேரின் தொகுதியையுடைய புதரோடு, வானத்தின் மேல் செல்லுமாறு முடிக்கொண்டுள்ள மலையோடு மரமும் அணை கட்டியகாலத்தில் தூர்ந்ததுபோலக் கடலைத் தூர்த்தன; காற்றின் மதலையாகிய மாருதியும் அங்குள்ள சாம்பவன் முதலியோரின் துன்பத்தை முன்கூட்டியே போக்குதற்காக ஆரவாரித்தான்.

கு :- அனுமன் விரைந்து வருங்கால் தோன்றிய காற்றினால் வழியிலுள்ள மலைகளும் மரங்களும் தூர்களும் பெயர்ந்து, முன்பு போல் சென்று கடலைத் தூர்த்தன என்றவாறு. தூர்—புதர். மலையின் உயர்வினைப் புலப்படுத்த 'விசும்பை மீச்செலப் போர்த்தன மலை' என்றார். தூரும் மலையும் மரனும் வேலையைத் தூர்த்தன என்க. முன்புபோல் என்றது, சேதுகட்டிய காலத்தைப்போல என்றவாறு. சாம்பவன் முதலியோர் முன்பே அறிந்து துன்பம் தணியுமாறு அனுமன் சேய்மையிலேயே குரல்கொடுத்தான் என்பார், 'ஆர்த்தான்' என்றார். அரந்தை- துன்பம். (95)

## அனுமன் ஆர்ப்பொலியின் சிறப்பு

8931. மழைகளுங் கடல்களு மற்று முற்றுமண்
உழையவும் விசும்பவு மொலித்தற் கொத்துள
குழீஇயின குமுறின கொள்கை கொண்டதால்
உழுவையின் சினத்தவ னார்த்த வோசையே.

மழைகளும் கடல்களும், மற்றும் முற்றும்,மண்-
உழையவும் விசும்பவும் ஒலித்தற்கு ஒத்துள,
குழீஇயின குமுறின கொள்கை கொண்டதால்-
உழுவையின் சினத்தவன் ஆர்த்த ஓசையே.

பொ :- புலிபோன்ற கோபத்தையுடைய அனுமன் ஆரவாரித்த ஓசையானது - தரையிடத்தனவும் வானிடத்தினவுமாய் ஒலிசெய்த தற்கு உரியனவாகிய கடல்களும் மேகங்களும் மற்றும் அவைபோல் ஒலிசெய்தற்குரியனவாயுள்ள முற்றும் ஒன்று சேர்ந்தனவாய் ஆரவாரித்த தன்மையைக் கொண்டது.

கு :- மண் உழைய கடல்களும் விசும்ப மழைகளும் என எதிர் நிரல்நிறையாக இயையும். மண்ணில் பேரொலி செய்தற்குரிய கடலையும், விண்ணில் பேரொலி செய்தற்குரிய மேகத்தையும் பிரித்துக்கூறி ஒலித்தற்குரிய ஏனையவற்றையெல்லாம் 'மற்று முற்றும்' என்றதால் தழுவிக் கொண்டவாறு. அனுமனது ஆர்ப் பொலி கடல்ஒலியிலும் இடியொலினும் மிக்கிருந்தது என்பார், 'ஒலித்தற் கொத்துள குழீஇயின குமுறினி கொள்கை கொண்டதால்' என்றார். இது தற்குறிப்பேற்ற உவமை. கடலொலியோ இடி யொலியோ பிறவொலியோ, தனித்து உவமையாகாது என்றவாறு. உழுவை—புலி. (96)

### அனுமன் கருடனை ஒத்துத் தோன்றுதல்

8932. எறிதிரைப் பெருங்கடல் கடைய வேற்றநாள்
செறிசுடர் மந்தரந் தருதி சென்றென
வெறிதுகொ லெனக்கொடு விசும்பின் மீச்செலும்
உறுவலிக கலுழனே யொத்துத் தோன்றினன்.

எறிதிரைப் பெருங்கடல் கடைய ஏற்றநாள்,
'செறிசுடர் மந்தரம் தருதி சென்று'என,
'வெறிது, கொல்' எனக்கொடு, விசும்பின் மீச்செலும்
உறுவலிக் கலுழனே ஒத்துத் தோன்றினன்.

பொ :- வீசுகின்ற அலைகளையுடைய பெரிய திருப்பாற்கடலைக் கடைதற்கு ஏன்று கொண்ட நாளில், 'நெருங்கியே ஒளியையுடைய மந்தர மலையைப் போய்க் கொணர்க' என்று சொல்ல, 'உள்ளீடு இல்லாததொரு எளிய பொருளோ' எனக் கண்டோர் கருதுமாறு (முயற்சியேதும் இன்றி விளையாட்டாகத்) தூக்கிக்கொண்டு விண்ணின்மேல் செல்லும் மிக்க வலிமையுடைய கருடனைப்போன்று தோன்றினன்.

கு :- தேவரும் அசுரரும் ஏற்றநாள் என்க. பாற்கடல் கடைய மத்தாக நாட்டுதற்கு மந்தர மலையைக் கொணரக் கலுழனைத் திருமால் அனுப்பினா என்றும், அவன் சென்று அம் மலையைப்

பெயர்த்து மிக எளிதாகத் தூக்கிக்கொண்டு வந்தான் என்றும் கொள்க. கலுழன் மந்தர மலையைக் கொணர்ந்த செய்தி முன்னும் "அயில்வாளி உவணவண்ணலை யொத்தது மந்தர மொத்தது அவ்வுயர் பொற்றோள்" (கும்பகருணன் வதைப்-346) எனவந்துள்ளது நினையலாம். கனமிக்க பெரிய மந்தர மலையைக் கருடன் எளிதாக எடுத்துவந்தமை புலப்பட "வெறிது கொலெனக் கொடு" என்றார். வெறிது என்பது, இங்குக் கனமில்லாத வெறும்பொருள் என்னும் கருத்தினது. அனுமன் மருத்துமலை யெடுத்துவரும் தோற்றம் கலுழன் மந்தரமலை எடுத்துவரும் தோற்றம் போன்றிருந்தது என்ற வாறு. வானவரை உய்விக்கக் கலுழன் மந்தரமலையைக் கொணர்ந்தது போலவே அனுமனும் வானரரை (வானவரை) உய்விக்க மருத்துமலையைக் கொணர்கின்றானாதலின் இவ் வுவமை தொழிலுவமையாதலோடு பயனுவமையும் ஆதல் காணலாம். (97)

இச் செய்யுளுக்குப்பின் 44, 77 என்ற எண்ணுள்ள சுவடிகளில் கீழ்வரும் செய்யுள் காணப்படுகின்றது.

8932a. மூன்றரத் தாவொடும் புல்லின் முன்னம்வந்
தூன்றின நிலத்தடி கடவு ளோங்கருன்
வான்றனி நின்றது வஞ்ச ரூர்வர
வேன்றில தாதலா லனும னெய்தினன்.

### அனுமன் வாயுவைப் போலுதல்

8933. பூதரத் தரவொடு மலைந்து போன நாள்
ஓதிய வென் றிய னுடற்று மூற்றத்தன்
ஏதமி லிலங்கையங் கிரிகொ டெய்திய
தாதையு மொத்தன னுவமை தற்கிலான்.

பூதரத்து, அரவொடு மலைந்து போனநாள்,
ஓதிய வென்றியன், உடற்றும் ஊற்றத்தான்,
ஏதம்இல் இலங்கைஅம் கிரிகொடு எய்திய
தாதையும் ஒத்தனன் உவமை தற்குஇலான்.

பொ :- மேருமலையின் ஆயிரம் சிகரங்களிலும் தன் ஆயிரம் தலைகளையும் வைத்துப் பாதுகாத்துக் கொண்டிருந்த ஆதிசேடன் என்னும் பாம்போடு மாறுபட்டுப் போர்க்குப் போனநாளில் சிறப்பித்துக் கூறப்படும் வெற்றியையுடையவனும் போர்செய்யும் வலிமை உடையவனுய்க், குற்றமில்லாத இலங்கைக்கு

இடமாக உள்ள திரிகூடமலையைப் பறித்துக்கொண்டு தென்திசை எய்திய தன் தந்தையாகிய வாயுதேவனையும் ஒத்து விளங்கினான் ;— தனக்குவமை யில்லாதவனாகிய அனுமன்.

கு :- பூதரம்-மலை; பூமியைத்தாங்கும் காரணம் பற்றிவந்த பெயர். ஆதிசேடனும் வாயுதேவனும் மாறுபட்டுப் போர்செய்யும் போது நியமித்துக்கொண்ட முறைப்படி ஆதிசேடன் மேருமலையின் ஆயிரம் சிகரங்களையும் தன் ஆயிரம் படங்களால் மறைத்துப் பாதுகாத்தனாக வாயு, வேகத்தோடு தாக்கி அம் மலையின் மூன்று சிகரங்களைப் பறித்துக்கொண்டு போய்த் தென்கடலில் இட்டான் என்பது, அத் திரிகூடமலையே இலங்கைக்கு இடமாக இருப்பது என்பதும் இங்கு நினைவுகூர்தல் வேண்டும். வாயுதேவனும் வட மேருமலையிலிருந்து சிகரங்களைத் தாங்கிக்கொண்டு தென்திசை நோக்கியே வந்தான் ஆகலின், மருத்துமலையை ஏந்திக்கொண்டு தென்திசை நோக்கிவரும் அனுமனுக்குப் பொருந்திய உவமையாதல் காணலாம். "நாயகன் தூதன் நாகம், ஒடுக்குறு காலை வன்காற்று அடியொடும் ஒடித்த அந்நாள், முடுக்குற கடலிற் செல்லும் முத்தலைக் கிரியை யொத்தான்" (சுந்தர-கட-ருவு-24) என முன்னும் இந் நிகழ்ச்சி உவமையாக வந்திருத்தல் காணலாம். (98)

### அனுமன் தரையில் அடிவைத்தல்

**8934. தோன்றின னென்னுமச் சொல்லின் முன்னம்வந்<br>
தூன்றின னிலத்தடி கடவு ளோங்கலுன்<br>
வான்றனி நின்றது வஞ்ச ரூர்வர<br>
வொன்றில தாகலி னனும னெய்தினான்.**

'தோன்றினன்' என்னும் அச்சொல்லின் முன்னம்வந்து<br>
ஊன்றினான் நிலத்துஅடி ; கடவுள் ஓங்கல்தான்<br>
வான்தனி நின்றது, வஞ்சர் ஊர்வர<br>
ஏன்றிலது ஆதலின் ; அனுமன் எய்தினான்.

பொ :- அனுமனது ஆர்ப்பொலிகேட்டுச் சாம்பவன் 'அனுமன் வந்து தோன்றினன்' என்று சொல்லிய அச் சொல்லுக்கு முன்பே அவன் வந்து நிலத்தில் அடியை ஊன்றினான்; தெய்வத்தன்மை வாய்ந்த மருத்துமலை வஞ்சக அரக்கர்வாழ் ஊர்க்குவர அஞ்சியது ஆகலின், வானில் தனியே நின்றது. அனுமன் மட்டும் வந்து நிலத்தையடைந்தான்.

கு :- தோன்றினன் என்று சாம்பவன் சொல்லி முடித்தற்கு முன்னே அனுமன் தரையில் அடியூன்றினன் என்றவாறு. கடவுள் ஓங்கல் என்றது, தெய்வத்தன்மையுடைய மருந்துமலையை. ஓங்கல், என்பது எல்லாப் பொருளினும் உயர்ந்திருத்தல்பற்றி மலைக்குக் காரணப் பெயராயிற்று. கடவுள் ஓங்கல் ஆதலின், வஞ்சர் ஊர்வர அஞ்சுதலும் வானில் தனியே நிற்றலும் இயல்வதாயிற்று என்க.(99)

8934a வந்தனன் மருந்தினை மருத்து வானவன்
சிந்தையிற் பெருமகிழ் சிறப்புச் சேர்ந்துறீஇ
அந்தரத் தரக்கன்மா மகனோ டாயவர்
வந்திரைத் தார்த்தெழும் வகைசெய் தானரோ.

என்ற செய்யுள், சிறந்தனவாகக் கருதப்படும் பல ஏடுகளிலும் காணப்படாமையாலும் பின்வரும் பாடலோடு இயையாமையானும் இது இடைச் செருகலாகக் கருதப்படுகிறது.

## மருத்துமலையின் காற்றுப்பட்டவுடன் எல்லோரும் உயிர்பெற்றெழுதல்

8935. காற்றுவந் தசைத்தலுங் கடவு ணாட்டவர்
போற்றிட விருந்துவந் திருந்த புண்ணியர்
ஏற்றமும் பெருவலி யழகொ டெய்தினர்
கூற்றினை வென்றுதம் முருவங் கூடினர்.

காற்றுவந்து அசைதலும்,— கடவுள் நாட்டவர்
போற்றிட விருந்துஉவந்து இருந்த புண்ணியர்—
ஏற்றமும் பெருவலி அழகொடு எய்தினர்,
கூற்றினை வென்று,தம் உருவம் கூடினர்.

பொ :- (வானில் நின்ற மருத்துமலையின்) காற்றுவந்து வீசுதலும், அமரர் நாட்டவர்கள போற்றிடுமாறு அவர்க்கு விருந்தாக அங்கு மகிழ்ந்திருந்த புண்ணியவான்கள். (இங்கிருந்த தம்முடம்பு) அழகோடு மேன்மையும் பெரியவலிமையும் . எய்தப் பெற்றவராய் எமனை வென்று, தம் உருவ உடம்பைக் கூடினர்கள்.

பொ :- (வானில் நின்ற மருத்து மலையின்) காற்றுவந்து தம் உடம்பின்மேல்) வீசுதலும், அழகுடன் மேன்மையும் பெரியவலிமையும் எய்தப் பெற்றவராய், அமரர் நாட்டவர்கள் போற்றுமாறு

அவர்க்கு விருந்தாய் மகிழ்ந்து தங்கியிருந்த வானரவீரர்களாகிய புண்ணியவான்கள் எல்லாம் எமனைவென்று தம்முடைய உருவ உடம்பைக் கூடினார்கள்.

கு :- இராமனுடைய அறப்போருக்குத் துணையாய் நின்று போர்செய்து மாண்டு வீரசுவர்க்கம் புக்கவர்கள் ஆதலின் வானர வீரர் புண்ணியர் எனப்பட்டார். பிரமாத்திரத்தில் உடம்பு புண் பட்டு வீழ்ந்தவுடன் அருவ வுடம்பினராய் வீரசுவர்க்கும் புகுந்து அங்கு அமரர்க்கு விருந்தாய் மகிழ்ந்திருந்தவர்கள், மருத்துமலை யால் தம்முடம்பு அழகும் மேன்மையும் வலிமையும் பெற்றதை அறிந்தவுடன் அவ்வுடம்பில் வந்து கூடினார்கள் என்க. மரணப் படுக்கையிலிருந்து நீங்கினதையே கூற்றினை வென்றதாகக் கூறி னார். ஏற்றமும் பெருவலி அழகை யெய்தியது உடம்பேயாகவும் எய்தினர் என்றது பொருந்துமோ ? எனின், உயிர்நீத்து ஒருமகன் கிடந்தான் ; எனவும், அறஞ்செய்து துறக்கம் புக்கான், எனவும், உயிரும் உடம்பும் அவரின் வேறன்றி அவராக உணரப்படுதலின் பொருந்தும் என்க. பிரமாத்திரத்தால் இறந்தவர்களின் உயிர் மருத்துமலையால் மீள்வதற்குள் யாண்டுச் சென்றிருந்தது என்பார் வினாவிற்கு விடையாகவும் இச் செய்யுள் அமைதல் காணலாம். (100)

8936. அரக்கர்தம் யாக்கைக ளழிவி லாழியில்
கரக்கலுற் றொழிந்தன வொழியக் கண்டன
மரக்குல முதலவு முய்ந்து வாழ்ந்தன
குரக்கின முய்ந்தது கூறல் வேண்டுமோ.

அரக்கர்தம் யாக்கைகள் அகழிவுஇல் ஆழியில்
கரக்கலுற்று ஒழிந்தன ஒழிய, கண்டன
மரக்குலம் முதலவும் உய்ந்து வாழ்ந்தன ;
குரக்குஇனம் உய்ந்தது கூறல் வேண்டுமோ ?

பொ :- அரக்கர்தம் உடம்புகள் அழிவில்லாத ஆழ்கடலில் (மருத்தினால் எறியப்பட்டு) மறைந்து ஒழிந்தனபோக காணப் பட்டனவாகிய (பட்ட) மரக் குலம் முதலிய ஓருயிர்ப்பொருள்களும் உயிர்பெற்று வாழலாயின என்றால், ஐயறியுயிராகிய குரங்கினம் உயிர்பெற்றது பற்றிச் சொல்லவேண்டுமோ ?

கு :- அரக்கர் உடம்புகள் இராவணன் ஏவலின்படி மருத்தி னால் கடலில் எறியப்பட்டமை முன்னமே கூறப்பட்டுளது. கண்டன என்றது, கடலில் கரக்காமல் தரையில் காணப்படுவனவற்றை. மரக்குலம் என்றது வானரர்களால் பறிக்கப்பட்டுப் பட்டுப்போன

மரங்களை. ஓரறிவுயிராகிய மரமும் இழந்த உயிர் மீளப்பெற்றுத் தளிர்த்தன என்றால், ஐயறிவுடைய வானரர் உயிர்பெற்று எழுந்தமை வியப்பன்று என்பார், 'குரக்கின முயந்தது கூறவேண்டுமோ' என்றார். (101)

## இலக்குவன் உணர்வு பெறுதல்

8937. கழன்றன நெடுங்கணை கரந்த புண்கடுத்
தழன்றன குளிர்ந்தன வங்கஞ் செங்கண்கள்
சுழன்றன வுலகெலாந் தொழுத தோங்கலைக்
குழன்றபூங் குஞ்சியா னுணர்வுங் கூடினான்.

கழன்ற நெடுங்கணை, கரந்தபுண்; கடுத்து
அழன்றன குளிர்ந்தன, அங்கம்; செங்கண்கள்
சுழன்றன ; உலகுஎலாம் தொழுதது, ஓங்கலை ;
குழன்றபூங் குஞ்சியான் உணர்வும் கூடினான்.

பொ :- உடம்பில் தைத்திருந்த நீண்ட அம்புகள் தாமே சுழன்று விழ்ந்தன ; அந்த அம்பினாலான புண்கள் எல்லாம் தாமே மறைந்தன ; கடுப்புக்கொண்டு கொதித்துக்கொண்டிருந்த அங்கங்கள் இப்போது குளிர்ந்தன. சிவந்த கண்கள் சுழலத்தொடங்கின. (இம் மாறுதலுக்குக் காரணமாயிருந்த) மருந்துமலையை உலகு முழுவதும் தொழுதது. சுருண்ட அழகிய குடுமியையுடைய இலக்குவன் உணர்வும் வரப்பெற்றான்.

கு :- மருத்துமலையில் உள்ள நால்வகை மருந்துகளில் சல்லிய மகற்றும் மருந்தினால், நெடுங்கணை சுழன்றன. சந்துகள் புல்லுறப் பொருந்தும் மருந்தினால் புண் சுரந்தன ; நல்நிறம் தொல்லையதாக்கும் மருந்தினால் கடுத்து அழன்றனவாகிய அங்கம் குளிர்ந்தன. நல்லுயிர் ஈகுவதாகிய மருந்தினால் கண்கள் சுழன்றன எனக்கொள்க. இயக்கமற்று நிலைத்துவிட்ட கண்கள் சுழலுவதே உயிர்வந்ததற்கு அடையாளமாதலும் நினைக. உயிர்வரப் பெற்றதோடு உணர்வும் வரப்பெற்றான் என்க. உம்மை இருந்தது தழுவிய எச்சப்பொருளது. உயிர்வந்தவுடன் உயிரின் தனமையான உணர்வும் வந்தது என்றவாறு நால்வகையான மருந்துகளும் இலக்குவனிடத்தில் நன்கு செயற்பட்டமை கண்ட உலகம்மருத்து மலையைத் தொழுது வாழ்த்தலாயிற்று என்க. குழன்ற—சுருண்ட சுழலுதல்—சுருளுதல் ; கடைகுழன்ற கருங்குழல்கள்'' (சீவக-164) என்பது காண்க. (102)

## மற்றவர்களும் உயிர்பெற்றெழுதல்

8938. யாவரு மெழுந்தன ரார்த்த வேழ்கடற்
றுவரும் பேரொலி செவியிற் சார்தலும்
தேவர்தம் வாழ்த்தொலி கேட்ட செங்கணுன்
யோகநீங் கினனென விளவ லோங்கினுன்.

யாவரும் எழுந்தனர், ஆர்த்த, ஏழ்கடல்
தாவரும் பேர்ஒலி செவியில் சார்தலும்
தேவர்தம் வாழ்த்தொலி கேட்ட செங்கணுன்
யோகம் நீங்கினன் என—இளவல் ஓங்கினுன்.

பொ :- வானரர் யாவரும் உயிர்பெற்று எழுந்தனராய் ஆரவாரித்து, ஏழுகடலின் ஒலிபோன்ற கெடுதலில்லாத பெரிய ஆரவாரம் தன் செவியில் சேர்ந்தவுடன்—தேவர்களுடைய வாழ்த்தொலியைக்கேட்ட சிவந்த கண்களுடைய திருமால் யோகநித்திரையிலிருந்து எழுந்தான்போல், இலக்குவன் எழுந்து நின்றுன்.

கு :- எழுந்தனராய் ஆர்த்த பேரொலி செவியிற் சார்ந்ததும் இளவல் ஓங்கினுன் என இயையும். வானரரின் ஆர்ப்பொலிக்கு ஏழ்கடல் ஒலியும் நிகராகாது தாமும் என்பார் 'ஏழ்கடற் றுழ்வரும் பேரொலி' என்றுர். வானரரின் ஆர்ப்பொலிகேட்டுப் பெருந்துயிலிருந்து எழுந்த இலக்குவனுக்குத் தேவர்களின் வாழ்ந்தொலிகேட்டு அறிதுயில் நீங்கியெழுந்த திருமாலை உவமை கூறியவாறு. செங்கணுன் என்றது திருமாலை. யோகம் என்றது அறிதுயிலை. (103)

## இராமன் இலக்குவனைத் தழுவித் துயர்தீர்தல்

8939. ஓங்கிய தம்பியை யுயிர்வந் துள்ளுற
வீங்கிய தோள்களாற் றழுவி வெநதுயர்
நீங்கின னிராமனு முலகி னின்றில
தீங்குள தேவரு மறுக்கஞ் சிந்தினுர்.

ஓங்கிய தம்பியை; உயிர்வந்து உள்உற
வீங்கிய தோள்களால் தழுவி, வெந்துயர்
நீங்கினன் இராமனும்; உலகில் நின்றில,
தங்குஉள; தேவரும் மறுக்கம் தீர்ந்தனர்.

பொ :- உயிர்வந்து உடம்பினுள் பொருந்தியதினால் உணர்வு பெற்று எழுந்த தம்பி இலக்குவனை, இராமனும் தன் பூரித்த தோள்களால் தழுவிக்கொண்டு கொடிய துன்பம் நீங்கப்பெற்றான். உலகில் தீங்காக உள்ளன எல்லாம் நில்லாமல் சென்றன; தேவர்களும் கலக்கம் நீங்கினார்கள்.

கு :- உயிர்வந்து உள்உற ஓங்கிய தம்பியை இராமனுடைய வீங்கிய தோள்களால் தழுவி, வெந்துயர் நீங்கினன் என இயையும். மறுக்கம்-கலக்கம். இலக்குவன் இறந்ததாக எண்ணித் தேவர் கலங்கிய கலக்கம் அவன் உயிர்பெற்றெழுந்தவுடன் நீங்கப்பெற்றனர் என்றவாறு. (104)

## மகிழ்ச்சி ஆரவாரம்

8940. அரம்பையைய ராடின ரமிழ்த வேழிசை
நரம்பியல் கின்னர முதல நன்மையே
நிரம்பின வுலகெலா முவகை நெய்விழாப்
பரம்பின முனிவரும் வேதம் பாடினார்.

அரம்பையர் ஆடினர்; அமிழ்த ஏழ்இசை
நரம்புஇயல் கின்னரம் முதல நன்மையே
நிரம்பின; உலகுஎலாம் உவகை நெய்விழாப்
பரம்பின! முனிவரும் வேதம் பாடினர்.

பொ :- அரம்பையர்கள் ஆடினார்கள்; அமிழ்தம் போன்ற இனிய ஏழிசையையெழுப்புகின்ற நரம்பினாலியன்ற கின்னர முதலிய இசைக் கருவிகளின் ஒலி உலகெலாம் நன்றாக நிரம்பின; மகிழ்ச்சியால் செய்யும் நெய்யாடல் விழா (உலகெலாம்) பரவின; முனிவர்களும் வேதம் பாடினார்கள்.

கு :-கின்னரம் என்பது ஒருவகை யாழ். "கின்னர நல்லியா ழொலியோ" (கந்தப்-வள்ளி. 32) என்றது காண்க. உவகையால் மேற்கொள்ளும் விழாவாதலின் 'உவகை நெய்விழா' என்றார். பரம்புதல்-பரவுதல். (105)

8941. வேதநின் றார்த்தன வேத வேதியர்
போதிநின் றார்த்தன றகழு மார்த்தன
ஓதநின் றார்த்தன வோத வேலையிற்
சீதநின் றார்த்தன தேவர் சிந்தனை.

வேதம் நின்று ஆர்த்தன; வேத வேதியர்
போதம் நின்று ஆர்த்தன; புகழும் ஆர்த்தன;
ஓதம் நின்று ஆர்த்தன; ஓத வேலையின்
சீதம் நின்று ஆர்த்தன; தேவர் சிந்தனை.

பொ :- வேதங்கள் மகிழ்ச்சியோடு நின்று ஆரவாரித்தன; வேதம் பயின்ற அந்தணர்தம் அறிவு நிலைபெற்று ஆரவாரித்தன; புகழும் ஆரவாரித்தன; கடல்கள் நின்று ஒலி செய்தன; அலைக ளோடுகூடிய கடலைப்போல தேவர்களின் சிந்தனையும் குளிர்ச்சி யோடு நின்று ஆரவாரித்தன.

கு:- போதம்-அறிவு. ஓதம்-கடல், அலை. சீதம்-குளிர்ச்சி. ஓத வேலையைப் போலத் தேவர் சிந்தனைகள் சீதத்தோடு நின்று ஆரவா ரித்தன என்க. (106)

## பிரமாத்திரம் இராமனை வணங்கிச் செல்லுதல்

8942. உந்தின பின்கொலை யொழிவி லுண்மையும்
தந்தனை நீயது நினக்குச் சான்றெனுச்
சுந்தர வில்லியைத் தொழுது சூழவந்
தந்தணன் படையுநின் றகன்று போயதால்.

உந்தின பின்கொலை ஒழிவுஇல் உண்மையும்
தந்தனை நீ;அது நினக்குச் சான்றுஎனு,
சுந்தர வில்லியைத் தொழுது, சூழவந்து,
அந்தணன் படையும் நின்றுஅகன்று போயதால்.

பொ:- பிரமாத்திரமும் (இராமன்முன் வந்து) நின்று, ''என்னை வில்லில் நின்று செலுத்தின பின்பு யான் கொல்லுதல் தொழிலை ஒழி தல் இல்லை'' என்ற உண்மையையும் நீ எனக்குத் தந்தாய்; அது நின் தெய்வத்தன்மைக்குச் சான்றாகும்' என்று சொல்லிவிட்டு அழகிய வில்லையுடைய அவ் விராமனை வணங்கி வலம்வந்து நீங்கிச் சென்றது.

கு :-உந்துதல்-செலுத்துதல். பிரமாத்திரத்தை விட்டால் இலக் கானவரைக் கொன்றன்றி மீளாது என்ற பெருமையை இராமன் நினைத்திருந்தால் மாற்றியிருக்கக் கூடும். இலக்குவனைக் கொல்ல வந்த பிரம்மாத்திரத்தை நாராயணாத்திரத்தைக்கொண்டு அழிக்கா மல்விட்டுப் பிரம்மாத்திரத்தால் இலக்குவன் இறக்கவும், இராமன்

வாளா இருந்தது பிரமாத்திரத்தின் பெருமை விளக்கவே என்பது தெளிவுபடுத்தியவாறு. பிரம்மாத்திரத்தினையும் அழிக்கும் ஆற்றல் இராமனுக்கு இருந்தும் அது செய்யாது விடுத்தது, 'உந்தினபின் கொலை ஒழிவில் உண்மையைப் பிரம்மாத்திரத்திற்குத்தருதற்காகவே' என்றவாறு. இராமனது இச் செயலால் அவன் தெய்வத்தன்மை விளங்குதலின் 'அது நினக்குச் சான்று' என அயன்கணை கூறியது. நின் பெருமைக்கு அது சான்று என்றவாறு. சுந்தரவில்லி என்றது இராமனை. மருந்துமலை வந்தவுடன் பிரம்மாத்திரத்தால் இறந்தவர் அனைவரும் உயிர்பெற்று எழுந்தனராக அப் பிரம்மாத்திரம் என்ன செய்தது? என்பதை இதனால் விளக்கியவாறு. (107)

## மருந்து கொணர்ந்துதவிய மாருதியைத் தழுவுதல்

8943. ஆய காலையி னமர ரார்த்தெழத்
தாயி னன்பனைத் தழுவி னான்றனி
நாய கன்பெருந் துயர நாமறத்
தூய காதனீர் துளும்பு கண்ணினான்.

ஆய காலையின், அமரர் ஆர்த்துஎழ,
தாயின் அன்பனைத் தழுவினான்—தனி
நாயகன், பெருந்துயரம் நாம் அற
தூய காதல்நீர் துளும்பு கண்ணினான்.

பொ:- அது போழ்து ஒப்பற்ற தலைவனாகிய இராமன், (முன்பிருந்த) பெருந்துயரமும் அச்சமும் ஒழிதலால், தூய்மையான அன்புக் கண்ணீர் துளும்பும் கண்களையுடையவனாய்த் தாய் போன்ற அன்பனாகிய அனுமனைத் தேவர்கள் மகிழ்ச்சியினால் ஆரவாரித்து எழாநிற்கத் தழுவிக்கொண்டான்.

கு:- தனி நாயகன், துயரம் நாம் அறுதலால், நீர் துளும்பும் கண்ணினனாய், அன்பனைத் தழுவினான் என இயையும்; தாயின் என்புழி இன் ஒப்புப் பொருளது. இலக்குவன் முதலியோர் மீண்டும் உயிர்பெற்றெழக் காரணமாயிந்ததுகொண்டு அனுமனை இங்குத் "தாயின் அன்பனை" என்றார். நாம்—அச்சம். துயரமும் அச்சமும் அறுதலால் உவகைக் கண்ணீர் துளும்பும் கண்ணினனாய் அனுமனைத் தழுவிக்கொண்டான் என்க. பெருந்துயரமும் அச்சமும் அறுதற்குக் காரணமாயிருந்தவன் அனுமனே ஆதல் நினைக. (108)

### தன்னைத் தழுவிய இராமனை அனுமன் தொழுதல்

8944. எழுது குங்குமத் திருவி னேந்துகோ
டுழுத மார்பினு னுருகி யுள்ளுறத்
தழுவி நிற்றலுந் தாழ்ந்து தாளுறத்
தொழுத மாருதிக் கினைய சொல்லினுன்.

எழுது குங்குமத் திருவின் ஏந்து கோடு
உழுத மார்பினன், உருகி, உள்உறத்
தழுவி நிற்றலும் தாழ்ந்து, தாள்உறத்
தொழுத மாருதிக்கு, இனைய சொல்லினன்.

பொ:- தொய்யிற் கோலமாக எழுதிய குங்கமத்தினையுடைய திருமகளின் அமிசமான சிதையின் உயர்ந்த யானைக் கொம்புபோன்ற கொங்கைகளால் உழப்பட்ட மார்பினையுடைய இராமன் உருகி மனம்பொருந்தத் தழுவிநின்ற அளவில் அவன் பாதத்தில் பொருந்துமாறு தாழ்ந்து தொழுத அனுமனுக்கு இத் தன்மையான சொற்களைச் சொன்னன் (இராமன்).

கு:- மகளிர் கொங்கைகளில் குங்கமக் குழம்பால் தொய்யில் எழுதுதல் உண்டு; ''திருமுலைத் தடத்திடைத் தொய்யி லன்றியும்'' (சிலப்-2-69) என்பது காண்க. தொய்யில் என்பது பத்திக்கீற்று என்பர். ஏந்துகோடு என்றது, உவமையாகுபெயராய் யானைக் கொம்புபோன்ற கொங்கையினை உணர்த்தியது. திருமகளுக்கே யுரிமையுடைய மார்பில் அனுமனைத் தழுவித் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொண்டான் இராமன் என்றவாறு. உள்ளுருகி எனவும் தாளுறத் தாழ்ந்து எனவும் இயையும். இராமன் சொல்லியதை இனிவரும் நான்கு செய்யுட்களால் உணரலாம். (109)

### இராமன் அனுமனைப் புகழ்ந்து வாழ்த்துதல்

8945. முன்னிற் றோன்றினோர் முறையி னீங்கலா
தென்னிற் றோன்றிய துயரி னீறுசேர்
மன்னிற் றோனறினே முன்ன மாண்டுளேம்
நின்னுற் றோன்றினே நெறியிற் றோன்றினுய்.

முன்னின் தோன்றினோர் முறையின் நீங்கலாது,
என்னின் தோன்றிய துயரின், ஈறுசேர்
மன்னின் தோன்றினேம், முன்னம்; மாண்டுளோம்
நின்னின் தோன்றினேம், நெறியின் தோன்றினாய்.

பொ:- முன் எம்குலத்தில் தோன்றினோரது முறைமையின் நின்றும் நீங்காமலிருந்து, என்னால் தோன்றிய துயரத்தால் இறந்த தசரத மன்னனிடத்தில் தோன்றினோம் முன்னம்;(பிரமாத்திரத்தால்) மாண்டுவிட்டோம்; நல்ல நெறியில் விளங்குபவனே! (இப்போது) நின்னால் மீண்டும் பிறந்தவர்களானோம்.

கு:- சூரியகுலத்தில் முன்பு பிறந்தவரின் முறை என்றது, வாய்மை தவறாமையை. என்னில் தோன்றிய துயர் என்றது, இராமன் காடுநோக்கிப் பிரிந்ததனால் தோன்றிய துயரத்தை. ஈறு சேர் மன்னன் என்றது, மரணமடைந்த தயரதனை. தயரதனிடத்தில் பிறந்த நாங்கள் மாண்டுவிட்டோம்; இப்போது நின்னில் தோன்றினோம் என இராமன் அனுமனது மருந்துமலை கொணர்ந்த உதவியைப் பாராட்டியவாறு. அனுமன் மருந்து மலையைக் கொணராதிருந்தால் இலக்குவனோடு இராமனும் மாண்டிருத்தல் கூடுமாதலின் இங்ஙனம் கூறலானான். இராமனது இப் பாராட்டு "மும்மையா லுலகுக் கெல்லாம் முதல்வற்கு முதல்வன் தூதாய்ச் செம்மையா லுயிர் தந்ததாய்க்குச் செயலென்னா லெறிய துண்டே, அம்மையாய் அத்தனாய் அப்பனே அருளின் வாழ்வே, இம்மையே மறுமை தானும் நல்இனை இசையோடு" (உருக்காட்டுப்-72) என்ற சீதையின் பாராட்டோடு ஒத்து விளங்குதல் காணலாம். (110)

8946. அழியுங் காற்றரு முதவி யையனே
மொழியுங் காற்றுரு முயிரின் முற்றுமோ
பழியுங் கரத்தரும் பகையும் காத்தெமை
வழியுங் காத்துநன் மறையுங் காத்தனை.

'அழியுங்கால் தரும் உதவி, ஐயனே!
மொழியுங்கால், தரும் உயிரின் முற்றுமோ?
பழியும் கரத்துஅரும் பகையும் காத்துஎமை
வழியும் காத்து,நன் மறையும் காத்தனை.

பொ:- ஐயனே, எல்லோரும் அழியும் காலத்தில் நீ தந்த உதவியின் பெருமையைச் சொல்லுமிடத்து, இப்போது தரப்பட்ட உயிரோடு முற்றுப் பெற்றதாகுமோ? (ஆகாது; நீ தந்த உதவியால்) எமக்குவரும் பழியையும் வாராமல் காத்து, அரிய எம் பகையும் வலிமிக்கு உலகை அழிக்காமல் காத்து, எம்மரபையும் அழியாமல் காத்து அதனால் நல்ல வேதநெறியும் வழுவாமல் காப்பாற்றினாய்.

கு :- நீ தந்த உதவி, எம்பழியையும் காத்தது, எம்மரபையும் காத்தது, வேத நெறியையும் காத்தது, ஆதலின், எம் உயிர்தந்த தோடு நின்றுவிடவில்லை என்பான். 'தரும் உயிரின் முற்றுமோ?' என்றான். மருந்து மலையை அனுமன் கொணராதிருந்தால் இராம னும் இறக்க நேர்ந்திருக்கும்; அப்போது பகைவர் கையில் அகப்பட்ட சீதையை மீட்காத பழியும், தண்டக வனத்து முனிவர்க்கு அளித்த அபயத்தை நிறைவேற்றாத பழியும் வந்து சேர்ந்திருக்கும் ஆதலின், 'பழியும் காத்து' என்றும், மருந்து மலையைக் கொணராதிருந்தால் அரக்கர் வலிமைக்கு உலகையும் அழிக்க முற்படுவர் ஆதலின் அப் பகைவர் வலிமை மிகாமல் தடுத்து என்பார்; 'அரும்பகையும் காத்து, என்றும், நாங்கள் இறந்திருந்தால் பரதன் முதலியோரும் இறப்பர் ஆதலின், அது நிகழாமல் எம் குலத்தைக் காப்பாற்றினாய் என்பார், 'வழியும் காத்து' என்னும். எம் குடி முழுதும் அழிந்திருக் கும் ஆதலின், அது நிகழாது காத்தாய் என்பபார், 'நன் மறையுங் காத்தனை என்றும்' கூறினர். எமைப் பழியுங்காத்து, பகையும் காத்து, என முன்னும் இயையும்; இடைநிலை விளக்கணி. (111)

8947\. தாழ்வு மங்கிறைப் பொழுது தாழ்ந்ததேல்
வாழி யெம்பிமே லன்பு மாட்டவான்
ஏழும் வீழுமென் பகர்வ தெல்லைநாள்
ஊழி காணநீ யுதவி னாயரோ.

'தாழ்வும் இங்குஇறைப் பொழுது தாழ்ந்ததேல்,
வாழி எம்பிமேல் அன்பு மாட்ட, வான்
ஏழும் வீயும்;என் பகர்வது?—எல்லைநாள்
ஊழி காணநீ, உதவினாய் அரோ!

பொ :- எனக்கு நேர்ந்த இத் தாழ்வும் இவ்விடத்தில் இன்னும் சிறிதுபோழ்து (நின்றால் நீக்கப்படாமல்) தாழ்த்திருக்குமாயின் நெடிது வாழ்வதற்குரிய என் தம்பிமேல் எனக்கிருக்கும் அன்பானது அழிக்க மேலேழுலகங்களும் அழிந்திருக்கும்; என்ன சொல்வது? அத்தகைய நிலைமை உண்டாகும் எல்லை நாளில் அவ்வுலகங்கள் அழி வின்றிப் பல ஊழிகள் காணுமாறு நீ மருத்துமலை கொணர்ந்து உதவி செய்தாய்.

கு :- தாழ்வு என்றது, இலக்குவன் முதலியோரை இழந்த நிலையை. இறைப் பொழுது என்றது, சிறிது போழ்தினை. மாட்டு தல்—மாள்வித்தல்; அளித்தல். இலக்குவன்மேல் தனக்குள்ள அன்பு காரணமாகச் சீற்றமிக்கு இவ்விழிதகவைக் கண்டுகொண்டிருக்கும்

விண்ணுலகங்களை அழித்திருப்பேன் என்பான். 'எம்பிமேல் அன்பு மாட்ட வான்·ஏழும் வியும்' என்றான், அத்தகைய சீற்றம் தோன்றும் எல்லையில் அது தோன்றாதபடி அனுமன் மருந்து மலையோடு வந்து உதவினான் என்றவாறு. ஊழி காண என்றது, அவ்வுலகங்கள் என்றவாறு அனுமன் மருந்துமலையோடு வந்தமையால் அவ்வுலகங் கள் ஊழி காணும்படி நிலைத்தன என்றவாறு. இதனால், அனுமன் மருந்து மலையோடு வந்தமையால் இவ்வுலகங்கள் ஊழிகாணும்படி நிலைத்தன என்றவாறு. இதனால், அனுமன் விண்ணுலகங்களையும் காப்பாற்றினான் என இராமன் புகழ்ந்தவாறு. (112)

8948. இன்று வீகிலா தெவரு மெம்மொடு
நின்று வாழுமா நெடிது நல்கினாய்
ஒன்று மின்னலேநா யுறுகி லாதுநீ
என்றும் வாழ்தியா லினிதெ னேவலால்.

'இன்று வீகிலாது, எவரும் எம்மொடு
நின்று வாழுமா நெடிது நல்கினாய்;
ஒன்றும் இன்னல்நோய் உறுகி லாது,நீ
என்றும் வாழ்தியால் இனிது,என் ஏவலால்!'

பொ :- (இந்திரசித்து பிரமாத்திரம் விட்ட) இன்று எவரும் இறவாது எம்மோடு நெடிதுகாலம் நின்று வாழுமாறு மருந்து மலை யைக் கொணர்ந்து நல்கினாய்; எனவே, என் கட்டளையினால் நீ, சிறிதும் துன்பநோய் அடையாது என்றும் இனிது வாழ்வாயாக.

கு :- எம்மோடு நெடிது நின்று வாழுமா என இயையும். என் றும் வாழ்தல் இன்னல் நோயில்வழியே இனிதாகுமாதலின், ஒன்றும் இன்னல் நோய் உறுகிலாது நீ என்றும் இனிது வாழ்தி என்றான். இராமன் கூறிய இவ்வாழ்த்தோடு, ''பாழிய பணைத்தோள் வீர! துணையிலேன் பரிவு தீர்த்த, வாழிய வள்ளலே யான் மலுவிலா மனத் தேன் என்னின், ஊழியோர் பகலாயோதும் யாண்டெலாம் உலகம் ஏழும், ஏழும் வீவுற்ற ஞான்றும் இன்றென இருத்தி'' என்ற சீதை யின் வாழ்த்து ஒருபுடையொற்றுமையும் உயர்வும் உடையதாதல் கண்டு மகிழலாம். (113)

## மற்றையோரும் அனுமனை வாழ்த்துதல்

8949. மற்றை யோர்களு மனுமன் வண்மையால்
பெற்ற வாயுளார் பிறந்த காதலார்
சுற்று மேயினார் தொழுது வாழ்த்தினார்
உற்ற வாறெலா முணரக் கூறினான்.

மற்றை யோர்களும், அனுமன் வண்மையால்,
பெற்ற ஆயுளார், பிறந்த காதலார்,
சுற்றும் மேவினர்; தொழுது வாழ்த்தினர்;
உற்றவாறு எலாம் உணரக் கூறினன்.

பொ :- அனுமனுடைய வள்ளல் தன்மையால் ஆயுளைப் பெற்றவர்களாகிய மற்றையோர்களும், அன்புமிக்கவர்களாய் அவ் வனுமனைச் சுற்றிக்கொண்டு நின்றவர்களாய்த் தொழுது அவனை வாழ்த்தினர்கள்; அனுமனும் மருத்துமலையைக் கொண்டுவந்த நிகழ்சியெல்லாவற்றையும் அவர்கள் உணருமாறு சொன்னன்.

கு :- அனுமன் உதவியால் இலக்குவன் முதலிய யாவரும் உயிர் பெற்றமை நினைந்துஇராமன் வாழ்த்தியதை மேலே கூறியவர், இங்கு அவன் உதவியால் உயிர்பெற்றமுந்த மற்றையோர் வணங்கி வாழ்த்தியதைக் கூறினர். மருத்துமலை கொணர்ந்துதவியதையே இங்கு 'அனுமன் வண்மை' என்று கூறியவாறு; ஆயுள் பெற்றார், காதல் பிறந்தார் என்பனவே 'பெற்றவாயுளார்' எனவும் 'பிறந்த காதலார்' எனவும் பழைய நடையில் கூறப்பட்டன. "அருங்கேடன் என்ப, தறிக" (குறள்—210) எனவும் "சென்று சேர்கல்லாப் புள்ள உள்ளில் என்றூழ் வியன் குளம்" (அகநா—42) எனவும் வருதல் காணலாம். பெற்ற வாயுளாராகிய மற்றையோர்களும் பிறந்த காதலராய்ச் சுற்றும் மேவினராய்த் தொழுது வாழ்த்தினர் என இயையும். *(114)*

**மருத்துமலையை உரிய இடத்தில் கொண்டுபோய் வைக்குமாறு சாம்பன் கூறுதல்**

8950. **உய்த்த மாமருந் துதவ வொன்னலார்**
**பொய்த்த சிந்தையா ரிறுதல் பொய்க்குமால்**
**மொய்த்த குன்றையம் மூல வூழிவாய்**
**உய்த்து மீடியால் வரம்பி லாற்றலாய்.**

உய்த்த மாமருந்து உதவ, ஒன்னலார்
பொய்த்த சிந்தையார் இறுதல் பொய்க்குமால்
மொய்த்த குன்றை அம்மூல வூழிவாய்
வைத்து மீடியால்—வரம்புஇல் ஆற்றலாய்.

பொ:- அளவிலாத ஆற்றலையுடைய அனுமனே! நீ கொண்டு வந்த சிறந்த மருந்து உதவுவதால், பொய் மனத்தவராகிய பகைவர் இறத்தல் பொய்த்துவிடும்; (இறக்கும் அரக்கர் எல்லாம் மீண்டும் உயிர்பெறுவர் என்றபடி) ஆதலால், மருந்துகள் நெருங்கியுள்ள இக் குன்றை அந்தப் பழமையான இடத்தில் வைத்துவிட்டுத் திரும்புவாயாக.

கு:- என்று சாம்பன் ஆண்டியம்ப என வருஞ் செய்யுளில் முடியும்; குளகம். மெய்ந்நெறி பிழையாத நம் சேனை இறக்கும் போது மீண்டும் உயிர்பெற்றெழுதற்கு உதவியாக அம் மலை இங்கு இருக்கலாம் எனப் பிறர் எண்ணக் கூடுமாகலின் சாம்பவன், 'ஒன்னலார் பொய்த்த சிந்தையார் இறுதல் பொய்க்கும்' என்பதை எடுத்துக் காட்டினன். பொய்த்த சிந்தையுடைய அரக்கரை நாம் அழிக்க அழிக்க அவர்கள் உயிர்பெற்றெழுந்து கொண்டேயிருந்தால் நம் முயற்சி பயனிலதாய்விடும் என்றவாறு. ஊழி, என்பது இங்கு இடத்தை உணர் யது; 'ஊழி ஏழான ஒருவா போற்றி' (தேவாரம்-1160-8) என்புழி இச் சொல் இடமான உலகத்தை உணர்த்துதல் காணலாம். மூலஊழி என்றது, பழைய இடத்தை. மருத்து மலையைக் கொடுவந்து அன்றே மீண்டும் அங்கு வைப்பதற்குரிய ஆற்றலு டையாய் என அனுமனைப் புகழ்ந்து ஊக்கியவாறு. இது கருத்துடையடை கொளியணி. மீள்தி என்பது மீடி எனத் (ளகரத்தோடு தகரத்திற்கு மயக்கவிதி இன்மையால்) திரித்து நின்றது.

(115)

**8951. என்று சாம்பவ னியம்ப வீதரோ**
**நன்று சாலவென் றுவந்தோர் நாழிகைச்**
**சென்று மீள்வெனென் றெழுந்து தெய்வமாக்**
**குன்று தாங்கியக் குரிசில் போயினன்.**

என்று சாம்பவன் இயம்ப ஈதுஅரோ
நன்று சால!என்று உவந்து ஓர்நாழிகை
சென்று மீள்வென்என்று எழுந்து தெய்வமாக்
குன்று தாங்கி,அக் குரிசில் போயினன்.

பொ:- என்று சாம்பவன் சொல்ல, 'இது மிகவும் நல்லது' என்று மகிழ்ந்து, 'ஒரு நாழிகையில் சென்று திரும்புவேன்' என்று எழுந்து தெய்வத்தன்மையுடைய பெரிய மருத்துமலையைத் தாங்கிக் கொண்டு அந்த அனுமன் போனன்.

கு :- அரோ, அசை. ஈது சால நன்று என இயையும். இறந்தவரை எழுப்புகின்ற மருந்தினையுடைய குன்றமாதலின் தெய்வ மாக் குன்று எனச் சிறப்பிக்கப்பட்டது. குரிசில் என்றது ஆண்மகன், உபகாரி என்னும் பொருள்களையுடையது. இவ்விரு பொருளும் அனுமனுக்குப் பொருந்துமாதலின் அச் சொல்லால் அவனைக் குறிப்பிட்டவாறு. (116)

# 24. களியாட்டுப் படலம்

## முன்னுரை

பிரமன் கணையால் பகைவர் யாவரும் பட்டனர் என்பது கேள்வி யுற்ற இராவணனது கட்டளைப்படி மகளிர் கள்ளை உண்டு ஆடிய ஆடலைப்பற்றிக் கூறும் பகுதியாகலின், இது களியாட்டுப் படலம் எனப் பெயர் பெறுகின்றது. இப் படலப் பெயர் களியாட்டப் படலம் எனவும் சில சுவடிகளில் காணப்படுகின்றது. களியாட்டுப் படலம் என வை. மு. கோ. உரைப் பதிப்பில் காணப்படுகின்றது.

இந்திரசித்து விடுத்த அயன்கணையால் இராம இலக்கு வர் தம் சேனையோடு மாண்டனர் என்ற மகிழ்ச்சியான செய்தியைக் கேள்விப்பட்டதால், இராவணன் அளவுகடந்தமகிழ்ச்சியுடையவனாய்த் தன் வெற்றி விழாவாக மகளிரைக் கள்ளுண்டு ஆடச்செய்து அவ் வாடலைக் கண்டு மகிழ நினைக்கின்றான். அரம்பையர், வித்தியாதரப் பெண்டிர், அரக்கியர், அவுண மாதர், நாக கன்னியர், இயக்க மாதர், சித்தர் கன்னியர் எனப் பல்வகைப் பெண்டிரெல்லாம் வந்து குழுமுகின்றார்கள். மேனகை, திலோத்தமை, அரம்பை, ஊர்வசி என்ற தேவ நடிகையர் பாடி ஆடி மகிழ்ந்து சேர்கின்றனர். எல்லா மகளிரும் கள்ளையுண்கின்றனர். கள்ளின் வேகை விரைந்து முதிர் கின்றது. கள்ளுண்டதால் அப் பெண்டிர் வாய் வெளுக்கின்றது. கண்கள் சிவக்கின்றன. அவர்கள் கூந்தல் கற்றை அவிழ்ந்து சரி கின்றது. இடையிலணிந்த துகிலும் மணிமேகலையும் நெகிழ்ந்து பாதங்களில் விழ்கின்றன. கண்கள் செருகுகின்றன. கள்ளுண்ட களிப்பு மேலிட மகளிர் தம்மை மறந்து பாடுகின்றனர். தாளத்திற் கும் சுருதிக்கும், காலந்திற்கும், பண்ணிற்கும் பொருந்தாமல் அப் பாடல்கள் அமைகின்றன. இனிமையான குரலில் பண்முறை கடந்து உரத்துப் பாடிய அவர் பாடல்கள், அமிழ்தோடு புளிச்சுவை கலந்ததுபோல வெறுக்கத்தக்கதாக இருக்கின்றன.

கண்டோர் இந்திரசாலம் என்று வியக்குமாறு, உலகத்துப் பிறவுயிர்களைப் போல அபிநயித்து-நடித்துப் புகழ்பெற்ற நாடக மகளிர், இப்போது, கள்ளுண்ட மயக்கத்தால் ஆடவர்க்கு ஆணையை அவிநயித்துக் காட்டப்போவதாக வாயினாற் சொல்லிவிட்டுச் செயலால் தேரை அவிநயித்துக் காட்டுகின்றார்கள். கள் உண்ட பெண்டிர் சிலர் காரணமின்றி அழுகின்றார்கள்; உடனே சிரிக்கின்றார்கள். பாடிக்கொண்டே ஆடுகின்றார்கள். அங்கு அருகில் நின்றாரைக் காரணம் ஏதுமின்றித் தொழுகின்றார்கள். அப்படியே தரையில் சாய்ந்து உறங்குகின்றார்கள். உடனே துள்ளி எழுந்து சோர்கின்றார்கள். சிவந்த வாயிலிருந்து உமிழ்நீர் ஒழுக நிற்கின்றார்கள். தளர்ந்து தளர்ந்து ஒருவர்மேல் ஒருவர் விழுந்து அழுந்தத் தழுவிக் கொள்கின்றார்கள், சிவந்தகண்களை மூடிக்கொண்டு நெட்டை முரிக்கின்றார்கள். சிலர், தம்முள்ளத்து உள்ள கருத்தைச் செய்கையால் ஐயமற உணர்த்திக்கொண்டு ஆடுகின்றார்கள். அவர்கள் செய்கையைக் காணும் காமத்தைக் கடிந்த முனிவர்க்கும் காமவுணர்ச்சி மிக்கு மயிர்க்கால் தோறும் வழியத்தக்கதாக உள்ளது. கயல் மீனையும் காலன் வேலையும் காமன் அம்பையும் வெல்லவல்ல நெடிய கண்களையுடைய சில பெண்டிர் களிமயக்கத்தால், தம் மார்பிலணிந்த பொன் சரட்டையும், இடையில் உடுத்த புடவையையும் மேகலையையும் கையில் வாங்கித் தம் மேகம்போன்ற கூந்தலில் புனைகின்றார்கள். இவ்வாறு நிகழும் களியாட்டத்தைக் கண்டு களித்திருந்த இராவணன் செவிகளில், மாருதி கொணர்ந்த மருத்துமலையால் உயிர்பெற்றெழுந்த வானர சேனையின் ஆரவாரம் வந்து விழ்கின்றது. இராவணன் மெய் மயங்கிச் சோர்கின்றான். முன்பு தனக்கு இனிதாக இருந்த பெண்டிரின் ஆடலும் பாடலும் ஊடலும் கடைக்கண் நோக்கும் மழலை மொழியும், இப்போது வாடிய மலர் போலப் பொலிவிழந்து இன்னாதன ஆயின. வானரரின் ஆரவாரத்தோடு இராம இலக்குவரின் வில்நாண் ஒலியும் எழுந்தது. அது, திருப்பாற்கடல்கடைந்தபோது உண்டான பேரொலிபோல இருந்தது. அவ் வொலிகேட்டு இராவணனுடைய யானைகளும் குதிரைகளும் காலாட் படையும் நடுங்கின. முத்தினை வென்ற முறுவலோடு கண்களாகிய வேலால் குத்திக் கொண்டிருந்த அழகிய மகளிர் கூட்டம் எல்லாம் இப்போது இராவணனுக்கு வானரக் கூட்டம்போலத் தோன்றுகிறது. அவன் உள்ளம் மந்தரமலையாகிய மத்தினால் கலக்குண்ட பாற்கடல்போலக் கலங்குகின்றது. அவனுடைய முகங்கள் பத்தும் பகல் மதிபோல ஒளி மழுங்கின. அப்போது ஒற்றர்கள் வந்து பகைவர் உயிர் பெற்றெழுந்த செய்தியை அறிவிக்கின்றார்கள். அதைக் கேட்டு இராவணன் கொதிக்கின்ற மனத்தினனாய் ஆலோசனை மண்டபத்தை அடைகின்றான் என்பது இப் படலத்துக் கூறப்படுகின்றது.

## வான்மீகத்தோடு கம்பர் வேறுபடும் இடம்

இந்தக் களியாட்டுப் படல நிகழ்ச்சி பெருங்காப்பியத்திற்கு உறுப்பாக நின்று அழகு செய்யுமாறு கம்பரே படைத்து மொழிந்த தாகும். வான்மீகத்தில் இந் நிகழ்ச்சி கூறப்படவில்லை.

## படலப் பொருட் சிறப்பு

கம்பர், இப்படலத்தில் கள்ளுண்டார்க்குத் தோன்றும் மாறு பட்ட மெய்பாடுகள் பலவற்றையும் இயல்பு வழாமல் எடுத்துரைக் கின்றார். அவர்கள் பாடலிலும் ஆடலிலும் அணியிலும் உடையிலும் சொல்லிலும் செயலிலும் நிகழ்கின்ற வேறுபாடுகளையெல்லாம் நன் கெடுத்து உணர்த்துவதோடு கள் மானத்தையும் மதியையும் இழக்கச் செய்யும் என்பதையும் புலப்படுத்துகின்றார். கற்பினுக்கு அணியான சீதையைக் கவர்ந்த கள்வனாகிய இராவணன் தன் தகாத காம வேட் கையால் மற்றப் பெண்டிரையெல்லாம் கள்ளுண்டு ஆடச்செய்து கள்ளின் மயக்கத்தால் அவர் உடை நெகிழும் நிலையைக்கண்டு மகிழும் இழி குணத்தனாக உள்ளான் என்பதையும் இங்கு நன்கு புலப்படுத்துகின்றார்.

நாற்றமிக்க அங்கணத்து நீரையும் அழகிய மணமிக்க பனி நீராக மாற்றிக் காட்டுவதுபோலக் கம்பர், அற்றம் மறைக்கும் பெருங்குணமுடையோர் காணக் கூசும் இழிந்த காட்சியையும் அரிய நீதியைக் காட்டுவதாக நமக்குக் காட்டும்திறம் வியப்பு மிக்கதாக உள்ளது. கள் உண்டு மயங்கி ஒருத்தியின் இடையிலிருந்த ஆடையும்மேகலையும் நெகிழ்ந்து கீழ்வீழ்கின்றது. அவை விழுமுன் அவள் கூந்தல் அவிழ்ந்து வீழ்ந்து அவள் அற்றத்தை மறைக் கின்றது. அந்தக் களியாட்டத்தைக் காணும் வேத்தவையினர் இக் காட்சியைக் கண்டு ஒரு சிறந்த கருத்தைச் சொல்கின்றார்கள்.

தலைமேல் உள்ள கூந்தலை 'மேலோர்' என்றும், கீழே இடையில் அணிந்த ஆடையையும் மேகலையையும் 'கீழோர்' என்றும் காரணத் தோடு புனைபெயர் கொடுக்கின்றார்கள், கீழோரும் மேலோரும் ஆகிய இவ் விருதிறத்தாரும் தத்தம் தகுதிக்கேற்ற செயலையே செய்ததாகக் கூறுகின்றார்கள்.

அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும். (திருக்குறள்-980)

என்ற வள்ளுவர் வாய்மொழியை, ஆடையாகிய கீழோரும், கூந்தலாகிய மேலோரும் நன்கு நிறைவேற்றியிருப்பதாக விளக்கு கின்றார்கள். இவ் விழிவான காட்சியிலும் சிறந்த உண்மையைக்

கண்டு நமக்குப் புலப்படுத்தியுள்ளார்கள். சிறுமையுடைய கீழோர் ஆகிய ஆடை, தன்னை அணிந்துகொண்டிருந்த பெண்டிரின் அவமானத்தை—அற்றத்தை—மறைக்காமல் பிறர்க்குப் புலப்படுத்தி அவிழ்ந்து கீழ் விழ்கின்றது; மேலோராகிய கூந்தல் உடனே அவிழ்ந்து விழ்ந்து அவள் அற்றத்தை மறைத்துத் தன் பெருமையைப் புலப்படுத்துகின்றது. தன்னைச் சார்ந்தோரது அற்றம் மறைப்பது மேலோர்--செயலாதலும், அதை மறைக்காமல் பிறர்க்குப் புலப்படுத்துவது கீழோர் செயலாதலும் இவ் விழிவான செயலிலும் காணப்பட்டதாகக் கூறும் வேத்தவையின் சொல் எவ்வளவு பொருள் பொதிந்த சொல்லாக உள்ளது காண்மின்! கம்பர் தம் புலமைத் திறத்தால் இவ்வளவு இழிந்த காட்சியையும் உயர்ந்த காட்சியாகக் காட்டி அதன்கண் ஒரு சிறந்த திருக்குறள் கருத்தை அமைத்து விளக்கியுள்ள அருமை நினைத்தொறும் இனிக்கும் பெருமையுடையதாக விளங்குதல் காணலாம்.

# 24. களியாட்டுப் படலம்

**அயன் கணையால் பகையழிந்ததாகக் கருதி இராவணன் களியாட்டம் காணுதல்**

8952. இன்னதித் தலையய தாக
விராவண னெழுந்து பொங்கித்
தன்னையுங் கட ந்து நீண்ட
வுவகையன் சமைந்த கீதம்
கின்னரர் முதலோ ார் பாட
முகத்திடைக் கிடந்த கெண்டைக்
கன்னிநன் மயில ஞரை
நெடுங்களி யாட்டங் கண்டான்.

இன்னது இத்தலையது ஆக,
இராவணன் எழுந்து பொங்கி,
தன்னையுங் கடந்து நீண்ட
உவகையன், சமைந்த கீதம்
கின்னரர் முதலோர் பாட,
முகத்திடைக் கிடந்த கெண்டைக்
கன்னி நன் மயில் அன்னாரை
நெடுங்களி ஆட்டம் கண்டான்.

பொ :- இவ் விடத்து இராமன் சேனையில் இவ்வாறு நிகழா நிற்க,—இராவணன், (பகையை அழித்தோம் என்ற எண்ணத்தால்) எழுச்சிகொண்டு கிளர்ச்சிமிக்குத் தன்னையும்கடந்து பெருகிய மகிழ்ச்சியையுடையவனாய் இலக்கணப்படி அமைந்த சங்கீதத்தைக் கின்னரர் முதலியோர் பாடா நிற்க, முகத்தில் கிடந்த (கண்ணாகிய) கெண்டை மீன்களையுடைய இளமையான நல்ல மயில்போன்ற சாயலையுடைய பெண்டிரை நெடிதாய களியாட்டம் ஆடுமாறு செய்தான்.

கு :- இராவணன் இது காறும் கொள்ளாத பெருமகிழ்ச்சி கொண்டான் என்பார், 'தன்னையுங் கடந்து நீண்ட உவகையன்' என்றார். முகத்திடைக் கிடந்த கெண்டை என்றது கண்களை; கண்களாகிய கெண்டை மீன்களைக் கொண்ட முகத்தினர் என்றவாறு. கெண்டை மீன் போன்ற கண்ணினர் என்பதே கருத்து. நடிப்புக் கேற்ற கண்ணழகுடையவர்களையே களியாட்டம் ஆடுமாறு செய்தான் என்றவாறு. கன்னி-இளமை. களியாட்டம் என்றது. கள் குடித்து ஆடும் ஆட்டத்தை. நெடுமை, காலத்தின்மேலது. கண்டான்-செய்தான். மயிலனாரைக் களியாட்டம் ஆடச் செய்தான் என்றவாறு. (1)

### அரம்பையர் முதலியோர் வருதல்

853. அரம்பையர் விஞ்சை மாத
ரரக்கிய ரவுணர் மாதர்
குரும்பையங் கொங்கை நாகர்
கோதைய ரியக்கர் கோதில்
கரும்பினு மினிய சொல்லார்
சித்தர்தங் கன்னி மார்கள்
வரம்பறு சும்மை யோர்கண்
மயிற்குல மருள வந்தார்.

அரம்பையர், விஞ்சை மாதர்,
அரக்கியர், அவுணர் மாதர்
குரும்பைஅம் கொங்கை நாகர்
கோதையர், இயக்கர் கோதுஇல்
கரும்பினும் இனிய சொல்லார்,
சித்தர்தம் கன்னி மார்கள்,
வரம்புஅறு சும்மை யோர்கள்,
மயில்-குலம் மருள வந்தார்.

பொ :- தேவமாதரும், வித்தியாதரப் பெண்டிரும், அரக்கியரும் அசுரப் பெண்டிரும், தெங்கின் குரும்பை போன்ற அழகிய கொங்கைகளையுடைய நாகர் உலகத்துப் பெண்டிரும், கோது நீக்கிய கரும்பினும் இனிய சொல்லையுடையவர்களாகிய சித்தர் பெண்டிரும் ஆகிய எல்லையற்ற கூட்டத்தினர் மயிலின் கூட்டம் போல (இராவணனிருக்கும் பந்தர்க்கு) வந்தார்கள்.

கு :- சும்மை-திரள் ; கூட்டம். மயிலின் கூட்டம் போல வந்தார் என்பார், 'மயிற்குலம் மருள வந்தார்' என்றார். மருள என்பது உவம உருபு. ''மானினம் வருவ போன்றும் மயிலினம் திரிவ போன்றும்........பூநனை கூந்தல் மாதர் பொம்மெனப் புகுந்து மொய்த்தார்'' (உலாவியற் படலம்—1) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். இனி, மயிற்குலம் தம் இனமோ என மருளுமாறு வந்தார் எனவும், கண்டோர் மயிற்குலமோ என மருள வந்தார் எனவும் பொருள் கொள்ளலாம். (2)

## மேனகை முதலியோர் வருதல்

8954. மேனகை விசய வரட்கட்
டிலோத்தமை யாம்பை மெல்லென்
தேனகு மழலை யின்சொ
லுருப்பசி முதலாந் தெய்வ
வானக மகளிர் வாழ்ந்தார்
சில்லரிச் சதங்கை பம்ப
ஆனக முரசஞ் சங்க
முருட்டொடு மிரட்ட வாடி.

மேனகை, விசய வாள்—கண்
திலோத்தமை, அரம்பை, மெல்லென்
தேன்நகு மழலை இன்சொல்
உருப்பசி, முதலாம் தெய்வ
வானக மகளிர் வந்தார்—
சில்அரிச் சதங்கை பம்ப,
ஆனகம், முரசம், சங்கம்,
முருட்டொடும் இரட்ட, ஆடி.

பொ :- மேனகை, வெற்றிபெற்ற வாளைப்போன்ற கண்ணை யுடைய திலோத்தமை, அரம்பை, மெல்லென்று ஒலிக்கின்ற, தேனை யும் பழித்துச் சிரிப்பதற்குரிய, மழலையாகிய இனிய சொல்லினை யுடைய ஊர்வசி முதலிய வானுலகத்துத் தெய்வ மகளிர்,—படகமும் முரசமும் சங்கும் முருடு என்னும் வாத்தியத்தோடு முழங்கத் தம் காலில் அணிந்த சிலவாகிய பரலையுடைய சதங்கைகள் ஒலிக்க ஆடிக் கொண்டே வந்தார்கள்.

கு :- அடைமொழியில்லாத மேனகைக்கும் அரம்பைக்கும் பின் வந்த திலோத்தமையின் அடையையும் உருப்பசியின் அடையையும் சேர்த்துக் கூறலும் ஆம். மெல்லென் மழலை தேனடு மழலை எனத் தனித்தனிக் கூட்டுக. தேனை மழலைச்சொல் நகுதலாவது, இனிமை மையால் எனக்கு ஈடாகாய் என எள்ளி நகையாடுதல். வானகத் தெய்வ மகளிர் என்க. மகளிர், ஆனகம், முரசம், சங்கம், முரட் டொடும் இரட்டி, சதங்கை பம்ப ஆடி வந்தார் என இயையும். அரி-பரல்; இது சதங்கைக்குள் ஒலிசெய்யுமாறு இடுதற்குரியது. ஆன கம்-படகம்; ஒருவகை வாத்தியம். முருடு-மத்தளம். 'முரசியம்பின முருடதிர்ந்தன' (சிலப்—1—46) என்புழி. முருடு-மத்தளம் எனக் குறிப்புரையாசிரியர் குறித்திருப்பது நினைக. இந் நால்வரும் ஆடல் மகளிர் ஆதலின் வேறு பிரித்துக் கூறப்பட்டனர். (3)

8955. தோடுண்ட சுருளுந் தூங்குங்
குழைகளுஞ் சுருளிற் றேன்றும்
ஏடுண்ட பசும்பொற் பூவுந்
திலகமு மிலவச் செவ்வாய்
மூடுண்ட முறுவன் முத்து
முள்ளுண்ட முளரிச் செங்கட்
காடுண்டு புகுந்த தென்னக்
கலந்தது கறைவெண் டிங்கள்.

தோடுஉண்ட சுருளும், தூங்கும்,
குழைகளும், சுருளில் தோன்றும்
ஏடுஉண்ட பசும்பொன் பூவும்,
திலகமும், இலவச் செவ்வாய்
மூடுண்ட முறுவல் முத்தும்,
முள்ளுண்ட முளரிச் செங்கண்,
காடுஉண்டு புகுந்தது என்னக்
கலந்தது கறைவெண் திங்கள்.

பொ :- பனந் தோட்டின் தன்மை பொருந்திய காதணியாகிய சுருளும், தொங்குகின்ற குழைகளும், (ஐம்பாலில் ஒன்றுகிய) சுருளில் தோன்றுகின்ற இதழ்கள் பொருந்திய பசும் பொன்னுலியன்ற பூவும், திலகமும் இலவம் பூப்போன்ற செவ்வாயால் மூடுண்டு கிடக்கின்ற பற்களாகிய முத்தும், முட்கள் பொருந்திய செந்தாமரை மலர் போன்ற சிவந்த கண்ணும் ஆகிய காட்டை உட்கொண்டு களங்கத்தையுடைய சந்திரன் புகுந்தது என்று கண்டோர் கருதுமாறு (முகமாகிய மதி) வந்து கலந்தது.

கு :—சுருளும், குழைகளும், பொற்பூவும், திலகமும், முறுவன் முத்தும் செங்கண்ணும் ஆகிய பலவற்றையும் வெண்திங்கள் தன்னுள் பெற்றுவந்தது என்னுமாறு மாதர் முகமதி வந்து கலந்தது என்றவாறு. முகமதி கலந்தது என எழுவாய் வருவிக்க. இது தோன்று எழுவாய் எனப்படும். காடு என்றது, இங்குப் பல என்னும் பொருளில் வந்தது. செங்கண்ணும் எனல் வேண்டும் உம்மை விகாரத்தால் தொக்கது. பெண்டிர் கண்கள் கள்ளுண்டலால் சிவந்தமை புலப்பட 'முளரிச் செங்கண்' என்றார். காதணி, ஓலைச்சுருள் போலச் சுருளாய் இருப்பதும் தொங்கும் இயல்பினதாய் இருப்பதும் என இருவகைப்படும்; இவ் விருவகையான காதணிகளையும் அணிந்திருந்தனர் என்றவாறு. திலகம் என்றே ஒருவகையணியும் உண்டு. சுருள் என்றது, ஐம்பால்களுள் ஒன்று. மாதர் முகம் சந்திரனைப் போன்றது ஆகலின் இங்ஙனம் கூறினர். சந்திரனைப் போன்ற முகமுடைய பெண்டிர் பலர்வந்து கலந்துகொண்டனர் என்ற கருத்தால், 'கறைவெண் திங்கள் காடுண்டு புகுந்தது என்னக் கலந்தது' என்றார்; சாதி ஒருமை திங்கள் சுருளும் குழைகளும் பொற்பூவும் திலகமும், முறுவன் முத்தும் செங்கண்ணும் தன்பாற் கொண்டு புகுந்தது போல மாதர், சுருள் முதலியவற்றால் அணிசெய்த முகத்தினராய் வந்து சேர்ந்தனர் என்றவாறு. (4)

## பெண்டிரின் ஒளியால் இருள் நிலைகெடல்

8956. முளைக்கொழுங் கதிரின் கற்றை
முறுவல்வெண் ணிலவு மூரி
ஒளிப்பிழம் பொழுகும் பூணி
னுமிழிள வெயிலு மொண்பொன்
விளக்கையும் விளக்கு மேனி
மிளிர்கதிர்ப் பரப்பும் வீச
வளைத்தபே ரிருளிங் கண்டோ
ரறிவென மருளு மாதோ.

முளைக்கொழுங் கதிரின் கற்றை
முறுவல் வெண்நிலவும், மூரி
ஒளிப்பிழம்பு ஒழுகும் பூணின்
உமிழ்இள வெயிலும், ஒண்பொன்

விளக்கையும் விளக்கும் மேனி
மிளிர்கதிர்ப் பரப்பும், வீச,
வளைத்தபேர் இருளும் கண்டோர்
அறிவுஎன, மருளும் மாதோ.

பொ :- தோன்றுகின்ற செழுமையான ஒளிக்கதிர்த் திரளைக் கொண்ட (மகளிரின்)புன்சிரிப்பின் வெண்ணிறமான நிலவும், பெரிய ஒளிப்பிழம்பை வெளிப்படுத்துகின்ற அணிகலன்கள் வீசுகின்ற இள வெயிலும், ஒளிவாய்ந்த பொன்னைப்போன்று, விளக்கையும் விளக்குகின்ற அவர்தம் மேனியினது விளங்குகின்ற ஒளிக்கதிர்ப் பரப்பும் வீசுதலால், உலகத்தையே வளைத்துக் கொண்டிருந்த பெரிய இரவு இருளும், அப் பெண்டிரைக் கண்ட ஆடவர் அறிவுபோய் மருண்டு நிலைகெடுவதாயிற்று.

கு :- மகளிர்தம் பல் வரிசையின் நிலவொளியும் அவர்கள் அணிந்த அணிகலன்களின் ஒளியும் அவர்தம் மேனி ஒளியும் வீசுதலால் இருள் நிலைகெட்டு ஓடுவதாயிற்று என்றவாறு. இதனால் அம் மகளிர் புன்சிரிப்போடும் அணிகலன்களோடும் மேனி மினுக்கோடும் அங்கு வந்து குழுமினர் என்பதும், அவர் அழகைக்கண்டு ஆடவர் அறிவு மருண்டதுபோல இரவில் வளைத்துக் கொண்டிருந்த இருளும் மருண்டு நிலைகெடுவதாயிற்று என்பதும் புலப்படுத்தியவாறு. அம் மகளிரைக் கண்டோரின் அறிவு மருண்டு நிலைகெட்டது; அதுபோல அவர்தம் ஒளியால் இருளும் மருண்டு நிலைகெட்டது என்க. ஞாயிற்றின் ஒளியும் விளக்கொளியும் ஆகிய மூன்றும் ஒவ்வொன்றும் தனித்தனி நின்றே இருளை ஓட்டவல்ல சிறப்புடையவை. அவை மூன்றும் ஒன்று கூடிவரின் பேரிருளும் மருளும் என்பது சொல்ல வேண்டுமோ என்றவாறு. பெண்டிரின் புன்சிரிப்பால் தோன்றும் பற்களின் ஒளியை நிலவொளியாகவும், அவர் அணிந்த அணி கலன்களின் ஒளியை இளவெயிலாகவும், அவர் மேனி ஒளியை விளக்கொளியாகவும் கொண்டு கூறியவாறு. விளக்கினும் சிறந்த மேனி ஒளியுடையர் என்பார், 'விளக்கையும் விளக்கும் மேனி' என்றார். "மாளிகை இணரொளி பரப்பி நின்றிருள் துரப்பன........மகளிர் மேனியே" (பால—நகரப்—51) என்றது காண்க. (5).

கள்ளின் வேகம் பரவுதல்

8957. நற்பெருங் கல்விச் செல்வ
நவையறு நெறியை நண்ணி
முற்பய னுணர்ந்த தூயோர்
மொழியொடும் பழகி முற்றிய

பிற்பய னுணர்த றேற்ருப்
பேதைபால் வஞ்சன் செய்த
கற்பனே யென்ன வோடிக்
கலந்தது கள்ளின் வேகம்.

நல்பெருங் கல்விச் செல்வம்
நவைஅறு நெறியை நண்ணி
முன்பயன் உணர்ந்த தூயோர்
மொழியாகும் பழகி, முற்றி,
பின்பயன் உணர்தல் தேற்ருப்
பேதைபால், வஞ்சன் செய்த
கற்பனே என்ன ஓடிக்
கலந்து, கல்லின் வேகம்.

பொ :- நல்லதாகிய பெரிய கல்விச் செல்வத்தால் குற்றமற்ற வழியைப் பொருந்தி, முற்காலத்து அந் நெறியின் பயனே உணர்ந்த தூயோர்தம் உபதேச மொழியோடு பழகி முதிர்ச்சியுற்றுப் பின்னுல் அந்த உபதேச மொழியினுல் உளதாம் பயனே(உணர வேண்டியிருக்க அதனே, உணர்தல் இல்லாத பேதையினிடத்தில் வஞ்சகன் ஒருவன் செய்த கற்பனே, அப் பேதையினுள்ளத்தில் விரைந்து நம்பப்பட்டுப் பரவுவதுபோலக் கள்ளின் வேகம் மகளிர் கூட்டத்தில் விரைந்து பரவியது.

கு :- பயனுணர்ந்த தூயோரது மொழியோடும் பழகி முதிர்ச்சியுற்ருேர் வருங்காலப் பயனேத் தெளிந்த மேதையாவர்; அவர்பால் வஞ்சன் செய்யும் கற்பனே நம்பப்படாததாய்ப் பொய்யாய்க் கழியும். அவர்க்கு மாருன பேதைபால் வஞ்சன் சென்று செய்த கற்பனே அப் பேதையால் மெய்யாக நம்பப்பட்டு, அவன் உள்ளத்தில் விரைந்து பதியும்; அதுபோலக் கள்ளின் மயக்கம் பெண்டிர்பால் விரைந்து கலந்தது என்றவாறு. கள்ளிற்கு வஞ்சன் செய்த கற்பனே உவமை; பெண்டிர்க்குப் பேதை உவமை. தூயோர் இவர் என்பது புலப்பட 'நற் பெருங் கல்விச் செல்வ நவையறு நெறியை நன்னி முற்பயன் உணர்ந்த தூயோர்' என்ருர். தூயோர் என்றது இங்கு நிறைமொழி மாந்தராகிய ஞானியரை. அவர் ஆணேயார் கூறிய மறைமொழியாகிய மந்திரத்தை ஓதிப் பழகி அதனுல் பிற்காலத்து வரும் பயனே நன்கு தெரிந்த மேதை, தன்பால் வந்து வஞ்சகன் செய்யும் கற்பனேயைத் தான் ஓதிப்பயின்ற மந்திரத்தின் துணேயால் பொய்யென்று விரைவில் உணர்ந்து

கொள்வான் ஆதலின், அவன்பால் அக்கற்பனை கலவாது என்ற வாறு. கோவலன் மதுரைக்குச் செல்லும் வழியில் வனசாரணி எனும் மயக்கும் தெய்வம் வயந்தமாலை வடிவில் தன் முன் வந்து கூறிய கற்பனையை ஐயுற்று ''வஞ்சம் பெயர்க்கும் மந்திரத்தால் இவ் வஞ்சில் ஓ,நியை அறிகுவென் யானெனக் கோவலனுவிற் கூறிய மந்திரம், பாய்கலைப்பாவை மந்திரமாதலின் ''வனசாரணியான் மயக்கம் செய்தேன் புனமயிற் சாயற்கும் புண்ணிய முதல்விக்கும் என்றிற முரையாதே கெண்றேகிய (சிலப்-11-194-200) செய்தி இங்கு நினைவுகூர்தற்கு உரியது. (6)

## கள்ளுண்டோர் நிலை

8958. பலபட முறுவல் வந்து
பரந்தன பனித்த மெய்வேர்
இலவிதழ் துடித்த முல்லை
யெயிறுவெண் ணிலவை யீன்ற
கொலைபயி னயன வேலின்
கொழுங்கடை சிவந்த கொற்றச்
சிலைநிகர் புருவ நெற்றிக்
குனித்தன விளர்த்த செவ்வாய்.

பலபட முறுவல் வந்து
பரந்தன ; பனித்த, மெய்வேர் ;
இலவுஇதழ் துடித்து ; முல்லை
எயிறுவெண் நிலவை ஈன்ற ;
கொலைபயில் நயன வேல்கள்
கொழுங்கடை சிவந்த ; கொற்றச்
சிலைநிகர் புருவம் நெற்றிக்
குனித்தன ; விளர்த்த செய்வாய்.

பொ :. (கள்ளருந்திய மகளிர்க்கு) பலவகையாகச் சிரிப்பு வந்து பரவின ; உடம்பில் வேர்வைத்துளிகள் தோன்றின; இலவமலர் போன்று சிவந்த உதடு துடித்தன ; முல்லை அரும்பு போன்ற பற்கள் வெள்ளிய நிலவைச் சொரிந்தன ; (ஆடவரை) வருத்துதலில் பழகிய கண்களாகிய வேற்படையின் செழுமையான ஓரங்கள் சிவந்தன ; வெற்றிபொருந்திய வில்லை நிகத்த புருவங்கள் நெற்றிக்கண் சென்று அதனையும் வளைத்தன ; சிவந்த வாய் வெளுத்தன

கு :- கள்ளுண்டவர்க்கு உண்டாகும் இயல்புகளைத் தொகுத்துக் கூறினமையின் இது தன்மை நவிற்சியணி. கள்ளுண்டவர் காரணமின்றிச் சிரித்தலும் அவர்க்கு வியர்வு தோன்றுதலும் அதரம் துடித்தலும், கண்சிவத்தலும், புருவம் வளைதலும், வாய் வெளுத்தலும் இயல்பு. குனித்தன எனப் பிறவினையால் கூறியதனுல் புருவங்கள் தாம் குனிந்ததோடு தமக்கு மேலுள்ள நெற்றியையும் குனியச்செய்தன என்பது கூறியவாருயிற்று. நயன வேல் என்றது உருவகம். சிலைநிகர் புருவம் என்றது உவமையணி. (7)

## மகளிர்தம் மயக்கம்

8959. கூந்தலம் பாரக் கற்றைக்
கொந்தளக் கோலக் கொண்டல்
ஏந்தக லல்குற் றேரை
யிகந்துபோ யிறங்க யாணர்ப்
பூந்துகி லோடும் பூசன்
மேகலை சிலம்பு பூண்ட
மாந்தளி ரெய்த நொய்தன்
மயங்கினர் மழலைச் சொல்லார்.

கூந்தல் அம்பாரக் கற்றைக்
கொந்தளக் கோலக் கொண்டல்
ஏந்துஅகல் அல்குல் தேரை
இகந்துபோய் இறங்க, யாணர்ப்
பூந்துகி லோடும் பூசல்
மேகலை, சிலம்பு பூண்ட
மாந்தளிர் எய்த, நொய்தின்
மயங்கினர் - மழலைச் சொல்லார்.

பொ :- கூந்தலாகிய - அழகிய சுமையான திரண்ட சுருள் தன்மையுடைய அழகு செய்யப்பட்ட மேகம், பக்கம் உயர்ந்த விரிந்த அல்குல் ஆகிய தேரையும் கடந்து கீழ் இறங்கவும், புதிய பூந்துகிலோடு, ஆரவாரிக்கும் மேகலையும் கழன்று, சிலம்பு பூண்டுள்ள மாந்தளிர் போன்ற பாதத்தை அடையவும், மழலை மொழியினையுடைய பெண்டிர் விரைவில் மயங்கினர்கள்.

கு:- கள்ளருந்திய மகளிர், கூந்தல் அவிழ்ந்து சோரவும் ஆடையும் மேகலையும் நழுவி பாதத்தில் விழவும் அறியாமல் மயங்கினார்கள் என்றவாறு. பாரமாகவும் திரட்சியாகவும் சுருண்டும் அழகு செய்யப்பட்டும் உள்ள கூந்தலாகிய கொண்டல் என்க; உருவகம். கூந்தல் நெடிதாயிருந்தலின் அது அவிழ்ந்தபோது அல்குலையும் கடந்து கிழிறங்கியது; அல்குற்றேர் என்றது உருவகம். யாணர்—புதுமை. தலையிலிருக்கும் கூந்தல் கிடைக்குக்கீழ் சரிந்தவுடன் இடையிலிருந்த துகிலும் மேகலையும் அவிழ்ந்து பாதத்தை அடைந்தன என்றவாறு. சிலம்பு பூண்ட மாந்தளிர் என்றது, குறிப்புருவகம்;யானையை 'வருங்குன்றம்'என்பதுபோல. பூந்துகில்என்றது பூப்போலும் மெல்லிய துகில் எனவும் பூத்தொழில் செய்யப்பெற்ற துகில் எனவும் பொருள்படும். மேகலை ஒலிசெய்யும் இயல்பினது ஆகலின், அதனைப் 'பூசல் மேகலை' என்றார். பூசல்-ஆரவாரம். (8)

8960. கோத்த மேகலையி னோடுந்
துகின்மணிக் குறங்கைக் கூடக்
காத்தன கூந்தற் கற்றை
யற்றமத் தன்மை கண்டு
வேத்தவை கீழு ளோர்கள்
கீழ்மையே விளைத்தார் மேலோர்
சீர்த்தவர் செய்யத் தக்க
கருமமே செய்தா ரென்ன.

கோத்த மேகலை யினோடும்
துகில்மணிக் குறங்கைக் கூட
காத்தன, கூந்தற் கற்றை,
அற்றம்; அத்தன்மை கண்டு—
வேத்தவை, 'கீழ்உ ளோர்கள்
கீழ்மையே விளைத்தார்; மேலோர்
சீர்த்தவர் செய்யத் தக்க
கருமமே செய்தார்' என்ன.

பொ:- இராவணனுடைய அவையில் உள்ளோர்கள்- 'கீழ் உள்ளவர்கள் கீழ்மையையே செய்தார்கள்; மேலுள்ளவர்கள், சிறந்தவர் செய்யத்தக்க நற்செயலையே செய்தார்கள் என்று' புகழுமாறு,- மணிகள் கோத்துள்ள மணிமேகலையினோடு இடையில் அணிந்த ஆடை அவிழ்ந்து அற்றத்தை வெளிப்படுத்தித் துடையை அடைய, அத்

தன்மை கண்டு (தலைமேலுள்ள) கூந்தல் திரள், அவிழ்ந்து வீழ்ந்து அவர் அற்றத்தை மறைத்துக் காத்தன.

கு:- அற்றம்-குறி. ''அற்றம் மறைத்தலோ புல்லறிவு'' (849) என்பது காண்க. 'அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான் குற்றமே கூறிவிடும்' (குறள்-980) என்ற திருக்குறளை இச் செய்யுள் நினைவுறுத்தல் காணலாம். மேற் செய்யுளில் கூறிய கருத்தையே இச் செய்யுளில் வேறுவகையாகக் கூறியவாறு. கூந்தல் தலைமேல் இருப்பது ஆகலின் மேலோர் என்றற்கும் மேகலையும் துகிலும் இடையில் அணியப்பட்டதாகலின் கீழுளோர் என்றற்கும் இடவகையால் ஏற்புடையனவாதல் நினைந்து சிலேடை. வகையால் கூறிய வாறு. கீழுள்ள துகிலும் மேகலையும் தம் சிறுமையையே புலப் படுத்தி மகளிரின் குறியைக் மறைக்காமல் அவமானத்தை வெளிப் படுத்தி நழுவித் துடையில் விழ்ந்தபோது, தலைமேலுள்ள தன் பெருமைக்கேற்பக் கூந்தல் விரைந்து அவிழ்ந்து விழ்ந்து அவர்கள் குறியை மறைத்து மானத்தைக் காத்தது என்பது தற்குறிப்பேற்ற மாகக் கூறியது. சீர்த்தவர் செய்யத்தக்க கருமம் என்றது அற்றம் மறைத்தலை. கீழ்மை விளைத்தல் என்றது அற்றமறையாது வெளிப் படுத்தலை. வேத்தவை, கீழுளோர் கீழ்மையே விளைத்தார்; மேலோர் செய்யத்தக்க கருமமே செய்தார் என்ன, மேகலையினோடு துகில் குறங் கைக்கூட அத் தன்மைகண்டு கூந்தல் கற்றை அற்றம் காத்தன என இயையும். இங்ஙனம் கொண்டு கூட்டாமல் கிடந்தாங்கே துகில் குறங்கைக்கூடக் கூந்தல் கற்றை காத்தன; அத் தன்மை கண்டு, வேததவை, 'கீழுளோர் கீழ்மையே விளைத்தார். மேலோர் செய்யத்தக்க கருமமே 'செய்தார்' என்ன என இயைத்துக் கூறின் என்ன என்ற செயவெனச்சம் முடிபின்றி நின்று பற்றுதல் நினைக. (9)

8961. பாணியிற் றள்ளிக் கால
மாத்திரைப் படாது பட்ட
நாணியின் முறையிற் கூடா
தொழிவழி நடையிற் செல்லும்
ஆணியி னழிந்த பாட
னவின்றனர் வநங்க வேடன்
தூணியி னடைத்த வம்பிற்
கொடுந்தொழி றுறந்த கண்ணர்.

பாணியின் தள்ளி; கால
மாத்திரைப் படாது பட்ட
நாணியின் முறையிற் கூடாது,
ஒருவழி நடையின் செல்லும்
ஆணியின் அழிந்த பாடல்
நவின்றனர்—அநங்க வேள்தன்
தூணியின் அடைத்த அம்பின்
கொடுந்தொழில் துறந்த கண்ணார்.

பொ :- அனங்கவேள், உலகவர்மேல் செலுத்தாது தன் அம்பருத் தூணியில் அடைத்து வைத்த அம்பைப்போலக் கொடுந் தொழிலைச் செய்யாமல் செருகிக் கொண்டுள்ள கண்களையுடைய பெண்டிர். தாள முறையினின்றும் வேறுபட்டும் இக் காலத்தில் இப் பண் பாடவேண்டும் என்ற கால அளவுக்கு உட்படாமலும், யாழ் நரம்பின் ஒலி முறையோடு கூடாமலும், தனிப்பட்டதொரு வழியில் செல்லுகின்ற வரம்பு தவறிய பாடலைப் பாடினார்கள்.

கு :- கள்ளுண்ட மயக்கத்தால் பெண்டிரின் கண்கள் நிலை தவறிச் செருகிய நிலையிலிருப்பதால் அக் கண்கள் ஆடவர்க்குக் காமக் குறிப்பைக் காட்டவியலாதன ஆதலின், அக் கண்கட்கு அனங்கவேள் தன் தூணியின் அடைத்து வைத்துள்ள அம்பினை உவமை கூறினார். கள் குடித்த மயக்கத்தால் அப் பெண்டிர் பாடும் பாடல் தாளத்தையும், பண்ணுக்குரிய காலத்தையும், யாழ்நரம்பின் சுருதி முறையையும் கடந்து இசைவாணரால் ஒழிக்கப்பட்ட நடையில் செல்லுகின்றதாய் வரம்பு கடந்து ஒலித்தது என்றவாறு. பாணி—தாளம். 'முற்பாணி தருவாளோ' (கலி-கடவுள் வாழ்த்து) என்புழிஇச் சொல் இப் பொருளது ஆதல் காணலாம். கால மாத்திரை-கால அளவு. காலையில் மருதப் பண்ணும் மாலையில் செவ்வழிப் பண்ணும் பாடவேண்டும் என்றாற் போன்ற பண்ணுக்குரிய கால வரையறையையே 'கால மாத்திரை' என்றார். "மாலை மருதம் பண்ணிக் காலைக் கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி வரவு எமர் மறந்தனர்" (புறநா—149) என இசைவாணர் வரலாற்று முறையை மறந்து பாடிய வழுநிலையை யுணர்த்தியிருத்தல் காணலாம். இனி, காலமும் மாத்திரையும் என உம்மைத் தொகையாக்கி இக் காலத் துக்கும் எழுத்துக்களின் மாத்திரையளவைக்கும் உட்படாது எனவும் பொருள் கொள்ளலாம். நாணி என்றது, யாழ் நரம்பினை. ஆணி—வரம்பு. (10)

8962. வங்கியம் வகுத்த கானம்
வயங்கிய மழலை வாயர்
கங்கையில் பெருப் பணுற்ற
திறந்துறை திறம்பத் தள்ளிச்
சிங்கலி னமிழ்தி னேடும்
புளியளாந் தேற லென்ன
வெங்குர லெடுத்த பாடல்
விளித்தனர் மயக்கம் வீங்க.

வங்கியம் வகுத்த கானம்
வயங்கிய மழலை வாயர்
சங்கைஇல் பெரும்பண் உற்ற
திறத்துறை திறம்பத் தள்ளி,
சிங்கல்இல் அமிழ்தினோடும் புளி
அளாம் தேறல் என்ன,
வெங்குரல் எடுத்த பாடல்
விளித்தனர், மயக்கம் வீங்க.

பொ :- புல்லாங்குழல் வழங்கும் இன்னிசை தன்னிடம் விளங்குகின்ற மழலைச் சொல்லைப் பேசும் வாயினையுடைய மகளிர் மயக்கம் மேற்பட்டதால் ஐயத்திற்கு இடமில்லாத குறிஞ்சி, பாலை, மருதம், செவ்வழி என்ற நான்கு பெரும் பண்களின் அமைப்பு முறையும், அப் பண்களோடு இயைபுடைய இருபத்தொரு திறங்களின் துறைகளும் மாறுபடுமாறு புறக்கணித்து, சுவைகுன்றாத இனிய அமிழ்தத்தோடு புளிப்புச் சுவை விரவிய கள்ளினைக் கலந்தாற் போலக் கடுங்குரல் எடுத்துப் பாடும் பாடலைப் பாடினர்.

கு :- பண்ணிற்கும் திறத்திற்கும் உள்ள இலக்கணங்களோடு மாறுபட மகளிர் கட்குடி மயக்கத்தால் கடுங்குரல் எடுத்துக் கூவினர் என்றவாறு. வங்கியம்—புல்லாங்குழல். மகளிரின் குரலினிமை புலப்பட 'வங்கியம் வகுத்த கானம் வயங்கிய மழலை வாயார்' என்றார். பெரும்பண் எனப்படுவன: குறிஞ்சி, பாலை, மருதம், செவ்வழி என்பன; இவைமுறையே நடுயாமத்தும், நண்பகலிலும், காலையிலும், மாலையிலும் பாடுதற்குரியன. ஏழு சுரங்களால் ஆகிய இராகங்களைப் 'பண்' எனவும், ஆறு சுரங்களால் ஆகிய இராகங்களைப் 'பண்ணியல்' எனவும், ஐந்து சுரங்களாகியவற்றைத் 'திறம்' எனவும், நான்கு சுரங்களால் ஆகிய வற்றைத் 'திறத்திறம்' எனவும் கூறுவர். 'ஈரிரு பண்ணும் எழு மூன்று திறனும்' என்ற

பிங்கலந்தை நூற்பாவால் பெரும்பண் நான்கு என்பதும், திறம் இருபத்தொன்று என்பதும் புலனும். இனிமைமிக்க குரலில் மகளிர் கள்ளுண்ட மயக்கத்தல் இசைவரம்புகடந்து பாடியது, இனிக்கும் அமிழ்திறேடு புளிக்கும் கள்ளினைக் கலந்தது போன்றிருந்தது என்றவாறு. பாடல் இசைத்தனர் என்னாது, பாடல் விளித்தனர் என்றது, இப் பாடலை அசைமரபு கடந்து உரத்துக் கூவிப் பாடினமை புலப்படுத்த வேண்டியேயாம். சங்கை—ஐயம். சிங்கல் — குறைதல். மழலை வாயார் மயக்கம் விங்க, பெரும்பண் திறத்துறை திறம்பத் தள்ளிப் பாடல் விளித்தனர் என இயையும். (11)

### நாடக மகளிரின் மயக்கம்

8963. ஏனைய பிறவுங் கண்டார்க்
கிந்திர சால மென்னத்
தானவை யுருவிற் றேன்றும்
பாவனைத் தகைமை சான்றோர்
மானமர் நாக்கி ஞரை
மைந்தரைக் காட்டி வாயால்
ஆனையை விளம்பித் தேரை
யபிநயத் தியற்றி யுற்றார்.

ஏனைய பிறவும் கண்டார்க்கு
இந்திர சாலம் என்ன,
தான அவை உறுவில் தோன்றும்
பாவனைத் தகைமை சான்ற
மான் அமர் நோக்கின் நல்லார்,
மைந்தரைக் காட்டி, வாயால்
ஆனையை விளம்பி தேரை
அபிநயத்து இயற்றி உற்றார்.

பொ :- (தம் அபிநயத்தைக்) கண்டோர்க்கு இந்திரசால வித்தை போலத் தோன்றும்படி, தாமல்லாத பிறவுயிர்களாகிய அவையும் தம் உருவில் தோன்றுமாறு நடிக்கும் பாவனைத்தன்மை மிக்கோராகிய நாடக மகளிர், மான்போன்ற கண்ணிணையுடைய பெண்டிரையும் ஆடவர்களையும் ஆட்டி ஆனையைக் காட்டப்போவதாக வாயினால் சொல்லிவிட்டு (மயக்கத்தால் அதை மறந்து) அபிநயத்தில் தேரை அபிநயித்துக் காட்டினார்கள்.

கு :- சொல்லால் ஆனையைக் காட்டப்போவதாகச் சொல்லி விட்டுச்.செயலால் தேரினை அபிநயித்துக் காட்டினார்கள் என நாடக மகளிரின் கள்ளுண்ட மயக்கத்தைப் புலப்படுத்தியவாறு. இம் மகளிர் கள்ளுண்ணாமல் நடிக்கும்போது தம்முருவிலேயே ஏனைய பிற உயிர்களின் உருவங்களெல்லாம் தோன்றுமாறு விரைவாக அபிநயித்துக் காட்ட வல்லவர்கள் என்பதும், அவ்வாறு அபிநயிக்கும்போது கண்டோர்க்கு இந்திரசால வித்தைபோலத் தோன்றும் என்பதும் கூறி அவர்தம் நடிப்புத்திறனையைப் புலப்படுத்தியவாறு. ஆனையை அபிநயிப்பதாகச் சொல்லித் தேரை அபிநயித்தது நகை விளைக்கும் தன்மையதாதல் காணலாம். (12)

8964. அழுகுவர் நகுவர் பாடி
யாடுவ ரயனின் றுரைத்
தொழுகுவர் துயில்வர் துள்ளித்
தூங்குவர் துவர்வா யின்றேன்
ஒழுகுவ ரொல்கி யொல்கி
யொருவர்மே லொருவர் புக்கு
முழுகுவர் குருதி வாட்கண்
முகிழ்த்திடை மூரிபோவர்.

அழுகுவர் ; நகுவர் ; பாடி
ஆடுவர் ; அயல் நின்றுரைத்
தொழுகுவர் ; துயில்வர் ; துள்ளித்
தூங்குவர் ; துவர்வாய் இன்தேன்
ஒழுகுபவர் ; ஒல்கி, ஒல்கி,
ஒருவர்மேல் ஒருவர் புக்கு,
முழுகுவர், குருதி வாட்கண்
முகிழ்த்து, இடை, மூரிபோவர்.

பொ :- (கள்ளுண்ட மயக்கத்தால்) அழுவார்கள் ; பின்பு உடனே சிரிப்பார்கள்; பின்பு விரும்பியாங்குப் பாடிக்கொண்டு ஆடுவார்கள்; பின்பு அருகில் நின்றவர்களைக் கைகூப்பித் தொழுவார்கள் ; உடனே உறங்குவார்கள் ; உடனே துள்ளியெழுந்து சோர்வார்கள் ; சிவந்த வாயில் உள்ள இனிய தேன்போன்ற வாலெயிறு ஊறிய நீரையொழுகவிடுவார்கள் ; உடனே தளர்ந்து தளர்ந்து ஒருவர்மேல் ஒருவர் புகுந்து படிவார்கள். இரத்தம்போன்று சிவந்த ஒளிவாய்ந்த கண்ணை மூடிக்கொண்டு நெட்டை முரிப்பார்கள்.

கு :- கள்ளுண்ட பெண்டிரின் மதிமயங்கிய, முரண்பட்ட செயல்களை விளக்கியவாறு. கள்ளுண்டோரின் இயல்புகளை முறைப் படுத்திக் கூறினமையால் இச் செய்யுள் தன்மையணியின்பாற் படும். தூங்குவர் என்றது சோர்ந்திருத்தலை. துவர்வாய் இன்தேன் என்றது அப் பெண்டிரின் வாலெயிறு ஊறிய நீரை. ஒருவரை ஒருவர் தழுவுங்கால் உளதாகும் நெருக்கத்தையுணர்த்த 'புக்கு முழுகுவர்' என்றார். "மெய்புகுவன்ன கைகவர் முயக்கம்" (அகநா—11) என்று அம் முயக்கம் விளக்கப்படுதல் காணலாம். கள்ளுண்டார்க்குக் கண் சிவத்தல் இயல்பு ஆதலின், அவர்கள் கண்களைக் 'குருதி வாட்கண்' என்றார். முகிழ்த்தல்- மூடுதல். மூரி நிமிர்தலையே மூரிபோவர் என்றார். "சிங்கம்...மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு" (திருப்பாவை-23, என்றது காண்க. மூரி நிமிர்தலாவது நெட்டைமுரித்தல் என்பர். முணங்கி நிமிர்தல் என்றும் இதனைக் கூறுவர். "அணங்கருங் கடுந்திற லென்னை முணங்கு நிமிர்ந்து" (புற-78) என்றல் காணலாம். (13)

8965. உயிர்ப்புறத் துற்ற தன்மை
யுணர்த்தினு ருள்ளத் துள்ள
தயிர்ப்பில தறிதி ரென்றே
யதுகளி யாட்ட மாகச்
செயிர்ப்பது சிந்தைத் தெய்வத்
திருமறை முனிவர்க் கேயும்
மயிர்ப்புறந் தோறும் வந்து
பொடித்தது காம வாரி.

உயிர்ப்புறத்து உற்ற தன்மை
உணர்த்தினர் 'உள்ளத்து உள்ளது
அயிர்ப்பு இலது அறிதிர்,
என்றே,அது களியாட்டம் ஆக,
செயிர்ப்புஅறு சிந்தைத் தெய்வத்
திருமறை முனிவர்க் கேயும்
மயிர்ப்புறம் தோறும் வந்து
பொடித்தது காம வாரி.

பொ :- 'எம் உள்ளத்தில் உள்ள கருத்து (புணர்ச்சி விருப் பமே என்பது). ஐயம் இல்லாதது என்பதை அறிந்து கொள்ளுங் கள்' என்று தம் உடம்பில் பொருந்திய செய்கையால் பெண்டிர்

உணர்த்தினர்கள் ; அவர் குறிப்பு களிப்பு மிகுவிக்கும் ஆட்டமாகத் தோன்றியதனுல், காம வெகுளி மயக்கம் என்கின்ற குற்றங்கள் அந்த சிந்தையையுடையராய்த் தெய்வத்தன்மையுடைய சிறந்த வேத முணர்ந்த முனிவர்க்கும் மயிர்க்கால் தோறும் காம உணர்ச்சியாகிய வெள்ளம் தோன்றியது.

கு :- உள்ளத்துள்ளது அயிர்ப்பிலது அறிதிர் என்றே உயிர்ப்புறத்துற்ற தன்மையால் உணர்த்தினர் ; அது களியாட்டமாக, முனிவர்க்கேயும் காம வாரி மயிர்ப்புறம்தோறும் வந்து பொடித்தது என இயையும். உற்றதன்மையால் உணர்த்தினர் என முன்றனுருபு விரிக்க. உயிர்ப்புறம் என்றது உடம்பினை. உயிர்க்குப் புறத்தே அதற்கு இடமாக இருத்தல்பற்றி உடம்பு உயிர்ப்புறம் எனப்பட்டது. பெண்டிர் தம்உள்ளக் கருத்து இதுவென ஐயமின்றியுணரச் செய்கையால் உணர்த்தி ஆடினர் என்றவாறு. ஒருவர் மனத்து எண்ணியது இது என்று பிறர் உள்ளவாறு உணர்தல் அரிதாகலின், 'உள்ளத்துள்ளது அயிர்ப்பிலது அறிதிர்' எனப் பெண்டிர் தம் செய்கையால் உணர்த்தலாயினர். அப் பெண்டிர் குறிப்புத் தமக்குக் களிப்பு மிகுவிக்கும் ஆட்டமாக அமைந்தமையால் முனிவர்க்கும் காம வாரி பொடிப்பதாயிற்று. முனிவர்க்கேயும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. முனிவர்க்கேயும் காம வாரி பொடித்தது எனின் ஏனையோர் நிலை யாதாயிருக்கும் என உய்த்துணர வைத்தவாறு. செயிர்ப்பு—குற்றம் ; அவை காமம் வெகுளி மயக்கம் என்கின்ற முக்குற்றங்கள். " காம மொடு கடுஞ் சினங் கடிந்த காட்சியர்......துனியில் காட்சி முனிவர் " (திருமுருகாற்-135-137) என நக்கீரனுர் கூறியுள்ளதும் நினைக. காமமில்லாத முனிவர்க்கும் காமத்தை உண்டாக்கியது என அம் மகளிரின் களியாட்டச் சிறப்புப் புலப்படுத்தியவாறு. (14)

8966. மாப்பிறழ் நோக்கி ஞர்தம்
மணிநெடுங் குவளை வாட்கண்
சேப்புற வரத்தச் செவ்வாய்ச்
செங்கிடை வெண்மை சேரக்
காப்புறு படைக்கைக் கள்ள
நிருதர்க்கோ ரிறுதி காட்டிப்
பூப்பிறழ்ந் துருவம் வேருய்ப்
பொலிந்ததோர் தன்மை போன்ற.

மாப்பிறழ் நோக்கி ணுர்தம்
மணிநெடுங் குவளை வாட்கண்
சேப்புற, அரத்தச் செவ்வாய்ச்
செங்குழை வெண்மை சேர,
காப்புறு படைக்கைக் கள்ள
நிருதர்க்கு ஓர்இறுதி காட்டி,
பூப்பிறழ்ந்து உருவம் வேருய்ப்
பொலிந்தது ஓர்தன்மை போன்ற,

பொ:. வண்டு பிறழ்வதுபோன்ற நோக்கத்தையுடைய கள்ளுண்ட பெண்டிர் தம் கரிய நீண்ட குவளைமலர்போன்ற ஒளிவாய்ந்த கண்கள் சிவக்கப்பெற்றதாலும் செங்கழுநீர் மலர்போன்ற சிவந்த வாயாகிய செங்கிடை வெண்ணியும் சேரப்பெற்றதாலும் (அவ் விரண்டும்) காப்பாகப் பொருந்திய படைகளையேந்திய வஞ்சகர்களாகிய அரக்கர்க்கு ஓரழிவு வரப்போவதை முன்னமே புலப்படுத்தி மலர்கள் வேறுபட்டு வண்ணம் வேருக விளங்கியதோர் தன்மை போன்று தோன்றின.

கு:- மலர்கள் தம் நிறம் மாறிப் பூப்பது உற்பாதம் என்று கருதப்படும். அரக்கர் அழிவு நெருங்கிவிட்டது என்பதை அறிவிக்க முந்தி உற்பாதமாக மலர்கள் வண்ணம் மாறிப்பூத்த தன்மைபோலக் கள்ளுண்ட பெண்டிரின் கண்ணுகிய கருங்குவளை மலர்கள் சிவந்து காட்டின; வாயாகிய செங்குமுத மலர்கள் வெளுத்துத் தோன்றின என்றவாறு. குவளைக்கண் சேப்புறலாறும் வாய்க்குமுதம் வெண்மை சேர்தலாலும் அவ் விரண்டும் நிருதர்க்கோர் இறுதிகாட்டிப்பூப்பிறழ்ந்துருவம் மாறி வேருய்ப் பொலிந்ததோர் தன்மைபோன்ற எனச் சுட்டு வருவித்து முடிக்க. இது ஏது தற்குறிப்பேற்றவணி. அரத்தம்—செங்கழுநீர் மலர். அரத்தம்போன்ற செவ்வாயாகிய செங்கிடை என்பது உவம உருவகம். செங்கிடை—நெட்டி. இது செந்நிறமுடைய ஒருவகை முள்ளிச் செடி. இதைப் பெண்டிரின் வாயிதழ்க்கு உவமையாகக் கூறுவது மரபு. (15)

8967. கயல்வரு காலன் கைவேல்
காமவேள் கணையென் ருலும்
இயல்வரு கிற்கி லாத
நெடுங்கணு ரிணைமென் கொங்கை
துயல்வரு கனக நாணுங்
காஞ்சியுந் துகிலும் வாங்கிப்
புயல்வரு கூந்தற் பாரக்
கற்றையிற் புனைய லுற்ருர்.

கயல்,வரு காலன் கைவேல்,
காமவேள் கணை, என்ருலும்,
இயல்வரு கிற்கி லாத
நெடுங்கணுர், இணைமென் கொங்கைத்
துயல்வரு கனக நாணும்,
காஞ்சியும், துகிலும், வாங்கி,
புயல்வரு கூந்தல் பாரக்
கற்றையின் புனைய பெற்ருர்.

பொ :- கயல்மீனும், உயிர்கொள வருகின்ற எமன் கையிலுள்ள வேலும், காமவேளின் கணையாகிய நீலமலரும் உவமையாய் என்று கூறினுலும் அவை உவமையாக இயலாத (சிறபபுடைய) நீண்ட கண்ணையுடைய பெண்டிர், தம் இணையான மெல்லிய மார்பில் அசைகின்ற பொன் சரட்டையும் இடையில் அணிந்த காஞ்சியையும் புடவையையும் கையில் வாங்கி மேகம்போன்ற கூந்தலாகிய கனமுடைய கற்றையில் அணியத் தொடங்கினுர்கள்.

கு :- மிறட்சியில் கயல்மீனையும் கொலைத் தொழிலில் காலன் கைவேலினையும் காதலைத் தூண்டுவதில் காமவேள் கணையினையும் வென்று மேம்பட்ட கண்களாதலின் 'இயல்வருகிற்கிலாத நெடுங் கணுர்' என்ருர். கள்ளுண்ட மயக்கத்தால், மார்பிலணியத்தக்க பொன் கயிற்றையும் காஞ்சியையும் புடவையையும் கூந்தலில் சூடினுர்கள் என்றவாறு. இதனுல், அப் பெண்டிரின் மயக்க மிகுதி புலப் படுத்தியவாறு. "இலம்பா டுழந்த வென்னிரும்பே ரொக்கல். விரற் செறி மரபின செவித்தொடக்குநரும், செவித்தொடர் மரபின விறற் செறிக்குநரும் அரைக்கமை மரபின யிடற்றி யாக்குநரும், மிடற் றமை மரபின வரைக்கியாக்குநரும்" (புறநா—378) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும். காஞ்சி என்பது, எழுகோவை மணியால் இயன்று, மகளிர் இடையில் அணியத்தக்கதோர் அணி. (16)

8963. முத்தன்மை மொழிய லாகா
முகிழிள முறுவ னல்லார்
இத்தன்மை யெய்த நோக்கி
யரசுவீற் றிருந்த வெல்லை
அத்தன்மெய் அரியின் சேனை
யார்கலி யார்த்த வோதை
மத்தன்மெய் மயங்க வந்து
செவிதொறு மடுத்த தன்றே.

முத்துஅன்மை மொழியல் ஆகா
முகிழ்இள முறுவல் நல்லார்,
இத்தன்மை எய்த நோக்கி,
அரசு வீற்றிருந்த எல்லே,
அத்தன்மெய் அரியின் சேனை
ஆர்கலி ஆர்த்த ஓதை
மத்தன்மெய் மயங்க வந்து.
செவிதொறும் மடுத்தது அன்றே.

பொ:- முத்து அல்லாமையைச் சொல்லமுடியாத (முத்து என்ற சொல்லத்தக்க) அரும்பிய இளைய பற்களையுடைய பெண்டிர் கள்ளுண்ட மயக்கத்தால் இந்தத் தன்மையை அடைதலை விருப்பத்தோடு நோக்கிக்கொண்டு (இராவணன்) அரசு வீற்றிருந்தபோது, இராமனது திருமேனி என்று சொல்லத்தகும் குரங்கின் சேனையாகிய கடல் ஆரவாரித்த ஓசை, காம மயக்கம்கொண்ட அவ் இராவணன் மெய்மயங்குமாறு வந்து அவன் செவிகள்தோறும் நுழைந்தன.

கு.- முத்தும் மகளிரின் பல்லும் வேறுபட்டனவே ஆயினும் ஒப்புமை மிகுதியுண்மையால் 'முத்து அன்மை மொழியலாகா......... முறுவல்' என்றார். கள்ளுண்ட மயக்கத்தால் மகளிரடைந்த நிலையையே இங்கு 'இத்தன்மை' எனச் சுட்டியவாறு. நல்லோர் நோக்கவொண்ணாத பெண்டிரின் அலங்கோலக் காட்சியை விரும்பிப் பார்த்துக் கொண்டிருந்த இராவணனது இழிதகைமை புலப்பட 'நல்லார் இத்தன்மை யெய்தல் நோக்கி அரசு வீற்றிருந்த' என்றார். அரசனுக்குச் சேனை உடம்பாகக் கூறப்படும் மரபுண்மையின் 'அத்தன் மெய் அரியின் சேனை' என்றார். அத்தன் என்றது இராமனை. 'தாழ்கழன் மன்னன்றன் திருமேனி வாழ்க சேனாமுகம் என வாழ்த்தி' (சிலப்—25: 191) என்பதும், 'திருமேனியாகிய சேனாமுகம்; சேனாமுகம் அரசனுக்குச் சிறந்தமையின், 'திருமேனி' என்றார். என்ற அதன்குறிப்புரையும்இங்கு நினைக்கத் தகும். மத்தன் என்றது காம மயக்கத்தையுடைய இராவணனை. இராவணனுக்குச் செவி இருபது ஆகலின், 'செவிதொறும் மடுத்தது.' என்றார். கண்களால் இன்பம் நுகர்ந்து கொண்டிருந்த இராவணன் செவிகளால் துன்பக் காரணமான ஒலியைக் கேட்கலானான் என்றவாறு. (17)

### வானர சேனையின் ஆரவாரத்தினால் களியாட்டம் மங்குதல்

8969\. ஆடலுங் களியின் வந்த
வமலையு மமிழ்தி னன்ற
பாடலு முழவின் றெய்வப்
பாணியும் பவள வாயார்

ஊடலுங் கடைக்கண் ணோக்கு
மழலைவெவ் வுரையு மெல்லாம்
வாடன்மென் மலரே யொத்த
வார்ப்பொலி வருத லோடும்.

ஆடலும், களியின் வந்த
அமலையும், அமுதின் ஆன்ற
பாடலும், முழவின் தெய்வப்
பாணியும், பவள வாயார்
ஊடலும், கடைக்கண் நோக்கும்,
மழலைவெவ் வுரையும், எல்லாம்
வாடல் மென்மலரே ஒத்த—
ஆர்ப்பு ஒலி வருதலோடும்.

பொ:- பவளம்போன்றவாயினையுடைய பெண்டிர்தம் ஆடலும், அமுதினும் இனிதாய் அமைந்த அவர்பாடலும், அப் பாடலுக்கேற்ற மத்தளத்தின் தெய்வத்தன்மை வாய்ந்த ஓசையும், அவற்றைக் காண் போரின் களிப்பால் வந்த ஆரவாரமும், (அம் மகளிர்மீது காதல் கொண்டுநோக்குவோர்க்கு அம் மகளிர் காட்டும்)ஊடலும்,(அவ் வூட லினால் அவ் வாடவர் வருந்துதல் கண்டு இரக்கம் கொண்டு அம் மக ளிர் தம்மிசைவைத் தெரிவிக்கும்) கடைக்கண் நோக்கமும், அவர்கள் ஆசையைப் புலப்படுத்துகின்ற விருப்பத்தை யுண்டாக்கும் மழலைச் சொல்லும் ஆகிய எல்லாமும், வானரர்தம் ஆரவாரப் பேரொலி வந்த வுடன் வாடிய மலர்போலப் பொலிவழிந்து போயின.

கு - அன்றலர்ந்த மலர்போலப் பொலிவுடன் நிகழ்ந்து கொண் டிருந்த ஆடல் முதலியவை வானரங்களின் ஆரவாரம் கேட்டவுடன் பொலிவிழந்து வாடல் மலரைப் போன்றன என்றவாறு. வானர சேனையுடன் இராம இலக்குவர் இந்திரசித்தின் பிரமாத்திரத்தால் இறந்துபட்டனர் என்று கேள்விப்பட்ட மகிழ்ச்சியால் மேற்கொண்ட களியாட்டமாதலின், அப் பகைவர் இறந்திலர் என்பதையுணர்த்தும் ஆரவாரம் கேட்டவுடன் பொலிவு நீங்கினதாயிற்று என்க. வெவ் வுரை—விருப்பத்தையுளதாக்கும் சொல். வெவ் மழலை உரை என இயையும். (18)

## இராம இலக்குவரின் வில்நாணொலி

8970. தறிபொரு களிநல் யானை
சேவகந் தள்ளி யேங்தத்
துறுசுவற் புரவி தூங்கித்
துணுக்குற வரக்க ருட்கச்

செறிகழ லிருவர் தெய்வச்
சிலையொலி பிறந்த தன்றே
எறிகடல் கடைந்த மேனா
ளெழுந்தபே ரோதை யென்ன.

தறிபொரு களிநல் யானை
சேவகம் தள்ளி ஏங்க,
துறுசுவல் புரவி தூங்கித்
துணுக்குற, அரக்கர் உட்க,
செறிகழல் இருவர் தெய்வச்
சிலைஒலி பிறந்தது அன்றே—
எறிகடல் கடைந்த மேல்நாள்,
எழுந்தபேர் ஓசை என்ன.

பொ :- வீரக்கழல் கட்டியுள்ள இராம இலக்குவரின் தெய்வத் தன்மை வாய்ந்த வில்நாண்ஒலி-கட்டுத்தறியையும் முறிக்கின்ற மதக் களிப்பினையுடைய நல்ல யானைகள் தாம் படுத்த விடங்களில் திடுக் குற்று வருந்தவும், நெருங்கிய பிடரி மயிரினையுடைய குதிரைகள் துணுக்குற்றுச் சோரவும், காலாள் வீரராகிய அரக்கர்கள் அஞ்சவும், அலைகள் வீசுகின்ற பாற்கடலைக் கடைந்த முற்காலத்து எழுந்த பேரொலிபோலத் தோன்றியது.

கு :- இராம இலக்குவரின் வில் நாணின் ஒலிகேட்டு இராவண னுடைய யானை, குதிரை, காலாள் என்ற மூவகைப் படையும் நடுங்கினமை இதனால் கூறியவாறு. நால்வகைப் படையுள் தேர்ப் படை தனக்கென வீரம் உடையதன்று ஆகலின் ஏனை மூவகைப் படையினையே இங்குக் கூறியவாறு. "தானை, யானை, குதிரை யென்ற நோனார் உட்கு மூவகைநிலையும்" (தொல்-பொருள்.புறத்-12) என்றதும், "குதிரையானன்றித் தேர்தானே செல்லாமையில் தேர்க்கு மறம் இன்றென்று அது கூறாராயினார்" என்ற நச்சினார்க் கினியர் குறிப்பும் இங்கு நினைத்தல் தகும். இராம இலக்குவர் நாணொலிசெய்து தம் போர் விருப்பதைப் புலப்படுத்தினமை இத னால் கூறியவாறு. (19)

## இராவணன் முகம் மழுங்கல்

8971. முத்துவா ணகையின் மூரல்
முகத்தியர் முழுக்கண் வேலால்
குத்துவோர் கூட்ட மெல்லாம்
வானரக் குழுவிற் றேன்ற

மத்துவாழ் கடலி னுள்ள
மறுகுற வதன மென்னும்
பத்துவாழ் மதிக்கு மந்நாட்
பகலொத்த திரவு பண்பால்.

முத்துவாள் நகையின் முரல்
முகத்தியர் முழுக்கண் வேலால்
முத்துவார் கூட்டம் எல்லாம்
வானரக் குழுவின் தோன்ற,
மத்துவாழ் கடலின் உள்ளம்
மறுகுற, வதனம் என்னும்
பத்துவாள் மதிக்கும் அந்நாள்
பகல்ஒத்தது இரவு பண்பால்.

பொ :- இலக்கண முழுமையும் நிரம்பப்பெற்ற கண்களாகிய வேற்படைகளால் குத்துகின்றவர்களாகிய - முத்துக்கள் போன்ற பற்களைக் காட்டிச் சிரிக்கும் நகைமுத்தினையுடைய-பெண்டிர் கூட்டம் எல்லாம் இப்போது வானரக் கூட்டம்போல (வெறுக்கத்தக்கன வாகத) தோன்றவும், மந்தரமலையாகிய மத்துப் பொருந்திய பாற்கடலைப்போல உள்ளம் கலங்கவும், இராவணனது முகம் என்கின்ற பத்து ஒளிவாய்ந்த மதிகளுக்கும் அந்நாள் இரவு (பொலிவழியச் செய்த) பண்பினால் இரவை ஒத்தது.

கு :- இராவணனுக்கு இன்பம் கொடுக்கும் மகளிர் கூட்டம் வில் நாணொலிகேட்ட இப்போது அஞ்சத்தக்க வானரக் கூட்டம் போலத் தோன்றிற்று என்றது, அச்சம் என்னும் மெய்ப்பாடு தோன்றும்போது உவகைச் சுவை கெடுவதை உணர்த்தியவாறு. இராவணனனுக்கு வெகுளி தோன்றியபோது காமம் அடங்கின நிலையை யுணர்த்தியதாகவும் கொள்ளலாம். மகளிர் அழகும் அழகின்மையும் ஆடவரின் மனநிலைக் கேற்பத் தோன்றும் என்ற உண்மையும் இதனால் புலப்படுத்தியவாறு. அழகில்லாத நிலையைக் குரங்குமுகமாகக் கூறுவது மரபு. அழகுமிக்க ஒரு கற்புடைய பெண்டு, பிரிந்து சென்ற தன் கணவன் வரும்வரையில் அழகில்லாத குரங்குமுகமாகத் தன் முகத்தை மாற்றிக்கொண்டு பிறர் நெஞ்சு புகாதநிலையைக் காப்பாற்றிய செய்தியை 'வேற்றொருவன், நீணோக் கங் கண்டு நிறைமதி வாண்முகத்தைத், தனோர் குரங்குமுக மாகென்று போன, கொழுநன்வரவே குரங்குமுக நீத்த, பழுமணியல் குல் பூம்பாவை'' (சிலப் - 21 : 20-23) என்றது காண்க. இனி வெருண்டுவன் கண்ணுக்கு இருண்ட தெல்லாம் பேய்' என்பதற்

கேற்ப அச்சங்கொண்ட இராவணன் கண்கட்கு இன்பந்தரும் பெண்டிர் கூட்டமும் துன்பந்தரும் வானர சேனையாகமாறிக் காட்சியளித்தது என்றலும் ஆம். மனக்கலக்கத்திற்கு உவமையாக மத்துறு துயரைக் கூறுவது மரபு. 'மத்துறு தண்டயிரிற் புலன் தீக்கதுவக் கலங்கி' (திருவாசகம் - நீத்தல்-30) என்றல் காண்க. இராவணனது உள்ளக் கலக்கத்தின் மிகுதியுணர்த்த 'மத்துவாழ் கடலின் உள்ளம் மறுகுற' என்றார். இரவில் ஒளி மிக்குத் தோன்றும் சந்திரனாக இராவணன் முகங்களை உருவகம் செய்தமையின் அம் முகங்கள் ஒளி மழுங்கச்செய்த காரணத்தால் அன்று இரவு பகலை ஒத்தது என்றார்; பகலில் சந்திரன் ஒளி மழுங்குதல் இயல்பு ஆதலின். கண்களால் காம உணர்ச்சியை எழுப்புதலையே முழுக்கண் வேலால் குத்துவதாகக் கூறினார். முழுக்கண் என்றது,

"கண்ணிற் கியல்பு கசடறக் கிளப்பின்
வெண்மை கருமை செம்மை அகலம்
நீளம் ஒளியென நிகழ்த்துவர் புலவர்"

என்று கூறப்பட்ட அறுவகை இலக்கணம் முழுமையும் நிரம்பியிருத்தலை நினைந்து. (20)

## ஒற்றர்களால் நிகழ்ந்தறிந்த இராவணன் ஆலோசனை மண்டபம் அடைதல்

8972. ஈதிடை யாக வந்தா
ரலங்கன்மீ தேறி னார்போய்
ஊதினர் வேய்கள் வண்டி
னுருவினு ருற்ற வெல்லாம்
தீதிலார் பகைஞ ரென்னத்
திக்கென்ற மனத்தன் றெய்வப்
போதுரு பந்தர் நின்று
மந்திரத் திருக்கை புக்கான்.

ஈதுஇடை ஆக வந்தார்,
அலங்கல் மீதுஏறி னார்போய்
ஊதினர், வேய்கள், வண்டின்
உருவினர், உற்ற எல்லாம்,
'தீதுஇலர், பகைஞர்' என்ன,
திக்கென்ற மனத்தன், தெய்வப்
போதுஉரு பந்தர் நின்று,
மந்திரத் திருக்கை புக்கான்.

பொ :- இந் நிகழ்ச்சிக்கு இடையே ஒற்றர்கள் வண்டின் உருவம் தாங்கினவராய் வந்து இராவணன் மாலைமீது ஏறிப்போய்ப் போராட்டத்தில் நிகழ்ந்த எல்லாவற்றையும் (அவன் செவியில்) ஊதினவர்களாய்ப் பகைவர்கள் மரணமெனும் தீங்கு இலராயினர் என்று கூற திக்கென்ற மனத்தனுகிய இராவணன் கற்பகம் முதலிய தெய்வ மலர்கள் சிந்துகின்ற பந்தலில் இருந்து ஆலோசனைக்குரிய மண்டபத்தில் புகுந்தான்.

கு :- சுட்டு நீண்டது. நான்கனுபுரு தொக்கது. வேய்கள்—ஒற்றர்கள். பகைவர் சேனையில் ஒற்றறிதற்காக வண்டினுருவம் தாங்கிச் சென்றவர்கள், அந்த வடிவத்தோடே மீண்டு வந்து, இங்குள்ளவர் அறியாதபடி இராவணன் மார்பிலணிந்த மாலைமேல் ஏறிச் சென்று காதில் ஊதுவதுபோல அங்கு நிகழ்ந்த எல்லாவற்றையும் சொல்லிப் பகைவர் உய்ந்து தீதிலராய் உள்ளனர் என்பதையும் தெரிவித்தாராக இராவணன் கொதிக்கின்ற மனத்தனாய் இன்பப் பந்தரில் நின்று ஆலோசனை மண்டபத்தை அடைந்தான் என்றவாறு. (21)

# 25. மாயா சீதைப் படலம்

## முன்னுரை

மாயையால் நிருமித்த சீதையை இந்திரசித்து, மருத்து மலையை வைத்துவிட்டு மீண்டுவந்த அநுமன் கண்முன்னே வெட்டியதைத் தெரிவிக்கும் பகுதியாதலின், இது மாயா சீதைப் படலம் எனப் பெயர் பெறுகின்றது. இப் படலப் பெயரில் எல்லாச் சுவடிகளும் மாறுகொள்ளாமல் ஒன்றுபட்டே இருக்கின்றன.

இராவணன் மந்திரசாலைக்குப் போனது அறிந்து, இந்திரசித்து, மகோதரன், மாலியவான் முதலியோரும் அங்குச் சென்று இராவணன் அருகில் அமர்ந்தனர்; இராவணன் தனக்கு நேர்ந்த துன்பங்களை யெல்லாம் தானே அவர்கட்குக் கூறுகின்றான். மாலியவான் எழுந்து 'அநுமன் மருத்துமலையைக் கொணர்ந்ததனால் . பிரமாத்திரமும் பழுதுற்றது, இனி, நம் சேனையெல்லாம் அழிவதற்குத் தடையில்லை. அநுமன் இலங்கை நகர் இருக்கின்ற இக் குன்றினைப் பெயர்த்தெடுத்து தரையில் வீசினால் யார் பிழைப்பார்? மருத்து மலையைக் கொண்டுபோய் வைக்கச்சென்ற அநுமன், வழியிலுள்ள மாமேரு மலையைக் கொணர்ந்து இந்த இலங்கைமேல் இடுவானாயின் அதை நாம் விலக்கமுடியுமா? எனவே, சீதையைக் கொண்டுபோய் அறச் சிந்தனையுடைய இராம இலக்குவர்பால் கொடுத்துவிட்டு அவர்பால் அடைக்கலம் புகுதலே செய்யத் தகுவது. நின்னைவென்ற வாலியை அம்பு ஒன்றினால் வென்று கும்பகருணனையும் கொன்ற இராமனை, நீர்க்குமிழ் போன்ற அரக்கரோ அமரில் வெல்லவல்லவர்? இனி நாம் வெற்றிபெறுவோம் என்பது, வெறும் வார்த்தை' எனக் கூறுகின்றான்.

அவன் சொல்லைக்கேட்ட இராவணன் வெகுண்டு 'அரக்கர்கள் எல்லாம் இறந்தனர் என்றாலும் படைக்கலங்கள் யாவும் கெட்டன என்றாலும், என் வாளேந்திய கை கெடவில்லை யன்றோ? என் கை வலிமையுடன் இருக்கும்போது கிளிபோன்ற சீதையை என் வேட்கை

அழிய விட்டுவிடுவேனோ? யான் அவனைப் பிடித்தது விட்டிட எண்ணினேனோ? பகைவர்க்கு அஞ்சினவர்களெல்லாம் போய் விடுங்கள். யானே சென்று நாளைப் பகைவரை அழிப்பேன்' என் கின்றான்.

இந்திரசித்து எழுந்து, 'யான் சொல்வதைக் கேட்கும் குறிப்பு இருந்தால் சொல்லவேண்டுவது உளது; யான் பிரமாத்திரத்தைப் பூசித்துவிட்டது இராமனை நீக்கி மற்றவர்களைக் கொல்லவேண்டும் என்ற கருத்தாலன்று. அங்ஙனமாகவும், அந்தப் பிரமாத்திரம் இராமன் மேனியைத் தீண்டாமல் மீண்டது. இதனால் இராமன் மானிடன் அல்லன்; தொல்லை வானவனும் அல்லன்; வீடணன், முன்பு மெய்யாகச் சொன்ன பரம்பொருளே; என்பது ஐயமறத் தெளிவாயிற்று. ஆனால், இப்பொழுது பகைவரது பெருமையைப் பற்றிக் கூறிக்கொண்டிருப்பது ஆண்மையன்று. யான் நிகும் பலைக்குச் சென்று வேள்வி செய்தால் நம் துன்பம் முற்றும்' என்று கூறுகின்றான். இராவணன், 'அன்னது நல்லதே! அவ்வாறே செய்க' என்கிறான். 'அங்குச் சென்று வேள்வி செய்வதை நின் தம்பி அவர்க் குச் சொல்லிவிடுவானாயின், அவ் வேள்வி முற்றுப்பெறாது அப் பகை வர் போர் செய்வார்களே என்செய்வது?' என இந்திரசித்து வருந்து கின்றான். 'ஆம்; அவர்கள் அவ்வாறு தடை செய்யாதிருக்க நாம் என்ன உபாயத்தைக் கைக்கொள்ளலாம்?' என இராவணன் வினவு கின்றான்.

இந்திரசித்து சிறிது சிந்தித்து 'சீதையின் உருவமாக மாயை யால் செய்து அனுமன் முன்னே சென்று அவளை வாளினால் கொன்று விட்டு, யான் சேனையோடு அயோத்திமேற் செல்வதாகச் சொல்லிப் போக்குக்காட்டி நிகும்பலைக்குப் போவேனாயின், அவர்கள் செய்வ தறியாது பெருந்துயர் உறுவர். இங்குச் சீதை மாண்டுவிட்டாள் ஆதலின், இனி இங்கு நின்று பயனில்லை; அயோத்தியில் தாய்மாரும் தம்பிமாரும் நகரத்துள்ளோரும் மாளாமல் அங்குச் சென்று தடுக்க லாம் எனச் சேனையோடு போய்விடுவார்கள். அவ்வாறு போக வில்லையாயினும், அனுமனையாவது அனுப்பி அங்குள்ள நிலையை அறிந்தால் அன்றித் துன்பம் தணியமாட்டார்கள். அதற்கிடையில் யான் நிகும்பலை வேள்விமுற்றி வேகமுள்ள கொடிய படையினால் அப் பகைவரைக் கொன்று நினக்கு வெற்றிதருவேன்' என்கின்றான். 'அவ்வாறு செய்தல் நல்லதே' என இராவணன் உடன்பட்டுச் சொல்ல, இந்திரசித்து சீதையின் உருவத்தை அமைக்கும் மாயத்தைச் செய்யச் சொல்கின்றான். இது இங்கு நிகழாநிற்க, அங்குச் சுக்கிரீவன் 'இலங்கையை இப்போதே சுடுவோம்' என்று கூறியதை இராமன் உடன்பட, அவ்வாறே வானரர்களோடு சுக்கிரீவன் கொள்ளியைக்

கையில் கொண்டு இலங்கைக் கோபுரத்தை அடைகின்றான். வானரங்கள் எல்லாம் ஒவ்வோர் கொள்ளிகொண்டு இலங்கைமேல் வீசுகின்றன. இலங்கை எரிகின்றது. இலங்கைவாழ் அரக்கர் அரற்றிக் கொண்டு வெளியே வருகின்றனர். இராமன் விட்ட கணையால் இலங்கைக் கோபுரம் இற்று விழ்கின்றது. இங்கு இவ்வாறு நிகழ்கின்ற போது, மருத்துமலையைக் கொண்டுபோய் வைத்துவிட்டு அனுமன் மீண்டு வருகின்றான்.

மேற்கு வாயிலை அடைந்த அனுமனை இந்திரசித்து நெருங்கி, மாயையால் அமைந்த சீதையின் கூந்தலை ஒரு கையில் பற்றிக் கொண்டு, ஒரு கையில் வாளினை ஏந்திக்கொண்டு, 'இவள் காரணமாகவே நீங்கள் வந்து இங்குப் போர்செய்தீர்கள்; எந்தை இவளை வெறுத்துவிட்டான்; எனவே, இவளை இதோ கொல்கின்றேன்' என்கின்றான். அதுகண்டு அனுமன் உயிர் சோர்ந்து, நாவறண்டு, 'நம் வாழ்வே அழிந்ததுபோலும்!' என, மனம் வெந்து, அவன் கையில் பற்றியுள்ள சீதையை மீட்க வழியறியாதவனாய்த் திகைத்து 'இவனுக்கு நீதி சொல்வதே நேர்மையானவழி' என உணர்ந்து 'பிரமன் மரபில் பிறந்து குணங்களால் சிறந்துள்ள நீ ஒரு பெண்ணைக் கொல்லுதல் பெரும் பழியாகும். என்னிடம் கொடுத்துவிட்டுச் சென்றால் இவ் வுலகம் நின்வயமாகும். இந்தப் பெண்கொலையாகிய புல்லிய செயலைச் செய்யாதே' என்கின்றான். இந்திரசித்து எள்ளிச்சிரித்து, 'இவளைக் கொல்லுவதால் என் தந்தையும் எம்முரவரும் அழியாமல் உய்வர் என்றால், இதைவிடப் புகழான செயல் வேறும் உண்டோ? இவளைக் கொல்வதோடு என் செயல் முடிந்துவிடவில்லை. அயோத்திக்குச் சென்று அங்குள்ளாரை யெல்லாம் அழிக்கப் போகிறேன்' என்று சொல்லிவிட்டுச் சீதையை வாளால் வெட்டி வீழ்த்திவிட்டுப் புட்பக விமானத்தில் ஏறிக்கொண்டு வடதிசை நோக்கிச் செல்வதாகக் காட்டி நிகும்பலைக்குச் செல்கின்றான்.

சீதை கொலையுண்டது கண்ட அனுமன், உணர்வற்று விழ்கின்றான். பின்பு சிறிது தெளிவுற்றுப் பலவாறு புலம்புகின்றான். இந்திரசித்தினைத் தொடர்ந்து அயோதிக்குப் போனால் இராமனுக்கு இத் துன்ப நிகழ்ச்சியை அறிவிப்பார் இல்லையாதலின், தானே சென்று தெரிவித்துப் பின் இராமன் கருத்தறிந்து செயற்படலாம் எனத் துணிந்து இராமனை அடைந்து நடந்ததை மெல்ல அறிவிக்கின்றான். அது கேட்ட இராமன் கொண்ட துன்பத்திற்கு அளவு இல்லை. வானரத் தலைவர்கள் எல்லாம் பெருந்துயர்கொண்டு இராமன் திருவடியில் வீழ்கின்றனர். இலக்குவனும் உணர்வற்று வீழ்கின்றான். வீடணனும் இந்திரசித்து அவ்வாறு செய்திருக்கலாம் என ஐயுற்று வருந்துகின்றான். உணர்வற்றுக் கிடக்கும் இராமனைத் தேற்ற எண்ணி அவன் முகத்தில் குளிர்ந்த நீர் தெளித்தும் விசிறிகொண்டு வீசியும்

அவனைத் தெளிவிக்கின்றான். இலக்குவனும் சிறிது தெளிந்து எழுந்து இராமன் துயரை மாற்றப் பலபல சொல்லிச் சீதையைக் கொன்ற பாவியரைக் கொல்லாமல் துன்பத்தால் நம்முயிரை மாய்த்துக்கொள்ளுதல் தக்கதன்று என்கின்றான். சுக்கிரீவன் இலக்குவனுடைய வீர வார்த்தைகளைக் கேட்டுக் கனவுகண்டு எழுபவன்போல வீரத்தோடு எழுந்து 'அரக்கன் மார்பிற்போய்க் குதிப்போம் வாருங்கள்' என்று முற்பட, அப்போது அனுமன் அயோத்திமேல் இந்திரசித்து போன செய்தியைத் தெரிவிக்கின்றான். அதைக் கேட்டதும் இராமன் சீதை இறந்த செய்தியை மறந்து அயோத்தியில் உள்ளவர்க்கு நேர்ந்த துன்பத்தை நினைந்து மிகவும் வருந்தி, 'அயோத்திக்குச் சென்று அரக்கனை அழித்தபின்பு இலங்கையை வெல்வேன். அங்கு விரைந்துசெல்ல வழியுண்டோ?' என வினவுகின்றான். அனுமன் தன் தோள்மேல் ஏறிக்கொண்டால், புட்பக விமானத்திற்குமுன் அயோத்திக்குச் செல்லவியலும் என்று கூற, இராம இலக்குவர் அவ்வாறே ஏறிக்கொள்ள முற்படுகின்றனர். அப்போது வீடணன் எழுந்து 'இந்திரசித்தின் செய்கை மாயையாக இருக்கலாம் என எண்ணுகின்றேன்; யான் சென்று உண்மை யறிந்துவந்து சொன்னபின் ஏற்றது செய்யலாம்' எனச் சொல்லிவிட்டு வண்டின் வடிவுகொண்டு அசோக வனத்திற்குச் சென்று அங்குச் சீதை இனிதேயிருப்பதை அறிந்து, மகிழ்ந்து வந்து அச் செய்தியை இராமனுக்குத் தெரிவித்துவிட்டு இவ்வாறு மாயைச் செயலால் நம்மை ஏமாற்றி இந்திரசித்து நிகும்பலை வேள்விசெய்யச் சென்றிருக்கின்றான் என்று கூறுகின்றான். யாவரும் மகிழ்ந்து ஆரவாரிக்கின்றனர் என்பது இப் படலத்துக் கூறப்படுகின்றது.

## வான்மீகத்தோடு கம்பர் வேறுபடும் இடங்கள்

1. **வான்மீகத்தில்:** இந்திரசித்து தன்னைக் கொல்ல இராமன் உபாயம் சிந்திப்பதை உணர்ந்து இலங்கைக்குள் புகுந்து, இறந்துபட்ட அரக்கர்களையெல்லாம் நினைந்து சினந்து கண் சிவந்து, இராம இலக்குவரை மாயையால் கலங்கச் செய்து விட்டு, நிகும்பலையில் வேள்வி செய்து முடித்துப் பெருவலி பெற்று அவரை அழிக்கலாம் என எண்ணி அரக்கர் சேனை சூழ மேலைவாயில் வழியாகப் போர்க்குப் புறப்படுகின்றான். மேலை வாயிலில் வானர சேனை சூழ இருந்த அனுமன், அந்த இந்திரசித்தோடு போர்செய்ய நெருங்கும்போது (மாயையால் உண்டாக்கிய) சீதை அவன் தேர்மேல் ஒருபக்கத்து இருந்து 'இராம இராம' என்று கூறிக்கொண்டு புலம்புவதைக் காண்கின்றான். அவ்வாறு புலம்பும் சீதையை இந்திரசித்து அனுமன் காணக் கூந்தலைப் பற்றி இழுத்து, 'இவளை வாளால் வெட்டி வீழ்த்தப்

போகின்றேன்; இவள் காரணமாகவே நீங்கள் இங்குவந்து போர் செய்கின்றீர்கள்; இவளை வெட்டிவிட்டு உங்களையும் அழிக்கப்போகிறேன்' என்று சொல்ல, அனுமன் அவனைப் பலவாறு பழித்துக் கூறுகின்றான். இந்திரசித்து அப் பழிச் சொற்களையெல்லாம் பொருட்படுத்தாது சீதையைக் கொன்று விட்டு, வானர சேனையை அழிக்கத் தொடங்க, அனுமன் அவனோடு நெடிது போர்செய்துவிட்டு 'சீதை இறந்தபின் இவனோடு போர்செய்து பயன் என்னை? இந் நிகழ்ச்சியை இராமனுக்கும் சுக்கிரீவனுக்கும் தெரிவிப்பதே நல்லது' எனச் சென்றதாகவும், அப்போது இந்திரசித்து நிகும்பலைக்குச் சென்று வேள்வி செய்ய முற்பட்டதாகவும் உள்ளது.

கம்பர்: மருத்துமலையைக் கொண்டுபோய் வைத்துவிட்டு மீளும் அனுமன்முன் மேற்கு வாயிலில் இந்திரசித்து, சீதையின் கூந்தலை ஒரு கையில் பற்றிக்கொண்டு, ஒரு கையில் வாளை ஏந்திக் கொண்டு வந்து நின்று சீதையைக் கொல்லப்போவதாகச் சொல்ல, அனுமன் கலங்கி, அவனைப் புகழ்ந்து நீதிகள் பல கூறி அச் சீதையைச் கொல்லாமல் தன் கையில் ஒப்புவிக்குமாறு வேண்டியதாகக் கூறுகின்றார். அனுமன் இந்திரசித்தினைப் பழித்துக் கூறியதாகக் கூறவில்லை; இந்திரசித்து தேரில் வந்ததாகவோ, அத் தேரில் சீதை 'இராம! இராம!' என்று புலம்பிக் கொண்டிருந்ததாகவோ கூறவில்லை. 'உண்மையாய்! அருளாய்' எனச் சீதை இந்திரசித்தினை வேண்டிக்கொண்டதாகவே கூறியுள்ளார். அனுமன் வானர சேனையோடு சென்று இந்திரசித்தோடு மேற்கு வாயிலில் போர்செய்ததாகக் கூறவில்லை. இந்திரசித்தின் போர்க்கு ஆற்றாது வானரப்படை ஓடிய செய்தியும் சொல்லவில்லை. இந்திரசித்தனை வெல்லமுடியாத நிலையில் அனுமன், இராமன்பால் சென்றான் என்பது அவன் பெருமைக்கு ஏலாது எனக் கருதி இங்ஙனம் மாற்றினார்போலும்.

இந்திரசித்து, சீதையைக் கொன்றபின் புட்பகவிமானத்தில் அயோத்திக்குச் சென்று அங்குள்ளாரை அழிப்பதாகச் சொல்லிப் புறப்பட்டுப் பின் நிகும்பலைக்குச் சென்றதாகக் கூறிய நிகழ்ச்சி, கம்பரின் கற்பனையே யாகும். வான்மீகத்தில் இல்லை. சீதையின் இறப்பைக் கேட்டு இராமன் படும் பெருந்துயரை மாற்றி, அவனுக்கு வீரவுணர்ச்சியை யுண்டாக்குவதாக இந் நிகழ்ச்சி அமைந்துளது. மேலும், சீதைபால் கொண்ட காதலினும் இராமனுக்கு அயோத்தியிலுள்ள தம்பியர்மேல் கொண்ட அன்பு பெரிது என்பதைக் காட்டவும் உதவுகின்றது. ஒரு பெருந்துன்பத்தைத் தாங்கமாட்டாது வருந்துகின்ற பொழுது அதனினும் பெருந்துன்பம் அடுத்துவர, அதனால் முன்னைத் துன்பம் மறந்து துடிக்கும் இராமன்பால்

அவலச்சுவையும் பெருமிதச் சுவையும் வெகுளிச் சுவையும் அடுத்து அடுத்துத் தோன்றச்செய்து கதைப் போக்கினைச் சுவைமிக்க தாக்கி யுள்ளது.

மருத்து மலையைக் கொணர்ந்து, இறந்த வானரர்களையெல்லாம் உயிர்பெற்றெழச் செய்துவிட்டு, அம் மலையைக் கொண்டுபோய் வைத்துவிட்டு மகிழ்ச்சியோடு மீளும் அனுமன்முன் இந்திரசித்து சீதையை வெட்டி வீழ்த்திவிட்டு அயோத்திமேற் செல்வதாகச் சொல்லிச்சென்ற நிகழ்ச்சி உவகைச் சுவையை மாற்றித் துடும் என அவலச் சுவையை யுண்டாக்கியது, நாடகக் காப்பியத்திற்கு நல்லழகு தருவதாக அமைந்துளது. இராமனுக்குயிர்போன்றுள்ள சீதையைத் தன் கண்முன் இந்திரசித்து கொல்லக்கண்டும் அவ் விந்திரசித்தோடு போர் செய்தான் என்பது, அனுமனுடைய அன்பு சால் நெஞ்சிற்குப் பொருத்தமான செயல் அன்று ஆதலின், அந்தக் கொலை நிகழ்ச்சியைக் கண்ட அனுமன் உணர்வற்று வீழ்ந்ததாகவும், பின்பு தெளிந்து இந்திரசித்தினைத் தொடர்ந்து அயோத்திக்குப் போக நினைந்து, அவ்வாறு போனால் இராமனுக்கு இச் செய்தியைத் தெரிவிக்க இயலாது என்று கருதி, இராமனை அணுகிச் சீதை கொலை யுண்ட செய்தியை அரிதில் புலப்படுத்தியதாகக் கம்பர் மாற்றி அமைத்துக் கதைப்போக்கினை அழகு செய்துள்ளார்.

2. **வான்மீகத்தில் :** மேற்கு வாயிலில் அனுமன் இந்திரசித்தோடு போர் செய்து கொண்டிருந்தபோது, வானரர்க்கும் அரக்கர்க் கும் நிகழும் போரின் பேரொலியை இராமன் கேட்டு, அங்குத் துடும் என வந்த சாம்பனை நோக்கி 'அனுமன் பெரும்போர் செய்வதாகத் தோன்றுகின்றது; அவனுக்கு உதவியாக நீ சேனை யோடு செல்க' எனப் பணித்தானாக, அவ்வாறு சாம்பன் சென்றபோது அனுமன் எதிர்வரக் கண்டு திரும்பி எல்லோரு மாகச் சேர்ந்து இராமனை அடைந்தார்கள் என்று உள்ளது.

**கம்பர் :** அனுமன் போர் செய்ததாகவே கூறுமையால், சாம்பன் துணைக்குச் சென்று வாளா மீண்ட நிகழ்ச்சியைக்கூற இடமில் லாது போயது. சுக்கிரீவன் கருத்தின்படி இராமன் உடன்பாடு பெற்று வானரங்கள் கொள்ளிகொண்டு இலங்கையை எரியூட் டிய செய்தி கம்பரின் கற்பனையேயாகும். வான்மீகி கூறவில்லை.

3. **வான்மீகத்தில் :** சீதை கொலையுண்ட செய்திகேட்டுப் பெருந்துயர் உறுகின்ற இராமனை இலக்குவன் தேற்றிக்கொண்டு இருக்கும் போது வீடணன், வானர சேனைகளைத் தத்தம் தொழிலைச் செய்யு மாறு ஏற்பாடு செய்துவிட்டு அங்கு வந்து, யாவரும் கண்ணீ ருடன் இருப்பதையும், இலக்குவன் துடைமீது இராமன் புலம்பிக்

கொண்டு படுத்துக்கிடப்பதையும் கண்டு, 'இதுவென்?' என்று வினவ, இலக்குவன் நிகழ்ந்ததைக் கூறுகின்றான். அரக்கர் தம் இயல்பை நன்குணர்ந்த விடணன் 'இதுவெல்லாம் மாயச் செயல்;' சீதையை விடுதற்கே விரும்பாத இராவணன், அவளைக் கொல்லுமாறு விடுவானோ? இந்திரசித்து வானரர்களை ஏமாற்றிவிட்டு நிகும்பலைக்குப் போய் வேள்வி தொடங்கி யுள்ளான்; அவன் வேள்வியை முற்றுமுன் அவனைப் போர்க்கு அழைத்தால் அயன்கொடுத்த வரத்தின்படி அவன் கொல்லு தற்கு எளியனுவான். காலம் தாழ்த்தாது இலக்குவனை என்னோடு அனுப்புக, அவன் வேள்வியை நிறைவேற்றி விட்டால் தேவர்களாலும் அவனைக் கொல்லமுடியாது' என்று கூறியதாக உள்ளது.

**கம்பர்:** இந் நிகழ்ச்சியைச் சிறிது மாற்றியமைத்து நாடகக் காப்பியத்தை நயப்படுத்தியுள்ளார். அனுமன் சொன்னது கேட்டு வருந்தி உணர்வற்றிருக்கும் இராமனுக்கு வீடணனே குளிர்ந்த நீர் தெளித்தல் முதலியன செய்து, அவன் பாதங்களை வருடி உணர்வுபெறச் செய்தான் என்றும், இராமனுக்கு நேர்ந்துள்ள பேரிடரைக் கண்டு கொண்ட வருத்தத்தால், அனுமன் சொல்லியன யாவும் நிகழ்ந்திருக்கும் என ஆராயாது முன்பு நம்பியிருந்தான் என்றும், பின்பு அயோத்திமேற் சென்ற இந்திரசித்தினைக் கொல்லுதற்கு விரைந்து செல்ல வேண்டி அனுமன் தோள்மேல் இராம இலக்குவர் ஏறும்போது துடும் என உய்த்துணர்ச்சி வரப்பெற்ற விடணன் இந்திர சித்தின் இச் செயல்கள் மாயமாக இருக்கலாம் என எண்ணு கின்றேன்; இதை யானே நேரிற் சென்று கண்டு வந்தபின் ஏற்றது செய்யலாம் எனக்கூறி, வண்டின் உருவங்கொண்டு அசோக வனத்திற்குச் சென்று சோகத்தளாய சீதை இனிதிருக் கக்கண்டு மகிழ்ச்சிகொண்டு மீண்டு வந்து, இராமனுக்குச் சீதை இனிதே இருப்பதைக் கூறினுன். நம் சிந்தனையை வேறுபக்கம் திருப்பவே இந்திரசித்து மாயா சீதையை வதைத்து அயோத்திக் குச் செல்வதாகப் போக்குக்காட்டி நிகும்பலைக்குச் சென்று வேள்வி செய்கின்றான். இப்போதே இலக்குவனை என்னுடன் அனுப்புக! வேள்வி முடியுமுன் அவனைப் போருக்கு அழைத்துப் பொருது அழித்துவிடலாம் எனக்கூறினுன் என்றும் கம்பர் கூறியுள்ளார்.

விடணன் வண்டின் உருவங்கொண்டு அசோக வனத்திற்குச் சென்று சீதை உயிருடன் இருப்பதைக் கண்டுவந்தபின் இந்திர சித்தின் செயல் மாயம் என்று சொல்லியதாக வான்மீகி கூறவில்லை.

அரக்கர் இயல்பை அறிந்திருந்த பழக்கத்தினுல் இந்திரசித்தின் செயல் மாயச் செயல் என்று சொல்லியதாகவே கூறியுள்ளார்.

சீதை இந்திரசித்தால் கொலையுண்ட செய்தியைக் கேட்டவுடன் விடணன் உண்மை என்று நம்பி வருந்திப் பின் அயோத்திக்கு விரைந்து செல்லவேண்டி அனுமன் தோள்மேல் இராம இலக்குவர் ஏறும்போது துடும் என உய்த்துணர்ச்சி பெற்று, 'இந் நிகழ்ச்சி இந்திரசித்தின் மாயச் செயலாக இருக்கலாம் எனத்தோன்றுகின்றது' என்று கூறி, அது உண்மை என்பதை நேரிற் கண்டு வந்து கூறியதாகக் கம்பர் அமைத்தது இக்கதைப் போக்கினை மேலும் சுவைமிக்கதாக ஆக்கியுள்ளமை காணலாம். இத்தகைய சுவை நல முதிர்ந்த மாற்றங்களைச் செய்வது வழிநூல் செய்யும் புலவர்க்குரிய உரிமைச் செயலேயாகும்.

## படலப் பொருட் சிறப்பு

### சுவைநலம்

இந்த மாயா சீதைப் படலம் அழுகைச் சுவையும் பெருமிதச் சுவையும் விரவிய படலம் எனலாம். இந்திரசித்தின் பிரமாத்திரத்தால் இராமன் முதலியோர் இறந்துவிட்டதாக எண்ணிக் களியாட்டத்தில் மகிழ்ந்த இராவணன் அப் பகைவர் யாவரும் அனுமன் கொணர்ந்த மருத்துமலையால் உயிர்பெற்றனர் என்பதை யுணர்ந்து துன்புற்றுத் தன் சூழ்ச்சித் துணைவர்க்குக் கூறும் நிலையும், அவன் துன்பநிலை கண்ட மாலியவான், அத் துன்பத்தை மிகுதிப்படுத்து முறையில் அறிவுரை கூறுவானுய், அனுமனுடைய ஆற்றலையும் இராமனது பெருமையையும் புலப் படுத்தி அவனைச் சரணடைவதே நன்றெனக் கூறும் நிலையும், இந்திரசித்தும் மாலியவான் சொல்லியதை யுடன்படுத்தி இராமனது பெருமைகூறும் நிலையும் அரக்கர்களின் அவலச் சுவைக்கு அடையாளங்களாதல் காணலாம்.

இந்திரசித்து கொன்றது உண்மையான சீதையையே என வஞ்சனையறியா நெஞ்சத்தால் நினைந்த அனுமன் படும் அல்லலும், இராம இலக்குவரும் வானர சேனையும் படும் அல்லலும், அவலச் சுவையின் உச்ச நிலையாக விளங்குதல் காணலாம்.

மாலியவான் சொல்லைக்கேட்டு இராவணன் வெகுண்டு பேசும் பேச்சும், இந்திரசித்து அனுமன்முன் சீதையை வெட்டிவிழ்த்தி விட்டு அயோத்திக்குப் போவதாகக் காட்டிப் பேசும் பேச்சும், அதனை உண்மை என நினைந்து இராமன் பேசும் பேச்சும், இலக்குவன் பரதனுடைய ஆற்றலைப் புலப்படுத்தும் பேச்சும் பெருமிதச் சுவையை— வீரச்சுவையைப் புலப்படுத்துதல் காணலாம்.

### மாலியவான்

இராவணன் தனக்கு நேர்ந்துள்ள துன்பநிலையைத் தன் சூழ்ச்சித் துணைவர்க்குக் கூறியபொழுது மாலியவான் கூறும் அறிவுரைகள் உண்மையும் உயர்வும் உடையவை. இராவணனை உய்விக்கவேண்டி அநுமனுடைய ஆற்றலை மிக உயர்த்திக்கூறி அவனை அச்சுறுத்து வதும், 'இனியேனும் அறந்தரு சிந்தையோரை அடைக்கலம் புகுதும்' என்று தன் முடிவை முடிவில் தெரிவிப்பதும் அவன் தூய உள்ளத் தையும், தன்னுயிர்க்குறுதி யெண்ணாது தலைமகன் வெகுள்வான் என்பதுணர்ந்தும் அஞ்சாது அவனுக்கு உறுதிபயக்கும் சொற்களைச் சொல்லும் அவனது துணிவுடைமையையும் புலப்படுத்துவனவாகும்.

### இந்திரசித்து

மாலியவான் சொல்லைக்கேட்டு வெகுண்டு இராவணன், 'மைந்தன் என்? மற்றையோர் என்? அஞ்சினிர் உய்ந்து போமின்' என்று கூறித் தன்னாற்றலைப் படுத்தியபோது இந்திரசித்து எழுந்து கூறும் சொற்கள், தன் அநுபவத்தால் உணர்ந்த உண்மையும் உறுதியும் புலப்படுத்தும் உயரிய சொற்களாக விளங்குகின்றன. தான் பூசித்துவிட்ட அயன்கணை எல்லோரையும் கொன்று இராமனைமட்டும் ஒன்றும் செய்யாது விடுத்தமையால் அவன் மனிதன் அல்லன்-என்பதையும், 'வீடணன் மெய்யிற் சொன்ன யானென தெண்ணல் தீர்ந்தார் எண்ணுறும் ஒருவன்' என்ன ஐயமறத் தான் தெளிந்ததையும் இராவணன் தெளிய உரைக்கின்ற துணிவுடைமையை நோக்கினால் அவனது உயர்ந்த ஞானமும் துணிவும் புலப்படும். இவ்வகையில் இந்திரசித்து வீடணனை ஒக்கின் றான் என்னலாம். பரம்பொருளாகிய இராமனை வெல்ல இயலாது என்ற முடிவை உணர்ந்தவனாயினும், தன் தந்தையின் துயர்தீர்க்கத் தன்னாலியன்ற வஞ்சனை செய்தேனும் முயல எண்ணி, 'நிகும்பலை விரைவி னெய்தி துணியறு வேள்வி வல்லை யியற்றினால் முடியும் துன்பம்' என்று இராவணனுக்குக் கூறுகின்றான். இதனால், இந்திரசித்து இராமன் பரம்பொருளே என்பதை உணர்ந்தவன் ஆயினும், அவனைச் சரணடைந்து உயிர்வாழ எண்ணவில்லை. தன் தந்தை இராவணனுக்கு உற்ற துன்பம் தீர்க்கும் நெறியில் முயன்று உயிர்விடவும் துணிந்துள்ளான் என்பதுணரலாம். இத்தகைய அவன் உரிமை அன்பும் கடமையுணர்ச்சியும் பாராட்டற்கு உரிய வாகும். இவ் வகையில் இந்திரசித்து கும்பகருணனை ஒத்தவன் ஆகின்றான் என்பது தெளிவு.

இந்திரசித்து பகைவெல்லும் சூழ்ச்சித்திறன்மிக்கவன்என்பதைக் கம்பர் இப் படலத்து நன்கு புலப்படுத்தியுள்ளார். மாயையால் சீதை

வடிவை வகுத்து அவள் தன்மையை அறிந்த அனுமனுக்கு முன் வாளால் வெட்டி விழ்த்திஞல் என்ன என்ன நிகழும் என்று இராவண னுக்கு இந்திரசித்து சொன்ஞனே அவையெல்லாம் அவன் சொன்ன படியே நிகழ்கின்றன.

“ இத்தலைச் சீதை மாண்டாள் பயனிவண் இல்லை என்பார்,
அத்தலைத் தம்பிமாரும் தாயரும் அடுத்துளோரும்
உத்தம நகரும் மாளும் என்பதோர் அச்சம் ஊன்ற,
பொத்திய துன்பம் மூளச் சேனையும் தாமும் போவார்”

என எதிர்காலத்து நிகழப்போவதாக இந்திரசித்து கற்பனை செய்து கூறியபடியே இராம இலக்குவர், சீதை கொலையுண்டமைக்கு முன் வருந்தினமையும் பின் அவ் வருத்தம் மறந்து அயோத்திக்கு விரைந்துசென்று அவர்களைக் காக்கவேண்டி அனுமன் தோள்மேல் ஏறத் தொடங்கியதையும் நோக்கலாம். அது போலவே,

‘உம்பிகூற நண்ணலார் ஆண்டு நண்ணி முன்னிய வேள்வி முற்ருவகை செரு முயல்வர்” என அவன் கூறியபடியே வீடணன் ஐயுற்று அசோகவனம் சென்று, சீதையைக் கண்டதோடு அரக்கர் பலர் நிகும்பலை நோக்கிச் செல்வதுகண்டு இந்திரசித்து நிகும்பலையில் வேள்வி செய்கின்ருன் என்பதை அனுமானித்து இராமனுக்குக் கூறு வதையும் அவன் கூறியபடியே இலக்குவன் நிகும்பலைக்குச் சென்று அவன் வேள்வி முற்ருதபடி போர்செய்தது காணலாம். இதனுல் பகைவர்கள் என்னசெய்வார்கள் என்பதை முன்னரே உய்த்துணர்ந்து செயல்படும் சூழ்ச்சித்திறன் இந்திரசித்துக்கு மிக்கிருந்தது என்பது புலனும்.

### ஓசை நயம்

சுக்கிரீவன் எண்ணப்படி குரங்குகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு கொள்ளியைக் கையில்கொண்டு இலங்கையை எரியூட்டிய நிகழ்ச்சி யைக் கூறும்போது அக் குரங்குகள் உள்ளக் கிளர்ச்சியோடு குதித்துக்கொண்டு செல்வதுபோன்ற உணர்ச்சி தோன்றுமாறு சந்தம் அமைத்துக் கம்பர் பாடுகின்ருர்.

ஆசைகள் தோறும் அள்ளின கொள்ளி
மாசறு தானை மர்க்கட வெள்ளம்
நாசமிவ் வூருக் குண்டென நள்ளின்
வீசின வானின் மீன்விழ லென்ன

என்ற செய்யுளை ஓசைநயத்தோடு படித்தால் அந்த உணர்ச்சி தோன்றும். கம்பர் கதை நிகழ்ச்சிக்கு ஏற்ற சந்தம் அமைத்துச் செய்யுள் செய்து சுவையூட்டுவதில் திறமிகப் படைத்தவர் என்பது இதனால் புலனும். இதே சந்தத்தில் இந்திரசித்து வீரமொழி பேசிச் சீதையை வாள்கொண்டு வெட்ட முற்படுவதையும், அதுகண்ட அனுமன் மனம் அழிந்து நீதிமொழி பேசி.இரந்து வேண்டுவதையும், அவ் வேண்டுகோட்கு இணங்காது சீதையை வாளால் வெட்டி விட்டுப் புட்பகமேறி அயோத்தி நோக்கி விரைவதாகக் காட்டிய இந்திரசித்தின் வஞ்சனைச் செயலையும் அமைத்துக் கூறியுள்ள அழகு படித்துப்படித்து இன்புறத்தக்கவை.

## 25. மாயா சீதைப் படலம்

### இந்திரசித்து முதலியோர்க்கு இராவணன் நேர்ந்துள்ள நிலைமையைச் சொல்லுதல்

8973. மைந்தனு மற்று ளோரு
மகோதரன் முதலோ ராய
தந்திரத் தலைமை யோரு
முதியருந் தழுவத் தக்க
மந்திர ரெவரும் வந்து
மருங்குறப் படர்ந்தார் பட்ட
அந்தர முழுதுந் தானே
யணையவர்க் கறியச் சொன்னான்.

மைந்தனும் மற்று ளோரும்
மகோதரன் முதலோர் ஆய
தந்திரத் தலைமை யோரும்,
முதியரும், தழுவத் தக்க
மந்திரர் எவரும், வந்து,
மருங்குஉறப் படர்ந்தார்; பட்ட
அந்தரம் முழுதும் தானே
அணையவர்க்கு அறியச் சொன்னான்.

பொ :- தன் மகனாகிய இந்திரசித்தும், மகோதரன் முதலிய சேனைத்தலைவரும், முத்தோராகவுள்ள பெரியோர்களும், ஏற்றுக் கொள்ளத்தக்க ஆலோசனையாளர் எவரும், மற்றவர்களும் வந்து தன் பக்கத்தில் நெருங்கிச் சேர்ந்தார்கள் ; (அப்போது) இராவணன் தானே நேர்ந்துள்ள துன்ப நிலைமை முழுவதையும் அவர்கட்கு விளங்கச் சொன்னான்.

கு :- மைந்தன் என்றது, இந்திரசித்தினை. தந்திரம்—சேனை. மந்திரர்—ஆலோசகர். எல்லோராலும் ஏற்றுக்கொள்ளத்தக்க ஆலோசனை கூறவல்லார் என்பார், 'தழுவத்தக்க மந்திரர்' என்றார். அனுபவத்தால் பலவுண்மைகளைக் கூறவல்லோர் முதியவர்களே ஆதலின், அவரையும் இங்குச் சேர்த்துக் கூறினர். அந்தரம்—துன்பம். மேல், களியாட்டின் இறுதியில் இராவணன் மந்திர இருக்கை புக்கான் என்பது கேள்வியுற்ற இந்திரசித்து முதலியோர் தாமும் அவ் விராவணன் குறிப்பறிந்து வந்துற்றனர் எனவும், அங்ஙனம் வந்துற்ற ஆலோசனைக்குரியவரிடம் இராவணன் நேர்ந்துள்ள துன்பநிலையைத் தானே விளக்கினன் எனவும் கொள்க. மந்திரர் எவரும் மற்றுளோரும் எனப் பின்னர்க் கூட்டுக. (1)

## மாலியின் அறிவுரை 8974—8980

8974. நங்கிளை யுலந்த தெல்லா
முய்ந்திட நணுகு மன்றே
வெங்கொடுந் தீமை தன்னால்
வேலையி லிட்டி லேமேல்
இங்குள வெல்லா மாடற்
கினிவரு மிடையூ றில்லை
பங்கயத் தண்ணன் மீளாப்
படைபழு துற்ற பண்பால்.

நம்கிளை உலந்தது எல்லாம்
உய்ந்திட நணுகும் அன்றே,
வெங்கொடும் தீமை தன்னால்
வேலையில் இட்டிலேமேல் ?
இங்குள எல்லாம் மாள்தற்கு
இனிவரும் இடையூறு இல்லை;
பங்கயத்து அண்ணல் மீளாப்
படை பழுதுற்ற பண்பால்.

பொ :- (அது கேட்ட மாலியவான் இராவணனை நோக்கி) மிகக் கொடிய தீய எண்ணத்தால் கடலில் கொண்டுபோய்ப் போடாமல் இருந்தால், அழிந்துபோன தம் சேனை முழுவதுங்கூட உயிர் பெற்றெழ வாய்த்திருக்கும் அல்லவோ ? (அவ்வாய்ப்பையும் இழந்து

விட்டோமே.) கொன்றன்றி மீளாத பிரமாத்திரமே பழுதடைந்து விட்ட தன்மையால் இனி இங்குள்ள சேனை எல்லாம் மாள்வதற்கு பொருந்தும் தடை ஏதும் இல்லை.

கு :- அனுமன் கொணர்ந்த மருத்துமலையால் பகைவர் சேனை உயிர்பெற்றெழுந்தது போலவே, பகைவரால் மாண்ட நம் சேனையும் அம்மலையால் உயிர்பெற்று உய்ந்திருக்கும்; அதையும் நாமே கெடுத்துக் கொண்டோம் என்பது மாலியவான் கருத்து. இராமனும் அவன் சேனையுமே மாண்டுகிடப்பதாகச் சீதை நினைக்க வேண்டி இராவணன், அரக்கர் பிணங்களைக் கடலில் கொண்டுபோய்ப் போடு மாறு மருத்தனுக்குக் கட்டளையிட்டதையே இங்கு 'வெங்கொடுந் தீமை தன்னால்' என்று குறிப்பிட்டான். வேலையி லிட்டி லேமேல் உலந்ததாகிய நம் கிளையெல்லால் உய்ந்திட நணுகும் அன்றே என இயையும். பகைவர் சேனை பிரமாத்திரத்தால் இறந்தும் மீண்டும் மருத்துமலையால் உய்ந்துவிட்டமையால், இனிப் பிரமாத்திரம் கொண்டு இங்குள்ள சேனயை மாளாமல் காக்கலாம் என்பதற்கு இடமில்லை என்பான் 'இங்குள வெல்லாம் மாள்தற்கு இனிவரும் இடையூறு இல்லை' என்றான். இடையூறு—தடை. பகைவர் சேனை நம் சேனையை யழிப்பதற்குத் தடையாக இருந்த பிரமாத்திரமும் பழுதுற்றமையால் இனி நம்சேனை பகைவர் சேனையால் எளிதில் அழியும் என்றவாறு. (2)

8975. இலங்கையி னின்று மேரு
பிற்பட விமைப்பிற் பாய்ந்து
வலங்கிளர் மருந்து நின்ற
மலை யொடுங் கொணர வல்லான்
அலங்கலந் தடந்தோ ளண்ண
லனுமனே யாதல் வேண்டும்
கலங்கலி லுலகுக் கெல்லாங்
காரணங் கண்ட வாற்றால்.

இலங்கையின் நின்று, மேரு
பிற்பட, இமைப்பில் பாய்ந்து,
வலம்கிளர் மருந்து, நின்ற
மலையொடும் கொணர வல்லான்
அலங்கல்அம் தடந்தோள் அண்ணல்
அனுமனே ஆதல் வேண்டும்—
கலங்கல்இல் உலகுக்கு எல்லாம்
காரணம் கண்ட ஆற்றால்.

பொ :- (நாம் நூல்களாற்) கண்ட நெறியால் (பார்க்கும்போது) இலங்கையினின்றும் மேருமலையும் பிற்பட இமைப்பொழுதில் பாய்ந்துசென்று, வலிமை விளங்கும் மருந்தினை அது நின்ற மலையோடும் கொணர வல்லவனாகிய, மாலையணிந்த அழகிய பெரிய தோளினையுடைய பெருமைமிக்க அனுமனே உலகுக்கு எல்லாம் கலங்குதல் இல்லாத காரணப்பொருளாகிய கடவுள் ஆதல் வேண்டும்.

கு :- கலங்கலில் காரணம் என்க. காரணம் ஆதல் வேண்டும் என இயையும். கண்டவாறு என்றது, நூல்களால் அறிந்த நெறியினை. இத்தகைய ஆற்றல் உலக காரணனுக்கல்லது இல்லை என்பதை நூல்களால் உணர்ந்தவனாகலின், கண்டவற்றால், இலங்கையினின்று மேரு பிற்பட இமைப்பிற் பாய்ந்து மருந்துநின்ற மலையொடுங் கொணர வல்லானாகிய அனுமனே உலகுக்கெல்லாம் கலங்கலில் காரணம் ஆதல் வேண்டும் என ஆகம அளவைகொண்டு நிறுவியவாறு. காரணம் என்றது, காரணமாக உள்ள கடவுளை. ஐயமின்றித் தெளிந்த காரணப்பொருள் என்பான் 'கலங்கல் இல் காரணம்' என்றான். இராமனும் அனுமன் சொல்லைக் கேட்டவுடன், ''மாணியாம்படிவ மன்று மற்றிவன் வடிவமைந்தஆணியிவ் வுலகுக் கெல்லாம் என்னலாம்'' (கிட்கிந்தா—அனுமப்—21) என முன்னர் வியந்து கூறியுள்ளதும் நினைக. இறந்தவரை யெழுப்புகின்ற வலிமை விளங்குகின்ற மருந்து என்பான், வலங்கிளர் மருந்து என்றான். (3)

8976. நீரினைக் கடக்க வாங்கி
யிலங்கையாய் நின்ற குன்றைப்
பாரினிற் கிழிய வீசி
ஞருளர் பிழைக்கற் பாலார்
போரினிப் பொருவ தெங்கே
போயின வனுமன் பொன்மா
மேருவைக் கொணர்ந்திவ் வூர்மே
லிடுமெனின் விலக்க லாமோ.

'நீரினைக் கடக்க வாங்கி,
இலங்கையாய் நின்ற குன்றைப்
பாரினில் கிழிய வீசின்,
ஆர் உளர், பிழைக்கற் பாலார்?

போரினிப் பொருவது எங்கே?
போயின அனுமன் பொன்மா
மேருவைக் கொணர்ந்து, இவ்ஊர்மேல்
இடும்எனின், விலக்கல் ஆமோ?

பொ :- இலங்கை நகராக நின்றுள்ள குன்றினை, அதைச் சூழ்ந்துள்ள கடல்நீரினைக் கடக்குமாறு பறித்து எடுத்துப் பூமியின்மேல் கிழியுமாறு எறிவானாயின், உயிர்பிழைத்தற்குரியோர் இங்கு யார் உளர்? (இதையும் செய்யவல்லன் அனுமன் என்றபடி) இனிப் போர் செய்வது எங்கே? மருந்துமலையை வைத்துவிட்டுவரப் போயுள்ள அனுமன், பொன்மயமான மேருமலையைக் கொணர்ந்து இந்த ஊர் மேல் போடுவானாயின் அதைத் தடுக்க இயலுமோ?

கு :- மருந்துமலையைப் பெயர்த்தெடுத்துவந்த அனுமனுக்கு இலங்கை நகரம் கட்டப்பட்டுள்ள திரிகூடமலையைப் பறித்துத் தரைமேல் எறிவதும், மேருமலையைக் கொணர்ந்து இலங்கைமேல் வீசுவதும் எளிய செயல்களே என்பதும், அங்ஙனம் அனுமன் செய்வானாயின், யாரும் உய்யார்; அவனை விலக்குவாரும் இலர் என அனுமனது ஆற்றலைப் புகழ்ந்து கூறியவாறு. (4)

8977. முறைகெட வேண்டின் முன்பு
நினைந்ததே முடிப்பன் முன்பின்
குறையிலை குணங்கட் கென்னோ
கோதிலா வேதங் கூறும்
இறைவர்கண் மூவ ரென்ப
தெண்ணிலா ரெண்ண மேதான்
அறைகழ லனும னோடு
நால்வரே முதல்வ ரம்மா.

முறைகெட வேண்டின் முன்பு
நினைந்ததே முடிப்பன், முன்பின்
குறைஇலை குணங்கட்கு; என்னோ
கோதுஇலா வேதம் கூறும்
இறைவர்கள் மூவர் என்பது?
எண் இலார் எண்ணமே தான்;
அறைகழல் அனும னோடும்
நால்வரே முதல்வர் அம்மா.

பொ :- அனுமன் முறைகெடச் செய்ய விரும்பினுல் முன்பு நாம் நினைந்ததையே தன் வன்மை மிகுதியால் செய்து முடித்து விடுவான்; ஆனுல், குணங்களுக்கு அவன்பால் குறையில்லை, (குணங்களால் நிறைந்தவன் ஆதலால் முறைகெட்ட செயலை செய்ய மாட்டான்) குற்றமற்ற வேதங்கள் சொல்லும் கடவுளர்கள் மூவரே என்பது, சிந்தனையில்லாதவர்களின் சிறப்பில்லாத எண்ணமே ஆம்; ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய அனுமனேடு முதற்கடவுளர் நால்வரே ஆவர்.

கு :- முன்பு நினைந்தது என்றது, மேலைச் செய்யுளில் மாலியவான் நினைந்த செயல்களை. முறைகெடச் செய்ய அனுமான் விரும்பான்; விரும்பினுல் தன் வலிமையினுட் செய்து முடிக்கத் தக்கவன் என்றபடி. முன்பின் முடிப்பன் என்க. முன்பு—வலிமை. எண்—சிந்தனை; அறிவுமாம். எண்ணுடையோர் அனுமனையும் சேர்த்து உலக முதல்வர் நால்வர் எனவே கூறுவர் என்றவாறு. நால்வரே என்புழி ஏகாரம் தேற்றப்பொருளது. ''தேவரு முனிவரு முணருந் தேவர்கள் மூவரினுல்வரா முனிவந் தெய்தினுன்'' (அயோத்தி-மந்திரப்—4) என வசிட்டனைக் குறிப்பிட்டதும் இங்கு நினையத்தகும். குணங்களின் நிறைவினுல் மும்மூர்த்தியரோடு ஒப்பாதற்குரியவன் அனுமன் என்றவாறு. (5)

8978. இறந்தவ ரிறந்து தீர
வினியொரு பிறவி வந்து
பிறந்தன மாகி யுள்ளே
முய்ந்தனம் பிழைக்கும் பெற்றி
மறந்தன மெனினு மின்னஞ்
சனகியை மரபி னீந்தவ்
வறந்தரு சிந்தை யோரை
யடைக்கலம் புகுது மைய.

'இறந்தனர் இறந்து தீர;
இனிஒரு பிறவி வந்து
பிறந்தனர் ஆகி உள்ளேம்;
உய்ந்தனம்; பிழைக்கும் பெற்றி
மறந்தனம்; எனினும், இன்னம்
சனகியை மரபின் ஈந்து,அவ்
அறம்தரு சிந்தையோரை
அடைக்கலம் புகுதும் ஐய!

பொ :— (பகைவரால்) இறந்தவர் இறந்துதீர, இறவாது உள்ள நாம், புதியதொரு பிறவியில் வந்து பிறந்தனம்போன்று உய்ந்திருக்கின்றோம். உயிர்பிழைத்து வாழும் தன்மையை இதுவரையில் மறந்திருந்தோம்; என்றாலும், இனியேனும் ஐயனே! சீதையை முறைப்படி கொடுத்துவிட்டு, அந்த தரும நெறி செல்லும் சிந்தையராகிய இராம இலக்குவரை அடைக்கலம் புகுவோமாக.

கு :-ஆற்றல் மிக்க அனுமனாலும் இராமஇலக்குவராலும் இறவாதிருந்தது புதியதொரு பிறவியெடுத்தாற்போன்ற அருமையது என்பான், 'உள்ளேம், இனியொரு பிறவிவந்து பிறந்தனமாகி உய்ந்தனம்' என்றான். ஆகி என்புழி ஆக்கம் உவமப் பொருளது, 'ஆள்வாரிலி மாடாவேனோ' (திருவாசகம்—382) என்புழிப்போல. இறந்தவர் இறந்துதீர உள்ளேம் இனி ஒரு பிறவி வந்து பிறந்தனமாகி உய்ந்தனம் என இயையும். நாம் யாவரும் இறவாது உய்யும் நெறி இராமனைச் சரணடைவதேயாகும்; அதனை முன்னமே செய்திருத்தல் வேண்டும் என்பான் 'பிழைக்கும் பெற்றி மறந்தனம் எனினும்' என்றான். இனியும் அதைச் செய்யலாம் என்பான், 'ஐய! அடைக்கலம் புகுதும்' என்றான். இவ்வளவு துன்பங்களை அவர்க்குச் செய்த பின்னும் சீதையைக் கொடுத்துவிட்டு அடைக்கலம் புகுந்தால் ஏற்றுக்கொள்ளும் அருளாளர்கள் அவர்கள், என்பான் 'அவ்அறந்தரு சிந்தையோரை' என்றான். (6)

8979. மறிகடல் குடித்து வானை
மண்ணொடும் பறிக்க வல்ல
எறிபடை யரக்க ரெல்லா
மிறந்தன ரிலங்கை யூரும்
சிறுவனு நீயு மல்லா
லாருள ரொருவர் தீர்ந்தார்
வெறிதுநம் வீர மென்றான்
மாலிமேல் விளைவ தோர்வான்.

'மறிகடல் குடித்து, வானை
மண்ணொடும் பறிக்க வல்ல
எறிபடை அரக்கர் எல்லாம்
இறந்தனர்; இலங்கை ஊரும்,
சிறுவனும் நீயும் அல்லால்
ஆர்உளர் ஒருவர்? தீர்ந்தார்;
வெறிதுநம் வீரம் என்றான்,
மாலி,மேல் விளைவது ஓர்வான்.

பொ :- அலைவீசும் கடல் நீரையெல்லாம் குடித்துவிட்டு வானுலகத்தை மண்ணுலகத்தோடும் சேர்த்துப் பெயர்த்தெடுக்கவல்ல, எறிதற்கு உரிய ஆயுதங்களையுடைய அரக்கர்கள் எல்லாம் இறந்து பட்டனர்; இலங்கை என்கின்ற இந்த ஊரும் நின் சிறுவனாகிய இந்திரசித்தும் நீயும் அல்லாமல் வேறு ஒருவர் யார் உளர்? எல்லாம் இறந்தனர்; நம் வீரம் எல்லாம் பயனற்றதாயிற்று என்று, மேல் விளையத்தக்க செயலிது என உய்த்துணர்ந்த மாலியவான் கூறினான்.

கு :- பறிக்கவல்ல அரக்கர், எறிபடையுடைய அரக்கர் என்க. சிறுவன் என்றது மகன் என்னும் பொருளில் வந்தது. சிறப்பு நோக்கிச் சிறுவனும் நீயுமல்லால் ஆருளர் என்றான். தீர்ந்தார் என்றது, முடிந்தனர் என்றவாறு. மேல் விளைவது ஓர்வானாகிய மாலி நம்வீரம் வெறிது என்றான் என இயையும். வெருவிது என்பது வெறிது என மருவியது. கடல் குடித்து வானை மண்ணொடும் பறிக்க வல்ல அரக்கர் என்றது, கும்பகருணன் முதலியோரை நினைந்து கூறிய உயர்வு நவிற்சியாகும். (7)

8980. வாலியை வாளி யொன்றால்
வானிடை வைத்து வாரி
வேலையை வென்று கும்ப
கருணனை வீட்டி னானை
ஆலியின் மொக்கு ளன்ன
வரக்கரோ வமரின் வெல்வார்
சூலியைப் பொருப்பி னோடுந்
தூக்கிய விசயத் தோளாய்.

'வாலியை வாளி ஒன்றால்
வானிடை வைத்து வாரி
வேலையை வென்று, கும்ப
கருணனை வீட்டினானை,
ஆலியின் மொக்குள் அன்ன
அரக்கரோ, அமரின் வெல்வார்?—
சூலியைப் பொருப்பினோடும்
தூக்கிய விசயத் தோளாய்!

பொ :- சூலப்படையையுடைய சிவனைக் கயிலையினோடும் தூக்கிய வெற்றி பொருந்திய தோள்களையுடையவனே! வாலியை அம்பு ஒன்றினால் கொன்று விண்ணுலகத்திற்கு அனுப்பிவிட்டு, நீர் நிறைந்த கடலைச் சேது கட்டி வென்று, கும்பகருணனைக் கொன்ற

வருகிய இராமனை, மழைத்துளியால் நீரில் தோன்றும் மொக்குளைப் போன்று விரைந்து அறியத்தக்க அரக்கரோ வெல்லவல்லார்?

கு:. கயிலையைத் தூக்கிய தோள்வலி நினைந்து செருக்குகின்றவன் இராவணன் ஆதலின் அவன் தோள் சிறப்பையே நினைப்பித்து அத்தகைய தோளினைக் காட்டி வாலினையுடைய வாலியையும் நினைப்பித்து அவ் வாலியை வென்றதோடு கடலில் சேதுகட்டி வந்து பெருவலிபடைத்த கும்பகருணனையும் வென்ற இராமனது வீரத்தைச் சிறப்பித்தவாறு. நீடு நிலையாமைக்கு நீர்க்குமிழியை எடுத்துக்காட்டுதல் மரபு. "கொப்புளே போலத் தோன்றி யதனுளே யழியக் கண்டும்" (தேவாரம்-4-79-2) என்றது காண்க. வானிடை வைத்து என்றது விண்ணுலகத்திற்கு அனுப்பி என்றவாறு. தொன்று என்பதே கருத்து. வாரி-நீர். ஆலி-மழைத்துளி. வேலை-கடல். வேலையை வென்று என்றது; கடலின் ஆழத்தைக்கண்டு அஞ்சியிராது அப்பெருங்கடல்மேல் அணைகட்டிக் கடந்ததையுணர்த்தியவாறு. அரக்கர்களில் கும்பகருணனே யாராலும் வெல்ல வியலாத வலிமை மிக்கவன் ஆதலின், அவனை வீட்டியதையே சிறப்பாக இங்கு மாலியவான் குறிப்பிட்டான். "என்னை வென்றுளரெனி லிலங்கை காவல! உன்னை வென்று உயருதல் உண்மை" (கும்பகருணன்-வதைப்-97) எனக் கும்பகருணனே இராவணனை நோக்கிக் கூறியது இங்கு நினையத்தகும். இராமன் வலிமையை நோக்கும் போது அரக்கரின் வலிமை மிகமெல்லியதாகிய நீர்க்குமிழி போன்றது என இழித்துக் கூறியவாறு. ஆலி-என்றது சூலப்படையினையுடைய சிவனை. (8)

### மாலியவான் சொல்லியது கேட்டு இராவணன் சினத்தல்

8981. என்றுமா லியவான் கூறப்
பிறையெயிற் றெழிலி நாப்பண்
மின்றெரிந் தென்ன நக்கு
வெருவர வுரப்பிப் பேழ்வாய்
ஒன்றினொன் றசனி யென்ன
வுருத்துநீ யுரைத்த மாற்றம்
நன்றுநன் றென்று சீறி
யுரைத்தன னலத்தை யோரான்.

என்று மாலியவான் கூற;
பிறைஎயிற்று எழிலி நாப்பண்
மின்தெரிந் தென்ன நக்கு,
வெருவர உரப்பி, பேழ்வாய்

ஒன்றின்ஒன்று அசனி என்ன
உருத்து, நீ, உரைத்த மாற்றம்
நன்று,நன்று!' என்று சீறி,
உரைத்தான், நலத்தை ஓரான்.

பொ :- என்று மாலியவான் சொல்ல, பிறைச்சந்திரனுகிய எயிற்றினையுடைய மேகத்தின் நடுவிலே மின்னல் தோன்றினுற் போலப் பற்கள் தோன்றச் சிரித்துக் கண்டோர்க்கு அச்சம் வருமாறு அதட்டிப் பிளந்த வாய்களால் ஒன்றினும் ஒன்று அதிகமாக இடிபோலப் பேரொலி தோன்ற அச்சுறுத்தி, நீ சொன்ன சொல் நல்லது, நல்லது' என்று, நன்மையை ஆராயாதவனுகிய இராவணன் வெகுண்டு கூறினுன்.

கு :- கோரப்பல்லும் கரிய நிறமும் உடைய இராவணன் உடம்பிற்கு உவமையாகப் பிறையெயிற்று எழிலி கூறப்பட்டது பொருத்தமிக்கதாகும். பிறையாகிய எயிறு என உருவகம் ஆக்குக. இனி எழிலி நாப்பண் மின்தெரிந்தென்ன பிறையெயிற்று நக்கு என்று இயைத்துக் கூறலும் ஆம். இச் செய்யுள் பல சுவடிகளில் இல்லை. 'கட்டுரை யதனைக் கேளா' எனத் தொடங்கும் அடுத்த செய்யுளை நோக்கும்போது இச் செய்யுள் இடைச் செருகலே என்பது தெளிவாதல் காணலாம். (9)

## இராவணனது வீரமொழி

8982. கட்டுரை யதனைக் கேளாக்
கண்எரி கதுவ நோக்கிப்
பட்டனர் அரக்கர் என்னிற்
படைக்கலம் படைத்த வெல்லாம்
கெட்டன வென்னில் வாட்கை
கெடாதெனில் கிளிய னுளை
விட்டிட வெண்ணி யோயான்
பிடித்தது வேட்கை வீய.

கட்டுரை அதனைக் கேளா,
கண்எரி கதுவ நோக்கி,
பட்டனர் அரக்கர் என்னில்,
படைக்கலம் படைத்த எல்லாம்

கெட்டன என்னில் வாட்கை
 கெடாது எனில், கிளி அனுளை
விட்டிட எண்ணி யோயான்
 பிடித்தது, வேட்கை வீய ?

பொ :- மாலியவான் கூறிய உறுதிமொழியைக் கேட்டு, தன் கண்களில் தோன்றிய, தீப்பொறி அம் மாலியவானைப் பற்றுமாறு வெகுண்டு பார்த்து அரக்கர்கள் எல்லாம் இறந்து பட்டனர், என்ருலும், நாம்படைத்தபடைக்கலங்கள் எல்லாம் கெட்டுப் பயனற்றன என்ருலும், வாளேந்திய என்கை கெடாது இருக்கின்றது என்ருல், கிளிபோன்ற சொற்களையுடைய சீதையை என் வேட்கை அழிய (விட்டிடுவேனே ?) விட்டிட எண்ணியோ யான் பிடித்தது ? (அன்று)

கு :- 'வாட்கை கெடாதெனில் விடுவேனே' என ஒருசொல் வருவிக்க. அரக்கர் பட்டாலும் படைக்கலம் எல்லாம் கெட்டாலும் வாழ்க்கை கெடாதெனில் கிளியனுளை விடுவேனே ? விட்டிட வெண்ணியோ யான் பிடித்தது ? அன்று ; என்றபடி. எல்லாம் அழிந்தாலும் என் வாழ்க்கை யுள்ளவரையில் போராடியே நிற்பேன் என்றபடி. "என்னையே நோக்கியான் இந்நெடும்பகை தேடிக்கொண்டேன்" (இந்திரசித்து வதைப்—8) எனவும், "சீதையை விடுவதுண்டோ இருபது தோளுண்டாக" (9) எனவும் பின்னர் இராவணன் கூறுவதும் இங்கு நினையத்தகும். (10)

8983. மைந்தனென் மற்றை யோரெ
 னஞ்சினீர் வாழ்க்கை வேட்டீர்
உய்ந்தனிர் போவீர் நாளை
 யூழிவெந் தீயி னேங்கிச்
சிந்தனை மனித்த ரோடக்
 குரங்கினைத் தீர்ப்பெ னென்ருன்
வெந்திற லரக்கர் வேந்தன்
 மகனிவை விளம்ப லுற்ருன்.

'மைந்தன்என்? மற்றை யோர்என்?
 அஞ்சினிர் வாழ்க்கை வேட்டீர் !
உயந்துநீர் போவீர்; நாளை
 ஊழிவெந் தீயின் ஓங்கி,

சிந்தனை மனித்த ரோடுஅக்
குரங்கினைத் தீர்ப்பேன்' என்றான்,
வெந்திறல் அரக்கர் வேந்தன்;
மகன்இவை விளம்ப லுற்றான்.

பொ :- 'என் மகன்தான் என்ன? மற்றையவர்கள் தாம் என்ன? இவ்வாறு அச்சங்கொண்டவராய் உயிர் வாழ்க்கையை விரும்பினீர்கள் எல்லாம் உயிர் உய்ந்து போய்விடுங்கள்; நாளைக்கு ஊழிக் காலத்துத் தோன்றும் கொடிய வடவைத் தீப்போலப் பொங்கி, அந்தக் குரங்குச் சேனையைச் சிந்தனைமிக்க மனிதரோடு அழிப்பேன்' என்று கொடிய திறமையுடைய அரக்கர் வேந்தனாகிய இராவணன் கூறினான்; (அது கேட்ட அவன்) மகன் இந்திரசித்து இவற்றைச் சொல்லத் தொடங்கினான்.

கு :- மகன் விளம்பியவை வரும் மூன்று செய்யுட்களில் காண லாம். 'மகன் என்ற உறவோ, படைஞர் என்ற தகுதியோ நோக்கி இங்கு யாரும் இருத்தல் வேண்டா. மரணத்திற்கு அஞ்சி உயிர் வாழ விரும்புவோரெல்லாம் இன்றே சென்று விடுங்கள்' என்றவாறு. 'யான் ஒருவனே அந்த மனிதரையும் குரங்குகளையும் அழிக்க வல் லேன்' என்பது இராவணன் வீர வார்த்தை. மனித்தரோடு என் புழி 'ஒடு' உயர்பின் வழித்தாயது. சிந்தனை மனித்தர் என்றது, இராம இலக்குவரின் சூழ்ச்சித் திறனை நினைந்து கூறியது. (11)

### இந்திரசித்து கூறுகிறான்

8984. உளதுநா னுணர்த்தற் பால
துணர்ந்தனை கோட லுண்டேல்
தளமலர்க் கழவன் றந்த
படைக்கலந் தழலிற் சார்த்தி
அளவில தமைய விட்ட
திராமனை நீக்கி யன்றால்
விளைவில தனையன் மேனி
தீண்டில மீண்ட தம்மா.

உளதுநான் உணர்த்தற் பாலது,
உணர்ந்தனை கோடல் உண்டேல்;
தளமலர்க் கிழவன் தந்த
படைக்கலம் தழலின் சார்த்தி

அளவுஇலது அமைய விட்டது
இராமனை நீக்கி அன்றல்
விளைவுஇலது அனையன் மேனி
தீண்டில மீண்டது அம்மா !

பொ :- (யான் சொல்வதை) உணர்ந்து கொள்ளும் எண்ணம் நினக்கு இருக்குமாயின், நான் சொல்லத் தகுவது உளது; (என்னை எனின், இதழ்களையுடைய தாமரைத் தவிசில் இருக்கும் பிரமன் கொடுத்த பிரமாத்திரத்தைத் தீப ஒளியால் ஆராதனை செய்து அளவில்லாத ஆற்றலுடையதாய்த் தன் தொழிலில் அமையுமாறு விட்டது இராமனை நீக்கியன்று; (இராமனையும் கொல்லவேண்டும் என்றே விடுத்தேன்;) அங்ஙனம் விட்டிருந்தும், பயன் இல்லதாய் அந்த இராமனது மேனியைத் தீண்டாததாய் மீண்டது.

கு :- சிறியவன் சொல்வதிலும் கருத்திருக்கலாம் எனக் கேட்டுணரும் எண்ணம் நினக்கு இருக்குமாயின், யான் சொல்லத் தகுவது உளது என்பது இந்திரசித்தின் அடக்க உரையாகும். சினமிக்குள்ள இராவணனைத் தன்பால் திருப்ப இந்திரசித்து இங்ஙனம் கூறினான். 'தழலிற்சார்த்தி' என்றது தீபாராதனை செய்து வழிபட்டதையுணர்த்தியவாறு. 'இராமனோடு யாவரையும் அழிக்கவேண்டும் என்றே பிரமாத்திரத்தை விட்டேன். ஆனால், அந்தக் கணை இராமனது மேனியைத் தீண்டுதலும் செய்யாது மீண்டது' என்று கூறி இராமனது தெய்வ நிலையை விளக்கியவாறு. தெய்வக் கணைகளைப் பூசனை செய்வதற்காக இராமன் தனியிடத்தில் இருந்தான். ஆயினும் எங்கும் சென்று பற்றிக் கொல்லத்தக்க ஆற்றலுடைய பிரமாத்திரம் இராமனது மேனியைத் தீண்டாது விட்டது அவன்தன் தெய்வ நிலையை நினைந்தேயாம் என விளக்கியவாறு. (12)

8985. யானிட னல்லன் றெல்லை
வானவ னல்லன் மற்று
மேனியான் முனிவ னல்லன்
வீடணன் மெய்யிற் சொன்ன
யானென தெண்ண நீர்ந்தா
ரெண்ணுறு மொருவ னென்றே
தேனுகு தெரியன் மன்னு
சேகறத் தெரிந்த தன்றே.

மானிடன் அல்லன்; தொல்லை
வானவன் அல்லன்; மற்றும்
மேனியான் முனிவன் அல்லன்;
வீடணன் மெய்யின் சொன்ன
யான்எனது எண்ணல் தீர்ந்தார்
எண்ணுறும் ஒருவன் என்றே
தேன்உகு தெரியல் மன்ன!—
சேகுஅறத் தெரிந்தது அன்றே.

பொ:- தேன் சிந்துகின்ற மாலையை யணிந்த அரசே! பிரமாத்திரம் தீண்டா மேனியையுடைய இராமன், மானிடன் அல்லன்; முனிவன் அல்லன்; வீடணன் உண்மையாக ஆராய்ந்து சொன்ன-யான் எனது என்னும் செருக்கினை நினையாமல் நீங்கியுள்ள ஞானிகள் என்றும் எண்ணுதற்கு உரிய ஒப்பற்ற கடவுள் என்றே ஐயமறத் தெளிவாயிற்று.

கு:- மற்று மேனியான் என்றது, பிரமன்கணை தீண்டலாகாத மேனியையுடைய இராமன் என்றவாறு. வடிவு நோக்கி மானிடனுகவோ, வேடம் நோக்கி முனிவனுகவோ, ஆற்றல் நோக்கி தேவரில் ஒருவனுகவோ எண்ணலாகாது என்பான், மானிடன் அல்லன்; வானவனல்லன்; முனிவனல்லன் என்ருன். வீடணன் மெய்யிற் சொன்ன ஒருவன் எனத் தனித்தனி இயையும். 'முனைவரு மமரரு முழுதுணர்ந்தவர்களு முற்று மற்றும், நினைவருந்தகையர் நம் வினையினுல் மனிதராய் எளிது நின்ருர்.' (இராவணன் மந்திரப்-85) என வீடணன் முன்கூறியதையே இந்திரசித்து இங்கு நினைவு கூர்ந்து 'வீடணன் மெய்யிற் சொன்ன ஒருவன்' என்ருன் யான் எனது எண்ணல் தீர்ந்தார் என்றது யான் எனது என்கின்ற அகப்பற்றினையும் புறப்பற்றினையும் நினையாது இறைவனையே நினைத்து வாழும் ஞானியரை. எண்ணுறும் ஒருவன் என்றே கேடு அறந்தெரிந்தது என்க. இருவகைப்பற்றும் அற்றதுறவிகள் இடைவிடாது எண்ணுதற்குரிய கடவுளே இராமன் என்பது பிரமாத்திரத்தினுல் தீண்டப்படாமையால் ஐயமறத் தெளிவாயிற்று என்றவாறு. சேகு-ஐயம். வீடணனுக்கு மந்திரப் படலத்தில் ஏற்பட்ட தெளிவு, இந்திரசித்துக்குப் பிரமாத்திரத்தின் செயல் கண்டபின் உண்டாயிற்று. (13)

8986. அனையது வேறு நிற்க
வன்னது பகர்தலாண்மை
வினையெனி னன்று நின்று
வீழ்ந்தவர் வீழ்க வீர

**இணையனீ மூண்டி யான்போய்**
**நிகும்பலை விரைவி னெய்தித்**
**துனியறு வேள்வி வல்லைத்**
**தொடங்கினுன் முடியுந் துன்பம்.**

'அணையது வேறு நிற்க;
அன்னது பகர்தல் ஆண்மை
வினைஎனின் அன்று; நின்று
வீழ்ந்தவர் வீழ்க! வீர!
இணையல்நீ; மூண்டு யான்போய்
நிகும்பலை விரைவின் எய்தி,
துனிஅறு வேள்வி வல்லை
இயற்றினுல் முடியும் துன்பம்.

பொ :- அந்த நிலைமை வேறு; அது நிற்க. அதை இப்போது சொல்வது ஆண்மை வினையோ என்றுல், அன்று; போரில் எதிர்த்து நின்று வீழ்ந்தவர்கள் விழட்டும்; வீர! அதுபற்றி நீ வருந்தாதே! யான் முணைந்து சென்று நிகும்பலை என்ற கோயிலை விரைவில் அடைந்து துன்பம் அறுதற்குக் காரணமான வேள்வியை விரைந்து தொடங்கிறுல், நின் துன்பம் முடியும்.

கு :- அனையது வேறு என்றது அந்தக் கடவுள் தன்மை யெல்லாம் நினைப்பதற்குரிய காலம் இதுவன்று என்னும் கருத்தினது. நின்று-எதிர்த்து நின்று. பகைவர் படையில் வீழ்ந்தவர் எழுந்தாற் போல நம் படையில் வீழ்ந்தவர் எழுதற்குரிய மருந்து இன்மையால் வீழ்ந்தவர் வீழ்ந்தவராகவே கழியட்டும் என்றவாறு. நிகும்பலை என்பது ஒரு கோயில். அக் கோயிலில் இருந்து வேள்வி செய்தால் வலிமை பெருகிப் பகைவரை அழிக்க இயலும் என்பது அரக்கரின் நம்பிக்கை. துனி-துன்பம். துனியறுதற்குக் காரணமான வேள்வி என்க. வல்லை-விரைவாக. இராமனது கடவுட்டன்மையை இந்திரசித்து விளக்கியபோது இராவணனது குறிப்பறிந்து அஞ்சி 'அன்னது பகர்தல் ஆண்மை வினையெனின் அன்று' என்று கூறலாறுன். (14)

**இராவணன் உடன்பட்டு நிகும்பலை வேள்வியை**
**இடையூறு இன்றி முடிக்கும் உபாயம் யாது? எனல்**

8987. அன்னது நல்ல தேயா
லமைதியென் றரக்கன் சொன்னுன்
நன்மக னும்பி கூற
நண்ணலார் கண்டு நண்ணி

முன்னிய வேள்வி முற்ரு
வகைசெரு முயல்வ ரென்ருன்
என்னவ ரெய்தா வண்ண
மியற்றலா முறுதி யென்ருன்.

'அன்னது நல்ல தேயால்;
அமைதி' என்று அரக்கன் சொன்ஞன்,
நல்மகன், 'உம்பி கூற,
நண்ணலார் கண்டு நண்ணி,
முன்னிய வேள்வி முற்ரு
வகைசெரு முயல்வர்' என்ருன்;
'என்,அவர் எய்தா வண்ணம்
இயற்றலாம் உறுதி?' என்ருன்.

பொ :- '(நீ சொல்லுகின்ற) அது நல்லதே; நிகும்பலையில் வேள்வி அமைத்துச் செய்க' என்று இராவணன் கூறினுன்; அது கேட்ட அவனது நல்ல மகனுகிய இந்திரசித்து, 'உன் தம்பி வீடணன் இந்த மந்தணத்தைச் சொல்லப் பகைவர் அவ்விடத்தைக் கண்டு நெருங்கி, நாம் கருதிய வேள்வி முற்றுப் பெருதபடி போர்செய்ய முயல்வார்களே என்று கூறினுன்; 'அவ்வாறு அப் பகைவர் எய்தாத படி செய்யத்தக்க உபாயம் என்ன' என்று இராவணன் வினவினுன்.

கு :- இராவணன் கருத்தறிந்து நடக்கும் இயல்பு நினைந்து, இந்திரசித்தினை 'நன்மகன்' என்ருன். நன்மகன், என்ருன் என இயையும். நண்ணலார் நண்ணி என்ற முரண்தொடை காண்க. நண்ணலார்-பகைவராகிய இராம இலக்குவர். முன்னுதல்-கருதுதல். 'இயற்றலாம் உறுதி என்' என இயையும். உறுதி என்றது உறுதிதரும் உபாயத்தை. (15)

இந்திரசித்து உபாயம் கூறல்

8988. சானகி யுருவ மாகச்
சமைத்தவ டன்மை கண்ட
வானுய ரனுமன் முன்னே
வாளினுற் கொன்று மாற்றி
யானெடுஞ் சேனை யோடு
மயோத்திமே லெழுந்த னென்னப்
போனபின் புரிவ தொன்று
மறிகிலர் துயரம் பூண்பர்.

'சானகி உருவ மாகச்
சமைத்து, அவள் தன்மை கண்ட
வான்உயர் அனுமன் முன்னே,
வாளினுல் கொன்று மாற்றி,
யான்நெடுஞ் சேனை யோடும்
அயோத்திமேல் எழுந்தேன் என்னப்
போனபின், புரிவது ஒன்றும்
அறிகிலர், துயரம் பூண்பர்.

பொ:- சிதையின் உருவமாக மாயையினுல் செய்துகொண்டு, அச் சீதையின் தன்மையை முன்னமே வந்து கண்டுள்ள, மிக்க உயர்வுள்ள அனுமனுக்கு முன்னே சென்று, அவளைக் கொன்று உயிரைப் போக்கிவிட்டு, 'யான் நெடிய சேனையோடும் அயோத்தி மேல் இதோ எழுகின்றேன்' என்று கூறி அத் திசை நோக்கி யான் போன பின்பு, அவர்கள் செய்வது ஒன்றும் அறிகிலராய்த் துன்பம் அடைவார்கள்.

கு:- சிதையை இலங்கைக்கு எடுத்துச் சென்றபின், அச் சீதையின் தன்மையை நேரில்கண்டு சென்றவன் அனுமனே ஆதலின், அவன் முன்னே இம் மாயை விளையாட்டைச் செய்வதே நல்லது என்று இந்திரசித்துத் துணிந்தான் என்பார், 'அவள் தன்மை கண்ட வானுயர் அனுமன் முன்னே' என்ருர். அயோத்திமேல் எழுகின்றேன் என நிகழ்காலத்தால் கூறவேண்டியதை விரைவுபற்றி 'எழுந்தேன்' என இறந்தகாலத்தால் கூறினுன். 'அயோத்திமேல் புறப்பட்டுவிட்டேன்' என்று அப் பக்கம் நோக்கிப் போனபின் பகைவர், செய்வது அறியாது கலங்கி வருந்துவர் என்றவாறு. (16)

8989. இத்தலைச் சீதை மாண்டாள்
பயனிவ ணில்லை யென்பார்
அத்தலைத் தம்பி மாருந்
தாயரு மடுத்து ளோரும்
உத்தம நகரு ளோரு
மொழிவரென் றுள்ளத் துள்ளிப்
பொத்திய துன்ப மூளச்
சேனையும் தாமும் போவார்.

"இத்தலைச் சீதை மாண்டாள்;
பயன் இவண் இல்லை" என்பார்,
அத்தலை, தம்பி மாரும்
தாயரும் அடுத்து உளோரும்,
உத்தம நகர் உளோரும்
ஒழிவர்என்று உள்ளத்து உள்ளி,
பொத்திய துன்பம் மூளச்
சேனையும் தாமும் போவார்.

பொ :- இவ்விடத்தில் சீதையோ மாண்டுபோனாள்; இனி இங்கு நின்று (போர் செய்வதில்) பயன் இல்லை; என்று கருதுகின்ற இராம இலக்குவர், 'அவ்விடத்துத் தம்பிமாரும், அவர்களை அடுத்துள்ள சுற்றத்தோரும், சிறந்த அயோத்தி நகரத்தில் உள்ள மக்களும் (இந்திரசித்தினால்) உயிர் ஒழிந்து போவார்கள்' என்று மனத்தில் நினைத்துக் கலந்த துன்பம் மேன்மேல் வளர்தலால், சேனையும் தாமும் அயோத்திக்குப் போய்விடுவார்கள்.

கு :- என்பார், வினைப்பெயர். என்பார், போவார் என இயையும். இராம இலக்குவர் வானர சேனையோடு சேர்ந்து இலங்கையில் போர்செய்ய வந்தது சீதையின் பொருட்டேயாகலின், அவள் மாண்டபின் 'பயன் இவணில்லை' என்று அவர் கருதுவர் என்பதும், தான் அயோத்திமேல் போர்க்குப் போவதாகப் போக்குக் காட்டினமையால்; தம்பிமாரும் தாயரும் முதலிய எல்லோரும் இந்திரசித்தினால் இறப்பர் என்று நினைந்து சேனையோடு விரைந்து அயோத்திக்குப் புறப்பட்டுச் சென்றுவிடுவர் என்பதும் இந்திரசித்தின் கற்பனையில் தோன்றிய கருத்துகளாகும். பொத்துதல்-கலத்தல். மூளுதல்-பெருகுதல். (17)

8990. போகில ரென்ற போது
மனுமனை யாண்டுப் போக்கி
ஆகிய தறிந்தா லன்றி
யருந்துய ராற்ற லாற்றார்
ஏகிய கரும முற்றி
யானவண் விரைவி னெய்தி
வேகவெம் படையிற் கொன்று
தருகுவென் வென்றி யென்றான்.

'போகிலர் என்ற போதும்,
அனுமனை ஆண்டுப் போக்கி,
ஆகியது அறிந்தால் அன்றி,
அருந்துயர் ஆற்றல் ஆற்றார்;
ஏகிய கருமம் முற்றி,
யான் அவண் விரைவின் எய்தி,
வேகவெம் படையின் கொன்று,
தருகுவென் வென்றி' என்றான்.

பொ :- 'அயோத்திக்கு அவர்கள் போகவில்லையாயினும் அனுமனையேனும் அங்கே அனுப்பி, அங்கு நிகழ்ந்ததை அறிந்தால் அல்லது, தாங்குதற்கரிய இத் துன்பத்தைத் தாங்கமாட்டார்கள்; அதற்குள் யான் சென்ற கருமத்தை முடித்துக்கொண்டு அவ்விடத்திற்கு விரைவாகச் சென்று வேகமுடைய கொடிய படைக்கலத்தால் அப் பகைவரைக் கொன்று நினக்கு வெற்றியைத் தருவேன்' என்று கூறினான்.

கு :- ஆகியது என்றது, அங்கு நிகழ்ந்ததை. 'அயோத்திக்குச் சென்று இந்திரசித்து, பரதன் முதலியோரைக் கொன்றுவிடுவான்' என்ற எண்ணத்தால் தோன்றிய துயரம் அவர்களால் தாங்குதற்கு அரியது ஆதலின், 'அருந்துயர் ஆற்றல் ஆற்றார்' என்றான். ஏகிய கருமம் என்றது, நிகும்பலைக்குச் சென்று யாகம் செய்தலை. 'அவண்' என்றது போர்க்களத்தைச் சுட்டிக் கூறியது. இந்திரசித்து மாயா சீதையைக் கொன்று, அயோத்திக்குச் சென்று அங்குள்ளாரையும் கொல்வேன் என்று கூறி அங்குப் போவதாகப் போக்குக் காட்டினால், இராம இலக்குவர், சீதை மாண்டபின் போர்செய்து பயன் இல்லை என விடுத்து, அயோத்தியிலுள்ளோரைக் காப்பாற்றச் சேனையோடு புறப்படுவர்; இல்லையேல், அனுமனை அனுப்பியேனும், அங்கு நிகழ்ந்ததை அறிந்துகொள்வர், அதற்குள் நிகும்பலையாகத்தை முடித்துக்கொள்ளலாம் என்று தன் யோசனையைக் கூறினான். அவ்விராம இலக்குவர் எண்ணத்தை வேறுபக்கம் திருப்பிவிட்டதனால் நம் யாகத்தைத் தடைசெய்யும் எண்ணமே அவர்க்கு எழாது என்றபடி. (18)

### மாயா சீதை அமைக்க இந்திரசித்து போதல்

8991. அன்னது புரித னன்றென்
றரக்கனு மமைய வஞ்சொற்
பொன்னுரு வமைக்கு மாய
மியற்றுவான் மைந்தன் போனான்

இன்னதித் தலையத தாக
விராமனுக் கிரவி செம்மல்
தொன்னக ரதனை வல்லைக்
கடிகெடச் சுடுது மென்றான்.

‘அன்னது புரிதல் நன்றுஎன்று
அரக்கனும் அமைய, அம்சொல்
பொன்உரு அமைக்கும் மாயம்
இயற்றுவான் மைந்தன் போனான்;
இன்னது இத்தலையது ஆக,
இராமனுக்கு, இரவி செம்மல்,
‘தொல்நகர் அதனை வல்லைக்
கடிகெடச் சுடுதும்’ என்றான்.

பொ :– ‘அந்தச் செயலைச் செய்தல் நல்லதே’ என்று இராவணனும் உடன்பட, அவன் மைந்தனாகிய இந்திரசித்து, அழகிய சொல்லையுடைய சீதையின் உருவத்தை அமைக்கும் மாயச்செயலைச் செய்வதற்குப் போனான்; இவ்விடத்து இது நிகழாநிற்க, அங்கு இராமனுக்குச் சுக்கிரீவன் பழைமைமிக்க இலங்கை நகரை விரைவாக அதன் சிறப்புக்கெடுமாறு சுடுவோம் என்று கூறினான்.

கு :- பொன்-திருமகள்; இங்குத் திருமகளின் அமிசமான சீதையைக் குறித்தது. இரவி செம்மல்-சூரியனுடைய மகனாகிய சுக்கிரீவன். இலங்கை நகரத்தின் பழமை புலப்படத் ‘தொன்னகரதனை’ என்றான். கடி-சிறப்பு; விளக்கமும் ஆம். இராமன் உடன்பாடு பெறும் எண்ணத்தால் சுக்கிரீவன் இங்ஙனம் தன் கருத்தைத் தெரிவித்தான் எனக் கொள்க. (19)

சுக்கிரீவன், இலங்கையை எரியூட்ட
இராமன் இசைவு பெற்றுக் கோபுரத்தையடைய
வானரங்கள் எல்லாம்கையில்கொள்ளி கொள்ளுதல்

8992. அத்தொழில் புரித னன்றென்
றண்ணலு மமைய வெண்ணித்
தத்தின னிலங்கை மூதூர்க்
கோபுரத் தும்பர் சார்ந்தான்

பத்துடை யேழு சான்ற
வானரப் பரவை பற்றிக்
கைத்தலத் தோரோர் கொள்ளி
யெடுத்ததெவ் வுலகுங் காண.

'அத்தொழில் புரிதல் நன்று'என்று
அண்ணலும் அமைய, எண்ணி;
தத்தினன், இலங்கை மூதூர்க்
கோபுரத்து உம்பர்ச் சார்ந்தான்;
பத்துடை ஏழு சான்ற
வானரப் பரவை பற்றிக்
கைத்தலத்து ஓர்ஓர் கொள்ளி
எடுத்ததுஎவ் உலகும் காண.

பொ :- 'அச் செயலைச் செய்தல் நல்லதே' என்று பெருமைமிக்க இராமனும் சிந்தித்து உடன்பட, சுக்கிரீவன் தாவி, இலங்கையாகிய பழைய நகரின் கோபுரத்து உச்சியை அடைந்தான்; எழுபது வெள்ளம் என்று அமைந்த வானர சேனையாகிய கடல் அவனைப் பின்பற்றி (ஒவ்வொரு வானரமும்) எவ்வுலகமும் காணுமாறு ஒவ்வொரு கொள்ளியைக் கையில் எடுத்துக் கொண்டது.

கு :- எண்ணி அமைய என இயையும். தத்துதல்-தாவுதல். பத்துடை ஏழு என்றது எழுபதினை. வானர சேனையின் அளவு எழுபது வெள்ளம் என்பது கம்பர் கருத்தாதல் முன்னம் அறிந்தது. வான்மீகி அறுபத்தேழு கோடி வானரப்படை என்கின்றார். ஒரு கோடியையே கம்பர் வெள்ளம் என்றுபெயர்கொடுத்து அறுபத்தேழினை எழுபது என்ற முழு எண்ணுக்கிக் கூறினார்போலும். எவ்வுலகுங் காண எடுத்தது என இயையும். (20)

### வானரங்கள் கொள்ளியை வீசுதல்

8993. எண்ணின கோடிப் பல்படை யாவும்
மண்ணுறு காவற் றிண்மதில் வாயில்
வெண்ணிற மேக மின்னினம் வீசி
நண்ணின போலத் தொன்னகர் நண்ணி.

எண்ணின கோடிப் பல்படை யாவும்,
மண்ணுறு காவல் திண்மதில் வாயில்,
வெண்நிற மேகம் மின்இனம் வீசி
நண்ணின போல, தொல்நகர் நண்ணி.

பொ :- எழுபது வெள்ளம் என்று கணக்கிடப்பட்ட கோடிக் கணக்கான பல வானர சேனைகள் யாவும் அழகு செய்யப்பெற்றதும் காவலையுடையதுமாகிய திண்மையான மதிலின் வாயில் வழியாக, வெண்மையான நிறத்தையுடைய மேகங்கள், மின்னினங்களை வீசிக் கொண்டு நெருங்கிய தோற்றம்போல — (கொள்ளிகளை வீசிக் கொண்டு) பழைமையான இலங்கை நகருக்குள் நுழைந்தது.

கு :- குளகம். நண்ணி என்ற எச்சம் வருஞ் செய்யுளில் கொள்ளி 'வீசின' என்ற வினையோடு முடியும். வெண்மையான வானரப்படை கையில் கொள்ளிகளை யேந்திக்கொண்டு இலங்கையில் புகுந்த தோற்றம், வெண்ணிறமேகம் மின்னினம் வீசிக்கொண்டு நண்ணினபோலக் காணப்பட்டது என்க. மண்ணுறுதல்-அலங் கரித்தல். மண்ணுறு மதில் என்க. செம்பிட்டுச் செய்த இஞ்சியாத லின் மண்ணினியன்ற மதில் எனப் பொருள் கூறல் பொருந்தாமை தெளிவு. வெண்ணிற மேகம் போன்றவை, வானரங்கள்; மின் இனம் போன்றவை, கொள்ளிகள். (21)

## குரங்குகள் கொள்ளியை வீசுதல்

8994. ஆசைக டோறு மள்ளின கொள்ளி
மாசறு தானை மர்க்கட வெள்ளம்
நாசமிவ் வூருக் குண்டென நள்ளின்
வீசின வானின் மீன்விழ லன்ன.

ஆசைகள் தோறும் அள்ளின கொள்ளி
மாசுஅறு தானை மர்க்கட வெள்ளம்,
'நாசம் இவ்ஊருக்கு உண்டு'என, நள்ளின்
வீசின, வானின் மீன்விழல் அன்ன.

பொ :- குற்றம் அற்ற சேனையாக அமைந்துள்ள வானர வெள் ளம் கொள்ளிகளைக் கையில் அள்ளிக் கொண்டனவாய்த் திசைகள் தோறும் வீசின;—(அக் கொள்ளிகள்) 'இவ் விலங்கைக்கு அழிவு உண்டு' என உணருமாறு நள்ளிரவில் வானத்திலுள்ள மீன்கள் விழுதல்போலத் தோன்றின.

கு :- மர்க்கட வெள்ளம், கொள்ளி அள்ளிவாய் வீசின; (அவை) இவ்வூருக்கு நாசமுண்டென நள்ளின் வானின் மீன் விழல் அன்ன வாயின என இயையும். ஆசை-திசை. மர்க்கடம்-குரங்கு. நள்ளிர வில் வானமீன்கள் உதிர்தல் அழிவுக்கு முன்னறிவிப்பு; உற்பாதம் என்பர். இலங்கை நகர்க்கு அழிவு உண்டு என்பதை அங்குள்ளோர்

முன்னே உணருமாறு வான மீன்கள் உதிர்தல் போன்றன, வானரங்கள் வீசிய கொள்ளிகளின் தோற்றம்; என்றவாறு. அள்ளின வாய் வீசின என முற்றெச்சமாக்குக. 'வீசின' என்ற வினைப்பெயர் வானின் மீன் விழல் அன்னவாயின என்ற ஆக்கவினைக் குறிப்பு வினைகொண்டு முடிந்தது. (22)

## கொள்ளிகள் மேன்மேல் செல்லுதல்

8995. வஞ்சனை மன்னன் வாழு மிலங்கைக்
குஞ்சர மன்னூர் வீசிய கொள்ளி
அஞ்சன வண்ண னுழியி னேவும்
செஞ்சர மென்னச் சென்றன மென்மேல்.

வஞ்சனை மன்னன் வாழும் இலங்கை,
குஞ்சரம் அன்னூர் வீசிய கொள்ளி,
அஞ்சன வண்ணன் ஆழியில் ஏவும்
செஞ்சரம் என்னச் சென்றன மென்மேல்.

பொ :- வஞ்சனை செய்த இராவணன் வாழ்கின்ற இலங்கை நகர்மேல் யானை போன்ற பெருவலிபடைத்த வானரர் வீசிய கொள்ளிகள், மைவண்ணனுன இராமன் சினந்து கடல்மிசை எய்த சிவந்த அங்கியங் கணைகளைப்போல மேலும் மேலும் தொடர்ந்து சென்றன.

கு :- வருணன்மேல் சினங்கொண்ட இராமன் கடலின்மேல் எய்த அங்கியங் கணைகள் மேலும் மேலும் தொடர்ந்து சென்று வீழ்ந்தன ஆகலின், வானரங்கள் மேலும் மேலும் ஒன்றன்பின் ஒன்றுக வீசிக்கொண்டிருந்த கொள்ளிகளுக்கு உவமையாயின. மேலைச் செய்யுளில் மேலிருந்து கொள்ளிகள் இலங்கையில் வீழ்தற்கு உவமை கூறியவர், இச் செய்யுளில் அக் கொள்ளிகள் மேலும் மேலும் செல்லுதற்கு உவமை கூறியவாறு. இராமன் வீசிய அங்கியங் கணைபோல வானரங்கள் கொள்ளிகளை அடுத்தடுத்து வீசின என்றவாறு. சீதையை வஞ்சித்துக் கவர்ந்தமை நினைந்து இராவணனை வஞ்சனை மன்னன் என்றுர். தான் வழிப்பட்டும் வாராது வஞ்சனையாக மறைந்திருந்த வருணன்வாழ்கின்ற கடலை இராமன் அங்கியங் கணையால் அழிக்கத் தொடங்கியதுபோல, வஞ்சனை செய்த இராவணன் மறைந்து வாழ்கின்ற இராவணன் நகரைக் கொள்ளிகொண்டு வானரங்கள் அழிக்கத் தொடங்கின என உவமையை விரித்துக் கொள்க. (23)

## இலங்கை எரிதல்

8996. கய்யக லிஞ்சிக் காவல் கலங்கச்
செய்ய கொழுந்தீச் சென்று நெருங்க
ஐயன் நெடுங்கா ராழியை யம்பால்
எய்ய வெரிந்தா லொத்த திலங்கை.

கைஅகல் இஞ்சிக் காவல் கலங்க,
செய்ய கொழுந்தீ சென்று நெருங்க,
ஐயன் நெருங்கார் ஆழியை அம்பால்
எய்ய எரிந்தால் ஒத்தது, இலங்கை.

பொ :- இடம் அகன்ற மதிலாகிய காவல் கலங்குமாறு சிவந்த செழுமையான தீ சென்று நெருங்குவதால், இலங்கை நகர் (வேகின்ற தோற்றம்) இராமன், நீண்ட கரியகடலை அம்பினால் எய்தபோது அக் கடல் எரிந்தாற்போன்று தோன்றிற்று.

கு :- கொழுந்தீச் சென்று நெருங்கலால் இலங்கை, ஐயன் ஆழியை அம்பால் எய்ய எரிந்தால் ஒத்தது என இயையும். மேற் கூறிய உவமையை மேலும் விரித்தவாறு. மேல் வானரங்கள் வீசிய கொள்ளிகளுக்கு, இராமன் கடல்மேல் விசிய அங்கியங் கணையை உவமைகூறியவர்,இங்கும் அக் கணையால்அக் கடல் எரிந்தாற்போல இலங்கை வானரங்களின் கொள்ளிகளால் எரிந்தது என்றவாறு. (24)

## தீப்பற்றலால் பறவைகள் விண்ணில் எழுந்து பறத்தல்

8997. பரற்றுறு தொல்பழு வத்தெரி பற்ற
நிரற்றுறு பல்பற வைக்குல நீளம்
உரற்றின விண்ணி னொலித்தெழும் வண்ணம்
அரற்றி யெழுந்த தடங்க விலங்கை.

பரல்துறு தொல் பழுவத்து எரிபற்ற,
நிரல்துறு பல்பறவைக் குலம், நீளம்
உரற்றின, விண்ணின் ஒலித்து எழும்வண்ணம்
அரற்றி எழுந்தது, அடங்க இலங்கை.

பொ :- பரற்கற்கள் நெருங்கியுள்ள பழமையான காட்டில் எரி பற்றிக்கொள்ள, (அதுகண்டு) வரிசையாக நெருங்கியிருந்த பல பறவைக் கூட்டம், தம் கூட்டில் முன்பு அரற்றினவாய்ப் பின்பு

விண்ணில் அரற்றிக்கொண்டு எழுதல்போல, இலங்கை நகரத்துள்ள அரக்கர் கூட்டம் முழுவதும் விட்டிலிருந்து அரற்றிக்கொண்டு வெளியே எழுந்தது.

கு :- பழுவம்-காடு. காட்டில் மரங்களில் கூடு கட்டிக்கொண்டு வாழ்ந்த பறவைகள், அக் காட்டில் எரிபற்றியது அறிந்து தத்தம் கூட்டிலிருந்து முழங்கிக்கொண்டு பின்பு விண்ணில் அரற்றிக் கொண்டு பறந்தெழுதல் போல, இலங்கை நகரம் தீப்பற்றியெரிவது கண்ட அரக்கர் அரற்றிக்கொண்டு தத்தம் விடுகளிலிருந்து வெளியே புறப்பட்டார்கள் என்றவாறு. நிரல்-வரிசை. நீளம்-கூடு. உரற்று தல்—முழங்குதல். 'உருமுரறு கருவிய பெருமலை' (மலைபடு—357) என்புழியும் இச் சொல் இப் பொருள் பட்டிருத்தல் காணலாம். இலங்கை இடவாகு பெயராய் இலங்கையரக்கரை உணர்த்தியது. எழும் வண்ணம்போல அரற்றி எழுந்தது என உவம உருபு விரிக்க. (25)

## இராமன் அம்பினுல் இலங்கை மதிற்கோபுரம் விழுதல்

8998. மூவுல கத்தவ ரும்முத லோரும்
மேவின விற்ருெழில் வீர னிராமன்
தீவ மெனச்சில வாளி செலுத்தக்
கோவுர முற்றும் விழுந்தது குன்றின்.

மூஉல கத்தவ ரும்,முத லோரும்,
மேவின வில்தொழில் வீரன் இராமன்,
தீவம் எனச்சில வாளி செலுத்த,
கோவுரம் இற்று விழுந்தது, குன்றின்.

பொ :- மூன்று உலகத்தில் உள்ளவரும் முதற் கடவுளரும் விரும்பத்தக்க வில்தொழில் வீரனுகிய இராமன், விளக்குப்போல சில அம்புகளைச் செலுத்திஞுக, இலங்கைக் கோபுரம் முழுவதும் குன்று போல இடிந்து விழுந்தது.

கு :- முதலோர் என்றது, மும்மூர்த்தியரை. மேவுதல்-விரும்பு தல். வானரங்கள் கொள்ளிகொண்டு வீசா நிற்கும்போது இராமனும் சில அம்புகளைச் செலுத்திஞன்; அவ்வம்பினுல் கோபுரங்கள் இடிந்து மலைபோல வீழ்ந்தன. தீபம், கோபுரம் என்பன எதுகை நோக்கி தீவம், கோவுரம் எனத் திரிந்தன. அம்பின் ஒளி புலப்படத் 'தீவ மெனச் சில வாளி' என்ருர். கோபுரத்தின் பெருமை புலப்பட 'குன்றின் இற்று விழுந்தது' என்ருர். (26)

### அனுமன் மீண்டு வருதல்

8999. இத்தலை யின்ன நிகழ்ந்திடு மெல்லைக்
கைத்தலை யிற்கொடு காலி னெழுந்தான்
உய்த்த பெருங்கிரி மேருவி னுப்பால்
வைத்த நெடுந்தகை மாருதி வந்தான்.

இத்தலை, இன்ன நிகழ்ந்திடும் எல்லை,
கைத்தலை யில்கொடு காலின் எழுந்தான்,
உய்த்த பெருங்கிரி மேருவின் உப்பால்
வைத்த, நெடுந்தகை மாருதி வந்தான்.

பொ :- இலங்கையில் இவ்வாறு நிகழ்ந்து கொண்டிருக்கையில், தான் கொணர்ந்த பெரிய மருத்துமலையைக் கையில் எடுத்துக் கொண்டு காற்றுப்போல விரைந்து எழுந்து மேருவின் அப் பக்கத்தில் வைத்த, நெடிய தன்மையனாகிய, அனுமன் வந்தான்.

கு :- உய்த்த பெருங்கிரி கைத்தலையிற் கொடு என இயையும். எழுந்தான், முற்றெச்சம். உப்பால் என்றது அப் பக்கத்தை. நெடிய வடிவோடு மருத்துமலையைக் கொண்டுபோய் வைத்த நிலையை நினைந்து, அனுமனை 'நெடுந்தகை' எனச் சிறப்பித்தார். நெடுந்தகை யாகிய மாருதி என இருபெயரொட்டாக்குக. (27)

### அனுமன் ஆர்ப்பொலி கேட்டு இலங்கை நடுங்குதல்

9000. அறையர வக்கழன் மாருதி யார்த்தான்
உரையா வஞ்செவி யுற்றுள தவ்வூர்
சிறையா வக்கலு ழன்கொடு சீறும்
இறையா வக்குல மொத்த திலங்கை.

அறைஅரவக் கழல் மாருதி ஆர்த்தான்,
உறைஅரவம் செவி உற்றுளது, அவ்ஊர்;
சிறைஅரவக் கலுழன் கொடுசீறும்
இறைஅரவக் குலம் ஒத்தது, இலங்கை.

பொ :- ஒலிக்கின்ற ஒலியைக் கொண்ட வீரக்கழலை அணிந்த அனுமன் ஆரவரித்தான்; அந்தச் செறிந்த ஒலி அவ் விலங்கையின் செவியில் பட்டது; (அவ் வனுமன் ஆர்ப்பு ஒலியைச் செவியில் கேட்ட தனால்) இலங்கை, சிறகுகளையுடைய கருடன் ஆரவாரம் கொண்டு சீறப்பெற்ற தலைமையுடைய பாம்பின் கூட்டம் ஒத்தது.

கு:- உறை அரவம் என்றது, அழுத்தமான ஆரவாரத்தை. உறைதல்-செறிதல்; அழுந்துதல். அவ்வூர் செவியுற்றுளது; எனவும் சிறைக் கலுழன் அரவங்கொடு சீறும் எனவும் இயையும். அனுமனது ஆரவாரத்தைக் கேட்டு நடுங்கும் இலங்கைக்கு உவமையாகக் கலுழனது அரவம்கேட்டு நடுங்கும் பாம்பின் கூட்டத்தைக் கூறுதலே பொருத்தமாதல் காண்க. சீறும் அரவக்குலம் என்புழிச் செய்யும் என்னும் பெயரெச்சம் செயப்படு பொருட்பெயர் கொண்டது; 'உண்ணுஞ்சோறு' என்புழிப்போல. அனுமனது சீற்றத்தாலாகிய ஆரவாரம், சிறகுகளோடுகூடிய கலுழனது சீற்றத்தோடுகூடிய ஆரவாரம் போன்றது எனவும், அனுமனது ஆரவாரம் கேட்டு இலங்கையரக்கர் நடுங்குதல், கலுழன் ஆரவாரம் கேட்டுப் பாம்புக் கூட்டம் நடுங்குவது போன்றது எனவும், உவமையை விரித்துக் கொள்க. இறையரவம்-தலைமைத் தன்மையுடைய நாகங்கள் வஞ்சனையரக்கர்க்கு நஞ்சினையுடைய பாம்புக் கூட்டம், பொருந்திய உவமையாதல் காண்க. சிறிய திருவடி எனப்படும் அனுமனுக்குப் பெரிய திருவடியாகிய கலுழனை உவமை கூறிய பொருத்தம் நினைக்கத் தகும். (28)

### மேலைவாயிலில் அனுமனை இந்திரசித்து நெருங்குதல்

9001. மேற்றிசை வாயிலை மேவிய வெங்கட்
காற்றின் மகன்றனை வந்து கலந்தான்
மாற்றலின் மாயம் வகுக்கும் வலத்தான்
கூற்றையும் வென்றுயர் வட்டணை கொண்டான்.

மேல்திசை வாயிலை மேவிய வெங்கண்
காற்றின் மகன்தனை வந்து கலந்தான்—
மாற்றல் இல்மாயம் வகுக்கும் வலத்தான்,
கூற்றையும் வென்றுஉயர் வட்டணை கொண்டான்.

பொ:- மாற்ற முடியாத மாயத்தைச் செய்யும் வலிமைபெற்றவனும், எமனையும் வென்று உயர்ந்த வெற்றி உலாவை மேற்கொண்டவனுமாகிய இந்திரசித்து, மேலைவாயிலை அடைந்த கொடிய கண்ணையுடைய அனுமனை வந்து நெருங்கினன்.

கு:- அனுமன் மேலைவாயிலை அடையும்போது இந்திரசித்தும் அங்கு வந்து சேர்ந்தான் என்றவாறு. காற்றின் மகன்-மாருதி என்னும் பொருளது. இந்திரசித்து செய்யும் மாயத்தை யாரும் மாற்ற இயலாது ஆதலின், 'மாற்றல் இல்மாயம் வகுக்கும் வலத்தான்' என அவனைப் புகழ்ந்தவாறு. உலகோர் அனைவரையும் வென்று உயிர்

கொள்ளும்கூற்றுவனையும் இந்திரசித்து வென்று அவ் வெற்றி புலப் பட உலா மேற்கொண்டான் என்பார், 'கூற்றையும் வென்றுயர் வட்டணை கொண்டான்' என்றார். உம்மைஉயர்வு சிறப்பு. வட்டணை- உலா. தன் வெற்றி தோன்ற இந்திரசித்து திரிந்த உலாவினை 'உயர்வட்டணை' எனச் சிறப்பித்தார். வட்டணை கொள்ளுதலாவது உலாவினை மேற்கொள்ளுதல். வட்டணை கொண்டான், கலந்தான் என இயையும். வலத்தான், கொண்டான் என்பன குறிப்பு வினைப் பெயரும் தெரிநிலை வினைப்பெயருமாய் ஒரு பொருள்மேல் பல பெயர் களால் அடுக்கி நின்றன. (29)

## மாயா சீதையின் கூந்தலை ஒருகையில் பற்றிக்கொண்டு சினந்து இந்திரசித்து சொல்லுதல்

**9002. சானகி யாம்வகை கொண்டு சமைத்தோர்**
**மானனை யாளை வடிக்குழல் பற்றூ**
**ஊனகு வாளொரு கைக்கொ டுருத்தான்**
**ஆனவ னந்நிலை யின்ன வறைந்தான்.**

சானகி ஆம்வகை கொண்டு சமைத்துஓர்
மான் அனையாளை வடிக்குழல் பற்றூ,
ஊன்நகு வாள்ஒரு கைக்கொடு உருத்தான்,
ஆனவன் அந்நிலை இன்ன அறைந்தான்.

பொ:- அத்தகைய இந்திரசித்து அந்த நிலையில் ஒரு மான் போன்ற மங்கையைச் சீதையாகத் தோன்றும்படி மாயங் கொண்டு (அம் மாயாசீதையின்) திருந்திய கூந்தலைப் பற்றிக் கொண்டு (தசை விளங்கும் வாளினை மற்றொரு கையில் கொண்டு) சினந்த வனாய் இத்தகைய சொற்களை சொல்லானான்.

கு:- ஆனவன், அந்நிலை ஓர் மான் அனையாளைச் சானகியாய் வகைகொண்டு சமைத்து அவள் வடிக்குழல் பற்றூ, வாள் ஒரு கைக்கொடு உருத்து இன்ன அறைந்தான் என இயையும். இதனால், வேறொரு பெண்ணையே சீதையாக மாயத்தால் சமைத்தான் என்பது புலனும். வடிக்குழல்-திருந்திய கூந்தல். ஒரு கையில் சீதையின் கூந்தலையும் ஒரு கையில் வாளையும்கொண்டு இந்திரசித்து சினந்து சொல்லுகின்றான் என்க. பகைவர் உடம்பில் பாய்ந்து பழகிய வாள் என்பார், 'ஊன் நகு வாள்' என்றார். நகுதல்-விளங்குதல். உருத்தல்- கோபித்தல். உருத்தானாய் அறைந்தான் என முற்றெச்சமாக்கி முடிக்க. (30)

இச் செய்யுளுக்குப்பின் 23, 43ஆம் ஏடுகளில் பின்வரும் செய்யுள் காணப்படுகிறது.

**9002a.** எந்தையு மிந்த விலங்கையு ளோரும்
உய்ந்துயர் இறைத லும்முயர் வுண்டோ
முந்தையர் வானவர் யாவரு மொப்பில்
இந்திர சித்தவ னின்னன சொன்னான்.

## சீதையைக் கொல்வேன் என்ற இந்திரசித்தின் சொல்லைக்கேட்டு அனுமன் அஞ்சிச் சோர்தல்

9003. வந்திவள் காரண மாக மலைந்தீர்
எந்தை யிகழ்ந்தனன் யானிவ ளாவி
சிந்துவெ னென்று செறுத்துரை செய்தான்
அந்தமின் மாருதி யஞ்சி யயர்ந்தான்.

'வந்து,இவள் காரணம் ஆக மலைந்தீர்;
எந்தை இகழ்ந்தனன்; யான்இவள் ஆவி
சிந்துவென்' என்று செலுத்து, உரைசெய்தான்;
அந்தம்இல் மாருதி அஞ்சி' அயர்ந்தான்.

பொ :- (நீங்கள்) இவள் காரணமாக வந்து போர் செய்தீர்கள்; அதை அறிந்து என் தந்தை இவளை வேண்டாம் என இகழ்ந்து ஒதுக்கி விட்டான்; யான் இவளுடைய உயிரைப் போக்குவேன்' என்று வெகுண்டு சொன்னான்; அதுகேட்டு மரணமிலாத (சிரஞ்சீவி யான) அனுமன் அஞ்சிச் சோர்ந்தான்.

கு :- செறுந்தல்-வெருளுதல். அனுமன் சிரஞ்சீவி நிலையை அடைந்தவன் ஆதலின் 'அந்தமில் மாருதி' எனப்பட்டான். (31)

## இந்திரசித்தின் கையில் சீதையைக் கண்ட அனுமன் நிலை

9004. கண்டவ ளேயிவ ளென்பது கண்டான்
விண்டது போலுநம் வாழ்வென வெந்தான்
கொண்டிடை தீர்வதொர் கோளறி இல்லான்
உண்டுயி ரோவென வாயு முலர்ந்தான்.

'கண்டவளே இவள்' என்பது கண்டான்,
'விண்டது போலும், நம்வாழ்வு'என வெந்தான்;
கொண்டு, இடைதீர்வது ஒர்கோள் அறிகில்லான்,
'உண்டு உயிரோ'என வாயும் உலர்ந்தான்.

பொ :- (நான் தூது சென்றபோது) கண்ட சீதையே இவள் என்பதைத் தெளிவாக அறிந்தான்; 'நம்வாழ்வு அழிந்ததுபோலும்' என மனம் வெந்தான்; அச் சீதையை அவன் கையிலிருந்து விடுவித்துக்கொண்டு போவதொரு நெறியை அறிய இல்லாதவனாய், 'உயிர் உண்டோ?' என்று கண்டவர் ஐயுறுமாறு வாயும் உலரப் பெற்றான் ஆயினான்.

கு :- இலங்கையில் சீதையைக் கண்டவனுதலின் அனுமன் அவ் வடையாளத்தைக் கொண்டு உறுதிசெய்தான் என்பார், 'கண்டவளே யிவள் என்பது கண்டான்' என்ருர். வானர சேனையில் அனுமனையன்றிச் சீதையைக் கண்டோர் பிறர் இலர் என்பதை நினைந்தே இந்திரசித்தும் அனுமன் எதிரில் மாயா சீதையைக் கொல்வதாகிய சூழ்ச்சியைச் செய்தான் என்பதை, ''சானகியுருவமாகச் சமைத்தவள் தன்மைகண்ட, வானுயர் அனுமன் முன்னே வாளினுற் கொன்று மாற்றி'' (16) என முன் கூறியதால் உணரலாம். விண்டது-பிளந்தது; அழிந்தது. கொல்ல இருக்கின்ற இந்திரசித்தின் கையில் இருக்கும் சீதையை எப்படியேனும் விடுவிக்க நினைத்தும் வழி தெரியாமையினுல் உயிர்விடுவது போன்ற இன்னலுற்ருன் என்பார், 'கொண்டு இடை தீர்வதொர் கோள் அறிகில்லான் ... வாயுமுலர்ந்தான்' என்ருர். வாய் உமிழ்நீர் வற்றல் மரணம் நெருங்கியதற்கு அடையாளம் ஆதலின், உயிர் உண்டோ? எனக் கண்டோர் ஐயுறுவர் என்றவாறு. ஓகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. (32)

## இந்திரசித்துக்கு அனுமன் நீதி கூறல்

9005. யாது மினிச்செய லில்லென லெண்ணு
நீதி யுரைப்பது நேரென வோரா
கோதில் குலத்தொரு நீகுண மிக்காய்
மாதை யொறுத்தல் வசைத்திற மன்ருே.

'யாதும் இனிச்செயல் இல்'என எண்ணு,
நீதி உரைப்பது நேர்'என ஓரா,
கோதுஇல் குலத்து ஒரு நீ குணம் மிக்காய்!
மாதை ஒறுத்தல் வசைத்திறம் அன்ருே?

பொ :- (அனுமன்) இனி நாம் செய்யத்தக்க செயல் ஏதும் இல்லை என எண்ணியும், நீதி சொல்வதே நேர்மையான உயாயம் என ஆராய்ந்து அறிந்தும், (இந்திரசித்தினை நோக்கி) குணமிக்கவனே! குற்றமற்ற குலத்தில் பிறந்த ஒப்பற்ற நீ, ஒரு பெண்ணைக் கொல்லுதல் என்பது பழிச்செயல் அல்லவோ?

கு :- முப்பத்தாருவது செய்யுளில் 'என்ருன்' என முடியும். குற்றமற்ற குலத்தில் பிறந்து குணமிக்கவனுக உள்ள உனக்குப் பெண் கொலை புரிதல் பழியை யுண்டாக்கும் என்றவாறு. சீதையை விடுவித்தலாகிய நன்மையைப் பெறுதற்கு, இந்திரசித்தினைக் குணமிக்கவனுகவும் குற்றமற்ற குலத்திற் பிறந்தவனுகவும்

புகழ்ந்து கூறியவாறு. வசை-பழி. ஒறுத்தல்-தண்டித்தல்; இங்குக் கொல்லுதலை யுணர்த்தியது. 'எண்ணு, ஓரா, 'நீ மாதை ஒறுத்தல் வசைத்திற மன்றோ என்ருன்' என இயையும். (33)

9006. நான்முக னுக்கொரு நால்வரின் வந்தாய்
நூன்முக முற்று நுணங்க வுணர்ந்தாய்
பான்முக முற்ற பெரும்பழி யன்ரோ
மான்முக முற்றொரு மாதை வதைத்தல்.

'நான்முக னுக்கு ஒரு நால்வரின் வந்தாய்;
நூல்முகம் முற்றும் நுணங்க உணர்ந்தாய்;
பால்முகம் உற்ற பெரும்பழி அன்ரோ,
மால்முகம் உற்று ஒருமாதை வதைத்தல்?

பொ :- (நீ) பிரமனுக்கு ஒரு நாலாவது தலைமுறையினனாகி இராவணனிடத்தில் வந்து பிறந்துள்ளாய்; நூல்களில் உள்ள சிறந்த கருத்துக்கள் எல்லாவற்றையும் நுட்பமாக உணர்ந்துள்ளாய்; (இவ் விருவகைச் சிறப்பும் பொருந்திய நீ) அறிவு மயங்கி ஒரு பெண்ணைக் கொல்லுதல், பழிக்கத்தக்க பகுதிகள் எல்லாம் இடம்பெற்ற பெரிய பழி அல்லவோ?

கு :- நான்முகனுக்கு ஒரு நால்வர் என்றது, பிரமனுக்கு நாலாவது தலைமுறையினனாகிய இராவணனை. பிரமன் மகன் புலத்தியன்; புலத்தியன் மகன் விச்சிரவசு; விச்சிரவசுவின் மகன் இராவணன் ஆதலின், இங்ஙனம் கூறினர். பிரமனுக்கு நாலாவது தலைமுறையினனான இராவணனிடத்தில் வந்து பிறந்துள்ளாய் என்றவாறு. குலப்பிறப்பாலும் கல்விச் சிறப்பாலும் தூய்மை மிக்குள்ள நீ நின் தகுதிக்குப் பொருந்தாத பெண்கொலை செய்தால் பழிக்கப்படும் குற்றங்கள் எல்லாம் இடம்பெற்ற பெரிய பழியாக முடியும் என்று விளக்கியவாறு. நூல்களில் உள்ள சிறந்த கருத்துகளையே இங்கு 'நூன்முகம்' என்ருர். பால்-பகுதி. பழிக்கத்தக்க பகுதிகள் எல்லாம் நிறைந்த பெரிய பழியை விளைப்பது பெண் கொலை என்பார், 'பால்முகமுற்ற பெரும்பழி' என்ருர். கொலைப் பழியும், தனக்கு ஈடாகாத எளியவனைக் கொன்ற பழியும் பெண்ணைக் கொன்ற பழியும், கற்புத் தெய்வத்தைக் கொன்ற பழியும் என இக் கொலையால் வரும் பழிப் பகுதிகள் பலவாதலின், பால்முகமுற்ற பெரும்பழி என்ருர். மால்முகம் உறுதலாவது, அறிவு மயங்குதல். (34)

9007. மண்குலை கின்றது வானு நடுங்கிக்
கண்குலை கின்றது காணுதி கண்ணுல்
எண்குலை கின்ற திரங்க றுறந்தாய்
பெண்கொலை செய்கை பெரும்பழி யன்ரு.

'மண்குலை கின்றது; வானும் நடுங்கிக்
கண்குலை கின்றது; காணுதி, கண்ணுல்;
எண்குலை கின்றது; இரங்கல் துறந்தாய்!
பெண்கொலை செய்கை பெரும்பழி அன்ரு?

பொ :- இரக்கம் என்னும் பண்பினைக் கைவிட்டவனே! (நீ செய்யும் செயலைக் கண்டு) மண்ணுலகம் நடுங்குகின்றது; வானுலகமும் நடுங்கிக் கண் கலங்குகின்றது; (நீயே)கண்ணுல் காண்பாயாக? என்னுடைய எண்ணமும் நடுங்குகின்றது; பெண்கொலை செய்வது பெரும்பழிக்குக் காரணம் அல்லவா?

கு :- பெண்கொலை புரியத் துணிந்த நெஞ்சம் இரக்கமுள்ளதாக இருத்தல் இயலாதாகலின், 'இரங்கல் துறந்தாய்' என இந்திரசித்தினை அனுமன் விளித்தான். குலைதல்-நடுங்குதல். மண், வான் என்பன இடவாகு பெயராய் அங்குள்ள மக்களையும் தேவரையும் உணர்த்தின. எண்-எண்ணம்; நெஞ்சம். (35)

9008. என்வயி னல்கினை யேகுதி யென்ருல்
நின்வய மாமுல கியாவையு நீநின்
அன்வய மேது மறிந்திலை யையா
புன்மை தொடங்கல் புகழ்க்கழி வென்ருன்.

'என்வயின் நல்கினை ஏகுதி என்ருல்,
நின்வயம் ஆம்;உலகு யாவையும்; நீநின்
அன்வயம் ஏதும் அறிந்திலை; ஐயா!
புன்மை தொடங்கல் புகழ்க்குஅழிவு என்ருன்.

பொ :- இந்தச் சீதையை என்னிடத்தில் கொடுத்துச் சென்ருல் இவ் வுலகம்எல்லாம் நின்வயமாகும்: நீநின் குலத்தின் பெருமையைச் சிறிதும் அறிந்திலை; ஐயா! புல்லிய இச் செயலைச் செய்யத் தொடங்காதே! தொடங்கினுல் நின் புகழ்க்கு அழிவுண்டாகும் என்று கூறினுன்.

கு :- நல்கினை என்ற வினைக்குச் சீதை என்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. சீதையைக் கொடுத்துச் சென்ருல் இந்திரசித்தின் இச் செயலைக் கண்டு உலகவர் அனைவரும் அவன் சொல்வழி நிற்பர்

என்றவாறு. அன்வயம்-குலம். தொடங்கல் என்பது அல்லீற்று எதிர்மறை வியங்கோள்; 'மகனெனல்' (குறள்—196) என்புழிப்போல. இனித் தொழிற் பெயராகக் கொண்டு கூறலும் ஆம். மேல் பழி உண்டாகும் என்ற அனுமன் இச்செய்யுளால் புகழழியும் என்ருன். (36)

## இந்திரசித்தின் மறுமொழி

9009. என்றனன் மாருதி யிந்திர சித்தும்
ஒன்றுரை கேளென தெந்தையு மூரும்
பொன்றுத றீரு மிதிற்புக முண்டோ
நன்றுரை யென்றுபி னக்குரை செய்தான்.

என்றனன் மாருதி; இந்திர சித்தும்
'ஒன்றுஉரை கேள்;எனது எந்தையும் ஊரும்
பொன்றுதல் தீரும்; இதின் புகழ் உண்டோ?
நன்றுரை !' என்று பின்நக்கு, உரைசெய்தான்.

பொ :- மாருதி இவ்வாறு கூறினுைக, இந்திரசித்தும் 'ஒரு சொல் கேள்? (யான் இவளைக் கொல்வதனுல்) என் தந்தை இராவண னும் இலங்கையும் அழிவுஎய்துதல் நீங்கும்,இதைக்காட்டிலும்புகழ்க் குக் காரணமான செயல் பிறிதுண்டோ? 'நல்ல சொல் சொன்னுய்' என்று இகழ்ந்து சிரித்துப் பிறகு சொல்லலானுன்.

கு :- தன் தந்தையும் இலங்கையும் அழியாமல் காக்கின்ற செய லாகச் சீதையின் கொலே அமைவதால், இச் செயலேக் காட்டிலும் புகழ்க்குக் காரணமான செயல் வேறில்லே என்று இந்திரசித்து நிறுவியவாறு. அனுமன் நல்லதைச் சொல்லவில்லே என்பான் குறிப் பினுல் 'நன்றுரை' என்று புகழ்ந்து இகழ்ந்தவாறு. (37)

இச் செய்யுள் 2, 9, 18, 19, 21, 23, 26, 29, 43, 44, 54, 60, 62, 63, 65, 66, 70, 74 என்ற எண்ணுள்ள ஏடுகளில் இல்லே. இடைச் செருக லாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

9010. எந்தையு மிந்த விலங்கையு ளோரும்
உய்ந்திட வானவர் யாவரு மோடச்
சிந்துவென் வாளினி லென்று செறுத்தான்
இந்திர சித்தவ னின்ன விசைத்தான்.

'எந்தையும் இந்த இலங்கை யுளோரும்
உய்ந்திட, வானவர் யாவரும் ஓட,
சிந்துவென் வாளினில் என்று செறுத்தான்
இந்திர சித்தவன் இன்ன இசைத்தான்.

பொ :- 'என் தந்தையும் இந்த இலங்கையிலுள்ளவர்களும் உய்ந்திடவும் தேவர்கள் யாவரும் அஞ்சி ஓடவும் (சீதையை) வாளி னுல் வெட்டுவேன்' என்று வெகுண்டவனுய், இந்திரசித்து இத்த கைய சொற்களைச் சொல்லலானுன்.

கு :- செறுத்தானுய் இன்ன இசைத்தான் என முற்றெச்சமாக்கி முடிக்க. வாளினில் சிந்துதலாவது வெட்டுதல்; செயப்படுபொருள் அவாய் நிலையான் வருவிக்கப்பட்டது. (38)

## இந்திரசித்து அயோத்திமேலும் செல்வேன் எனல்

9011. போமின டாவினை போயது போலாம்
ஆமெனி னின்னு மயோத்தியை யண்மிக்
காமின தின்று கனற்கரி யாக
வேமிது செய்தினி மீண்டுவெ னென்ருன்.

'போமின். அடா!வினை போயது போலாம்?
ஆம்எனில், இன்னும் அயோத்தியை அண்மி,
காமின்; அதுஇன்று கனல்கரி ஆக
வேம்;இது செய்து,இனி மீள்குவென்' என்ருன்.

பொ :- 'அடா குரங்கே! என் செய்கை இவள் கொலையோடு முடிந்துவிட்டதோ? (இல்லை;) நீங்கள் எல்லாம் செல்லுங்கள்: உங் களால் ஆகும் என்ருல் அயோத்தியை நெருங்கிக் காவல் செய்யுங் கள்; அந்த அயோத்தி நகரம் இன்று நெருப்பில் கரியாக வேகப் போகின்றது! இந்தச் செயலைச் செய்துவிட்டு இப்போதே மீள்வேன்' என்று கூறினுன்.

கு :- வினை என்றது, இந்திரசித்து செய்யவேண்டிய செயலை. போயது போலாம் என்றது முடிந்தது போலும்? என்று வினவிய வாறு. 'சீதையின் கொலையோடு என் செயல் முடிந்துவிட்டதாகக் கருதவேண்டாம்; யான் அயோத்தி நகரத்தை நெருப்பினுல் கரியாக் கவும் போகின்றேன். குரங்குகளாகிய நீங்கள் எல்லாம் போமின். ஆமெனின், அயோத்தியைக் காமின்!' என இந்திரசித்து வீரவுரை கூறியவாறு. (39)

## இந்திரசித்து, இராமன் தம்பியரையும் தாயரையும் கொல்வேன் எனல்

9012. தம்பியர் தம்மொடு தாயரு மாயோர்
உம்பர் விலக்கிடி னும்மினி யுய்யார்
வெம்பு கடுங்கனல் வீசிடு மென்கை
அம்புக ளோடு மவிந்தன ரம்மா.

தம்பியர் தம்மொடு தாயரும் ஆயோர்,
உம்பர் விலக்கிடினும் இனி உய்யார்;
வெம்பு கடுங்கனல் வீசிடும் என்கை
அம்புகளோடும் அவிந்தனர் அம்மா!

பொ :- (உங்கள் தலைவனான இராமனுக்குத்) தம்பியரோடு தாயரும் ஆயவர்கள் இனித் தேவர்களே வந்து தடுத்தாலும் உய்ய மாட்டார்கள்; வெம்புகின்ற கடுமையான கனலை வீசுகின்ற, என் கையிலுள்ள அம்புகளால் இறந்தனரே ஆவர்.

கு :- தம்பியர் தாயர் என்றது அனுமனுக்குத் தலைவனாய இராமனை நினைந்து கூறியது. கனல் வீசிடும் அம்பு; என் கை அம்பு; எனத் தனித்தனி இயையும். ஒடு கருவிப் பொருளது; 'ஊசியோடு குயின்ற தூசும் பட்டும்' என்புழிப்போல. அம்மா, வியப்பிடைச் சொல். தெளிவுபற்றி அவிந்தனர் என இறந்தகாலத்தாற் கூறினான். அம்புகளால் அவிவர் என்பதே முறை. காலவழுவமைதி.
(40)

9013. இப்பொழு தேகடி தேகுவென் யானிப்
புட்பக மான மதிற்புக நின்றேன்
தப்புவ ரேயவர் சங்கையி லாவென்
வெப்புறு வாளிக ளின்று விரைந்தால்.

'இப்பொழுதே கடிது ஏகுவென்; யான் இப்,
புட்பக மானம் அதில்புக நின்றேன்;
தப்புவரே அவர், சங்கை இலாஎன்
வெப்புறு வாளிகள் இன்று விரைந்தால்?

பொ :. யான் இந்தப் புட்பக விமானத்தில் புக்கு நின்றவனாய், இப்பொழுதே அயோத்திக்கு விரைந்து செல்வேன்; கணக்கு இல்லாத என் வெப்பமிக்க அம்புகள் இன்று விரைந்து செல்லுமாயின் அவர்கள் தப்பிவிடுவார்களா? (தப்பார்.)

கு:- யான் புட்பகமானமதிற் புக நின்றேனுய்க் கடிது ஏகுவான்; என் வாளிகள் விரைந்தால் அவர் தப்புவரோ? என இயையும். சங்கை-எண்ணிக்கை; ஐயம் எனலும் ஆம். அம்புகளின் கொடுமை புலப்பட 'வெப்புறு வாளிகள்' என்முன், (41)

### மாயா சீதையை வெட்டிவிட்டு இந்திரசித்து சேனையொடு விரைதல்

9014. ஆளுடை யாயரு ளாயரு ளாயென்
றேழை வழங்குறு சொல்லி னிரங்கான்
வாளி னெறிந்தனன் மாகடல் போலும்
நீளுறு சேனயி னேடு நிமிர்ந்தான்.

'ஆளுடையாய்! அருளாய் அருளாய்!' என்று
ஏழை வழங்குறு சொல்லின் இரங்கான்,
வாளின் எறிந்தனன்; மாகடல் போலும்
நீள்உறு சேனயி னேடு நிமிர்ந்தான்.

பொ:- 'என்னை ஆளாக உடைய அரசே! அருள்வாயாக; அருள்வாயாக!' என்று சீதை சொல்கின்ற சொல்லிற்கு இரங்காத வனுய் இந்திரசித்து அவளை வாளால் வெட்டிவிட்டு, பெரிய கடல் போன்ற நெடிய சேனையோடு புட்பக விமானத்தில் உயர்ந்து பறந்தான்.

கு:- தன்னைக் கொல்லாமல் விடவேண்டும் என்று வேண்டுகின்ற மாயா சீதை இந்திரசித்தினை 'ஆளுடையாய்!' என விளித்தாள்; மாயா சீதையின் இச் சொல் பொய்யே யாயினும் அனுமனுக்கு உண்மையாகத் தோன்ற வேண்டி இங்ஙனம் கூறினுள். எறிந்தனனுய் நிமிர்ந்தான் என்க. நிமிர்தலாவது விமானத்தில் எழுதல். (42)

### இந்திரசித்து சீதையைக் கொன்றுவிட்டுப் புறப்பட்டவுடன் அனுமன் அலறி விழுதல்

9015. தென்றிசை நின்று வடாது திசைக்கட்
பொன்றிணி புட்பக மேற்கொடு போனுன்
ஒன்று முணர்ந்திலன் மாருதி யுக்கான்
வென்றி நெடுங்கிரி போல விழுந்தான்.

தென்திசை நின்று வடாது திசைக்கண்
பொன்திகழ் புட்பகம் மேல்கொடு போனான்;
ஒன்றும் உணர்ந்திலன், மாருதி உக்கான்
வென்றி நெடுங்கிரி போல விழுந்தான்.

பொ.- தென் திசையிலிருந்து வடதிசைக்கண் பொன்னொளி வீசும் புட்பக விமானத்தின்மேல் இந்திரசித்து போனான்; அது கண்டு மாருதி ஒன்றும் உணராதவனாய் உயிர்ப்பிழந்து வெற்றி மிக்க நெடிய மலைபோலத் தரையில் விழுந்தான்.

கு:- உக்கான் என்றது உயிர்ப்பிழந்த நிலையை யுணர்த்திய வாறு. அயோத்தி இலங்கைக்கு வடதிசைக்கண் உள்ளது ஆகலின், இந்திரசித்து வடக்குத் திசைக்கண் போவதுபோலக் காட்டினான் என்க. அனுமனுக்கு உவமையாக வேண்டி வென்றி நெடுங்கிரியைக் கூறினார்; இல் பொருளுவமை. வென்றி விளைத்திருந்த ஒரு மலை தரையில் சாய்ந்ததுபோல வென்றிவிளைத்த நெடிய தோற்றத்தின னாகிய அனுமன் மூச்சற்றுத் தரையில் விழுந்தான் என்றவாறு. (43)

## வடதிசைக்கண் போன இந்திரசித்து நிகும்பலை புகலும் அனுமன் நிலையும்

**9015. போயவன் மாறி நிகும்பலை புக்கான்**
**தூயவ னெஞ்சு துயர்ந்து சுருண்டான்**
**ஓய்வரு மாலி ஒருங்க வுணர்ந்தான்**
**ஏயன பன்னின னின்னன சொன்னான்.**

போயவன் மாறி நிகும்பலை புக்கான்;
தூயவன் நெஞ்சு துயர்ந்து சுருண்டான்,
ஓய்வரு மாரி ஒருங்க உணர்ந்தான்;
ஏயன பன்னினன் இன்னன சொன்னான்.

பொ:- அயோத்தி நோக்கிப் போவதாகக் காட்டிய இந்திரசித்து அத் திசைமாறி நிகும்பலை என்னும் கோயிலுள் புகுந்தான்; அவன் வஞ்சனையை யுணரவியலாத தூயவனாகிய அனுமன், மனம் வருந்திச் சுருண்டு விழுந்தவன் ஒய்வில்லாத கண்ணீர்மாரி ஒருசேர ஒழுக உணர்ந்தவனாய்த் தன் மனத்தில் தோன்றியதைச் சொல்லத் தொடங்கி இத்தகைய சொற்களைச் சொல்லலானான்.

கு :- போயவன், வினைப்பெயர்; அயோத்தி நோக்கிப் புறப் பட்டதாகக் காட்டிய இந்திரசித்து பின்பு நிகும்பலை என்ற கோயில் உள்ள திசையில் விமானத்தைச் செலுத்தினான் என்பார், 'மாறி, நிகும்பலை புக்கான்' என்றார். துயர் என்ற பெயர்ச் சொல்லிலிருந்து 'துயர்ந்து' என்ற வினையெச்சச் சொல்லைக் கம்பர் படைத்துக் காட்டியுள்ளார்; சித்திரித்து, கடைக்கணித்து என்பன போல. கண்ணீர் மாரி பெருகுதலால் உணர்ந்தவனாய் ஏயன பன்னினன் இன்னன சொன்னான் என்க. மாரி என்றது கண்ணீர்மாரியை. ஒருங்குதல்- ஒருசேரச் சொரிதல். ஏயன என்றது மனத்திற்குப் பொருந்திய சொற்களை. உணர்வற்று வீழ்ந்த அனுமனை அவன் கண்ணீர் மாரியே உணர்வுண்டாக்கி யெழுப்பியது என்றவாறு. (44)

## அனுமன் சீதையை நோக்கி அரற்றுதல்

9017. அன்னமே யென்னும் பெண்ணி
* னருங்குலக் கலமே யென்னும்
என்னமே யென்னுந் தெய்வ
மில்லையோ யாது மென்னும்
சின்னமே செய்யக் கண்டுந்
தீவினை நெஞ்ச மாவி
பினனமே யாய தில்லை
யென்னும்பே ராற்றல் பேர்ந்தான்.

'அன்னமே!' என்னும்; 'பெண்ணின்
அருங்குலக் கலமே!' என்னும்
'என்னமே!' என்னும்; 'தெய்வம்
இல்லையோ யாதும்?' என்னும்;
'சின்னமே' செய்யக் கண்டும்
தீவினை நெஞ்சம் ஆவி
பின்னமே ஆயது இல்லை
என்னும்—பேர் ஆற்றல் பேர்ந்தான்.

பொ :- தனது பெரிய வலிமை குறையப் பெற்றவனாகிய அனுமன், (சீதையை நோக்கி) 'அன்னமே!' என்பான்; பெண்களின் அரிய குலத்திற்கே அணிகலன் பொன்றவளே! என்பான்; 'என் அம்மையே!' என்பான்; இத் தீமையைத் 'தடுக்கத் தெய்வம் எதுவும்

இல்லையோ?'' என்பான்; (உன்னை வாளினால்) சின்ன பின்னமாக்கக் கண்டும் தீவினையுடைய எனது நெஞ்சமும் உயிரும் பிளந்தொழிய வில்லை; என்பான்.

கு :- அழகும் தூய்மையும் நினைந்து சீதையை 'அன்னமே' எனவும், கற்பின்பெருமை நினைந்து 'பெண்ணின் அருங்குலக்கலமே' எனவும், தனக்குத் தாயாம் தகுதியார் என்பது நினைந்து 'என்னமே' எனவும் விளிப்பானாயினான். அம்மே என்பது இடைக் குறையாய் 'அமே' என நின்றது. தூய்மையும் கற்பும் பெருந்தன்மையும் உடைய சீதை கொலைப்படுவது கண்டும் எத் தெய்வமும் வந்து தடுக்கவில்லையே என்ற கருத்தால் 'தெய்வமில்லையோ யாதும்' என்றான். இத்தகைய துன்பக் காட்சியைக் கண்ட என் மனமோ, உயிரோ பிளந்திருக்க வேண்டும்; அதுதானும் நிகழவில்லையே என்று, தன்னிலைக்கும் அனுமன் இரங்கியவாறு. தாயின் கொலை கண்டும் பிளந்தொழியாத கன் மனத்தையும் போகாத வல்லுயிரை யும் பெற்றுள்ளேனே என்பது கருத்து. (45)

## அனுமன் படும் அல்லல்

9018\. எழுந்தவன் மேலே பாய
வெண்ணும்பே ரிடரைத் தள்ளி
விழுந்துவெய் துயிர்த்து விம்மி
வீங்கும்போய் மெலியும் வெந்தீக்
கொழுந்துக ளுயிர்க்கும் யாக்கை
குலைவுறுந் தலையே கொண்டுற்
றுழுந்தரை தன்னைப் பின்னை
யினையன வுரைப்ப தானான்.

எழுந்துஅவன் மேலே பாய
எண்ணும்; பேர் இடரைத் தள்ளி;
விழுந்துவெய்து உயிர்த்து விம்மி
வீங்கும்; போய் மெலியும்; வெந்தீக்
கொழுந்துகள் உயிர்க்கும்; யாக்கை
குலைவுறும்; தலையே கொண்டுஉற்று
உழும்தரை தன்னை; பின்னை
இனையன உரைப்பது ஆனான்.

பொ :- இந்தப் பெரிய துன்பத்தைத் தள்ளிக்கொண்டு எழுந்து, அந்த இந்திரசித்தின் மேலே பாயலாமா? என எண்ணுவான்; பிறகு தரைமேல் விழுந்து வெப்பமாக மூச்சுவிட்டுக்கொண்டு தேம்பி முகம் வீங்குவான் ; அந்த நிலைபோய் மெலிவுறுவான் ; வெப்பமான அனற் கொழுந்துகளையே உயிர்ப்பான்; உடல் நடுங்குவான்; தன் தலையையே கொண்டு தரையைப் பொருந்தி உழுவான்; பின்னர் இத் தன்மையான சொற்களைச் சொல்லலானான்.

கு :- இடரைத்தள்ளி எழுந்து அவன்மேலே பாய எண்ணும் என இயையும். மூச்சுக் காற்றுடன் தீக்கொழுந்துகளும் வருமாறு வெப்பமாகப் பெருமூச்சு விடுவான் என்பார், வெந்தீக் கொழுந்துகள் உயிர்க்கும் என்றார். தலையையே கலப்பையாகக் கொண்டு தரையை யுழுவான் என்க. என்றது, தரையில் தலையை முட்டிக்கொண்டு துன்புறுவான் என்றவாறு. (46)

### அனுமன் அவல உரைகள்

9019. முடிந்தது நந்த மெண்ண
மூவுல கிற்குங் கங்குல்
விடிந்ததென் றிருந்தேன் மீள
வெந்துய ரிருளின் வெள்ளம்
படிந்தது வினையச் செய்கை
பயந்தது பாவி வாளால்
தடிந்தனன் திருவை யந்தோ
தவிர்ந்தது தரும மம்மா.

"முடிந்தது நம்தம் எண்ணம்;
மூவுல கிற்கும் கங்குல்
விடிந்தது" என்றுஇருந்தேன்; மீள
வெந்துயர் இருளின் வெள்ளம்
படிந்தது; வினையச் செய்கை
பயந்தது; பாவி வாளால்
தடிந்தனன் திருவை! அந்தோ
தவிர்ந்தது தருமம் அம்மா'

பொ :- நம் எண்ணம் முடிந்தது; மூன்று உலகங்கட்கும் துன்ப இருள் விடிந்தது என்று இருந்தேன்; மீளவும் கொடிய துன்பமாகிய இருளின் பெருக்கு வந்து படிந்துவிட்டது. வஞ்சகச்

செய்கையே பயனளித்துவிட்டது; தருமம் பயனளிக்காமல் நீங்கியது; பாவியாகிய இந்திரசித்து வாளினல் திருமகளின் அமிசமாகிய சீதையை வெட்டி வீழ்த்திவிட்டான்; அந்தோ!

கு:- கங்குல் என்றது, துன்பமாகிய இருளை; விடிதலாவது துன்ப இருள் நீங்குதல்; வெந்துயரிருளின் வெள்ளம் எனப் பிற் கூறுவதால் கங்குல் என்றது துன்பத்தையே என்பதை விளக்கியுள்ளமை காணலாம். வினையச் செய்கை என்றது, வஞ்சகச் செய்கையை. 'அறம் வெல்லும் பாவம் தோற்கும்' என்று எண்ணிக் கொண்டிருந்த அனுமன், தன் முன்னே வஞ்சக அரக்கரின் பாவச் செயல் அவற்குப் பயன்தந்ததையும், இராம இலக்குவரின் அறச் செயல் பயன் தாராது போனதையும் சீதையின் கொலையினல் கண் கூடாகக் கண்டான் ஆகலின் இங்ஙனம் கூறலானன். பாவி வாளால் திருவைத் தடிந்தனன் அந்தோ! என இயையும். பிரமாத் திரத்தினல் உளதாகிய துன்பஇருள் மருத்து மலையைக் கொணர்ந்ததனல் நீங்கிற்று என எண்ணி மகிழ்ந்திருந்த அனுமன் சீதையின் சிறப்பாகிய துன்பப் பேரிருள் சூழ்ந்துகொண்டதை நினைந்து வருந்தியவாறு. தருமம் தவிர்ந்தது என்றது, பயன்தாராமல் நீங்கியது என்றவாறு. (47)

9020. பெருஞ்சிறைக் கற்பி னளைப்
பெண்ணினைக் கண்ணிற் கொல்ல
இருஞ்சிறை யற்ற புட்போல்
யாதுமொன் றியற்ற லாற்றேன்
இருஞ்சிறை யழுங்கு கின்றே
னெம்பிரான் றேவி பட்ட
அருஞ்சிறை மீட்ட வண்ண
மழகிது பெரிது மம்மா.

'பெருஞ்சிறைக் கற்பி னளைப்
பெண்ணினைக் கண்ணின் கொல்ல,
இருஞ்சிறை அற்ற புள்போல்,
யாதும்ஒன்று இயற்றல் ஆற்றேன்;
இருஞ்சிறை அழுங்குகின்றேன்;
எம்பிரான் தேவி பட்ட
அருஞ்சிறை மீட்ட வண்ணம்
அழகிது பெரிதும் அம்மா.

பொ :- பெரிய காவலாகிய கற்பினையுடைய சீதையை—பெண்ணினை—என் கண்முன் கொல்லவும், பெரிய சிறகுகள் அற்ற பறவை போல யாதொன்றும் செய்ய இயலாதவனாய் இருந்து, சிறிது வருந்திக் கொண்டிருக்கிறேன்; எம்பெருமானாகிய இராமன் மனைவியை அவள் அகப்பட்டிருந்த பொறுத்தற்கரிய சிறையிலிருந்து மீட்டவண்ணம் அம்மா மிகவும் அழகிது!

கு :- பெண்ணினைக் காப்பதற்குரிய மதிலும் வாயிற்காவலும் ஆகிய சிறையினும் நிறையாகிய காவல் சிறந்தது ஆகலின், அதனைப் 'பெருஞ் சிறைக் கற்பு' என்கின்றார். "சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர், நிறைகாக்குங் காப்பே தலை" (குறள்-57) என வள்ளுவனாரும் சிறைக் காவலினும் நிறைக்காவல் சிறந்தது என்பதை விளக்கியுள்ளமை காணலாம். நிறை, நெஞ்சைக் கற்புநெறி நிறுத்துதல் என்ற பரிமேலழகர் விளக்கமும் இங்கு நினையலாம். "பூவை கற்பெனும் இருஞ்சிறை" (ஆரணி-சடாயு-144)என்று காண்க. சீதையைக் காப்பதற்குரிய கற்பாகிய காவலும் அவளைக் கொலையுண்ணாமல் காக்கவில்லை; தன்னைத்தானே காத்துக்கொள்ள இயலாத பெண்ணினை யானும் காக்க வியலாதவனாக ஆனேன் என்பான், 'பெருஞ்சிறைக் கற்பினாளைப் பெண்ணினைக் கண்ணிற் கொல்ல இருஞ்சிறை அற்ற புள்போல் யாதுமொன்றியற்ற லாற்றேன்' என்றான். சிறை முன்னது காவல் என்ற பொருளிலும் இரண்டாவது சிறகு என்ற பொருளிலும் அருஞ்சிறை என்புழித் தங்குதற்கரிய சிறைச்சாலை என்ற பொருளிலும் வந்தது. மூன்றும் அடியிலுள்ள இருஞ்சிறை என்பது இருஞ்சு இறை அழுங்கு கின்றேன் எனப் பிரிக்கப்படும்; இருந்து என்பது இருஞ்சு எனப் போலியாய் எதுகைநோக்கி வந்தது. இறை-சிறிது. ஒன்றும் செய்ய இயலாத யான் இருந்து சிறிது வருந்துவதைப் பயனின்று என்பது புலப்படுத்தியவாறு! அனுமன் தனக்குக் கைகளிருந்தும் அக் கைகளைக்கொண்டு இந்திரசித்தினை ஒன்றும் செய்ய இயலாமையின் சிறகற்ற பறவையைத் தனக்கு உவமையாகக் கூறிக்கொண்டான். புள் என்றது பொதுவகையாகக் கூறப்பட்டிருப்பினும் 'சீதையைக் காக்க முயன்று இரு சிறையுமற்ற சடாயுவை நினைந்து சடாயுபோல யானும் சீதையைக் காக்க வியலாதவனாக ஆனேன்' என்று அனுமன் நினைத்ததாகக் கூறுவது பொருத்தமுடையதாகும். எதுகையானும் சடாயு உயிர் நீத்த படலம் 144 ஆம் செய்யுள் இச் செய்யுள் ஒத்திருத்தல் நோக்குதற்குரியது. (48)

9021. பாதக வரக்கன் றெய்வப்
பத்தினி தவத்து ளாளைப்
பேதையைக் குலத்தின் வந்த
பிழைப்பிலா தாளைப் பெண்ணைச்

**சீதையைத் திருவைத் தீண்டிச்**
**சிறைவைத்த தீயோன் சேயே**
**காதவுங் கண்டு நின்ற**
**கருமமே பெருமைத் தம்மா.**

பாதக அரக்கன், தெய்வப்
பத்தினி, தவத்துளாளை,
பேதையை குலத்தின் வந்த
பிழைப்பு இலாதாளை, பெண்ணை,
சீதையை, திருவை, தீண்டிச்
சிறைவைத்த தீயோன் சேயே
காதவும், கண்டு நின்ற
கருமமே பெருமைத்து அம்மா!

பொ :- தெய்வக் கற்புடையவளாய்த் தவத்திலிருப்பவளை—பேதைமைக் குணமுடையவளை—நல்ல குலத்தில் பிறந்த குற்றமற்றவளை—பெண்ணை—சீதையை—திருமகள் அமிசமானவளைக் கவர்ந்து சென்று சிறையில் வைத்த பாதக அரக்கனாகிய தீய இராவணன் மகனே கொல்லவும் கண்டுகொண்டு நின்ற என் செயலே எல்லாவற்றினும் பெருமையுடையது!

கு :- பாதக அரக்கனாகிய தீயோன் என இயையும். இனி, பாதகவரக்கனாகிய சேய், தீயோன் சேய் என இந்திரசித்துக்கே இரு பெயரொட்டு ஆக்கலும் ஆம், பாதகனும் கொள்ளுதற்கு ஏலாத இயல்புகளையுடையவள் சீதை என்பதைப் புலப்படுத்த. ஒரு பொருள்மேல் வந்த பல பெயராகத் தெய்வப் பத்தினி முதல் சீதை என்ற பெயர் வரையில் அடுக்கிக் கூறியுள்ள முறை இரக்க வுணர்ச்சியை யெழுப்ப வல்லதாக அமைந்திருத்தல் காணலாம். சீதையைக் காதவும் என இயையும். 'திருவைத் தீண்டிச் சிறைவைத்த தீயோன்' எனத் தீண்டுதற்குச் செயப்படுபொருளாகத் திருவைமட்டும் கொள்க. சீதையிருந்த பன்னசாலையோடு இராவணன் பெயர்த்துக் கொடுபோனான் என்று முன்கூறப்பட்டுள்ளமையால் இங்குத் 'தீண்டுதல்' என்று கூறியது தரையோடு சீதையைப் பெயர்த்துச் சென்றதையே குறிப்பதாகக் கொள்ளல் வேண்டும். சீதையைக் கொன்றது பத்தினியைக் கொன்ற பாவத்தையும் தவத்தியைக் கொன்ற பாவத்தையும், ஒன்றுமறியாப் பேதையைக் கொன்ற பாவத்தையும், குற்றமற்ற குலக்கொடியைக் கொன்ற பாவத்தையும் பெண்ணைக் கொன்ற பாவத்தையும் தருகின்ற மாபாதகம் என்பது புலப்படுத்தியவாறு. தீயோன் சிறைவைத்திருந்த நிலையைக் கண்டு வாளா வந்தது

போலவே, அவன் சேய் காதவும் கண்டு நின்றது சிறுமையுள் சிறுமை எனத் தன்னைப் பழித்துக் கொள்கிறான் அனுமன். 'கண்டு நின்ற கருமமே பெருமைத்து' என்றது குறிப்பு மொழி. சிறுமைத்து என்பதே கருத்து. (49)

9022. கல்விக்கு நிமிர்ந்த கீர்த்திக்
காகுத்தன் றூத ணுகிச்
சொல்விக்க வந்து போனே
ணுய வித்துயர் செய்தாரை
வெல்விக்க வந்தே னுன்னை
மீட்பிக்க வன்று வெய்தின்
கொல்விக்க வந்தே னென்றோர்
கொடும்பழி கூட்டிக் கொண்டேன்.

கல்விக்கும் நிமிர்ந்த கீர்த்திக்
காகுத்தன் தூதன் ஆகிச்
சொல்விக்க வந்து போனேன்,
ஆய இத்துயர் செய்தாரை
வெல்விக்க வந்தேன்; உன்னை
மீட்பிக்க அன்று; வெய்தின்
கொல்விக்க வந்தேன் என்றுஓர்
கொடும்பழி கூட்டிக் கொண்டேன்.

பொ :-கல்வி அறிவிற்கும் எட்டாது உயர்ந்த பெரும் புகழினை யுடைய இராமனுக்குத் தூதுவனாகி, அவன் சொன்ன சொல்லைத் தெரிவிக்க முன்வந்து போன யான், இப்போது கூட்டமான இந்தத் துயர் செய்த அரக்கர்களை வெல்விக்க வந்தேன்; உன்னை மீட்பிக்க அன்று; மிகக் கொடுமையாக உன்னைக் கொல்லுமாறு செய்யவே வந்தேன் என்று ஒரு கொடும்பழியை யான் தேடிக்கொண்டேன்.

கு :- கல்வி என்றது, கல்வியினாலாய அறிவினை; என்றது புலமையை. புலமை யுள்ளத்தாலும் அளந்துகூற முடியாதபடி மிக உயர்ந்த புகழினை யுடையவன் இராமன் என்றவாறு. "புலவரை யிறந்த புகழ் சால் தோன்றல்" (புறநா—21) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். ககுத்தன் என்ற அரசன் மரபில் தோன்றியவன் இராமன் ஆகலின், காகுத்தன் எனப்பட்டான். காகுத்தன் தூதனாகி வந்து போனபோது புகழ்பெற்ற அனுமன் சீதையை மீட்பிக்க வந்த போது கொடும்பழியையே பெற வேண்டியதாயிற்று என்றவாறு.

ஆயம்-கூட்டம். ஆய இத்துயர் என்றது, பலவகையான துன்பங்களைத் துன்பம்செய்தாரை வெல்லவந்த யான் அவரை வெல்வித்தேன்; நின்னை மீட்க வந்த யான் நின்னைக் கொல்வித்தேன் என அனுமன் கூறி வருந்தியவாறு. தன் கண்முன் சீதையை இந்திரசித்து கொன்றுனுகலின், அதை வாளா பார்த்துக் கொண்டிருந்த தானே இக் கொலைக்குக் காரணன் என அனுமன் ஏறிட்டுக்கொண்டவாறு. வாளா பார்த்துக்கொண்டிருந்தமையால் அரக்கரை வெல்வித்தவாறும் ஆயிற்று என்றவாறு. கொல்விக்க என்புழி விக்குதல், வெளிப்படுத்தல் என்னும் பொருளது. (50)

9023. வஞ்சியை யெங்குங் காணு
துயரினை மறந்தா னென்னச்
செஞ்சிலை யுரவோன் தேடித்
திரிகின்று னுள்ளந் தேற
அஞ்சொலா ளிருந்தாள் கண்டே
னென்றயா னரக்கன் சொல்லத்
துஞ்சினு ளென்று சொல்லத்
தோன்றினேன் றேற்ற மீதால்.

வஞ்சியை எங்கும் காணுது,
உயிரினை மறந்தான் என்ன,
செஞ்சிலை உரவோன் தேடித்
திரிகின்றுன் உள்ளம் தேற,
"அம்சொலாள் இருந்தாள்; கண்டேன்"
என்றயான், "அரக்கன் கொல்லத்
துஞ்சினுள்' என்றும் சொல்லத்
தோன்றினேன்; தோற்றம் ஈதால்!

பொ :- வஞ்சிக்கொடி போன்ற சீதையை எங்கும் காணுமல் தன்உயிரையே மறந்தவன் போலத் தேடித் திரிகின்றவனுகிய செம்மையான வில்வலி படைத்த வீரனுகிய இராமன் மனம் தெளியும்படி, 'அழகிய சொல்லையுடைய சீதை இருந்தாள்; (இலங்கையில்) கண்டேன்' என்று கூறி மகிழ்வித்த யான், இப்போது 'அரக்கனுகிய இந்திரசித்து கொல்லச் சீதை இறந்தாள்' என்று சொல்லவும் தோன்றினேன். என் பிறப்பு இத்தகைய முரண்பட்ட தன்மையதாயிற்றே!

கு :- வஞ்சிக்கொடி போன்ற சீதையை வஞ்சி என்று உவமை ஆகுபெயரால் கூறியவாறு. தன்னுயிரைப் பெரிதாக எண்ணுமல் இராமன் சீதையையே சிறப்பாக எண்ணித் தேடித் திரிந்தான் என அவன் தன்னலமற்ற காதலுணர்வைப் புலப்படுத்தி 'வஞ்சியை யெங்குங் காணுது உயிரினை மறந்தானென்ன...... தேடித்திரி கின்ருன்' என்ருர். திரிகின்ருனுகிய உரவோன் உள்ளம் தேற என இயையும். சீதையை எங்கும் காணுது வருந்திய இராமனது வருத்தம் தீரச் சீதை இலங்கையில் இருப்பதைக் கண்டு வந்து சொல்லி அவன் கலக்கந் தீர்த்த யானே, அவள் இறந்தாள் என்பதைச் சொல்லி அவனைத் துன்பத்தில் ஆழ்த்தும் தீய செயலையும் செய்யத் தோன்றினேன்! என் பிறப்பே இத்தகையதாயிற்றே! என அனுமன் நினைந்து வருந்தியவாறு. (51)

9024. அருங்கடல் கடந்திவ் வூரை
யள்ளெரி மடுத்து வெள்ளக்
கருங்கடல் கட்டி மேருக்
கடந்தொரு மருந்து காட்டிக்
குரங்கினி யுன்னே டொப்ப
தில்லெனக் களிப்புக் கொண்டேன்
பெருங்கடற் கோட்டந் தேய்த்த
தாயதென் னடிமைப் பெற்றி.

'அருங்கடல் கடந்து, இவ் ஊரை
அள்எரி மடுத்து, வெள்ளக்
கருங்கடல் கட்டி, மேருக்
கடந்துஒரு மருந்து காட்டி,
''குரங்குஇனி உன்னேடு ஒப்பது
இல்''எனக் களிப்புக் கொண்டேன்;
பெருங்கடல் கோட்டம் தேய்த்து
ஆயது, என் அடிமைப் பெற்றி!

பொ :- கடத்தற்கு அரிய கடலைக் கடந்து வந்து, இந்த இலங்கையைச் செறிவுள்ள எரியூட்டி, நீர்மிக்க கரிய கடலில் சேது என்னும் அணை கட்டி, மேருமலையைக் கடந்துசென்று ஒப்பற்ற மருந்து கொணர்ந்து காட்டி, (இறந்தவரை யெல்லாம் எழுப்பி) இனி 'உன்னேடு ஒப்பதாகிய குரங்கு இல்லை' என்று என்னை யானே புகழ்ந்து கொண்டு களிப்படைந்தேன்; இவ்வாறெல்லாம் செய்த என் அடிமைத் தன்மை இப்போது பெரியகடலில் கோட்டம் என்னும் வாசனை மரத்தைத் தேய்த்தது போலப் பயனற்றதாயிற்று.

கு :- கடல் கடத்தலும் இலங்கை எரியூட்டலும், சேது கட்டலும், மருந்துமலை கொணர்தலும் ஆகிய தன் அரிய செயல்கள் எல்லாம் சீதையை இந்திரசித்து கொன்று விட்டமையினால் பயனற்ற செயலாயது என்பதைப் புலப்படுத்தி அனுமன் வருந்திய வாறு. அனுமன் போன்று இந்தகைய பெருஞ்செயல் செய்த குரங்கு பிறிது இல்லை ஆதலின், 'குரங்கினி உன்னோடு டொப்பது இல்' என்று அனுமன் தனக்குள் தானே சொல்லிக்கொண்டு மகிழ்ந்தான் என்றவாறு. "என்குலம் எனக்குத் தந்தாள்" (சுந்தர- திருவடி தொழுத 61) என்றதும் இக்கருத்தானேயாதல் நினையலாம். சிறி தளவு தண்ணீரில் கோட்டத்தைத் தேய்த்தால் அத்தேய்வு மணமிக்க தாய்ப் பயன்படும் ; பெரிய கடலில் அதனைத் தேய்த்தால் அளவற்ற அக் கடல்நீரில் கலந்து அது மறைந்து போகுமேயன்றி மணம் வீசாது; அதுபோல, அனுமன் செய்த அடிமைத் தொண்டுகள் யாவும் சீதை இறந்த துயர்க்கடலில் கலந்து மறைந்து போயதே யன்றிப் பயன்படவில்லை என உவமையை விரித்துக் கொள்க. "கடலிடைக் கோட்டம் தேய்த்துக் கழிவது கரும மன்றால்" (கும்ப கருணன் வதைப்—146) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். (52)

9025. விண்டுநின் றாக்கை சிந்தப்
புல்லுயிர் விட்டி லாதேன்
கொண்டுநின் றானைக் கொல்லக்
கூசினே னெதிரே கொல்லக்
கண்டுநின் றேன்மற் றின்னும்
கையினாற் கனிகள் வெவ்வே
றுண்டுநின் றுய்ய வல்லே
னெளியனோ வொருவ னுள்ளேன்.

விண்டுநின்று ஆக்கை சிந்தப்
புல்உயிர் விட்டிலாதேன்,
கொண்டுநின்றானைக் கொல்லக்
கூசினேன் ! எதிரே கொல்லக்
கண்டுநின்றேன் !மற்று இன்னும்
கையினால் கனிகள் வெவ்வேறு
உண்டுநின்று உய்ய வல்லேன் ;
எளியனோ ? ஒருவன் உள்ளேன் !

பொ :- நின்னைக் கொல்லுதற்காகக் கையில்கொண்டு நின்ற இந்திரசித்தினைக் கொல்லக் கூசினேன் ; ஆனால், என் கண் எதிரே

உன்னைக் கொல்லக் கண்டு கொண்டு, என்னுடம்பு நின்று பிளந்து இந்தச் சிறிதாகிய என்னுயிரை விடத் துணியாதவனாய்—இன்னும் கையினால் வெவ்வேறு சுவையுள்ள கனிகளை உண்டு நின்று உயிர் வாழ்தற்கு வல்லனாய்,—வாளா நின்றேன்; இத்தகைய யான் எளியவனோ ? ஒப்பற்றவனாகவே உள்ளேன் !

கு :- சீதையை அரக்கன் கொல்லக் கண்டும் உயிர்விடாதிருக்கும் தன் இழிதகவை நினைந்து அனுமன் தன்னைப் பழித்துக் கொண்டவாறு. சீதையைக் கையில் பற்றிக்கொண்டுள்ள இந்திரசித்தைக் கொல்ல முயன்றால், சீதைக்கு என்ன நேர்ந்து விடுமோ என்று கூசி வாளா இருந்த அனுமன், அந்த இந்திரசித்து சீதையைக் கொன்ற போதேனும் அவன்மேற் பாய்ந்து கொன்றிருக்க வேண்டும்; அது இயலாது போனால், தன்னுயிரையேனும் விட்டிருத்தல் வேண்டும். இவ்விரண்டில் ஒன்றும் செய்யாது, அப்பெண் கொலை பார்த்துக்கொண்டு நின்றது, பின்னிருந்து பலவகைக் கனிகளைச் சுவையுறவுண்டு உயிர்வாழும் எண்ணத்தினாலேயே என்பது விளக்கி, இத்தகைய இழிவுடைய தான் எளியனல்லன் ; ஒப்பற்றுயர்ந்தவன்! எனக் குறிப்பினால் அனுமன் தன்னைப்பழித்துக் கூறி இரங்குகின்றான். கொல்லக் கண்டு, உயிர்விட்டிலாதேனாய், கனிகள் உண்டு நின்று உய்யவல்லேனாய் நின்றேன்; எளியனோ ? ஒருவன் உள்ளேன் ! என மாறிக் கூட்டுக. சீதையை மீட்க முடியாத நிலையில் தற்கொலையேனும் செய்துகொண்டிருத்தல் வேண்டும் என்பது அனுமன் கருத்து. (53)

## இரங்கிய அனுமன் இனிச் செய்வது யாதெனச் சிந்தித்தல்

9026. என்னநின் றிரங்கிக் கள்வ
னயோத்திமே லெழுவ னென்று
சொன்னது முண்டு போன
சுவடுண்டு தொடர்ந்து செல்லின்
மன்னனிங் குற்ற தன்மை
யுணர்கிலன் வருவ தோரான்
பின்னினி முடிப்பதி யாதென்
றிரங்கினா னுணர்வு பெற்றான்.

என்னநின்று இரங்கி, 'கள்வன்
''அயோத்திமேல் எழுவேன்'' என்று
சொன்னதும் உண்டு; போன
சுவடு உண்டு; தொடர்ந்து செல்லின்,
மன்னன் இங்கு உற்ற தன்மை
உணர்கிலன்; வருவது ஓரான்;
பின் இனி முடிப்பது யாது?'என்று
இரங்கினன், உணர்வு பெற்றான்.

பொ :- என்னச் சொல்லி நின்று அனுமன் இரங்கி, 'கள்வனாகிய இந்திரசித்து ''அயோத்திமேல் எழுகின்றேன்'' என்று சொன்னது உண்டு; சொன்னவாறே அத் திசை நோக்கிப் போன அடையாளமும் உண்டு; அந்தக் கள்வனைத் தொடர்ந்து யான் அயோத்திக்குச் சென்றால், இராமன் இங்கு நிகழ்ந்ததை உணர வழியில்லை; இனி அயோத்தியில் நேரப்போகின்ற துன்பத்தையும் அறிய கில்லான்; பின்பு இனி யான் செய்து முடிப்பது எதனை?' என்று, மனமிரங்கித் துன்புற்றவனாய்ப் பின் உணர்வினைப் பெற்றான்.

கு :- இந்திரசித்து சீதையைக் கொன்றதை நினைந்தே வருந்திக் கொண்டிருந்த அனுமன், அவன் அயோத்திமேற் செல்வதாகச் சொல்லிச் சென்றதை நினைவு கூர்ந்து, அந்த இந்திரசித்தினைத் தொடர்ந்து அயோத்திக்குச் சென்றுவிட்டால் இங்கு நிகழ்ந்த சீதையின் கொலையைப்பற்றியும் அவன் அயோத்திக்குச் சென்று நிகழ்த்த இருக்கும் துன்பத்தைப் பற்றியும், இராமன் அறிந்துகொள்ள வழியில்லாமற் போகுமே! அயோத்திக்குச் செல்வதா? இராமனிடஞ் செல்வதா? என்று எண்ணி இரங்கிய அனுமன் உணர்வுபெற்று ஒரு முடிவிற்கு வருகின்றான் என்றவாறு. கள்வன் என்றது இந்திர சித்தினை; அவன் சொன்னபடி செய்யாமல் மாறுதற்கும் உரியவன் என்பதையும் நினைப்பித்தவாறு. சொன்னபடியே செய்வதாக அயோத்திக்குப் போவதாகப் போக்குக் காட்டினன் ஆதலின், 'போனசுவடு உண்டு' என்று அனுமன் நினைத்தான். இங்குற்ற தன்மையை உணராமையோடு வருவதையும் ஓரான் என்றவாறு. இங்குற்ற தன்மை என்றது சீதையின் கொலையை; வருவது என்றது, அயோத்தி மேற்சென்று அங்குள்ளாரை அழிப்பதாகச் சொன்னதை. (54)

### சொன்னவாறு செய்வேன் என அனுமன் இராமனையடைதல்

9027. உற்றதை யுணர்த்திப் பின்னை
யுலகுடை யொருவ னோடும்
இற்றுழி னிற்று மாள்வெ
னன்றெனி னெண்ண மெண்ணிச்
சொற்றது செய்வென் வேறோர்
பிறிதிலென் துணிவி தென்னாப்
பொற்றடந் தோளான் வீரன்
பொன்னடி மருங்கிற் போனான்.

'உற்றதை உணர்த்தி, பின்னை
உலகுடை ஒருவ னோடும்,
இற்றுஉறின், இற்று மாள்வென்;
அன்றுஎனின், எண்ணம் எண்ணி,
சொற்றது செய்வென்; வேறுஓர்
பிறிது இலேன்; துணிவுஇது என்னா,
பொன் தடந் தோளான், வீரன்
பொன்அடி மருங்கில், போனான்.

பொ :- 'நிகழ்ந்ததை இராமனுக்கு உணர்த்திப் பிறகு, (அவன்) உயிரொழிவானாயின், உலகுடைய அப்பிரானோடு—யானும் அழிந்தொழிவேன் ; அங்ஙனமில்லையாயின், அவன் கருத்தை எண்ணியறிந்து அவன் சொன்னதைச் செய்வேன்; வேறு பிறிது ஒரு செயலும் யானுடையனல்லேன்; இதுவே துணிவு ;' என்று பொன்னிறமான பெரிய தோளையுடைய அனுமன் வீரனாகிய இராமனது அழகிய திருவடிகளின் பக்கத்தே சென்றான்.

கு :- அனுமனது துணிவு இதனால் விளக்கப்படுகிறது. இந்திரசித்தினைப் பின்பற்றி அயோத்திக்குப் போவதை விடுத்து இராமனுக்கு நிகழ்ந்தது கூறிப் பின் அவன் கருத்துப்படி நடப்பதே தனக்குக் கடமை என்பதை அனுமன் தெளிந்து, இராமனுள்ள இடத்திற்குச் சென்றான் என்றவாறு. இராமனது பெருமையும் அனுமனது பணியும் புலப்பட இராமன் மருங்கிற் போனான் என்னாது 'வீரன் பொன்னடி மருங்கிற் போனான்' என்றார். 'பொன் தடந்தோளான்' என்றது, அனுமனை. வீரன் என்றது இராமனை. இந்திரசித்து சீதையை வெட்டிவிட்டான் என்பதைக் கேட்டவுடன் இராமன் இறக்கவும்கூடும் ; என்னை ? தன்னுயிரினும் சிறந்தாளாக அவளை எண்ணி இருந்தவன் ஆதலின். அங்ஙனன் இராமன் இறக்க நேர்ந்தால் அனுமன், தன் அடிமைப் பண்பின் இறப்புந்

தோன்ற இறக்கவேண்டும் என எண்ணியது பொருத்தமுடையதே யாகும். அங்ஙனமில்லையாயின் 'சொற்றது செய்வன்; வேறோர் பிறிதிலென்' என்பது, அடிமையின் இயல்பை உள்ளவாறு விளக்கு கின்றது. இராமன் செய்வதைச் செய்வது; அல்லது, இராமன் சொன்னதைச் செய்வது; என்பதே அனுமனது துணிவு என்பது இதனால் புலனாம். (55)

இராமனடியில் வீழ்ந்து பொருமுதல்

9028. சிங்கவே றனைய வீரன்
செறிகழற் பாதஞ் சேர்ந்தான்
அங்கமு மனமுங் கண்ணு
மாவியு மலக்க ணுற்றான்
பொங்கிய பொருமல் வீங்கி
யுயிர்ப்பொடு புறத்திற் போர்ப்ப
வெங்கணீ ரருவி சோர
மால்வரை யென்ன வீழ்ந்தான்.

சிங்கஏறு அனைய வீரன்
செறிகழல் பாதம் சேர்ந்தான்,
அங்கமும் மனமும் கண்ணும்
ஆவியும் அலக்கண் உற்றான்,
பொங்கிய பொருமல் வீங்கி,
உயிர்ப்பொடு புறத்தைப் போர்ப்ப,
வெங்கண் நீர்அருவி சோர,
மால்வரை என்ன வீழ்ந்தான்.

பொ :- ஆண்சிங்கத்தைப் போன்ற வீரனாகிய இராமனது வீரக்கழல் அணிந்த பாதத்தை நெருங்கிய அனுமன்,-உடம்பும் உளமும் கண்ணும் உயிரும் பதைக்கப் பெருந்துன்பமுற்றவனாய், மனத்துள் பொங்கியெழுந்த அழுகைப் பொருமல் பெருகிப் பெருமூச் சோடு உடம்பின் புறத்தையெல்லாம் மூடிக்கொள்ளக் கண்களில் செவ்விய நீர் அருவி பொழியா நிற்கப் பெரிய மலை வீழ்வதுபோல் வீழ்ந்தான்.

கு :- மேலைச் செய்யுளில் வீரன் பொன்னடி மருங்கிற் போனான் என்பதையே இச் செய்யுளிலும் அனுவதித்தவாறு. 'பாதம் சேர்ந்தவனாகிய அனுமன்' என வினையாலணையும் பெயராக்கி மேல்வரும் வினைகட்கு எழுவாயாக்குக. அலக்கணுற்றானாய் வீழ்ந்தான் என முற்றெச்சம் ஆக்கி முடிக்க. பொருமல் என்றது, வெளிப்பட

அழுதல் செய்யாது அடக்கும் நிலையில் தோன்றும் விம்முதலை உணர்த்தியது. உள்ளத்தில் பொங்கிய பொருமல் வீங்கிய நிலையில் உடம்பையும் நடுக்குவதாகலின் 'உயிர்ப்பொடு புறத்திற் போர்ப்ப' என்றார். பெருமூச்சும் விம்முதலாயாகிய உடம்பு, நடுக்கமும் உண்டாகக் கண்ணீர் சொரிந்துகொண்டு இராமன் பாதத்தில் அனுமன் விழ்ந்தான் என்றவாறு. அனுமனது பெரிய தோற்றம் புலப்பட 'மால்வரை யென்ன வீழ்ந்தான்' என உவமை கூறினர். வெம் நீர் என நீர்க்கு அடையாக்குக. துன்பத்தாலாய கண்ணீர் வெப்பமுடையதாதல் இயல்பு. (56)

### இந்திரசித்து சீதையை வெட்டினன் என்பதைக் கூறி அனுமன் தரையில் புரளுதல்

9029. வீழ்ந்தவன் றன்னை வீரன்
விளைந்தது விளம்பு கென்னத்
தாழ்ந்திரு தடக்கை பற்றி
யெடுக்கவுந் தரிக்கு லாதான்
ஆழ்ந்தழு துன்பத் தாளை
யரக்கனின் றயில்கொள் வாளால்
போழ்ந்தன னென்னக் கூறிப்
புரண்டனன் பொருமு கின்றான்.

வீழ்ந்தவன் தன்னை, வீரன்,
'விளைந்தது விளம்பு' கென்று,
தாழ்ந்து,இரு தடக்கை பற்றி
எடுக்கவும், தரிக்கி லாதான்,
'ஆழ்ந்துஅழு துன்பத் தாளை,
அரக்கன், இன்று, அயில்கொள் வாளால்
போழ்ந்தனன்' என்னக் கூறி,
புரண்டனன், பொருமு கின்றான்.

பொ:- வீழ்ந்தவனாகிய அனுமனை இராமன், 'நடந்ததைச் சொல்' என்று சொல்லிக்கொண்டே குனிந்து தன் இரண்டு பெரிய கைகளால் பற்றி எடுக்கவும், எடுக்கத் தரிக்கிலாதவனாய், 'ஆழ்ந்து அழுகின்ற துன்பத்தையுடைய சிதையை இந்திரசித்து இன்று கூர்மைகொண்ட வாளினால் பிளந்துவிட்டான்' என்று சொல்லிக் கொண்டு விம்முகின்றவனாய்ப் புரண்டான்.

கு :- தடக்கையைப் பற்றி என் இரண்டனுருபு விரிக்கினும் அமையும். அரக்கன் என்றது, இந்திரசித்தினை. தரித்தல்-தாங்குதல். பொருமுகின்றுவனைப் புரண்டனன் என இயையும். (57)

### சீதை கொல்லப்பட்டது கேட்ட இராமன் நிலை

9030. துடித்தில னுயிர்ப்பு மில்ல
னிமைக்கிலன் றுள்ளிக் கண்ணீர்
பொடித்திலன் யாது மொன்றும்
புகன்றிலன் பொருமி யுள்ளம்
வெடித்திலன் விம்மிப் பாரில்
வீழ்ந்திலன் வியர்த்தா னல்லன்
அருந்துள துன்பம் யாவு
மறிந்தில ரமர ரேயும்.

துடித்திலன்; உயிர்ப்பும் இல்லன்;
இமைத்திலன்; துள்ளிக் கண்ணீர்
பொடித்திலன்; யாதும் ஒன்றும்
புகன்றிலன்; பொருமி, உள்ளம்
வெடித்திலன்; விம்மிப் பாரில்
வீழ்ந்திலன்; வியர்த்தான் அல்லன்;
அடுத்துஉள துன்பம் யாவும்
அறிந்திலர் அமர ரேயும்.

பொ ;- (அனுமன் சொல்கேட்ட இராமன்) துடிதுடிக்கவும் இல்லை; பெருமூச்சு விடவும் இல்லை; கண்கள் இமைக்கவும் இல்லை; கண்ணீர்த் துளிகளைத் தோற்றுவிக்கவும் இல்லை; யாதொன்றும் பேசவும் இல்லை; தேம்பி இதயம் பிளக்கவும் இல்லை; விம்மியழுது பூமியில் விழவும் இல்லை; துன்பமிகுதியால் வியர்க்கவும் இல்லை; அவனுக்கு அடுத்துள்ள துன்பவுணர்ச்சி முழுவதையும் இவ்வளவினது என இமையா நாட்டமுடைய தேவரும் அறிந்திலராயினர்.

கு :- துன்பம் நேருங்கால் உலகத்தார் படும் துடிப்பு முதலிய மெய்ப்பாடுகள் இராமன்பால் காணப்படவில்லை என்றவாறு. பொடித்தல்-தோன்றுதல். இராமனுக்குத் துன்பவுணர்ச்சி உண்டு என்பதை இமையா நாட்டமுடைய தேவரும் அறிய இல்லா நிலையில் இராமன் சித்திரப்பாவை போல் நின்றான் என்றவாறு. "அன்பென்ப தொன்றன் றன்மை அமரரு மறிந்த தன்றால்" (மருத்துமலைப்-4) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். இராமன் தன் பேரறிவு

புலப்படத் துன்பத்திலும் துன்பவுணர்வைப் புலப்படுத்தாது இருந்தான் என்க. அவன் நிலையைப் பின் 'சித்திரத் தன்மையுற்ற சேவகன்' (60) என விளக்குவர். (58)

### வானர வீரர்களின் நிலை

9031. சொற்றது கேட்ட லோடுந்
துணுக்குற வுணர்வு சோர
நற்பெரு வாடை யுற்ற
மரங்களி னடுக்க மெய்தாக்
கற்பக மனைய வள்ளல்
கருங்கழற் கமலக் கான்மேல்
வெற்பின மென்ன வீழ்ந்தார்
வானர வீர ரெல்லாம்.

சொற்றது கேட்ட லோடும்,
துணுக்குற, உணர்வு சோர,
நல்பெரு வாடை உற்ற
மரங்களின் நடுக்கம் எய்தா,
கற்பகம் அனைய வள்ளல்
கருங்கழல் கமலக் கால்மேல்,
வெற்பி இனம் என்ன வீழ்ந்தார்,
வானர வீரர் எல்லாம்.

பொ :- அனுமன் சொன்னதைக் கேட்ட அளவில், மனம் திடுக்கிட, உணர்வு சோர, நல்ல பெரிய வாடைக்காற்றால் மோதுண்ட மரங்களைப்போல நடுக்கம் அடைந்து, கற்பக மரம் போன்ற வள்ளல் தன்மையுடைய இராமனது பெரிய வீரக்கழல் அணிந்த கமலமலர் போன்ற பாதங்களின்மேல் மலைகளின் கூட்டம் போல வானர வீரர்கள் எல்லாம் வீழ்ந்தார்கள்.

கு :- அனுமன் கூறிய சொல்லுக்கு வாடைக்காற்றும், வானரங்களின் உடல் நடுக்கத்திற்கு மரங்களின் நடுக்கமும், அவர்கள் இராமன் பாத கமலங்களில் வீழ்தற்கு மலைகள் வீழ்வதும் உவமைகளாம். கற்பகம் என்றது, இந்திரனுக்குரிய ஐந்தருக்களில் ஒன்று. அது வேண்டுவார் வேண்டுவனவற்றையெல்லாம் கொடுக்க வல்ல இயல்பினது; இராமனும் தன்னை அடைந்தார்க்கு வேண்டுவனவற்றையெல்லாம் கொடுக்கும் வள்ளல் தன்மையுடையவன் ஆகலின், அவனைக் 'கற்பகமனைய வள்ளல்' என்றார். பெருந்

தலைவனாகிய இராமனுக்கு நேர்ந்துள்ள பெருந்துன்பத்தில் அடியவர்களாகிய வானரங்கள் பங்குகொள்ளும் முறை இது என்பது புலப்பட 'கமலக்கான் மேல் வானர வீரரெல்லாம்......வீழ்ந்தார்' என்றார். கருங்கழல் என்புழிக் கருமை பெருமையை யுணர்த்தியது. (59)

### இராமன் உயிரற்றவன்போல் தரையில் சாய்தல்

**9032. சித்திரத் தன்மை யுற்ற**
**சேவக னுணர்வு தீர்ந்தான்**
**மித்திரர் வதன நோக்கா**
**னிளையவன் வினவப் பேசான்**
**பித்தரு மிறைபொ றுத**
**பேரபி மான மென்னும்**
**சத்திர மார்பிற் றைக்க**
**வுயிரில னென்னச் சாய்ந்தான்.**

சித்திரத் தன்மை உற்ற
சேவகன், உணர்வு தீர்ந்தான்;
மித்திரர் வதனம் நோக்கான்,
இளையவன் வினவப் பேசான்,
பித்தரும் இறைபொ றுத
பேர்அபி மானம் என்னும்
சத்திரம் மார்பில் தைக்க,
உயிர்இலன் என்னச் சாய்ந்தான்.

பொ :- சித்திரத்தின் தன்மை அடைந்திருந்த வீரனாகிய இராமன், இப்போது உணர்ச்சி நீங்கினவனாய்த் தன் காலில் விழுந்தழும் அன்புள்ள வானர வீரர்களின் முகங்களைப் பாராதவனாய், இலக்குவன் துன்பம் தணிக்க வினவவும் அதற்குப் பதில் பேசாதவனாய், பித்தர்களாயுள்ளவர்களும் சிறிதும் பொறுக்கமுடியாத பெரிய அபிமான உணர்ச்சி என்கின்ற வேல் மார்பில் பாய்தலால் உயிர் இலன் ஆயினான், என்னுமாறு தரையில் சாய்ந்தான்.

கு :- இராமன் சித்திரத் தன்மையுற்றதை மேல் 58 ஆம் செய்யுளில் விளக்கப்பட்டது; இங்கு அனுவாதமாக அதையே குறிப்பிட்டவாறு, சேவகன்—வீரன்; என்றது, இராமனை. மித்திரர் நண்பர்; என்றது, வானரத் தலைவர்களை. இராமனது துன்பத்தைத்

தணிக்கும் பொருட்டு இலக்குவன் வினவும் அவன் வினுக்களுக்குப் பதில் கூறவில்லை என்றவாறு. தன் மனைவியை மாற்ருன் கவர்ந் தான் என்ற மானக்கேட்டோடு தன் மனைவியைப் பகைவன் கொன் ருன் என்ற மானக்கேடும் நேர்ந்ததே என்ற மானவுணர்ச்சி தாக்க உயிரிழந்தான்போல இராமன் வீழ்ந்தான் என்றவாறு. தன் மனை யாளைப் பகைவன் கொன்ருன் என்ற மானக்கேட்டைப் பித்தரும் பொறுக்கமாட்டார்கள் என்ருல், உயிர்களின் அறிவுக்கும் அறி வாய் நின்ற இராமன் பொருது வருந்துதல் சொல்ல வேண்டுமோ? என்பார், பித்தரு மிறைபொருத பேரபிமானம் என்னும் சத்திரம் மார்பிற்றைக்க ...... சாய்ந்தான் என்ருர். பேரபிமானம் என்றது பெரிய மான வுணர்ச்சியை; மானமாவது, 'எஞ்ஞான்றும் தம் நிலையில் தாழாமையும், தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழா மையும் ஆம்' என்ற பரிமேலழகர் விளக்கம் இங்கு நோக்குதற் குரியது. இங்கு இராமனுக்கு ஊழிஞல் தாழ்வு வந்துள்ளமையால், அத்தாழ்வினைப் பொருத மானவுணர்ச்சியையே உயிரைப் போக்கும் வேலாக உருவகம் செய்தார். சத்திரம்-வேல். (60)

## இலக்குவனும் உணர்வழிந்து சாய்தல்

9033. நாயகன் றன்மை கண்டுந்
தமக்குற்ற நாணம் பார்த்தும்
ஆயின கரும மீள
வழிவுற்ற வதனைப் பார்த்தும்
வாயொடு மனமுங் கண்ணும்
யாக்கையு மயர்ந்து சாம்பித்
தாயினை யிழந்த கன்றிற்
றம்பியுந் தலத்த னானன்.

நாயகன் தன்மை கண்டும்,
தமக்குஉற்ற நாணம் பார்த்தும்,
ஆயின கருமம் மீள
அழிவுற்ற அதனைப் பார்த்தும்,
வாயொடு மனமும் கண்ணும்
யாக்கையும் மயர்ந்து சாம்பி,
தாயினை இழந்த கன்றின்,
தம்பியும் தலத்தன் ஆனன்.

பொ:- தன் தலைவனான இராமனது நிலைமையைக் கண்டும், தங்களுக்கு நேர்ந்துள்ள நாணத்தக்க நிலையை நோக்கியும், கைகூடி வந்த செயல் மீண்டும் கெட்டுவிட்டதை நினைந்தும், வாயும் மனமும் கண்ணும் உடம்பும் உணர்வழிந்து வாடித் தாய்ப்பசுவை இழந்த கன்றினைப்போலத் தம்பி இலக்குவனும் தரையில் சாய்ந்தான்.

கு:- இராமன் தரையில் உணர்வழிந்து விழ்ந்ததுபோலவே இலக்குவனும் விழ்ந்தான் என்றவாறு. மனைவியை இழந்து துன்புறும் இராமன் நிலைமையைக்கண்ட வருத்தத்தாலும், தமக்கு நேர்ந்துள்ள நாணத்தக்க நிலையை நோக்கியதாலும் கைகூடி வந்த வெற்றி மிண்டும் அழிந்ததே என்பதை நினைத்தலாலும் இலக்குவன் உணர் விழந்து விழ்ந்தான் என மூன்று காரணங்கள் கூறியவர், இறுதியில் சீதையை இழந்த துன்பத்தால் பெரிதும் வருந்தி உணர்விழந்து வீழ்ந்த நிலையைத் 'தாயினை யிழந்த கன்றில்' என்ற உவமையால் புலப்படுத்தியுள்ளார். தாய்ப்பசு போன்றவள் சீதை என்பதும் கன்று போன்றவன் இலக்குவன் என்பதும், சீதையை இழந்த இலக்குவன் துன்பம் தாய்ப்பசுவை இழந்து தவிக்கும் கன்றின் துன்பம்போன்றது என்பதும்புலப்படுத்தியவாறு. மயர்தல்—உணர் வழிதல்; 'விடந்தனை யயின்றன ரெனும்படி மயர்ந்து' (கந்தபு- திருவி-80) என்புழியும் இச் சொல் இப்பொருளில் ஆளப்பட்டிருத்தல் காணலாம். வாயால் பேசுதல் அடங்கியபின் மனத்தால் நினைத்தலை மறத்தலும் பின்பு கண்ணால் பார்த்தல் கூடாத நிலையும், பின்பு மெய்மறத்தலும் உளதாகும் முறைமை நினைந்து' 'வாயொடு மனமுங் கண்ணும் யாக்கையும் மயர்ந்து' என்று கூறியுள்ள அழகு நோக்குதற்குரியது. சாம்புதல்-வாடுதல். அண்ணன் மனைவியைத் தாயாக மதித்தல் மரபு. மேலும், சுமித்திரையும் ''தாயர் நம் பூங்குழற் சீதையென்றே ஏகாய்'' (நகர் நீங்கு-151) எனச் சொல்லியனுப்பியது நினைக. (61)

## இந்திரசித்து சீதையைக் கொல்லுதலும் கூடும் என வீடணன் ஐயுறுதல்

9034. தொல்லைய துணரத் தக்க
 வீடணன் துளக்க முற்றான்
எல்லையி றுன்ப மூன்ற
 விடையொன்றுந் தெரிகி லாதான்

வெல்லவு மரிது நாச
மிவடனுல் விளைந்த தென்னுக்
கொல்வது மடுக்கு மென்று
மனத்திஞே ரையங் கொண்டான்.

தொல்லையது உணரத் தக்க
வீடணன், துளக்கம் உற்றான்,
எல்லையில் துன்பம் ஊன்ற,
இசை ஒன்றும் தெரிகிலாதான்,
"வெல்லவும் அறிது; நாசம்
இவள்தனுல் விளைந்தது" என்னு,
கொல்வதும் அடுக்கும் என்று
மனத்தின் ஓர்ஐயம் கொண்டான்.

பொ :- அரக்கரின் இயல்பான மாயச் செயலை உணரத்தக்க வனுகிய வீடணனும், அளவிலாத துன்பம் அமுத்துதலால் அத் துன்பத்திற்கு நடுவே ஒன்றும் தெரியாதவனுய், நடுக்கமுற்று, "நாம் வெல்லுவதும் அரிதாக உள்ளது; இவளால் அழிவு உண்டாயிற்று" என்று இந்திரசித்து சீதையைக் கொன்றிருக்கவும் கூடும்' என்று மனத்தில் ஒரு சந்தேகத்தைக் கொண்டான்.

கு :- தொல்லை என்றது, இங்கு அரக்கரின் இயல்பான மாயச் செயலை. அரக்கர்க்கு மாயம் செய்தலே இயற்கை என்பதை அறிய வல்லவன், அக்குலத்தில் பிறந்த வீடணன் என்றவாறு. தொல்லை- இயல்பு; சீதையை இழந்து இராமன் படும் அல்லல்கண்டு வீடணன் அளவிலாத் துன்ப முறுகின்ருஞதலின், அத் துன்பத்திற் கிடையே 'அரக்கரின் மாயச் செயலாக இருக்கலாம் இது' என்ற உய்த்துணர்ச்சி ஒன்றும் அவனுக்குப் புலப்படவில்லை என்பார், 'இடையொன்றும் தெரிகிலாதான்' என்ருர். உணரத்தக்க வீடணன் ஒன்றும் தெரிகிலாஞய்த் துளக்கமுற்று, கொல்வதும் அடுக்கும் என்று ஓர் ஐயம் கொண்டான்; என இயையும். தெரிகிலாதான், உற்ருன் என்பன முற்றெச்சங்கள். மனிதரை வெல்வது அரிதாக இருத்தலின், சீதை காரணமாகவே அவர் போர் தொடுத்துள்ளமையால் அவளைக் கொல்லவே அவர் போர் செய்யாது போய் விடுவர் என்ற கருத்தால் இந்திரசித்து கொன்றும் இருக்கலாம் என வீடணன் ஐயுற்ருன் என்றவாறு. உணரத்தக்க வீடணனும் ஐயம் கொண்டான் என்புழி உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. (62)

9035. சீதநீர் முகத்தி னப்பிச்
சேவகன் மேனி தீண்டிப்
போதம்வந் தெய்தற் பால
யாவையும் புரிந்து பொற்பூம்
பாதமுங் கையு மெய்யும்
பற்றினன் வருட லோடும்
வேதமுங் காணு வள்ளல்
விழித்தனன் விழியை மெல்ல.

சீதநீர் முகத்தின் அப்பி,
சேவகன் மேனி தீண்டி,
போதம்வந்து எய்தற் பால
யாவையும் புரிந்து, பொன்பூம்
பாதமும் கையும் மெய்யும்
பற்றினன் வருட லோடும்,
வேதமும் காணு வள்ளல்
விழித்தனன், விழியை மெல்ல.

பொ :- (ஐயம் கொண்ட வீடணன்) குளிர்ந்த நீரை இராமனது முகத்தில் தெளித்து, அவன் திருமேனியைத் தன்கையால் தீண்டி, உணர்வு வரத்தக்க எல்லாச் செயல்களையும் செய்து, அழகிய மலர் போன்ற அவன் திருவடிகளையும் கைகளையும், உடம்பையும் தன் கையால் பற்றித் தடவிக்கொடுத்த அளவில் வேதங்களாலும் காண முடியாத வள்ளல் தன்மையுடைய இராமன் கண்களை மெல்ல விழித் தான்.

கு :- சேவகன் முகத்தின் என முன்னும் சேவகன் மேனி பின்னும் இயையும். சேவகன் இடைநிலைவிளக்கு. வீடணன் தீண்டு தற்கரிய மேனிஎன்பது புலப்படச் 'சேவகன் மேனிதீண்டி' என்றார்- போதம்-உணர்வு, வேதமும் காண முடியாத பெருமையனாகிய இராமன், தனக்கு அன்பனாக வந்தடைந்த வீடணன் தன் கைகளால் தொட்டு வருடுமாறு தன் பொற் பூம்பாதத்தை எளிவரக் கொடுத்த வள்ளன்மையும் வீடணன் பெற்றபேறும் நினைந்து வியந்து கம்பர் இச் செய்யுளை இயற்றியுள்ளார் என்னலாம். வேதமும் காணு ள் ர ல்என் பதனுல் அவன் பெருமையும் பொற் பூம்பாதமுங் கையும் மெய்யும் பற்றினன் வருடலோடும் விழித்தனன் என்றதனுல், அவன் அன்பர்க்கெளியன் ஆனமையும் புலப்படுத்தியவாறு. வேத முங்காணுத பெரியவனுயிருந்தே தன் பகைக் குலத்தில் பிறந்து

தன்னைச் சரணடைந்த வீடணன் தொட்டு வருடுமாறு தன் பாதம் முதலியவற்றைக் கொடுத்துக்கிடந்த அருள் உள்ளத்தை நினைந்து அவனை 'வள்ளல்' என்று சிறப்பித்தவாறு. வீடணன் தன் பாதத்தைத் தொட்டு வருடவேண்டியே இராமன் மயக்கமுற்றான் போலக் கிடந்தானோ ? என்று ஐயுறுமாறு, அவன் வருடலோடும் விழித்தனன் என்றவாறு. (63)

### இராமனைத் தேற்ற இலக்குவன் சொல்வது

9036. ஊற்றுவார் கண்ணீ ரோடு
முள்ளழிந் துற்ற தெண்ணி
ஆற்றுவா னல்ல னாகி
யயர்கின்றா னெனினு மையன்
மாற்றுவா னல்லன் மான
முயிருக வருந்து மென்னாத்
தேற்றுவா னினைந்து தம்பி
யிவையிவை செப்ப லுற்றான்.

ஊற்றுவார் கண்ணீரோடும்
உள்அழிந்து, உற்றது எண்ணி,
ஆற்றுவான் அல்லன் ஆகி,
அயர்கின்றான் எனினும், ஐயன்,
மாற்றுவான் அல்லன்; மானம்
உயிர்உக வருந்தும், என்னா,
தேற்றுவான் நினைந்து, தம்பி
இவை இவை செப்பலுற்றான்.

பொ :- தம்பி இலக்குவன் ஊற்றுகின்ற நெடிய கண்ணீரோடு மனம் அழிந்து தமக்கு நேர்ந்த துன்பத்தை எண்ணி, ஆற்ற முடியாதவனாகி வருந்துகின்றான் எனினும், இராமன் பகைவரை அழிக்கமாட்டான். மானஉணர்வு காரணமாக உயிர் கெடுமாறு வருந்துவான் என்று அவனைத் தேற்றுவதற்கு எண்ணி இன்ன இன்னவற்றைச் சொல்லத் தொடங்கினான்.

கு :- இடைவிடாது ஒழுகுகின்ற கண்ணீரை விளக்க 'ஊற்றுவார் கண்ணீர்' என்றார். வார்—நெடுமை. இலக்குவன், தன் வருத்தத்தை அடக்கிக்கொண்டு உயிர்விடும் நிலையில் வருந்துகின்ற இராமனைத்

தேற்றச் சில சொல்லலானுன் என்றவாறு. மாற்றுதலாவது, பகை வரை அழிப்பது. மானத்தால் உயிர் உக வருந்துகின்ருன் என முன்ருவது விரிக்க. பகைவனல் கவரப்பெற்ற சீதையை மீட்காமை யோடு அவனைக் கொல்லவும் விடுத்தோமே என்ற மானவுணர்ச்சி உயிரையும் போக்கவல்லது என்றவாறு.

9037. முடியுநாட் டானே வந்து
முற்றிஞற் றுன்பந் மூந்நீர்ப்
படியுமாஞ் சிறியோர் தன்மை
நினக்குது பழியிற் ருமால்
குடியுமா சுண்ட தென்னி
னறத்தொடு முலகைக் கொன்று
கடியுமா றன்றிச் சோர்ந்து
கழிதியோ கருத்தி லார்போல்.

முடியும் நாள் தானே வந்து
முற்றிஞல், துன்ப முந்நீர்
படியுமாம், சிறியோர் தன்மை;
நினக்குஇது பழியிற்று ஆமால்;
குடியும் மாசு உண்டது என்னின்,
அறத்தொடும் உலகைக் கொன்று,
கடியுமாறு அன்றிச் சோர்ந்து
கழிதியோ, கருத்து இலார்போல்?

பொ:- ஒருவர்க்கு முடிவுநாள் (ஊழ்வினையால்) தானே வந்து நேர்ந்தால், துன்பமாகிய கடலில் அழுந்துவிடும் தன்மை சிறியோர் தன்மையாகும்; (பெருந்தன்மையுடைய) நினக்கு (இத் தன்மை பொருந்தாது) பழியினைத் தருவதாகும்; அறநெறிசெல்லும் நம் குடியும் பழியுண்டது என்ருல், தருமத்தோடு உலகையும் அழித்து ஒழிப்பதன்றிக் கருத்தில்லாதவர்போல மனம் சோர்ந்து கிடப்பாயோ?

கு:- சீதை வெட்டுண்டாள் என்பது கேட்டு இராமன் துன்பக் கடலில் அழுந்திக்கிடப்பதை மாற்றுவதற்காக இலக்குவன் இவ்வாறு கூறலானுன். ஒருவர்க்கு ஆயுள் முடிவது இயல்பாக வருவது என்பதும் அதுபற்றித் தொடர்புடையார் துன்புற்றுக் கிடப்பது பொருந்தாது என்பதும், சிறியோர்க்கே அது தகுவதன்றிப் பெருந்தன்மையுடைய நமக்குத் தகாது; பழியினைத் தருவதாகும் என்பதும்,

கூறி இராமனது சோர்வை விலக்கியவாறு.. அறத்தினைக் காக்கும் நமக்கு இந் நிலை நேர்ந்தமையால், அறத்தையும் இத் தகாச் செயலைப் பார்த்துக் கொண்டிருந்த உலகத்தையும் அழிப்பதே கடமை; அதை விடுத்துக் கருத்தற்றவர்போல் சோர்ந்துகிடப்பது கூடாது என்ற வாறு, "செருக்கினர் வலியராகி நெறிநின்றோர் சிதைவராகின் இருக்கு மிதென்னும் இம்மூன்றுலகையும் எரிமடாதே?".(67)எனப் பின்னர்க் கூறுவம் காணலாம்.

அறத்தினை வெறுத்துக் கூறுவது

9038. தய்யலைத் துணையி லாளைத்
தவத்தியைத் தருமக் கற்பின்
தெய்வதந் தன்னை மற்றுன்
தேவியைத் திருவைத் தீண்டி
வெய்யவன் கொன்று னென்றால்
வேதனை யுழப்ப தின்னும்
உய்யவோ கருணை யாலோ
தருமத்தோ டுறவு முண்டோ.

'தையலை, துணை இலாளை
தவத்தியை, தருமக் கற்பின்
தெய்வதம் தன்னை, மற்றுஉன்
தேவியை, திருவை, தீண்டி,
வெய்யவன் கொன்றான் என்றால்,
வேதனை உழப்பது இன்னும்
உய்யவோ? கருணை யாலோ?
தருமத்தோடு உறவும் உண்டோ?'

பொ:- மெல்லியலாகிய பெண்ணை-துணையற்றவளை-தவநிலையில் இருப்பவளை-அறநெறியாகிய கற்பின் தெய்வமாக இருப்பவளை-அறத்தைக் காக்கும் நின் மனைவியை-திருமகள்போல விளங்கு பவளைக் கையால் தீண்டிக் கொடியவனாகிய இந்திரசித்து கொன்றான் என்றால், (இச் செயலைந் தடுக்காத அறத்தை அழித்தலைச் செய்யாது) வேதனைப்படுவது, இன்னும் உயிர் உய்ந்து, வாழ வேண்டும் என்ற எண்ணத்தாலோ? அல்லது, கருணை மிகுதியாலோ? அல்லது, தருமத்தோடு இனி உறவும் இருக்கின்றதாக எண்ணுவ தாலோ?

கு:- ஒருவன் கையால் தொடுதற்கும் அஞ்சுதற்குரியவள் சிதை என்பதைப் பலபெயர்கூறிப்புலப்படுத்தியவாறு. ஒரு பொருண்மேல்

பலபெயர்வந்தவாறு. பெண்ணாய்ப் பிறந்தவளைக். கொல்லுதல்- துணையற்ற நிலையிலிருப்பவளைக் கொல்லுதல்-தவநெறியில் இருப்பவளைக் கொல்லுதல்-கற்பின் தெய்வத்தைக் கொல்லுதல் - தருமத்தைக் காக்கும் நின் தேவியைக் கொல்லுதல் - திருமகள் போன்ற உருவினளைக் கொல்லுதல் என்ற கொலைப் பாவங்கள் பல வரத்தக்க செயலை அரக்கன் செய்யவும் அறக் கடவுள் அவனைத் தடுக்காது இருந்தும், அந்தத் தருமத்தை அழிக்காமல் வேதனையடைந்து கொண்டிருப்பது எதற்கு? என்பது இலக்குவன் கருத்து. தருமத்தையே அழித்துவிட்டு நாமும் அழிந்து போவதே முறையாகவும் அவற்றைச் செய்யாது வருந்துவது, இன்னும் உய்யும் கருத்தினாலோ? அல்லது, நாம் வருந்தினாலும் பிறிதொன்றுக்குத் துன்பம் செய்யலாகாது என்னும் கருணை மிகுதியாலோ? அல்லது தருமத்தோடு நமக்கு இனியும் உறவு இருப்பதாக நினைத்ததாலோ? என்று வினவி, இம் மூன்று காரணமும் பொருத்தமற்றன என்பதைப் புலப்படுத்தியவாறு. (66)

### உலகை வெறுத்துக் கூறுவது

9039. அரக்கரென் னமரர் தாமென்
னந்தணர் தாமென் னந்தக்
குருக்களென் முனிவர் தாமென்
வேதத்தின் கொள்கை தானென்
செருக்கினர் வலிய ராகி
நெறிநின்ருர் சிதைவ ரென்ருல்
இருக்குமி தென்ன மிம்மூன்
றுலகையு மெரி மடாதே.

‘அரக்கர்என், அமரர் தாம்என்,
அந்தணர் தாம்என், அந்தக்
குருக்கள்என், முனிவர் தாம்என்,
வேதத்தின் கொள்கை தான்ஏன்;
செருக்கினர் வலியர்ஆகி,
நெறிநின்ருர் சிதைவர் என்ருல்,
இருக்குமிது என்னும், இம்மூன்று
உலகையும் எரி மடாதே?’

பொ:- (அறநெறி மறந்து) செருக்கின பாவிகள் வலியர் ஆகி அறநெறியில் நின்று ஒழுகினவர்கள் சிதைவார்கள் என்ற நிலை

எற்பட்டது என்றால், (இனி நமக்கு) அரக்கர்கள் என்ன, அமரர்கள் என்ன, அந்தணர்தாம் என்ன, அந்தக் குருக்கள் என்ன, முனிவர் தாம் என்ன, வேதத்தின் கொள்கைதான் என்ன, இவர் யாவரும் ஒருங்கே அழியுமாறு இந்த மூவுலகையும் நெருப்புக்கு இரையாக் காது வருந்திக் கொண்டிருப்பது என்ன பயனைத்தரும்?

கு:- அரக்கர் செய்த தீமைக்காக நல்லவர்களாகிய அமரர் முதலியோரைக் கொல்லலாமோ என்ற வினாவிற்கு விடையிறுப் பான்போல இலக்குவன், பாவம் வெல்லுதலும் அறம் தோற்றலும் ஆகிய முரணான செயல் நிகழ்கின்றபோது, நல்லவர் பொல்லாதவர் என்ற வேறுபாடு பார்க்கவேண்டுவதில்லை; எல்லோரும் அழியுமாறு மூவுலகத்தையும் எரிக்கு இரையாக்குவதே முறை; சோர்ந்திருப்பது நன்றன்று என்று இராமனைத் தேற்றியவாறு. பகைவர் நாட்டை அழிக்கும் போதும் அந்தணர் முதலியோரைக் கொல்லாது விடுப்பதே முறை என்பதை-''ஆவு மானியற் பார்ப்பன மாக்களும், பெண்டிரும் பிணியுடையீரும் பேணித், தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும் பொன்போற் புதல்வர்ப் பெறாதீரும், எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென, அறத்தாறு நுவலும் பூட்கை'' (புறநா-9) என்ற நெட்டிமையார் பாடலால் புலனாம். கண்ணகி மதுரையை யெரித்த போதும், ''பார்ப்பாரறவோர் பசுப்பத்தினிப் பெண்டிர் மூத்தோர் குழவியெனு மிவரைக் கைவிட்டுத் தீத்திறத்தோர் பக்கமே சேர்கென்று'' (சிலப்-21.53-55) கூறியுள்ளதும் நினையலாம். (67)

### உலகையும் அறத்தையும் அழிக்காமல சோர்ந்து வருந்துவது நன்றன்று என்பது 9040-9042

*9040.* முழுவதே ழுலக மின்ன
முறைமுறை செய்கை மேன்மூண்
டெழுவதே யமர ரின்ன
மிருப்பதே யறமுண் டென்று
தொழுவதே மேக மாரி
சொரிவதே சோர்ந்து நாம்வீழ்ந்
தழுவதே நன்று நந்தம்
விற்றொழி லாற்ற லம்மா.

'முழுவது ஏழ்உலகம் இன்ன
முறைமுறை செய்கை மேல்மூண்டு,
எழுவதே! அமரர் இன்னம்
இருப்பதே! அறம்உண்டு என்று

தொழுவதே! மேகம் மாரி
சொரிவதே! சோர்ந்து நாம் வீழ்ந்து
அழுவதே! நன்று, நம்தம்
வில்தொழில் ஆற்றல் அம்மா!'

பொ :- (நன்னெறியிற் செல்லும் நம் சீதையை அரக்கன் கொன்றபின்) இன்னமும், ஏழ்உலகம் முழுவதும் முறை முறையாகத் தத்தம் செய்கைமேல் மூண்டு எழுவதா? தேவர்கள் இன்னமும் இருப்பதா? தருமம் ஒன்று உண்டு என்று எண்ணி அதனைத் தொழுதுகொண்டிருப்பதா? இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டு நாம் சோர்ந்து விழ்ந்து அழுது கொண்டிருப்பதா? நம் விற்போர்த் தொழிலின் வலிமை அம்மா மிகப்பெரியது!

கு :- 'நன்னெறி செல்லும் நமக்கு இந்த நிலை வந்தபின்னும் ஏழுலகங்களும் முன்போலவே செயற்பட்டுக் கொண்டிருத்தலும், தேவர்கள் வாழ்ந்து கொண்டிருத்தலும், அறம் ஒன்று இருப்பதாகத் தொழுதலும், மேகம் மழையைச் சொறிதலும், கூடாது; நம் வில்லின் வலிமையால் அவற்றையெல்லாம் அழித்தல் வேண்டும்; அது செய்யாது, நாம் சோர்ந்து விழ்ந்து அழுவது, நம் வில்லின் ஆற்றலுக்கு இழுக்காகும் என்பது, இலக்குவனுடைய எண்ணம். நன்று— பெரிது. விற்றொழில் ஆற்றல் நன்று! என்று குறிப்பால் இகழ்ந்தவாறு. அம்மா, வியப்பிடைச்சொல். ஏகாரங்கள் வினாப் பொருளவாய் அவை பொருந்தாமை விளக்கின. (68)

9041. புக்கிவ்வூ ரிமைப்பின் முன்னம்
பொடிபடுத் தரக்கன் போன
திக்கெலாஞ் சுட்டு வானோ
ருலகெலாந் தீர்த்துத் தீரத்
தக்கநாவ் கண்ணீ ராற்றித்
தலைசுமந் திருகை நாற்றித்
துக்கமே யுழப்ப மென்றாற்
சிறுமையாய்த் தோன்று மன்றே.

'புக்கு,இவ்வூர் இமைப்பின் முன்னம்
பொடிபடுத்து, அரக்கன் போன
திக்குஎலாம் சுட்டு, வானோர்
உலகுஎலாம் தீர்த்து, தீரத்

தக்காம், கண்ணீர் ஆற்றி,
தலைசுமந்து இருகை நாற்றி,
துக்கமே உழப்பம் என்றால்,
சிறுமையாய்த் தோன்றும் அன்றே?'

பொ :- புகுந்து, இந்த இலங்கையை இமைப்பொழுதில் பொடி படும்படி அழித்துவிட்டு, அரக்கன் போன திசை யெல்லாவற்றையும் சுட்டு, வானவர் உலக முழுவதையும் அழித்து, அழியத்தக்க நாம் (அவற்றைச் செய்யாது) கண்ணீர் பெருக்கிக் கொண்டு தலையையும் சுமந்து கொண்டு, இரு கைகளையும் தொங்கவிட்டுக்கொண்டு, துக்கப் பட்டுக்கொண்டே இருப்போம் ஆயின், இது பிறர்கண்ணுக்குச் சிறுமையாகப் படுமன்றோ?

கு :- இலங்கையை அழித்தலும், அரக்கனையழித்தலும், வானோர் உலகினை அழித்தலும் செய்தபின் தாமும் மாய்தல் வேண்டும் என்பது இலக்குவன் கருத்து. தலையைச் சுமத்தல் என்பதும் இருகை நாற்றல் என்பதும் பயன் இன்மையை உணர்த்தின. அறிவுக்கு இருப்பிடமான தலையும், செயலுக்கு ஏற்ற கைகளும் இருக்கும்போது அவற்றைப் பயன்படுத்தாமல் துக்கம் உழந்து கொண்டிருத்தல் நம் சிறுமையைக் காட்டும் என்றவாறு. (69)

9042. அங்குமிவ் வறமே நோக்கி
யரசிழந் தடவி யெய்தி
மங்கையை வஞ்சன் பற்ற
வரம்பழி யாது வாழ்ந்தேம்
இங்குமித் துன்ப மெய்தி
யிருத்துமே லெளிமை நோக்கிப்
பொங்குவன் றளையிற் பூட்டி
யாட்செயப் புகல்வன்றே.

'அங்கும்,இவ் அறமே நோக்கி,
அரசுஇழந்து, அடவி எய்தி.
மங்கையை வஞ்சன் பற்ற,
வரம்பு அழியாது வாழ்ந்தோம;
இங்கும்,இத் துன்பம் எய்தி
இருத்துமேல், எளிமை நோக்கி,
பொங்குவன் தளையில் பூட்டி,
ஆட்செயப் புகல்வர் அன்றே?'

பொ :- அவ்விடத்தும் (அயோத்தியிலும்) இந்தத் தருமத்தையே நோக்கி அரசினை இழந்து காட்டை அடைந்து, சீதையை வஞ்சகனாகிய இராவணன் கவர அறத்தின் வரம்பு கெடாது வாழ்ந்தோம். (சீதையை அரக்கன் கொன்றபின்னும்) இந்த இலங்கையிலும் இந்தத் துன்பம் அடைந்துகொண்டு இருப்போமாயின் நம் எளிமையைப் பார்த்து (நம் பகைவர்) வலிமை மிக்க தளையில் நம்மைப் பூட்டி அழைத்துச்சென்று அடிமை செய்யுமாறு சொல்லுவார்கள் அன்றோ?

கு :- அங்கு என்றது அயோத்தியையும், இங்கு என்றது, இலங்கையையும் ஆம். தனக்குரிய அரசுரிமையைத் தந்தைசொல் கடத்தலாகாதென்னும் அறத்தை நோக்கிப் பரதனுக்குக் கொடுத்தான் இராமன் என்றவாறு. அறத்தை நோக்கியிருப்பதால் தாழ்வே உண்டாகும் என்பது இலக்குவன் கருத்து. வரம்பு என்றது தருமத்தின் வரம்பினை. சீதையை அரக்கன் கொன்ற பின்னேனும் அறத்தை நோக்காது இவ்வுலகை அழிக்க வேண்டாவா? துன்புற்றுக்கிடப்பதால் இழிவுதானே உண்டாகும்? என்று கூறி இராமனை இலக்குவன் தேற்றியவாறு. (70)

**9043. மன்றலங் கோதை யாளைத்**
**தம்மெதிர் கொணர்ந்து வாளிற்**
**கொன்றவர் தம்மைக் கொல்லுங்**
**கோளிலர் நாணங் கூரப்**
**பொன்றின ரென்ப ராவி**
**போக்கினுற் பொதுமை பார்க்கின்**
**அன்றிது கரும மென்னி**
**யயர்கின்ற தறிவி லார்போல்.**

'மன்றல்அம் கோதை யாளைத்
தம்எதிர் கொணர்ந்து, வாளின்
கொன்றவர் தம்மைக் கொல்லும்
கோளிலர், நாணம் கூரப்
பொற்றினர்' என்பர், ஆவி
போக்கினுல்; பொதுமை பார்க்கின்,
அன்றுஇது கருமம்; என்,நீ
அயர்கின்றது, அறிவு இலார்போல்?'

பொ :- இப்பொழுது துன்பத்தால் உயிர் விடுவோம் ஆயின் (உலகத்தார்) 'மணமிக்க அழகிய கூந்தலையுடைய சீதையைத் தம் மெதிரே கொண்டுவந்து, வாளினால் கொன்ற அரக்கரைக் கொல்லும் வலிமையில்லாதவர்கள், நாணம் மிகுதலால் இறந்துவிட்டார்கள்' என்று சொல்லுவர்; நடு நின்று நோக்கினால், இவ்வாறு துன்புறுதல் நமக்குரிய கருமம் அன்று; (இதை அறிந்திருந்தும்) அறியாதவர் போல் நீ வருந்துவது என்னை?

கு :- ஆவி போக்கினால், கோளிலர் நாணங்கூறப் பொன்றினர் என்பர் என இயையும். நடுவு நிலையையே 'பொதுமை' என்றான். இது கருமம் அன்று; அறிவிலார்போல் நீ அயர்கின்றது ஏன்? என இயையும். நீ என்றது, அறிந்துள்ள நீ என்னும் பொருளது. கோள்—வலிமை. கூர்தல்—மிகுதல்; உரிச்சொல். அயர்தல் இங்குத் துன்புறுதலை உணர்த்தியது. இராமன் உயிர்விடுதலும் கூடும் என்ற எண்ணத்தால் இலக்குவன் இவ்வாறு ஆறுதல் கூறினான். (71)

### சுக்கிரீவன் எழுந்து, 'அரக்கன் மார்பில் குதிப்போம்' எனல்

9044· அனையன விளவல் கூற
வருக்கன்சே யயர்கின் றானோர்
கனவுகண் டனனே யென்னக்
கதுமென வெழுந்து காணும்
வினையினி யுண்டோ வல்லை
விளக்கின்வீழ் விட்டி லென்ன
மனையுறை யரக்கன் மார்பிற்
குதித்துநாம் வம்மி னென்றான்.

அனையன இளவல் கூற,
அருக்கன் சேய், அயர்கின்றான், ஓர்
கனவு கண்டனனே என்னக்
கதுமென எழுந்து, காணும்
வினை இனி உண்டோ? வல்லை,
விளக்கின்வீழ் விட்டில் என்ன,
மனைஉறை அரக்கன் மார்பில்
குதித்தும், நாம்; வம்மின்' என்றான்.

பொ :- அத்தகைய சொற்களை இலக்குவன் சொல்லக் கேட்ட சுக்கிரீவன், துன்பத்தால் சோர்ந்து கிடக்கின்றவன், ஒரு கனவு கண்டவனைப்போல விரைந்து எழுந்து, 'இனி, ஆராய்ந்து பார்க்கும் செயலும் உண்டோ? விளக்கில் விரைந்து வீழ்கின்ற விட்டில் பூச்சியைப்போல நாம் மனையில் தங்கியுள்ள இராவணன் மார்பில் குதிப்போம்; வாருங்கள்!' என்று கூறினான்.

கு :- இராமனுக்கு இலக்குவன் கூறிக் கொண்டிருந்த சொல்லைச் சுக்கிரீவன் கேட்டு உணர்வுபெற்று எழுந்து, 'அரக்கன் மார்பிற் சென்று குதிப்போம்' என வானரர்களை அழைத்தான் என்றவாறு. துன்பத்தால் உணர்வற்றுக் கிடந்த சுக்கிரீவன் உணர்வுபெற்று விரைந்து எழுந்ததை 'ஓர் கனவு கண்டனனே என்னக்கதுமென எழுந்து' எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறியவாறு. கதுமென என்பது விரைவுக் குறிப்புணர்த்தும் இடைச்சொல். காணுதல், ஆராய்தலை உணர்த்தியது. விளக்கு எரிந்து கொண்டிருக்கும் போது அதில் விட்டில் விழ்வது இயல்பான நிகழ்ச்சி. விட்டில் வீழ்வதால் விளக்கு அவிதலும் உண்டு; விளக்கில் வீழ்ந்த வீட்டில் இறப்பதும் உண்டு. 'இனி வெற்றி தோல்விகளை ஆராயாமல் இராவணன் மார்பில் குதிப்போம்' என்ற சுக்கிரீவன், தன் கருத்திற்கேற்ற உவமையைக் கூறியுள்ளான். விட்டில் வீழ்வதால் விளக்கு அவிதல்போல, நாம் சென்று குதிப்பதால் இராவணன் இறந்தாலும் இறக்கட்டும்; அல்லது, அவன் வலிமையினால் நாம் இறந்தாலும் இறப்போம் என்றவாறு. வீட்டிலென்னக் குதித்தும் என்க. இனி, 'வீட்டிலென்ன மனையுறை அரக்கன்' என அரக்கனுக்கு அடையாக்கி விளக்கினை விரும்பி உண்ண வீழ்கின்ற விட்டிலைப் போலச் சீதையை விரும்பி மனையில் தங்கியுள்ள இராவணன் எனக்கூறலும் ஆம். இப்பொருட்கு விளக்கு என்பது, ஒட்டணியாய்ச் சீதையையுணர்த்தியதாகக் கொள்க.

### அரக்கரைக் குலங்கயோடு அழிப்போம் எனல்

9045. இலங்கையை யிடந்து வெங்க
ணிராக்கத ரென்கின் றுரைப்
பொலங்குழை மகளி ரோடும்
பானுகர் புதல்வ ரோடும்
குலங்களோ டடங்கக் கொன்று
கொடுந்தொழில் புரிது நம்மேல்
விலங்குவா ரென்னிற் றேவர்
விண்ணையும் மண்ணில் வீழ்த்தும்.

'இலங்கையை இடந்து, வெங்கண்
இராக்கதர் என்கின் றுரைப்
பொலங்குழை மகளி ரோடும்,
பால்நுகர் புதல்வ ரோடும்,
குலங்களோடு அடங்கக் கொன்று,
கொடுந்தொழில் புரிதும்; நம்மேல்
விலங்குவார் என்னின், தேவர்
விண்ணையும் மண்ணில் வீழ்த்தும்.

பொ :- இலங்கை நகரத்தையே பெயர்த்துவிட்டு, அரக்கர் என்று உள்ளவரையெல்லாம் அவர்கள் பொன்னாலியன்ற குழையினை அணிந்த மனைவிமாரோடும் பாலுண்கின்ற புதல்வர்களோடும் இனத்தோடும் அழியுமாறு கொன்று, கொடுமையான தொழிலையெல்லாம் செய்வோம்; அறத்திற்கு மாறான செயலைச் செய்கின்ற நம்மேல் வெகுண்டு வந்து தேவர்கள் தடுப்பார் ஆயின், அவர்களது விண்ணுலகத்தையும் இம் மண்ணுலகத்தில் வீழ்த்துவோம்.

கு :- 'இலங்கையைப் பெயர்த்துத் தள்ளிவிட்டு அரக்கர் மரபையே அடியோடு அழிப்போம்' என்று சுக்கிரீவன் கூறியவாறு. பகைவர் நாட்டிலும் மாதரைக் கொல்லுதலும் பாலரைக் கொல்லுதலும் அறம் அன்று ஆகலின், 'அடங்கக் கொன்று கொடுந் தொழில் புரிதும்' என்றான். கொடுந் தொழிலாவது அறத்தொடு மாறுபட்ட தொழில். இந்திரசித்து பெண்ணென எண்ணாது சீதையைக் கொன்ற கொடுமைக்கு ஈடாக, அரக்கர் மகளிரையும் அவர்கள் பாலுண் பாலரையும் கொல்வோம் என்பது சுக்கிரீவன் கருத்து. அறத்திற்கு மாறான இச் செயலைச் செய்வது கண்டு, தேவர்கள் சீறி எழுந்தாலும் அஞ்சாது அத் தேவர் உலகத்தையும் மண்ணுலகத்தில் வீழ்த்துவோம் என்பது வீரமொழியாகும். தேவர் இச் செயலை விலக்கமாட்டார் என்பான், 'விலங்குவா ரென்னின்' என்றான். விலங்குதல்—தடுத்தல். தேவருலகத்தையும் அழிப்போம் என்பான், 'விண்ணையும் மண்ணில் வீழ்த்தும்' என்றான். வீழ்த்ததும் என்பதுவீழ்த்தும் என விகாரப்பட்டு வந்தது, தொகுத்தல். அடங்க-அழிய; முழுவதும், என்றலும் ஆம். (73)

9046. அறங்கெடச் செய்து மென்றே
யமைந்தன மாகி னைய
புறங்கிடந் துழைப்ப தென்னே
பொருதினிப் புவன மூன்றும்

கறங்கெனத் திரிந்து தேவர்
குலங்களுங் கட்டு மென்னு
மறங்கிளர் வயிரத் தோளா
னிலங்கைமேல் வாவ லுற்ருன்.

'அறம்கெடச் செய்தும் என்றே
அமைந்தனம் ஆகின், ஐய!
புறம்கிடந்து உழைப்பது என்னே?
பொருதுஇனிப் புவனம் மூன்றும்
கறங்குஎனத் திரிந்து, தேவர்
குலங்களைக் கட்டும்' என்னு,
மறம்கிளர் வயிரத் தோளான்
இலங்கைமேல் வாவல் உற்ருன்.

பொ :- 'அறம் கெடுமாறு செய்வோம் என்றே துணிந்தோம் ஆயின், ஐய! புறத்தே கிடந்து வருந்துவது எதற்கு? இனிப் போர் செய்து மூவுலகத்தும் காற்றுடிபோலத் திரிந்து தேவர் குலங்களையும் அடியோடு அறுப்போம்' என்று கூறிக்கொண்டு வீரம் விளங்குகின்ற வயிரம் போன்ற தோள்களையுடைய சுக்கிரீவன் இலங்கை மேல் பாயத் தொடங்கினன்.

கு :- அறத்திற்கு மாறுபடலாகாது என்ற வரம்பு இருக்கும் போது, இது செய்யலாம்; இது செய்யலாகாது என்ற விதி விலக்கு கட்கு உட்பட்டு எதையும் செய்தல்வேண்டும்; அந்த வரம்பு இல்லாது, அறம் கெடச் செய்யத் துணிந்து விட்டபின், இந்த மூவுலகிலும் இன்னர், இனியார் என்று பாராது யாவரையும் அழிப்போம்; தேவர் குலத்தையும் வேரோடு அழிப்போம் என்றவாறு. கட்டும் என்பது, தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று; 'களைவோம்' என்பது பொருள். தோளான் என்றது, சுக்கிரீவனை. புறம் என்றது, இந்தத் துணிவுக்கு வேருன நெறியை. (74)

## மற்றை வானரரும்ஏகலுற்றபோது அனுமன் அயோத்திமேல் அரக்கன் சென்றதை உரைத்தல்

9047. மற்றைய வீர ரெல்லா
மன்னனின் முன்னம் வாவி
எற்றுது மரக்கர் தம்மை
யில்லொடு மெடுத்தென் றேகல்

உற்றன ருறுத லோடு
முணர்த்துவ துளதென் றுன்னுச்
சொற்றன னனுமன் வஞ்ச
னயோத்திமேற் போன சூழ்ச்சி.

மற்றைய வீரர் எல்லாம்
மன்னனின் முன்னம் தாவி,
'எற்றுதும், அரக்கர் தம்மை
இல்லொடும் எடுத்து' என்று, ஏகல்
உற்றனர்; உறுத லோடும்,
உணர்த்துவது உளது' என்று உன்னு,
சொற்றனன் அனுமன், வஞ்சன்
அயோத்திமேல் போன சூழ்ச்சி.

பொ :- ஏனைய வானரர் யாவரும் 'நம் மன்னவனாகிய சுக்கிரீவனுக்கு முன் தாவி, அரக்கரை அவர் இருக்கும் இல்லத்தோடு எடுத்து மோதுவோம்' என்று செல்லத் தொடங்கினர்; தொடங்குதலும் அனுமன் 'உணர்த்த வேண்டியது உளது' என்று எண்ணி வஞ்சனாகிய இந்திரசித்து அயோத்திமேல் போன சூழ்ச்சியைச் சொன்னான்.

கு :- மன்னன் என்றது, வானர மன்னனாகிய சுக்கிரீவனை. அரக்கர் தம்மை இல்லொடும் எடுத்து எற்றுதும் என இயையும். ஏகல் உற்றனர்-செல்லத் தொடங்கினர். அனுமன் உன்னு வஞ்சன் போன சூழ்ச்சி சொற்றனன் என இயையும். எற்றுதல்-மோதுதல். வானரர்கள் தம் மன்னவன் கட்டளையை நிறைவேற்றுவதில் கொண்ட ஆர்வம் புலப்பட 'மன்னனின் முன்னம் தாவி...எற்றுதும்' என்றனர். (75)

### அயோத்திமேல் அரக்கன் சென்றமை கேட்ட இராமன் சீதையை யிழந்த துயரை மறத்தல்

9048. தாயருந் தம்பி மாருந்
தவம்புரி நகரஞ் சாரப்
போயின னென்ற மாற்றஞ்
செவித்தொளை புகுத லோடும்

**மேயின வடிவி லுற்ற**
**வேதனை கனைய வெந்த**
**தீயிடைத் தணிந்த தென்னச்**
**சீதைபால் துயரம் தீர்ந்தான்.**

தாயரும் தம்பி மாரும்
தவம்புரி நகரம் சாரப்
போயினன் என்ற மாற்றம்
செவித்தொளை புகுத லோடும்,
மேயின வடிவின் உற்ற
வேதனை, கனைய வெந்த
தீயிடைத் தணிந்தது என்ன,
சீதைபால் துயரம் தீர்ந்தான்.

பொ :- 'தாய்மாரும் தம்பிமாரும் தவம்புரிந்து கொண்டிருக்கும் அயோத்தி நகரத்திற்கு (அரக்கன்) போயினன்' என்ற சொல் (இராமன்) செவித் தொளையில் புகுந்தவுடன்-உயிர்க்குப் பொருத்தமான உடம்பில் முன்னம் (வேல் முதலியன பாய்ந்தமையால்) உண்டான வேதனையானது, மிகுதியாக வெந்த தீ பட்டதனால் தணிந்ததுபோல-சீதைபால் கொண்ட துயரம் தீர்ந்தான்.

கு :-தாயர் மூவரும் கைம்மை நோன்பு நோற்றுக்கொண்டு இருத்தலானும், பரதனும் சத்துருக்கனும் தவக்கோலம் பூண்டு தவநிலையில் இருத்தலானும் 'தாயரும் தம்பிமாரும் தவம்புரி நகரம்' என, இராமன் அயோத்தியைச் சிறப்பித்தான். அனுமன் கூறியது, 'அரக்கன் அயோத்திமேற் சென்றான்' என்றது மட்டுமே என்பது நினைக. சீதை அரக்கனால் இறந்தாள் என்ற சொல்லைக் கேட்டு இராமன் வருந்திய வருத்தத்தினும், தம் குலத்தோர் வழிவழியாக அரசாண்ட அயோத்தி நகரமும், தவம்புரிந்து கொண்டிருக்கின்ற தாயரும் தம்பிமாரும் அரக்கனால் படப்போகும் அல்லலை நினைந்து வருந்தும் வருத்தம் மிகப் பெரிதாகலின், 'நகரம் சாரப் போயினன் என்ற மாற்றம் செவித் தொளை புகுதலோடும்...சீதைபால் துயரம் தீர்ந்தான்' என்றார். முன்னைச் சிறிய துன்பம் பின்வரும் பெரிய துன்பத்தினால் மறைந்து விடுதல் இயல்பு. இதை விளக்கவே, 'வடிவிலுற்ற வேதனை, கனைய வெந்த தீயிடைத் தணிந்ததென்ன' என்ற உவமையைக் கூறினர். வடிவு என்றது உடம்பினை. உயிரின் தன்மைக்கேற்ற உடம்பு அமைதல் இயல்பு என்பது புலப்பட 'மேயின உடம்பு' என்றார். வடிவிலுற்ற வேதனை என்றது, வேல்

முதலியவற்ருல் உடம்பில் உண்டான வேதனையை. வேல்பட்ட புண்ணுல் வருந்திக்கொண்டிருக்கும் ஒருவன், அப் புண்ணில் கனல் நுழையுமாயின், அவ் வேலினுலாய துன்பம் மறையக் கனலால் ஆய பெருந்துன்பத்தால் வருந்துவான்; அதுபோல, சீதையின் இறப்பை நினைந்து வருந்திக்கொண்டிருந்த இராமன், அயோத்தியில் உள்ளாரை அரக்கன் என் செய்வானே? என்ற எண்ணத்தால் உண்டாய பெருந்துன்பத்தால் சீதையின் நினைவை மறந்தான் என்றவாறு. '' மருமத்தின் எறிவேல் பாய்ந்த புண்ணிலாம் பெரும்புழையில் கனல் நுழைந்தாலெனச் செவியிற் புகுதலோடும் '' (பால-கையடைப்-11) என முன் உவமை கூறியிருத்தலும் நினைக. ''வேலேறு படத் தேளேறு மாய்ந்தாற்போல'' (இறையனுர் களவியலுரை-களவு. சூ-2) என்ற உவமை இங்கு ஒப்பு நோக்கத்தகும். (76)

### துன்பத்தை மறந்த இராமன் அயோத்திக்கு விரையு நினைவால் கலங்குதல்

9049. அழுந்திய பாலின் வெள்ளத்
தாழிநின் றனந்தர் நீங்கி
எழுந்தன னென்னத் துன்பக்
கடலினின் றேறி யாருக்
கொழுந்துறு கோபத் தீயு
நடுக்கமும் மனத்தைக் கூட
உழுந்துருள் பொழுதுந் தாழா
விரைவினுன் மறுக்க முற்ருன்.

அழுந்திய பாலின் வெள்ளத்து
ஆழிநின்று, அனந்தர் நீங்கி
எழுந்தனன் என்ன, துன்பக்
கடலின் நின்றுஏறி, ஆருக்
கொழுந்துறு கோபத் தீயும்
நடுக்கமும் மனத்தைக் கூட,
உழுந்துஉருள் பொழுதும் தாழா
விரைவினுன், மறுக்கம் உற்ருன்.

பொ :- ஆழமான பாலின் வெள்ளத்தையுடைய கடலில் நின்றும் உறக்கம் நீங்கி எழுந்தவன்போலத் துன்பமாகிய கடலில் நின்றும் ஏறி, ஆருததாய்க் கொழுந்து விட்டெறிகின்ற கோபத்

தீயும் நடுக்கமும் உள்ளத்தில் சேர்தலால், உழுந்து உருள்கின்ற சிறுபொழுதும் காலம் தாழ்த்தலாகாத விரைவுடையனும் கலக்கம் அடைந்தான்.

கு :- துன்பக் கடலில் சோர்ந்துகிடந்த இராமன், அதனை மறந்து வீரவுணர்ச்சி பெற்றெழுந்தமைக்கு, அவன் தெய்வ நிலையில் பாற்கடற் பள்ளியில் உறக்கம் நீங்கி, அன்பர்களின் அல்லல் நீக்க எழுந்ததையே இங்கு உவமையாக்கினர். அனந்தர்-உறக்கம்; அறிதுயில். துன்பத்தைக் கடலாக உருவகஞ் செய்தமையால், துன்பத்தை மறந்து எழுந்ததை 'ஏறி' என்ற வினையாற் கூறினர். ஆருத் தீ என இயையும். கோபத் தீ என்றது உருவகம். அரக்கன் அயோத்திக்கும் சென்ருனே என்றதால் கோபமும், அங்குள்ள தாயரும், தம்பியரும் என்னுவாரோ என்பதால் நடுக்கமும் அடைந்தான் இராமன் என்றவாறு. மிகச் சிறிய கால அளவைக் குறிக்க 'உழுந் துருள் பொழுதும்' என்ருர்; நொடிப்பொழுதும் என்பதுபால. தாழ்க்க வியலாத விரைவினையுடையனுப் கலக்கமுற்ருன் என்க. மறுக்கம்-கலக்கம். (77)

## இராமன் அயோத்தியர்க்கு நேர்ந்துள்ள நிலைமை நினைந்து வருந்துதல் 9050-9054

9050. தீருமிச் சீதை யோடு
மென்கில தன்றென் றீமை
வேரொடு முடிப்ப தாக
விளைந்தது வேறு மின்னும்
யாரொடுந் தொடாரு மென்ப
தறிகிலே னிதனை யைய
பேருறு கதியு முண்டோ
வெம்பியர் பிழைக்கின் ருரோ.

தீரும்இச் சீதை யோடும்
என்கிலது அன்றுஎன் தீமை
வேரொடும் முடிப்பதாக
விளைந்தது; வேறும் இன்னும்
ஆரொடும் தொடரும் என்பது
அறிந்திலேன்; இதனை ஐய
பேருறு கதியும் உண்டோ ?
எம்பியர் பிழைக்கின் ருரோ?

பொ :- எனது தீவினை, இச் சீதையோடும் தீர்ந்துவிடும் என்று சொல்லக்கூடியதாகவும் இல்லை ; எம் குலத்தையே வேரோடு முடிப்பதாக விளைந்துள்ளது ; இன்னும் வேறு யாரோடு தொடரும் என்பதை அறியேன் ; ஐய ! இத் துன்பத்தை வாராமல் பெயர்க்கும் வழியும் உண்டோ ? அங்கு என் தம்பிமார் உயிரோடிருக்கின்றனரோ ?

கு :- இத் துன்பங்களுக்கெல்லாம் காரணம் தன் தீவினையே என்பது இராமன் எண்ணமாகலின் 'என் தீமை இச் சீதையோடும் தீரும் என்கின்றதன்று' என்கின்றான். அரக்கன் சீதையை வெட்டியதோடு அமையாது, அயோத்தியையும் அழிப்பதாகச் சென்றுள்ளான் ஆகலின் 'வேரொடும் முடிப்பதாக விளைந்தது' என்றான். அவன் அயோத்திக்குச் சென்றால் அங்குள்ள தன் தம்பியர் முதலிய யாவரும் அழிதல் கூடும் ஆகலின், அங்ஙனம் கூறினன். தன் குலம் அடியோடு முடியும் என்றபடி, இன்னும் வேறு யாரோடும் தொடரும் என இயையும். தனது தீவினை தன்னைமட்டும் வருத்தாமல் தன் தம்பியரையும் தாயரையும் வருத்துவதாக விளைந்தது அறிந்தமையால், 'இன்னும் தன் தொடர்புள்ள யார்யாரை வருத்த இருக்கின்றதோ ? அறிகிலேன்' என இராமன் வருந்துவானானான். பேருறுகதி-பெயர்க்கின்ற வழி. இதனை என்றது அயோத்தியர்க்கு வந்துள்ள இத் துன்பத்தை என்றவாறு. புட்பகத்தில் சென்ற இந்திரசித்து இதற்குள், தன் தம்பியரைக் கொன்றும் இருக்கலாம் என்ற ஏக்கத்தால் 'எம்பியர் பிழைக்கின்றனரோ?' என்றான். (78)

9051. நினைவதன் முன்னஞ் செல்லு
மானத்தி னெடிது போனான்
வினையொரு கணத்தின் முற்றி
மீள்கின்றான் வினையேன் வந்த
மனைபொடி பட்ட தங்கு
மாண்டது தார மீண்டும்
எனையன தொடருமென்ப
துணர்கிலே னிறப்புங் காணேன்.

நினைவதன் முன்னம் செல்லும்
மானத்தில் நெடிது போனான்
வினை ஒரு கணத்தின் முற்றி
மீள்கின்றான்; வினையேன் வந்த

மனைபொடி பட்டது அங்கு;
மாண்டது தாரம் ஈண்டும்
எனையன தொடரும் என்பது
உணர்கிலேன்! இறப்பும் காணேன்!

பொ :- நினைப்பதற்கு முன்னே குறித்த இடத்திற்குச் செல்ல வல்ல புட்பக விமானத்தில் நெடுந்தொலைவு சென்றவனாகிய இந்திரசித்து, தான் நினைத்த வினையைக் காணப்பொழுதில் முடித்துக் கொண்டு மீள்வதற்குரியவனாவான்; தீவினையேனாகிய யான் பிறந்த வீடு அங்கு பொடிபட்டு அழிந்தது; இங்கும் மனைவி மாண்டாள், இன்னும் எத்தகைய துன்பங்கள் என்னைத் தொடரும்? என்பதை உணர்கிலேன்; (இத்தகைய யான் இறந்து ஒழியவேண்டும் என்றால்) சாவும் வரக்காணேன்.

கு :- புட்பக விமானத்தின் விரைவு புலப்பட 'நினைப்பதன் முன்னம் செல்லும் மானம்' என்றும் இந்திரசித்தின் வஞ்சத்திறமை நினைத்து 'வினையொரு கணத்தின் முற்றி மீள்கின்றான்' என்றும் கூறினான். தான் பிறந்த அரண்மனை பொடிபட்டு அழிந்தது; என்று துனிவுபற்றி நினைந்து வருந்துகின்ற இராமன், தன் தீவினை காரணமாகவே வழிவழி வந்த அரண்மனை அழியலாயிற்று என்ற எண்ணத்தால் 'வினையேன் வந்த மனை' என்று கூறினான். பிறந்தமனையும் மணந்த மனைவியும் அழிதற்கேற்ற தீவினை செய்த யான் சாவதே பொருத்தமாகவும், சாக்காடும் அரிதாகவுள்ளதே என்ற கருத்தால் 'இறப்பும் காணேன்' என்றான். (79)

9052. தாதைக்குஞ் சடாயு வான
தந்தைக்குந் தமிய ளாய
சீதைக்குங் கூற்றங் காட்டித்
தீர்ந்தில தொருவென் றீமை
பேதைப்பெண் பிறந்து பெற்ற
தாயர்க்கும் பிழைப்பி லாத
காதற்றம் பியர்க்கு மூர்க்கு
நாட்டிற்குங் காட்டிற் றன்றே.

தாதைக்கும் சடாயு வான
தந்தைக்கும் தமியள் ஆய
சீதைக்கும் கூற்றம் காட்டித்
தீர்ந்திலது ஒருவென் தீமை;

பேதைப்பெண் பிறந்து பெற்ற
தாயர்க்கும் பிழைப்பு இலாத
காதல்தம் பியர்க்கும் ஊர்க்கும்
நாட்டிற்கும் காட்டிற்று அன்றே.

பொ :- ஒருத்தனுகிய என்னுடைய தீவினை, — என் தந்தை தயரதச் சக்கரவர்த்திக்கும், சடாயுவான தந்தைக்கும், (இராவணனுல் கவரப்பட்டுத்) தனித்திருப்பவளான சீதைக்கும் எமனைக் காட்டி விட்டு அவ்வளவோடு நீங்கிவிடவில்லை; பேதைமையுடைய பெண் பாலாகப் பிறந்து என்னைப் பெற்ற தாய்மார்க்கும், எந்தத் தவறும் இல்லாத, அன்புடைய தம்பிமார்க்கும், அயோத்தி என்னும் எம் மூர்க்கும், கோசல நாடு என்கின்ற எம் நாட்டிற்கும் எமனைக் காட்டி விட்டது.

கு :- என் தீவினையே தயரதனுகிய தந்தையையும் சடாயுவான தந்தையையும் சீதையையும்கொன்றது;அவ்வளவோடுநீங்காமல் என் தாயரையும் தம்பியரையும் ஊரவரையும் நாட்டவரையும் கொன்றது என்றவாறு. ஒருவென் தீமை, தாதைக்கும் தந்தைக்கும் சீதைக்கும் கூற்றம் காட்டித் தீர்ந்திலது; தாயர்க்கும் தம்பியர்க்கும் ஊர்க்கும் நாட்டிற்கும் (கூற்றம்) காட்டிற்று என இயையும். பேதைமை வாய்ந்த பெண்பாலாய்ப் பிறந்து பெற்ற தாயர் எனத் தாயர்க்கு அடையாக்குக. பெண்பாலாய்ப் பிறந்தவர் தம் கொலைக்குக் காரண மான குற்றத்தோடு பெற்ற தாயார்கொலைக்குக் காரணமான குற்ற மும் எனதாகும் என்றவாறு. கூற்றம் காட்டுதலாவது கொல்லுதல், தாதைக்கும் சடாயுவான தந்தைக்கும், சீதைக்கும் கூற்றம் காட்டி யது இறந்தகால நிகழ்ச்சியாதலின், 'கூற்றம் காட்டித் தீர்ந்திலது' என்று பிரித்துக் கூறிப பின் பெற்ற தாயர்க்கும் தம்பியர்க்கும் ஊர்க்கும் நாட்டிற்கும் காட்டிற்று என எதிர்பார்க்கும் நிகழ்ச்சி யைக் கூறினுன். காட்டிற்று என்றது, துணிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாகக் கூறியது. சடாயு பிற்காலத்துத் தந்தையாகத் தழுவப்பட்டவகனுலின் அவனைப் பிற்கூறினுன். இறப்பும் பின் னிகழ்ந்ததாதல் நினைக. ஊர், நாடு என்பன இடவாகுபெயராய் ஆண்டு வாழும் மக்களையுணர்த்தின. இந்திரசித்து தாயரையும் தம்பியரையும் கொன்றதோடு ஊரவரையும் நாட்டவரையும் கொன்றிருப்பான் என்ற நம்பிக்கையால் இராமன் இங்ஙனம் கூறினுன். (60)

9053. உற்றதொன் றுணர கில்லா
ருணர்ந்துவந் துருந்தா ரேனும்
வெற்றிவெம் பாசம் வீசி
விசித்தவன் கொன்று வீழ்த்தால்

**மற்றைவெம் புள்ளின் வேந்தன்**
**வருகிலன் மருந்து நல்கக்**
**கொற்றமா ருதியங் கில்லை**
**யாருயிர் கொடுக்கற் பாலார்.**

உற்றதுஒன்று உணரகில்லார்;
உணர்ந்துவந்து உருத்தா ரேனும்
வெற்றிவெம் பாசம் வீசி
விசித்து அவன்கொன்று வீழ்த்தால்
மற்றைவெம் புள்ளின் வேந்தன்
வருகிலன்; மருந்து நல்கக்
கொற்றமாருதி அங்கு இல்லை;
யார்உயிர் கொடுக்கற் பாலார்?

பொ :- (இந்திரசித்து துடும் எனப் போர்க்குச் சென்றால் தம்பியர் இங்கு) நேர்ந்தது ஒன்றையும் உணரார் (ஆகலின், விரைவில் அழிவர்); ஒருகால் உணர்ந்து தம்பியர் சேனையோடு வந்து வெகுண்டு போர் செய்வாரேனும்; அவன் வெற்றி தருகின்ற கொடிய நாக பாசத்தைவீசி அவர்களையெல்லாம் கட்டிக் கொன்று வீழ்த்தினால்(அந் நாகபாசத்திற்குப் பகையாகவுள்ள) கொடிய கலுழன் அங்கு வரமாட்டான்; அவன் வாரானே ஆயிடினும், மருத்துமலையைக் கொணர்ந்து கொடுக்க வெற்றிவாய்ந்த அனுமனும் அங்கு இல்லை; அவர்கட்கு உயிர்கொடுக்கத் தக்கார் யாருளர் ?

கு :- இந்திரசித்து முன் அறிவிப்பின்றி அயோத்தி மேற் சென்று போர் தொடுப்பானாயின், தம்பியர் வலியரேனும் ஆயத்த மில்லாத நிலையில் அழிவெய்துவர்; ஒருகால் இவன் வரவையுணர்ந்து படையோடு வந்து தம்பியர் போர் செய்வாராயினும் அரக்கன் நாக பாசத்தை வீசி அவர்களைக் கட்டி வீழ்த்தலாம்; அவ்வாறு வீழ்த்தி யிருந்தால் நமக்குக் கலுழன் வந்து நாகபாசத்தை அழித்ததுபோல அங்கும் அவன் செல்லுதற்கு வாய்ப்பில்லை. கலுழன் இல்லையெனி னும் பிரமாத்திரத்தால் நம் படை இறந்தபோது, மருத்துமலை கொணர்ந்து அவர்களை உய்வித்த அனுமன் அங்கிருந்தால் மருத்து மலை கொணர்ந்து அவர்களை உய்விப்பான்; அனுமனும் அங்கு இல்லை; எனவே அவர்கட்கு உயிர் கொடுப்பார் யாருளர்? ஒருவரும் இலர்; எனவே அவர்கட்கு அழிவு உறுதி என்றவாறு. (81)

## விண்வழியே அயோத்திக்கு விரைய உபாயமுண்டோ என இராமன் கேட்டல்

9054. மாகவா காயஞ் செல்ல
வல்லையின் வயிரத் தோளாய்
ஏகுவா னுபாய முண்டே
லியம்புதி நின்ற வெல்லாம்
சாகமற் றிலங்கைப் போருந்
தவிர்க்கவச் சழக்கன் கண்கள்
காகமுண் டதற்பின் மீண்டு
முடிப்பெனன் கருத்தை யென்றான்.

மாக ஆகாயம் செல்ல,
வல்லையின் வயிரத் தோளாய்!
ஏகுவான் உபாயம் உண்டேல்,
இயம்புதி, நின்ற எல்லாம்
சாக;மற்று இலங்கைப் போரும்
தவிர்க;அச் சழக்கன் கண்கள்
காகம்உண்ட தற்பின், மீண்டும்
முடிப்பென்என் கருத்தை என்றான்.

பொ :- 'வயிரம் போன்ற தோளையுடைய அனும! மாகம் எனப்படும் ஆகாயவழியே விரைவாகச் செல்லவும் அயோத்தியைச் சேரவும் உபாயம் இருக்குமாயின் சொல்லுக! எஞ்சிநின்றன வெல்லாம் சாகட்டும்; இலங்கைப் போரும் நிற்க; அந்தக் கொடியவனை இந்திரசித்தின் கண்களைக் காகம் உண்டபின் மீண்டும் வந்து என்கருத்தை முடிப்பேன்' என்று இராமன் கூறினான்.

கு :— இராமன் மனம் விரைகின்ற அளவு உடம்பு விரைந்து செல்ல வழியின்மையின், வான் வழி செல்லும் பயிற்சியுடைய அனுமனை நோக்கி இங்ஙனம் வினவலானான். மாகவாகாயம் என்பது மீமிசைச்சொல். இராமன் நோக்கம் அயோத்திக்கு விரைந்து சென்று அங்குச் சென்றுள்ள இந்திரசித்தினைக் கொல்லுதலில் முற்பட்டிருந்தலின், 'நின்ற வெல்லாம் சாக' என்றும் 'இலங்கைப் போரும் தவிர்க' என்றும் கூறினான். அச்சழக்கன் என்றது, இந்திரசித்தினை. இந்திரசித்தினைக் கொன்ற பின்னரே இலங்கைப் போர் நிகழ்த்தி இராவணனைக் கொல்லலாம் என்பான், 'மீண்டும் என் கருத்தை முடிப்

பேன்' என்றான். அச்சழக்கன் கண்கள் காகம் உண்டதற்பின் என்றது, அச்சழக்கனைக் கொன்றபின் என்னும் கருத்தினது. (82)

## இலக்குவன் பரதனது ஆற்றலைப் புகழ்தல், 9055, 9056

9055. அவ்விடத் திளவ லைய
பரதனை யமரி னார்க்க
எவ்விடற் குரியான் போன
விந்திர சித்தே யன்று
தெவ்விடத் தமையின் மும்மை
யுலகமுந் தீர்ந்த றுவோ
வெவ்விடர்க் கடலின் வைகல்
கேளென விளம்ப லுற்றான்.

அவ்விடத்து, இளவல் 'ஐய!
பரதனை அமரின் ஆர்க்க
எவ்விடற்கு உரியான் போன
இந்திர சித்தே அன்று;
தெவ்இடத்து அமையின் மும்மை
உலகமும் தீர்ந்து அறுவோ ?
வெவ்இடர் கடலில் வைகல்
கேள் என விளம்பல் உற்றான்.

பொ :— (இராமன் இவ்வாறு கூறிய) அப்போது, இலக்குவன் (இராமனை நோக்கி) ஐய! பரதனைப் போரில் கட்டுமாறு நாகபாசம் போன்ற படையினை ஏவுதற்கு உரியவனாய்ப்போன இந்திரசித்தே அல்ல, மூன்று உலகமும் சேர்ந்து பகைப்புலத்து நிற்குமாயினும், அழிந்து ஒழியாவோ? கொடிய துன்பக்கடலில் நீ தங்கவேண்டா: யான் சொல்வதைக்கேள்; எனச் சொல்லத் தொடங்கினான்.

கு:— ஆர்த்தல்—கட்டுதல். எவிடற்கு என்பது எதுகை நோக்கி எவ்விடற்கு எனக் குறுக்கலும் விரித்தலும் ஆகிய இருவிகாரங்கள் பெற்றன. இந்திரசித்தே அன்று; மும்மை உலகமும் தெவ்விடத்து அமையின் தீர்ந்து அறுவோ? என இயையும். மும்மை என்றது, மூன்று என்னும் எண்ணுப் பொருளில் வந்தது; 'தெரிமாண்டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்' (பரிபாடல்) என்புழிப்போல, அமையினும் என்ற உம்மை விகாரத்தால் தொக்கது. இடர்க்கடல்

என்பது உருவகம். வைகல், எதிர்மறை அல்லீற்று வியங்கோள். 'மகனெனல்' (திருக்குறள்— 196) என்புழிப்போல, பரதன் மூவுலகமும் எதிர்த்தாலும் அவற்றை அழிக்கும் ஆற்றல் மிக்கவன் என இலக்குவன் புகழ்ந்து இராமனுக்கு ஆறுதல் கூறியவாறு. (83)

**9056. தீக்கொண்ட வஞ்சன் வீசத்**
**திசைமுகன் பாசந் தீண்ட**
**வீக்கொண்டு வீழ யானே**
**பரதனும் வெய்ய கூற்றைக்**
**கூய்க்கொண்டு குத்துண் டன்னான்**
**குலத்தொடு நிலத்த னுதல்**
**போய்க்கண்டு கோடி யன்றே**
**யென்றனன் புழுங்கு கின்ருன்.**

தீக்கொண்ட வஞ்சன் வீச,
திசைமுகன் பாசம் தீண்ட
வீக்கொண்டு வீழ, யானே
பரதனும்? வெய்ய கூற்றைக்
கூய்க்கொண்டு குத்துண்டு அன்னான்
குலத்தொடு நிலத்தன் ஆதல்,
போய்க்கண்டு கோடி அன்றே?
என்றனன் புழுங்கு கின்ருன்.

பொ :— தீமையே இயல்பாகக்கொண்ட வஞ்சகனுகிய இந்திரசித்து வீசியதால் பிரமன் அளித்த நாகபாசம் வந்து தீண்டிய உடனே இறந்துவீழ யானே பரதனும்? (யான் அல்லன்) அந்த இந்திரசித்து பரதனுல் குத்துண்டு கொடிய எமனைக் கூவிக்கொண்டு தன் இனத்தவரோடு நிலத்து வீழ்தலை நீ போய் நேரே கண்டு கொள்வாய் அல்லவோ? என்றனன், மனம்புழுங்குகின்றவனுகிய இலக்குவன்.

கு :— தீ என்றது தீமையை. நாகபாசம் பிரமனுல் கொடுக்கப் பட்டது என்பது புலப்பட 'திசைமுகன் பாசம்' என்ருன். வீ— இறப்பு. நாகபாசத்தால் இலக்குவன் முன் வீழ்ந்தமை நினைந்து, இங்கு இங்ஙனம் கூறினுன். நாகபாசத்தால் இறந்துவீழ யான் என்று நினைத்தாயோ பரதனையும்? என்னைப்போல நாகபாசத்தால் இறந்து படத்தக்கவன் அல்லன்; இந்திரசித்தினை அழிக்கத்தக்க ஆற்றல் படைத்தவன் என்று அவனைப் புகழந்தவாறு. அன்னுன்

குத்துண்டு வெய்ய கூற்றைக் கூய்க்கொண்டு குலத்தொடு நிலத்தன் ஆதல் என இயையும். கூற்றைக் கூய்க்கொண்டு என்றது வரவேற்றுக் கொண்டு என்றவாறு. அன்னுன் என்றது இந்திரசித்தினை. பரதன் ஒரு குத்துக்கே ஆற்ருதவனுய் இந்திர சித்து இறந்து விழ்வான் என்றவாறு. (84)

## அனுமன் இராம இலக்குவரைத் தன்தோள்மேல் ஏற வேண்டுதல் 9057-9060

9057. அக்கணத் தனும னின்ரு
ஊனயவென் ரேளி ஞதல்
கைத்துணைத் தலத்தே யாத
வேறுதிர் காற்றுந் தாழ
இக்கணத் தயோத்தி மூதூ
ரெய்துவ னிடமுண் டென் னில்
திக்கனைத் தினிலுஞ் செல்வென்
யானேபோய்ப் பகையுந் தீர்வென்.

அக்கணத்து அனுமன் நின்ருன்,
'ஐய! என் தோளின் ஆதல்
கைத்துணைத் தலத்தின் ஆதல்,
ஏறுதிர்; காற்றும் தாழ
இக்கணத்து அயோத்தி மூதூர்
எய்துவென்; இடம்உண்டு என்னின்
திக்கு அனைத்திலும் செல்வென்,
யானேபோய்ப் பகையும் தீர்வென்.

பொ:— அந்தக் கணத்தில் அங்கு நின்றவனுகிய அனுமன் 'ஐய! என் தோளிலோ? அல்லது இரு கைத்தலங்களிலோ ஏறிக் கொள்ளுங்கள்; காற்றும் விரைவதில் பின்னிடுமாறு இந்தக்கணத் தில் அயோத்தி என்கின்ற பழைய ஊரை அடைவேன்; இடம் வாய்க்குமாயின், திசையெல்லாவற்றிலும் செல்வேன்; நீங்கள் விரும்பினுல் யானே தனித்துச் சென்று அப் பகைவனை ஒழிப்பேன்.

கு:— ஐய! என்றது, இராமனை நோக்கிய விளி, ஐய ஏறுதிர் என்பது முன்னிலையில் வந்த ஒருமைப்பன்மை மயக்கம். ஆற்றுப் படைக்கு உரியதாகத் தொல்காப்பியர் ஓதிய விதியே இங்கும்

பொருந்துவதாகும். 'முன்னிலே சுட்டிய வொருமைக்கிளவி, பன்மை யொடு முடியினும் வரைநிலை யின்றே, ஆற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும்' (தொல்—சொல்-462) என்பது காண்க. இடம் என்றது காலத்தை. விரைந்து செல்வதில் காற்றுச்சிறப்புடைய தாகலின் 'காற்றுந்தாழ' என்றான். வாயுவேகத்தினும் வேகமாகச் செல்வேன் என்றவாறு. நீங்கள் கருதியவாறு கணப்பொழுதில் அயோத்தி அடைவதோடு, திசையெல்லாம் செல்லவேண்டி நேரு மாயின், அதையும் செய்வேன்; அதற்குமேல் தனியே சென்றும் அப் பகைவனை அழிப்பேன் எனத் தன் ஆற்றலை அனுமன் புலப் படுத்தியவாறு. (85)

9058. எழுபது வெள்ளத் தோடு
மிலங்கையை யிடந்தென் றோண்மேல்
தழுவுற வைத்தின் றேகென்
றுரைத்தியேற் சமைவென் றக்கோய்
பொழுதிறை தாழ்ப்ப தென்னோ
புட்பகம் போதன் முன்னம்
குழுவொடு கொண்டு போவென்
கணத்தினிற் குதிப்பேன் கூற்றின்.

'எழுபது வெள்ளத்தோடும்
இலங்கையை மிடந்து,என் தோள்மேல்
தழுவுற வைத்து, "இன்றுஏகு" என்று
உரைத்தியேல், சமைவென்; தக்கோய்!
பொழுதுஇறை தாழ்ப்பது என்னோ?
புட்பகம் போதல் முன்னம்,
குழுவொடும் கொண்டு போவென்;
கணத்தினில் குதிப்பென், கூற்றின்.

பொ :- நம் எழுபது வெள்ள வானர சேனையோடும் இலங்கை நகரைப் பெயர்த்துஇன்று என் தோள்மேல் பொருந்துமாறு வைத்து, 'செல்வாயாக' என்று சொல்வாயானாலும், தகுதிமிக்கவனே! யான் செய்வேன்; இமைப்பொழுது தாழ்ப்பதும் எதற்கு? இந்திரசித்தின் புட்பகவிமானம்அயோத்தியை அடைதற்குமுன் நம்வானரக்கூட்டத் துடனே உங்கள் இருவரையும் சுமந்துகொண்டு கணப்பொழுதில் அயோத்திக்குப் போய், எமனைப் போலக் குதிப்பேன்.

கு:- தன் வலிமையை அனுமன் முன்னிரண்டடிகளால் புலப் படுத்தியவாறு. எழுபது வெள்ளம் என்றது, அவ்வளவினையுடைய வானர சேனையை, ஆகுபெயர். இறைப்பொழுது என்றது, சிறு பொழுதினை. குழு என்றது, வானரக் குழுவினை, போவென் என்றது முற்றெச்சமாய்ப் போய்க் கூற்றின் குறிப்பென்' என இயையும் இச் செய்யுள் பல சுவடிகளில் இல்லை. (86)

*9059.* **கொல்லவந் தானை நீதி**
**கூறினென் விலக்கிக் கொள்வான்**
**சொல்லவஞ் சொல்லி நின்றேன்**
**கொன்றபின் துன்ப மென்னை**
**வெல்லவுந் தரையில் வீழ்வுற்**
**றுணர்ந்திலென் விரைந்து போனான்**
**இல்லையே லுணறிற் றீயோன்**
**பிழைக்குமோ விழுக்க முற்றேன்.**

'கொல்ல வந்தானை நீதி
கூறினென், விலக்கிக் கொள்வான்,
சொல்அவம் சொல்லி நின்றேன்;
கொன்றபின் துன்பம் என்னை
வெல்லவும் தரையில் வீழ்வுற்று
உணர்ந்திலென்; விரைந்து போனான்:
இல்லையேல், உணரில், தீயோன்
பிழைக்குமோ? இழுக்கம் உற்றேன்.

பொ:- சீதையைக் கொல்லுதற்கு வந்த இந்திரசித்தினை நீதி சொல்லி விலக்கிச் சீதையை உய்யக் கொள்வதற்காகச் சொற்களை வீணே சொல்லிக்கொண்டு நின்றேன்; சீதையை அவன் கொன்ற பின், (சீதை கொலையுண்டதாலாய) துன்பம் என்னை வென்று மிகுந்ததால் தரையில் வீழ்ந்து உணர்விழந்தேன்; (அப்போது அப் பாதக அரக்கன்)விரைந்து போனான்; அவன் போகாமலிருந்திருந்தால் யான் உணர்வு பெற்றிருந்தால், அக்கொடியவன் உய்வானோ? தவறி விட்டேனே!

கு:- கொல்லுதற்காகச் சீதையைப் பற்றிக் கொண்டுள்ள இந்திரசித்தினை யான் கொல்லமுற்பட்டால் அவன் விரைந்து சீதை யைக் கொல்வானே என்ற எண்ணத்தால் நீதிமொழி சொல்லி அக்

கொலையை விலக்கிச் சீதையை உய்யக் கொள்ளலாம்என்றகருத்தால், நீதிகளைச் சொல்லிக்கொண்டு நின்றேன் என்றது, சீதையை அவன் கொல்லாதமுன், அவனைக் கொல்ல இயலாமைக்குக் காரணம் கூறிய வாறு. 'சொல் அவம் சொல்லி நின்றேன்' என்றது, தன் சொற்கள் பயன் தராமை நினைந்து; 'சொற்களை அவமே சொல்லி நின்றேன்' என்று கூறியவாறு. சீதையைக் கொன்றபின் துன்பம் என் உணர்வை மறைத்து விட்டமையால் அவனைக் கொல்ல இயலாது போயது என்றவாறு. சீதையைக் கொல்லும் முன்னும் பின்னும் இந்திரசித்தினைக் கொல்ல வியலாது போனமை விளக்கியவாறு. 'துன்பம் என்னை வெல்லவும்' என்புழித் துன்பம் வெல்லுதலாவது, துன்பம் மேற்பட்டு அனுமன் வலிமைஅத் துன்பத்திற்கு உட்படுதல். யான் உணர்வற்றுத் தரையில் வீழ்ந்துகிடந்த நிலையில் அவன் விரைந்து போய்விட்டான்! அவன் போகவில்லையானால், யானும் உணர்ச்சிபெற் றெழுந்திருப்பேனுல், அத் தீயவன் பிழைக்கமாட் டான்; அழித்திருப்பேன் என்றவாறு. அவனும் போகாமலிருக்க யானும் உணர்ச்சி பெற்றிருந்தால் அவன் உய்தல் அறிது என்றபடி. கழிந்ததற்கிரங்கும் நிலையில், 'இழுக்க லுற்றேன்' என அனுமன் கூறியவாறு. (87)

9060. மனத்தின்முன் செல்லு மானம்
போனது வழிய தாக
நினைப்பின்முன் னயோத்தி யெய்தி
வருநெறி பார்த்து நிற்பென்
இனிச்சில தாழ்ப்ப தென்னே
யேறுதி விரண்டு தோளும்
புனத்துழாய் மாலை மார்பீர்
புட்பகம் போதன் முன்னம்.

'மனத்தின்முன் செல்லும் மானம்
போனது வழியது ஆக,
நினைப்பின்முன் அயோத்தி எய்தி,
வருநெறி பார்த்து நிற்பேன்?
இனிசில தாழ்ப்பது என்னே?
ஏறுதிர் இரண்டு தோளும்,
புனத்துழாய் மாலை மார்பீர்!
புட்பகம் போதல் முன்னம்.

பொ :- மனத்தின்முன் விரைவாகச் செல்லத்தக்க புட்பக விமா னம் போன வழியாகவே, அவ் விமானம் பிற்படும்படி நம் நினைப்பி

னும் முன்னதாக அயோத்தியை அடைந்து, அவ் விமானம் வரும் வழியை எதிர்பார்த்துக்கொண்டு நிற்பேன்; காட்டில் விளையும் துளப மாலையணிந்த மார்பினையுடையவர்களே! இனிச் சில கணங்கள் தாமும் தாழ்ப்பது எதற்கு? புட்பகம் போதற்கு முன் (நாம் அயோத்தியை அடையும்படி) என் இரண்டு தோள்களிலும் ஏறுங்கள்; (என அனுமன் கூறினான்.)

கு :- நாடக அரங்கில் பேசும் முறையில் இச்செய்யுள் அமைந்துள்ளது ஆதலின், 'என அனுமன் கூறினான்' என்பது எச்சமாக வருவிக்கப்படுகின்றது. விரைந்து செல்வதில் மனம் தலைமையானது ஆகலின் அதனினும் புட்பக விமானம் விரைந்து செல்ல வல்லது எனச் சிறப்பித்தவாறு. 'மானுருவாக நின் மனம் பூட்டினையோ?' (அகநா—384) என்பது இங்கு நினைவு கொளத்தகும். 'விமானம் சென்றதாகிய வழியே சென்று அது பிற்படுமாறு அயோத்தியை அடைந்து அவ்விமானம் வரும் வழியை எதிர்பார்த்து நிற்பேன்' எனத் தன்னாற்றலை அனுமன் புலப்படுத்தியவாறு. சில என்றது, சில கணப்போழ்தினை. புட்பகம் போதன் முன்னம் அயோத்தியடையுமாறு என் இரண்டு தோளும் ஏறுதிர் என்க. (88)

### அனுமன் தோள்மேல் இராம இலக்குவர் ஏறும்போது, வீடணன் தன் ஐயத்தைத் தெரிவித்தல், 9061-9062

9061. ஏறுது மென்னு வீர
ரெழுதலு மிறைஞ்சி யீண்டுக்
கூறுவ துளது துன்பங்
கோளுறக் குலுங்கி யுள்ளம்
தேறுவ தரிது செய்கை
மயங்கினென் திகைத்து நின்றேன்
ஆறினெ னதனை யைய
மாயமென் றயிர்க்கின் றேனல்.

'ஏறுதும்' என்னு, வீரர்
எழுதலும் இறைஞ்சி ஈண்டுக்
கூறுவது உளது; துன்பம்
கோள்உறக் குலுங்கி, உள்ளம்
தேறுவது அரிது; செய்கை
மயங்கினென்; திகைத்து நின்றேன்;
ஆறினென்; அதனை ஐய!
மாயம்என்று அயிர்க்கின் றேனல்.

பொ :- (அனுமன் தோள்மேல்) ஏறுவோம் என்று இராம இலக்குவர் எழுகையில் (வீடணன் இராமனை நோக்கி) வணங்கி, ‘இப்போது யான் சொல்லவேண்டிய செய்தி உளது, துன்பம் என்னைக் கவர்ந்து கொண்டதால், உள்ளம் நடுங்கித் தெளிவுபெறுவது அரிதாய்விட்டமையால், செயல் மயங்கினவனாய்த் திகைத்து நின்றேன்; இப்போது அத்துன்பம் ஆறினென் (தெளிவுற்றேன்) இந்திரசித்து சீதையை வெட்டியதை மாயச் செயல் என்று ஐயுறுகின்றேன்.

கு :- குளகம்; 91 ஆம் செய்யுளில் ‘வீடணன் விளம்ப’ என்புழி முடியும். ‘இறைஞ்சி’ என்ற வினையெச்சத்திற்கு எழுவாயும் எச்ச வினையும் அங்கு அத்தொடர் மொழியிலே உள்ளன. உள்ளத்தைத் துன்பம் கவர்ந்துகொண்டமையால் உள்ளத் தெளிவு இலதாயிற்று என்றவாறு. துன்பம் ஆறினேன் ஆதலின், முன்னைய தெளிவுவந்து மாயம் அது என்று அயிர்க்கின்றேன் என்றவாறு. குலுங்குதல்—நடுங்குதல். அயிர்த்தல் — ஐயுறுதல். கோளுதல் — கொள்ளுதல்; கவர்தல். அதனை என்றது, சீதையின் கொலையை. (89)

9062\. பத்தினி தன்னைத் தீண்டிப்
பாதகன் படுத்த போது
முத்திறத் துலகும் வெந்து
சாம்பராய் முடியு மன்றே
அத்திற மான தேனு
மயோத்திமேற் போன வார்த்தை
சித்திர மிதனை யெல்லாந்
தெரியலாஞ் சிறிது போழ்தின்.

‘பத்தினி தன்னைத் தீண்டிப்
பாதகன் படுத்த போது,
முத்திறத்து உலகும் வெந்து
சாம்பராய் முடியும் அன்றே?
அத்திறம் ஆன தேனும்,
அயோத்திமேல் போன வார்த்தை
சித்திரம்; இதனை எல்லாம்
தெரியலாம் சிறிது போழ்தின்.

பொ :- பத்தினியாகிய சீதையைப் பாதகனாகிய இந்திரசித்து தீண்டிக் கொன்றிருப்பானாயின், அவன் கொன்றபோது, மூன்று

